

# சித்த மருத்துவ நோய்நாடல் நோய்முதனாடல் திரட்டு

## இரண்டாம் பாகம்

ஆக்கியோன் :

டாக்டர் ம. சண்முகவேலு, எச்.பி.ஐ.எம்.,

முன்னாள் பேராசிரியர்,
அரசினர் இந்திய இணைப்பு மருத்துவக் கல்லூரி, சென்னை-10.
முன்னாள் சித்த ஆராய்ச்சியாளர், சித்த ஆராய்ச்சி நிலையம்
(I.L.W.A., Ltd.) கோயமுத்தூர்.





தமிழ்நாடு சித்த மருத்துவ வாரிய வெளியீடு




# சித்த மருத்துவ நோய்நாடல் நோய்முதனாடல் திரட்டு

## இரண்டாம் பாகம்

ஆக்கியோன் :

டாக்டர் ம. சண்முகவேலு, எச்.பி.ஐ.எம்.,

*முன்னாள் பேராசிரியர்,*
*அரசினர் இந்திய இணைப்பு மருத்துவக் கல்லூரி, சென்னை-10.*
*முன்னாள் சித்த ஆராய்ச்சியாளர், சித்த ஆராய்ச்சி நிலையம்*
(I.L.W.A., Ltd.) *கோயமுத்தூர்.*



*தமிழ்நாடு சித்த மருத்துவ வாரிய வெளியீடு*

விலை ரூ. 96-85

*371B-4*—A

# பதிப்புரை.

மருத்துவர், ம. சண்முகவேலு, எச்.பி.ஐ.எம்., அவர்கள் உருவாக்கிய சித்த மருத்துவ நோய்நாடல் நோய் முதல் நாடல் பாகம்-2 என்ற பி. எஸ். எம். எஸ். பாடநூலை மறுபதிப்பாக வெளியிடுவதில் வாரியம் மகிழ்ச்சியடைகிறது.

தமிழ் மருத்துவமாம் சித்த மருத்துவ வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்துதவும் தமிழக முதல்வர் மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களுக்கு நெஞ்சார்ந்த என் நன்றி உரித்தாகட்டும். முதல்வர் வழி நின்று செவ்வனே செயல் புரிந்துவரும் மாண்புமிகு நல்வாழ்வுத்துறை அமைச்சர் ப. உ. சண்முகம் அவர்களுக்கு என் நன்றிகள்.

சித்த மருத்துவம் சிறக்க சிந்தித்துச் செயல்படும் வாரியத் தலைவர் முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களை என் இதயம் என்றென்றும் நின்று பணியும். விரும்பி இன்முகத்தோடு கேட்டவை கள் அனைத்தையும் எங்களுக்களித்திடும் இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதித் துறை ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர் திருமிகு டி. முருகராஜ், இ.ஆ.ப., அவர்களுக்கும் நன்றியை உரியதாக்குகிறேன்.

இந்நூல் உருவாக்கத்திற்கு பெரிதும் துணை நின்ற தனி அலுவலர், ஆய்வு மருத்துவ அலுவலர் அவர்கட்கும் என் அன்பு நிறை நன்றி நிறைக. இந் நூலாக்கம் நிறைவு பெறத்துணை நின்ற தமிழ்ப் புலவர்கள், அலுவலகப் பணியாளர்கள் மற்றும் நன்முறையில் அச்சிட்டுத் தந்த அரசு மைய அச்சகத்தார்க்கும் நான் நன்றி நவில்கின்றேன்.

(ஒம்) குத்சியாகாந்தி,
உறுப்பினர் செயலாளர்,
தமிழ்நாடு சித்த மருத்துவ வாரியம்,
சென்னை-600 106.

# பொருளடக்கம்.

## அத்தியாயம் XXIII

பக்கம்.

பிணிகளின் விளக்கம்—

1. சுரம்—சுரம் என்றாலென்ன? வேறு பெயர்கள்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## பொருளடக்கம்

### அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## பொருளடக்கம்.

### அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

# பொருளடக்கம்.

## அத்தியாயம் XXIII —தொடர்ச்சி.

## பொருளடக்கம்.

### அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

பக்கம்.

## பொருளடக்கம்

### அத்தியாயம் XXIII —தொடர்ச்சி.

பக்கம்

### 3. அம்மை நோய்.

## அத்தியாயம் XXXIII—தொடர்ச்சி.



### 4. குரற் கம்மல்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

பக்கம்

### 5. மூக்கடைப்பு நோய்.



### 6. குருதியழல் நோய்

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

பக்கம்.

### 7. இருமல் நோய்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

அத்தியாயம் XXIII —தொடர்ச்சி.

அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



### 12. சுவையின்மை.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



### 15. விக்கல் நோய்.

அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



16. வாந்தி நோய்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



### 17. மாந்த நோய்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி

## அத்தியாம் XXIII—தொடர்ச்சி.

பக்கம்



## 20. மண்ணீரல் நோய்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



### 23. ஊதல் நோய்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



### 24. மஞ்சள் நோய்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



## 25. பெருவயிறு.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



### 26. குடற்பிடிப்பு நோய்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

பக்கம்



### 27. பெருங் கழிச்சல்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



### 28. நிணக் கழிச்சல்.

அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## அத்தியாயம் XIII—தொடர்ச்சி.



### 31. எருவாய் மூளைநோய்.

அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



32. சிறுநீர் நோய்.



33. கல்லடைப்பு நோய்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



### 34. நீர்ச் சுருக்கு.



### 35. நீர்க்கட்டு.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

### 37. வெள்ளை நோய்—தொடர்ச்சி.



### 38. நீரடைப்பு.



### 39. நீரிழைப் பெருக்கல் நோய்கள் அல்லது மேகநீர்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

### 39. நீரினைப் பெருக்கல் நோய்கள் அல்லது மேகநீர்.—தொடர்ச்சி.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

### 39. நீரினைப் பெருக்கல் நோய்கள் அல்லது மேகநீர்—தொடர்ச்சி.



### 40. இனிப்பு நீர்.



### 41. தெளி நீர்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

### 41. தெளி நீர்—தொடர்ச்சி.



### 42. வெண்ணீர்.



### 43, மேகநீர்க் கட்டிகள்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

### 43. மேக நீர்க் கட்டிகள்—தொடர்ச்சி.



### 44. குடிவெறி நோய்.



### 45. செருக்கு நோய் (மத நோய்)

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

பக்கம்

### 46. வெறி நோய்



### 47. மயக்க நோய்.

அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



48. வலி நோய்.

அத்தியாயம் XXIII — தொடர்ச்சி.

பக்கம்.



49. வளி நோய்.

அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## அத்தியாயம் XXIII— தொடர்ச்சி.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



### 50 பக்கவாயு.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

### 51. கீல்வாயு



### 52. அழல் நோய்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



### 53. ஐய நோய்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.



### 54. பெரு நோய்.

## அத்தியாயம் XXIII—தொடர்ச்சி.

# சித்த மருத்துவ நோய்நாடல், நோய்முதனாடல் திரட்டு.

(இரண்டாம் பாகம்.)

## பிணிகளின் விளக்கம்.

---

### அத்தியாயம் XXIII.

### 1. சுரம்.

''சுரம்'' என்றுலென்ன?

சுர் + அம் = சுரம்.
சுர் = சுடுதல்.
அம் = உடையது.
சுரம் = சுடுதலை உடையது எனப்படும்.

'' சுரநிலம் போலச் சுடுநோய்ச் சுரமென்
றுரைப்பர் செரி கலத்துண்டாமனலம்
நரம்பின் வழியே நன்னினுடம்பில்
பெருகும் வெப்பம் பிழை செய் நோயே ''.

குறிப்பு.—சில நூலில் '' நன்னினுடம்பில் '' என்பதை '' தண்ணீர் உடம்பின் '' எனக் கூறப்பட்டிருக்கிறது.

(இதன் பொருள்.)

'' சுரம் '' என்னும் சொல் பாலை நிலத்தைக் குறிக்கும். பாலை நிலம் வெப்பத்தைத் தனக்குச் சிறப்பாகக் கொண்டிருப்பதுபோல, '' குக்கியனல் '' (உயிரனல்) தன்னிலை விட்டு மாறிப் புறநிலைப் புறங்களில் பரவுமாயின் (அதாவது புற உடலிற் பரவுமாயின்) அதனை '' சுரம் '', '' காய்ச்சல் '', '' வெம்மை '', '' வெப்பு '', '' காந்தல் '', '' காங்கை '', '' சூடு '', '' தழல் '', '' அனல் '', '' பிறப்பிலும் இறப்பிலும் தொடரும் நோய் '' ''பம்ம நோய் '' எனப் பல பரியாயப் பெயர்களால் அழைக்கப்படும்.

(மேற்கோள்.)

" வெம்மை வெப்பு வெறுக்குங் காய்ச்சல்
தும்மாக்காங்கை சூடுதழல் அனல்
சும்மைப் பிறப்பிறப்பில் தொடர் நோய்
பம்மநோய் காந்தல் பல பெயர் சுரற்கே "

என்பதினாலறிக.

இயல்.—உடலின் இயற்கைச் சூடு தன்னளவுக்கு மிஞ்சி, எழுந்து உடல் முழுவதுமோ அல்லது சில பாகங்களிலோ அதிக வெப்பமாயிருத்தல், கண் எரிவு, வாய்க் குமட்டல், வாந்தி, தலைப் பாரம் அல்லது தலைவலி, உடம்புவலி, முதலிய பல குறி, குணங்களைத் தோற்றுவிக்கும் நோயாகும். இது தனித்து வருவதுமன்றி (தனி நோயாகவும்) மற்ற நோய்களுக்குத் துணை நோயாகவும் வரும்.

சுரத்தின் முதற் காரணமென்ன ?

" குடல் தன்னில் சீதமலாது சுரமும் வராது. "
" அசீரணமன்றிச் சுரம் வராது "
" சொன்னதாலங்கி கூடி மந்தத்தில் சொருகி நின்றால்,
பின்னமாய்ச் சுரங்களெல்லாம் விரைவினில் வந்திடு
வதாகும். "

என்பனவற்றிற்கிணங்க சுரம் உண்டாவதற்கு முதற் காரணம் இரைப் பையில் " ஆமம் " என்னும் " சீதம் " பெருகி அதன் காரணமாகக் கபம் அதிகரித்து, ஆங்குள்ள " குக்கியனல் " என்னும் " உயிரக்கினி " யைத் தன்னிலை விட்டு மாறி, மிகுதிப் படுத்தி (வெப்பம் மிகுந்து) நரம்பின் வழியாகப் புற உடலிற் பரவித் தோன்றும் என்பதேயாம். " உயிரக்கினி " என்ற "குக்கியனல்" தன்னிலை மிகுந்து புற உடலிற் தோன்றும்போது " சுரம் " உண்டாகிறதென்பதே இதன் கருத்து.

சுரம் உண்டாவதற்குரிய பொதுக் காரணங்களெவை.

(திருமூலர்.)

1 " மந்தமலத்தின் கட்டுமுப்பிணி
யுந்தும் பொருள்களையுண்ணல் மிகுத்தல்,
நந்தல் உழைத்தல் நனியல் வெப்புப்பனி
முந்துளக் கவலை முதிர்ந்த குளிர்ச்சி. "

" மிக்கப் புணர்ச்சி உறக்கமின்மை
தக்கில் காற்றுத்தளை நஞ்சுககால
பொக்க நஞ்சுப்புழு உட்சாரல்
எக்குநீர்ப் பிணைப்பு எண்ணெய்ப் பிணைப்பே."

3 " சிக்கதி வியர்வை செரியாமை பயம்
பொக்க நெய்முழுகிப் புணர்தலடிபடல்
கக்கும் நஞ்சுக் கலந்ததுண்ணல்
மிக்க நடை கடுவெயிலில் மேவல். "

4 " நனைதல் மாரியில் நன்னிவை தம்மால்
வினையு முப்பிணி மிகுத்து நஞ்சாய்,
முனைந்து சுரமாம் மொழியினோயே
சினையாம் பலவாச்செப்பு நோய்கட்கே. "

(இதன் பொருள்.)

மந்தம், மலக்கட்டு, வாத பித்த சிலேற்பனமாகிய முக்குற்றங்களை மிகுதிப் படுத்தக் கூடிய உணவுகளை உண்ணல், மிகு உழைப்பு, மிகு வெப்பம், பனி இவற்றில் திரிதல், கருவி கரணாதிகளின் கவலை, மிகுந்த குளிர்ச்சி, மிகுந்த புணர்ச்சி, தூக்கமின்மை, மிகுந்த காற்று, விடக் காற்று, தேகத்தில் விடப் புழுக்கள் உட்சென்று துளைத்தல், அதிமாக நீராடல், அதிகமாக எண்ணெய் நீராடல், துர்நாற்றமுள்ள வியர்வை, செரியாமை, பயம், தோடமுண்டாக்கக் கூடியதாக எண்ணெய் நீராடிய பின் ஸ்திரி சங்கமம் செய்தல் (புணர்ச்சி), அடிபடல், விடங்கலந்த உணவு, மிக்க நடை, கடும் வெயிலில் திரிதல், மழையில் நனைதல் ஆகிய இத்தியாதி அகக் காரணம், புறக் காரணங்களால் வளி, அழல், ஐயம் என்னும் முக் குற்றங்களும் கேடடைந்து, மிகுந்து பல உறுப்புகளுக்கு நோயை விளைவிக்கக் கூடியதான சுரத்தை உண்டாக்குமென அறிக.

சித்த மருத்துவப் பிரகாரம் " சுரம் " தோன்றும் வழி.

1 " பண்டுள மலத்தினாலும், பழகிய சீதத்தாலும்
உண்டியின் பொல்லாங்காலும் ஒண்டொடி போகத்தாலும்
கண்டுயிலாமை யாலும் கடுகியவோடத்தாலும்
மிண்டிய சுவையினாலும் வெப்புவந்தணுகுங்காணே. "

2 " ஈங்கெழு கோபத்தாலும் இளவெயிற்காய்தலாலும்
தாங்கொணாச் சுமைகளாலும் சருகிலை யூறலாலும்
ஓங்கிய பசியினாலும் உண்டிமேலுண்டியாலும்
தேங்கிய மலக்கட்டாலும் தீயவெப்பணுகு மன்றே. "

3 " கடுவெயில்மழைகளாலும் கதறிய குரலினாலும்
விடமதுபடுதலாலும் வெருவிய வேகத்தாலும்,
முடிமிசையெண்ணெய் தேய்த்து மூழ்கிய போகத்தாலும்
தடியடிபடுகையாலும் சார்ந்திடும் வெதுப்புத் தானே."

4 " பழவினையாலு மெத்த பசித்திருந்துண்கையாலும்
குளிர்மை நீர்க்குணத்தினாலும் குவலய பேதத்தாலும்
இளகியவுண்டியாலும் இதயத்திலெண்ணத்தாலும்
உளமது உளைதலாலும் உறு சுரமெய்துந் தானே. "

(இதன் பொருள்.)

**எரு** (மலம்) தடைப்படல், நாட்பட்ட ஐயம், **உண்டியால் ஏற்**படும் கெடுதிகள் ; மிஞ்சிய கலவி ; நஞ்சுகள் ; துயிலின்மை; கடுமையான ஓட்டம், அதி சுவையுள்ள பொருளை உண்ணல், கோபங் கொள்ளல் ; இள வெயில் ; கடுவெயிலில் நடத்தல், பசியை அடக்கல் ; உண்டிமேல் உண்டி உண்ணல் ; தாங்கமுடியாத சுமை சுமத்தல் ; கதறிக் கூவல் ; பதினான்கு வேகங்களையடக்குதல் ; எண்ணெய் நீராடியபின் கலவி புரிதல் ; தடியடியை மேற் கொள்ளல் ; படுக்கை வேறுபடுதல் ; தான் செய்த பழவினைகள் சூழ்தல் ; மிக்க பசியில் வயிறு நிறையப் புசித்தல் ; குளிர்ந்த நீரைப் பருகல் ; நாடுகளின் வேற்றுமை ; கெட்ட எண்ணம் கொள்ளல் ; உள்ளம் மாறுபாடடைதல் முதலிய செயல்கள் சுரநோய் தோன்றுதற்கான வழிகளென அறிக !

சுரம் உண்டாவதற்குரிய முக்குற்ற வேறுபாடுகளென்ன ?

(மேற்கோள்.)

1 " சுரம் பிறக்கும் வழியதனைச் சொல்வேன் முன்னால்
சொன்ன வழியறு சுவையின் மாறலாலும்,
பெருந்தகா நடவடிக்கையால் முக்குற்றம்,
பிரியாமற்கூடியுமங்கிரண்டிரண்டாய்,
மருவியுமே தனித் தனியாய்ச் சூழ்ந்து முன்னர்
மாசுபடாதிருந்த வாமத்தைப் பற்றி
ஒருவுதலில்லாமலதன் மென்மை கெட்டி,
யுருவச் சீதத் தினடையதனைச் சேர்ந்தே. "

2 " தங்களுடைய வன்மைதனைக் காட்டியதனின்
தன்வழி கெட்டுப்பும் வழிதன்னைச் செய்து,
நுங்குமுணவாதிகளைச் சமித்தல் செய்யா
நோயடர்ந்து சமிநரம்பின் வழியு மயிரின்,
தங்குவழி தமை மருத்துப்பக்குவாசயத்தை,
சார்ந்து வனலுடற்றீயை விசிறித் தூண்டி,
அங்கதிற்றா முங்கூடியுடல் முற்றும்
அழலாக்கியல்லல் பல விளைக்குந் தானே. "

என்பதினாலும் ;

3 " அசீரணமன்றிச் சுரமும் வராது."

4 " (குடல் தன்னில்) சீதமலாது சுரமும் வராது."

5 " சொன்னதாலங்கி கூடி மந்தத்தில் சொருகி நின்றால், பின்னமாய்ச் சுரங்களெல்லாம் விரைவினில் வந்திடுவதாகும்." (அங்கி=அக்கினி, கபம்).

6 " மந்தமலாது சுரமும் வராது."

என்பதான முன்னோர்களது வாக்கியங்களரல் நாம் தெரிந்து கொள்வது யாதெனில் :

அறுசுவை உண்டியின் வேற்றுமையாலும், தகாத நடவடிக்கையாலும் சுரம் வருவதற்கு முன், " அசீரணம் " என்னும் " மந்தம்" இரைப்பையிலுண்டாய்ப் புளித்து, அடைபோன்று "ஆமம்" என்ற ஐயம் வடிவமாக உண்டாகிறது. இதன் காரணமாக வளி, அழல், ஐயம் என்ற முக்குற்றங்களும் தனித்தும், கலப்புற்றும், ஏகோபித்தும் இரைப்பையைப் பற்றி அங்குள்ள ஆமத்தைத் தங்களாலியன்ற மட்டும் இளக்கி உப்பச் செய்யும்.

இதனால் உடற்கு வன்மை தரக்கூடிய உணவு சரியாகச் செரிக்கப்பட மாட்டா ! இரைப்பையில் இளகிப் பெருத்த ஐய அடையானது " குக்கியனலை " (உயிரனலை) வெளிப்படுத்தி சடராக்னி (சமாக்கினி) குறைந்து பசியின்மையாய் விடும்.

அன்றியும், செரியாத உணவுக் குழம்புகள் இரசத்தைச் செலுத்துகின்ற நாளங்களையும், மற்றுமுள்ள மயிர்துளைகளையும் அடைக்கும். ஆதலால் வியர்ப்பதில்லை. அதன்பின், அக்குழம்புகள் பக்குவாசயம் சென்று அங்கு இயற்கையாயியங்கும் உடற்றீயை விசிறி மேலெழும்பி, உடல் முற்றும் அவ்வனலைப் பரவச் செய்யும். இவ்வாறு கதித்தெழுந்த அனலே சுரமெனப்படும். அச்சுரமானது வளி, அழல், ஐயமாகிய முக் குற்றங்களின் மாறுதல், வன்மை இவற்றிற்குத் தக்கவாறு வெளித் தோற்றமடையும்.

தன் வழிச் சுரநோயில் (i.e., அகக் காரணங்களாலுண்டாம் சுர நோயில்) இரைப்பை, குடல், இவை தம் இயற்கைத் தொழிலில் கெடுவதால் உணவின் சாரம் (இரசம்), குருதி, நிணம், சதை முதலிய உடற்றாதுக்களும், நீர், எரு இவ்விரண்டும் சேர்ந்து கேடடையும்.

ஆனால் புறவழிச் சுரங்களில் (i.e. புறக் காரணங்களாலுண்டாம் சுர நோய்களில்) மற்ற சுரங்களைப் போல் தீனிப் பையிலுண்டாம் வேற்றுமைகளுண்டாகாமலே சுரமெழுந்து, பிறகு முக்குற்றங்களையும், உடற்றாதுக்களையும், கழி பொருள்களையும் தாக்கி அகட்டையும் பற்றும் என அறியவும்.

நிற்க, வாத பித்த கபங்கள் தனித்தனி மிகுத்தல் கலந்து கோளாறடைதல், இவைகளுக்குத் தக்கபடி பலவகையில் தன் வழி, புறவழிச் சுரங்களும், அவற்றின் மிகையால் சன்னிபாத சுரங்களும், பத்தியப்பிழையால் சுரதோடங்களும், காலம், இடம், உடல்வெப்பமிகையால் அம்மை சுரங்களும் தொற்றுநோய்ப் புழுவால் மகாமாரி (Plague) போன்ற சுரமும், மற்றும் பல பிற சுரங்களும் தோன்றுமெனவும் நூல்கள் கூறுகின்றன.

மேலும், அசீரணத்தால் மந்தம், புளிப்பு ஏற்பட்டு அதன் காரணமாக வெப்பம் அதிகரித்துச் சுரமாகத் தோன்றுமென்பதைத் தேரன் மருத்துப் பாரதத்தில் '' மாடுபிடிச் சண்டையில் '' கூறியுள்ளதை இங்கு விளக்கியிருப்பதையும் கவனிக்கவும்.

'' என்று துரியோதனனுமிளையவனுமங்கர்கோனும்,
என்று மடமேபுரியுமெண்ணமுள்ள சகுனியும்,
மந்திராலோசனை என்னுமந்தவசீரணமுண்டாய்,
தந்திரப்புளிப்பு மீறித்தானை வெப்பமானதிலே.''

என்பதற்கிணங்க, துரியோதனனும், தம்பிமார்களும், கர்ணனும், சகுனியும் சேர்ந்து மந்திராலோசனை செய்ததானது உண்ட உணவு செரிப்பிக்காமல் மந்தத்தை விளைவிப்பதையும், அப்பால் பகை முற்ற முற்ற வினையதிகமாகுமாப் போல், மந்தமானது முற்றிப் புளிப்புத் தன்மையைப்பெற்று, மிகுதியாகி, ஆமம் உண்டாய் சீவாக்கினி என்னும் பசித் தீயைக் கெடுத்து, இரச நாளங்களும், மயிர்த் துளைகளும், அடைபட்டு, '' குக்கியனலை'' தேகம் எங்குமாவது அல்லது சில பாகங்களில் மட்டுமாவது விசிறி எழுப்பிச் சுரம் பிறக்கச் செய்யுமென்பர். மந்தத்தின் காரணமாக சுரம் ஏற்பட்டாற்போல், துர் ஆலோசனையின் காரணமாகக் கோபமும், பகையுமதிகமாகி, கவுரவரைச் சேர்ந்த அனைவரும் உயிரைக் கொடுக்க நேர்ந்தது. வீடுமர், கிருபர், துரோணர், அசுவத்தாமன், கர்ணன், சகுனி, தம்பிமார்கள், மன்னன் துரியோதனன் மற்றும் சேனைகள், தலைவர்கள், ரத, கச, துரக பதாதி படைகள் யாவும் பதினெட்டு நாள் போரில் உயிர் துறக்க நேர்ந்தனவென்பதையும் குறிக்கின்றது.

### நாடி நடை

1. '' பாங்கான வாதத்தில் சேத்துமநாடிப்
பரிசித்தால் திமிர் மேவு மூளைச்சலாகும்,
தீங்கான இருமலுடன் சன்னிதோடம்,
சேர்ந்தவிடம் வெடிசூலை யிருத்ரோகம்,
வாங்காத ஈளை மந்தாரகாசம்
வலியுடனே புறவீச்சுள் வீச்ச வீக்கம்,
ஓங்காணும் சுரமுடனே சுவாச காசம்,
உண்டாகும் வெகுநோய்க்கு முறுதிதானே''.

2. "உறுதியுள்ள பித்தமது தோன்றில் வெப்பு
உட்டிணவாயு வத்திசுரமதி சாரங்கள்,
மறதியுடன் சிரக்கமாம் பயித்திய ரோகம்
வளர்சோபை யழலெரிவு காந்தல் கைப்பு.

3. "பண்பான பித்தத்தில் சேத்துமநாடிப்
பரிசித் தாலத்திசுரமிளைப்பு ஈளை
கண்காது நயனமலம் நீருமஞ்சள்
கனவயிறு பொருமல் மஞ்சள் நோய் கண்வே
உண்போது மருத்தல் ரத்தவிப்புருதிதானு
முளைமாந்த பீனிசமும் ரத்தவீக்கம்,
நண்பான காமாலை சோகை வெப்பு
நணுகி வந்த பல பிணியுங் காணுந்தானே."

4. "சிறப்பான பித்தத்தில் வாதநாடி
சேரிலுறு தாது நட்ட முதிரபீடை,
உறைப்பாகச் செரியாமை குன்மஞ்சூலை,
உற்றசுரங்கிராணி வயிற்றிரைச்சல் மந்தம்,
அறைப்பான ஓங்கார புறநீர்க் கோவை,
ஆயாசங்கிரக்கமொடு மயக்க மூர்ச்சை,
முறைக்காய்வு விட வீக்கம் மூலவாய்வு,
முரடான நோய் பலவுமுடுகும் பண்பே."

5. "வாதந்தான் தனித்து நின்று வந்திடும் பந்துபோலந்
தீதற வெழும்பி நின்றாற்சிக்கியே மந்தம் பற்றும்,
ஏதுவாற் சுரங்கள் கண்டதிடைவிடா நிற்குமல்லாற்
தாதுவுங்குறைந்து நின்று தன்னையு மறக்கச் செய்யும்,"

6. "உற்றிடும் வாதநாடியொரு விரலுள்ளே நின்று
பற்றியேசிலும்பி நின்று பையவே நடக்குமாயின்,
மத்திய சுரமேயாகு மாலை சுரமது தானாயின்
அத்தியேபற்றியோடி மடங்கிடா தெழும்பி நிற்கும்.

7. "வளர்ந்திடும் பித்த நாடிவலமிடம் பிசகாவண்ணம்
பிளந்தது தனித்துப் பச்சைப் புழுநழுகல் போலோடில்,
உளந்தனில் வறட்சி தங்கி யுடம் புலர்ந்தத்தி தன்னில்
விளைந்திடும் சுரங்கள் வந்து."

8. "ஆனதோர் வாதநாடி யடர்ந்துறவலுவாய் நிற்கில்
ஊனமாமுடிவில் நோய்கள் உலாவியே நிற்குமாகில்,
தானமாம் பித்தநாடி தான் வலுவாக நிற்கில்,
கானமாங்குழலினாளே காய்ச்சலுங் கடினமாமே."
(—சித்த மருத்துவம்.)

9. "மற்றதொரு சுரந்தனக்கு வாதபித்தம்
வகையான கணைக்காய்ச்சல்பித்தவாதம்."
(—பரிபூரண நாடி)

(இவற்றின் பொருள்)

1. வாதசேத்தும தொந்த நாடியிலும் :

2. பித்தநாடி தனித்துமீறி நடப்பினும் :

3. பித்த ஐயதொந்த நாடியிலும்;

4. பித்தவாத தொந்தத்திலும்; சுரம், அத்திசுரம், முறைக் காய்ச்சல் இவையுண்டாகும்.

5. வாதநாடியானது தனித்து மீறி நடக்கில் குடலில் மந்தம் பற்றிச் சிக்கியதன் காரணமாகச் சுரமுண்டாகி இடைவிடாது காயும். வன்மை குன்றும்.

6. வாதநாடி தனித்து நின்று உள்ளடங்கி மெதுவாய் நடக்குமாயின் சுரம், மாலைச்சுரம் இவற்றையுண்டாக்கும்.

7. பித்தநாடி இடம் வலம் பிசகாமல் நேராகப் பச்சைப் புழு தலையாலூர்ந்து பின்பாகத்தைச் சற்று முன்னிறுத்தி உடலை மேலுக்கு வளைத்து ஊர்ந்து செல்லுவதுபோல் நடக்கின் உடலில் வறட்சியுண்டாய் உடம்புலர்ந்ததால் உண்டான என்புச் சுரம் எனக்கொள்க.

8. வளி நாடி மிகுதியாயோடில் ஊனத்தை விளைவிக்கும் நோய்களை வருவிக்கும். அவ்வேளையில் அழல் நாடியானது வன்மை பெற்று நடக்குமாகில் சுரம் மிகக் கடினமாகத் தோன்றும்.

9. வாதபித்த தொந்தத்தால் சுரம் வரும் எனவும், பித்தவாத தொந்தத்தால் கணைக்காய்ச்சல் உண்டாகுமெனவும் மீண்டும் நூல்கள் மூலம் அறிகிறோம்.

**சுரத்தின் முற்குறி குணங்கள்.**

1. "உளத்திற் கிளர்ச்சியுராமையுடல்வலி,
வளர்நாவறட்சி மருவூண் வெறுப்பு,
கள்ர் கொட்டாவி கண்ணீர் ததும்பல்
நளிர் அருவருப்பு நன்னல் மயக்கம்."

2. "பிதற்றல் கூசல் பிழைக்கிறு கிறுப்பு,
முதிர்ந்துளல் குத்தல் முனை மயிர் சிலிர்த்தல்
எதிர்க்கொளிர்ப்பின்னால் எழுஞ்சுரவரசு.
கொதிக்கும் நடுக்குங் கூச்சலிடுமே."

(இதன் பொருள்)

1. மன முயற்சி குன்றல் (மனச்சந்தோஷமின்மை.)
2. உடல் வளி
3. நாவறட்சி
4. உணவெறுப்பு
5. கொட்டாவி
6. கண்ணீர்த்ததும்பல்
7. நளிர்
8. அருவருப்பு
9. மயக்கம்
10. வாய்கைத்தல்
11. பிதற்றல்
12. கூசுதல்
13. கிறுகிறுப்பு
14. தேகங்குத்தல்
15. மயிர் சிலிர்த்தல் ஆகிய இக்குறி குணங்களைக் காட்டி. சுரமுண்டாகும். வெப்பம் அதிகமாகும். நடுக்கமுண்டாம். வேதனையால் கூச்சலிடவும் செய்யும்.

சித்த மருத்துவத்தில் கூறும் சுரத்தின் முன்குறி குணங்களாவன.

(Manuscript)

"சுரத்தின் முற்குறி சொல்லக் கேண்மோ
விருப்பமெய்ப்பொருளினு மேவுதலின்மை
உடல் பாரித்தலும் நிற மாறுதலும்
உடன்மேலவையு முறினுங் கூசல்
தின்னு முணவுகள்செரியாமை.வெறுப்பு

மன்னு கொட்டாவி மயக்கம் பிதற்றல்.
நாச்சுவையின்மை நடுக்கல் குளிர்தல்
தூக்கமின்மை தொடைகெண்டை நோதல்.
ஆக்கை குத்தல் அருகினர் வெறுப்புகள்
கண்ணீர் முட்டல் கடுத்துடல் முறுக்கல்
தண்ணீர் நாவிற் சுரவாதிருத்தல்
மனக்கிளரின்மை மயிர்ச்சிலிர்ப்பாதல்.
கனபலக் குறைவு கண்டிடவிளைப்புப்
புளிப்புப் புறைப்பில் புகுநல்லிச்சை
இனிப்பிற் பேச்சில் இட்ட மின்மை
மனைவியார் மக்கள் மாட்டுப் பகைமை
தலைகிறு கிறுப்பு தடிவியர் வின்மை
இசைபல்லிய வொலி யெரிவளிநீரில்
வெம்தண் நிழலில் விருப்பு வெறுப்புக்
காரணன்வழுவருமுயர்நற்றாரணி மருத்துவர் தமக்குரைத்
தனரே.''

(இதன் பொருள்)

1. உணவில் விருப்பமின்மை.
2. உடம்பு கனமாயிருத்தல்.
3. உடல் நிறம் மாறுதல்.
4. உடல் துவைத்ததுபோலிருத்தல்.
5. எப்பொருள் பட்டாலும் உடல் கூசல்.
6. உணவு செரியாமை.
7. எப்பொருளிலும் வெறுப்பு.
8. கொட்டாவி.
9. மயக்கம்.
10. பிதற்றல்.
11. நாசுவையறியாமை.
12. உடல் நடுங்கல், குளிர்தல்.
13. இரவில் தூக்கமின்மை.
14. தொடை, கெண்டைச்சதை நோதல்.
15. உடல் முற்றும் குத்தல் ; குடைச்சல்.
16. அண்டையிலிருப்பவர்கள் மேல் வெறுப்பு.

17. கண்களில் நீர் முட்டல்.

18. உடல் கடுப்பு, உடம்பு முறுக்குதல்.

19. நாவறட்சி.

20. ஊக்கமின்மை.

21. இளைப்பு.

22. இனிப்பு, புளிப்பு, உவர்ப்புச் சுவையுள்ள பொருள்களிலும், அவைகளைப்பற்றிய பேச்சுக்களிலும் விருப்பமின்மை.

23. மனைவி, மக்களிடத்தில் பகைமை.

24. தலை கிறுகிறுத்தல்.

25. உடலில் வியர்வை தோன்றல்.

26. பாட்டொலி, வாச்சிய ஒலி, காற்று, நீரின் வெம்மை, தண்மை, நிழல் இவைகளில் காரணமின்றி விரும்பும் வெறுப்பும் தோன்றல் ஆகிய இக்குறிகளில் பலவேனும், சிலவேனும் சுரம் உண்டாவதற்கு முன்னர் காணப்படும்.

### சுர நோயில் காணும் பொதுக்குறி குணங்கள்

முற்குறியில் காணும் குறி குணங்களோடு, உடல் சூடாகயிருத்தல், தலை கனத்தல், தலைவலி, கண் எரிவு, நாவறட்சி, நாவில் மா படிந்திருத்தல், முகம் நீர் கொண்டு அதப்பாயிருத்தல், புறங் கழுத்து நோவு, மார்பு வலி, சளிக்கட்டு, இருமல், தும்மல், மூக்கு நீர் பாய்தல், விலாப்பக்கம் நோவு, வயிற்றில் வலி, வயிறுபொருமல், வாந்தி, குமட்டல், ஓக்காளம், கீல்கள் நோதல், உடம்பெங்கும் குத்தல், குடைச்சல், மலக்கட்டு அல்லது பேதியாதல், கண்கள் சிவந்து நீர் வடிதல், சிறுநீர் மஞ்சளித்து அல்லது சிவந்து இழிதல், குரற் கம்மல், தலை சுற்றல், உடல் இளைத்தல், வாய் கைத்தல், உணவு செல்லாமை, பசியின்மை அல்லது பொய்ப்பசி, குளிர் நடுக்கல், தூக்கமின்மை ஆகிய இக்குறி குணங்களில் சில அல்லது பல தாது தோட வேறுபாடுகளுக்குத் தகுந்தாற்போலும், சுரத்தின் பிரிவுக்குத் தகுத்தாற்போலும், குறிகுணங்கள் தோன்றுமென்றறிக.

### தருண சுரம் என்பது என்ன

சுரம் பிறந்த ஒன்பது நாட்களுக்குள் எந்த விதத்திலேனும் அபத்தியங்களேற்பட்டால் வளி, அழல், ஐயம் மூன்றும் கேடடைந்து சப்த தோட பேதங்களையுண்டாக்கும். இதுவே தருண சுரம் என்பர்.

### சப்த தோடங்களாவன

1. அபத்திய தோடம்.
2. சுங்கம தோடம்.

3. விடம தோடம்.
4. விடம சீத தோடம்.
5. பீத சிம்மக தோடம்.
6. ரத்த சிம்மக தோடம்.
7. கிருட்டிண சிம்மக தோடம் என்பனவாம்.

இவைகள் ஏழு முதல் பதினைந்து நாள்களில் சரியான மருத்துவம புரியின் குணமாகும்.

### சுரத்தின் தீக்குறி குணங்களாவன

சுரமானது ஏழு உடற்றாதுக்களையும் சேர்ந்தார்போல் பற்றி வந்தாலும் வெகுநாள்கள் வரையிலும் சுரம் நீங்காதிருந்தாலும், நோயாளிக்கு மயக்கம், மேல் மூச்சு, வீக்கம், விக்கல், மார்பில் அதிகவலி, அதிக இளைப்பு, கயம், மிகுதியான வாய் நீருறல், காலை, மாலை சூடாயிருத்தல், பொடியிருமல், நடுக்கல், நாகறுத்தல், பெருங்கழிச்சல், சிறு நீர் அதிகமிறங்கல் ஆகிய இக்குறி குணங்கள் சேர்ந்தாற்போல் காணின் சுரம் எளிதில் தீராவாம்.

### சுரமுள்ளபோதும் சுரம் விட்ட பத்து நாள் வரைக்கும் கீழ்க்கண்ட அபத்தியங்கள் கூடாவாம் அவையாவை

குளிர்ந்த நீர், குளிர்ச்சியான பொருள்கள், நெய், எண்ணெய், தயிர் முதலியனவும், புளிப்பு, உவர்ப்பு, கைப்பு, துவர்ப்பு முதலிய சுவைகளையுடைய உணவாதிகளையும் மிகுதியாக அருந்தல், சந்தனம், பூ, கற்பூரம், சவ்வாது, புனுகு இவை போன்ற நறுமணங்கள் மிகுந்த காற்று, பனி, வெயில், நிலாவில் படுக்கை, கடுநடை, வாகனமேறல், சினம், அழுதல், காமம், இச்சைப்படல், அதிகமாக உண்ணல், தாம்பூலம் போட்டவுடன் பாலருந்துதல், புதிய ஆடைகளை அணிதல் இத்தியாதி செயல்கள் கூடாவாம். அபத்தியம் ஏற்பட்டால் சப்ததோட பேதங்களும், சந்நிபாதமுமுண்டாகுமென அறிக.

| சுரம். | | எண். |
|---|---|---|
| தன்வழிச் சுரங்கள் | .. | 52 |
| புறவழிச் சுரங்கள் | .. | 12 |

**ஆக 64 எனப் பிரித்துள்ளார்.**

## நஞ்சு சுரம் (விஷ சுரம்)

அவற்றுள் வாதாதி முக்குற்றங்கள் தத்தம் மாத்திரையளவில் மிகுந்தேனும் குறைந்தேனும் யிருக்குந்தருவாயில், காலவேறு பாடுகளாலுண்டாகும் தட்ப வெப்பங்களின் மாறுபாட்டால் (i.e: ருது தோடம் சம்பந்தப்பட்டால்) " நஞ்சுச் சுரங்களைப் " பிறப் பிக்கும். நஞ்சுச்சுரங்களை " விஷம சுரம் " எனவும் கூறுவர். அவையாவன :—

1. சுரம் உணவு சாரத்தின் வழியே எழுந்து அதாவது சுரம் இரச தாதுவைப்பற்றி வரும்போது உட்சுரமாகக் காய்கின்ற விடாச்சுரம் சந்தத சுரம் என்பர்.

2. குருதி வழியே விடாச்சுரம் சத்த சுரமென்பர். இது புறம் பாகக் காயுஞ் சுரம்.

3. ஊனைப்பற்றி எழும்சுரம் 'தினமுறையாகக் காயும் சுரம் என்பர் இதில் இரண்டாமுறையாகவும் சுரம் காயும்

4. கொழுப்பைப்பற்றி எழும் சுரம் மூன்றாம் முறை சுரம் என்பர்.

5. எலும்பையும், மூளையையும் பற்றி வரும் சுரம் நான்காம் முறைக் காய்ச்சல் எனப்படும்.

குறிப்பு.—இவற்றை விடாச் சுரம். விஷ சுரம், மாறல் சுரம், முறை சுரம், குளிர்ச்சுரம், சீத சுரம், விட்டு விட்டு வரும் சுரம் எனப் பல பெயர்களால் வழங்குவர்.

மேலும், மேற்கூறிய அகக் காரணம், புறக் காரணங்களாலுண் டாகும் சுரங்கள் (64) அறுபத்திநாலு எனப் பிரித்தும், அவைகளில் முக்குற்றங்களின் திரிபால் வரும் சன்னி பாதத்தை ஒன்றாகவும், பத்தாகவும், பதிமூன்றாகவும் வகுத்துள்ளார்கள் முன்னோர்கள். இவை பற்றிய விவரங்களைப் பின்னாடித் தனித்து விளக்கப்படும்.

### 1. தன் வழிச்சுரங்கள் 52-ம் அவற்றின் முக்கிய குறி குணங்களும்.

1. வளிச்சுரம் (வாத சுரம்). — உடல் கருநிறமடைதல், மிகுதி யான சுரம் காய்தல், சந்துகளில் குத்தல், உணவு வேண்டாமை, தலை கனத்தல், தலைவலி, மந்தம், உப்புசம், மலம் வறளல், மயிர் சிலிர்த்தல், தூக்கமின்மை, உடல் சாம்பல் படிந்தார்போல் வெளுத்து வறளல், முகம் நீர்க்கொள்ளல், மிகு சினம், மூக்கில் எரிச்சல், இருமல், கைகால் நடுக்கல், நெஞ்சில் நோவு, வாய்ப் புளிப்பாயிருத்தல், தாகம், நீர் வெள்ளாட்டின் நீர் போலிறங்கல்,

கொட்டாவி, விக்கல், வாந்தி, வாயால் மூச்சு விடலாகிய குறி குணங்களையுண்டாக்கும், அல்லது அவைகளில் பல அல்லது சில குறி குணங்கள் தோன்றும். பத்து தினங்களில் வளிச்சுரம் குணமாகாவிடில் அதன்மேல் பல்வேறு நோய்கள் இச் சுரத்தில் தொடரக்கூடுமென தேரன் மருத்துப் பாரதத்தில் கூறப்பட் பட்டுள்ளது.

' வேதவியாசப் பொருப்பிலருட் சௌபாக்கிய
விக்கினராசன் வரைந்தபடியே,
வாதவெப்பினுக்கீரைந்தே நாளதற்கு ளெந்த
வினைகளும் வீடுமிக்கு முதநோய்க்குள்ளாகி.''

என்பதாலறிக !

2. வளி அழற்சுரம் (வாத பித்த சுரம்).—மிகுதியான சுரம், ஊணுஞ்சுவையுங் குறைதல், தேகம் சுட்கித்தல், உடல் தளர்த்தல், கைகால் கணுக்களில் வெட்டுப்படுவது போன்ற வலி, தாது நட்டம், புளியேப்பம், மலம் நீர் சிவந்திருத்தல், நாவறட்சி, வாய் பிதற்றல், படுக்கை கொள்ளாமை, அசதியான நித்திரை, கண் இருளல், மஞ்சள் நிறமடைதல், சோம்பல், ஒக்காளம், உடல் சிலிர்ப்பு, குளிர், தும்மல், பெருமூச்சு, மனக்கலக்கம், பல்லும் கன்னமும் சிலிர்ப்பு, சுரம் தணிந்த பின் வயிறு கழிதல், சீதம் விழல் ஆகிய குறி குணங்களை விளைவிக்கும்.

3. வளி ஐயச் சுரம் (வாத கப சுரம்).—மிகுந்த சுரம், விடசந்நி தோடம், வெடி சூலை, ஈளை, இருதய நோய், உள் வீச்சு, புறவீச்சு, தேக முளைச்சல், திமிர்த்தல், சுவாசகாசம், மூட்டுக்களில் வீக்கம், வலி, உடல் பளுவாகத் தோன்றல், தலைவலி, வியர்வையின்மை , மல பந்தம், வாந்தி, முகம் வெளுத்தல், இருமல், இளைப்பு, காதடைப்பு, உப்பிசம், வாயுலர்தல், மயிர்க்கூச் செறிதல், சோர்வு, வெருண்ட பார்வை, சில வேளை அதிக தூக்கம், மூக்கில் நீர்பாய்தல், கண் வெளிறல், அனலையும், வெய்யிலையும் விரும்பல், மலமும் நீரும் வெளுத்தல், மயக்கம், தாபம், தயக்கம், சஞ்சலம் உண்டாதல், வாய் பிதற்றல், மிரளல், சில சமயம் வியர்த்தலாகிய குறி குணங்களுண்டாகும்.

4. அழற்சுரம் (பித்த சுரம்),—அதிகமான சுரம்.; அதிகமாக மூச்சு வாங்கல், மயிர்க்கூச்செறிதல், கண்களை மிரட்டிப் பார்த்தல், மனநிலையற்றல், சிந்தை சுழலல், சொப்பனங்காணல், உடல் செந்நிறமடைதல், கண்ணும் மூக்கும் சிவத்தல், தேக நடுக்கம்; பிராணன் உடலை விட்டுப் பிரிவது போன்ற உணர்ச்சி, வாய்கைத்தல், அதிதாகம், வாய்ப்பிதற்றல், படுக்கையில்

தங்காமை, மயக்கம், வாய் நீர் அதிகம் வருதல், இளைப்பு, சுவையின்மை, ஓக்காளம், வாய் கைப்பு, வயிறு கழிதல், நீர் வேட்கை, நாவு தடுமாறல், இடைவிடாச் சுரங் காய்தலாகிய குறி குணங்களைக் காண்பிக்கும்.

5. அழல் வளிச்சுரம் (பித்த வாத சுரம்).—மிகு சுரம், உடல் மஞ்சளித்தல், வயிறு பொருமல், மந்தம், கண்ணோய், குளிர், தேக வறட்சி, ஒளி குன்றல், மயக்கம் திணவு, தாகம், வெய்யிலை விரும்பல், உணவில் வெறுப்பு, அரைக் கண் தூக்கம், பற்கடித்தல், படுக்கையில் புரளல், வாந்தி, கண் வெளுப்பு, நெஞ்செரிவு, சுரம் விட்டு விட்டுக்காய்தல், வியர்த்தல், ஆகிய இக் குறி குணங்களைக் காட்டும்.

6 அழலைய சுரம் (பித்த கப சுரம்).—மிகு சுரம், உடல் வலித்து வாடல், உடல் வற்றுதல், மூச்சு வாங்கல், இருமல், நாவறட்சி, சில சமயம் அதிகச் சூடாயும், சில சமயம் அதிகக் குளிர்ச்சியாயுமிருத்தல், வியர்த்தல், வாய் பிதற்றல், நாவு முள் போலிருத்தல், கண்ணீர் வடிதல், மலம் நீர் மஞ்சளித்தல், தூக்கமின்மை, சில சமயம் மிகுந்த தூக்கம், மார்பு நோதல், தலை, புறங் கழுத்து வலித்தல், நா வழுவழுத்தல்; அடிக்கடி அலறிப் பயப்படுத்தலாகிய குறி குணங்களை விளைவிக்கும்.

7. ஐயச் சுரம் (கபச் சுரம்).—மிகு சுரம், முகம், நா, நகம் இவை வெளுத்தல், மார்பு நோதல், இருமல், இளைப்பு, வாயினித்தல், துவர்த்தல்; நாசுவையறியாமை, பெருமூச்சு.விடல், விக்கல், தாகம், காதிலிரைச்சல், பிசுபிசுத்த வியர்வை, மார்பில் கோழை கட்டிக்கொண்டு குறுகுறுவென்ற ஒலியை உண்டாக்கல், கழிச்சல், வாய் குழறல்; உடல் வீங்குதல்; முதலிய குறி குணங் களைக் காட்டி, முப்பிணி (சன்னி) குறி குணங்களாகிய ஆடல், பாடல், அலைதல், புரளல், பிதற்றல் முதலியவற்றை உண்டாக்கிக் கொல்லுவதுமுண்டும்.

8. ஐயவளிச் சுரம் (கப வாத சுரம்).—மிகுந்த சுரம்; தலை நடுக்கல், உடல் விறைத்தல், இருமல், கைகால் குளிர்தல், சுவை யின்மை, உடல் நிறமும் வன்மையும் கெடல், ஈரல் இருக்குமிடத் திலும் நெற்றியிலும் துடித்தல், பெருமூச்சு, கோழை கக்கல், இனிப்பு, புளிப்பில் விருப்பமுண்டாதல், உடல் சோர்வு அடை தலாகிய குறி குணங்களை உண்டாக்கும்,

9. ஐயழல் சுரம் (கப பித்த சுரம்).—மிகுந்த சுரமுண்டாய்ப் பிறகு சுரம் விட்டவுடன் வியர்த்தல்; நாவு வெந்து உலர்தல்; கைத்தல், நாவில் அரத்தைப் போல் சுரசுரப்பாயிருத்தல், கோழை வாந்தி, உணவில் வெறுப்பு, இருமல், பெரு மூச்சு, வெளுப்பாக கழிதல், விடாச்சுரம், மூக்கு நாவு, எருவாய் இவற்றின் வழியாய்க் குருதி வெளிப்படல், தொண்டை கட்டல், நாவில் இனிப்பு, படுக்கை பொருந்தாமை,

கண் சிவத்தல்; மனம் தளரல்; உரத்துப் பேசல்; கை கால்களில், வலி; கண்கள் வாடிப் பஞ்சடைதல்; ஆகிய இக்குறி குணங்களை உண்டாக்கி முப்பிணிக் குறி குணங்களையும் விளைவிக்கும்.

10. முப்பிணி சுரம் : (வாத பித்த கப சுரம், முக்குற்ற கலப்பு சுரம்; முத்தோட சுரம்; சன்னி பாத சுரம்).—மிகுந்த சுரம் ஒரு சமயம் சுரம் மிகுதியாய்க் காய்தல், மறுசமயம் சைத்தியம் உண்டாதல்; வாய் பிதற்றல்; வாந்தி; பிரமை; நாவறட்சி; தாகம்; முக்குற்றங்களும் ஏகோபித்து ஒன்றோடொன்று பின்னிக் கொண்டது போல் நாடி நடைபெறல்; வியர்வை; குளிர்; நடுக்கல்; மார்பு துடித்தல்; படுக்கை பொருந்தாமை, அரட்டல் புரட்டல், அறிவு மயங்கல், ஆடல் பாடல், சிரித்தல், துணியைக் கிழித்தல் அல்லது அவிழ்த்தெறிதல், கண் சிவத்தல், கண் எரிதல் ஆகிய குறி குணங்களைக் காட்டும்.

அன்றியும், சுரம் விட்ட பின்பு, பகலில் தூங்கல், இரவில் கண் விழித்துக் கொண்டேயிருத்தல்; வியர்த்தல்; தலை சுற்றல், தலையில் ஏதோ ஊருவது போன்ற உணர்ச்சி; கண்ணிமை துடித்தல்; காதிரைதல், நாவு சிவந்து துவண்டதுபோற் காணல்; உமிழ் நீர் கைத்தல்; சிவந்திழிதல்; உடம்பு முழுமையும் நோதல்; பூட்டுகள் வலித்தல்; பூட்டுள் அசைக்க முடியாமை; உடல் சத்தற்றுப் போதல், சோம்பல் ஆகிய குறி குணங்களும் காணும்.

இவ்வாறு சுரம் வருவதும், விடுவதுமாகக் காட்டி ஐயப் பெருக்கை யுண்டாக்கி மிகுந்த சுரத்தோடு மார்பில் வலி, தொண்டையில் கோழைக்கட்டுடன் இருமல்; முகம், உதடு இவை கறுத்து குறுகுறு வென்ற ஒலி கோழைக்கட்டாலுண்டாகி, மூக்குத் தண்டு நீண்டு, சில்லிட்டு, காது கேளாமை, கைகால் சில்லிடல், மேல் மூச்சு என்னும் குறி குணங்களையும் காட்டிக் கொல்லுவது முண்டு.

11. மந்த சுரம்.—அசீரணத்தாலுண்டாவது. வயிறு மந்தம் மார்புவலி, தொடை வலி, புளி யேப்பம், வாந்தி, நீர் வேட்கை, பெரு மூச்சு இவை உண்டாகும். வயிறு பொருமி, சுரமுண்டாகி, இளைப்பு, விக்கல், உடல் சில்லிடல், திமிர் ஆகிய இக்குறி குணங்களைக் காண்பிக்கும்.

12. நளிர் சுரம்.—இது நளிர் அல்லது குளிர்ப் பிரதானமாகக் கொண்டு எழும் சுரம், மயிர் சிலிர்த்தல், கண்குவிந்து கொட்டாவி விடல், வாந்தி எழல், குளிர், நடுக்கல், சுரம் காய்தல், தலைவலி, கண் நீர் வடிதல், பித்த வாந்தி, மயக்கம், வாய்பிதற்றல் முதலிய குறிகுணங்களைக் காட்டிச் சுரம் விட்டு விடும். அப்பால் ஒரு நாள் விட்டு ஒரு நாள் முறையாக மேற்கண்ட குறி குணங்களோடு சுரம் மீண்டும் வரும். மூன்று நாளுக்கொரு முறை, நான்கு நாளுக்கொரு முறை ஒன்பது நாளைக்கொரு முறையாக இந் நளிர் சுரம் வருவதுமுண்டு.

13. வெஞ் சுரம்.—கடுமையான சுரத்துடன் மூக்குத் துளையில் அக்கிபோன்ற கொப்பளங்கள் உண்டாகும். தலைநோய், கண் சிவத்தல், எரிதல், வாய் நீரூறல், மயிர் சிலிர்த்தல்; கடுமையான சுரம் காய்தல், சுரம் விட்டபின் உடல் வியர்த்தல், உடல் வன்மை பெரிதும் குறைதலாகிய குறி குணங்களையுண்டாக்கும்.

14. மேனிச் சுரம் (மேகச்சுரம் எனச் சித்த மருத்துவம் கூறுகிறது).—தோல் தடித்து, உடல் சிவந்து சுரங்காயும். இத்துடன் வாந்தி, கழிச்சல், உடம்பு எரிச்சல், நமைச்சல், தோல் தடித்தல் தலை சுற்றல், மயக்கம் முதலிய குறி குணங்களை விளைவிக்கும்.

15. உள்ளச் சுரம்.—உள்ளம் என்னும் மனதைக் கெடுத்து வரும் சுரம்.

16. உட்சுரம்.—உடலின் உட்புறமாக காயும் சுரம். உடல் வன்மை குறைந்த பேர்க்கு சுரம் வெளிக்குத் தெரியாமல் உடலில் உள்ளேயே காயும், சோகம், மனத்தளர்வு, கை கால் ஓய்ச்சல், உணவு வேண்டாமை வாய் குமட்டல், உடல் வெளுத்தல், தலை நோதல், எப்போதும் உள்ளுக்கு சுரம் காய்வது போலிருத்தல்; வெள்ளோக்காளம், உடல் மெலிதலாகிய குறி குணங்களை உண்டாக்கும்.

17. வெளிச்சுரம்.—உடலின் வெளிப்புறமாக எப்போதும் சூடாகவே யிருத்தல்; வாய் கைத்தல், குமட்டல், உணவு செரியாமை, நீர் வேட்கை ஆகிய குறிகுணங்களுண்டாகும். ஆனால் உடம்பு எப்பொழுதும் சூடாகத் தோன்றினாலும், சுர நோயில் படுக்கையில் இருப்பது போல் இதில் இல்லாமல் தன் தொழிலில் ஈடுபட இடந்தருமென அறிக !

18. விட்டுவரும் சுரம்—ஒரு நாளில் .பல முறை சுரம் விட்டு விட்டு வரும். உடல் கருத்துக் கொண்டே வரும்; குருதி குறையும்; தினமும் சுரங் காயும்; காலையில் சுரங்காய்ந்து பின்பு விட்டு சிறிது நேரங் கழித்து அச் சுரம் மீண்டும் வரும். உடல் மெலியும், கை கால் சூம்பி வயிறு பெருக்கும்.

19. விடாச்சுரம்—சுரம் விடாது சில நாள்கள் காய்வதும், பின்பு தணிவதுமாயிருக்கும். கண் சிவக்கும், நாவுலரும், நீர் வேட்கை, கை கால் நோதல் ஆகிய குறி குணங்களைக் காட்டிச் சுரம் பிறக்கும். சில நாட்கள் வரை சுரம் குறையாமலே காய்ந்து பின்பு இறங்கும். இதற்குள் பல துன்பங்களை விளைவிக்கும்.

20. சாரற் சுரம். (இரச தாது கத சுரம்).—இது இரச தாதுவைப் பற்றி வரும் சுரம். உடலின் நீர் வற்றி உடம்பெல்லாமெரிதல்; இரச தாது கேட்டடைதல்; உடல் நோதல், நீர் வேட்கை; தூக்க மின்மை; உடல் வன்மை குறைதல்; நாச்சுவை யறியாமை,

வாந்தி, பெருமூச்செறிதல், விக்கலுண்டாதல்; தலைவலி, இளைப்பு, வியர்த்தல் என்னும் குறி குணங்களோடு ஐயம் மிகுந்து நாடியும் தளர்ந்து காணும்.

21. செங்கரைச் சுரம் (இரத்த தாது கத சுரம்).—இது இரத்த தாதுவைப் பற்றி வரும் சுரம், மிகுதியான சுரம், உடல் சிவந்து வீங்கினது போலக் காணல், நீர் வேட்கை, பிசுபிசுத்த வியர்வை, உடல் முழுமையும் நோதல், தோல் கன்றிப் போதல்; நா வழுவழுத்தல், மஞ்சள் நிறமாதல்; பூட்டுக்கள் நீட்டவும் முடக்கவும் முடியாமை; ஐயமிகுதல், தலை நோதல், மூக்கில் நீர் பாய்தல், மனக் கலக்கம், வாய் பிதற்றல், கை கால் சில்லிடல் தலை கிறு கிறுத்தல், அடிக்கடி கழிதலாகிய குறி குணங்களைக் காட்டி முப்பிணிக் குறி குணங்களையும் தொடரச் செய்யும்.

22. ஊன் சுரம்.—இது மாமிச தாதுவைப் பற்றி வரும் சுரம். இதில் மிகுதியான சுரம், பெருமூச் செறிதல், வியர்த்தல், உடலெங்கும் நோதல், உதடு உலர்த்தல், ஆலாபித்தல், மயிர்கூச் செறிதல், மனக் கலக்கம், கண்ணீர் வடிதல், படுக்கையில் தானறியாமலே கை கால்களைத் தூக்கிப் போடல்; தோல் மினுமினுத்தல்; உடல் ஊதல்; கொட்டாவி, விக்கல், வன்மை குறைதல், ஐயமிகுதல் ஆகிய குறி குணங்களைக் காண்பித்து நோயை வலுப்படுத்தும்.

23. கொழுப்புச் சுரம்.—இது கொழுப்புத் தாதுவைப் பற்றியுண்டாகும் சுரம். உணவில் விருப்பமின்மை, செரியாமை, சுரம், தலை நோதல், தலை புரளல், தலை நடுக்கல் என்னும் குறி குணங்களைக் காட்டும்.

24. என்புச் சுரம்.—இது எலும்பைப் பற்றி யுண்டாகும் சுரம். மிகுந்த நீர் வேட்கை; மிகுந்த சுரம்; உடல் இளைத்து வெளுத்துப் போதல்; செரியாமை; அடி வயிறு நோதல், கழிச்சல்; நரம்புகள்; கீல்கள் நோதல்; உடலின் உறுப்புகள் சுருங்கி உடல் நிறம் வேறுபடுதல், கண் மஞ்சளித்தல், தலையை அசைக்க முடியாமை அசைக்கின் உடல் முழுமையும் பெரிதும் நோதல் ஆகிய குறி குணங்களை விளைவிக்கும்.

25. மூளைச் சுரம்.—இது மூளையைப்பற்றி யுண்டாகும் சுரம். இதில் மந்தத்தின் பேரில் ஐயம் பெருகி செரியாமை; புளியேப்பம்; கொட்டாவி; விக்கல்; கைப்புடன் வாந்தியாதல்; வயிறு கழிதல்; வயிறு உப்பிசம்: மிகுதியான சுரம் காய்தல்; மனம் கலங்கல்; தலை நடுக்கல்; உடல் வெளுத்து இளைத்தல், உடல் மெலிதல்; மூச்சு தடுமாறல்; தொண்டை, முழங்கால், பூட்டுகள் நோதல்; உடல் நிறம் வேறுபட்டலாகிய குறி குணங்களைத் தோற்றுவிக்கும்.

**26. விந்து சுரம்.** இது சுக்கில தாதுவைப்பற்றியுண்டாகும் சுரம். உயிர் நிலைக்களனாகிய உச்சி, புருவம், உதடு, கழுத்து, மார்பு, மார்புக்குழி, உந்தி, முழங்கால், கணுக்கால், இடுப்பு, காலின் பெருவிரல், சுண்டுவிரல், தோல், விரை என்னும் பதினான்கு இடங்களில் வலியுண்டாகித் தலை நோதல், தலை நடுங்கல். பல்வலி, சுரம், சுவையின்மை, பசியின்மை, செரியாமை, விக்கல், வாந்தி, கழிச்சல், வாய் இனிப்பாயிருத்தல் ஆகிய குறி குணங் களைக் காட்டி, இருமல், பெருமூச்செறிதல், தூக்கமின்மை, உடல் வெளிறல், வீங்கல், குருதி வன்மை குறைதல், மனக்கலக் கம், மயக்கம், கை கால் சில்லிடல், ஆண்குறி சுருங்கல் எனனும் குறி குணங்களையும் உண்டாக்கி முப்பிணிக் குறி குணங்களை யும் விளைவிக்கும்.

**27. துன்பச் சுரம்.**—திடீரெனவுண்டாகும் துன்பத்தால் மன மும் உடலும் அதிர்ந்து உடலில் கொதிப்பேறி மயக்கம் மூர்ச்சை, அறிவு கலக்கம் முதலியவைகள் உண்டாகிக் கண் சிவந்து மிகுந்த சுரம் உண்டாகும். வாந்தியாதல், கை கால் நடுங்கல், கண்டவாறு பேசல், ஆடல் பாடல் முதலிய முப்பிணிக் குறிக் குணங்களையும் விளைவிக்கும்.

**28. முறைச் சுரம்.**—இதில் குளிருண்டாய் உடல் நடுங்கிக் கை கால் விறைத்துக் கொண்டு, கண்களில் எரிச்சலுண்டாகிச் சுரங்காயும், சுரம் விடுகையில் உடல் வியர்த்து, தாங்க முடியாத படி தலை வலியுண்டாகும். இவ்வாறாகச் சுரம் ஒரு நாள் விட்டு ஒரு நாளாகவும், இரண்டு, மூன்று; நான்கு, நாள் கணக்காகவும், மாதம் ஆண்டுக் கணக்காகவும், முறை வைத்து வருவதுண்டு. அன்றியும், இந்நோயில் பூட்டுகள் தோறும் நோதல், மயிர்க் கூச்செறிதல், நெஞ்சு நோதல், கொட்டாவி விடல் என்னுங்குறி களும் உண்டாகும்.

முறைச் சுரம் பன் முறை வருபவர்க்கு மண்ணீரல், கல்லீரல் விருத்தி நோய்கள் பிறப்பதுமுண்டு.

**29. மயக்கச் சுரம்.**—இச் சுரம் தலை சுற்றல், வாந்தியாதல், மயக்கமுண்டாதல், அறிவு கெடலாகிய குறிகுணங்களைக் காட்டிச் சுர முண்டாகும். வலி போல் (இழுப்பு அல்லது இசிவு) வலித்தும் சுரங்காயும். இச்சுரம் உள்ள வரையில் அறிவற்றுக் கிடக்கச் செய்யும்.

**30. பிதற்றல் சுரம்.**—இந்நோயில், முதலில் மயிர் சிலிர்த்துக் கண்சிவந்து, பூட்டுக்கள் தோறும் நொந்து அப்பால் சுரம் உண் டாகும். மிகுதியான சுரம் காய்ந்து நோயாளன் அறிவிழந்து, கண்டது கண்டவாறாகப் பிதற்றலும், படுக்கையிற்றங்காமல் அங்குமிங்கும் ஓடலுமான குறி குணங்களையும் விளைவிக்கும்.

31. புழுச் சுரம்.—வயிற்றில் புழுக்கள் சேருவதால் இச்சுரமுண்டாகும். பெரும்பாலும் குழந்தைகளிலுண்டாகும். இழுப்பு (இசிவு அல்லது வலி) உண்டாகும். பிள்ளைகளின் கை கால் முகம் இவை வலித்துக் கண்கள் சொருகும். பெருமூச்சு உண்டாகும்.

32. மஞ்சட் சுரம்.—இது, விடாச் சுரமாகக் காய்ந்து உடல் முழுமையும் மஞ்சள் நிறமடையும். வாந்தியுடன் பித்தம் வெளியாதல், குருதி வன்மை குறைதல், உடல் ஊதலாகிய குறி குணங்களையும் விளைவிக்கும்.

33. காலைச் சுரம்.

34. பகற் சுரம்.

35. மாலைச் சுரம்.

36. இராச்சுரம்.

37. அதிகாலைச் சுரம்.

38. நடுக்கற் சுரம்.

இச்சுரங்களின் குறி குணங்கள் சற்றேறக்குறைய மற்ற சுரம் போன்றதாயிருக்கும். சுரம் வருகின்ற வேளையைப் பொருத்தும், நடுக்கலைப் பொருத்தும் இவைகளின் பெயர்கள் அமைந்தன போலும்.

39. தீவரற் சுரம் (இதனைத் தோல் சுரம் எனவும் கூறுவர்). இது, தோலைப்பற்றியுண்டாகும் சுரம் எனினும், எலும்பையும் பற்றித் துன்புறுத்தி பெருஞ் சுரமாகக் காய்ந்து மக்களை மிகவும் வாட்டிக் கெடுக்கும். நாடி மெலிந்து நடக்கும். உடல் வெளுக்கும், வாய் பிதற்றல், வாய் நீருறல், புண்போல் உடம்பு நோதல், மயக்கம் ஆகிய குறி குணங்களையும் உண்டாக்கும். இதனால் இது " தீவிர சுரம் " எனவும் வழங்கும்.

40. வேனற் சுரம்.—அல்லது தாகச் சுரம்.—இதில் பெருந் தீயே போல் மிகுந்த அனலுடன் சுரங்காயும். அதிகமான நீர் வேட்கை, வயிறு கைகாலெரிச்சல், நாவறளல், பற் கடித்தல், வாய் பிதற்றல், படுக்கையில் புரளல் அல்லது எழுந்து ஓடல், பெரு மூச்செறிதலாகிய குறி குணங்களைக் காண்பிக்கும்.

41. ஏப்ப சுரம்.

42. கொட்டாவி சுரம்.

43. விக்கற் சுரம்.

இம் மூன்றும் வளிக் குற்றத்தினளவாயுண்டாவதால் .வளிச் சுரத்திலடங்கும்.

44. வியர்வை சுரம்.

45. தூங்காச் சுரம்.

இவையிரண்டும் அழல் குற்றத்தால் பிறக்குமாதலின் அழல் (பித்த) சுரத்திலடங்கும்.

46. இருமல் சுரம்.

47. கட்டிச் சுரம்.

48. சீழ் கொள்ளும் பல் கொப்புளச் சுரம்.

இவை மூன்றும் ஐயக்குற்றத்தால் பிறப்பனவாதலால் ஐயச் சுரத்துள் அடங்கும்.

49. பழஞ் சுரம் (மாறல் சுரம்).—இச்சுரம் ஒரு நாள் விட்டு ஒருநாளும், இரண்டு நாள்கள் விட்டு மூன்றாவது நாளும் வருவதுமாக மாறி மாறி வரும் சுர நோயாகும். நான்கு நாள்கள், நடு இரவு, பதினைந்து நாள்கள், ஒரு மாதம் ஆகிய இக்கணக்காக இச்சுரம் வருவதுமுண்டு. முக்குற்றங்களும் ஒன்று கூடிக் கேடடைந்து பல துன்பங்களை விளைவிக்கும்.

50. வீக்க சுரம்.—வீக்கம் கபவாத தொந்தத்தாலேற்படுவதால் இது கபவாத தொந்த சுரத்துள் அடங்கும்.

51. கழிச்சல் சுரம்.—(அதிகாரச் சுரம் பித்த அதிகாரச் சுரம்).—ஆரம்பத்தில் உணவில் விருப்பமின்மை, வயிறு மந்தமாயிருத்தல், நாவறட்சி, கையுங்காலுஞ் சில்லிட்டிருத்தலாகிய குறி குணங்களைக் காட்டி மிகுந்த சுரங்காயும். வயிறு பொருமி விம்மி, இரைந்து பெருங் கழிச்சலையுண்டாக்கும். கழிச்சலில் குருதியும் வெளியாகும். மனக்கலக்கம், உடல் உறுப்புக்களை அசைக்க முடியாமை, உடல் முழுமையும் புண் போல் நோதலாகிய குறி குணங்களையும் உண்டாக்கும்.

52. வாந்தி சுரம் (சத்திச் சுரம்).— இதில் அடிக்கடி வாந்தியாதல், உடல் வியர்த்தல், கழிச்சல், வயிறு பொருமல், உடல் புண்போல் நோதல், வயிறு இரைதல், காது கேளாமை, நாவறளல், உணவு செல்லாமை, கீழ்வாய் கடுத்தலாகிய குறி குணங்களோடு சுரம் காயும்.

## II. புற வழிச் சுரங்கள் 12, (பிற வழிச் சுரங்களெனவும் கூறுவர்) அவற்றின் முக்கிய குறி குணங்கள்

1. மோது சுரம் (அபிகாத சுரம்).—ஒருவன் உடல் வன்மைக்குத் தகுந்தவாறின்றி மிகுதியாக நடத்தல், யானை, குதிரை, ஏறல், தாங்கக்கூடாத சுமையைச் சுமத்தல், இச்செயல்களால் இளைப்பை உண்டாக்கி, கை கால்கள் தளர்ந்து இச்சுரமுண்டாகும். பனிக் காற்றிலீடுபடுதலாலும், அடிபடுதலாலும் இந்நோய் வருவதுண்டு. உடல் முற்றும் நோதல், உடல் வியர்த்தல், ஏப்பம், பிரமை, குளிர்ந்த உணவின் மீது இச்சையாகிய குறி குணங்களைக் காட்டும்.

2. நாவேறு சுரம் (சாபச் சுரம்.)—பெரியோர்களையேனும், கடவுளை வணங்கி வழிபடுபவரையேனும் மனங்கசந்து கடினமாகப் பேசின், அவர்கள் சாபமிடுவதாலேற்படும் சுரம் நாவேறு சுரம் எனப்படும். இதில் மனம் சோர்வடைந்து சுரமுண்டாகும். தலை நோய், வாந்தி, தயக்கம், உடல் மெலிவு, வாய் பிதற்றல், தான் செய்த குற்றத்தை நினைந்து வருந்துதலாகிய இக்குறி குணங்களைக் காட்டும்.

3. ஏவற் சுரம் (அபிசாரம்).—மந்திரம், சூனியம், ஏவல், முதலியவற்றால் இச்சுரம் பிறக்கும். உடல் முழுமையும் கொப்புளங்களுண்டாய் விடாச் சுரமாகக்காயும், மனச்சோர்வு, மனக்கலக்கம், மனம் வேறுபடுதல், வாய் பிதற்றலாகிய குறிகுணங்களையும் காட்டும்.

4. பூத சுரம்.—இது பூதபைசாசங்களின் பீதியாலுண்டாகும் சுரம் என்பர். இச்சுரத்தில், குபரகண்டன் வலி (முப்பிணி) வலியைப் போல் வலித்து, கழிச்சல், கண்களை உருட்டி விழித்துப் பார்த்தல், உடல் கறுத்துப்போதல், பிரலாபித்தல், எப்பொருள்களிலும் ஆசைப்படல், அதிகம் உண்ண விரும்பல், வாய் பிதற்றல், ஆடல், பாடல், மயிர்க்கூச்செறிதல், மிக்க உறக்கம் கொள்ளுதல், உரத்த ஒலியோடு சீறிப் பேசல், தலைவிடி, மயக்கம், நீர் வேட்கை, மிகுந்த சுரம், வியர்த்தல், கண்கள் சிவத்தல், மூக்குச் சிவத்தல் (கோபக் குறியைக் காட்டல்), பெருமூச்சு, வயிறு கழிதல், அழுதல், நகைத்தல், ஏப்பம், விக்கல், கொட்டாவி, மனத் தடுமாற்றம் என்னும் குறி குணங்களைக் காட்டி முப்பிணியைத் தொடரச் செய்யும்.

5. மருந்து வேகச் சுரம்.—நஞ்சுத் தன்மைகளையுடைய இரசம், கெந்தகம், தாளகம், நாபி, சேங்கொட்டை போன்ற மருந்துகளை நோய் வன்மைக்கும், உடல் வன்மைக்கும் தக்கவாறு கொடுக்காமல் அதிகமாகக் கொடுப்பதாலுண்டாம் நஞ்சுத் தன்மையினால் இச்சுரம் உண்டாகும். குருதி கேட்டையும், வாய் புண்ணாகும், உடல் வீங்கும், சுரமும் கடுமையாயுண்டாகும். இருமல், தும்மல், கழிதல், வாந்தியாதல், உடல் வெளுத்தலாகிய குறி குணங்களையும் உண்டாக்கும்.

6. நஞ்சுச் சுரம் (நச்சுச் சுரம், விடச் சுரம்).—இது நஞ்சுத் தன்மையுடைய வண்டுகள், பூச்சி புழுக்கள் கடியாலுண்டாகும் சுரமாகும். இதில், கடித்த விடத்தில் வீங்கல், நமையுண்டாதல், எரிதல், உடல் முழுமையும் அல்லது முகத்திலேனும் நீர்கோத்து உப்புதல், சுரங்காய்தல், விக்கல், ஏப்பம், செரியாமை, பச்சைநிற வாந்தி, மயக்கம், மூர்ச்சையாகிய குறி குணங்களைக் காட்டும்.

7. சினச் சுரம்.—தீக்குற்றம் (பித்தம்) தன்னளவில் மிகுந்து குருதியை வெம்மைப்படுத்தியுள்ளபோது, அடக்க முடியாத சினமெழுந்து, கண்டது கண்டவாறு பேசி, தலையிடித்து, கண்ணிருண்டு, மயக்க முண்டாகிச் சுரணையற்றுக் கீழே விழச் செய்யும். இதனால் மிக்க சுர முண்டாகும்.

8. பயச் சுரம்.—இதில், யாதொரு காரணமுமின்றித் திடீரென அச்சமுண்டாகித் திடுக்கிட்டு, உடல் நடுங்கி, வியர்த்துத் தலை கனத்துச் சுரமெழும். வயிறு எரிதல், கண் சிவத்தல், தலை சுற்றல், மயக்கம், மயிர் சிலிர்த்தல், பெருமூச்சு விடல், சத்தற்றுச் செத்தைப் போலக் காணல், மார்பு துடித்தல், வயிற்றில் ஒன்றுமில்லாதது போலக் காணல், பற் கடித்தல், என்னும் குறி குணங்களைக் காட்டும்

9. வருத்தச் சுரம்.—இது மனவருத்தத்தின் காரணமாக உண்டாகும் சுரம். மனம் வேற்றுமையடைந்து தன்னையறியாமல் வாய் பிதற்றல், ஆடல், பாடல், அழுதல் முதலிய குறி குணங்களையுமுடையதாகும்.

10. காமச் சுரம்.—(இச்சைச் சுரம்).—இச்சை மிகுதியால் எழும் சுரமாகும். இச்சை கைகூடாவிடில் இச் சுரம் பெரும்பாலும் உண்டாகும். அறிவை மயக்கும், தன் பண்புகளை இழக்கும். உடல் எரிச்சல், கண் எரிச்சல், சிவத்தல், மயக்கம், நாவறளல், நீர் வேட்கை, மார்பு துடித்தல் என்னும் குறி குணங்களைக் காட்டிச் சுர மிகுதியாயுண்டாகும்.

11. தெய்வ சினச் சுரம் (தெய்வச் சுரம் எனவும் கூறுவர்).—கடவுளுடைய அதிருப்திக்குப் பாத்திரமான போது இச்சுர முண்டாகுமென்பர். அதாவது கடவுளுக்குப் படைப்பதற்காக செய்யப்படும் பொருளை திருடித் தின்றாலும், கடவுளைப் பழித்தாலும், இச்சுர முண்டாகுமென்பதாம். தலை நோதல், மயக்கம், வாந்தி, தலை சுற்றல், பிரமை முதலிய குறி குணங்களுண்டாகும்.

12. சேர்க்கை சுரம் (அபிஷங்கம்). செயற்கை சுரம் எனவும் கூறுவர்.—மேற்கூறிய பதினொரு வகைச் சுரங்களிற் சில அல்லது பல சேர்ந்த காரணங்களாலுண்டாகும் சுரம் எனப்படும்.

ஆண், பெண் கலவியினாலும் சுரம் உண்டாவதையும் குறிக்கும் என்பர்.

(—சித்த மருத்துவமும், கை எழுத்துப் பிரதியும்.)

(மேற்கோள்—கை எழுத்துப் பிரதி.)

சுரப்பகுதி எண்.

I. தன்வழிச் சுரங்கள் 52.

1. "தன்வழிச் சுரங்கள் தம்மைச் சாற்றின்,
மன்னியவாத சுரம் பித்த சுரம்,
பன்னிய கப சுரம் வாத பித்த சுரம்,
பின்னிய வாத கப சுரம் பின்னுமே."

2. "பித்தவாத சுரம் பித்த கப சுரம்,
தத்து கப வாத சுரங்கப் பித்தனல்,
கத்துவாத பித்தகப சுரம்,
தொத்து மந்த சுரம் நளிர் சுரமே."

3. "வெஞ்சுர மேனிற்சுர முள்ளச்சுரம்,
விஞ்சுமுட் சுரம் மிக்க வெளிச் சுரம்,
வஞ்சிவிட்டு வருஞ்சுரம் விடாய்ச் சுரம்,
துஞ்சுசாரற் சுரஞ் செங்கறைச் சுரமே."

4. "கொன்செயூன் சுரங்கொழுப்பு சுரங்கொல்
என்புச்சுரமூளைச் சுரம் விந்தனல்
துன்பத்தோற் சுரமுறைச்சுர மயக்கனல்
பின்னுபிதற்றற்சுரனோய் புழுச்சுரம்".

5. "மஞ்சட் சுரங்காலைச் சுரம் பகற் சுரம்,
துஞ்சு மாலைச் சுரத்தோடிராச் சுரம்,
விஞ்சிய காலைச்சுரந் தீவரற் சுரம்,
மஞ்சில் வேனற் சுரமேப்பச் சுரம்."

6. "கொடுவாந்திச்சுரங்கொட்டாவிச் சுரம்
விடவிக்கற் சுரம் மிகு வியர்வைச் சுரம்,
இடர்செய் தூங்காச் சுரமிருமற் சுரம்
படரும் மழஞ் சுரம் பகர்கட்டிச் சுரம்."

7. "பழுத்துச் சீழ்கொளும் பல் கொப்புளச் சுரம்
விழுமனடுக் கற் சுரம் வீக்கச் சுரம்,
கழிச்சற் சுரமென வெண்ணப்படுவன
பழிச்சுமைம் பத்திரண்டாற் பகரே."

II. புறவழிச் சுரங்கள் 12.

8. "பிறவழிச் சுரங்கள் பிதுர் மோதுச் சுரம்
இருநாவேறுச் சுரம் ஏவற் சுரம்,
மருப்பூதச் சுரம் மருந்துவேகற் சுரம்
திருகுவிடச் சுரம் சினச் சுரம் பயச் சுரம்."

9. "துன்பம் விளைக்குந்துக்கச் சுரம் பெண்
இன்பம் விளைக்குங் காமச் சுரம் பாவம்,
மன்னுந்தெய்வ சினச் சுரம் யாழோ
ரின் சுரம் பனிரெண்டெனப் படுமென்றே."

III. பிற சுரம்.

10. "தன்வழி புறவழிச் சுரமெட்டெட்டா,
மன்னின முதன்மைச் சுர மெனலாகும்.
பின்னும் பலவழிப் பிறந்தனப்பிற சுரம்
என்னப்படுமவை பலவினத் தனவே."

(இவற்றின் பொருள்).

1. தன்வழிச் சுரங்கள் 52.

1. வாத சுரம்.
2. பித்த சுரம்.
3. கப சுரம்.
4. வாத பித்த சுரம்.
5. வாத கப சுரம்.
6. பித்த வாத சுரம்.
7. பித்த கப சுரம்.
8. கப வாத சுரம்.
9. கப பித்த சுரம்.
10. முப்பிணி சுரம் (வாத பித்த கப சுரம்.)

11. மந்த சுரம்.
12. நளிர் சுரம்.
13. வெஞ் சுரம்.
14. மேனிச் சுரம்.
15. உள்ளச் சுரம்.
16. உட் சுரம்.
17. வெளிச்சுரம்.
18. விட்டுவருஞ் சுர
19. விடாய்ச் சுரம்.
20. சாரற் சுரம்.
21. செங்கறைச் சுரம்.
22. ஊன் சுரம்.
23. கொழுப்புச் சுரம்.
24. என்புச் சுரம்.
25. மூளைச் சுரம்.
26. விந்துச் சுரம்.
27. துன்பச் சுரம்.
28. முறைச் சுரம்.
29. மயக்கச் சுரம்.
30. பிதற்றல் சுரம்.
31. புழுச் சுரம்.
32. மஞ்சட் சுரம்.
33. காலைச் சுரம்.
34. பகற் சுரம்.
35. மாலைச் சுரம்.
36. இராச் சுரம்.
37. அதிகாலைச் சுரம்.
38. தீவரற் சுரம் (தீவிர சுரம்).
39. வேனற் சுரம் (தாகச் சுரம்).
40. ஏப்ப சுரம்.
41. வாந்தி சுரம்.
42. கொட்டாவிச் சுரம்.
43. விக்கற் சுரம்.
44. வியர்வைச் சுரம்.

45. தூங்காச் சுரம்.
46. இருமல் சுரம்.
47. பழஞ் சுரம்.
48. கட்டிச்சுரம்.
49. பழுத்துச் சீழ் கொளும் பல் கொப்புளச் சுரம்.
50. நடுக்கல் சுரம்.
51. வீக்க சுரம்.
52. கழிச்சற் சுரம்.

இவையாவும் தன்வழிச் சுரங்கள் எனப்படும்.

### II பிறவழிச் சுரங்கள் 12.

1. மோதுச்சுரம்.
2. நாவேறு சுரம்.
3. ஏவற் சுரம்.
4. பூதச் சுரம்.
5. மருந்து வேகற் சுரம்.
6. நஞ்சுச் சுரம்.
7. சினச் சுரம்.
8. பயச் சுரம்.
9. துக்க சுரம் (வருத்த சுரம்).
10. காமச் சுரம்.
11. தெய்வ சினச் சுரம்.
12. சேர்க்கை சுரம் (செயற்கை சுரம்).

இவையாவும் புறவழிச் சுரங்களெனப்படும்.

### III. பிற சுரம்.

மேற்கூறிய அறுபத்து நான்கு சுரங்கள் பிரதானமானவை என்றும், மற்றும் பல காரணங்களால் வேறு பல பிற சுரங்களும் பிறக்கக்கூடுமெனவும் புராதன நூல்கள் கூறுகின்றன.

(கை எழுத்துப் பிரதி.)

### சுர நோயில் பிறக்கும் துணை நோய்கள்.

1 " சுரமதே கனலதாகும் சுரமதே சீதமாகும்
சுரமதே தோடமாகும் சுரமதே சோகையாகும்
சுரமதே மேகமாகும் சுரமதே கபமுமாகும்
சுரமதே சாரமாகு சுரமதே தாகமாமே".

2 " சுரமதே வறட்சியாகும் சுரமதே ரத்தமாகும்
சுரமதே சீழுமாகும் சுரமதே மஜ்ஜையாகும்
சுரமதே கணையதாகும் சுரமதே யிருமலாகும்
சுரமதே க்ஷயமதாகும் சுரமதே பொருமலாமே. "

3 " சுரமதே சூலையாகும் சுரமதே சொறியதாகும்
சுரமதே விரணமாகும் சுரமதே பித்தமாகும்
சுரமதே வாதமாகும் சுரமதே வாய்வுமாகும்
சுரமதே ஈளையாகும் சுரமதே இழுப்புமாமே. "

(இதன் பொருள்.)

1. " சுரமதே கனலதாகும " என்பதினால், சுரம் வந்து துன்புறுத்திய காலத்தில் உடல் வன்மை கெட்டு, பித்தம் மிகுந்து, செந்நீர் குறைந்து, நீர்க்கடுப்பு, என்புருக்கி நோய் முதலிய வெப்ப நோய்கள் தொடருமென அறிக.

2. " சுரமதே சீதமாகும " என்பதினால், சுரநோயுள்ள காலத்து பித்த வாதம் (அழல்வளி) அல்லது கபம் (ஐயம்) மிகுதலால் வெப்பம் குறைந்து, வாதகபச் சேர்க்கையால் குரற்கம்மல், கீல்களில் வீக்கம் (ஆமவாதம் அல்லது சீதங் கண்டு வாதம்) முதலிய சீதள சம்பந்தமான நோய்கள் தோன்றும்.

3' " சுரமதே தோடமாகும் " என்பதினால், சுரநோயுள்ள காலத்தும், சுரம் விட்டவுடனேயும், அபத்திய பதார்த்தங்களையும், செயல்களையும் அனுசரித்தலால் இரசதாது முதல் சுக்கில தாது ஈறாக ஏழு உடற்றாதுக்களில் ஏதேனுமொன்று அல்லது பல தாதுக்களைப் பற்றிய தோடங்களுண்டாகும். இதனைச் " சப்த தோடமென்றும் ", சந்நிபாத மென்றும் அழைப்பர்.

" அபத்திய உணவுகள் செயல்களாவன" சுரமுள்ள காலத்தும், சுரம் விட்ட பத்து தினங்கள் வரைக்கும் நோயினன் குளிர்ந்த நீரைப் பருகல், புளிப்பு, உப்பு, கைப்பு, துவர்ப்பு உள்ள பொருள்களை உண்ணல், சந்தனம், புனுகு போன்ற நறுமணங்களைக் கொள்ளுதல், மிகுந்த காற்று, பனி, நிலவு உள்ளயிடங்களில் படுத்தல், விரைந்த நடை, ஊருதி ஏற்றம், சினம், அழுகை, பெண் இச்சை இவற்றை நிகழ்த்தலாம்.

4. " சுரமதே சோகையாகும் " என்பதினால், வளி சுரம், மாறல் சுரம், குளிர் சுரம், தாது கத சுரம், ஆகியவைகள் நீடித்து நிற்குமாயின் அழல் மீறி, குருதி வற்றியும், நீர்த்தும் போம். அதனால் பாண்டு, சோகை, காமாலை, கல்லீரல் மலர்ச்சி, மண்ணீரல் மலர்ச்சி முதலிய நோய்கள் தொடரும்.

5. "சுரமதே மேகமாகும்" என்பதினால், பித்த சுரம், வெஞ்சுரம், உட் சுரம், என்புச் சுரம், வரற் சுரம், வேனற் சுரம், விடாச் சுரம், அம்மைச் சுரம், ஆகிய சுரங்களிலுண்டாம் அதிக வெப்பத்தினாலும்; அகால போசனம், அற்பவுண்டி, அளவுக்கு மீறிய உழைப்பு, தகா நடத்தை இவற்றாலுண்டாகும் அதி வெப்பத்தினாலும் மேக நோய் பிறக்கும். மேற்கூறிய கடுமையான சுரங்களாலுண்டாகும் வெப்பத்தினால் அடி வயிறு, நீர்ப்பை, குறியின் நாளம், நீர்க் குண்டிக்காய் இவற்றில் தாபிதமும் புண்ணும் ஏற்பட்டு, நீர்க்கடுப்பு, நீர் எரிச்சல், வெள்ளை வீழல், பிரமேகம், பிரமியம் போன்ற மேக நோய்கள் வந்து சேரும் என அறிக.

6. "சுரமதே கபமுமாகும்" எனபதினால், கபசுரம், கபவாத சுரம், இருமல் சுரம், வறட்சுரம், ஆகிய சுரங்களினால் குருதி குறைந்து, நுரையீரல் (சுவாசாசயம்) வெப்பமடைந்து, அதன் வன்மையும், செயலும் கெட்டு, கோழையை வெளிப்படுத்தாது கபாசயத்தில் (நுரையீரல்) தங்கச் செய்து ஐய நோய்களாகிய இருமல், ஈளை, இளைப்பு, இவற்றைப் பிறப்பித்து உடலை வற்றச் செய்யும்.

7. "சுரமதே யதிசாரமாகும்" என்பதினால், வளி சுரம், கழிச்சல் சுரம், வளி ஐய சுரம், மாறல் சுரம் இத்தகைய சுரங்கள் நாட்பட்டு நிற்குமேல், உடல் வன்மை கெட்டு, தேகம் சுட்கித்து, சுரம் நீங்கிய பின்னும் உண்ணும் உணவு செரிக்கும் சக்தி கெட்டு, மூலத்தில் வாய்வு தங்கிப் பெருங் கழிச்சலென்னும் அதிசார நோயை உண்டாக்கும்.

8. "சுரமதே தாகமாகும்" என்பதினால் பித்த சுரம், பித்தவாத சுரம், விடாச் சுரம், சாரற் சுரம், செங்கறைச் சுரம் ஆகிய இவை நீடித்து நின்று அப்பால் நீங்கினும் ஏழு உடற்றாதுகளும் வன்மை குன்றி, நாவு, கண்டம், தாடை, நரம்பு இவைகளில் வெப்பமுண்டாய் நீர் வேட்கையை அதிகப்படுத்தும்.

9. "சுரமதே வறட்சியாகும்" என்பதினால், வெஞ்சுரம், உட்சுரம், வறட்சுரம், மருந்து வேகற் சுரம், செங்கறைச் சுரம், முதலிய சுரங்கள் கண்டு நீங்கிய பிறகு, சுர வேகங்களைத் தணிக்கு மருந்துகள் உண்ணாதிருந்தால் அவ் வெப்பம் ஏழு உடற்றாதுக்களிலும் பரவி, அவைகளை வாட்டி உலர்த்தி விடுமாதலால் குருதி வறளும். அதனால் சோபையும், என்புச் சத்துக் குறைவதால் எனபுருக்கி நோயும் உண்டாகும்.

நோயினனை மரணாவஸ்தைக்குட்படுத்தவும் செய்யும்.

10. "சுரமதே இரத்தம் அல்லது இரத்த பித்தமாகும்" என்பதினால், அழல் சுரம், அழலைய சுரமாகிய இவற்றில் பெரும்பாலும் இரத்தத்தை எவ்வழியிலேனும் வெளிப்படுத்தும் இத்

தகைய நோயை "இரத்த பித்தம்" நோய் என்பர். இக் "குருதியழல்" நோயானது திரும்பவும் இரத்த காசம், இளைப்பு ஆகிய நோய்களை எளிதில் உண்டாக்கும்.

11. "சுரமதே சீழுமாகும்" என்பதினால், மாந்த சுரத்தில் உணவு செரியாது. ஆமதோடம் உண்டாகும். இரச தாது முதல் மற்றையத் தாதுக்களும் கேடடையும். இதன் காரணமாக விப்புருதி போன்ற சீழுடன் கூடிய கட்டிகள், பிளவைகள் இவைகளை யுண்டாக்குமென்பதாம்.

12. "சுரமதே மஜ்ஜையாகும்" என்பதினால், வறட் சுரம், காமச் சுரம், இருமல் சுரம், கபசுரம், ஆகிய இத்தகைய சுரங்களில் என்பிலும், மூளையிலும் வெப்பம் அதிகரித்துக் கொழுப்பு தாதுவைக் குறைக்கும், உடல் வற்றுமெனவும் அறியவும்.

13. "சுரமதே கணையதாகும்" என்பதினால் சுமார் பனிரெண்டு வயதுக் குட்பட்ட குழந்தைகளில் என்புச்சுரம், பித்த சுரம், மாந்த சுரம், இவை தோன்றிக் குழந்தைகளைத் துன்புறுத்துங்கால் அவற்றை விரைவில் குணப்படுத்தாவிடில் கணை நோயைப் பிறப்பிக்கும்.

14. "சுரமதே இருமலாகும்" என்பதினால், கபசுரம், கபவாதசுரம், என்புச் சுரம், உட்சுரம் இத்தகைய சுரங்கள் கண்டு நீங்குந் தருவாயில் கபாசயத்தில் வெப்பம் அதிகமாயின் இருமல் நோயை உண்டாக்கும். மருந்து வேகத்தினாலும் இருமலுண்டாகும்.

15. "சுரமதே க்ஷயமாகும்" என்பதினால், மேற் கூறிய கபசுரம், கபவாத சுரம், என்புச் சுரம், உட்சுரம் இவைகளேனும்; அல்லது வறட்சுரம், கட்டிச் சுரம் இவையேனும் உண்டாய் சுரம் தணிந்த பின் அதன் வேகம் தணியாதிருப்பின், குருதியைக் கெடுத்து உடலை இளைக்கச் செய்து, இளைப்பு நோயாகிய "க்ஷயத்தை" வரவழைக்கும்.

16. "சுரமதே பொருமலாகும்" என்பதினால், நாட்பட்ட சுரங்களினால் துன்பப்பட்டவர்களுக்கு உணவைச் செரிக்கக் கூடிய சடராக்கினி கேடடைந்து வளி, அழல் குற்றங்களையும் கெடுத்துக் கீழ் நோக்குங்கால், மேல் நோக்குங்கால், நடுக்கால், இவைகளின் தொழில் குன்றி வயிற்றில் வாயுவுமிகுந்து, வயிற்றுப் பொருமல் என்னும் நோயை விளைவிக்கும்.

17. "சுரமதே சூலையாகும்" என்பதினால், வாத கப சுரங்களில் குருதி கெட்டுச் சந்திகளில் (கீல்களில்) நீர் தங்கிக் கலங்குவதால், முட்டிகளில் சூலத்தால் குத்துவது போன்ற வலியை உண்டாக்கும். இதனைச் சூலை நோய் என்பர்.

18. '' சுரமதே சொறியாகும் '' என்பதினால், தினச்சுரம், விட்டு வரும் சுரம் இரண்டு நாள் முதல் பட்சம் வரையிலும் மாறி மாறி வருகின்ற மாறல் சுரம்; இவைகள் வாதகபம், பித்த கபம், மிகுதியால் வருவதால் உணவைச் செரிப்பிக்க வொட்டாது, இரத்தம் கெட்டு, வன்மை குறைந்து, சருமம் வெப்ப மடைந்து சொறி நோயை உண்டாக்கும்.

19. '' சுரமதே விரணமாகும் '' என்பதினால், வாதசுரம், வாத கபசுரம், மண்ணுளிப் பாம்பு, வண்டுகள், விடப் புழுக்கள் இவற்றின் கடியாலுண்டாகும் சுரங்கள் தணிந்த பிறகும், சொறி, சிறங்கு, கொப்புளம், புண், புரைகள் இவைகளையுண்டாக்கும்.

நாட்பட்ட சுரங்களில் நோயினன் நீடித்துப் படுக்கை யிருக்கும் போது படுக்கை அழுத்துவதால் கொப்புளம், புண் உண்டாவதும் இதே காரண மெனக் கொள்ளலாம்.

20. '' சுரமதே பித்தமாகும் '' என்பதினால், பித்த சுரம், பித்த வெறிச்சுரம், பித்தவாதசுரம், உள்ளச்சுரம் இவைகள் நீடித்திருந்து, அப்பால் சுரம் நீங்கிய பின்னும் நோயின் வன்மை யால் அறிவு கலங்கிப் '' பயித்திய ரோகம் '' உண்டாவது முண்டு.

21. மற்றும் 22. '' சுரமதே வாதமாகும்'' '' சுரமதே வாயுமாகும் '' என்பதினால், சீதசுரம், கபவாத சுரம் இவைகளில் கபத்தைப் போக்கக்கூடிய மருந்துகளின் வேகம் பலப்பட்டால் கபத்தைத் தணித்து வாத விருத்தியைச் செய்யும். அக் காலத் தில் மலமும் சலமும் கட்டுப்பட்டு வாத ரோகத்தையும், குடலில் வாயு விருத்தியையும் உண்டாக்கும். ஆதலால் சுரமதே வாத மும் வாயுவுமாகுமென்றார்.

22 '' சுரமதே ஈளையாகும் '' என்பதினால், கபசுரம், கபவாதசுரம் இவைகளில் வாதத்தின் வன்மை குன்றிக் கபாசயத் தில் சேருகின்ற கபத்தை வெளியில் துப்ப முடியாமல் போவதால் அந்த ஸ்தானத்தில் கபம் நிறைந்து, மூச்சு விடவும் இழுக்கவும் வொட்டாமல் தடைப்படுவதால் ஈளை நோயுண்டாகும். '' ஈளை '' என்பது '' கபம் '', '' கோழை '', '' இரைப்பு '' நோய் இவற்றைக் குறிக்கும். இதனைச் '' சுவாசமூட்டு '' என வும் கூறுவர்.

23. '' சுரமதே இழுப்புமாகும் '' என்பதினால், மேற் கூறிய சுரங்களை யனுசரித்தே கபமும், மலக்கட்டும் ஏக காலத்தில் ஒருங்கே சேர்ந்து தோன்றில் '' இழுப்பு '' ரோகமும் உண்டாகு மென்பர். மேலே கூறிய ஈளையைக் காட்டிலும் சற்று அதிக மான சிரமம் இழுப்பு நோயில் உண்டு. இதனை '' இரைப்பு நோய் '' என்றும் கூறுவர்.

சித்த மருத்துவம் மற்றும் பல கையெழுத்துப் பிரதிகளும்

குறிப்பு—சுரநோயில் " முக்குற்ற நோய் " என்னும் " சன்னி பாதம் " தொடர்பு நோயாக வரும் என்பதை நாம் ஞாபகப் படுத்திக் கொள்ளல் வேண்டும்.

## 2. முக்குற்ற நோய்.

**வேறு பெயர்கள்.— முப்பிணி நோய், சன்னி நோய்.**

இயல்.—ஏதேனுமோர் நோயால் பீடிக்கப்பட்டிருக்கும் நோயினனுக்கு வளி, அழல், ஐயம் மூன்று நாடிகளும் ஏகோபித்துத் ததம் அளவில் மிகுந்தெழுந்தால் பலவிதக் குறி குணங்களையும் துன்பங்களையும் விளைவிக்கும் போது இதனை முக்குற்ற நோய் என்பர். பெரும்பாலும் இது சுரநோயைத் தொடர்ந்து வரும் நோயாகும்.

### முற்குறி குணங்கள்.

இந் நோயில் மிகுந்த சுரங்காய்தல், வாய் பிதற்றல், எழுந்து ஓடல், ஆடல், பாடல், மூக்கு கை, கால்கள் சில்லிடல், கண் பஞ்சடைதல், ஒளிகுன்றல், காதிரைதல், கை கால் வீங்குதலாகிய குறி குணங்களைக் காட்டும். அன்றியும், உடலையும் தன் துணிகளையும் தொட்டுத் தொட்டுப் பார்த்தல், மக்கள், மனைவி, உற்றார் உறவினர்களை விழித்து விழித்துப் பார்த்தல்; அழுதல், கண்ணீர் விடலாகிய குறி குணங்களையும் உண்டாக்கும்.

### சன்னிபாத சுரங்களின் பொதுக்குறி குணங்கள்.

சுரநோயில் வருந்தும் போது வளி, அழல், ஐயம் மூன்றும் படபடத் தாகிலும், மெலிந்து உள்ளடங்கியாவது நடக்கும்; தூக்கமின்மை கைகால்கள், மூக்கு இவை சில்லிடல் ; மனநிலை கெடல்; அறிவு கலங்கல் ; கண்டபடி பேசல் ; ஆடைகளை எடுத்து வீசல்; ஆடைகளைக் கிழித்தல், பிணைதல், தொட்டுத் தொட்டுப் பார்த்தல்; படுக்கையை விட்டு எழுந்து ஓடல் ; ஆடல், பாடல், வாய் பிதற்றல், உடல் வன்மை ஒடுங்கல் ; கண் திறவாமை; வாய் பேசாமை ; பெருமூச்சு வாங்கல் ; தொண்டையில் கோழை கட்டல்; கோழை குறு குறு வென்று சத்தமிடல் ; கண் பஞ்சடைதல் ; மூக்கு நீளல் ; காது கேளாமை; சுரணையற்றுக் கிடத்தல் ; கோழை மிகுந்து மூச்சுத் தடுமாறி உடல் வியர்த்துப் பிசுபிசுத்துச் சில்லிடல் ; வாதமும், பித்தமும் அழுந்திப் போதல் ; ஐயம் தனித்து மிகுதியாதல் ; சீவ நாடி நடை சரியாகப் புலப்படாமை ஆகிய குறி குணங்களில் சில அல்லது பல குறி குணங்கள் சேர்ந்து தோன்றும் என்பதேயாகும்.

## முப்பிணி சுரங்கள் தோன்றுவதற்குரிய காரணங்கள்— அதாவது நோய் வரும் வழி.

சுரம் தோன்றிய காலத்து ஒழுங்கான பத்தியம் அனுசரிக்காமல் அபத்தியம் (பத்தியப் பிழை) ஏற்படுவதாலும்; ஐயத்தைப் பெருக்கும் உணவாதி செயல்களாலும் ஐயம்; மிகுதிப்பட்டு, மற்ற இரு குற்றங்களையும் தூண்டி தம் தம் அளவில் மிகச் செய்து சன்னிபாத மென்னும் முப்பிணி நோயை உண்டாக்கும்.

அன்றியும் ஆண், பெண் தகாத கலவியாலும் கட்டி, தீப் புண், பலத்த காயங்கள், துட்ட விரணம், பிரசவங்களுக்குப் பின் (பிள்ளைப் பேறு) ஏற்படும் சுரம் இவைகளின் தொடர்பாகவும் அபக்குவ அகால தைல முழுக்குகளாலும் சன்னிநோய்தோன்றுவதுண்டு.

மேலும், வளி, அழல், ஐயம் என்னும் முக் குற்றங்களின் கேட்டால் விளையும் முப்பிணி நோயானது, மற்ற நோய்களைப் போலன்றி உடலில் பாம்பின் நஞ்சுபோல் விரைவாகப் பரவும். ஸ்திரி சங்கம தோடத்தாலுண்டாம் முப்பிணியானது இன்னும் அதிகத் தீவிரமாய் பரவும். சுரநோயில் அபத்தியத்தாலுண்டாம் எழுதோட சந்நியானது (சப்த தோடம்) அந்தந்த தாதுக்கள், குற்றங்கள், இவற்றின் கேட்டிற்குத் தகுந்தவாறு துன்பத்தை விளைவிக்கு மென்பதையும் தெரிந்துகொள்ளவும்.

"சுகசன்னி" நிற்க, மந்தத்துடன் எண்ணெய் தேய்த்துக் தலை முழுகியபின் தயிரும் சோறும் சாப்பிட்டுப் பெண்ணுடன் கூடின் வாயுமிகுந்து, முக் குற்றங்களும் ஏகோபித்துக் கேடடைந்து " நுகர்ச்சி விப்பிணி " என்னும் "சுக சன்னி " பிறக்கும் எனவும் நூல்கள் கூறுகின்றன.

மேலும், சுரநோயிலுள்ள போது அபத்தியத்திற்குரிய (பத்தியப் பிழைக்குரிய) உணவாதி செயல்களாவன :—

மிகுந்த உப்பு, புளிப்பு, கசப்பு, துவர்ப்பு, கார்ப்பு சுவையுள்ள பொருள்களை உண்ணல் (சில நூல்கள் இனிப்பு சுவையும் சேர்த்துள்ளார்); வெற்றிலை பாக்குப் போட்டுக்கொண்ட பின் பாலருந்தல்; குளிர்ந்த நீரைப் பருகல்; குளிர்ச்சியான பொருள்களை உண்ணல்; பெண்ணோடு கூடல்; படித்தல்; அழுதல்; ந' த்தல் என்பவைகளாகும்.

நோயுற்றபோது சந்தனம், பூ , கற்பூரம், புனுகு, சவ்வாது இவற்றை முகர்தல் ; சிவந்த ஆடைகளை உடுத்தல்; நெய் வெல்லம், எண்ணெய், தயிர் முதலிய பொருள்களை உண்ணல் ; சுரம் வந்த ஒன்பது நாட்களுக்குள்ளும், சுரம் விட்டவுடனேயும் தகாத பொருள்களை உண்ணல், புதிய ஆடை யுடுத்தல் ஆகிய செயல்களைச் செய்யின் முப்பிணி பிறக்கும் என்பர்.

## முப்பிணி நோய் எண்.

*1.* சில நூலோர் '' வளி முப்பிணி '', '' அழல் முப்பிணி '', '' ஐய முப்பிணி '' என மூன்றெனவும் :

*2.* வேறு சிலர் சன்னி வகை பதிமூன்று எனவும் ; அதாவது

(1) சந்திக சன்னி.
(2) அந்தக சன்னி.
(3) ருத்தாக சன்னி.
(4) சித்த விப்பிரம சன்னி.
(5) சீதாங்க சன்னி.
(6) தாந்திரீக சன்னி.
(7) கண்டகுப்ச சன்னி.
(8) கர்னிக சன்னி.
(9) புக்னநேத்திர சன்னி.
(10) ரக்தீட்டீவி சன்னி.
(11) பிரலாப சன்னி.
(12) ஜிம்மக சன்னி.
(13) அபின்னியாச சன்னி.

என்பனவாம்.

*3.* தேரன் வகுத்த பிரகாரம், சன்னி நோய் பத்து எனவும், அதாவது :

(1) வளி முப்பிணி
(2) அழல் முப்பிணி
(3) ஐய முப்பிணி
} இம் மூன்றும் முக்குற்றயளவாகவும் ;

(4) நிபச் சன்னி.
(5) சோக சன்னி.
(6) மோக சன்னி (மோகன சன்னி)

(7) நஞ்சு சன்னி.
(8) தீ சன்னி.
(9) மந்த சன்னி.
(10) சண்ட சன்னி.

என்பனவாம்.

இப் பத்து சன்னி நீங்கலாக வேறு ஒரு வகையை "ரண சன்னி" எனக் கூறி;

அதனை (i) இயற்கை ரண சன்னி (ii) செயற்கை ரண சன்னி என இரண்டு பிரிவுகளாகவும் வகுத்துள்ளார்.

4. சில. நூலாசிரியர்கள்; "சுக சன்னி" யைத் தனித்துக் கூறியுள்ளார்.

5. இவை யன்றியும், "பிள்ளைப்பேறு சன்னி" அல்லது "பிரசவ சன்னி" என ஒன்றும்;

6. பெண்களுக்கு சூதக காலத்திலுண்டாம் சன்னி நோய் "சூதக சன்னி," என மற்றொன்றும் நூல்களில் கூறப்பட்டிருக்கின்றன.

7. மீண்டும் சில நூல்களில் (i) "தாகபூர்வ சன்னிபாத சுரம்": அதாவது ஆரம்பத்தில் பித்த மிகுதியால் அதிக எரிச்சலுடன் காங்கையான சுரம் உண்டாகும். பிறகு வாத கபத்தின் இயல்பால் உடனே சீதளம் உண்டாகும். "தாகம்". என்றால் "எரிச்சல்" எனப்படும், இதில் பித்தம் சருமத்திலும்; வாத கபம் கருப்பத்திலும் பற்றி நிற்கும்.

(ii) சீதபூர்வ சன்னி பாத சுரம்: அதாவது ஆரம்பத்தில் வளி ஐய மிகுதியால் சீதளமுண்டாய்ப் பிறகு பித்தத்தின் இயல்பால் எரிச்சலுடன் சுரமுண்டாகும். இதில் வாதகபம் சருமத்திலும், பித்தம் கருபத்திலும் பற்றி நிற்கும்

இவ்விரண்டு வகை சன்னி பாத சுரங்களில் முப்பிணியின் மற்றெல்லா குறிகுணங்களும் தோன்றும்.

## I. முப்பிணி சுரப்பிரிவுகளின், தனித்தனி குறி குணங்கள்:

### 1. வளிமுப்பிணி சுரம் (வாதசன்னி சுரம்):

முக்குற்றங்களும் கேடடையினும் வளிக்குற்றம் மற்ற இரு குற்றங்களைக் காட்டிலும் சற்று மீறி நிற்கும். தலை நடுக்கல், பற்கடித்தல், சீறி விழல், இருமல், கைகால்களைத் தூக்கிப்

போடல், முகம், கண் மினு மினுத்தல், மார்பு துடித்தல், நாவறளல், விடாச் சுரம், பிரமை, உடல் தளர்ச்சியுடன் நடுக்கல், பிடரியும் தலையும் நோதல், அறிவு தடுமாறல், பிதற்றல், ஆடல், உடல் நோதல், தாகம், வாய் கைத்தல், கழிச்சல், வாயும் மூக்கும் புண்ணாதல், நாவு கறுத்தல், மூக்கில் நாற்றம், வாந்தி, இளைப்பு, பெருமூச்சு, வயிறு நொந்து உளைதல், கண் திறக்கவொட்டாமை, மிகுந்த சுரம் இத்தியாதி குறி குணங்களைக் காட்டும்.

**2. அழல் முப்பிணி சுரம் (பித்த சன்னி சுரம், பயித்திய சன்னி சுரம்) :**

முக்குற்றங்களும் கேடடையினும் அழல் குற்றம் மற்ற இரு குற்றங்களைக் காட்டிலும் தன்அளவில் சற்று மீறி நிற்கும். உடல் குளிர்தல், மூர்ச்சை, ஊமைபோன்றிருத்தல், சோர்வு, கண் தலை, செவி இவை மந்தமடைதல், தாகம், மிகுந்த சுரம் கழிச்சல், விக்கல், வாந்தி, மயக்கம், வியர்வை, மேல்மூச்சு ஆகிய இக்குறி குணங்களைப் பெறும்.

**3. ஐயமுப்பிணி சுரம் (கபசன்னி சுரம், சைத்திய முப்பிணி) :**

முக்குற்றங்களும் கேடடைந்திருப்பினும் மற்ற இரு குற்றங்களைக் காட்டிலும் ஐயம் தன்னளவில் சற்று மீறி நிற்கும். உடல் அடிபட்டவன் போல் கிடத்தல், அறிவு குலைதல், பேச்சற்றல், சோர்வு, உடம்புநோதல், மேல்மூச்சு, நடுக்கல், கண் நீர்பாய்தல், கண்களை விறைத்துப் பார்த்தல், இளைப்பு, வியர்த்தல், கைகால்கள் சில்லிடல், நாடி தளரல், மயிர் சிலிர்த்தல் ஆகிய குறி குணங்களைக் காட்டும்.

**II பதிமூன்று சன்னி சுரங்களின் தனித்தனி குறிகுணங்கள் :**

**1. சந்திக சன்னி சுரம் (கீல்வாத சன்னி சுரம்) :**

சன்னிபாதப் பொதுக்குறிகுணங்களாகிய பிதற்றல், தாகம், ஆடல், பாடல், நடுக்கல், அலறி எழுந்திருத்தல், மூர்ச்சை, இரைப்பு, மிகுந்த சுரம், தேக எரிவு, பிரமை, தலைப்பாரம், தலை நோவு, மனக்கலக்கம் முதலிய குறி குணங்களோடு, குறிப்பாகக் கீல்களில் அதிக வலி, வீக்கம், நீட்டமுடக்கமுடியாமை, வளி ஐயக் குற்றம் மிகுந்திருத்தல், மயக்கம், இருமல், பெருமூச்சு, தொண்டையில் கோழை, வயிற்றுவலி, குளிர் ஆகிய குறிகுணங்களுண்டாம்.

அந்தச் சன்னி சுரம் (முடிவையுண்டாக்கும் சன்னி சுரம்):

மேற்கூறிய சன்னிபாதப் பொதுக் குறிகுணங்களோடு, குறிப்பாக அதிகச் சோர்வு, விக்கல், மந்தம், வயிறுப்பிசம், உடல் நடுக்கம், தலை சுற்றல், இவைகளையுண்டாக்கி நாடிகள் மூன்றும் தளர்ந்து ஆயுள் முடிவையுண்டாக்கும். (அந்தகன்-எமன்).

3. ருத்தாக சன்னி சுரம் (உடற்கடுப்பு சன்னி சுரம்):

முற்கூறிய சன்னிபாதப் பொதுக் குறிகுணங்களோடு, குறிப்பாகத் தேகமாதியந்தமும் அதிகக் கடுப்பும், எரிச்சலும், படுக்கை பொருந்தாமை, சோர்வு, மனமருட்சி, உதடு உலர்தல், பேதி, நெற்றியில் வியர்த்தலாகிய குறி குணங்களைப் பெறும்.

4. சித்தவிப்பிரம சன்னி சுரம் (சித்தத்தை மயக்கும் சன்னி சுரம்):

சன்னிபாதப்பொதுக் குறிகுணங்களோடு, குறிப்பாகச் சித்தத்தை மயக்கும் என்பர், பயத்துடன் விழித்தல், நினைவு அழிதல், பெருமூச்சு, கழிச்சல், குணம் பலவிதமாக மாறுதலாகிய குறிகுணங்களை விளைவிக்கும், வாதமும் பித்தமும் சற்று அதிக அளவில் நடைபெறும். இறுதியில் கொல்லும் என்பர்,

5. சீதாங்க சன்னி சுரம் (சர்வாங்க சீதளசன்னி சுரம்: சீதவாத சன்னி சுரம்)

சன்னிபாதப் பொதுக் குறிக்குணங்களோடு, குறிப்பாகத் தேகமாதியந்தமும் சீதளமாயிருத்தல், உடல் நோவு, குரற் கம்மல், பேதி, ஓக்காளம், விக்கல், மூர்ச்சை, நடுக்கல், புலம்பல் முதலிய குறிகுணங்களைக் காணலாம்.

6. தாந்திரிக சன்னி சுரம் (அசக்திவாத சன்னி சுரம்) :

சன்னிபாதப் பொதுக் குறி குணங்களோடு, குறிப்பாக அதிக அசக்தி அல்லது பலக்குறைவு, பெருமூச்சு, அரோசகம்: மூக்கில் நீர்வடிதல், நா கறுத்தல், நாவறளல், நா முள்போலிருத்தல், கழிச்சல், தாகம் முதலிய குறிகுணங்களைப் பெறும்,

7. கண்டகுப்ச சன்னி சுரம் (கண்டக்குருக்கல் சன்னி சுரம்) :

சன்னிபாத பொதுக் குறிக் குணங்களோடு குறிப்பாகக் கண்டத்தை குறுக்கிப் பிடிப்பதுபோலிருத்தல், காதில் வலி, கண்டத்தில் முள் சொருகியது போலிருத்தல் ; மனமருட்சி, தலைசுற்றல், தலை வளைதல், பயம், திடுக்கிடல், விக்கல், வாந்தி, இருமல், முதலிய குறிகுணங்களையும் விளைவிக்கும்.

8. கர்ணிகச் சன்னி சுரம் (செவி மூலச் சன்னி சுரம்):

சன்னிப்பாதப் பொதுக் குறிக்குணங்களோடு, குறிப்பாகக் காதின் மூலத்தில் வீக்கத்துடன் வலி, காது கேளாமை, வாய் திறக்கக்கூடாமை, இரைப்பு, இருமல், நீர் வேட்கை, வாய் புண்ணாதல், நாவு கறுத்தல், நடுக்கல், தலை கனத்தல், அரற்றல் முதலிய குறிகுணங்களையுமுண்டாக்கும்.

9. புக்னநேத்திர சன்னி சுரம் (கண்ணிடுக்கு சன்னி சுரம்):

சன்னிபாதப் பொதுக் குறிக்குணங்களோடு, குறிப்பாக கண்கள் கலங்கிச் சிவந்து கம்மலாகவும், இடுக்கம் பிடித்துமிருத்தல், கண் இமைகள் ஒட்டிக்கொள்ளுதல், தொடை, கீல்கள், எலும்பு இவற்றில் அதிக வலியுண்டாதல், கைகால்களில் குளிரல் கண் பார்வை மங்கல், மன மருட்சி, உடம்பில் வாத இழுப்பு, அரற்றல் முதலிய குறி குணங்களையுடையது.

10. இரக்தீட்டிவி சன்னி சுரம் (இரத்த வாந்தி சன்னி சுரம்):

சன்னிபாதப் பொதுக் குறி குணங்களோடு குறிப்பாக இரத்தக் கோழையை வாந்தி செய்விக்கும், வாந்தியும், பேதியும், இரத்தப்புடைகளையும் உண்டுபண்ணும், வாய் வறளல், மிகு சுரம், மனமருட்சி, நினைவு கெடல், விக்கல், தலைசுழலல், நாகறுத்தல், காது கேளாமை முதலிய குறி குணங்களுண்டாகும்.

11. பிரலாப சன்னி சுரம் (பிதற்றல் சன்னி சுரம்):

சன்னிபாதப் பொதுக்குறி குணங்களோடு, குறிப்பாக அதிகமாகப் பிதற்றல், பிரலாபித்தல், உடம்பில் எரிச்சல், நோதல், தாபச் சுரம், யாரையும் அடித்தல், விக்கல், மூர்ச்சை, மயிர்க் கூச்செரிதல், அலறிப் பேசலாகிய குறிகுணங்களைக் காட்டும்.

12. சிம்மகசன்னி சுரம் (நாவாத சன்னி சுரம்):

சன்னிபாதப் பொதுக்குறிக் குணங்களோடு, குறிப்பாக நாவு விகுத்தலோடு முள் போலிருத்தல், நாவு கறுத்தல், நா வெடித்திருத்தல், வாய் பேசக்கூடாமை, காதுமந்தம், தாகம், விக்கல், உடல் பாரித்தலாகிய குறி குணங்களை உண்டாக்கும்.

13. அபின்னியாச சன்னி சுரம் (முப்பிணி சன்னி சுரம்) (தேக வியாபாரங்களை ஒழிக்கும் சன்னி சுரம்):

சன்னிபாதப் பொதுக் குறிகுணங்களோடு குறிப்பாகப் பஞ்சேந்திரியங்களின் தொழில் குன்றல், பசி, பேச்சு நீங்கல், மயங்கிய நித்திரை, முக்குற்றங்களும் தத்தம் அளவில் மிகுந்து

ஐயத்தைச் சிறப்பாக கொண்டு நாடி நடத்தல், இரைப்பு, இருமல், நாவறளல், பல நிறமடைதல், மயக்கம், வியர்த்தல், மிகுந்த சுரம், முகம் பளபளப்பு ஆகிய குறி குணங்களையுடையது.

**பதிமூன்று சன்னி சுரங்களின் தீரும் தீராதவை:**

(a) சந்திக சன்னி சுரம், தாந்திரிக சன்னி சுரம், பிரலாப சன்னி சுரம், சித்தவிப்பிரம சன்னி சுரம், சிம்மக சன்னி சுரம், கர்னிக சுரம்—இவை ஆறு சன்னி சுரங்களும் தக்க மருத்துவத்தால் குணமாகக்கூடியவையாம்.

(b) ருத்தாக சன்னி சுரம், அந்தக சன்னி சுரம், புக்னநேத்திர சன்னி சுரம், கண்டகுப்ச சன்னி சுரம், இரக்தீட்டீவி சன்னி சுரம், சீதாங்க சன்னி சுரம், அப்பின்னியாச சன்னி சுரம்—இவை ஏழு சன்னி சுரங்களும் மருத்துவத்திற்கடங்காதவையாம்.

குறிப்பு.—சிற்சில நூல்களில் மேற்கூறிய பதிமூன்று சன்னி சுரங்களின் தீரும் தீராதவை பற்றிய அபிப்பிராயம் சற்று வித்தியாசப்படுவதுண்டு.

**பதிமூன்று சன்னி சுரங்களின் கால அளவும் (கெடு)—வளி, அழல் ஐயம் மூன்று நாடிகளின் நிலைமையும் :**

(a) சந்திகச் சன்னி சுரம்—7 நாள் (+வாதகபம்—பித்தம்).

அந்தக சன்னி சுரம்—10 நாள் (+வாதம், —கபம்—பித்தம்).

ருத்தாக சன்னி சுரம்—12 நாள் (+பித்தம்—வாதகபம்)

சித்தவிப்பிரம சன்னி சுரம்—21 நாள் (+பித்தம் —கபம் —வாதம்).

சீதாங்க சன்னி சுரம்—15 நாள் (+கபம், —பித்தம்—வாதம்).

தாந்திரிக சன்னி சுரம்—25 நாள் — (+கபபித்தம் —வாதம்!).

மேற்கூறிய நாள்கள் அந்தந்த சன்னி சுரத்திற்குரிய ."கெடு" எனப்படும், அதாவது அந்தந்தத் தினங்களுக்குள் .கெடுதியை விளைவிக்குமெனவும் ; அந்தந்தக் " கெடு " நாள்கள் கழித்து விட்டால் நோயின் வன்மை குறைந்து மருந்துக்கு வசப்படும் எனவும் கூறுவர்.

(b) **கண்டகுப்ச** சன்னி சுரம்—13 நாள் (+வாதபித்தம்—கபம்).

கர்ணிக சன்னி சுரம் —90 நாள் (+ கபம் —வாதம் — பித்தம்).

புக்ன நேத்திர சன்னி சுரம்—8 நாள் (+வாதம் — பித்தம் —கபம்).

இரத்தீட்டீவி சன்னி சுரம்—10 நாள் (+பித்தம் —வாதம் —கபம்).

பிரலாப சன்னி சுரம்—14 நாள் (+ வாதம் —பித்தம் - கபம்).

சிம்மக சன்னி சுரம்—16 நாள் (+ கபம் —வாதபித்தம்)

அபின்னியாச சன்னி சுரம்—15 நாள் (+வாதம் +பித்தம் +கபம்).

இவை யாவும் குறிப்பிட்ட தினங்களுக்குள் பெரும் மருந்துகளால் குணமாகும். நோய் நீங்காவிடில் குறித்த நாள்களில் கொல்லுமென அறிக !

(—சித்த மருத்துவமும், கை எழுத்துப்பிரதிகளும்.)

III. தேரான் கூறிய பத்து வித முப்பிணி (சன்னி) சுரங்களும் அவை தோன்றுவதற்குரிய வழியையும் கவனிப்போம் :

ஸ்திரீ சங்கம தோடத்தால் (பெண் இச்சையால்) இப் பத்துவகை சன்னி சுரங்களும் உண்டாகுமெனினும், முக்குற்றங் களும் காரணமாகும்.

புராதன நூல்களைக் கவனிக்குங்கால், பெண்களுள் கோபிகை, மோகனை, காமுகை என மூன்றுவகையினராகவும், ஆண்களுள் வல்லியன், புல்லியன், மத்தியன் என மூன்று வகையின ராகவும், முகக்குறி முதலியவற்றைக் கொண்டு பிரித்துள்ளார். இவர்கள் இயற்கைக்கு மாறாக ஒருவர்க்கொருவர் மாறிப்புணர் வரேயாகில் சன்னி பிறக்குமென்பர். இவர்களின் இலக்கணங்க களைப் பற்றிய விவரங்களை " சித்தமருத்துவம் " என்னும் புத்தகத்தில் பக்கம் 101 முதல் 104—இவற்றில் தெரியலாம்.

கோரக்கர் குரு ஞானம் 105-ல் செய்யுள் 89, 90-ல் (கை யெழுத்துப் பிரதி) பெண்களை நாலு சாதிகளாக வகுத்துள்ளார். அவை : பத்தினி, பித்தினி, சங்கினி, அத்தினி என்பவையாம். நூல்கள் ஆண், பெண்களின் தகாத கூட்டுறவால் வரும் சன்னியைத் தோட சன்னி சுரம் என்று கூறுவதோடு மேற்கண்ட மூவகைப் பெண்களும், ஆண்களும் வரன்முறை கடந்து மாறி மாறிப்புணரில் கலவி அதிகப்படும் காரணத்தால் மேற் கூறிய பத்து வகை சன்னி சுரங்களில் ஏதேனுமொன்று பிறக்குமெனவும், இந்நோய் மிகக் கொடியது எனவும் கூறுகின்றன.

## தேரலது பத்துவகைச் சன்னி சுரங்களின் தனித்தனிக் குறி குணங்கள்.

வளி முப்பிணி சுரம் (வாதசன்னி சுரம்):

இதின் குறிக்குணங்கள் முன்னமேயே மற்றொரிடத்தில் விளக்கியுள்ளோம். வளி முப்பிணி சுரத்தில் ''மந்த சன்னி சுரமு'' மடங்கும் வாதசன்னி நீங்குந் தருவாயில் உடல் வெளுத்து, உணவு செல்லாது சுரங்காய்ந்து மந்தசன்னியுண்டாகும்.

2. அழல் முப்பிணி சுரம் (பித்த சன்னி சுரம், பயித்திய சன்னி சுரம்):

இதின் குறி குணங்கள் முன்னமேயே மற்றொரிடத்தில் விளக்கியுள்ளதைக் கவனிக்கவும். இதின் உட்கடையாக '' சேரகசன்னி சுரம் '' '' மோகசன்னி சுரம் '' , '' தீ சன்னி சுரம் '' ஆகிய இம்மூன்று சன்னி சுரங்களும் பிறக்கும். கண் சுழன்று வாந்தி, மயக்கம், வியர்வை, பல்கூசல், மேல்மூச்சு, விக்கல் இக்குறி குணங்களுண்டாகும்.

3. ஐயமுப்பிணி சுரம் (கப சன்னி சுரம், சைத்திய சன்னி சுரம்) : இதின் குறிகுணங்கள் முன்னமேயே மற்றொரிடத்தில் விளக்கியிருப்பதைக் கவனிக்கவும். இதின் உட்கடையாக '' நஞ்சு சன்னி சுரம் '', '' சண்டை சன்னி சுரம் '', '' நிப சன்னி சுரம் '' ஆகிய இம்மூன்று சன்னி சுரங்களும் பிறக்கும். இவைகளில் உடல் குளிர்ந்து வியர்க்கும். உடல் நடுக்கம், உடல் அயர்ச்சி, நாடி தளரல் இவற்றுடன் மயிர்கால்கள் தோறும் சிலிர்த்துக் கொல்லும்.

4. நிப சன்னி சுரம் : இதில் ஐய முப்பிணி சுரக் குறி குணங் களோடு அறிவு முற்றிலும் மங்கிப் போயிருக்கும்.

5. சோக சன்னி சுரம் : இதில் அழல் முப்பிணி சுரக் குறி குணங்களோடு நாபியையும் மூலத்தையும் தாக்கி நிற்கும். பெண் ணின் குறியைத் தாபிதப் படுத்தி, நாதம் தீய்ந்து அவளுக்கு தீக் குணங்களை விளைவிக்கும்.

6. மோகன சன்னி சுரம் : இதில் அழல் முப்பிணி குறி குணங் களோடு உடல் நைந்து போயிருக்கும். அதட்டிப் பேசல், புன் சிரிப்பு, பற்கடித்தல், உயிர்போமளவும் தெளிவுடன் பேசல், தக்க விடையளித்தல், தாகம், உணவு நன்றாகச் செரித்தல், இளைப்பு, துள்ளல், மனஞ்சுழலல் ஆகிய குறிகுணங்களையும் காட்டும்.

7. நஞ்சு சன்னி சுரம்: இதில் ஐயமுப்பிணிக் குறி குணங்களோடு சூடான வியர்வை, வன்மையுடன் நடத்தல், ஓடல், தாகமின்மை, படுக்கை பொருந்தாமை, சீறுதல், ஆடை சோரல். குளிர் தாங்கமுடியாமை ஆகிய குறி குணங்களையும் உண்டாக்கும் இந்நோய் பாம்பின் நஞ்சு உடலிற் பரவினாற்போல் வெகு விரைவில் பரவி தீவிரமாகும்.

8. தீச்சன்னி சுரம்: இதில் அழல் முப்பிணி சுரக்குறி குணங்கள் காண்பதோடு, முகம், கண் இவை சிவத்தல், மிகுசுரம் நாவறளல், உதடு கறுத்தல், மூச்சு குறைதல், விழி சுழலல், மொழி தடுமாறல், மூக்கு முனை சிவத்தல், சிறுநீர் மிகுந்து எண்ணெய் போலிறங்கல் ஆகிய குறி குணங்களுண்டாகும்.

9. மந்த சன்னி சுரம்: இதில் வளி முப்பிணி குறி குணங்கள் தோன்றுவதோடு பசிமந்தம், செரியாமை, புளியேப்பம், வயிறு பொருமல் முதலிய குறி குணங்களைக் காணலாம்.

10. சண்ட சன்னி சுரம்: இதில் ஐயமுப்பிணி சுரக் குறி குணங்கள் தோன்றுவதோடு முகம் தெளிவாக இருக்கும். நாடி நடையின் உண்மையான கிரமம் தோன்றாது. பார்வைக்கு நோய் நீங்குவது போல் காண்பித்து வைத்தியரை ஏமாற்றித் தீங்கு விளைவிக்கும். பேசிக்கொண்டிருக்கும்போதே நோயினன் மரணமாவதுமுண்டு.

IV. இரண சன்னி சுரம்: குறி குணங்கள்:

1. இயற்கை இரண சன்னி சுரம்: இது உடலில் தோன்றும் வெம்மையால் பருக்கள் தோன்றி, உடைந்து காய்ந்து, அதன் சீழ் உடலிலூறிச் சன்னியையுண்டாக்கும் சுரம் மிகுதியாகும்.

2. செயற்கை இரண சன்னி சுரம்: இது வலி பொருந்திய காயத்தில் புண் உண்டாய், மருந்துகளிட்டும் மாயாமல், சீழ் பிடித்துச் சிலையோடி அதிக வேதனையோடு சன்னி சுரத்தைப் பிறப்பிக்கும்.

இவ்விரண்டுவகை இரண சன்னி சுரங்களும் ஒரு தன்மைப் பட்டவையேயாம். இவ்விருவகையிலும் சன்னிபாத சுரக்குறி குணங்களுமிருக்கும்.

இரணசன்னி சுரத்தின் தீரும் தீராதவை.

க புண்கள் வெடிப்பில்லாமல் வாடிக்காணும் போதும் சன்னி சுரம் தோன்றும், ஆனால் இது குணமாகிவிடும்.

இரணம் குற்றமடைந்து கரடு கட்டி மிகுதியாகி, சுரமும் தோன்றுமாகில், அதனால் பிறக்கும் இரணசன்னி நீங்குவதன்று.

### சாந்தியுபதை

மருத்துவனின் புத்தி கூர்மையாலும், சாமர்த்தியத்தாலும், அனுபவத்தாலும், மருந்துகளின் வல்லமையாலும் சகல சன்னி சுரங்களையும் குணப்படுத்த முடியுமென நூல்கள் கூறுகின்றன.

நுகர்ச்சி முப்பிணி சுரம் (சுக சன்னி சுரம்):

வயிறு மந்தப்பட்டிருக்கும் போது எண்ணெய் தேய்த்துக் தலை முழுகி, தயிரும் சோறும் புசித்து, பெண்ணுடன் கூடின் வாயு மிகுந்து சுக சன்னி சுரம் உண்டாகுமென முன்னமே படித்தோம்.

இதில், ''வளி'' க்குற்றம் மிகுந்து, தீ (பித்தம்) யுடன் சேர்ந்து இரு குற்றங்களும் மீறி நிற்குங் காரணத்தால் உடல் வியர்த்துக் கண்கள் சிவந்து, மிகுந்த சுரத்துடன் வாதபித்த சன்னி சுரக் குறி குணங்களையும் மிகுதியாகவும் தீவிரமாகவும் காட்டிக் கொல்லுமென நூல்கள் கூறுகின்றன.

(திருமூலர்)

1 '' பதமாஞ்சுகசன்னியாகும் விதங்கேளு
நிதமாக முழ்கி நிறைய தயிரன்னம் புசித்துக்
குதமாக மந்தத் திற்கூடிடில் வாயுவால்
அதமாமனு போகமணைந்திடிற் சன்னியே.''

2 '' சன்னி சுகத்தினாற்றானேறும் வியர்வைதான்
கன்னி சுகத்தினாற் கண்கள் சிவப்பேறும்
வன்னி சுகத்தினால் வழங்கு மகாதோடம்
அன்ன சுகத்தினாலழிந்திடுங் காயமே.''

(சித்தமருத்துவம்.)

1 '' பதையாமல் செய்கின்ற சன்னி மார்க்கம்,
பாய்கின்ற விதங்கேளு பண்பாய் நீயும்
நீதையாமலெண்ணெயுடன் தீர்த்தமாடி
நிறம்பெறவே தயிர்கூட்டிப் புசித்துப் பின்னுங்
குதையாத மந்த முடன் புணர்ச்சி கூடில்
கூடியே வாயுவு தான் கபால மேறி,
அதையாமல் மோகஞ்செய் போகமதுவே,
அப்பனேய சதியோடு சன்னியாமே.''

2 '' சன்னிதான் தோன்றும் போதுஞ்
சடமெல்லாம் வியர்வை காணும்,
கன்னிதான் சுகத்தால் மைந்தா,
கண்கள் தான்சிவப்பேயாகும்,

மன்னித்தான் காற்றாலையா
மகத்தான தோடமாகும்,
வன்னித்தான் சுகத்தில் நன்றாய்,
விழுந்திடுங்காயந் தானே.''

என்பதினாலறிக !

## முப்பிணிசுர நோய்களின் (சன்னிசுர நோய்களின்) முக்குற்ற வேறுபாடுகள்.

1. '' திரிதோடக் காரணமின்றிச் சன்னி வராது.'' (தேரன்), என்பதினால், முக்குற்ற சன்னி சுர நோயில் வளி, அழல், ஐயம் ஆகிய மூன்றும் ஏக காலத்தில் மிகுமேயாயினும், அல்லது உள்ளமுந்திக் குறையுமேயாயினும், வளி, அழல் இவ்விரு குற்றங்களைக் காட்டிலும் ஐயம் ஒருமிக்க எழும் என அறிக!

2. கால்களில் (வாயுக்களில்) கீழ்நோக்குங்கால் (அபான வாயு) முக் குற்றங்களின் கேட்டால் மிகுதிப் படுமாயின் மிகுந்த கழிச் சலையும், குறைவு படுமாயின் மலக்கட்டையும் விளைவிக்கும்.

3. அதே முக்குற்றங்களின் கேட்டால், மேல் நோக்குங்கால் (உதானவாயு). தூண்டப்படுவதால், வாந்தி, விக்கல், ஏப்பம், நீர் வேட்கை முதலிய நோய்களைத் தொடரச் செய்யும்.

4. அவ்வாறே, பரவுகாலாகிய வியான வாயு தூண்டப் படுவதால் மிகுந்த குளிர், வியர்வை, குருதியோட்டத்தை இயற்கைக்கு மேல் மிகுதிப் படுத்தலையும் உண்டாக்கும். பரவுகால் தன்னளவில் குறைவுபடின் குருதியோட்டத்தை இயற்கைக்குக் குறைவாகவும். பரவச் செய்யும்.

5. அதே முக்குற்ற காரணங்களால் ''நடுக்காலாகிய சமான வாயு'' கெடுதியடைவதால் உடற்கு வேண்டிய .ஊட்டம் அளிக் கப்படாது உடலைக் குன்றச் செய்யும். உடல் வன்மை குறையும்.

6. மேற் கூறிய நான்குவாயுக்களும் ஏக காலத்தில் கேடடைவதால், ''உயிர்க்காலாகிய பிராணவாயு'' தன் தொழிலில் வன்மை இழந்து, உயிரும் அழியுமெனஅறிக!

முப்பிணி சுர நோயின் (சன்னி சுர நோயின்) நாடி நடை.

1. "ஆகிய நாடி மூன்றும் படபட
வென்றோடிற் சன்னி."

2. " ஆகிய நாடி மூன்றும்
அமர்ந்திடிற் சன்னி யாமே."

3. " தூங்கியே சிலேற்பனமிகுந்து
பித்தமொன்றதாகில்
ஓங்கிய சன்னி யுண்டாம்."

4. " கூறிய வாத நாடி கோழி போற் கிண்டி நின்றாற்,
வாரிட்ட குலமாதே வாதமாஞ் சன்னியாமே."

5. " பித்தந்தான் வாதத்தோடு
பிணைந்து நேர்தோன்றுமாயின்,
மத்திய சன்னிவாதம்
வந்திடுங்கணக்கதாமே

6. "வாதமே கதித்த போது
வந்திடுஞ் சன்னி தோடம் "

(இவற்றின் பொருள்.)

1. மூன்று நாடிகளும் தத்தம் அளவுக்கு மிகுந்து ஏகோபித்து விரைந்து நடக்கின் சன்னி சுரமுண்டாகும்.

2. மூன்று நாடிகளும் தத்தம் அளவுக்கு மிகவும் குறைந்து ஏகோபித்து அமர்ந்து உள்ளடங்கி நடக்கின் சன்னி சுரமாம்.

3. ஐய நாடியானது தன்னளவில் மிகுந்து நிற்கும் நிலையில் அத்துடன் கூட அழல் நாடியும் மிகுந்து சேரின் சன்னி சுரமுண்டாம்.

4. வளி நாடி கோழி கிண்டுவது போல நடக்கின் (அதாவது வளி நாடி உதறி நடக்கின்)வளி முப்பிணி சுரம் (வாத சன்னி சுரம்) உண்டாகும்.

5. பித்தமும் வாதமும் சேர்ந்தாற் போல் மிகுந்து ஒரே நாடியைப்போல் நடக்குமேயாயின் சன்னி சுரமாம்.

6. வளி நாடி மிகுந்து விரைவாக நடக்கின் சன்னி சுரம் உண்டாகுமெனவும் அறிக !

## 3. அம்மை நோய்

**வேறு பெயர்கள்:** குரு நோய்; மாரி; போடகம்; விச்போடகம்; மசூரி; வைசூரி என்பனவாம்.

**இயல் :** சுரங்காய்ந்து உடல் முற்றுமேனும், சில பாகங்களிலேனும், முத்துப் போன்ற சிறிதும் பெரிதுமான குருக்களுண்டாய்; அவை பெருத்து நீர் கொண்டு, கொப்புளமாகி, வெளுத்து, உடைந்து, பக்கு வைத்து ஆறிவரும் இயல்புடைய நோயாம்.

கோடையில் சிறு மழை பெய்ததும், இந்நோயுண்டாவதால் "மாரி" எனவும்; தெய்வத் தன்மை ஏற்பட்டு பெண்பாலாக வழங்கப்படுவதால் "அம்மை" எனவும் வழங்கலாயிற்று.

### நோய் வரும் வழி.

"அண்டத்திலுள்ளதே பிண்டத்திலும்" என்னும் மொழிக்கேற்ப சீதோட்டிண நிலைமைக்கேற்றவாறு, நம் உடல் தட்ப வெப்ப மாறுதலடையும். கோடை காலத்தில் வெய்யலின் கொடுமையால் நம் உடல் அதிகச் சூடாகி அழல் குற்ற மிகுதிப்படும்; அவ்வமயம் பெய்யும் மழையால் ஐயக் குற்றமும் சேர்ந்து "அழலையமாகி", இந்நோயைப் பிறப்பிக்கும்.

இதே போல் மாரி காலத்தில் உடலில் ஐயக் குற்றம் மிகுந்து அச்சமயம் சூரிய வெப்பம் கொடியதாயுண்டாயின், அதனாலேற்படும் அழல் குற்றமும் சேர்ந்து "ஐயழல்" குற்றமெழுந்து அம்மை நோயைப் பிறப்பிக்கும்.

பெரும்பாலும் வேனிற் காலத்தில் இந் நோய் "கொள்ளை நோயாக" (Epidemic) வரும். பெரு மழைவரின் பூமி குளிர்ந்து இந்நோய் தணியுமெனவும் அறிக!

### நோய் எண்.

அம்மை நோய் பதினான்கு வகைப்படும், அவையாவன:—

1. பனைமுகரி.
2. பாலம்மை.
3. வரகுதிரி (வரகுதரி).
4. கொள்ளம்மை.
5. கல்லுதிரி (கல்லுதரி).
6. கடுகம்மை.

7. மிளகம்மை.
8. உப்புதிரி (உப்புதரி).
9. கரும்பனிசை.
10. வெந்தய அம்மை.
11. பாசிப்பயறம்மை.
12. விச்சிரிப்பு.
13. குளுவன்.
14. தவளையம்மை என்பனவாம்.

மேலும், (i) வாயில் சிறு, கொப்பளங்களுண்டாய் உணவருந்த முடிதாய நிலையிலிருப்பதை " வாயம்மை" எனவும் ;

(ii) கோணியில் படுக்குங்கால் உடல் முழுமையும் சிவப்பாக தோன்றுங் குறிகள் போன்ற நோய்க்கு "கோணியம்மை" எனவும் ஆக மொத்தம் பதினாறு வகை அம்மை நோய்கள் எனச் சொல்லுவாருமுளர்.

(iii) இவை நீங்கலாக நம் நாட்டில் "பெரியம்மை", "சிறிய அம்மை (விளையாட்டம்மை), "தட்டம்மை", "புட்டாளம்மை" எனவேறு நான்கு வகை அம்மைகளும் பெரும்பான்மையாக வழங்கப்படுகின்றன.

மேற்கோள்—அம்மை நோய் எண்—சித்த மருத்துவம்:

" தானான வைசூரி பதினாலாகுந்
தனியான ரூபங்கள் பேதாபேதம்
வேனான பனை முகரிப் பாலம்மை தானும்,
வெடிப்பான வரகுதரி கொள்ளம்மையாகும்,
கோனான கல்லுதரி கடுகம்மையாகும்,
குடிகெடுக்கு மிளகினுடனுப்புதரியாகும்.
கானான கரும்பனிசை வெந்தய மோடொக்க,
கதிப்பான பாசிப்பயறு விச்சரியனாமே."

" ஆமேதான் பன்னீரில் குளுவானாகும்.
அடைவான தவளை வைசூரியாகும்"

எனபதினால் அம்மை நோயின் பதினான்கு பிரிவுகளை அறிய லாயிற்று.

அம்மை நோய் பற்றி "அகத்தியர் வைசூரி" நூலில் கூறியுள்ள விவரம்:—

அம்மை நோய் பதினொன்று என்கிறார்.

(எண் சீழ்கழி நெடிலடிலாசிரிய விருத்தம்);

"ஏத்தியே போற்றி செய்து பின்புகேளாய்
இதமான வைசூரி குரு நோயென்று,
போற்றியதோர் போடகமாம் அம்மையென்றும்,
புகழான நால் வகை யாய்ப்பிறந்த ரோகம்
சாற்றியதோர் சாத்தியமசாத்தியுங்கூட,
தயவாக யாவர்களுமறிந்து நன்றாய்ப்
பார்த்திடு நீயிவற்றினது பேரைக் கேட்கிற்
பரிவாக விருநான்கு மூன்றுமாமே."

அம்மையின் பெயர்கள்.

"கேளப்பா பதினொன்றின் பேரை நன்றாய்,
கிருபையறும் பனைமுகரி பாலம்மை யென்றும்,
வாளப்பா வரகுதரிக் கொள்ளம்மை யென்றும்,
வளமான கல்லுதரி கடுகம்மைகூட,
தேனப்பா மிளகுனுடணுப்பு தரி தானிந்
திறமானக் கரும்பனிசை வெந்தயமுமாகும்,
பாளப்பா பாசிபயிற்றம்மை யோடு,
பதினொன்றின் பேரனவே பகர்ந்திட்டோமே."

இதின் பிரகாரம் அம்மை நோயை பதினொன்றாக வகுத்துள்ளதை அறிகிறோம்.

அம்மை நோய்ப் பிரிவுகளின் தனித்தனி குறி குணங்கள்

1. பனைமுகரி அம்மை.

உடல் நொந்து நடுக்கல் சுரம், வாய்பிதற்றல், வியர்வை, உடல்வலி கண்சிவந்து எரிதல், கழுத்து வீங்கல், பித்த வாந்தி, பெண்ணாயின் பெரும்பாடு போன்ற குருதி வெளிப்படல், சன்னி வாதக்குறிக் குணங்கள் காணப்படல், உடல் இளைத்தல், ஆனால் பாரமாகத் தோன்றல், நீரில் இரத்தம் வெளிப்பாடலாகிய குறிக்குணங்களைக் காட்டும், பனை மட்டையைப் போலிருப்பதால் " பனையேரி " பனைமுகரி என்ற பெயர்களை எற்பட்டனபோலும்.

## 2. பாலம்மை.

மூன்று நாட்கள் கடுமையான சுரம் காய்ந்து, பிறகு தலையில் அம்மைக் கொப்பளங்கள் குருப்போல் தோன்றும், உடல் நடுங்கும். நீர் கோத்துக் கொப்புளங்கள் நாளுக்கு நாள் பெரியதாகும் ஒன்பதாம் நாள் வாடி இறங்கும். உடல் வன்மை குன்றும். பதினோராம் நாள் தலை முழுக உத்தமம்.

## 3. வரகுதரி.

மூன்று நாட்கள் வரை மிகுந்த சுரம் காய்ந்து பிறகு குருக்கள் தோன்றும். பற் கடித்தல், முப்பிணிக் குறிகள், தூக்கமின்மை, வாந்தி, வாய் புண்ணாதல், வாயினின்றும் குருதி கொட்டல், நீர்த்தாரை புண்ணாகி குருதி வடிதல், (வடிதல்), தலையில் கொப்பளங்கள் நீர்க் கோத்து பெரிதாகி ஏழாம் நாள் பூரிக்கும். பதினோராம் நாள் இறங்கும்.

## 4. கொள்ளம்மை.

மூன்று நாள் கடுமையான சுரத்திற்குப் பின் தலையில் கடுகுபோல் குருக்கள் தோன்றும், பித்தவாந்தி இசிவு, முப்பிணி தொடர்தல் வாய் குளறல், உடல் நடுக்கல், வாய்பிதற்றலாகிய குறிகுணங்கள் தோன்றும், பதிமூன்றாம் நாளில் இவ்வம்மை இறங்கும்.

## 5. கல்லுதரி அம்மை.

மூன்று நாள்கள் விடாக் காய்ச்சலுக்குப் பின் வாந்தி, உடம்பெல்லாம் நோதல், பேதியாதல், அதன்பின் சுரம் தனிந்து குருக்கள் தோன்றும். சங்கம்பழம் போல் காணும். கொப்புளங்கள் ஏழாம் நாள் நீர்க் கோர்த்துப் பூரித்துப் பத்தாம் நாளிலிறங்கும். பதினேழாம் நாள் தலைமுழுக்குச் செய்ய உத்தமம்: அம்மை கடுமையானால் சன்னி வாதக் குறிகுணங்களையும் காட்டும்.

## 6. மிளகம்மை (மிளகன்).

"மொழுக்கன் " எனவும சித்த மருத்துவம் கூறுகிறது.

இந்நோயில் சிறு சுரமாகத் தோன்றி உடம்பெல்லாம் கடுப்பு, இடுப்பில் அதிகவலி. குனியநிமிர வொட்டாமை, முழங்கால் முதலிய கீல்களில் வீக்கத்துடன் வலி, உடல் வன்மைக் குன்றல், மூர்ச்சை ஆகிய குறி குணங்களைக் காட்டி ஏழாம் நாள் கொல்லுமென அகத்தியர் வைசூரி நூல் கூறுகிறது.

"யூகிமுனி சிகிச்சாரம்" நூலில் ஏழாம் நாள் குருக்கள் பெரிதாருமெனவும், தகுந்த பரிகாரத்தால் குணமாகவும் கூறப்பட்டிருக்கிறது.

### 7. கடுகம்மை.

மூன்று நாட்கள்; கடுமையான சுரத்திற்குப்பின் தலையில் கடுகு போல் குருக்கள் தோன்றும். அவை ஒன்றோடொன்று நெருங்கியிணைந்து உடலெல்லாம் தடித்தது போன்றாகும் வீக்கம், மயக்கம், பேதி, சிறுநீர் சுருங்கல், சிறுநீருடன் குருதி வெளியாதல் குரற்கம்மல், (தொண்டைக்கட்டு) முதலிய குறி குணங்களைக் காட்டிப் பதிமூன்றாம் நாளில் அம்மை மறையும் என அறியவும்.

### 8. உப்புதரி அம்மை.

மூன்று நாட்கள் காய்ச்சலுக்குப் பின் தலையில் குருக்கள் தோன்றும். நாளடைவில் நீர்க் கோர்த்து ஐந்தாம் நாள் பெரிதாகும். வியர்க்கும். வியர்வையில் உப்புச் சத்து மிகுதியாயிருப்பதால், உடம்பு உப்பு பூர்த்தது போல் படை படையாய்த் தோன்றும். ஆதலால் உப்புதரி அல்லது உப்புதிரி அம்மை எனப் பெயராயிற்று. ஏழாம் நாள் அம்மை இறங்கும். பதினோராம் நாள் தலை முழுக்குச் செய்து வைத்து மருந்துகளும் கொடுக்கலாம். குளிப்பாட்டிய பிறகு மினிமினிப்பும், உப்பு பூர்த்ததும் மாறிவிடும்.

### 9. கரும்பனசை அம்மை.

கடுமையான மூன்றுநாள்கள் காய்ச்சலுக்குப்பின் தலையில் குருக்கள் காணும். சீழ்கோர்த்துக் குத்தல், நமைச்சலுண்டாகும். பேதியுடன் ஆசனத்தில் குத்தல், வலி இவையுண்டாகும் எனவும், அசாத்திய நிலையில் குருக்கள் உடம்பெல்லாம் பரவி, புண்ணாகிப் புழுக்கலுண்டாய், நமைச்சல், காது கேளாமை, மார்பில் கோழைகட்டி மூச்சுத் தடுமாறல் முதலிய குறிகுணங்களைக் காட்டும் எனவும்; இதற்கு மருந்து கொடுத்தல் நலமென்றும், இருபத்தொருநாள்கள் சென்று தலை முழுக்குச் செய்து வைக்கலாமென்றும் இவ்வித நிலைமையில் இந்நோய் தீருவது அரிது எனவும் ''சித்த மருத்துவம்'' கூறுகின்றது.

''அகத்தியர் வைசூரி நூலில்'' இவ்வம்மை நோயானது குரு தோன்றிய பிறகு உடம்பெல்லாம் கடுப்பெடுத்துக் கருகிக் குருயாவும் உள்வாங்கும். பேதியாகும். மூர்ச்சையுண்டாகும். மலசலங்கட்டினால் பதி மூன்றாம்நாள் தணியும் எனவும், தணிவதற்குமுன் அசாத்தியமானால் உடல் விரியும், புழுவுண்டாகும். பிரக்கினை மாறும். மேல் சுவாசமுண்டாகுமெனவும், இருபத்தொரு நாள்கள் சென்று தலைமுழுக்கு செய்து வைக்கலாமெனவும், இந்நோய் வருந்தியவர்களுக்கு விந்துவும், கருப்பமும் அழியுமெனவும் பெரும்பாலும் மலடாகவேயிருப்பார்களெனவும் கூறியுள்ளார்.

### 10. நீர்க்குளுவன் அம்மை.

மூன்று நாட்கள் இடைவிடாது சுரங்காய்ந்து, பிறகு சிவந்த வண்ணத்தோடு குருத்தோன்றும். அவைகள் பழுத்துச் சங்கம் பழம்போல் காணப்படும். ஏழாம் நாளிறங்கும். ஒன்பதாம்

நாள் தலை முழுகலாம். சில நூல்களில் பத்தாம் நாள் இவ் வம்மை இறங்குமெனவும், அப்பால் நாலு நாள்கள் கழிந்த பின் தலை முழுகலாமெனவும் கூறப்படுகின்றது.

### 11. தவளையம்மை.

இந்நோயில் அதிகமான காய்ச்சலுண்டாகும். உடல்வன்மை குன்றும். நடக்க முடியா. சூலையைப் போல் பக்கங்களில் குத்தல், வலி, மூட்டுக்களை நீட்டவும், முடக்கவும் முடியாமல் முடக்கிப் போடல், உணவு செல்லாமையாகியவற்றை உண் டாக்கும். மூன்றாம் நாள் குரு தோன்றும். ஒன்பது நாள் வரைக்கும் இந்நோய் அசாத்தியமாகும். அதன் பிறகு அம்மை இறங்கும் சாத்தியமாகும். பதினோறாம் நாள் தலைமுழுக்கு செய்து வைக்கலாம்.

### 12. வெந்தய அம்மை.

மூன்று நாள்கள் சுரத்திற்குப் பிறகு தலையில் குரு தோன் றும். ஏழாம் நாளில் அம்மை பூரிக்கும். ஒன்பதாம் நாள் இறங் கும். பதினைந்தாம் நாள் தலை முழுக்குச் செய்ய நோய் நீங்கி குளிர்ச்சியடையும்.

### 13. விச்சிரிப்பு அம்மை.

இதில் கண் சிவந்து, எரிந்து, மிகுதியாய்ச் சுரங்காய்ந்து, வாந்தியும், பேதியுமுண்டாய் உடல் வன்மை தளரும். மூன் றாம் நாள் தலையில் குரு தோன்றும். உமியை வாரிக் கொட் டியது போல் உடல் முற்றும் சிறுசிறு பருக்களாய்த் தோன்றி மறையும். பருக்கள் தோன்றுவதும் மறைவதுமாயிருந்து ஏழாம் நாள் அம்மை உலர்ந்துபோம். அன்று தலை முழுக்காட்ட வயிற் றிலுள்ள அம்மைநோயும் நீங்கும். சில சமயம் தலை முழுக்குக்குப் பின் வயிற்றுளைவு காணும்.

### 14. பாசிபயற்றம்மை.

மூன்று நாள்கள் விடாது சுரங்காய்ந்து, அறிவு மயங்கி, பித்த வாந்தி, பிதற்றல், சீறி விழுதல், முதலிய குறிகுணங்களை உண் டாக்கி, பிறகு குரு தோன்றும். ஏழாம் நாள் நீர்கோர்த்துப் பூரிக்கும். முப்பிணிக் குறிக்குணங்களாகிய ஆடல், பாடல், எழுந்து ஓடலாகியவை யுண்டாகும். கண்கள் சிவக்கும். ஒன்பதாம் நாள் கொப்பளங்கள் வாடும். பதினைந்து அல்லது பதினேழாம் நாள் தலை முழுக்காட்டி நீர்மோருஞ்சாதமும் கொடுக்கத் தேகம் பலக்கும் என்பர்.

அம்மை நோய் பிரிவுகளின் குறிகுணங்களைப் பற்றி மேற்கோள்கள்.

(அகத்தியர் வைசூரி நூல் என்பதிலும், சித்த மருத்துவத்திலும் உள்ளவை.)

1. பனைமுகரி அம்மை.

1. "பகருவோம் இவற்றினுட குணத்தைக் கேளு
பரிவான பனைமுகரி பரிட்சை தன்னை,
நிகரான காய்ச்சலது மிதமாய்க் காயும்,
நேரான வுடல் கடுக்குங் கண் சிவக்கும்,
பகராமல் கண்டதுண்டம் வீக்கங் காணும்,
பரிவான பெரும்பாடு காணுங்கண்டீர்,
செகமீதிலிதனாலே பித்தெடுக்குந்
தேகத்தில் சன்னியது சேருங்காணே."

(அ.வை- நூல்.)

(வேறு)

2. "வாரான தேகமது நடுக்கங்காணும்
வாய்ப்பிதற்றல் சுரமுடனே வியர்வை தோன்றும்,
கூரானவுடல் கடுக்குங்கண்ணோ மெத்த,
குடிலமுடன் சிவப்பாகிக் கண்டம் வீங்கும்,
சேரான பித்தமோடு பெரும் பாடாகும்,
சீறியே சின்னியுடன் பினத்தலுண்டாம்,
பூரானவுடல் மெலிந்து பாரமாகிப்
படுருமே பணைமுகரி பண்பதாமே." (சி.ம)

2. பாலம்மை.

1. "காணப்பா பாலம்மை குணத்தைக் கேளு
கடுகவே காய்ச்சல் கண்ட மூன்றாம் நாளில்,
தோணப்பா சிரசிலேன்றே குருவே காணுஞ்
சொற் பெரிய வுடம்பு கடுகடுப்பு காணும்,
பேணப்பா ஏழாம் நாள் நீரைக்கட்டி
பிலமான ஒன்பதாம் நாளிறங்குங் கண்டாய்,
ஆணப்பா பதினோராம் நாளிற்றானே
அடைவாகவாரோக்கிய ஸ்நானஞ்செய்யே."

(அ.வை-நூல்.)

(வேறு.)

2. " பண்மையாஞ் சுரமதுதான் மிகவேயாகிப்
பாரிந்து தேகமெங்குங் குளிர்ந்து காட்டும்,
நன்மையாமூன்று நாள் சுரமே காய்ந்து
நலமாக விராக் காலஞ் சிரசிலம்மை,
குண்மையாங்குருபோலம்மை காணும்,
கோரமாந்தேகமது நடுக்கலாகும் .
உண்மையாஞ் சத்தநாள் நீரே கோர்த்து
உதிருமே நவநாளிலிறங்கும் பாரே ."

(சி.ம.)

3. வரகுதரி அம்மை.

1. " தானென்ற வரகுதரி குணத்தைக் கேளு
தயவாகக் காய்ச்சலது நன்றாகக் காயும்
வானென்ற மூன்றாம் நாள் குருவே காணும்
வகையாக வாயாலே யுதிரங் காணும்
தேனென்ற வேழாம் நாள் நீரைக்கட்டிச்
சிறப்பாகப் பதினொன்றிலிறங் குங்கண்டாய்
மானென்ற நீர்த்தாரை ரத்தங் காணும்,
மக்களே யிதனுடைய மகிமையாமே ".

(அ. வை. நூல்)

(வேறு.)

2 " பாரேதான் சுரமதுவு மிகவே மிஞ்சிப்
பற்களையும் நறநறெனக் கடிக்கச் செய்யும்,
சீரேதான் சிரசில் குரு முளையே தோன்றிச்
சீறியே வாயாலே ரத்தம் விழும்,
நீரேதான் சதநாளில் சோரி கெட்டு
நீர்கோத்துப் பதினொன்றிலிறங்கிப் போகும்,
தீரேதான் நீர்த்தாரைப் புண்ணாம். ரத்தம்
சீறியே வரகுதரி தன்மையாமே ".

(சி.ம.)

## 4. கொள்ளம்மை.

1. ''கொள்ளப்பா கொள்ளென்றே அம்மைதானுங்
குறிப்பாகக் காய்ச்சல் கண்டு பித்தெடுக்கும்,
கள்ளென்ற சன்னியது கூடத் தோன்றும்
கனமான வலிப்பதுவுந்தான் காணுங்கண்டாய்,
விள்ளப்பா காய்ச்சல் கண்ட மூன்றாம் நாளில்
விவரமாய்க் குருவதுவுஞ் சிரசிற் காணும்,
மெள்ளப்பா யிந்த வகை கண்டபோதே
மேலான பதிமூன்றிலிறங்குந்தானே .''

(அ. வை. நூல்.)

(வேறு.)

2. '' தன்மையாஞ் சன்னியுடன் வலிப்புத் தோன்றும்
சத்தாகாலங் காய்ச்சலுடன் பிதற்ற லாகும்,
வன்மையா மடிக்கடிக்கு வாந்தியாகும்
வாய்குளறியெந்நேரம் நடுக்கல் காணும்,
துன்மையா மூன்றாநாள் வடிவே தோன்றும்,
துறட்டிபோல் குருமுளையுங் கடுகு போன்று
பன்மையாம் பதிமூன்றி லிறங்கு மென்றும்
பாடினார் யூகிமுனி பயின்றவாறே. ''

(சி.ம.)

## 5. கல்லுதரி அம்மை.

1. '' மகிமையென்ற கல்லுதரி குணத்தைக் கேளு
வளமான காய்ச்சலது நன்றாய்க் காயும்,
செகமகிழ வாந்தி பண்ணும் பேதி காணும்
சீராக மூன்றாம்நாள் சிரசிற் காணும்,
அகமகிழ சங்கின்கனி போலே காணும்
அழகான வேழாம்நாள் நீரைக் கட்டி,
புகழாகப் பத்தாம்நா ளிறங்குக் கண்டாய்
பண்ணியனே பதினேழில் ஸ்நானஞ் செய்யே ''.

(அ. வை. நூல் )

(வேறு.)

2. " வாறான காய்ச்சலுடன் வாந்தி காணும்
வலியுடனே பேதியது மிகவே யாகும்
கூறான மூன்றாம்நாள் குருதான் தோன்றும்
குடிலமாஞ் சதநாளில் நீரே கோர்க்கும்
மீறான தசநாளி லிறங்கிப் போகும்
மிக்கவே பதினொன்றில் கலக்க மாகும்
தீரவே யூகிமுனி சிகிச்சா சாரம்
திரமாக மானிடர்க்குச் செப்பிட் டாரே."

(சி. ம.)

6 மிளகம்மை.

1. " செய்யப்பா மிளகினுட குணத்தைக் கேளு
சிறப்பாக காய்ச்சலது மிதமாய்க் காயும்,
மையப்பா வுடம்பெல்லாங் கடுப்பெடுத்து
வளமான இடுப்பதுவும் வணங்காதப்பா
மெய்யப்பா வுடம்பெல்லாம் வீக்கங்காணும்
மெலிவாக மூர்ச்சையது மிகவே காணும்
பொய்யப்பா வில்லையென்று சொன்னோம் பாரு
புகழாக வேழாம் நாள் கொல்லுந்தானே "

(அ. வை. நூல )

(வேறு).

2. " பண்மையாஞ்சுரமதுவும் லகுவாய்க் காணும்
பரப்புடனே இடுப்பு முழங்காலும் வீங்கும்,
திண்மையாஞ் சரீரந்தான் காந்தலாகும்
தீர்க்கமாமேழாம் நாள் குரு தான் தோன்றும்,
வன்மையாஞ் சிகிச்சையது செய்வாராகில்
வனமேகிப்போகுமல்லோ வைசூரி தானும்
கண்மையாம் யுகிமுனி சிகிச்சாசாரம்
கருதினார் மாந்தருக்குக் காட்சியாமே ".

(சி. ம.)

### 7. கடுகம்மை.

1. " செய்யப்பா கடுகம்மை குணத்தைக் கேளு,
சிறப்பாகக் காய்ச்சல் கண்ட மூன்றாம் நாளி
வையப்பா சிரசுதனில் கடுகு போலே,
வளமாகக் குருவதுவும் வகையாய்க் காணும்,
மெய்யப்பாவுடம்பெல்லாம் வீக்கங்காணும்,
விளங்கவே மென்னி கட்டுங்குறலுங்கம்மும்
ஐயப்பா சடுதியிலே பேதி காணும்
அழகான கடுகம்மை ஆண்மை தானே ".

(அ.வை. நூல்.)

(வேறு.)

2. " திறத்துமே சுரமதுவுமிகவுண்டாகித்
தீர்க்கமாய் மூன்றாம் நாள் குரு தான் தோன்றும்,
மறத்துமேவுடம்பெல்லாந் தடிப்புண்டாகும்,
மயக்கமுடன் பேதியது கழிச்சல் காணும்,
சறத்துமே நீரெதுவுஞ் சோணை போலச்
சுருக்கமாய்த் தோல் வீங்கித் தொண்டைக் கம்மல்,
பறந்துமே பதிமூன்றில் போகுமென்று
பாடினார் யூகி முனி பான்மையாமே ".

(சி.ம.)

### 8. உப்புதிரி அம்மை.

1. " செய்யவே உப்புதிரிகுணத்தைக் கேளு
செயலாகக் காய்ச்சல் கண்ட மூன்றாம் நாளில்
ஐயமாஞ் சிரசு தனில் குருவே காணும்,
அழகான சரீரமெல்லாமுப்பு போலாம்,
பையவே வைந்தாம் நாள் நீரைக் கட்டிப்
பரிவாக வேழாம் நாளிறங்குங்கண்டாய்,
நையவை பதினொன்றில் ஸ்நானஞ் செய்து
நலமாக வ்விழ்தமும் நன்றாய்ச் செய்யே ".

(அ.வை. நூல்.)

(வேறு.)

" காட்சியாஞ்சுரமது தான் மிகவுண்டாகும்,
கடினமாய் மூன்றாம் நாள் குரு தான் தோன்றும்,
தீட்சமுடனுடம்பெல்லாம் உப்புப்போலாம்,
திடமுடனேவைந்தாநாள் நீரே கோர்த்து,
மாட்சியாமேழாநாளிறங்கிப் போகும்,
மார்க்கமுடன் ஸ்நானமது செய்யலாகும்,
மீட்சியாயவிழ் தமது நீட்டலாகும்,
மினுமினுப்புப் போகுமென விளம்பிட்டோமே".

(சி. ம.)

9. கரும்பனசையம்மை.

1. " தானென்ற கரும்பனிசை குணத்தைக் கேளு,
தரியாமல் காய்ச்சல் கண்ட நாலாம் நாளில்,
கானென்ற சிரசுதனிற்குருவே காணும்,
கைக்கடங்காக் கடுப்பெடுத்துக் கருகுமேனி
வானென்ற குருவதுவுமுள்ளே வாங்கும்,
வளமாகப் பேதி கண்டு மூர்ச்சையாகும்,
கோனென்ற மலசலமுங்கட்டித்தானால்,
குறிப்பாகப் பதிமூன்றில்லிறங்குந்தானே".

(அ. வை. நூல்.)

கரும்பனசையம்மையின் அசாத்தியக் குணம்.

2. " இறங்குமுன்னேவுடம்பெல்லாம் விரிந்து போகும்,
இதமாகக் கிருமியதுவுண்டாகுங் கண்டீர்,
கறங்குபோல் பிறக்கினையுமில்லையப்பாக்,
கனமான சுவாசமதுமேலே காணும்,
அறங்கு புகழ் நாள் இருபத்தொன்று சென்றால்,
அடைவாக ஸ்நானமதுயன்பாய்ச் செய்வாய்,
திறங்கமிடுகடவுள் செயலுண்டாமானால்,
திறமாகத் தீருமது திண்ணந்தானே."

**கரும்பனசையம்மை கண்ட பேர்க்குப் பிண்டோர்பத்தி யுண்டாகாதெனில்.**

3\. " அறிந்தபின் இவர்களுட குணந்தானப்பா,
அந்தந்த சரீரத்திற்கடுத்த வாராய்,
தெரிந்ததொரு குணக்குறிகள் தோன்றும் அப்பா,
திறமான கரும்பனிசை விந்தைக் கொல்லும்,
பரிந்ததொரு கெர்ப்பத்தை யழியப் பண்ணும்,
ப்ண்பாக யவர்களுக்குப் பிள்ளையில்லை,
முரிந்ததொருயிவர்களுட குணமுஞ்சொன்னேன்,
முறைமையுடன் மருந்து வகை சொல்லக்கேளே ".
(அ. வை. நூல்.)

(வேறு.)

4\. "விளம்பினோம் காய்ச்சலது மிகவுண்டாகி,
வீறியே நான்காம் நாள் குரு தான் தோன்றும்,
இளம்பவேவுடம் பெல்லாங் குத்தல் காணும்,
இளைத்துமே வைகூரியுள்ளே வாங்கும்,
துளம்பவே பேதியது மஞ்சளாகும்,
சதா வேளைக்குத்தலுடன் கடுப்புக் காணும்,
வளம்பவே பதிமூன்றிலிறங்குமென்று,
வசனித்தார் யூகிமுனி வளமையாமே."
(சி.ம.)

(இதுவுமது.)

5\. "வளமையாமுடம்பெங்கும் விரிந்து புண்ணாம்,
வாகாகக் கிருமியுடனமைச்சல் உண்டாம்,
களமையாங் கருணையது மிகவே குண்ணிக்
காதுகேளாமையுடன் சுவாசம் பாயும்,
பளமையாமிருபத்தோர் நாட் சென்றாக்கால்,
பட்சமுடன் தானமது செய்யலாகும்,
இளமை போலவிழ்தங்கள் கொள்ள நன்று,
இயம்பினார் யூகிமுனி சிகிச்சை தானே."
(சி.ம.

## 10. நீர்க்குளுவன் அம்மை.

1. ''ஆகுமென்ற நீர்க்குளுவன் குணத்தைக் கேளு,
அழகாகக் காய்ச்சல் கண்ட மூன்றாம் நாளில்,
வாகுமென்ற சங்கன்கனி போலே காணும்,
வளமாக வேழாம் நாளிலிறங்கிப் போகும்,
தாகுமென்றவொன்பதிலே ஸ்நானஞ்செய்து,
தயவாக தேகத்தைக் குளிர்ச்சி செய்து,
பாகுமென்ற பரமனையும் போற்றிச் செய்து,
பண்பாக வாயிபதம் போற்றி செய்யே.''
(அ. வை. நூல்.)

(வேறு.)

2. ''பாரே தான் காய்ச்சலது மிகவுண்டாகிப்
பருத்துமே சங்கங்கனியின் கூழ்போலாகும்.
கூரே தான் மூன்றாம் நாள் குரு தான் தோன்றி,
குடிலமுடன் தசநாளிலிறங்குங்கண்டீர்,
சீரே தான் அந்நாளிற் கலக்கங் கொள்வீர்,
சீரியதோர் வைசூரி தணிந்து போகும்,
தேரே தான் யூகி முனி சிகிச்சா சாரம்,
தெளிவாகப் பாடி வைத்தார் திறமையாமே''.
(சி. ம.)

## 11. தவளையம்மை.

1. ''போற்றியே தவளையென்ற குருதானப்பா,
புகழாகக் காய்ச்சல் கண்டால் நடக்கொட்டாது
போற்றியே சூலையைப் போல வலியே காணும்,
போசனமுஞ் செல்லாது தவிரப் பண்ணும்,
சாத்திகமா யொன்பதாம் நாளான பின்பு,
தருகாமலிறங்குமது தப்பாதப்பா,
ஆத்தியதோர்பதினொன்றில் ஸ்நானஞ் செய்து,
அழகாகக் குருபதத்தை யறிந்தங்கேத்தே''.
(அ வை. நூல்)

2. "ஆமே தான் காய்ச்சலது யதிகமாகி
அடவுடனே காயமது நடக்க வொட்டா,
தாமேநான் சூலையது வில்லைப்போல,
தப்பாது வலியெடுத்து அசனஞ்செல்லா,
காமே தான் மூன்றாம் நாள் குரு தான் தோன்றி,
கடினமுடன் நவநாளிறங்கும் பாரு,
வேமேதான் பதினொன்றில் ஸ்நானஞ் செய்ய
விளம்பினார் யூகிமுனி கிகிச்சை பாரே."

(சி. ம.)

## 12. வெந்தய அம்மை.

1. "தாமென்ற வெந்தயத்தின் குணத்தைக் கேளு,
தயவாகக் காய்ச்சல் கண்ட மூன்றாம் நாளில்,
காமென்ற சிரசுதனிற்குருவே காணும்,
கண்டபின்னேழாம் நாள் நீரே கட்டி,
வேமென்ற வொன்பதிலே யிறங்குங்கண்டாய்,
விவரமாய்ப் பதினைந்தில் ஸ்நானஞ்செய்து,
பாமென்றவுடம்பதுவும் லகுவேயாகும்,
பரிவான வெந்தயத்தின் பரிசுதானே."

(அ. வை. நூல்)

(வேறு.)

2. "தானான காய்ச்சலது யதிகமெத்த,
தாக்கானமூன்றாம் நாள் குருதான் தோன்றும்,
தேனான வேழாம் நாள் நீரே கோர்த்துத்
தெளியுமே நவநாளிறங்கிப் போகும்.
கோனான பஞ்சதசஞ் சென்றதானால்
குடிலமது நீங்கியே குளிர்ச்சி காணும்,
பானான ஸ்நானமது செய்ய நன்று,
பார்த்தார் யூகி முனி பகர்ந்தவாறே."

## 13. விச்சிரிப்பு அம்மை.

1. ''தெரிசித்தேன் விச்சிரிப்பின் குணத்தைக் கேளு,
திறமாகக் காய்ச்சல் கண்டு கண் சிவக்கும்,
பரிசித்தில் வாந்தி பண்ணும் பேதி காணும்,
பாங்கமாய் மூன்றாம் நாள் சிரசில் காணும்,
பெரிசித்தே தேகமெல்லாமுமி போற்காணும்,
பிரமாகவாரியிட்டே மறையுங் கண்டீர்,
அரிசித்தே யேழாம்நாள் ஸ்நானம் செய்து,
ஆனபின்பு வயிற்றுளைவு மாகுந்தானே''.

(அ. வை. நூல்.)

(வேறு.)

2. ''உண்ணவே காய்சலதுமிகவுண்டாகும்,
ஓகோகோ ! வாந்தியது பேதி காணும்,
திண்ணமுடன் கண் சிவக்கும் மூன்றாம் நாள் தான்,
சிரசுதனிற் குருதோன்றும் தேக மெத்த
கண்ணமாமுமி போல வாரிக் கொட்டி,
கண் மூடுதீற்குள்ளே மறையும் பாரு
வண்மையுடனேழாம்நாள் சலமே கொட்ட
வயிற்றுள் வைசூரி வாங்கும் பாரே.''

(சி. ம.)

## 14. பாசிப் பயற்றம்மை.

1. ''பரி சென்ற பாசிப்பயற்றம்மை தானும்,
பரிவாகக் காய்ச்சலிலே பித்தெடுத்து,
தரி சென்ற மூன்றாம் நாள் குருவே காணும்,
தயவாகவேழாம்நாள் நீரைக் கட்டி
துரிசாக வொன்பதிலே யிறங்கும்பாரு,
சுகமாகப் பதினைந்தில் ஸ்நானஞ்செயது,
பரிசமுடன் சரிரமது பிலக்கும் நன்றாய்ப்
பேரான நீர் மோருஞ் சாதங் கொள்ளே.''

(அ. வை. நூல.)

(வேறு.)

2. ''வாறான காய்ச்சலது குடிலமெத்த
வரைதப்பிப்பிதற்றலுடன் சீறலுண்டாம்,
கூறான விழியிரண்டுங்குழறிக் காட்டும்,
குறிப்பான மூன்றாம் நாள் குருதான் தோன்றும்,
வீறான ஏழாம் நாள் நீரே கோர்த்து,
வெடித்துமே நவநாளிற் இறங்குப் பாரு,
நேறான பதினேழில் சலமுமாடி
நேர்ப்பான மோரசன முண்ணுவீரே.''

(சி. ம.)

அம்மை நோயின் அசாத்திய குறிகுணாங்கள்.

(பொதுவாக.)

1, எந்த வகை அம்மையாகயிருந்தாலும் முத்துக்கள் (குரு) திடீரெனவுண்டாகித் திடீரென மறைந்தாலும் (i.e., சீக்கிரத்திலுண்டாகிச் சீக்கிரந்தில் மறைந்தாலும்); முத்துக்கள் மிகப் பெரியதாக வளர்ந்தாலும்; முத்துக்கள் மச்சங்கள் போல் கருத்தாலும் தீருவது கடினம் (அசாத்தியம்) என்றே கூறுவர்.

2. ''பெரிய அம்மை''யாகயிருப்பின்; அதில் அம்மைக் கொப்புளங்கள் உடல் முழுமையும் எண்ணின்றிக் கொட்டின் எளிதில் தீராவாம்.

3. முட்டி (கீல்கள்) வீங்கி நீட்டவும் முடக்கவும் முடியாதிருப்பின் நோய் தீருவது கஷ்டம். அன்றியும் வாழ்நாள் முழுவதும் கீல்கள் முடங்கியே யிருக்கும்.

4. இதைப் போல் ஆண், பெண்மலடு, காது செவிடு, கண்குருடு, கால் கைகள் நொண்டியதால், வாய் பேச முடியாமை ஆகிய நிலைமைகளும் பெரிய அம்மையின் கொடுமையால் விளையக் கூடியவை எனத் தெரிந்துகொள்ளவும்.

5. கொப்புளம் வெடித்துச் சீழ் மிகுந்து, எளிதில் உலராது, மிகுந்த சுரமுண்டாகி முப்பிணி நோய்க்குறி குணங்கள் தோன்றின் தீராவாம். சாவை வருவிக்கும் என்பர்.

மேற்கூறிய பதினான்கு வகை அம்மை நோய்கள் நீங்கலாக வேறு சில, நம் நாட்டில் வழங்கும் அம்மை நோயின் குறி குணங்களைப் பற்றி ஆராய்வோம்.

## 1. பெரியம்மை.

இந்நோய் சிறு பிள்ளைகள் முதல் பெரியோர்கள் (முதியோர்) வரை எல்லாருக்கும் வரக்கூடிய நோயாம். எளிதில் மற்றவர்களுக்கும் தொத்தும். திடீரெனச் சுரம் மிகுதியாகவுண்டாகும், மூக்கு நீர்ப்பாய்தல், தலைவலி, தும்மல், பூட்டுகள் நோதல், முதுகு வலி, வாந்தியாதல், கண் சிவத்தல் ஆகிய குறிகுணங்களுண்டாகும். அடிவயிறு, தொடை இடுக்கு முதலிய இடங்களில் வேர்க்குருவைப் போல் சிவந்து காணும். மூன்று நாள்கள் சுரம் விடாது காய்ந்தபின் சிறு குருக்கள் முகத்தில் தோன்றி, அப்பால் மற்றெல்லாப் பாகங்களிலும் குருக்கள் பரவும். இப்பருக்கள் உண்டாகுமிடத்தில் தோல் சிவந்தும், கனத்தும் நாளுக்கு நாள் பருக்கள் பெருத்தும், அதனுள் சீழ் கோர்த்தும் காணப்படும். பருக்கள் நாளுக்கு நாள் உடல் முழுமையும் பரவும். குரு தோன்றிய ஏழாம் நாள் மீண்டும் சுரம் காயும். குளிருண்டாகும். நீர் வேட்கையும் பிறக்கும். அம்மைக் கொப்புளங்கள் வாயிலும், தொண்டையிலுங்கூடக் கிளம்புவதுண்டு.

இம்மட்டோடு குறிகுணங்கள் நின்று (மட்டுப்பட்டு) கொப்பளங்கள் வாடி, சுரம் நின்று, கொப்புளத்தின் தோல் உரிந்து பதினைந்து, பதினாறு நாள்களுக்குள் குணமடையும்.

அவ்வாறாகக் கொப்புளங்கள் வாடாமல் இருப்பின், அக்கொப்புளங்களில் சீழ் மிகுதியும் சேர்ந்து, தோல் அதிகமாக வீங்கி, குழிப்புண் போல் கொப்புளங்கள் புரைபட்டு இடைவிடாது சுரங் காயும். கொப்புளத்தால் நமையுண்டாகும். அங்குச் சொறியின், சொறிந்தமற்றைய இடங்களிலும் அச்சீழ்பட்டு, பட்டவிடங்களிலெல்லாம் கொப்புளங்களுண்டாகிப் புண்ணாகும்.

குறித்த காலத்திற்குள் அம்மை இறங்காதிருப்பின் உடல் வன்மை குறைந்து, நோய்வன்மை மிகுதியாகி, தீக்குற்றத்தை (பித்தத்தை) மிகுதிப் படுத்திக் குருதியைக் கேடடையச் செய்து, பல துன்பங்களை விளைவிப்பதோடு மயக்கம், மூர்ச்சை இவற்றையுண்டாக்கி மரணமும் சம்பவிக்குமென அறியவும்.

கண்ணில் அம்மைக் கொப்புளங்களுண்டாயின் கண் குருடாகும். சூல் கொண்ட பெண்ணாயின் அவள் வயிற்றிலுள்ள பிள்ளையையும் அம்மை நோய் தாக்கும். கருவழியும் பெரியம்மை கண்டவர்களுக்கு ஆயுள் பூராவும் தழும்புகள் தொல்லை மாறாமலிருக்கும்.

பெரியம்மையின் அசாத்தியக் குறி குணங்கள் மேலே கூறியுள்ளோம்.

## 2. சிறிய அம்மை

இதுவும் ஓர் தொத்து நோயாம். பெரும்பாலும் சிறு வயதில் வரும். இவ்வம்மை பெரும் சுரமில்லாமலே பிள்ளை விளையாடி திரிந்து கொண்டிருக்கும் போதே தோன்றும். ஆதலால் இதனை "விளையாட்டு அம்மை" என்றும் "சிச்சிலுப்பை" என்றும் கூறுவர். தலைநோய், சிறுசுரம், சோம்பல், முதுகுநோய், முதலிய குறிகள் தோன்றி மூன்றாம் நாள் பருக்கள் கிளம்பும். முதன் முதலாகக் கழுத்தின் முன்பாகத்திலும், மார்பிலும் பருக்கள் தோன்றும். பிறகு மற்றெல்லாப் பாகங்களிலும் பரவும். முதலில் பருக்கள், சிறுசிறு கொப்புளங்களாய் மினுமினுத்து, அதனுள்ளிருக்கும் நீர் தெரியுமாறு தோன்றும். பின்பு அடிசற்றுச் சிவந்து சீழ் கோர்த்தது போலக் காணும். நாலு, ஐந்து தினங்களுக்குள் கொப்புளங்கள் வறண்டு, தோல் உரிந்துவிடும். அம்மையுண்டான யிடங்களில் எவ்விதக் குறியுமின்றி தோல் தன் பழைய நிறத்தை யடையும். தழும்பு ஏற்படாது. சில வேளை அம்மைக் குரு உடல் முழுமையும் சிறு கொப்புளங்களைப் போல் கைகால்கள் தவிர மற்றைய எல்லாயிடங்களிலும் வருவதுண்டு.

## 3. தட்டம்மை.

இந்நோய், முதலில் தும்மல், இருமல், கண் சிவத்தல், கண் எரிதல், மூக்கு நீர்ப்பாய்தல், கண் இரைப்பை வீங்கல், ஆகிய குறிகுணங்களைக் காட்டிச் சுரமும் உண்டாகும். மூன்றாம் நாள் சுரம் குறைந்து வியர்வைக் குருவைப் போன்ற சிறு சிறு குருக்கள் காதின் அடியிலும், கழுத்தின் இருபுறங்களிலும், முகத்திலும், தோன்றிப் பின்பு கீழ்நோக்கி உடல் முற்றும் பரவும். இப்பருக்கள் மிகுந்து, ஒன்றோடொன்று இணைந்து, திட்டுத் திட்டாய்த் திரண்டு, சற்று உப்பியும் காணும். குருக்கள் தோன்றிய எட்டு நாட்களில் குருக்கள் வாடி மீன் தோல் போல உதிர்ந்து உலரும். குருயிருந்தயிடம் சின்னாட்கள் வரை கருத்திருக்கும். நோயுற்றிருக்கும் போது பலப் பல இடையூறுகள் உண்டாகும். மார்பில் கோழை கட்டி வாய் ஓயாத இருமல், சுரம், வாய் சிவந்து புண் போலாதல், உணவு அருந்த முடியாமை, மூக்குநீர் பாய்தல், கண்கள் சிவந்து திறக்கவொட்டாமை, நீர்ப்பேதியாதல், உடல் இளைத்தலாகிய குறி குணங்களையும் காட்டுமென்றறியவும்.

## 4. பூட்டுத்தாளம்மை.

இந்நோயினருக்குக் கருங்குருவையரிசி மாவால் செய்த பிட்டினை படைப்பது நம் நாட்டு வழக்கம். பிட்டைப் படைப்பதால் இதற்கு "புட்டாளம்மை" எனப் பெயர் வந்ததுபோலும். இவ்வம்மை தாடை (தாள்), கீல் (பூட்டு) இவை வீங்கிவரும் நோயாதலால் "பூட்டுத்தாளம்மை" எனவும்; இச்சொல் மாறி "புட்டாளம்மை" எனவும் வழங்கலாயிற்று.

இந்நோயும் அம்மைநோய் போலவே ஒருவருக்கொருவர் தொத்தும் தன்மையுடையது. இதிலும் சுரம் தோன்றும். ஆதலால் இந்நோயை அம்மை நோய் வகுப்பில் சேர்த்துள்ளார் நம் முன்னோர் பெரியோர்.

## பூட்டுத்தாளம்மையின் குறிகுணங்கள்.

மூன்று, நான்கு நாட்களாகச் சிறு சுரம் காய்ந்து, பிறகு சுரம் சற்றுக் குறைந்து "தாள்பூட்டை" அசைக்க வொட்டாமல் வீங்கும். தாளுக்கு மேற்புறத்தில் கழலைபோல் வீங்கிச் சிவந்து காணும். வீக்கமானது ஒரு புறம் அல்லது இருபுறமும் வரும். சில சமயங்களில் முகவாய் அடிப்புறத்திலும் வீங்குவதுண்டு. சிலபோது, கழுத்தின் பக்கத்தில் கண்டமாலையில் வீங்குவது போலக் கழுத்தில் கழலை கழலையாய்க்கட்டி வீங்கும். நோயினன் வாயைத் திறக்கமுடியா. தாங்க முடியாத வலியுண்டாகும். மற்றைய அம்மைகளைப் போல இந்நோயிலுண்டாம் வீக்கம் சீழ் பிடிப்பதில்லை. பெரும்பான்மையாய் ஏழு வயது முதல் இருபத்தைந்து வயது வரையிலும் உள்ளவர்களுக்கு இந்நோய் வருவதுண்டு.

சிலருக்குத்தாள் பூட்டு வீங்கி வருவதோடு விரையும் வீங்குவதுண்டு. பெண்களுக்குக் கொங்கை வீங்குவதுண்டு. மற்றும் சிலருக்குக் காது குத்தல், காதில் சீழ் வடிதல், ஆகிய குறிகளைக் காட்டிக் காது செவிடாவது முண்டு.

## அம்மை நோயின் முக்குற்ற வேறுபாடுகள்.

பொதுவாக, எல்லா அம்மை நோய்களிலும் சூரிய வெப்பததால் உடல் அழல் குற்றம் (பித்ததோடம்) தன்னளவில் மிகுந்தும், அத்துடன் சிறிது மழை பெய்யின், அதன் குளிர்ச்சியால் ஐயக் குற்றம் மிகுந்து, கூடி, "அழலையமாகி" அஃது உடல் முற்றும் பரவி அம்மை நோயை விளைவிக்கும். அவ்வழலின் மிகுதியால் குருதியும் கேடடையும்.

அன்றியும்,

"தாமேதான் சரீரத்தில் வெப்பு மிஞ்சித்
தாக்கான மூலத்திற் சூடு கொண்டு,
வேமெதான் மூளையிலே கொதிப்புண்டாகி
விரைப்புடனேயத்தியிலே கனல்தான் கொண்டு
காமேதான் ரோகத்தைக் கண்டு ஏங்கி
கசங்கியே திடுக்கிட்டுக் கலங்குந்தானே".

எனக்கூறியதால், பூமியிலெழுந்த சூடு உடலையும் தாக்கி வெதுப்புண்டாக்கி மூலத்திலும், தலை மூளையிலும், எலும்பிலும் கொதிப்பேறி மனநிலையையும் கெடுத்து அறிவினை மயக்கும் என அறிக !

(சி. ம.)

(வேறு)

அழற்சியைத் தரும் காரணங்களால் உடல் வெக்கையடைந்து அழற் குற்றம் (பித்தம்) மிகுந்து குருதி தாதுவைக் கொதிப்பித்துச் சுரம் முதலியவற்றையுண்டு பண்ணும். அப்பால் அவ் வெக்கையானது உடலிற்றங்கி, எலும்புக்குள்ளிருக்கிற மூளையை கொதிப்படையச் செய்து, அக் கொதிப்பு எலும்பை ஊடுருவிப் பாய்ந்து, ஐயத்தை மிகுதிப்படுத்தி ''அழற்லையதொந்தமாகி'' வெளியில் விசிறி நீர் கோர்த்த கொப்புளங்களைப் பிறப்பித்துச் சீழ் கொள்ளச் செய்யுமெனவும் ''அகத்தியர் வைசூரி என்பதில்'' காண்கிறோம்.

(மேற்கோள்)

வைசூரி நோய் வரும் வழியும் அஃது தொந்த நோயாவதும்

1. '' ஆமென்றவைசூரியது வருவதேது
அழலான காரணந் தானறியச் சொல்வோம்
வேமென்ற சரீரத்தில் வேகமிஞ்சி,
வெக்கையோடு தேக மெல்லாஞ் சூடுகொண்டு
காமென்ற மூளையது கொதிப்பு மீறிக்
கனமான அஸ்தியதைத் துளைத்துக் கொண்டு
பாமென்ற பதினாலு ரோகந்தானும்
பதிவாகத் தேகமதிற் பிறந்தவாறே ''

2. '' வாறானவைசூரியதைக் கண்டபேரை
வளமாக மற்றொருவர் கண்டபோதே,
தேறாத பயஞ்சனித் திருதயத்திற்
திறமில்லாக் கமலமதில் கொதிப்புண்டாகி,
சீரான வைசூரியுடனே காணும்
சேகரமாய்ச் சரீரத்திற் பற்றிக்கொள்ளும்,
மாறாமல் பதினாலின் பேரேதென்னில்
வகையாகச் சொல்லுகிறேன் கேளுகேளே.''

என்பதினால் வைசூரியுண்டாகும் விதமும், வைசூரி கண்ட பேரை, மற்றொருவர் நேரில் பார்த்துப் பயமுண்டாய், மனக் கலக்கமும், இருதய கமலக் கொதிப்பு முண்டாகி, அன்னவருக்கு வைசூரி என்ற அம்மை நோய் பற்றிக்கொள்ளும் எனவும், ஆத லால் அம்மை நோய் ஒரு தொத்து நோய் என்பதையும் தெரி விக்கிறார் அகத்தியர். வைசூரிபதினொரு வகை என்றே மூல நூலில் கூறியுள்ளார்.

(அ. வை. நூல்)

## அம்மை நோயின் நாடி நடைகள்.

"பண்பான பித்தத்தில் சேத்துமங்கூடிப்
பரிசித்நாலத்தி சுரமிளைப்பு ஈளை
கண்காது நயனமலம் நீரு மஞ்சள்
கனவயிறு பொருமல் மஞ்சள் நோய் கண்ணோவு
உண்போது மறுத்தல் ரத்த விப்புருதிதானும்
உளைமாந்தை பீனிசமும் ரத்த வீக்கம்
நண்பான காமாலை சோகை வெப்பு
நணுகி வந்தபல பிணியுங் காணுந்தானே."

(சதகநாடி)

இங்ஙனம் கூறியதால், அத்திசுரம், குருதி கேடடைதல், வெப்புக் கொப்புளங்களாகிய அம்மை நோய் மற்றும் பலவித நோய்கள் "அழல்ஐய தொந்தத்தால்" பிறக்குமென அறிகிறோம்.

நிற்க, முன்னர் கூறிய பிரகாரம் மாரிகாலத்தில், அதிகக் குளிர்ச் சியாலேற்பட்ட ஐயமிகுதியுடன், திடீரென சூரிய வெப்பம் ஏற் படுவதாலுண்டாகும் அழல் மிகுதியுங்கூடில் "ஐயழல் கலப்பால்" அம்மைநோய் பிறக்குமெனவும் கூறுவர்.

## அம்மை நோயின் பொதுக் குறி குணங்கள்.

முற்குறி.—திடீரெனச் சுரங் காய்தல், உடல்வலி, தலைவலி, இடுப்பில் உளைச்சல், தலைப்பாரம், உடம்பெல்லாம் எரிதல், கண் சிவத்தல், தும்மல், வாந்தி, மூக்கில் நீர் பாய்தல், வாயிலும் உடம்பிலும் ஒரு வித நெய்மணம் உண்டாதலாகிய குறி குணங் களாம். குழந்தைகளாயின் புறங்கையால் கண்களைத் தேய்க்கும்.

பிற்குறி.—மேற்கண்ட முற்குறி குணங்களுண்டான மூன்று அல்லது நான்கு நாள்களில் காய்ச்சல் சற்று குறைந்து, தலையில் குருக்கள் தோன்றி, அப்பால் மற்றப் பாகங்களில் உடம்பெங்கும் பரவும். கொப்புளங்கள் நீர் கோர்த்துப் பூரிக்கும். மலசலம்

கட்டுப்படும். சில சமயம் பேதி யாகும். தொண்டைவலி, உணவு விழுங்க முடியாமை, மயக்கம், அறிவு தடுமாறல், பிதற்றல், உடல் வீங்கல், கொப்புளங்கள் தகர்ந்து புண்ணாதல், புழுக் களுண்டாதல் அல்லது கொப்புளங்கள் தாமே உலர்ந்து பக்கு கட்டித் தோலுதிர்தல், அப்பால் அம்மை நோய் சாந்தமாகிக் குணமடையும்.

சில வேளைகளில் நகைகள், நரம்புகள், கீல்கள் ஆகிய இவற்றைத் தாக்கி, முடங்கச் செய்யும். சிலசமயம் கண்குருடு, காது செவிடுமாகும். வாய் பேச முடியாமை, கைகால்கள் தொழில் புரிய முடியாமை, ஆண் மலடு, பெண் மலடு என்னும் குறி குணங்களையும் சில கடுமையான அம்மை நோய்களில் விளை விக்குமென்பதை அறிந்து கொள்ளவும்.

### அம்மை நோயைத் தொத்து நோய் என்றும் அதனைத் தடுக்கும் உபாயமும் கூறுகிறார்.

வைசூரியால் வருந்துபவர்களைக் காணும் மற்றவர்களுக்கும் இது தொடரும் என்பதை முன்னமே அறிந்தோம். அதாவது, இக்கொடிய ரோகிகளைக் கண்டவுடன் மனோதைரியமற்றவர் கள் கண்டு திகிலடைவதினால் இருதய கமலத்தில் ஓர் விதக் கொதிப்புண்டாகி, அக்கொதிப்பால் அழலையக் குற்றங்கள் கலப்புற்றுக் கேடடைந்து அம்மை நோயைத் தொத்திக்கொள்ளச் செய்யும்.

தவிர, இந்நோய் ஒருவகை சீவ அணுக்களாலுண்டாகிற தென் றும்; இவ்வணுக்கள் ஒரு மைல் தூரம் வரையிலும் சென்று நோயை உண்டு பண்ணக்கூடிய தென்றும், இவை மனிதர் உடம் பினுட் புகுந்த பின் இவற்றினின்று ஒரு வகை விடம் உண்டாகின்ற தென்றும்; அதனால் பல துன்பங்களை விளைவித்து மரணம் நேரிடுமென்றும் நவீன நூல்கள் கூறுகின்றன.

இதனைத் தடுக்கும் உபாயமாக அம்மைப்பால் குத்திக் கொண்டால் வைசூரியை உண்டுபண்ணும் அணுக்களின் விடம் சிறிதளவு நம் உடம்பினுட் பரவி யிருக்கும். அது குறைவா யிருப்பதனால் நமக்குத் தீங்கு விளைவிப்பதில்லை. அவ்விஷத் தினால் (Antibodies) பின்னர் நம் சரீரத்தினுட்புகும் அணுக் கள் மாண்டு போகின்றன வெனக் கூறுவர். ஒரு வேளை அவ் வணுக்கள் தேகத்தினுட் புகுந்தாலும், அதிகமாகப் பரவுவது மில்லை; துன்பம் விளைவிப்பதுமில்லை. இதனாலேயே மக்கள் யாவருக்கும் அம்மை குத்தும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருக் கிறதென்பதையும் நவீன நூல்களில் கூறியுள்ளார்.

### வைசூரி நோயில் இளைக்கும் துணை நோய்கள்.

வைசூரி நோயில் துன்பப்படுபவர்களுக்கு (1) வாந்தி பேதி ; (2) அம்மையானது கிராந்திப் போதல் (முரடு கட்டல் அல்லது உள் வாங்கல்) ; (3) இரத்தக் கடுப்பு ; (4) பெருங் கழிச்சல் (அதிசாரம்) ; (5) தொண்டைக் கம்மல் (குரற்கம்மல்) ; (6) சுரம் ; (7) மலக்கட்டு ; (8) கண்ணில் பூ அல்லது விழியில் குரு ; (9) இரத்த வாந்தி ; (10) இரத்த மூத்திரம் ; (11) சூலை ரோகம் ; (12) ஆறாதபுண் ; (13) மறுமுள் பாய்தல் (அதாவது வைசூரி கண்ட பேர்களுக்கு இளங் குருவாயிருக்கும் போது தலை முழுக்குச் செய்து வைத்தால், '' மறுமுள் '' பாயுமென்பர். அப்போது உடலில் மீண்டும் அதிக சுரம் உண்டாகும். முன் இளங்குருவாயிருந்தவை புடைத்து ரணமாகும். இதுவே மறுமுள் என்பர்) ; (14) கைகால்கள் முடக்கல் : (15) கண் குருடு ; (16)காது செவிடு ; (17)வாய் பேசக் கூடாமை ; (18) ஆண், பெண் மலடு முதலிய பலவான ரோகங்கள் அம்மை நோயில் கிளைக்கக்கூடியனவாம்.

## 4. குரற் கம்மல்

வேறு பெயர்கள் : தொண்டைக்கட்டு, சுரபங்கம்.

இயல் : பேச்சொலி, இயற்கையாயிராமல் தாழ்ந்து வேற்றொலியாக வெழும் நோய், சில சமயம் சத்த மில்லாமலும், கீச்சுக்குரலாயுமிருக்கும். தனித்தும், மற்றைய நோய்களுக்குத் துணையாகவும் வரும்.

நோய் வரும் வழி.

1. மிகுந்த குளிர் காற்றிலீடுபடல்.

2. குளிர்ச்சியான பொருள்களை உட்கொள்ளல்.

3. தொண்டை புண்படத்தக்க யளவில் வெந்நீர் பருகல் ; இச்செயல்களால் தொண்டையின் இரு பக்கங்களிலும் தரபிதம் உண்டாய்க் குரல் வளையை வீங்கச் செய்வதாலும் ;

4. குழைப் பக்கத்துக் கொழுப்பு, சதை முதலியன வளர்தலாலும்.

5. இளைப்பு நோயில் தொண்டையில் புண் உண்டாவதாலும் இந்நோய் பிறக்கும்.

6. இருமல் நோய்க்குத் துணை நோயாகவும் வரும்.

7. அன்றியும், உரத்து வார்த்தையாடல், பாடல், கழுத்தி லடிபடல், நச்சுப் பொருள்களைக் கொள்ளல் முதலிய காரணங் களாலும், இந்நோயுண்டாகுமென்பர்.

(மேற்கோள்—வெண்பா.)

" உரத்துமிகப் பேசினுறி நஞ்சு கற்கின்,
பருத்தகழுத்தி லடிபட்டால்—குறித்த
வளிமுதற் சினந்துமருவ லொலிநாடி
களிற்குரற் கம்மல் வருங்காண்."

என்பதாலறிக!

முற்குறி குணங்கள்.

1. தொண்டையில் ஏதோ பூசியது போலும்; தொண்டை நெருக்கியது போன்றும் உணர்ச்சி யுண்டாதல்.

2. தொண்டை உலர்தல்.

3. இருமித் தொண்டையைச் சிவக்கச் செய்தல், அதினின் றும் கோழையைத் துப்பல்.

4. தும்மல், மூக்கு நீர் பாய்தல், மூக்கடைப்பு ஆகிய குறி குணங்களை காட்டிக்குரல் ஒலி வேற்றுமை யடைந்து மெலிந் தாகிலும், கீச்சுக்குரலோடாகிலும் எழும்.

நோய் எண்.

முக்குற்றஅளவாக :—

1. வளிக் குரற் கம்மல்.

2. அழற்குரற் கம்மல்.

3. ஐயக்குரற் கம்மல்.

4. முக்குற்ற குரற் கம்மல்.
என நான்கு பிரிவுகளும்;

5. இளைப்பு நோய்த் தொகுதியில் வரக்கூடிய " இளைப்பு நோய்க்குரற் கம்மல் " ஒன்றும்;

6. கொழுப்பு அல்லது சதை வளர்ச்சியால் வரக்கூடிய " திணக்குரற் கம்மல் " ஒன்றும் சேர்ந்து ஆகமொத்தம் ஆறு பிரிவுகளாகும்.

## பொதுக்குறி குணங்கள் .

முற்குறியில் கூறப்பட்ட குறிகுணங்களோடு தொண்டையில் கரகரப்பு ; நமைச்சல், புண் போன்ற வலி, எரிச்சல், உணவு விழுங்க முடியாமை, பேச முடியாமை, தலைநோய், அற்ப சுரம், கண்ணீர் வடிதலாகிய குறிகுணங்களையும் காட்டும். இருமிக் கோழையை வெளியாக்கும். கோழையில் குருதியும் கலந்திருக்கும்.

## குரற்கம்மல் நோய்ப் பிரிவுகளின் குறி குணங்கள்.

1. வளிக்குரற் கம்மல்.—வறட்சியுள்ள பொருள்களை உண்ணல் ; கடும் வெயிலில் திரிதல் இவற்றால் தொண்டையானது வறண்டு, முட் செருகியது போல் வேதனையை உண்டாக்கிக் குரற் கம்மலுண்டாகும். சில வேளை குரல் ஒலி தட்டுப்பட்டெழும்.

2. அழற் குரற் கம்மல்.—தீக்குற்றத்தைப் பெருக்கக் கூடிய உணவு வகைகளால் குரல்வளை சிவந்து புண்ணாகி, தொண்டை நொந்து, குரல் சிறுத்துச் சற்றும் பேச முடியாமல் கூசி குரற் கம்மல் உண்டாகும்.

3. ஐயக்குரற் கம்மல்.—பனிக்காற்று, குளிர்ச்சியான பொருள்களையுண்ணல் இவற்றால், தொண்டையில் கோழை கட்டி புண் பட்டு, இருமல் உண்டாய், குரல் ஒலியை மங்கச் செய்து, பகலில் குரற் கம்மலின்றி நன்றாய்ப் பேசுதலும், இராக் காலத்தில் குரல் கம்மிப் பேசுதலும், ஒலி தடைப்பட்டு, வெளிப்படலும் ஆகிய குறி குணங்களையுண்டாக்கும்.

4. முக்குற்ற குரற் கம்மல்.—நீண்ட நாள் நோயிலீடுபட்டோர கடைசியில் முக்குற்ற மிகுதியால் முடிவடையுங்காலை எழும் நோயாதலால் இது தீரா நோயாம். குரல்வளையை நன்றாய் இறுக்கிப் பிடித்தது போல் தோன்றிக் குரல் ஒலி எழாவாம்.

5. இளைப்பு நோய் குரற் கம்மல்.—இளைப்பு நோயில் வருந்துபவர்க்குக் குரல் வளையில் ஐயமிகுவதால், குரல் கம்மலுண்டாய் எளிதில் தீராமல், நாளுக்கு நாள் உடலை மெலியச் செய்து இளைப்பு நோய்க்குறிகுணங்களும் சேர்ந்து நோயினனை வருத்தும்.

அன்றியும், குரல்வளையின் இரு பக்கங்களிலும் கழலையைப் போன்ற வீக்கத்தை உண்டாக்கி, வெளுத்துச் சீழ் நிரம்பியது போற் காணும். பிறகு அக்கழலையில் புண் உண்டாய்ப் பள்ள

மேடாகத் தோன்றும். மற்றப் புண்கள் போற் இவந்திராமல் வெளுத்துக் காணும். குரற் கம்மல் நாட்பட நிலைத்திருப்பின் அம்மருந்துகளாலும் தீராவாம்.

6. நிண வளர்ச்சிக் குரற் கம்மல் (கொழுப்பு அல்லது சதை வளர்ச்சிக் குரற் கம்மல்).—உடலில் கொழுப்பு மிகுந்து, அது தொண்டையிலு மிகுந்து அடைத்துப் பேச்சொலி அக்கொழுப்பால் தடைப்பட்டுக் குரற் கம்மலுண்டாகும். உடலிலுள்ள கொழுப்புக் கரையின் குரற் கம்மலுந் தீரும். ஈதன்றி, சிறு வயதினருக்குக் குளிர்ந்த காற்று, குளிர்ந்த நீருணவு இவைகளால் தொண்டை சிவந்து, ஐயங்கூடி, தொண்டையில் சதை வளரும். இச்சதை நாளுக்கு நாள் வளர்ந்து, கட்டிகளைப் போல் பருத்துக் குரல் வளையின் இரு பக்கங்களிலும் வளர்ந்து குரல்வளையை இறுக்கிக் குரற் கம்மல் நோயை உண்டாக்கும். இத்துடன் சுரம், தொண்டை நோய், வாய் நாற்றம், மூக்கு நீர் வடிதல், காதில் நீர் வடிதல், இருமல், மூச்சுத் தடைப்படல் ஆகிய குறி குணங் களையும் உண்டாக்கும்.

## தீரும் தீராதவை.

1. வளி, அழல், ஐயம் இம்மூன்று வகைக் குரற் கம்மல் நோய்கள் தீரக் கூடியவை எனவும்;

2. முக்குற்ற குரற் கம்மல், இளைப்பு நோய்க் குரற் கம்மல், கொழுப்பு அல்லது சதை வளர்ச்சிக் குரற் கம்மல் இவை தீருவது அரிது எனவும்;

3. அன்றியும், இந்நோயில் இளைத்தோன், கொழுத்த உடல், (பருத்தோன்), இயல்பாக மெலிந்த உடல் உள்ளவன், கிழவர் ஆகிய இவர்களுக்கு இந்நோய் தீருவது கடினம் எனவும் கூறி யுள்ளார்.

## முக்குற்ற வேறுபாடுகள்.

உணவாதி செயல்களால் ஐயமிகுந்து, அதன்பின் மற்ற இரு குற்றங்களையும் கேடடையச் செய்யும். ஐயத்தின் கேட்டால் மேல் நோக்குங்கால் (உதான வாயு) தன் வன்மை இழந்து பேச் சொலியைக் குன்றச் செய்யும் என்பதேயாம்.

நாடி நடை.

1. "தானமுள்ள சேத்துமந்தானிளகில் வெப்பு
சயமிளையிருமல் மந்தாரகாசம்
ஈனமுறுஞ் சன்னி விடதோடம் விக்கல்
இருத் ரோகங்கரப்பான் விரணதோடம்
மானலையிர் சூலைதிரள் வியாதி வீக்கம்
வருஞ் சத்திசுவாசம் நெஞ்சடைப்பு தூக்கம்
ஏனமுறுங் காமாலை பாண்டு சோபை
ஏழு சுரங்கள் பலதிற்கும் விடமுண்டாமே"

2. "இதமொடு இறுதி நாடி யிலகிடாதிறுகி நின்றால்
கதமொடு தொண்டை கட்டும் பழுத்து நெஞ்சு தனிற்கட்டும்
விதமொடு மழை நேரத்தில் மிகுதியாய் வாதை பண்ணும்"

என்பதினாலறிக. (குணவாகட நாடி—சித்த மருத்துவம்.)

## 5. மூக்கடைப்பு நோய்

வேறு பெயர்கள்.—நீர்க்கோவை, மூக்கு நீர்பாய்தல், பீனசம் என்பனவாம்.

இயல்.—மூக்கின் துளைக்குள் சிவந்து, தும்மல், கண் சிவந்து நீர் வடிதல், மூக்கு நீர் பாய்தல், தலை நோதல், அடிக்கடி மூக்கைச் சிந்திச் சளி சிழ், குருதி வெளியாதல் ஆகிய இயல்புடைய நோயாகும்.

### நோய் வரும் வழி.

1. மிகுந்த குளிர்ந்த நீரைப் பருகல்;

2. பனி அல்லது குளிர்ந்த காற்றிலீடுபடல்;

3. புகை அல்லது புழுதி படிந்துள்ள காற்றைச் சுவாசித்தல், எதிர்காற்றிற் செல்லல்;

4. தும்மலையுண்டுபண்ணும் பொருள்களை முகர்தல்;

5. உடல் வெப்பமடைந்திருக்கும்போது ஐயத்தைப் பெருக்கக் கூடிய குளிர்ந்த நீரில் தலை முழுகல்;

6. குளிர்ச்சியான பொருள்களை உட்கொள்ளல்;

7. தன் தேசமல்லாது, வேறு நாடுகளுக்குச் சென்று, அங்கு சில சமயம் அசுத்தமான நீரை உபயோகிப்பதினாலும் ;

8. கண்ணீர் வடிதல், வாந்தியாகிவற்றைப் தடுப்பதினாலும் ;

9. அதிகம் உரத்துப் பேசுவதினாலும் ;

10. அளவுக்கு மிகுந்தாவது குறைந்தாவது நித்திரை கொள்ளலாலும் மூக்கடைப்பு நோயுண்டாகும்.

11. அன்றியும், மேக நோய்க்குத் துணையாய் இந்நோய் வருவதுண்டு.

12. ஒக்க (யோக) நிலையிலுள்ளபோது கீழ் வாய்க்கனல் (மூலச்சூடு) மிகுதியாகித் தலை மூளை வரையிற் சென்று அங்கு வெப்பத்தையுண்டாக்கி மூக்கடைப்பு நோயை விளைவிக்குமெனவும் கூறுவாருமுளர்.

## முற்குறி குணங்கள்.

1. மூக்கில் ஒருவகை எரிச்சலும், நமைச்சலும் தாங்க முடியாதப்படி உண்டாவதால் மூக்கு முனையைத் தேய்த்துச் சிவக்கச் செய்தல் ;

2. பிறகு கண்கள் சிவந்து கண்ணீர் வடிதல் ;

3. மூக்கையடைத்தாற்போல் பேசுதல் ;

4. காதடைத்தல், காதில் நமைச்சலுண்டாதல் ;

5. தலை நோய்.

6. மூச்சுத் திணறல் (மூச்சு உள்வாங்கவும் வெளி விடவும் முடியாமை).

7. மூக்கிலிருந்து பனி நீர்போல் சொட்டுதல் ஆகிய குறி குணங்களை யுண்டாக்கும்.

(மேற்கோள்).

### மூக்கடைப்பின் குணம்.

" பீனி சந்தான் வரலாறு
சொல்லக் கேண்மின்,
பேதமுடன் கனலெழும்பி
வாய்வுஞ் சேர்ந்து,

ஊனுருகி மண்டையிலே
தொகுக்கப்பட்டு,
யுறுதியுடன் வாய்வங்கே
யுறுத்துப் பின்னும்,
ஈனமுடனோடும் நீர்சீழ் ரத்தம்
பிடித்து வருவது காது மூக்கினோடு
தேனருவி வந்தது போல் செங்கல் சிறாயுஞ்
சேர்ந்துவிழும் பீனிசத்தின் செய்கையாமே ".

என்பதால், உடற் கனலும், வாயுவும் சேர்ந்து மேலெழும்பி மண்டை மூளையைத் தாக்கிக் கொதிப்புண்டாக்கி இந்நோயைப் பிறப்பித்து நீர், சீழ், ரத்தம் இவற்றைக் காதிலும் மூக்கிலும் வடியச் செய்து மூக்கிலிருந்து செந்நிறமான சிறாய் வெளியேறு மென அறிக.

நோய் எண்.

இந்நோயைச் சிலர் எண்பத்தி ஆறு எனவும், சிலர் பதினெட்டு எனவும், தமிழ் நூல்களில் இதனை ஒன்பது வகையாகவும், பிரித்துள்ளார்கள்.

ஒன்பது வகை மூக்கடைப்பு நோய்களாவன.

1. வளி மூக்கடைப்பு.
2. அழல் மூக்கடைப்பு.
3. ஐய மூக்கடைப்பு.
4. நீர் மூக்கடைப்பு.
5. குருதி மூக்கடைப்பு.
6. சீழ் மூக்கடைப்பு.
7. சிறாய் மூக்கடைப்பு.
8. மூளை மூக்கடைப்பு.
9. கழுத்து மூக்கடைப்பு.

என்பனவாம்.

ஒவ்வொரு பிரிவு மூக்கடைப்பு நோயின் தனித்தனி குறி குணங்கள்.

வளி மூக்கடைப்பு நோய்.

1. மூக்கு, நெற்றி, புருவம், கண்கள், காதுகள், வாய் இவற்றில் ஏதோ புழு ஊறுவது போன்ற உணர்ச்சி அல்லது நமைச்சலுண்டாதல் ;

2. மூக்கடைத்துச் சிறு சிறு துளியாக நீர் கசிதல் ;

3. நோய் முதிர்ச்சியடையின் நீர் வற்றிச் சளியுடன் அடிக்கடி மூக்கைச் சிந்தச் செய்தல் ;

4. தும்மல், மூக்கில் குடைவது போலிருத்தல் ;

5. கண்கள், தலை, பல், இவைகள் நோதல், வாயுலர்தல், குரற் கம்மல், உடல் வன்மை குறைதல் ஆகிய குறி குணங்களைக் காட்டும்.

## 2. அழல் மூக்கடைப்பு நோய்.

1. உடல் அனல் போலிருத்தல், சுரங் காய்தல் ;

2. மூக்கில் எரிச்சல், மூக்குத் தண்டும், உட்சதையும் சிவந்து காணல் ;

3. தலை சுற்றல், தலை உச்சியில் சூடாகத் தோன்றல் ;

4. மூக்கு நாற்றமறியாமை ;

5. நீர் வேட்கை, மூக்கடைத்தல், மனக் கலக்கம் ;

6. மூக்கிலிருந்து கட்டி கட்டியாக மஞ்சள் நிறமான சளி மிகுதியாக வெளியாதல் ;

7. மூக்கில் சில வேளை கொப்புளம், புண் முதலியன உண்டாதல், ஆகிய குறி குணங்களைப் பிறப்பிக்கும்.

## 3. ஐய மூக்கடைப்பு நோய்.

1. ஆரம்பத்தில் தலை நோய், கண்ணீர் வடிதல், கண் சிவத்தல், மூக்கடைத்தல், மூக்கிலுண்டாகும் எரிச்சல், நமைச்சல், இவற்றைத் தாங்காது மூக்கைக் கையால் அரக்கிக் கொள்ளல் அல்லது தேய்த்தல் ;

2. மூக்கு நீர் சொட்டுதல் ;

3. பிறகு வெண் நிறமான சளி வெளியாதல் ;

4. சளி முதிர்ந்து கட்டியாக நாற்றத்தோடு வெளியாதல் ;

5. ஓயாத இருமல் ;

6. கண்களில் பீளை சாரல் ;

7. காதடைத்துக் காது சரியாகக் கேளாமை, சில சமயம் காதிலிருந்தும் நீர் வடிதல் ;

8. நாவு சுவையறியாமை, ஆகிய குறி குணங்களைக் காட்டும்.

## 4. நீர் மூக்கடைப்பு நோய்.

இஃது குளிர் காற்றிலீடுபடல், குளிர்ந்த நீரில் தலை முழுகல், குளிர்ச்சியான உணவுகளையும், நீரையும் அருந்தல், தனக் கொவ்வாது மணமூட்டும் பொருள்கள், தும்பு (தூசி)கள் மூக்கில் நுழையச் செய்தல், ஆகிய இக்காரணங்களால் (Probably allergic causes) மூக்கடைத்து உடனே தனக்குத்தெரியாமலே மூக்கினின்றும் நீர் சொட்டும் நோயாம்.

### இதன் குறி குணங்கள்.

1. மூக்கிலிருந்து வடியும் நீர் மிகத் தெளிவாக இருக்கும்.
2. தலை நோய், சிறு சுரம், சோம்பல், கை கால்கள் நோதல், ஆகிய குறி குணங்களைக் காட்டும்.

## 5. குருதி முக்கடைப்பு நோய்

1. உடல் வெப்படையும்போது மண்டையிலும், குருதியிலும் கொதிப்பேறும்.

2. மூக்கின் உள்பாகம், உதடு, நாவு இவை சிவந்து புண்போல் காணல்.

3. அப்புண்களிலிருந்து உடலில் கொதித்தெழுந்த இரத்தம் மூக்கிலிருந்து வழிதல், சளியும் கூடி இழிதல்.

4. மூக்கினுள் எரிச்சல், நமைச்சல், திமிர்த்தல் அல்லது நோதல் கண் எரிச்சல், காது குடைதல், தலை கழுத்து, தாடை இவை நோதல்.

5. நாவு சுவையறியாமை, உணவில் விருப்பமின்மை ஆகிய குறி குணங்களைக் காட்டும். அன்றியும் ;

6. மண்டையிலாகிலும், மூக்கிலாகிலும், அடிபடினும் மூக்கில் குருதி வெளியாகும். மற்றும் குருதியழல் நோயிலும் இளைப்பு நோயிலும் முற்குறியாக மூக்கிலிருந்து குருதி வருவதுமுண்டு.

## 6. சீழ் மூக்கடைப்பு நோய்.

இது, உடலில் எழுந்த வெப்பமானது மண்டையைத தாக்கும் போதும், ஐயமிகு உணவு, குடி, மற்றச் செயல்களாலும், பிறக்கும் நோயாம்.

371B-4—98

1. மூக்கடைத்து மூச்சுவிட முடியாமை, வாயால் மூச்சுவிடல் ;

2. மூக்குச் சளியானது கடினப்பட்டு நாற்றமாகக்காணப்படல் ;

3. சிலவேளை சளியானது அளவில் குறைந்தும், மிகுந்தும் காணப்படல் ;

4. மூக்கின் தண்டினுள் ஒரு புறம் சிவந்து வீங்கியும், மற்றோர்புறம் வற்றி உலர்ந்தாற்போலும் காணல் ;

5. அடிக்கடி தும்மல்.

6. சளியின் நாற்றமும், நோயினன் விடும் மூச்சும், தாங்க முடியாதவாறு துர் நாற்றமாயிருப்பினும், நோயினனுக்கு அந் நாற்றம் அல்லது அம்மணம் தெரியாதிருத்தல் ஆகிய குறி குணங் களை விளைவிக்கும்.

### 7. சிறாய் மூக்கடைப்பு நோய்.

இது மேக நோயினைப் பற்றி வருவதாகும் (Syphilitic)

1. மூக்கடைப்பு, மூக்கினுள் புண், சளி இறுகிக் கெட்டிப் பட்டு வாய் வழியே கட்டி கட்டியாக வெளியாதல் ;

2. நோய் முதிர்ச்சியடையின் சளி மீண்டும் கெட்டிப்பட்டு மூக்கினுள் சிறாய் போலத் துண்டுகளாக நிலைத்து மூக்கைச் சிந்தும்போது சிறிது சளியும் சிறாயுமாக வெளியாதல் ; நாற்றம் மிகுதியாயிருத்தல் ;

3. மூக்கு எலும்பும் நைந்து சிறு சிறு துண்டுகளாகச் சளி யோடு கூடி இழியும்.

4. நெற்றியின் கீழ் பக்கமுள்ள மூக்குத் தண்டு நைந்து பள்ளம் விழுந்து நாளடைவில் அழுகி அதனைத் துளைத்துவிடுவதுமுண்டு.

5. மூக்கால் பேசல், தொண்டை கம்மல், பசியின்மை ஆகிய குறி குணங்களாம்.

### 8. முளை மூக்கடைப்பு நோய்.

மூக்கினுளுள்ள சவ்வைப் பற்றித் தொடர்ந்து கம்பளிப் பூச்சிப் பழம்போல் சதைப் பற்றுள்ளதாகவும், யானைத்திப்பிலி யைப் போல் நீண்டு சிறு குருக்கள் ஒன்றோடொன்று சேர்ந்தாற் போலும் சிவந்து தளதளத்தும் காணும்.

2. இம்முளை பெரும்பாலும் ஒருமூக்குத் துளையிலுண்டா கும், சில வேளை இரு மூக்கு துளைகளிலும் பிறப்பதுண்டு.

3. மூக்கடைப்பு மூச்சு வாங்கவும் வெளிவிடவும் முடியாமை,

4. தலை நோதல்.

5. மூக்கிலிருந்து குருதியும் சளியுமிழிதலாகிய குறி குணங்களைக் காட்டும்.

### 9. கழுத்து மூக்கடைப்பு.

இந்நோய் கழுத்திலுண்டாகும். குரற் கம்மல் நோய்க்கும், தொண்டையடைப்பு நோய்க்கும் துணையாக மூக்கடைப்பை யுண்டாக்கும் நோயாகும்.

இதில் உணவு, நீர் முதலியவை விழுங்க முடியாமல் நோவுண்டாதல்; தொண்டையில் எரிச்சல், தொண்டையில் கோழைச் சேரல், தும்மல், மூக்கிலிருந்து சளி வெளியாதல், அச்சளி தொண்டை வழியாகவே வெளியாதல், என்னும் குறி குணங்களை உண்டாக்கும்.

#### மூக்கடைப்பு நோயின் முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவாதி செயல்களால் உடல்வெப்பமடைந்து, அழல் மிகுதிப்படும்போது ஐயத்தைப் பெருக்கக்கூடிய செயல்களால் ஐயம் பெருகி, அழலைய மாகி இந்நோயைப் பிறப்பிக்கும். அன்றியும் ஓக்க (யோக) நிலையில் கீழ்வாய்க்கனல் (மூலச்சூடு) மிகப் பெருகினும், அஃது மேல் நோக்குங் காலின் (உதான வாயு) வன்மையால் மண்டை வரையில் பாய்ச்சலுள்ள நிலையில் ஐயங்கூடினும் இந் நோய்ப் பிறக்குமென சில நூல்கள் கூறுவதாக சித்த மருத்துவம் கூறுகின்றது.

#### நாடி நடை.

பண் பான பித்தத்தில் சேத்தும நாடிப்
பரிசித்தாலத்தி சுரமிளைப்பு ஈளை,
கண்காது நயனமலம் நீருமஞ்சள்
கனவயிறு பொருமல் ரத்தவிப்புருதிதானு,
முளைமாந்தை பீனிசமும் ரத்தவீக்கம்
நண்பான காமாலை சோபை வெப்பு,
நணுகி வந்த பல. பிணியுங் காணுந்தானே ''
(சதகநாடி.)

2. '' ஒடுக்கமாஞ் சிலேற்பன நாடி
யொழுங் கொடு பதறி நின்றால்
நடுக்கமாய்ப் பீனிசங்கள்
நாசி நீர்ப் பாய்ச்சலாகும் ''

3. '' கண்டாயோ சிலேற்பனத்தில் வாதநாடி
கலந்திடுகில் வயிறுபொருமல் கனத்த வீக்கம்

உண்டாலோ ஓங்கார சத்தி விக்கல்
உறுதிரட்சை வாய்வுவலி சன்னிதோடம்,
விண்டாலே இளைப்பிருமல் சோகைபாண்டு
விடபாகம் விடசூலை பக்கவாதம்,
திண்டாடு நாசிகா பீடங் கக்கல்
சிர நோய்கள் பலவும்வந்து சிக்குந்தானே''

(சதகநாடி.)

''விரணமுடன் புண்புரைக்கு வாதபித்தம்
விதியறியாப் பீனிசந்தான் பித்தசேத்துமம்''

(பரிபூரண நாடி)

(இதன் பொருள்.)

பித்த ஐய கலப்பு நாடிகளிலும், ஐயநாடி மிகினும், ஐய வளிக் கலப்பு நாடியிலும் மூக்கடைப்பு நோய்களைக் குறிக்கு மென அறிகிறோம்.

## 6. குருதியழல் நோய்.

**வேறு பெயர்கள்.**— ரத்த பித்தம், குருதித்தீ என்பனவாம்.

**இயல்.**—இஃது தன்னளவில் மிகுதியான இரத்தத் தாதுவும் தன்அளவில் மிகுதியான பித்த தோடமும் சேர்ந்ததாலுண்டாகும் நோயாகும். அதாவது, அகக் காரணம், புறக் காரணங்களால் பிரகோபமடைந்த (மிகுதிப்பட்ட) அழற்குற்றமானது (பித்தம்,) குருதி தாதுவைப் பற்றி அதனைக் கெடுத்து அதனைத் (தன் வழியே செல்ல விடாது கண், மூக்கு, காது, வாய், எருவாய் (மூலம்), கருவாய் (யோனியும் கருப்பையும்), நீர்த்தாரை, தோல் இவைகளின் வழியே குருதியை வெளியாகும்படிச் செய்யும் நோயாம்.

குற்றயளவாக ''அழல் குருதி'' என்று பெயரிடாமல்
குருதி அழல் எனப் பெயரிட்டத்தின் தாற்பரியம்
யாதெனில்.

இந்நோயினால் பிரகோபமடைந்த அழல் குற்றத்தை முற்படுத்தியது குருதியேயாகும். ஆதலால் குருதியை முன்னும், அழலைப் பின்னுமாய் அமைத்துக் ''குருதியழல்'' நோய் எனப் பெயராயிற்று.

பித்தம் சினந்து குருதியை அணுகி, அதனைக் கெடுத்துப் பின்னர் அஃதின் மணமும், நிறமும் படைத்தலின் காரணமாக ''குருதித்தீ'' எனப் பெயர் வழங்கிற்று.

## நோய் வரும் வழி.

(மேற்கோள்)

விருத்தம்.

1. " குருதித் தீ வருவதற்குமுன் வழியை
யாய்ந்து சொல்லக் கூர்ந்து கேளாய்க்
கொடுங்கார முப்புபுளி மிகுசூடு
மந்தமிவை கொண்டவூணால்
அருண வெப்பத்தினாற்தூது வளை
போலிலைக ளருந்துவதனால்
ஆகாதவரகுடன் சோளமுதல்
யனலுணவன்றன்றாதல்
வருமிகுதி யாதலுனல் மிக்கநடை
புணர்ச்சி மிகல் மண்ணுஞ்சாரம்
மருவு பொருளுண்ணலாலரியு
வுடதிலெங்கு மன்னுபித்தம்
பெருகிய திருப்பதிற்கிடமான
குருதியிற் பிசறியோங்கப்
பேணியக்குருதியின் மிகு
சினத்துடனுறிப்பிழி வேர்வையே "

(வெண்பா.)

2. " வேர்வை யதனாலே மேலாகுந் தாதுக்களில்
ஆர்வுறப் பித்தமதன்வீரம்—சார்வாகிப்
பின்னர்ப் பெருகிப் பெருந்துன்ப மீந்துடலில்
மன்னுவதே யாமென்னல் மாண்பு "

(கை யெழுத்துப் பிரதி.)

(இதன் பொருள்.)

1. மிகுந்த காரம், உப்பு, புளிப்பு, இச்சுவையுள்ள பதார்த்தங்கள், மிகுந்த சூடு, மந்தம் இவற்றைத் தருகின்ற உணவுகள் ஆகியவற்றை அதிகமாக உண்ணல்;

2. வெய்யிலில் மிகுதியும் அலைந்து திரிதல்;

3. தூதுவளை போன்ற இலைகளை அதிகமுண்ணல் ;

4. உட்டிண பதார்த்தங்களாகிய வரகு, சோளம் போன்ற உணவுகளை மிகுதியாக உண்ணல் ;

5. மிக்க நடை, மிகுபுணர்ச்சி, குளிர்ந்த பொருள்களை அதிகமாக உண்ணல் ஆகிய இச்செயல்களாலும்,

6. ஐம்புலன்களை அடக்கவும், உடலைக் காக்கவும், அப்பியாசிக்கும் யோகத்துள் ஒவ்வொரு நிலையையும் தன் வயம் அடக்கிச் செய்யும் முறையிலுண்டாம் கேட்டாலும் ; அழல் குற்றம் (பித்தம்) தன்னளவில் மிகுந்து (பிரகோபித்து) இரத்த தாதுவைச் சார்ந்து, அங்குள்ள குருதியை இளக்கியோ, கடினப்படுதியோ கேடடையச் செய்து வாயுக்களின் தூண்டுதலால் ரத்த பித்த நோயைப் பிறப்பிக்கும் ;

7. வியர்வை அதிகமாகப் பெருகி வெளிப்படுவதினால், தாதுக்கள் வன்மைகுன்றி, பித்தம் பிரகோபங்கொண்டு இரத்தத்தையும் கெடுக்கும் என்பர்.

8. அன்றியும், அழல் குற்றத்தின் கேட்டால் அகடு (வயிறு) வலப் பாட்டீரல், இடப்பாட்டீரல், நுரை ஈரல், சிறுநீர்ப் பை, பெருங்குடல், சிறு குடல், தமரகம் (இருதயம்) இவைகள் சீர்குலைந்து வெதும்பி வரண்டு அவைகளிலிருக்கும் குருதி கேடடைந்து வெளியாகும் என்பதையும் தெரிந்து கொள்ளவும். இந்நோயை (Purpura) ''பர்ப்புரா'' என மேல் நாட்டார் கூறும் நோய்க்குச் சமமெனக் கொள்ளலாகும்.

(சி.ம. ; கையெழுத்துப் பிரதி.)

இரத்த பித்த நோயின் முற்குறி குணங்கள்.

(மேற்கோள்.)

விருத்தம்.

1. '' குருதித் தீயெனும் ரத்தபித்த
முற்குறி யதனைக் கூறினிருமல்
குளிர்ப்பு புளிப்புப் பொருளி
லிச்சை தாழொலி பிரமைகூடிரைத்தல்
வருதலைப் பளுவரு சிவாந்தி
கள நோதலாம் வாயிற்செம்மை

மருவலோடு புளிகவிச்சதுகளிம்
பதின்மணம் வரலுடற் கருமை
தருவெண்மை மஞ்சள் பச்சிலை
ரசம் செந்நிறந்தாழ் கறுப்பாம்
தனிநிறங்களை யறிதலில்லாத
பார்வையுஞ் சடஞ்சிலிர்த்தல்
பெருங்கனவிற் குருதி யொளிவரல்
கோட்டுவே யேப்பம் பேசிரும்பிற்
பிணி துரும்பின் மணம்வரல்
வாய்ப்புளித்த லிவை பெருகுமன்றே ''

(வெண்பா.)

2. '' அன்றியுளம் வாட்டம் யருவருப்புத் தொண்டை
தன்னுள் புண்போறல் தன் கண்முதல்—மன்னுமுறுப்
பெங்குஞ் செம்மை மஞ்சளேற்ற பச்சையொன்றிவற்றில்
தங்குதலு மாமென்று சாற்று ''

(கை யெழுத்துப் பிரதி.)

(இதன் பொருள்.)

இரத்த பித்த நோய் ஆரம்பத்தில் இருமல், குளிர்ச்சியும், புளிப்புமுள்ள பொருள்களில் இச்சை, குறைந்த ஒலி, பிரமை, தலைக் கனம், அருசி, வாந்தி, கண்டத்தில் வலி, வாயின் நிறம் சிவத்தலோடு, புளி, கவிச்சு, களிம்பு இவற்றின் மணம் வீசுதல் உடல் பலநிறம் பெறுதல் பார்வையினால் இன்ன நிறமென்று அறியக் கூடாமை, உடல்சிலிர்த்தல், கொட்டாவி, ஏப்பம், இருமினால் இரும்பின் துருப்பு மணம் வீசுதல், வாய் புளித்தல், கனவில் செந்நிற ஒளியைக் காணல், தேகமும் உள்ளமும் நாளுக்கு நாள் வாட்டமடைதல், அருவருப்பு, தொண்டைக்குள் புகை கம்மியது போல் காணுதல், வாந்தியில் பித்தம் அல்லது குருதி கலந்திருத்தல், குரற் கம்மலாகிய குறி குணங்களையுண்டாக்கும். படுக்கையிற் கிடக்கச் செய்யும்.

(சி. ம. ; கையெழுத்துப் பிரதி)

### இரத்த-பித்த நோயின் பொதுக்குறி குணங்கள்.

மேற்கூறிய முற்குறி குணங்களைக் காட்டி, உடலின் பருமன் வன்மை இவை குறைதல், இருமல், வாந்தி, இரைப்பு, செரியாமை, உடல் எரிச்சல், சுரம் இவற்றையுண்டாக்கி இருமும் பொழுதும் வாந்தி பண்ணும்பொழுதும் அளவிலாக் குருதியை

வெளியாக்கும், உடல் வெளுத்தல், ஊக்கமின்மை, உண்டி சுருங்கல் உமிழ்கின்ற எச்சிலில் துர்மணம் வீசுதல், தலை பளுவாதல், கீழுதட்டில் நோவு, மனோபீடை, ஆகியவற்றையுமுண்டாக்கும்.

அன்றியும், சில வேளை மூக்கு, கண், காது, கீழ்வாய், நீர்த்தாரை தோல் இவைகளினின்றும் குருதி வெளியாகும். தோல் சுருங்கி வறட்சியடைந்து குருதியை வெளிப்படுத்தும். வெளிப்பட்ட குருதியின் அளவிற்கேற்ப உடலிற் குருதி குறைந்து உடல் வெளுத்து பெருமூச்சு, களைப்பு, நீர்வேட்கை, விக்கல் இவையுண்டாய், கால், கை, முகம், இவைகள் வீங்குதல், நடுக்கம், இடைவிடா ஏக்கம், முதலிய குறி குணங்களையும் காட்டும். இங்ஙனம் வருந்தும் நோயினன் தன்னை வேறு யாதாமொருவரும் பார்க்க விரும்பமாட்டான்.

(சி ம. ; கையெழுத்துப் பிரதி)

### நோய் எண்.

குருதி அழல் (இரத்த பித்தம்) நோயை முக்குற்ற அளவாகப் பிரித்து எண்வகை என்பர். அவையாவன :

(1) வளிக்குருதியழல் நோய்.

(2) அழல் (தீக்) குருதி அழல் நோய்.

(3) ஐயக் குருதி அழல் நோய்.

(4) வளி தீக்குருதி அழல் நோய்.

(5) வளி ஐயக்குருதி அழல் நோய்.

(6) ஐயவளிக்குருதி அழல் நோய்.

(7) ஐயழல் குருதி அழல் நோய்.

(8) முக்குற்றக்குருதி அழல் நோய்.

(சி. ம.)

குறிப்பு.—முக்குற்றயளவாக எண் வகையாகப் பிரித்தவர்கள் " அழல் வளிக் குருதியழல் நோய் " " அழல் ஐயக் குருதி அழல் நோய் " இவையிரண்டு பிரிவுகளும் "சித்த மருத்துவத்தில்" விடுபட்டிருக்குங் காரணம் தெரியவில்லை.

மற்றொரு சாரார் இந்நோயை வெளியாகும் குருதியின் நோக்கைக் கொண்டு பிரித்துள்ளார்கள். அவையாவன :

(1) மேல்நோக்கு இரத்த பித்த நோய்.

(2) கீழ்நோக்கு இரத்த பித்த நோய்.

(3) இரு நோக்கு இரத்த பித்த நோய்.

(4) அளவில்லா நோக்கு இரத்த பித்த நோய் என நான்கு வகையாகப் பிரித்துள்ளார்கள்.

## ஒவ்வொரு பிரிவு குருதி அழல் நோயின் தனித்தனி குறிகுணங்கள்.

1. **வளிக்குருதி அழல் நோய்.**—பொதுக் குறி குணங்களில் கூறியிருக்கும் குறி குணங்களோடு, வளிக் குற்றத்திற்குரிய விசேடக் குறி குணங்களாகிய உடல் நோதல், குருதி கரு நிறத்துடன் கனமின்றி வெளியாதல், நுரையுடன் காணல், எரு (மலம்) கட்டுப்பட்டு ஆட்டுப் புழுக்கையைப் போல வெளியாதல், அல்லது மலம் வெளியாகும் போது மிகவும் வலியுடனும், குருதியுடனும் கஷ்டத்துடனும் வெளியாதலாகிய குறி குணங்களைக் காண்பிக்கும்.

2. **அழல் (தீக்) குருதி அழல் நோய்.**—இந்நோயில் தீக்குற்றமே பெரிதும் மிகுதியாக இருப்பதால் துன்பங்கள் அதிகமாக விருக்கும். குருதி அதிகமாக வெளியாகும். அக்குருதி, மிகுந்த அழல் குற்றத்தின் கொடுமையால் தீய்ந்து, நிறம் குறைந்து சருகு ஊறிய நீரின் நிறம் போல வெளியாகும். சில சமயம், குருதியுடன் பித்த நீரும் சேர்ந்து வெளிவரும். உடல் வெளுத்து மஞ்சள் நிறத்தைப் பெறும். கண், நா, தோல் முதலியன பசுமையையடையும். சில வேளை குருதி சிவந்த நிறத்துடனும் வெளியாகும். குருதியுடன் பித்தநீர் கலத்தலால் உடல் பச்சை நிறமடைந்து இந்நோயினன் பார்வைக்குக் காமாலை நோயினன் போற் காணப்படுவான்.

3. **ஐயக் குருதி அழல் நோய்.**—இந்நோயில் வெளியாகும் குருதி சற்று வெளுத்தும், கோழை மிகுதியாகச் சேர்ந்தும், புலால் நாற்றத்துடன் கடினமாகவுமிருக்கும். ஓயாத இருமல், சிறு சுரம், மூக்கு நீர் பாய்தல் ஆகிய குறி குணங்களை உண்டாக்கும்.

4. **வளி தீக்குருதி அழல் நோய்.**—மேற் கூறிய வளி, அழல் இவ்விரண்டு குற்றங்களின் குருதி அழல் நோய்களின் குறி குணங்களில் சில அல்லது பல சேர்ந்து தோன்றும்.

5. **வளி ஐயக் குருதியழல் நோய்.**—முன் கூறிய வளி, ஐயம் இவ்விரண்டு குற்றங்களின் குருதி அழல் நோய்களிற் காணும் குறி குணங்களில் சில அல்லது பல சேர்ந்து தோன்றும்.

6. **ஐயவளிக் குருதி அழல் நோய்,**—முன் கூறிய ஐயப்பெருக்கினாலுண்டாகும் குருதியழல் நோய்க் குறி குணங்களோடு வளிக் குற்றத்தின் குருதி அழல் நோய்க் குறி குணங்களும் சேர்ந்து தோன்றும்

7. ஐயத் தீக்குருதி அழல் நோய்.—முன் கூறிய ஐயப் பெருக்காலுண்டாகும் குருதியழல் நோய்க் குறி குணங்களோடு தீக்குற்றத்தின் குருதியழல் நோய்க் குறி குணங்களும் சேர்ந்து தோன்றும்.

8. முக்குற்ற குருதியழல் நோய்.—இந்நோயில் முக்குற்றங்களும் ஏக காலத்தில் கேடடைவதால், வளி, அழல், ஐயம் என்னும் மூன்று குற்றங்களின் குருதியழல் நோய்க் குறி குணங்களில் சில அல்லது பல குறி குணங்கள் சேர்ந்து தோன்றும். சன்னிபாதக் குறி குணங்கள் யாவும் ஒருங்கே தோன்றும். இது எளிதில் தீராத நோய் அல்லது அசாத்திய நோய் என்றே கூறலாகும்.

(சி.ம.)

(மேற்கோள்).

1. வளிக்குருதி தீநோய்.

"வளியினால் வருங்குருதித் தீநோயின்
பெருமிதத்தை வகுக்குங் காலை,
நளிகருமை யுறலன்றிச் செம்மையுறல்
நுரைகலத்தல் நாடுந்தன்மை,
ஒளிவெம்மை யுருதல் நலமின்மை
முரமுரப்பினுடனுள்ள தெளிவு
களிற் சிலவே யுற்றிடினுமஃதென்று
முன்னவர்கள் கழறினாரே."

2. பித்தக்குருதி தீநோய்.

"தீயினால்வருங் குருதித் தீநோயின்
செயலதனைச் செப்புங்காலை,
ஏயுமால் பேய்ப்புடலின் குடிநீர்போ
னிறமுறுதலிடு மையைப்போல்,
தோயுமொட்டரை மத்தளக்காகிக்
கறுப்புறல் தூபம் போறல்
ஆயபசு நீர்போற் குழம்பாத
லிவை யனைத்துமந்நோய்க் குறியே".

3. ஐயக் குருதித் தீ நோய்.

''நீரதனால் வருங் குருதித் தீநோயின்
தொழிலதனை நிகழ்த்துங்காலை
ஆறெண்ணெய்ப் பசையதுறல சிறு
வெண்மை கனம் சுற்றல் அலசி நீரில்
சேரமிகக் கழுவினுமே பிசுபிசுத்தல்
மிகச் சிக்கல்சேரின் முன்சொல்
பேரதுரு நோயென்று நலியறிந்ததனை
நீ பேணிப்பாரே.''

(கை எழுத்துப் பிரதி).

## வேறு நான்கு வகைப் பிரிவுக் குருதி அழல் நோய்களின் தனித்தனி குறி குணங்கள்.

### 1. ''மேல் நோக்குக் குருதி அழல் நோயின்'' குறி குணங்கள்.

அழல் குற்றத்தின் மிகுதியால் மேல் நோக்குங்கால் தூண்டப் பட்டு (உதானவாயு) அது தன்னளவில் மிகுந்து, குருதியைக் கெடுத்து, இருமல், தும்மல், விக்கல், ஏப்பம் இவற்றையுண் டாக்கும். இருமி வாந்தி செய்யும். அதில் பச்சைக் குருதி நுரையுடன் வெளியாவதுண்டு. அங்ஙனம், மேல் நோக்குங் கால், வயிற்றைத் தாக்கின், அங்கு ஐயத்துடன் கூடி, குருதியை இறுகச் செய்து வயிற்றைக் கடுத்துக் கட்டி முட்டிகளாய்க் குருதியைக் கரு நிறத்துடன் வாந்தி செய்விக்கும். அக்கால் (உதானவாயு) தமரகம், இடப்பாட்டீரல், வலப்பாட்டீரல் இவைகளைத் தாக்கின் அவ்விடங்களில் குத்தல், நோதலாகிய துன்பங்களை விளைவித்துக் குருதியை இளகச் செய்து வெளி யாக்கும். வெளியாகும் குருதியினளவுக்கேற்ப ஆயாசம், இளைப்பு, பிசுபிசுத்த வியர்வை, கண்கள் இருளல் (பஞ்சடைதல்), உடல் வெளுத்தலாகிய குறி குணங்களைக் காட்டும்.

### 2. '' கீழ் நோக்குக் குருதி அழல் நோயின் '' குறி குணங்கள்

இந்நோயில், கீழ் நோக்குங்கால் (அபானவாயு) தன்னளவில் மிகுந்த அழல் குற்றத்தால் தூண்டப்பட்டு, மீறி உந்திக்குக் கீழுள்ள பெருங்குடல், நீர்ப்பை, நீர்த்தாரை இவைகளையும், நடுக்காலாகிய ''சமானவாயு'' மேற் கூறியவாறே மிகுதியாகச் சிறுகுடல், நீர்க் குண்டிக்காய் (பருக்கம்) இவைகளையும் வெதுப்பி, மிகுந்த கழிச்சல், அடிக்கடி நீரிழிதல் ஆகியவற்றை யுண்டாக்கிக் குருதியையும் அதிக அளவில் வெளியாக்கும். நீர்த்

தாரை கடுக்கும். ''நீர்ப்புழை நெருப்புப் போலாம்'' , என தேரன் கூறியபடி நீர்தாரை மிகுதியும் கடுக்கும். எரு வாயில். நமச்சலும் எரிவுங் காணும்: ஆகிய இத்தியாதி குறி குணங்கள் தோன்றும்.

3. ''இரு நோக்குக் குருதி அழல் நோயின்'' குறி குணங்கள்.

கீழ் நோக்குங்கால், மேல் நோக்குங்கால் (அபானன், உதானன்) இவ்விரண்டு வாயுக்களும் ஏக காலத்தில் அழல் குற்றம் மிகுதியால் தூண்டப்படும்போது இந்நோயைப் பிறப்பிக்கும். மேற் கூறிய முதலிரண்டு நோய்களின் குறி குணங்கள் ஒன்று பட்டுக் காணும். கீழ் நோக்குங்காலின் இயல்பால் மிகுந்த கழிச்சல், மிகுந்து சிறு நீரிறங்கல் இவற்றுடன் குருதியும் வெளியாகும். மேல் நோக்குங்காலின் இயல் பால் வாந்தியுடன் குருதியும் வெளியாகும். இங்ஙனம் கீழும் மேலுமாக ஏக காலத்தில் குருதி வெளியாவதால் உடல் மிகுதியும் கேடடையும்.

4. ''அளவிலா நோக்குக் குருதி அழல் நோயின் குணங்கள்.

இந்நோயில் கீழ் நோக்குங்கால் (அபானன்), மேல் நோக்குங்கால் (உதானன்), நடுக்கால் (சமானன்), பரவுகால் (வியானன்), ஆகிய இந் நான்கு கால்களும் ஏகக்காலத்தில் அழல் குற்ற மிகுதியால் தூண்டப்பட்டுவதால் அடங்கா நிலையடைந்து உடலிலுள்ள எல்லாத் துளைகளிலும் குருதியை வெளிப்படுத்தும், பரவுகால் (வியானன்) மிகுதியும் கேடடைவதால் கண், காது, மூக்கு, தோல் முதலிய இடங்களில் தாங்க முடியாத எரிச்சலுடன் உடலெங்கும் வியர்த்தல் போலக் குருதி சிறுகச் சிறுக இடைவிடாது கசியும். மிகுந்த நீர் வேட்கை, நாவறட்சி, உணவில் வெறுப்பு, உடல், கண் மஞ்சள் நிறமடைதல் ஆகிய குறி குணங்களைக் காட்டும். இந்நோய் தீருவது அசாத்தியமென்பர்.

தீரும் தீராதவை.

(1) மேல் நோக்கு, (2) கீழ் நோக்கு—இவ்விரண்டு குருதி அழல் நோய்களும் தீருவனவாம்.

மற்ற இரண்டு வகைகளாகிய (3) இரு நோக்கு, (4) அளவிலா நோக்குக் குருதி அழல் நோய்கள் உயர்தரமான மருந்துகளால் தீரக்கூடுமேயல்லாமல் நீங்குவது மிகவும் கடினம் அல்லது அசாத்தியமெனவும் நூல்கள் கூறும்.

அன்றியும் சாத்தியா சாத்தியம் கூறுமிடத்துக் கீழ்க்கண்ட விவரங்களையும் நூல்கள் தெரிவிக்கின்றன:—

1. எளிதில் தீரும் குறிகளாவன.

இந்நோயான உடல் வன்மையுள்ளவர்களுக்கு மிகவிரைவின்றி வந்தாலும், கார்த்திகை, மார்கழி, தை, மாசி ஆகிய இம்மாதங்களில் வந்தாலும் தனிக் குற்றக் கெடுதியால் வந்தாலும், நோயினன் உயிர் வாழ்வன்.

2. அரிதில் தீரும் குறிகளாவன.

வளி, அழல், சேர்க்கையால் வருவதும், ஒரு வழியில் குருதி வெளியாகிக் கொண்டிருந்தது. அது நின்றபின் மற்றொரு வழியில் மாறி வருவதும் ; நோய் தீர்ந்து சில நாள்கள் துன்பமில்லாமலிருந்து, மீண்டும் நோய் இருப்பதாகக் குருதி வெளிப்படுவதும் ஆகிய இக்குறிக் குணங்களை யுடைய நோயினன் அரிதில் உயிர் பிழைப்பான்.

3. முற்றிலும் தீராக் குறிகள்.

மற்ற எந்நோயிலேனும் பன்னாட்கள் தாக்கப்பட்டு உடல் மெலிந்த நிலையிலும் ; வன்மை குறைந்த முதிர்ந்த வயதிலும்; பாலர்களிலும், மிகுந்த நாள்கள் பட்டினியோடிருக்குங் காலத்திலும் ; தேகத்தில் அதிகக் காங்கை ; அதிக இருமல் இவற்றால் நீண்ட நாள் பாதிக்கப்பட்ட நிலையிலும் ; சுரம், காமாலை, சோபை, பாண்டு முதலிய நோய்களால் வருந்துங் காலத்திலும்; அடிக்கடி வாந்தி, பேதி இவற்றால் வருந்துங் காலத்திலும் ; இரத்த பித்த நோய் அணுகினால் நோயினன் பிழைப்பது இல்லை என்பர்.

அன்றியும், வெளியாகுங் குருதி மிகுந்த கருமை, செம்மை, பச்சை, நீலம், மஞ்சள், மஞ்சளின் செம்மை, மண்ணின் செம்மை, நாவற்கனிச் சாற்றின் நிறம் ஆகிய இந்நிறங்களை ஒத்திருப்பினும் தீராவாம்.

மேலும், கண், உடல், தோல் இவைகளில் தாங்க முடியாத எரிச்சல் ; வாய் எப்பொழுதும் கைத்தல் என்னும் குறிகள் தோன்றினும் தீராவாம்,

(சி.ம.)

4. இரத்த-பித்த நோயின் முக்குற்ற வேறுபாடுகள்.

மிகுந்த நடை, வெய்யிலில் திரிதல், சூடான பொருள்களை மிகுதியாய்ப் புசித்தல் ஆகிய இச்செயல்களால் அழல் (பித்தம்) குற்றம் தன்னளவில் மிகுந்து, உடலில் வெப்பத்தை மிகுதியாக்கி வாயுக்களை தூண்டி இந்நோயை எழச் செய்யும். மிகுந்த

அழல் குற்றத்தினளவாகவும், தன்னளவில் பெருகிய காலின் (வாயுவின்) அளவாகவும் ''குருதி அழல்'' நோயுண்டாகும். முதலில் தீக்குற்றம் மிகுதியாயினும், பிறகு அது மற்றைய இரு குற்றங்களையும் கேடடையச் செய்யும். ஆதலின் இந் நோயைக் குற்றயளவாக வளி தீ, ஐயம், தொந்தம் முக்குற்றக் குருதி அழல் நோய்களென வகுத்தனர். மேலும், ''கால்கள்'' (வாயுக்கள்) தத்தம் அளவில் மிகுந்ததைக் கொண்டு மேல் நோக்கு, கீழ் நோக்கு, இரு நோக்கு, அளவிலா நோக்கு என்ற ''குருதி அழல்'' நோய்களாக வகுத்தனர். அந்தந்தக் கால்கள் மிகுதியடைந்ததற்கேற்பப் பெயரிட்டனரென்பதையும் அறிகிறோம்.

(சி. ம.)

5. நாடிநடை.

''பொருளான வாதத்தில் பித்தஞ் சேர்ந்து
பொருந்துங்குணங்களுட்ணவாயு சத்தி
செரியாமை புளித்தேப்பம் பொருமல் நீரிற்
சிவப்பு மலம் பிடித்தலுறுதாது நட்டம்.

*　*　*　*　*

*　*　*　*　*

6. இரத்தக் கொதிப்பு. (Hypertension)

வேறு பெயர்கள்.—இரத்தச் சூடு, இரத்தவமுக்கம், இரத்த மிகுதி, இரத்த அழுத்தம், இரத்தப் பெருக்கம், இரத்தாதிக்கம், நரம்பிறுக்கம், நாடி இறுக்கம் என்பனவாம்.

(ஏட்டுச் சுவடி)

1. ''இரத்தவமுக்கத்தியர் பெயருரைத்திடிற்
இரத்தாதிக்கம், யழுத்தம், இரத்தக்கொதிப்பு,
நத்திடும்நாடி இறுக்கமும் நவில்வர்
பத்திடுங்காரணம் பகரக் கேண்மோ''

என்பதினாலறிக!

இயல்.—நாடி நரம்பு ரத்தக் குழாய்கள் முறுக்கேறி இயற்கையாக ஓடிக்கொண்டிருக்கும் இரத்தம் வேகங் குன்றி சின்ன இரத்தக்குழல்களில் இரத்தம் பொருமி, மயக்கம், கிறுகிறுப்பு, கைகால்கள் சோர்வு, ஞாபகம் குன்றல், வன்மை குறைதலாகிய குறி குணங்களைக் காட்டி மூளையில் ரத்தம் கசிந்து திடீரெனப் புபுச்சம் ஞாபகமுமற்றுக் கிடத்தும் நோயாகும்.

## நோய் வரும் வழி.

' கேட்டிடு பன்னுட் கெடுமலச்சிக்கல்
கூட்டிடும் மதுக்கள் கொள்ளல் புகையிலை.
நாட்டிடும் மாவகை நற்கொழுப்பிறைச்சி,
ஊட்டுதல் மிகுதல் உழைப்பு மிகுதி''.

''மிகுமனக் களிப்பு மிகு நாடித் துடிப்பு
நகுமனவோட்டம் நாடுதல் காமம்,
தகுமேக நோய்கள் தக்க பல் தொண்டை
பகுபித்தப்பை பல உறுப்பிணிலும்''

4. ''உறும்பல நோய் நீரீரல் நீர்ப்பை,
வரும் பல புண்கள் வளர்த்திடுங்கவலை,
தரும்பயம் பதறல் தகவிலாக் காரம்,
மருவிடுமீய நஞ்சென்றுரைப்பர்.''

5. ''உரைப்பரின்னமும் உவக்கும்பல் ஈறில்
மறை சிறு புண்ணுல் மருவுமென்றுரைப்பர்
நிரை புண்ணுறில் நீங்குமென்றிடுவர்
பரம்பரையாக படர்வதுமுண்டு''.

6. ''உண்டே மூளையில் உருற்றிடும் நரம்புகள்
தண்டே முள்ளந்தண்டின் பக்கமாய்
வீண்டே நீர்ப்பை யாதியில் விரியும்
பண்டேயவ்வுறுப்படுமேக நோய் விடம்''.

7. ''நோய்விடம் நரம்பில் நுண்மையாய்ச் சென்று
காய்வுற மூளையில் கலந்து உதிரம்
தோய்வுறக் கொதித்து தெளிவிலா மயக்கம்
ஆய்வுறுந் துன்பம் அடையுமேயதனுல்''.

8. ''விங்கிய இருதயம் வேகத் துடிப்பும்
வாங்கிய மூச்சு வருந்தித் திணறல்
ஏங்கிய மூளையில் இரத்த ஒழுக்கு
ஓங்கிய இருதயம் ஓடத் தடையாம்.''

9. "தடையாம் காரணம் தாக்கிய முன் நோய்
அடைவாயிரத்தம் அழுத்தத் தன்மை
உடைய யாக்கை உற்றிடும் வயதை
திடமாய்க் கண்டு தெரிவாய் உண்மை".

## 10 சித்த மருத்துவ நோய்நாடல்.

10. "உண்மையிலிதையும் உஞற்றிடுந் தொழிலின்
ஓண்மையாய்க் குவிந்து ஒய்ந்து விரிதல்
திண்மையாய்ச் சுருங்கி திகழோடியங்கல்
வண்மையாம் குணமென வகுத்தனர் வித்தகர்"

11. "வித்தக விரிவே விரிவமுக்காகும்
தொத்திடும் குவிதல் சுருங்கமுக்காகும்.
நத்திடுமிந்நிலை நழுவிடில் துன்பம்
தொத்திடுமிதனை சொல்லினர் சுருக்காய்"

12. "சுருங்கமுக்கம் மிகுந்திடில் தீமை
விரிந்தமுக்கம் குறைந்திடில் தீமை
அறிந்து நன்ருய் மருந்து செய் நீ
நிறைந்த துன்பம் இறங்குமிந்நோய்".

என்பதினல்; இந்நோய் நெடுநாட்கள் மலச்சிக்கல் ஏற்படுவதாலும் மதுபானம் (கள், சாராயம்) குடித்தல், புகையிலை உபயோகித்தல், மாப்பண்டம், கொழுப்பு, இறைச்சி இவை அதிகம் உண்ணல் மிகுந்த உழைப்பு, மிகுந்த மனக்களிப்பு, நாடியின் மிகுந்த துடிப்பு, மனவோட்டம் (சிந்தனை செய்தல்), காமம், மேக நோய்கள் (Syphilis, Mathumegam and Seezhmegam, etc.) பல் நோய், தொண்டைநோய், பித்தப்பை நோய், நீர்க் குண்டிக்காய் ஈரல், நீர்ப்பை இவற்றிலுண்டாம் புண்கள், மிகுந்த மனக் கவலை, பயம், பதறல், காரமான பொருள்களை உண்ணல், வங்கம், நாகம், இவற்ருலுண்டாகும் நஞ்சு, பல் ஈறிலுண்டாம் சீழ், புண் ஆகிய இக்காரணங்களால் இந்நோய் உண்டாகுமென வும், மேற்கூறிய புண்கள் ஆறிவிடில் இரத்தக்கொதிப்பு மாறி விடுமெனவும், பரம்பரையாகவும் இந்நோய் வரக்கூடுமெனவும் கூறியுள்ளார்.

அன்றியும் மேக நோயால் நீர்ப்பை கேடடைந்து, மேக நோய் விடமானது ஆங்குள்ள நரம்பைத் தாக்கி வீணுத்தண்டின் வழியே சென்று மூளை நரம்புகளையும் கேடடையச் செய்து ஆங்குள்ள

நாடி நரம்புரத்தக் குழாய்களில் வெப்பம் அதிகரித்து மூளையில் கலந்து இரத்தம் கொதிப்படைந்து நோயினனின் தெளிவைக் குன்றச் செய்து, மயக்கம், கிறுகிறுப்பு முதலிய பல வித துன்பங்களை உண்டு பண்ணும்.

அதன் காரணமாக இருதயம் வீங்கி அதன் வேகத் துடிப்பும் மூச்சு வாங்குதலும் வருத்தமடைந்து, திணறலுண்டாய், மூளையில் இரத்த ஒழுக்கும் (கசிவும்), இருதயம் ஓடுவதில் தடையும் ஏற்படுமென அறிகிறோம்.

இங்ஙனம் ஏற்படும் இரத்த அழுத்தத்தன்மையையும் அந்நோயினனின் வயதையும் கண்டு உண்மையைத் தெரிந்துகொள்வார்கள்.

மேலும், இருதயத்தின் இயற்கை தொழில் குவிதல், ஓய்தல், விரிதல் என்பனவாகும், அதற்கேற்ப நாடி நரம்பு ரத்தக் குழாய்கள் விரிந்து, ஓய்ந்து சுருங்குதலடையும், இருதயம் விரியும் போது ஏற்படும் நோயை ''விரிவ்முக்கு'' எனவும், குவியும் போது ஏற்படும் நோயை ''கருங்கமுக்கு'' எனவும் அழைப்பர். இவ்வகையில் ஏற்படும் துன்பங்களை ஆராயுங்கால் சுருங்கமுக்கம் மிகுந்திடில் தீமை எனவும் விரிந்தமுக்கம் குறைந்திடில் தீமை எனவும் இதனை அறிந்து அதற்கேற்ற மருந்துகளைத் தயாரித்துக் கொடுக்க அந்தந்த இரத்த அழுத்த நோய் இறங்குமெனவும் அறிவித்துள்ளார்.

முக்குற்ற இயல் நாடி நடை.

இவை குருதி அழல் நோய்க்குக் கூறியவையேயாகும். நோய் முதிரின் சந்நிபாத நாடிக் குறி குணங்களையும் விளைவிக்கும்.

## 7. இருமல் நோய்.

வேறு பெயர்கள் : காசம், ஈளை.

இயல்: ஓட்டை வெண்கலத்தின் மீது தட்டுவதாலுண்டாம் ஒலியை எழுப்புதல் எனப்படும். அல்லது தொண்டை வறண்டு போவதாலெழும் ஒலியைப் போன்று கணீர் கணீரெனப் பிறக்கும்.

இவ்வொலி எவ்வாறு உண்டாவதென்றால்: (1) கபம்தொண்டையிலும், மார்பிலும் சேர்ந்து கோழையை உண்டாக்கி அக்கோழையை வெளிப்படுத்துவதற்கும்; (2) பித்தமேனும் கபமேனும் தொண்டை, மூக்கு, உணாக்கு, நுரை ஈரல் முலி, தன்

இடங்களில் சேருவதால் ஆங்குப் புண்ணுகி அப்புண்ணிலிருந்து கசியும் கோழை, நிணநீர், சீழ், சளி முதலியவை வெளியாவதற்கும் உண்டாகும் உடலின் இயற்கை எழுச்சியாலுண்டாகும் ஒலியே இருமல் எனப்படும்.

### நோய் வரும் வழி.

1. குளிர் காற்றிலீடுபடல்;

2. வெய்யிலில் அலைதல்;

3. மிகுந்த குளிர்ச்சியான பொருள்களையும், சூட்டைத் தரக்கூடிய பொருள்களையும் உண்ணல்;

4. பெரிதும் உரத்துப் பேசல்; பாடல் முதலியவற்றாலும்;

5. புழுதி, மண், சுண்ணம், பூநீறு, புகை, மிக்க காரப் பொருள்கள், நறுமணம், தீமணம் ஆகிய பொருள்களை முகர்வதாலும், இருமல் நோய் பிறக்கும்;

6. அன்றியும், உள்ளும் வெளியுமாய் உலாவும் மூச்சு (காற்று) செல்லும் வழியிலுண்டாம் தடைகளாலும்;

7. உணவு உட்கொள்ளுங்காலத்தில் இயற்கை வழியாக அகடுக்குச் செல்லாமல், காற்றுச்செல்லும் வழியில் செல்லுதலாலும் இருமலுண்டாவதுண்டு. இதனைப் "புரக்கோல்" என வழங்குவர்.

8. மேலும், சில நூல்களில் கூறியவாறு :—

(i) மிகுந்த புழுதி, புகை இவற்றிலீடுபடுதல்;
(ii) குளிர்ந்த நீரை அடிக்கடிப் பருகல்;
(iii) உடலில் வெப்பமுண்டாகும் செயல்களைச் செய்தல்;
(iv) கறி, மீன் முதலியவைகளை அதிகமாய்ப் புசித்தல்;
(v) வேலையில்லாது சும்மாயிருத்தல்;
(vi) தனக்கு விருப்பமில்லாதப் பொருள்களைப் புசித்தல்;
(vii) பசியையடக்கல்;
(viii) பெண்ணின் மேல் இன்பஞ் சிதைதல் அல்லது பெண்ணின் இன்பம் மறுத்தல்;
(ix) தூக்கம்;
(x) உடல் கொழுத்தல்,

(xi) கடவுளுக்குரிய பொருள்களைத் திருடிப் புசித்தல்;

(xii) தன் கணவனை மதியாதிருத்தல்;

(xiii) பொய் பேசல்;

(xiv) உதவாப்பண்டங்களையும், இந்நோயுற்றார் தின்ற பண்டங்களின் மிகுதியைப் புசித்தல்;

(xv) செய்நன்றி மறத்தல்;

(xvi) கொடுமையாய் வார்த்தை பகருதல்;

(xvii) யாவரும் அறியக்கூறியதைப் புரட்டிக்கூறுதல்;

(xviii) தன்வன்மைக்குமேல் மூச்சையடக்குதல்;

(xix) அம்பு முதலிய கருவிகளாலடிபடுதல்;

(xx) பனியில் படுத்துறங்கல் ஆகிய இக்காரணங்களாலும், செயல்களாலும் இருமல் நோயுண்டாகுமென நூல்கள் கூறுகின்றன.

(மேற்கோள்கள்).

1. "மாதர்களது போகத்தை விரும்பா
வழிதனில் னின்றோரும்
தீதுறு துக்கமீமதமொன்றல்
தின்றசை யுண்டிடுதல்,
ஏதமுறுஞ்சாயமடி தாக்கல்
எதிர்ப்புகை புழுதி புழல்
சீதமுறுங்காயுண்டிடில் காசஞ்
சேர்ந்திடுமக்கணமே".

(கை எழுத்துப் பிரதி).

2. "வேகின்ற வதிகமாம் புகையினாலும்
மீறுகின்ற பாணத்தால் மிக்குந்தானே".

3. "பாணத்தால் பரமாக்கினி மிகுக்கையாலும்
பாரமாமாமிசங்கள் புசிக்கையாலும்
தாணத்தாற் சஞ்சாரந் தவிர்க்கையாலும்
சரிபடா பதார்த்தங்கள் புசித்தலாலும்
தீனத்தாற் புசியாமலிருக்கையாலும்
சேயிழையார் மேலின்பஞ் சிதைவதாலும்
மானத்தால் மாதுக்க மடைவதாலும்
மதத்தாலுஞ் சுவாசமது மருவுங்காணே".

4. ''காணவே தேவதைக்குப் பிரித்த பண்டம்
கள வாடித் தின்றாலுங் கணவன்றன்னைத்
தோணவே நிந்தையைச் சொல்லுவதாலுஞ்
சுசியான பதார்த்த மெச்சில் பண்ணினாலும்
வேணவே ஒருவர் செய்த நன்றி தன்னை
மிக மறந்து கொடுமைகடான் விளம்புவோர்க்கும்,
பேணவே சபைதனிலே சொன்னப் பேச்சுப்
புரண்டோர்க்குங் காசமது பிறக்குந்தானே''.

என்பவற்றால் அறிக.

(யூகி சிந்தாமணி; சி.ம.)

### நோய் எண்.

''இருமல்நோய்'' பனிரெண்டு வகையாக யூகிமுனி பிரித்துள்ளார். அவையாவன :—

1. மந்தார இருமல் (மந்தாரகாசம்).
2. பக்கமந்தார இருமல் (பக்க மந்தாரகாசம்).
3. சுடர் இருமல்.
4. வளி இருமல்.
5. தீ இருமல்.
6. சுவாச இருமல்.
7. இரத்தகாசம்.
8. ஐய இருமல்.
9. பீனிச இருமல்.
10. வளியழல் இருமல்.
11. அழலைய இருமல்.
12. முக்குற்ற இருமல், என்பனவாம்.

(மேற்கோள்)

1. ''தானான காசமது பனிரெண்டாகுந்
தாக்கான மந்தாரகாசத்தோடு
பானான பக்கமந்தாரகாசம்
பாங்கான சுடர்காசம் வாதகாசம்
பேனான பித்தமாங் காசத்தோடு
பேர் பெரிய சுவாசகாசத் தோடொக்க
ஏனான இரத்த மாங்காசத்தோடு
இரைப்பான சிலேத்தும காசந்தாமே

''ஆகின்ற பீனிசத்தின் சுவாசகாசம்
அழிவாத பித்தத்தின் காசமாகும்
போகின்ற பித்த சிலேத்தும காசந்தானே
புகழ் பெரிய தொந்தமாங் காசத்தோடு
தேகின்ற காசமது பனிரண்டாகும்
தெளிவாக யிதனுடைய செயலைக் கேளாய்
வேகின்ற வதிகமாம் புகையினாலும்
மீறுகின்ற பாணத்தால் மிகுக்குந்தானே''.

என்பதினாலும்,

(யூகிகந்தாமணி ; சி.ம.)

(வேறு)

3. ''வருமரசன் மாமந்திரி தளவான் மாருதி தீயாகும
பொருதுறுபித்த கபத்தொடு முப்பிணி
பொருமிய காசமொடு,
மருவிடு மந்தாரத்துடன் பக்கம் மந்தாரஞ் சுடரும்
யிரைப்பொடு செந்நீர்ப் பீனிசம்
மன்னீரிருமலெனப் புகல்வர்''.

(கை எழுத்துப் பிரதி).

என்பதினாலும் ''காசம்'' என்னும் இருமல் நோய் பனிரெண்டு வகை என அறிகிறோம்.

இருமல் நோயில் காணும் முற்குறி குணங்கள்—

1. தொண்டை புண்பட்டது போல் நோதல் ;
2. தொண்டை சிவத்தல் ;
3. தொண்டையில் முள்ளால் குத்துவது போன்ற உணர்ச்சி.
4. குரலோசை கம்மல் ;
5. மூக்குநீர் பாய்தல் ;
6. மார்பு வற்றலுடன் நோதல் ;
7. சூடுள்ள பொருள்களில் விருப்பம் ஆகிய குறிகுணங்களை உண்டாக்கும். (சித்த மருத்துவம்).

8. அன்றியும், இருமல், நெஞ்சினுட்புறம் நமை ; ஈளை விழுதல் ; அனல் மூச்சு வாங்குதல் ; சத்தம் மாறுபடல் ; சிறிது வாந்தி ; முதுகு விலா இவைகள் நோதல் உணவு வேண்டாமை ; உடல் கருத்தல், வற்றல், குளிர்ந்திருத்தல், வலித்தல், துக்கம், வெம்மை, திமிர், இளைப்பு, கண் மஞ்சளித்தல், முகம் வீங்கல்,

மூகம் வெளிறல், தாது நட்டம், நாற்றத்துடன் கருமை, செம்மை, மஞ்சள், நீலம், பச்சை என்னும் ஐந்து நிறங்களில் ஒவ்வோர் காலத்தில் ஒவ்வொரு நிறமான இரத்த வாந்தி காணல் ஆகிய குறிகுணங்களையும் காசநோயின் முற்குறி குணங்களென நூல்கள் கூறுகின்றன.

(கையெழுத்துப் பிரதி.)

(மேற்கோள்.)
காசநோயின் முற்குறி குணங்கள்

''இருமலொடு கண்டத்தினுட்புறம் நமைபற்றி
ஈளைவீழ்ந்தழல் மூச்சதாய்,
இயல்பான தொனிமாறித் தொண்டைக் கட்டாகியே
எழிலகல நொந்துலர்ந்து
வருமற்ப வாந்தியுடன் வென்விலா வலிகொண்டு
வாயுணவு வேண்டாததாய்
மானவுடல் வற்றிக் கருத்தே குளிர்ந்து
மிகவலிகொண்டு துயரமெய்தி
மருவுறா வெப்பமொடு திமிரிகளைப்போடுகண்
மஞ்சளித்திட்டு முகமும்
வாடாது வீக்கமாய் வெளிரியே யாண்மையது
மாறிமிகு நெடு நாற்றமாய்
பொருவு மைன்னிறமுற்ற குருதி மேனோக்கிப்
பொருந்துவது காசமென்னப்
புகலுருஉ!மிரும நோய் முற்குறி எனப்
புகல்வர் புவி மீதறிந்துணர்வையே!''

எனபதனாலறிக!

இருமல் நோயின் பொதுக்குறி குணங்கள்.

திடீரென ஏற்படும் குளிர், காற்று, மழை, பனி, சுரம் அம்மைநோய் இருமலையும் தும்மலையும் உண்டாக்கக்கூடிய புகைகளாகிய இக்காரணங்களால் ஐயக்குற்றம் மிகுந்து, மூக்கு, தொண்டை, மூச்சுக்குழாய் இவைகளில் வெப்பையுண்டாக்கி மூக்கில் நீர் வடிதல், கண் சிவத்தல், தொண்டை கட்டல், சுரங் காய்தல், தலை கனத்தல் எனனும் முற்குறி குணங்களைக் காட்டி, மார்பு நொந்து இருமலை விளைவிக்கும். வாய் ஓயாதபடி, இருமச் செய்யும். கோழையும், சளியும் வெளியாகும். தக்க மருத்துவம் புரியின் இந்நோய் குணமாகிவிடும்.

சில வேளை மீண்டும் மீண்டும் இருமல் நோய் வருமாயின், இது நாட்பட்ட இருமலாகி ஓயாமல் இருமுதலும், கோழை கடினப்பட்டு நுரையுடன் வெளியாதலும் ஏற்படும். அன்றியும், படுக்கை பொருந்தாமை, மூச்சுத் தடுமாறல், உடல்வன்மை குறைதல், முகம் கருத்தல், உதடு நீலநிறமாதல் முதலியனவும் காணும். நோய் முதிர முதிர சளியானது சீழ் போலவும் நாற்றத்துடனும் வெளிப்படும். மார்பு நடு பருத்து, அடியும் நுனியும் குறுகிக் காணும். மூச்சுத் திணரும். நாள்கள் செல்லச் செல்ல ஐயமின்றி உடல்வன்மைக் குன்றி, தாதுக்கள் வற்றி, இருமலும் சளியும் ஆயாசமும் அதிகமாகிக் கொல்லும்.

முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

குளிர்ந்த காற்று, மழை, பனி இவைகள் தாக்கலாலும், குளிர்ச்சி தரும் பொருள்களை மிகுதியும் உண்பதாலும், ஐயம் தன்னளவில் மிகுந்து தொண்டை, மூக்கு, காது, மார்பு, மண்டை இவைகளில் தங்கி வெப்பமுற்று மேல் நோக்குங்காலைத் தூண்டி இருமல் நோயைப் பிறப்பிக்கும் நுரை ஈரல், நுரையீரல் குழை (கபாசயம்) இவையாவும் சிவந்து வீங்கிக் கோழை மிகுந்து மூச்சு வீடுவதற்கும் வாங்குவதற்கும் தடையுண்டாகும், உடல் வன்மை குறையும்.

நாடிநடை.

1. ''பாங்கான வாதத்தில் சேத்துமநாடிப்
பரிசித்தால் திமிர் மேவு முளைச்சலாகும்,
தீங்கான யிருமலுடன் சன்னி தோடம்
சேர்ந்தவிடம் வெடிசூலை யிருத் ரோகம்
வாங்காத ஈளை மந்தாரகாசம்
வலியுடனே புறவீச்சுள் வீச்சு வீக்கம்
ஓங்காணுஞ் சுரமுடனே சுவாசாகசம்
உண்டாகும் வெகுநோய்க் குமுறுதிதானே''.

2. ''சிலேத்தும நாடிதானே தெளிவொடு
நிற்கில் தீதாம்
சிலேத்தும மந்தம் பற்றில் சேர்ந்திடும்
கோழைவாயு
சிலேத்தும மிகுந்து நின்றால்
செப்பிடு மரணந் திண்ணம்
சிலேத்துமத் திரட்ட தெல்லாந
தெளிவொடு கண்டு கொள்வே'',

3. ''ஐயமே கதித்த போது யணுகியே
வியாதி யுண்டாம்
ஐயமே கதித்தபோது யறிந்
திடுந்தோடமாகும்
ஐயமே கதித்த போதுவைய
மாஞ் சன்னியாகும்
ஐயமே கதித்தபோதவ்வையமே
மெலிந்து கொல்லும் ''.

4. ''ஐயமே கதித்தபோது யறியவே
பொருமல் காணும்
நையு மந்தாரசாசம் நளிர்
குளிர் விக்கல் சத்தி,
செய்யுமா மூர்ச்சடைப்பான்
தீதுறு காசரோகம்
தொய்யுமா பிளைப் புகாசந்
தோன்றுமென்றரன் சொன்னாரே''.

5. ''பண்பான பித்தத்தில் சேத்துமங்கூடிப்
பரிசித்தாலத்தி சுரமி ளைப்பு ஈளை
கண்காது நயன மலம் நீருமஞ்சள்
கனவயிறு பொருமல் மஞ்சள் நோய் கண்ணோவு,
உண்போது மறுத்தல் ரத்த விட்புருதிதானு
முளமாந்தை பீனிசமும் ரத்த வீக்கம்
பண்பான காமாலை சோகை வெப்பு
நணுகி வந்த பலபிணியுங்காணுந்தானே''.

6. ''தானமுள்ள சேத்துமந்தானிளகில் வெப்புச்
சய மீளையிருமல் மந்தாரகாசம்
ஈனமுறுஞ் சன்னி விடதோடம் விக்கல்
இருத் ரோகங் கரப்பான் விரணதோடம்
மானனையீர் சூலை திரள் வியாதி வீக்கம்
வருஞ் சத்தி சுவாசம் நெஞ்சடைப்பு தூக்கம்
ஏன முறுங்காமாலை பாண்டு சோபை
ஏழுசுரங்கள் பல திறக்கும் விட முண்டாமே''.

7. ''உற்பவித்த கபமீளை காசரோக
முற்றிடிலோ சிலேத்துமந் தான் மீறிக்காணும்''

8. ''கபமல்லாது காச சுவாசம்
வராது.''

9. ''இடமான சேத்துமத்தில் பித்தநாடி
எழுந்தணுகில் விடமுடனே வீக்கமுண்டாம்
திடமான குளிர் காய்ச்சல் மஞ்சள் நோவுஞ்
தேகத்திலுளைச்சலீளை யிருமல் வாந்தி,

விடமான நெஞ்சடைப்பு சுவாசம் விக்கல்
வெகுசுரமும் நாவரட்சி பாண்டு ரோகம்
அடமான குவளை ரத்தம் அதிசாரந்தான்
அணுகி வெகுபல நோய்க்குந்தடங் கண்டாயே.'

10. ''கண்டாயோ சிலேற்பனத்தில் வாதநாடி
கலந்திடுகில் வயிறு பொருமல் கனத்த வீக்கம்
உண்டாலோ ஓங்கார சத்தி விக்கல்
உறுதிரட்சை வாய்வு வலி சன்னி தோடம்
விண்டாலே யிளைப்பிருமல் சோகை பாண்டு
விடபாகம் விடசூலை பக்கவாதம்
திண்டாடுநாசிகா பீடங் கக்கல்
சிரநோய்கள் பலவும் வந்தி சிக்குந்தானே.''

11. ''பித்தமே செனித்தாற் சூடு பெலத்துட னுலரச் செய்யும்
பித்தமே மிகுந்தாலீளை யிருமலும் பெலத்து நிற்கும்,
பித்தமே மிகுந்துதானாற்பெலன் குறைந்துடம் புழுத்தும்,
பித்தமே திரட்டி நூலிற் பேசினார் பெரியோர் தாமே.'

12. ''உற்றிடும் ஐய நாடி ஓங்கியே துடித்து நின்றால்
பற்றிடு மிருமலிளை பதறியே யிளைப்புண்டாகும்
மெத்தவே கோழை வாயு மிகுந்திடும்..........

இதன் பொருள் :—வளி ஐயம்; ஐயமிகுதி; அழலையம்; ஐயழல்; ஐயவளி; அழல்மிகுதி ஆகிய இக்குற்றமாறுபாட்டால் இருமல் உண்டாகும்.

## இருமல் நோய்ப் பிரிவுகளின் தனித்தனிக் குறி குணங்கள்,

### 1. வளி இருமல்.

உணவு முதலிய வேறுபாடுகளால் வளிக்குற்ற மிகுந்து, தொண்டையிற் புண்பட்டது போற் சிவத்தல்; காது நோய், காதடைப்பு; மார்பு நோய் மூச்சு வாங்கவும், விடவும் முடியாமை, தொண்டையை அடைத்தது போல் நோதல்; பெருமூச்சு விடல், விலாப்பக்கம் வலி; வாந்தி வருவது போன்ற உணர்ச்சி; வாய் ஓயாதபடி இருமலை உண்டாக்கி நுரையுடன் கருநிறமுங் கூடிய கோழையையும் இருமி உமிழச் செய்யும்.

(மேற்கோள்)

''சொருபமாய் நெஞ்சுதனிற் றினவு முண்டாஞ்
செவிதனிலே யிரைச்சலுமா மரோசகந்தான்
மருப மன்னிக் கீழ்மூச்சு மார்பளவதாகி
மன்னியே நெஞ்சளவா யுழலுஞ் சுவாசம்,
நிருபநேர்படும் பிரம ரந்திரத் தன்னில்
நெய்த்துதுன் மாமிசங்கள் மிக வளர்ந்து,
துருபமாய் மூச்சதிக மிருமல் கோழை
தூய்தானவாத காசத்தின் சீரே.''

(யூக சிந்தாமணி)

(வேறு)

வளிக்குற்றத்தை மிகுதிப்படுத்தும் உணவாதி செயல்களால் வளிக்குற்றம் மிகுந்து, மார்பு, கண்டம், முகம் இவைகளில் கடுப்பும், பெருமூச்சும், விலாப்பக்கம், தலை, நீர்க்குண்டிக்காய், இவற்றில் குத்தலும், காதிரைச்சல், நெஞ்சிலும் மார்பிலும், வறட்சியும்; நெய்ப்புடன் கெட்ட சதை பிரமாந்திரத்தில் வளர்தல் (அதாவது உச்சிக் குழிக்கு நேர் இலக்காகிய தொண்டையில்); அரோசகம், வயிற்றுவலி, நெஞ்சிற்கோழை கட்டி இருமிச் சிறிது சிறிதாகக் கோழை இருமலுடன் வெளிப்படல்; நெஞ்சு புண்ணாதல், இரத்த வாந்தி, கண், காது உடல் இவை நோதல் மனக்கலக்கம், தொனி, மாறல், கீல்கள் நோதல், புகைந்து புகைந்து இருமல், மயிர்க் கூச்செறிதலாகிய குறி குணங்கள் வாத காசத்தைக் குறிக்குமென்க.

(மேற்கோள்)

''காலையுறு பொருளுண்ண வாதமீறுங்
காரணத்தாலுடலிலது மீறிக்காட்டி,
மேலங்கங் கடுத்துமிக மூச்சுமாகி
விலாசிரசு குண்டிக்காய்க் குத்தலாகி,
காலுலகம் போற்காதிரைந்து தினவு நெஞ்சிற்
கண்டு கண்ட மார்பு புகைவற்றப் பண்ணிச்
சாலவுமே கிரமரந்திரத்திற் கெட்ட
தசை நெய்ப்பாய் வளர்ந்தரோசக முங்காணும்.''

2. ''கண்டுமே யகடுவலி மிகுதியாகிக்
கட்டியாய்க் கோழையது யிறுகி நெஞ்சில்,
விண்டுவருஞ் சிறிதளவா யிருமலோடு
வெளிப்படுமே செந்நீரு மிடறு புண்ணாம்,
அண்டுமே கண் காது முடல் கடுப்பு
ஆகாத மனக் கலக்கமீன வோசை
புண்டிருக்குங் கணுக்கள் நொந்து
புகைந்து மயிர்க் கூச்சுவளி காசமாமே.''

(கை எழுத்துப் பிர...),

என்பதினாலறிக!

## 2. அழல் இருமல்

அழல் குற்றத்தை அதிகப்படுத்தும் உணவாதி செயல்களால் அழல் குற்றமிகுந்த நிலையில் குளிர்ச்சியான பொருள்களை உண்பதால் இருமல், உண்டாய், இனிப்பு அல்லது உப்புச்சுவையுள்ள வாந்தி, தலைவலி, உடல்வலி, சுரம் தாகம், இருமி இரத்தம் கக்கல், உடல் வறண்டு இளைத்தல், உணவில் வெறுப்பு, மயிர்க் கூச்செறிதல் புளியேப்பம், மனம் தடுமாறல் ஆகிய குறிகுணங்களை யுண்டாக்கும்,

(சி.ம.)

மேற்கோள்.

'' சீராக இருமல் மிகப் புரட்டலாகித் தித்தித்து உப்புரைக்குஞ் சர்த்தி யுண்டாம் ;
தாரகத் தலையுடம்புதான் வலிக்குந் தாகித்துக் குரந்தும்மும் ரத்தம் வீழும்,

ஆராகவங்கந்தான் மிக விளைக்கும் யன்னந்தான்
செல்லாமற் புளித்தேக்காகும்,
மாராக மயிர்க் கூச்சுஞ் சுரமு முண்டாம்
மதிமயங்கும் பித்தகாசத்தின் வன்மை.''

(யூகி சிந்தாமணி)

(வேறு)

குத்திக்குத்தி இருமுதல்; குரற் கம்மல்; மஞ்சள் நிறக் கோழை கைப்புச் சுவையுடன் வெளியாதல்; உடல் இளைத்தல்; வாய் கைத்தல்; நகம் மஞ்சளித்தல்; பார்வை மங்கல், உடலிலும், தலையிலும் வலி; வாய் இனிப்பாகவும், உப்பாகவும் காணல்; மிகு தாகம்; உணவு குறைதல்; மனம் தடுமாறல்; மயிர்க் கூச்செறிதல்; செரியாமை; புளியேப்பம்; இரத்தவாந்தி; சிறு நீர் எரிச்சலாக இழிதல்; சுரம் ஆகிய இக்குறி குணங்களுண் டாயின் பித்தகாசத்தைக் குறிக்கும்.

(மேற்கோள்)

''குத்தி யிருமிக் குரல் கம்மிக்
கோழை கசந்து மஞ்சளித்துக்
குடம்பை யிளைத்து வாய்கைப்பாய்க்
கோடு நகங்கள் மஞ்சளித்து
மெத்தக் கம்மிய பார்வையுமாய்
மெய்யிற்றலையில் வலி யுண்டாய்,
மேவுஞ் சுவைகளினிப் புப்பாய்
மிகுந்ததாக முணவருகிச்
சித்தம் வேறாய் மயிர்க் கூச்சாய்ச்
செரியாதுணவு புளித்தேப்பம்,
செந்நீர் வாந்தி யடிக்கடிக் காய்ச்
சிறுநீரெரிவா யிழிந்து சுரந்
தொத்தி மிகவே வருத்தி வருந்
தோகாய்ப் பித்தகாச மெனச்
சொல்லாய்ப் புவியோரறிந்திடநீ
சிகிச்சை செய்யுந் துணிவாயே.''

என்பதினாலறிக.

## 3. ஐய இருமல்.

உணவ்வர்தி செயல்களால் ஐயம் மிகவும் கேட்டைந்து முகம் ஊதி மூக்கு நீர்வடிந்து, தொண்டை புண்ணாகி, மார்பு நொந்து பின்பு இருமலை யுண்டாக்கும். வாய் ஓயாது இருமும், கோழை வெளுத்துச் சீழ்போலும், நாற்றத்துடனும் வெளியாகும். பெருமூச்சு, அடிவயிறு நோதல், வயிற்றில் காற்று நிரம்பல்; சுரம்; மனக்கலக்கம், உடல் இளைத்தல்; வாந்தி; உடல் வலி முதலிய குறி குணங்களுண்டாம்.

(சி.ம.)

(மேற்கோள்)

''சாற்றவே யிருமலொடு இளைப்பு முண்டாய்ச்
சார்ந்த பீளையு மூச்சு மிகுந்து வாங்கும்
ஆற்றவே யடிவயிறு மந்தம்பற்றி அழகாகு முருவழித்து
உடம்பு வற்றும்.

சேற்றவே சுரமொடு தியக்க முண்டாய்ச்
சித்தமே மிகக் கலங்கி வாந்தியாகித்
தீற்றவே சிறு கடுப்பாற் தேகமெங்குஞ்
சிலெட்டுமத்தின் காசமென்றே செப்பலாமே.''

(யூகி சிந்தாமணி)

(வேறு)

ஐயமிருமலில் மார்பிலும், தலையிலும் வலி; நெஞ்சுள் ஏதோ ஒரு பொருளைத் தடவியது போன்ற அருவருப்பு; வெளுப்பாகக் கோழை கக்கல்; மார்பு நொந்து இருமுதல்; நாவிற்சுவையின்மை; உடல் மினுமினுத்தல்; மயிர் சிலிர்த்தல்; அசதி; இரத்தாசயம் இறுகப் பிடித்தது போலிருத்தல்; மூக்கில் நீர் வடிதல்; உடல் வீங்குதல்; சிலசமயம் வற்றுதல்; பெருமூச்சு; சுரம்; வாந்தி, மனமருட்சி; வயிறு மந்தத்துடன் நோதல்; சித்தப்பிரமை; கண்களிற்பீளை சாரல்; கண் ஒளி மங்கல் ஆகிய இக்குறி குணங்களைக் காட்டும்.

(மேற்கோள்)

''ஐயத்தொடு காசப்பிணி யகிலத் துரை செய்யின்
யரிதாகியதலை நோவோடு வகலந்தனினோவுள்,
பையப் பொருளெதுவோ தடவின போலருவரு.
பகர் கோழை வெளுப்பாகவே கக்கல் பருமார்பில்,
நொய்யச் சிறுநோ வெய்திடு மிருமல் சுவை சனம்
நுவலாகமினித் தேமுடி யெதிர் நின்றிடலசதி,
உய்யத்திகழ் ரத்தாசய மிறுகப் பிடித்ததுபோல்
ஓவாமலே நீரோடிடு நாசித்துளை யதனில்.''

''உட லூதிடு மோர்காலுடல் வற்றிப் பெருமூச்சு
மோயாது சுரம் வாந்தியு முழலுந்தியக் குற்றே,
கடினத்துடனடிகுக்கியில் மந்தத்துடனோதல்,
களறப்பய மெய்தும்படி சித்தப் பிரமையாதல்,
தடிதுன்றிய கண்பீளை சொரிந்தெயொளி மங்கல்
சார்பாமிவை காணுங்குறி யாமென்பர்கள் பிணியாம்
இடிவர்க்க மொழிந்தே தெளிவெய்தும்படி யமுதம்
வெருவாதருள் கைகூடிடு மீதுண்மை யீதுணரே.''

(கையெழுத்துப்பிரதி)

என்பதனாலறிக!

## 4, வளி அழல் இருமல்.

இதில் தொண்டை உலர்ந்து புண்பட்டு வாய்ஓயாத இருமல்; இரத்தம் வெளியாதல்; காதடைப்பு; காதிரைச்சல்; செரியாமை; பேதியாதல்; வயிறுப்பல்; மார்பெலும்பும், முதுகின் தண்டும் நோதல்; பெருமூச்சு; மொழி தடுமாற்றம் உடல் வெளுத்தல்; உடல் வீங்கல் முதலிய குறி குணங்கள் காணும்;

(சி.ம.)

(மேற்கோள்)

''சூட்டிட்டுக் காறையிலே
துளிக்கும் ரத்தஞ்
சூட்சமாய்க் காதுதனி
லிரைச்சலுண்டு,
ஆட்டிட்ட இருமலொடு
யசதியாகும்

அடிக்கடிக்கு வாயுதான்
மிகவே மீறும்
முட்டிட்ட முதுகுதண்டு
குடைச்சலுண்டாம்
மூச்சோடு சந்தாபம்
மொழி மாறாட்டம்,
வாட்டிட்ட தேகந்தா
னூதிக்கொள்ளும்
வாதபித்த காசத்தின்
மார்க்கந்தானே.''

(யூகி சிந்தாமணி)

(வேறு)

வாதபித்த காசநோயில், இருமிக்கனைத்துக் காறி உமிழும் பொழுது எரிச்சலுடன் ரத்தம் துளித்துளியாக விழல்; காதிரைச்சல்; அசதி; மூச்செரிதல்; வெப்பு; உடல் ஊதல்; முதுகந்தண்டெலும்பு குடைதல்; வாய்மொழி தடுமாறல்; வாயு அதிகம் பரிதலாகிய இக்குறி குணங்கள் தோன்றும்.

(மேற்கோள்)

'' இருமியே கனைத்துக்
காறிடும் பொழுதில்,
யெரிந்திடுந் துளித்துளியாக
குருதியே சிந்திக் காதிரைந் தசதி
கொண்டுமூச் செரிந்து சந்தாபம்,
பருந்துடல் முதுகந்தண்டது குடைந்து
பகர்மொழி மாறியேவாயு,
பெருகியே பரியுமிதனையே வாத
பித்தமாங் காசமென்பாரே.''

(கையெழுத்துப்பிரதி)

என்பதினாலறிக.

### 5. அழலையம் இருமல்.

இதில், தொண்டையுள்ள (நெஞ்சுனுள்) தினவு; உடல் நோவு; குரற் கம்மி இருமுதல்; உடல் இளைத்தல், கோழை மிகுதியாக வெளியாதல்; பூமி சுழல்வதுபோல் தோன்றல்; பெண்கள்மேல் இச்சை; உடல் வெளுத்தல் அல்லது பீர்க்கம் பூப்போல உடல் மஞ்சளித்தல் ஆகிய குறி குணங்களுண்டாம்.

(சி. ம.)

(மேற்கோள்)

'' மார்க்கமாய் நெஞ்சுதனிற்
றினவுண்டாகும்
வடிவமெலாந் தான்வலிக்கு
மிருமலுமுண்டாம்,
தார்க்கமாங் குரற்கம்முஞ்
சடமிளைக்குஞ்
சஞ்சலிக்கும் பூருவத்திற்
சதியை நாடி
பீர்க்கமாய் பூமியெலாஞ்
சுழற்றல் போலாம்,
பெண்பார்வை பார்த்தவுடன்
புளகமுண்டாம்
பீர்க்கம்பூப் போலுடம்பு
மஞ்சளிக்கும்
பித்தசிலேட்டும காசப்
புதுமைதானே. ''

(யூசி சிந்தாமணி)

(வேறு)

பித்த சிலேத்தும காச நோயில், நெஞ்சினுள் தினவு ; இருமல்; குரற கம்மல் ; உடல் மஞ்சளித்தல் ; உடல் இளைத்தல் ; உடல் நோதல் ; துக்கம் ; பெண்கள் பேரிலிச்சை ; பூமி சுற்றுவதுபோற் காணுதல் ; முன் செய்த வினையை நினைத்துத் துயரெய்தல் ஆகிய இக்குறி குணங்களாம்.

(மேற்கோள்)

'' அக்கது நமையோடிருமியே
கம்மி
யரிசன நிறமதாயுடலம்,
மிக்கவே யிளைத்து வலியுடன்
துயரம்
மேவிடு மாதர்மேலிச்சை,
தக்கவிப்பூமி சுற்றுதல்
போலாம்

தான்முன் செய்கொடுமையை
நினைக்கும்,
சிக்கவிக் குறிகளெய்திடில்
பித்த
சேத்தும காச மென்றுரையே ."
(கையெழுத்துப் பிரதி).

என்பதினாலறிக.

6. முக்குற்ற இருமல்.

மூன்று குற்றங்களும் ஒன்று கூடிவரும் நோயாதலால், இந் நோயில் மிகுதியான துன்பங்களுண்டாகும். இடைவிடாது இரு மிக் கோழை மிகுதியாய் வெளியாகும். கோழை மேக நிறத்தை ஒத்திருக்கும். குருதியும் வெளியாகும். அறியாமை, வயிறு இரைந்து பேதியாதல், உடல் வெதும்பல், எரிச்சல், நீர் வேட்கை, வாய்சுவை அறியாமை, உடல் நோதல், மயக்கம், வாந்தி, தன் னிலை மாறுபடல் முதலிய சன்னிபாதக் குறி குணங்களனைத்துஞ் சேர்ந்து தோன்றும்.

(சி.ம.)

(மேற்கோள்)

" புதுமையாய்ப் புரண்டுமே
யிருமல் குத்திப்
பூங்கமுகினிறமாக ரத்தம்வீழும்
வெதுமையாய் வெதும்பலோடு
எரிவுதாகம்,
மிக்கதோரருசி யொடுவயிறு
பேதி
பதுமையாய் சரீரமெங்கும்
படுக்கைகூடாப்
பருத்துமே வுடம்பூதிப்பாண்டு
வாகும்
கதுமையாய்ச் சரீரமெங்கும்
கடுப்புண்டாகுங்
கடிது தொந்த காசத்தின்
காட்சிதானே.".

(யூகி சிந்தாமணி)

(வேறு)

முக்குற்ற காசநோயில் வயிறு புரட்டல் ; குத்திக்குத்தியிருமல் ; பாக்குப்பழம் நிறத்தையொத்த செந்நீர் வீழல் ; பேதியாதல் ; படுக்கை பொருந்தாமை ; உடல் கடுத்து ஊதல் ; எரிச்சல் ; சுரம் ; தாகம் ; அருசி ; பாண்டு ; நோய் உண்டாதலாகிய இக்குறி குணங்களாம்.

(மேற்கோள்)

"புரட்டலாய்க் குத்தியிருமியே
கமுகின்
பொலிகனி நிறமதை யொத்துக்
குருதியேவீழ்ந்து பேதியாய்ப்
படுக்கைக்
கொண்டிடாதுடல் கடுத்தூதிச்
சுரமுடனெரிவு தாகமு மருசி
தோன்றியே பாண்டுநோயாகில்
திரமுடனிதனை முத்தோடகாசம
தாய்ச்
செப்புவர் மருத்துவ நூலவரே."

(கையெழுத்துப் பிரதி)

என்பதினாலறிக.

7. மந்தார இருமல் (குளிர் இருமல், மந்தாரகாசம்)

இந்நோய், மழை, மப்பு சூழ்ந்து பூமி குளிர்ந்த நிலையில், மக்களின் உடலிலும் ஐயமிகுதிப்பட்டு மூக்கு, தொண்டையிவை சிவந்தும் ; மூக்கு நீர்வடிதல், மார்பு நோதல், இருமலை யுண்டாக்கலாகிய குறி குணங்களை பிறப்பிக்கும். மந்தாரத்தினால் வரும் நோயாதலால் இதற்கு "மந்தார காசம்" எனப் பெயராயிற்று.

அன்றியும், இடைவிடாத தும்மல்; பெருமூச்செறிதல்; மூச்சு தடைப்பட்டு வெளியாதல் ; சிலவேளை மூச்சு பாம்பு சீறலைப் போல் வெளிப்படல், கழுத்து, முகம், காது இவை நோதல் ; வியர்த்தல், கோழை மிகவும் அதிகமாக வெளியாதல் ; சுவாசகாச நோயிலுண்டாம் இரைப்பு முதலிய குறி குணங்களையும் இந்நோயில் காணலாம்.

(சி. ம. ; கையெழுத்துப் பிரதி).

(மேற்கோள்)

1. " மந்தார காசமழைமப்பு மார்பு நெஞ்சு,
தந்தானமீளை தனியடைத்த குத்திருமல்,
தும்மல் வலி நாசி நீர் சுரமினைப் பாமசதி
பொம்மிவரு மென்றுபுகல்."

(சி. ம. கையெழுத்துப் பிரதி).

2. " தானான தூயதோர் நாசிதன்னில்
சலநோய் நீர்தான்விழுந்து
தும்மலுண்டாம்,
மானான மார்பு நெஞ்சடைத்து மூச்சு
வலுவாகப் பாம்புபோற் சீறலாகும்,
கானான கண்டமொடு முகமுங் காதுங்
காயமதுங் கசிவாகி வியர்வையாகும்
ஏனான யிருமலொடு கோழை கம்மல்
இரைப்பாகு மந்தார காசமாமே."

(யூ. கி. சிந்தாமணி).

குறிப்பு.—" மப்பு " என்றால் மழை பெய்வதற்குரிய நீர் கொண்ட மேகம் தோன்றியபொழுது என்பதேயாகும்.

## 8. பக்க மந்தார இருமல்

இந்நோய், முன்நிலவிலும், பின்நிலவிலும் வரும் நோயாதலால் " பக்க மந்தாரகாசம் " என வழங்கலாயிற்று.

முன்னிலவு காலத்தில் தோன்றி சின்னாட்கள் இருமல், இழுப்பு வயிறு பொருமல், மூக்கில் நீர்பாய்தல், தொண்டைக் கம்மலாகிய குறிகளைக் காட்டி, சின்னாட்கள் கழித்து குணமடைந்து மீண்டும் பின்னால் வரக்கூடிய முன்நிலவு காலத்தில் முன்போல் இந்நோய் தொடங்கும்.

இதேமாதிரியாகப் பின்நிலவு காலத்திலும் சிலருக்கு முறையாக வருவதுண்டு. சூரிய சந்திரர்கள் குறித்த காலத்தில் தோன்றுவது போல் இந்நோயுங் காலந்தவறாது தோன்றும்.

(சி. ம.)

(மேற்கோள்).

" காசமாயிருமலொடு யிளைப்புமுண்டாய்க்
கட்டியே நெஞ்சதனிற் கம்மலாகும்,
வாசமாய் வயிறதுவும் பொருமிக்கொள்ளும்
மகத்தான மூக்கு நீர்ப்பாய்ச்சலாகும்,
ஆசமா யமரபட்சம் பூர்வபட்சத்
தருகாமையானவுடன் சுவாசமீறும்,
ஈசமாயிரைப்போடு எரிமூச்சாகும்
இக்குணந்தான் பக்கமந்தாரகாசம். "

(யூகி சிந்தாமணி).

(வேறு)

இந் நோயானது முற்பக்கம், பிற்பக்கமாகிய வளர்பிறை தேய்பிறை முடிவு எய்துகிற காலத்தில் சுவாச மீறுதலுடன் இருமலுமுண்டாகும் ; வயிறு பொருமும் ; குலை வலிக்கும் ; தொண்டைக் கட்டுவினால் குரற் கம்மும் ; மூக்கு நீர் பாயும் ஆகிய இக் குறி குணங்கள் காணின் " பக்க மந்தாரகாசம்" எனப்படும்.

(மேற்கோள்).

" பக்கமிரண்டும் பருவமடைத்தி
பாரு மூச்சிருமல்,
குக்கியும் விம்மிக் குலையும் வலித்தே
குரலுங் கம்மியபின் ,
எக்கிய மூக்கினில் நீரது பாய்ந்திட
எய்துங் குறியதனைப்,
பக்கமந் தாரவிருமலெனப் பெயர்
பகர்-வர் முனிவரே ".

(கையெழுத்துப் பிரதி.)

என்பதினாலறிக,

9. சுடர் இருமல்.

இந்நோய் பிள்ளை பெற்ற பின் தாய்க்கு வரும் நோயாம். பிள்ளையைப் பெற்று மெலிவடைந்த காலத்தில் ஐயக் குற்றம் ஏற்படின், அக்கபம் தொண்டை, மார்பு, மூக்கு இவற்றில் தங்கி, தொண்டையில் குத்தல், மூக்கு நீர்பாய்தல், தலை நோதல், மார்பு வலி, நீர்வேட்கை, சுரம், இடைவிடாத இருமல் முதலிய குறி குணங்களையுண்டாக்கி இழுப்பு (dyspnoea) பெருமூச் செறிதல், கண்கள், சிவந்து முட்டுதல் ஆகிய துன்பங்களை விளைவிக்கும்.

(சி. ம.)

(மேற்கோள்).

" பக்கமாய்ப் பிரசவித்த மாதருக்குப்
பாரமாய்த் தலைநோவுஞ் சுரமுண்டாகும்,
உக்கமா யுழலை யொடுதவனமுண்டாம்
உறுகழிச்சல் பொருமலொடு உப்பிசமாகும்
மிக்கமாயுள் மூச்சுமிடுக்கதாகும்
மிரளாமல் விழியிரண்டுந் தெளிவுமாகும்
துக்கமாய்த் துடிதுடிக்கு மகப்பெற்றோர்க்குச்
சுடர்காசந் தன்னுடைய சொரூபந்தானே. "

(யூகி சிந்தாமணி).

(வேறு)

சுடர்காசம் நோயானது பிரசவித்த மாதர்களில் தலைப்பாரம், சுரம், கண்கள், ஒளி வீசுதல், தாகம், சுவாசம் உள்வாங்கல், இருமல் வயிறு பொருமல், கழிச்சல், நாவறட்சி முதலிய துன்பங்களை விளைவிக்கும்.

(மேற்கோள்).

" சுடரிரு மற்குறி வயிறது பொருமல்
துலங்கு மிருகண்கள்,
கடுதாகத்துட் சுவாசங் கழிதல்
காயுந் தலைவலியாம்,
குடியாகக் கொண்டிடு மகவைப் பெறு
குமரிகளுக்கீதாம்
மடமானைப் பொருவிழியாய்த் தக்க
மருந்தினை ஈகுவையே. "

(கைஎழுத்துப் பிரதி).

பதினாலறிக !

10. இழுப்பு (சுவாச) இருமல் (சுவாசகாசம்).

இந்நோயில் மூக்கிலிருந்து வெளியாகும் காற்று அனல் வீசும், தொண்டை கட்டி, மூச்சு எலி கூச்சலிடுவது போல் ஒலிக்கும். மார்பில் கோழை கட்டி இருமலெழும், நோய் முதிரின் வெளியாகும் மூச்சு நல்ல பாம்பு சீறுவது போல் ஒலிக்கும், உணவு செரியா, வயிறுப்பும், இதனை " இசிவு இருமல் " எனவும் கூறுவர்.

(சி.ம.).

(மேற்கோள்).

"வன்மையாய்க் கோழைகட்டி இருமிவீழும்
மாநாகம் போலவே வாங்குஞ் சுவாசம்
திண்மையாய்ச் செருமலுண்டா மடிக்கடிக்குச்
சீரணமிலாமலே வயிறு மூதும்
நன்மையாய் நாசியது தணல் போலாகும்
நலிந்துடம்பு வற்றி வருங்குரலுங் கம்மும்
உண்மையாயுண்ணாக் கிலூறுங் கேணி
யுழந்துமே சுவாசகாசத்தினொப்பே."

(யூகி சிந்தாமணி).

(வேறு)

சுவாச காச நோயில் இருமும் பொழுது கோழை கட்டி கட்டியாய் விழுதல், பாம்பு சீறுதல் போல மூச்சு கடினமாகவும் அழலையாகவும் மூக்கின் வழி சீறி வருதல், உடம்பு இளைத்தல், உடல் வன்மை குறைதல், உண்ணாக்கு வரை நீர்வறளல், செரியாமை, வியர்வை, கட்டிபோல் வயிறு ஊதல் ஆகிய இக்குறி குணங்களை யுண்டாக்கும்.

(மேற்கோள்).

" கட்டியே கோழை இருமவே வீழ்ந்து
கச்செவி சீறுதல்போல,
முட்டியே மூச்சு வன்மையாய்ச் செருமி
மூக்கழல் எய்தியே யுடலம்,
வற்றியே மெலிந்துண்ணாவரை நீரும்
வரட்சீ ரணமிகு வியர்வை,
கட்டி போல் வயிறு மூதிடிலிரைப்பா
மீருமலென்றோதுவர் காணே "

(கை எழுத்துப் பிரதி).

என்பதினாலறிக !

### 11. குருதி இருமல் (இரத்தகாசம்).

இந்நோயில் கண்டத்தில் வேதனை, குரற் கம்மல், வாந்தியில் கபமும் செந்நீரும் கலந்து, மஞ்சள் நிறத்துடனேனும் அல்லது சுத்த இரத்தமேனுமுண்டாதல், வயிறு நோதல், கை காலோய்ச்சல், மார்பிலும் பக்கங்களிலும் ஊசியாற் குத்துவது

போல் நோதல், தாகம், குரல் மாறல், பெருமூச்செறிதல், மூத்திரம் இரத்த நிறமாயும், எரிச்லுடனும் இழிதல், கெண்டைச் சதை கீல்கள் இவற்றில் வலி, தாது நட்டம், பசியும், உடல் வன்மையும் கெடல், நா வழுவழுத்தல், நெஞ்சில் குறுகுறுவென்கிற கபத்தின் சப்தம், குளிர், முதுகு வலி, சுரம், உடல் இளைத்தல், வாய் வறளல் ஆகிய குறி குணங்களை உண்டு பண்ணும்.

(கை எழுத்துப் பிரதி.)

(மேற்கோள்)

" கண்டத்திலதிவேதனைக்குரற் கம்மலொடு
   கட்டு கட்டாயுதிரங்கபமுங்,
கலந்த நிற பீதமாய் வாந்தியல்லது சுத்தரத்த வாந்தி
   பண்டியுமுளைந்து கைகாலோய்ந்து,
மார்பதனிலூசி குத்துவதையொத்தே
   பக்கனோய்தாகங்குரன் மாறிச் சுவாசமா,
யிரத்தமூத்திர வெரிச்சல்,
   கண்டைகீல் நோயண்டராது பசியுடல் வன்மை கெட்டு,
நாவழுவழுத்துக்கிறுகிறுவென்றிடுமோதை
   நெஞ்சிற் பிறந்து நளிர் முதுகுவலி சுரமீதியே,
அண்டியுடல் வற்றி வாய்வறளல் செந்நீர்
   இருமலாகுமெனவே யுரைப்பர்,
ஆதிமுதலோதி வருவாகடத்திறமையதை
   யாய்ந்து பரிகாரமருளே. "

என்பதினாலறிக !

(கை யெழுத்துப் பிரதி.)

(வேறு)

இதனை " இரத்தகாசம் " என யூகி சிந்தாமணியிலும், " குருதி வாந்தி இருமல் " எனச் சித்தமருத்துவத்திலும் கூறியுள்ளதைக் கீழே கவனிக்கவும் :—

" குருதி வாந்தி இருமல் " அல்லது " இரத்தகாசம் ".

(சி.ம. யூகி சிந்தாமணி.)

இந்நோயில் தீக்குற்றம் மிகுந்து குரல்வளை, மார்பு, நீர்ப்பை இவ்விடங்களில் தாபிதத்தை யுண்டாக்கி, ஐயதத்தைப் பெருகச் செய்து குரற்கம்மலையும், இருமலையும் உண்டாக்கி அத்துடன், குருதியைக் கட்டி கட்டியாக வெளியாக்கும். விலாப்பக்கங்களில் நோதல், காலுங்கையுமோய்ச்சலாதல், வயிறு, கழுத்து நோதல், நீர்ப்புழை கடுத்தல், நீர் மஞ்சளித்தல், உடல் வெளுத்தலாகிய குறிகுணங்களையுண்டாக்கும்.

(சி. ம.)

(மேற்கோள்.)

"ஒப்பான குரற் கம்மியுதிரந்தானு
முருட்சியாய்க் கட்டிபோலு ருண்டு வீழும்,
விப்பான விலாவிலே மிக நோவாகி
மளமளென வயிறு கடுத்துளைச்சலாகும்,
கப்பான கால் கையுமோய்ச்சலாகுந்
கடுமூத்திரமெரிந்து மெத்த மஞ்சள் போலாம்,
தப்பான சரீரமது வெளுத்துக் காணுஞ்
சமிக்கும் ரத்தக்காசமென்றே சாற்றலாமே."

என்பதினாலறிக !

(யூகி சிந்தாமணி.)

## 12. பீனிச இருமல் (மூக்கடைப்பு இருமல்).

இந்நோயில், இருமுவதால், கோழை மீன் கவிச்சு நாற்றத்துடன் வீழல் ; ஆயாசம் ; இரைப்பு ; உடலிளைத்தல் ; மலமும் நீரும் கருநிறமடைதல் ; உணவு செல்லாமை ; உறக்கமின்மை, வயிறு பொருமலுடன் நோதல் ; உடல் குளிர்ந்திருத்தல் ; மூக்கு நீர்ப்பாய்தலாகிய குறி குணங்களுண்டாகும்.

(மேற்கோள்).

"இருமலால் வீழுங்கோழை மீன் கவிச்சாய்
இளைப்புடனிரைப்புடல்வற்றி
பெருமல நீருங் கருநிற மடைந்துப்
பேணுமூணுறக்கமுமின்றி
பொருமலாய் வயிறுஞ் சுருட்டியே நொந்து
பொருதியே யுடலமுங் குளிர்ந்து
பெருகு நீர் மூக்கின் வழி வரினிதனைப்
பீனிசவிருமலென்றுரைப்பரே."

என்பதினாலறிக !

(கை எழுத்துப் பிரதி.)

(வேறு)

"பீனிசகாசம்" என்னும் "மூக்கடைப்பு இருமல்" நோயில், இருமலொடு மிகுந்த கோழை வெளியாதல் ; உடலில் ஐயக் குற்றம் பெருகுதல் ; இளைப்பும் இரைப்புமுண்டாதல் ; வயிறு உப்பி ஊதிக்கொள்ளல் ; உணவு செல்லாமை ; உறக்கமின்மை ; எருவும் (மலம்) நீரும் கருத்துக் காணல், வயிறு வலித்தல் என்னும் குறிகுணங்களைக் காட்டும். கோழையானது மீன்கவிச்சு நாற்றமுளதாயிருக்கும்.

(சி. ம.)

(மேற்கோள்)

''செப்பவே யிருமலொடு கோழை வீழும்,
சேத்துமமாமிளைப் போடு இரைப்புண்டாகும்.
உப்பமாய் வயிறதுவு மூதிக்கொள்ளும்,
ஊணுறக்கமில்லாமலுலருந்தேகம்,
குப்பமாய் மலசலமுங்கறுகி வீழும் ;
கோழையிடகுணந்தான் மீன் கவிச்சடிக்குந்
துப்பமாய்ச் சுருண்டு வயிறு வலியுமாகும்
சுவாசபீனசமென்றே சூட்டிடாயே.''

என்பதினாலறிக !

(யூகி சிந்தாமணி.)

மேற்கூறிய பனிரெண்டுவகை இருமல் நோய்களின் தீரும் தீராதவை—

(a) மந்தார இருமல்,
பக்க மந்தார இருமல்,
சுடர் இருமல்,
அழல் இருமல்,
இழுப்பு (சுவாச) இருமல்,
குருதி இருமல் (இரத்தகாசம்)
குருதி—
வாந்தி (இருமல்)
பீனிச இருமல்.

} இவ்வேழுவகை இருமல் நோய்களும் எளிதில் தீருவனவாம்.

(b) வளி இருமல்,
ஐய இருமல்,
வளி அழல் இருமல்,
அழலையமிருமல்,
முக்குற்ற இருமல்

} இவ்வைந்து வகை இருமல் நோய்க... தீராவாம்.

(மேற்கோள்)

வெண்பா.

''மந்தாரம் பக்க மருவுஞ்சுடர் பித்த
பிந்தாமிரைப்பு செந்நீர்ப் பீனிசமே —பிந்துமே
மற்றைந்து முந்துமென வாகட நூலோருரைத்த
சொற்றவராசென்றே துணி.''

(கை எழுத்துப் பிரதி)

(வேறு)

(தீரும் நோய்கள் ஏழு)

''காணவே சாத்தியத்தைக் கருதக்கோளாய்
கனத்ததோர் மந்தாரகாசத்தோடு
பூணவே பக்க மந்தாரகாசம்
பொலிவான சுடர்காசம் பித்தகாசம்
தோணவே சுவாசகாசத்தினோடு
சுழியிரத்தகாசமாம்பீனிசகாசம்
தானுவே யிதுவேழுஞ் சாத்தியமாகுஞ்
சாதகமாய்ப் பரிகாரம் பார்த்துச் சாற்றே.''

என்பதினால்; மேலே (a) யில் கூறிய மந்தாரகாசம், பக்கமந்தாரம், சுடர்காசம், பித்தகாசம், சுவாசகாசம், இரத்தகாசம், பீனிச காசம் இவ்வேழும் சாத்தியமாகும்.

தீராத நோய்கள் ஐந்து.

''சாற்றியதோர சாத்தியந்தான்வாதகாசம்
சஞ்சலமாஞ் சேத்துமத்தின் காசத்தாடு,
தோற்றியதோர் தொந்தமாங்காசத்தோடு
சுருக்கான வாத பித்தகாசத் தோடொக்க
நேற்றியதோர் பித்தசிலேட்டும காசமெல்லாம்
நேரானவ சாத்தியமாய் நிகழ்த்தலாகும்
போற்றியதோர் சிவனூலு மிந்த நூலும்,
போக்கொன்றுந்தப்பாது பொய்யாகாதோ.''

என்பதினால்,

(யூகி முனி சிந்தாமணி.)

மேலே (b) யில் கூறிய வாதகாசம், ஐயகாசம், முக்குற்ற காசம், வாதபித்தகாசம், பித்த ஐயகாசம் என்னும் இவ்வைந்து இருமல் நோய்களும் அசாத்தியமென உரைத்தனர்.

N.B.—சித்த மருத்துவத்தில் வளி, ஐயம், முக்குற்றம் இம் மூன்று பிரிவுகளாகிய இருமல் நோய்கள் மட்டும் அசாத்தியமெனக் கூறியிருப்பது சரியில்லை. வாதபித்தம், பித்த ஐயமிருமல் நோய்களை அசாத்தியத்தில் யூகி சிந்தாமணியில் சேர்த்துக் கூறியிருந்தும், சித்த மருத்துவத்தில் சேர்க்கப்படவில்லை.

மேற்கூறிய பனிரெண்டு வகை இருமல் நோய்கள் நீங்கலாக யூகி முனி வைத்திய சிந்தாமணியில் கீழ்க்கண்ட ஐந்து வகை இருமல் நோய்ப் பிரிவுகளையும் தனித்துக் கூறியுள்ளார். அவை யாவன :—

(1) மருந்தீடு இருமல்.
(2) கஞ்சா இருமல்.
(3) மது இருமல்.
(4) சுர இருமல்.
(5) இரத்த இருமல் என்பனவாம்.

(மேற்கோள்)

''முனியான இருமலது ஐந்துமாகும்,
முரணுமருந்திடுயிருமல் முழக்கமாகக்,
கனியானமது விருமல் கஞ்சாவினிருமல்,
கனமான சுரவிருமல் கதித்தெழுந்த,
தினியான இரத்தமாமிருமலோடு,
செனிக்கின்ற இருமலது ஐந்துமாகும்,
அனியான ஐந்தினுட ஆண்மை தன்னை
அதினுடைய உற்பத்தியறியக் கேளே''.

என்பதினாலறிக !

**இவ்வைந்து வகை இருமல் நோய்க்கு உற்பத்தி கூறுகிறார்.**

மனதிலொன்று வாக்கிலொன்றும் அசடாகப் பேசுகின்றவர், தானியக் கண்டு முதலைக் குறைத்துக் கொடுப்பவர், தானியம் கொடுப்பதைத் தடுப்பவர், தண்ணீர்ப் பந்தல் நடத்தும் தருமத்தைக் கெடுப்பவர், பெரியோர்களை நிந்திப்பவர், அதருமமான வழக்குத் தீர்ப்பவர் இவர்களுக்கு இவ்வகையான இருமல் நோய் வந்து சம்பவிக்கும்.

அன்றியும், மனக்கிலேசங் கொண்டோர், மங்கையர்கள் கலவியில் மாழ்கினோர் ; கஞ்சா, சாராயம், கள் இவைகளை அதிகம் உபயோகிப்போர், பயத்தினால் நடுங்கினோர், இராப்பட்டினிகிடப்போர், எரிகின்ற நெருப்பினிட யிருப்பவர்கள் ஆகிய இவர்களுக்கு இருமல் நோய் வரும் எனவும் கூறியுள்ளார்.

(மேற்கோள்)

1. ''அறியவே மனதிலொன்று வாக்கி லொன்றும்,
அசடாகப் பேசுகின்ற அழும்பனார்க்கும்,
குறியவேதாணியத்தைத்தான் குறைத்துக்
கொடுப்பார்தன்னருகிருந்து குற்றஞ்சொல்வித்,
தறியவே தடுத்தோர்க்குந் தண்ணீர்ப்பந்தல்,
தனைக்கெடுத்தோர் பெரியோர்கள் தமை நிந்தித்தோர்
மறியவே வழக்கோரஞ் சொன்னபேர்க்கும்,
வந்துமே இருமலதுமருவுந் தானே.''

2. ''மருவுமே மனந்தன்னிற் கிலேசத்தோர்க்கும்,
மங்கையர்கள் கலவியினில் மாழ்கினோர்க்கும்,
பருவுமே கஞ்சாவைப் பருகினோர்க்கும்,
பாழான சாராயங் குடிக்கின்றோர்க்கும்,
நருவுமே நரர்கள் தன்னில் நடுங்கினோர்க்கும்,
இராமாறு பட்டினியே நல்கினோர்க்கும்,
இருவுமேயெரியண்டையிருக்கின்றோர்க்கும்,
இருமலென்ற வியாதி வந்து எய்துந்தானே''.

என்பதினாலறிக !

(யூகி சிந்தாமணி.)

மேற்கூறிய ஐந்து வகை இருமல் நோய்களின் தனித்தனிக் குறி குணங்கள்.

1. மருந்தீடு இருமல்.

''இடுமருந்து'' என்பது ஒருவர் மற்றொருவரை தன் வழிக் கொணரும் பொருட்டுக் கொடுக்கும் மருந்தாகும். அம்மருந்து நாள் செல்லச் செல்ல உடல் வன்மையைக் குறைத்து வரும். இருமல் நோயுமுண்டாகும். இவ்வாறு உண்டாகும் இருமலுக்கு ''மருந்தீடு இருமலென''ப் பெயராகும்.

இந்நோயில் உடல் மெலியும், வற்றும், தொண்டை புண்ணாகி வாய் ஓயாத இருமலுண்டாகும். வாய் நாற்றம், தலை கிறு கிறுப்பு, மயக்கம், மிகுபசி இவையுண்டாகும். அன்றியும், குன்ம நோயில் தோன்றும் குறி குணங்களைக் காட்டி; உடலையும் மனத்தையும் கெடுத்து உயிரையும் மாய்ப்பதுண்டு.

(சி.ம.)

(மேற்கோள்)

''எய்துமே மருந்திடிருமலியம்பக் கேளாய்,
எழிலுடம்பு வற்றியே இரைப்புண்டாகும்
அய்து மன்னமரோசகமாய்நற்றுந் தேகம்,
அடிக்கடிக்குப் பயமுமாயாலாபிக்கும்,
வைதுவறட்டிருமலாய் மயக்கமாகும்,
வாய் தானும் புலால் நாறும் வழவழக்கும்,
செய்து சிரத்தினில் நின்று மயக்கி வைக்கும்,
சிரணமாமருந்தீட்டின் செயலிதாமே''.

என்பதினாலறிக !

(யூகி சிந்தாமணி)

## 2. கஞ்சா இருமல்.

கஞ்சா, புகையிலை, அபின் முதலியவற்றின் புகைப்பிடிப்பவர்கட்குத் தொண்டை மூச்சுக்குழல், நுரை ஈரல், இவைகளைப் புகையின் சூடும்; புகையிலை, கஞ்சா, அபின் போன்றவையின் சத்தும் தாக்கி, வெதும்பச் செய்து இவ்விருமலை உண்டாக்கும். இந்நோயில் உடல் மெலிந்து இருமல் தீராமல் நாள்பட நிலைத்திருக்கும். நாள்கள் செல்லின் இருமலும் கோழையுமதிகமாகி, அக்கோழையானது கருத்துக்கெட்டிப்பட்டு வெளியாகும். உடல் உலர்ந்து மயிர்கள் கொட்டி, மேனியின் வன்னமும் குறையும்.

(சி. ம.)

(மேற்கோள்)

"செயலான கஞ்சாவைக் குடிக்கின்றோர்க்குத்
திரட்சியாய பின் மருந்து தின்றபேர்க்கும்,
கயமான லாகிரிகளருந்தினோர்க்குங்
கரும்பிச்சிற் சேர்ந்துமே கருகினூரல்
உயலானவுடம்பது தான் மிகவேவற்றி
உரோமத்தின் வேர் செத்து ஒளிவு குன்றும்
வயலான இருமலோடு மனமறுத்து
மயக்கமே கற்பத்தினிருமல் தானே."

என்பதினாலறிக!

(யூகி சிந்தாமணி)

## 3. கள் இருமல் (மது இருமல்).

கள், சாராயம், இவைகளை அளவு கடந்து அருந்தலால், உடல் வன்மை குறைந்து, தொண்டை, அகடு, ஈரல்கள் யாவும் வெதும்பி இவ்விருமலை யுண்டாக்கும். இடைவிடாத இருமல், மேல்மூச்சு ஆயாசம், இளைப்பு முதலிய குறிகுணங்களை உண்டாக்கும்.

(சி. ம.).

(மேற்கோள்)

" மயங்கி யேவுடம் பெங்கும் தினவுமாகும்,
மார்போடு நெஞ்சுலர்ந்து கண்டம் வற்றும்,
அயங்கியே யடிக்கடிக்கு இருமலாகும்,
அடிமூலம் நாபி மட்டும் வேக்காடுண்டாம்,
வியங்கியே ஈரலெல்லாம் வெதும்பலாகும்,
விரணமுண்டாய்ச் சிரசோடு மிரட்சியாகும்,
சயங்கியே சாராயங்கள்ளு தன்னால்,
தாக்குமே மதுவென்ற விருமற்றானே ".

என்பதினாலறிக!

(யூகி சிந்தாமணி.)

### 4. சுர இருமல்.

வெகுநாள்கள் துன்பப்பட்ட சுர நோயில் உடல் மெலிந்த நிலையில் வரும் இருமலுக்கு சுரமிருமல் எனப்படும்.

(சி.ம.)

(மேற்கோள்)

"ஆண்மையாய்ச் சுரமணுகி யங்கந்தன்னில்
யனேக நாள் சென்றாக்கா லாக்கைத் தானுங்
காண்மையாயுடலம் வற்றிக் காங்கையாகி
கனப்பாகிக் கனவிருமல் சுவாசமுண்டாய்,
வேண்மையாய் வெளுத்துமே கண்பச்சென்று,
மிக்க நரம்பெல்லாந்தான் மிகத் தளர்ந்து,
தூண்மையாய்த் தோல்திரைந்து துஞ்சலுண்டாம்,
சுரமிருமற் குணமென்றே சொல்லலாமே."

என்பதினாலறிக !

(யூகி சிந்தாமணி.)

### 5. குருதி இருமல் (இரத்த இருமல்).

வீரர்கள் போர்க் களத்தில் சண்டையிடுகையில், உடலின் உள் உறுப்புகளில் அடிபடுதலினாலும் ; ஆங்கு சிந்திக் கிடக்கும் குருதியையும் ; சண்டையில் போர் வீரர்கள் ஒருவர் மற்ற வரைத் தாக்கும் ஆயுதங்களையும் காண்பதால் ஏற்படும் அச்சத் தால் வரும் நோயாம் ; இவ்விருமல் குருதியைப் பெரிதும் வெளிப் படுத்தி மரணத்தையும் விளைவிக்கும்.

(சி.ம.)

(மேற்கோள்)

"சொல்லவே யமர்க்களத்தில் சண்டைதன்னிற்
துடர்ந்து யுத்தம் பண்ணுகையிற் போர்க்களத்தில்,
வெல்லவேமிகு ரத்தம் கண்ணாற் கண்டு,
மிரட்சியாய்த்திகில் தன்னிலிருமல் காணும்,
கொல்லவே குகை தன்னிற் பந்தம் வைத்துக்,
கொளுத்தினாற் போலவே கொடுந்தீக்காணும்,
இல்லவே இருமலுக்கு இரத்த வாசம்,
எடுக்குமே ரத்தத்தினிருமல் தாமே."

என்பதினாலறிக !

(யூகி சிந்தாமணி

**இவ்வைந்து வகை இருமல் நோய்களின் தீரும், தீராதவை:**

(a) மருந்தீடு இருமல், மது (கள்) இருமல், சுர இருமல் —இம் மூன்றும் எளிதில் தீரும்.

(b) கஞ்சா இருமல், இரத்த இருமல்—இவ்விரண்டும் தீராவாம்.

சாத்தியா சாத்தியம்.
(மேற்கோள்)

"இருமலது ஐந்துக்குள்ள சாத்தியந்தான்
எளிதான மருந்தீடு இருமல் தானும்,
மருமலதுமது இருமல் சுரத்தினோடு
மார்க்கமாமிது மூன்று சாத்தியமாகும்,
கருமலொடு கற்பமாமிருமலொடு
கடிதான ரத்தத்தினிருமல்தானும்
அருமலது இது ரெண்டும் சாத்தியமாகும்,
ஆயுருவேதத்திலுள்ள ஆண்மைதானே".

என்பதினாலறிக.

(யூகி சிந்தாமணி)

(இருமல் நோய் முடிவு.)

"இருமல் நோய்" இருமலாகவே குணமடையலாம். அசாத்தியமாயின் மரணமடையலாம். அல்லது இருமல் நோய் சுவாசகாசமாகவும், இரைப்பு நோயாகவும், இளைப்பு நோயாகவும் மாறலாம்.

## 8. இரைப்பு நோய்.

**வேறு பெயர்கள்.**—இழுப்பு நோய்; சுவாசம்; தொய்வு; ஈளை; சுரம் ; சுவாசகாசம் என வழங்கப்படும்.

**இயல்.**—இந்நோய் யாதாமொரு காரணமுமின்றி மார்பை வலித்து இறுக்கியது போன்ற வேதனையைத் தந்து ; மூச்சை வெளியிடவும், உள்ளே இழுக்கவும் முடியாமற்றிணரச் செய்யும். அன்றியும் வெளியாகும் மூச்சு மிகுந்த சிரமத்துடன் வெளியாவதுடன் குழல், யாழ், வீணை முதலிய வாத்தியங்களின் ஒலியைப் போல் ஒலிக்கும். மேலும், மார்பிலுள்ள சளியை இருமி வெளியாக்க முயன்றாலும் அக்கோழை எளிதில் வெளியாவதில்லை.

சுருங்கக் கூறின், "இரைப்பு நோய்" என்பது மூச்சு தடைப் பட்டு வருதல் என்வும் அல்லது மூச்சுத் திணறித் திணறி வருதல் எனவும் கூறுவாருமுளர்.

### நோய் வரும் வழி.

உடற்கு ஒவ்வாத உணவு, செயல் முதலியவற்றால் உடல் வன்மை குறைந்த நிலையில் ஐயத்தை மிகுதிப் படுத்தக்கூடிய உணவாலும், நடத்தையாலும், புல், பூண்டு, நெல், அரிசி, கேழ்வரகு முதலியவைகளின் சுணையாலும், தனக்கு ஒவ்வாத நாற்றப் பொருள்களை முகர்வதாலும் இந்நோய் பிறக்கும்.

### (வேறு)

வேறு சில நூல்களை ஆராயுங்கால் "இரைப்பு நோய்" உற்பத்திக்குக் காரணம் கீழ்க்கண்டவாறு கூறுவாராயினர் :—

வாயுவைப் பெருக்குகின்ற கைப்பு, கார்ப்பு சுவையுள்ள கிழங் காதிப் பொருள்களை உண்பதினாலும், பலமாறுதலடைந்த அதி சீதள நீரையருந்தலாலும், நாட்கள்பட இருமல் ரோகத்தி னாலும்; வாந்தியினாலும்; குளிர்ந்த காற்று நாள் தோறும் வந்து மயக்கி வைக்கும் சுரத்தாலும்; உயிர் நிலைக்கு ஆதார மாகிய மர்ம இடங்களில் அடிபடுதலினாலும்; விஷத்தாலும்; பாண்டு ரோகத்தினாலும்; அருவருப்பாகிய புகையை சுவாசிப் பதாலும்; நெல்லாதி தானியங்களின் சுணையை சுவாசித்த லாலும்; சீதபேதியாலும்; குளிர்ந்த கீழ்க் காற்றினாலும் இரைப்பு நோயுண்டாகுமென்பர்.

(கை எழுத்துப் பிரதி)

### (மேற் கோள்.)

"கால் பெருக்குணவுபொருள் தண்ணீர் மாறல்
கருதிருமல் மிகல் வாந்தி குளிர்ந்த காற்று
மால் செய்து நாள்தோறும் வருத்துங்காய்ச்சல்
மந்தனமுயிர்நிலையிலடிகள் தாக்கல்
ஏல் சீதபேதி விட பாண்டு புகைகள்
இலகிய நெல்லாதி மணிச் சுணையுட் செல்லல்,
மேல் வழியிற் சிலவரினு மிரைப்பாம் நோயு
மேவுமென முனிவரர்கள் விளம்பினாரே".

என்பதினாலறிக.

(கை எழுத்துப் பிரதி.)

**நோயின் முற்குறி குணங்கள்.**— இந்நோயில பன்னாட்கள் துன்பப்பட்டவர்கள் நோய் வருமுன் இதன் குறியை அறிவார்கள். வரக்கூடிய நோயின் வன்மையையும் அளவிடுவார்கள். ஆகாத உணவும், ஆகாதக்காற்றின் மணமும், பட்டவுடன் மூக்கில் நீர் பாய்தல், தும்மலுண்டாதல், மார்பு நோதல், மார்பை இறுக்கிக் கட்டியது போலிருத்தல் ; வேதனை ; இயற்கை மூச்சானது தடைப்படல் ; விலாப் பக்கம் வலித்து மூச்சுத் திணறல்; வயிறுப்பல் ; உடல் வியர்த்தலாகிய குறி குணங்களுண்டாம்.

(சி.ம.)

(வேறு)

**வேறு சில நூல்களில் இரைப்பு நோயின் முற்குறி குணங்களைக் கூறிய விடத்து.**

மார்பிலும், இரு விலாப் பக்கங்களிலும், இரு நெரியிலும் நோயுண்டாதல், மூச்சுத் திணறல், வயிறுப்பல் ஆகிய இவை இந்நோய்க்கு முற்குறி குணங்களாம்.

(மேற்கோள்)

வெண்பா.

" மார்பில் விலாவிரண்டில் மண்ணுமிரு நெரியில்,
சேர்ந்து வலித்தல் திணறல்ஃ—தார் மூச்சு
உப்பல் வயிற்றிலுருவதுவே முற்குறியாச்
செப்பிரைப்பு நோய்க்கிதனைத் தேர். "

என்பதினாலறிக !

(கை எழுத்துப் பிரதி.)

**நோய் எண்.**

இத் நோயைக் குற்றயளவாய் நான்கும் ; வெளிப்படும் மூச்சின் அளவாய் ஒன்றும் ; ஆக மொத்தம் ஐந்து பிரிவுகளாகக் கூறுவர் :

அவையாவன :—

1. வளி இரைப்பு.
2. ஐய இரைப்பு.
3. ஐயவளி இரைப்பு.
4. முக்குற்ற இரைப்பு.
5. மேல் நோக்கு இரைப்பு என்பனவாம்.

(சி.ம.)

(வேறு)

" சிறு பேரிரைப்பு திணறல் மந்தாரம்,
வருமே லிரைப்பைந்தின் மாண்பு."

என்பதற்கிணங்க ; இரைப்பு நோயை :—

1. சிற்றிரைப்பு
2. பேரிரைப்பு
3. திணறலிரைப்பு.
4. மந்தார இரைப்பு
5. மேலிரைப்பு.

ஆகிய இவ்வைந்து பிரிவுகளாகவும் பெயர்களையமைத்து வழங்குவாருமுளர்.

(கை எழுத்துப் பிரதி.)

ஒவ்வொரு பிரிவு இரைப்பு நோயின் தனித்தனிக் குணங்கள்.

1. வளி இரைப்பு நோய்.

எளிதில் செரிக்கக் கூடா உணவு கொள்ளுதல் ; கடும் வெய்யிலில் திரிதல் ; கிழங்கு முதலிய பொருள்களை உட் கொள்ளல் ஆகிய இவற்றால் வளிக் குற்றம் மிகுந்து, உடல் வன்மை குறைந்த காரணத்தால் மூச்சு வெளி விடுவதற்கும், உள் இழுப்பதற்கும் வன்மையில்லாது, மூச்சு தன் வலிவு குறைந்து உண்டாகும். நெஞ்சினுள் யாதும் இல்லாதது போன்ற உணர்ச்சி தோன்றும். இந் நோய், பிணியாளனுக்கு அதிகத் துன்பம் விளைவிப்பதில்லை. எளிதில் தீரக் கூடிய நோயாகும். இந் நோயை " சூத்திர சுவாசம் " என்பர்.

(சு. ம.)

(வேறு)

வளி இரைப்பு நோயே "சிற்றிரைப்பு நோய்" என்றும் "அற்ப சுவாசம்" என்றும் கூறுவர். இச் சிற்றிரைப்பு நோயின் குறி குணங்கள்.

இரைப்பு நோயின் முற்குறிகளில் சிலவேனும், பலவேனுந் தோன்றிய காலத்தில் நோய் தணிவதற்குரிய முறைமையில்லாதது ; மேலும் வலிந்து வருவித்துக் கொண்ட இளைப்பினாலும் ; தக்க உணவாதிகளைக் கொள்ளத் தவறுதலாலும் ; தன்னிலையில் நின்ற பித்தத்திற் கேனும், ஐயத்திற்கேனும் வாயுவானது தன்பலத்தைக் கொடுப்பதனால் சிற்றிரைப்பு உண்டாகுமென்பது முன்னோர் மொழியாம்.

இது வாயுவால் தூண்டப்பட்ட பித்தத்தினாலேனும், ஐயத்தினாலும் உண்டாகுமென்று கூறியதை, "பித்தமே மிகுந்தா லீளை யிருமலும் பெலத்து நிற்கும்" என்பதினாலறியக்கூடும். மேலும், வாயுவினால் மிகுதிப்பட்ட பித்தம் வெப்பையுண்டாக்க இது மேல் நோக்குந் தன்மையை யுடையதால் மூளையைத் தாக்க மூக்கில் நீர் பாய்தலும்; கபாசயத்தை அனுசரித்தலால் அங்கு தங்கிய ஆவி வடிவமான நீர் கபாசயத்தைத் தழுவி கபமாக மாற, வாயு இயங்க இடமின்மையால் இரைப்பு நோயுண்டாகின்றதென்பதையும் அறியக்கூடும்.

"உற்றிடும் ஐயநாடி ஓங்கியே துடித்து நின்றால்
பற்றிடு மிருமலீளை பதறியே இளைப்புண்டாகும்,
மெத்தவே கோழை வாயு மிகுந்திடும்."

என்பதினால், வாயுவால் தூண்டப்பட்ட கபமும் இரைப்பு நோயை விளைவிக்குமென்பது தெளிவு. இவ்விரண்டு வகைகளில் பித்தத்தாலுண்டாவது கபத்தாலுண்டாவதைவிடக் கடுமையாகயிராது. கபத்தாலேற்படுவது சிகிச்சைக்கு மிகவும் கடினமானது. இதனையே வளி இரைப்பு, சூத்திர இரைப்பு, சிற்றிரைப்பு, அற்ப சுவாசம் என வழங்குவர் நூலோர்.

(மேற் கோள்)

"முற்குறிகள் தோன்றிய காலத்துத் தேடி
முயல்வதனால் வந்துற்ற இளைப்பினாலும்,
சொற்கரிய பத்தியத்தின் தாழ்வினாலும்
சொந்த நிலைனின்ற தீயைகளுக்கு
முற்றுவளி தனித்தனியாய் வன்மை தந்த
முறைமையினால் சிற்றிரைப்பு நிகழ்வதென்று
சொற்றனர் முன்னோர்களிதைத் துலக்கமாகத்
தூய்மையுடன் அறிந்து பரிகாரஞ் செய்யே."

(கையெழுத்துப்பிரதி.)

என்பதினாலறிக!

### 2. ஐய இரைப்பு நோய்.

இஃது ஐயத்தைப் பெருக்கக் கூடிய உணவு வகைகளாலும், மழை, குளிர்ந்த காற்று இவைகளினால் உடலில் ஐயம் மிகுந்து தலைக்கேறி, மூக்கடைப்பு, மூக்கு நீர் பாய்தல் என்னும் குறிகளைக் காட்டி சற்று நேரத்தில் நீங்கிவிடும். மார்பையடைக்கும். மூச்சு விடவும், உள்வாங்கவும் முடியாமல் வேதனைப்படும். சில வேளை மூச்சை வெளி விடாதபடி மார்பை இழுத்துப்,

பிடித்து உயிர் நீங்குவது போன்ற நிலைமை உண்டாகும். இந் நிலையில் சற்று இருமிக் கோழை வெளிப்படின் ஒருவாறாகச் சிரமம் தணியும். இழுப்புள்ள வேளையில் இருமல் வராமலும், சளி வெளியாகாமலுமிருப்பின் நோயினை மூச்சு வெளிவிட முடியாமல் தவிக்கச் செய்து படுக்கவும், இருக்கவும் முடியாமல் திணறித் திணறி எழுந்து நிற்கச் செய்யும். நெற்றி வியர்த்தல்; முகம் கருத்தல் ; நாவறளல் ; உடல் நடுங்கல் ; பெருமூச் செறிதல் ; படுக்கையிற் பொருந்தாமை ஆகிய குறிகுணங்கள் தோன்றும். இந் நோயைத் '' தமக சுவாசம்'' எனவும் வழங் குவர்.

(சி.ம.)

(வேறு)

ஐய இரைப்பு, தமரக சுவாசம் என வழங்கும் '' மந்தார இரைப்பு '' நோயின் குறி குணங்கள் :

மழையினாலும், சீதப் பொருள்களை உண்பதினாலும், கீழ்க் காற்றைக் கொள்வதினாலும், முன்பனி, பின்பனியாகிய இப் பருவ காலங்களில் உடலைப் பாதுகாக்காது விடுவதினாலும் உண் டாகும் சீதம், கப தோடத்தை மிகுதிப்படச் செய்யும். இதனால் அடைபட்ட நாளங்களின் வழியாக வாயு இயங்கத் தடைப் படு தலால், வாயு மாறாகச் சென்று கபத்தைத் தூண்டி, அதன் தொழிலை ஓங்கச் செய்து தலையையும், தொண்டையையும் தன் வசப்படுத்தித் துன்பத்தை விளைவிக்கும். இந் நோயை '' மந் தார இரைப்பு '' என்பர்.

இதில் முதல் முதல் ஈளை தொண்டையில் சேர்ந்து, அதை அடைத்து, மூச்சு அதிகப்படச் செய்து கழிவதால், இதைப் பார்ப் போர் சாங்காலத்து உண்டாகும் மூச்சோவெனக் கூறும்படிச் செய் யும். அச் சமயத்தில் இருமிச் சளி சிறிது வெளிப்படின் நல மாகக் காணும். சளி வெளிப்படாது இருக்குமாயின் அதிக வேதனையை உண்டாக்கும். படுக்கை பொருந்ாது. படுத்தால் வேதனையும் மூச்சும் மிகுதலாகும். மார்பு நோதல், இரு விலாப் பக்கங்களிலும் வலித்தலுடன் சுடுதல்; மார்பையும் விலாவை யும் இழுத்துப் பிடித்தாற் போலிருத்தல் ; கண் பிதுங்குதல் போல் காணல் ; உடல் நடுக்கம் ; நெற்றி வியர்த்தல் ; உட் கார்ந்திருக்க முயற்சிப்பின் அற்ப நன்மை காணல் , நீர் வேட்கை அதிகப்படல் ; மூக்கில் நீர் இடைவிடாது பாய்தல் ; நாவுச் சுவையறியாமை ; உடல் அயர்ச்சி ; மேல் நோக்கிய பார்வை ; குறுகுறு வென்ற ஒலியுடன் பெருமூச்சு விட்டு விட்டு வருதல்; வாயுலரல் ; மிக வருந்திப் பேசல் ; தூக்கமின்மை ; சூடான பொருள்களை உண்ணல் ; ஐம்பொறிகளும் வன்மை குன்றல்; அடிவயிறுமுதல் தலை வரைக்கும் இது நோயினாலுண்டாம் துன்பங்களுக்கு அளவில்லை. நோயாளி இந் நோயால் வருந்தும்

துன்பங்களைப் பகைவர் கண்டாலும் மிகவும் அஞ்சி மயங்கு வார்களெனவும்; இத்தியாதி குறிகுணங்களை உடையது எனவும் கூறியுள்ளார்.

மேலும், இந் நோயில் சுரமும் மேல் மூச்சும், மூர்ச்சையுஞ் சேர்ந்துவரின் வாழ்நாள் முடிவடையுமென்பது திண்ணமாம்.

(மேற்கோள்)

1. "மந்தார விரைப்பு வளி மழை குளிர்ப்
பொருளுணவு வரு கீழ் காற்று;
வந்தகாரிருபனியில் வளி நரம்பின்
வழியதனில் மாறாகச் சென்
றுந்தாவையத்தை நனி தூண்டி
யதன் தொழிலை மிக வோங்கச் செய்து,
முந்தான தலை தொண்டை யிடமுரியீ
வருத்தலென மொழிந்தரன்றே."

2. "மொழியந்தனோய்க் குறியு
மதனில் வருந்தன்மைகளு மொழியக்கேண்மோ,
முன்னிளையாற்றொண்டை
யடைவித்து மிகு மூச்சுமுற்றச் செய்தக்,
கழி மூச்சு சாங்கால மூச்செனக்
கண்டவர்கள் வாக்கல்
காரணமுனீளை யஃதிருமலாற்
சிறிது மெய்யின் காண நலமாய்க்,
கழிவுறா திருமுமேற்றுன்பிமிகல்
கிடக்கை யிடுக்கணிநாக் கொள்ளல்,
களறும் வகை கொளினு மூச்சுற்
நெஞ்சு பக்கனோய்க் கனன்றிழுத்தல்,
விழி பிதுங்குதல் போரலுடல்
குலுங்குதல் நெற்றி வேர்வை பாரல்,
வேண்டினுட் காரியனுண் நல முருக்
நீர் வேட்கை மிகுதலாமே."

2. " ஆகுமூக்கிரு துளையினீர்ப் பாய்தல்
சுவையின்மை அயர்ச்சி மேனோக்,
கன்றகன்றே நெஞ்சு குறுகுறுவே
னொலி யுடனாதல் பெருமூச்,
சாகுதலின் வாயுலரல் வருத்தமாகப்
பசலரிது தூக்கம்
அயிலிலுறு ஊம் பொருள்களைச்
சூடாக வேண்டல் பொறியைந்து மங்கல்,
ஆகடாதினடி வயிற்றினிலிருந்துறு
தலையெனங்கம் வரையும்,
ஆடுதுன்பத்தினுக் களவில்லை
யம்ம! அயலாரஞ் சுவரால்,
வாகு பெறுமிந்த நோய்ச்சுர
மூர்ச்சை யுண்டாயின் வாழுநாளு,
மாழுமென்றறு மருத்துவ நூலின்
முன்னோர்கள் வழுத்தினாரே."

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினால் மேற்கூறிய விவரங்கள் யாவும் தெரிய வரும்.

### 3. ஐயவளி இரைப்பு நோய்.

இந்நோயில், ஐயமும் வளிக் குற்றமும் சேர்ந்தாற் போல் கேடடைந்தமையால், இவ்விருவகை இரைப்பு நோய்க்குரிய குறி குணங்களும் சேர்ந்து உண்டாகும். நோயின் துன்பங்கள் கடுமையாகவிருக்கும். பெருமூச்சு, மூச்சு உள் வாங்கவும், வெளிவிடவும் ரொம்பவும் சிரமப்படல் மலசலங்கட்டல்; வயிறு பொருமல். நா வறளல்; கண்கள் சிவந்து வலித்தல்; ஊக்கமின்மை; உடல் நடுங்கல்; வாய் பிதற்றல்; மனம் கலங்கல்; தலை, நெற்றி, செவி இவற்றில் நோவு; வியர்த்தல்; தன்நிலையறியாமை; மயக்கம்; உடல் அழற்சி ஆகிய இக்குறி குணங்கள் தோன்றும். இதனை "விச்சின்ன சுவாசம்" எனவும் கூறுவர்.

(சி. ம.)

(வேறு)

"ஐயவளி இரைப்பு" "விச்சின்ன சுவாசம்" என்னும் பேரிரைப்பு நோயின் குறிகுணங்கள்.

கண்டத்தில் கலகல வென்கிற ஒலியுண்டாகும். பெருமுச்சு; மலமும் நீரும் கட்டுப்படல்; நாக்குளறல் எக்காரியங்களிலும் ( Physical and mental ) ஊக்கமின்மை; உடல்

நடுக்கம் ; முகத்திலும் கண்களிலுமுள்ள இயற்கை ஒளி மாறல் ; கண்களும் வாயும் திறந்தபடியே இருத்தல் ; வெருண்ட பார்வை ; தலை, நெற்றி, செவி இவற்றில் நோவுண்டாதல் ; மார்பில் அடிக்கடி மோதிக் கொள்ளல் ;தொண்டை வறளல் ; சோர்வு ; அதிகத் தூக்கம் ; வயிறு பொருமல் ; நோய் தாளாமல் தலையைக் குனித்தலாகிய இக் குறிக்குணங்களைப் பிறப்பிக்கும். இவைகளிற் சில குறிகுணங்களேற்பட்டாலும் இந் நோய் தீருவது அரிது. மரணத்தை விளைவிக்குமென அறிக !

(கை எழுத்துப் பிரதி.)

குறிப்பு.—இதற்கு '' மேற்கோள் '' கிடைக்கவில்லை.

## 4. மூக்குற்ற இரைப்பு நோய்

இந் நோயில் முக்குற்றங்களும் ஏக காலத்தில் கேடடையும், மேல் நோக்குங்கால், கீழ் நோக்குங்கால், பரவுகால், நடுக்கால் இவை நான்கு கால்களும் ஒன்றன் பின் ஒன்றாய்க் கேடடைவதால் உடற்றாதுக்கள் ஏழும் மெலிவடையும். இந் நோய் மிகவும் கொடியது. மூச்சு பல முறை உள்ளில் மறிபட்டுப் பெரு மூச்சாக வருதல் ; உடல் நடுங்கல் ; மனங் கலங்கல் ; பின்பு இரைப்பு உண்டாதல் ; மூச்சானது பெரிய மாடு விடும் மூச்சை ஒத்திருக்கும் ; மார்பை இறுக்கிக் கட்டியது போல் நோதல் ; மயக்கம் ; மலமும் நீரும் கட்டுப்பட்டு வயிறு உப்புதல் ; வாய் குழறித் தடுமாறல் ; ஐம்புலன்களும் மங்குதல் ; உடல் முழுமையும் வலி ; நெற்றி வியர்த்தலாகிய குறி குணங்களைக் காட்டும். இதனை '' மகா சுவாசம் '' எனவும் அழைப்பர்·)

(சி.ம.)

(வேறு)

''முக்குற்ற இரைப்பு'' ''மகா சுவாசம்'' என்னும்'' திணறலிரைப்பு'' நோயின் குறி குணங்கள்.

இயற்கையில் இயங்குகின்ற மூச்சு பல முறை உள்ளில் மறிபட்டு மறிபட்டுப் பெரு மூச்சாக வருதல்; சில வேளை மூச்சுப் பெருகி உள்ளடங்கி வெளிப்பட மிகவும் வருந்துதல், வியர்வை, வயிறு பொருமல், கண்கள் சுழலல்; கவிழ்ந்த பார்வை; கண்ணினின்று நீர் வடிதல், கண்கள் சிவத்தல், வாய் பிதற்றல், ஊக்கமின்மை, உடம்பிலும் அடி வயிற்றிலும், எருவாயிலும் எரிச்சல்; மலமும் நீரும், சிக்கல்: வாய் வறளல்; குரல் ஒலி வேற்றுமைப் படல்; உடல் வாடல் உடல் வேற்று நிறமடைதல்; ஞாபக மறதி; உயிர் நிலையில் நோகுதல் மூர்ச்சையாகிய குறி குணங்களைக் காண்பிக்கும்.

குறிப்பு : இந் நோயில் கீல்கள் தளருமாகில் உயிர் நீங்குமென அறிக! இதுவும் கொடிய நோய்; தீருவது மகா அரிது.

(கையெழுத்துப் பிரதி)

### 5. மேல் நோக்கு இரைப்பு நோய்.

மேற் கூறிய நான்கு வகை இரைப்பு நோயில் எவையேனும் மருத்துவத்திற்குக் கட்டுப்படாமல் நீண்ட நாள் தொடர்ந்து மேல் நோக்குங்கால், (உதான வாயு) வன்மை இழந்து மூச்சை வெளியாக்க இயலாத போது, பிணியாளன் மூச்சுத் திணறி, கண்கள் வெளியே முட்டி, வாயுலர்ந்து; பேச முடியாது திகைத்து படுக்கையில் நிலையாது எழுந்து, வாய் திறந்தது போல மேல் நோக்கிச் சற்றுக் காற்றை வெளியாக்கி உள்ளிழுக்க அலைவான். அச் சமயம் தகுந்த மருந்துவம் புரியின் பிழைப்பான். இல்லை மேல் வாய் திறந்தபடியே, முகம் கறுத்து மயக்க முற்று மரண மாவான்.

மேற் கூறிய ஐந்து வகை இரைப்பு நோய்களல்லாமல் தமரக நோயிலும், நீரருகல் நோயிலும் இரைப்பு நோய் தொடருமென இக்கால நவீன மருத்துவ நூல்கள் கூறுகின்றன வென்பதாகச் ''சித்த மருத்துவம்'' குறிப்பு கொடுத்திருக்கிறது.

(சி. ம.)

Comment : நமக்கு இக் குறிப்பை பற்றிய கவலை தேவை யில்லை. ஏனெனில், எந்த வகை இரைப்பாக இருப்பினும் முக் குற்ற பிரிவுகளுக்குள்ளேயும், மேலிரைப்பு நோய்க்குள்ளும் அடங்கு மாகையால் குற்ற வாயிலாகப் பிணியை அறிந்து மருத்துவம் புரிய வேண்டியது நம் கடமையாகும்.

(வேறு)

Cardiac Reneal astma will come under any one of the above five subdivisions

Dr. M. S. Velu

''மேல் நோக்கு இரைப்பு நோய் என்னும் மேலிரைப்பு நோயின் குறி குணங்கள் ''

இந் நோயில் வெளிக் காற்றை உள் வாங்க முடியாமல் துன் புறுதல்; இயற்கையாக மூச்சை வெளி விடுகிறபடி வெளியிடக் கூடாமல் பெரு மூச்சாக விடுதல்; உடலிலுள்ள நரம்பு வழிகள் கபத்தால் மூடப்படல்; இதனால் முகத்தின் நரம்புகள் உப்புதல்; கண், மூக்கு, செவி, வாய் இவ்விடங்களில் கபம் அதிகம் சேருதல்; முகம் வெளிர்தல்; வெருண்ட பார்வை; பேசக் கூடாமை வாயில் சளி சுக்கல்; பொருள்களில் இச்சையின்மை; உயிர் நிலையில் பிளத்தலாகிய துன்பம்; உடல் வியர்த்தல்; தன்னிலை மிகுந்த வாயுவால் வேதனை யுண்டாதல்; தலை குனியக் கூடா மல் நிமிர்ந்திருத்தல்: மேல் மூச்சு மிகுந்து உள் மூச்சு அடங்கு வதால் நேரிடும் மூர்ச்சை ஆகிய இக்குறி குணங்களுண்டாகும்.

மருந்தால் சிறிது சிறிதாகக் குணமாகிவரின் நல்லது. இல்லை யேல் தீருவது மகா அரிது எனக் கூறியுள்ளார்.

(கையெழுத்துப் பிரதி).

குறிப்பு—இதற்குரிய 'மேற்கோள்'' கிடைக்கவில்லை.

முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவு வகையில் மிகுதியும் ஐயத்தை உண்டாக்கக்கூடிய என பொருள்களை உண்பதாலும்; குளிர் காற்றிலிருத்தல்; மலையில் வாழ்தல் ; பனியில் திரிதல் ஆகிய செயல்களாலும்; ஐயக் குற்றம் தன்னிலை மிகுந்து வளி அல்லது தீக்குற்றம், அல்லது அவ்விரு குற்றங்களோடு கூடி தொண்டை, மூக்கு, அண்ணாக்கு, நுரையீரல், இவற்றில் தாபிதத்தை உண்டாக்கி (தாபித்தத்தை), கோழையையும் சுரம், இருமல், தகை (இழுப்பு) முதலிய குறி குணங்களைக் பிறப்பிக்கும்.

உடல் நிலைகளில் (ஆதாரங்களில்) மார்பிடமான ''அநாகதத்தில்'' எழும் ''மேல் நோக்குங்கால்'' (உதானன்) தன் அளவில் மிகுந்து நிற்கும்.

இந் நோய் வருவதற்கு வளிக்குற்றமே காரணமென சில நூல்கள் கூறுகின்றன. அதுவும் பொருத்தமானதே! ஏனெனில் மூச்சு உறுப்புகளின் வழியே காற்றானது இயற்கையாகச் செல்ல வொட்டாதபடி தடை செய்தலால் என அறிக!

(சி. ம.)

Comment; மேலும்,

''சித்த மருத்துவத்தில்'' இந் நோயுண்டாவதற்கு முதற் காரணம் ஐயக் குற்றமேயெனக் கூறி, ஐயமானது மூச்சு உறுப்புகளின் உள்ளிடங்களில் அடைத்துக் கொண்டு காற்றை இயற்கையாக இயங்க வொட்டா மற்தடுத்தலே காரணமெனக் கூறியிருப்பதோடு ; அடுத்தாற் போல் இந் நோய்க்கு வளிக் குற்றம் காரணமென சில நூல்கள் கூறியிருப்பதாகவும்; அதனை ஆமோதித்ததும் தெரியப்படுத்தியுள்ளது.

ஆனால் இரைப்பு நோயுண்டாவதற்கு முக்குற்றங்களும் கூடியே காரணமாகும். அவற்றுள், குறிப்பாக வளியும் ஐயமும் சேர்ந்த மிகுதியே காரணமெனக் கொள்ள வேண்டும். எங்ஙனமெனில்; இந்நோயுற்பத்திக்குரிய வழியைக் கவனிக்குமிடத்து;

'' கால் பெருக் குணவு பொருள் தண்ணீர் மாறல்
கருதி ருமல் மிகல் வாந்தி குளிர்ந்த காற்று''.

என்பதற்கிணங்க; வாயுவையும் ஐயத்தையும் மிகுதிப் படுத்தக் கூடிய உணவாதி செயல்களால் வாயுமிகுதி, ஐய மிகுதி அல்லது வளி ஐயம் என்னும் இரு குற்றங்களும் சேர்ந்து கேடடைவதால் இந் நோயைப் பிறப்பிக்கும்.

வாயு மிகுதியால் நோயுண்டாகும் போது சற்று அற்ப சுவாசமும்; ஐயக் குற்ற மிகுதியால் ஏற்படும் போது அதிகத் துன் பங்களை விளைவிக்கக் கூடியதாயும்; இவ்விரு குற்றங்களும் சேர்ந்தோ அல்லது வேறு தொந்தங்களாகவோ அல்லது முக் குற்றங்களும் ஏக காலத்தில் கேடடைந்தளவிலோ இந் நோயி யுண்டாகும் போது மிகுதியான அசாத்தியக் குறி குணங்களை யும் விளைவிக்கும் என்ற விவரங்களை அடியில் கண்ட மேற்கோள் களிலிருந்து புரிந்து கொள்ளலாம்:—

"பித்தமே மிகுந்தாலீளை யிருமலும் பிலத்து நிற்கும்"

என்பதினால், உணவாதி செயல்களால் வாயு அதிகமாகும் போது வாயுவால் தூண்டப்பட்ட பித்தத்தினால் இரைப்பு நோயுண் டாகுமென்பதும்;

"உற்றிடும் ஐய நாடி ஓங்கியே துடித்து நின்றால்,
பற்றிடு மிருமலீளை பதறியே இரைப் புண்டாகி
மெத்தவே கோழை வாயு மிகுந்திடும்."

என்பதினால் வாயுவால் மிகுதிப் பட்ட பித்தம், வெப்பையுண் டாக்க; இது மேல் நோக்குந் தன்மையுடையதாதலால், மூளை யைத் தாக்கி மூக்கில் நீர் பாய்தலையும். கபாசயத்தை அனு சரித்தலால், அங்கு தங்கிய ஆவி வடிவமான நீர் கபாசயத்தைத் தழுவி கபமாக மாற, வாயு இயங்கயிட மின்மையால் இரைப்பு நோயுண்டாகிறதென அறியவும், கோழையும் வாயுவும் கபா சயத்தில் மிகுந்து நிற்கும்.

இதினின்றும் வாயுவால் தூண்டப்பட்ட ஐயமும் இரைப்பு நோயை உண்டாக்குமென்பது தெளிவு. இவ் விருவகைகளில் பித்தத்தாலுண்டாவது கபத்தாலுண்டாவதைவிடக் கடுமையிராது என்பதையும் தெரிந்து கொள்ளவும்.

மேலும்; முன் கூறியது போல் வாயுவால் தூண்டப்பட்ட பித்த மிகுதி; அதன் காரணமாக உண்டான ஐய மிகுதி காரண மாயிருந்தது போலல்லாமல்; மூன்றாவதாக மழையினாலும் சீதப்பொருள்களை உண்பதினாலும், கீழ் காற்றைச் சுவாசிப் பதாலும்; முன் பனி, பின் பனிக்காலங்களில் உடலைப் பாது காக்காது விடுதலினாலும் உண்டாகும் "சீதளமானது கப தோடத்தை மிகுபடச் செய்யும் கப மிகுதிக்கு இவை நேரடியான காரணங்களாகும்.

இக் கப மிகுதியால், அடைபட்ட நாளங்களின் வழியாக வாயு இயங்க முற்படும் போது, இயலாது போகவே, வாயு மாறாகச் சென்று ஐயத்தைத்தூண்டி, அதின் தொழிலை ஓங்கச் செய்து, தலையையும் தொண்டையையும் தன் வசப் படுத்தித் துன்பத்தை விளைவிக்கும்.

## உதாரணம்.

மந்தார இரைப்பு என்னும் ஐய இரைப்பு நோயுண்டாவதற்கு இதுவே முக்குற்ற வேறுபாடுகளான காரணமாகும். இதில் சாங் காலத்து உண்டாகும் மூச்சோ வெனக்கூறும்படி அவ்வளவு சிரம மாயிருக்கும் என்பதை உணர்க! இதனால் நாம் தெரிந்து கொள்ளுவது யாதெனில்; வாயுக்களும் ஐயமும் சேர்ந்து கேடடை வதே இரைப்பு நோய்த் துன்பங்களேற்படுவதற்குக் காரணமாகு மென்பதேயாம்.

## நாடிநடை.

1 ''கபமல்லாது காசசுவாசம் வாராது.''

2. ''தானமுள்ள சேத்துமந்தா
ணிளகில்வெப்பு
சயமீளை யிருமல் மந்தார காசம்
ஈனமுறுஞ் சன்னி விட தோடம் விக்கல்
இருத்ரோகங் கரப்பான் விரண தோடம்
மானனையீர் சூலை திரள் வியாதிவீக்கம்
வருஞ் சத்தி சுவாசம் நெஞ்சடைப்பு தூக்கம்
ஏன முறு ங்காமாலை சோபை டாண்டு
எழு சுரங்கள் பலபிணியுங்காணு ந்தானே.''

(சதக நாடி.)

3. ''பாங்கான வாதத்தில் சேத்தும நாடி
பரிசத்தால் திமிர் மேவு முளைச்சலாகும்.
தீங்கான இருமலுடன் சன்னி தோடம்
சேர்ந்த விடம் வெடிசூலை இருத்ரோகம்
வாங்கான ஈளை மந்தார காசம்
வலி யுடனே யுள் வீச்சு புற வீச்சு வீக்கம்
ஓங்கான சுரமுடனே சுவாசகாசம்
உண்டாகும் வெகு நோய்க்கு முறுதிதானே.''

4. ''உற்றிடும் ஐய நாடி ஓங்கியே துடித்து நின்றால்
பற்றிடு மிருமலீளை பதறியே இளைப்புண்டாகும்
மெத்தவே கோழை வாயு மிகுந்திடும்''

5. ''பித்தமே மிகுந் தாலீளை
யிருமலும் பெலத்து நிற்கும்.''

6. ''இடமான சேத்துமத்தில் பித்த நாடி,
சேர்தணுகில் விடமுடனே வீக்க முண்டாம்;
திடமான குளிர் காய்ச்சல் மஞ்சள் நோவுத்
தேகத்திலுளைச்ச லீளை இருமல் வாந்தி
விடமான நெஞ்சடைப்பு சுவாசம் விக்கல்
வெகு சுரமும் நா வறட்சி பாண்டு ரோகம்
அடமான குவளை ரத்தம் அதிசாரந்தான்
அணுகி வெகு பல நோய்க்குந் தடங்காண்டாயே.''

(இதன் பொருள்.)

ஐய நாடி மிகுந்தாலும், வளி ஐய தொந்தத்தாலும், வாயுவால் தூண்டப்பட்ட பித்த மிகுதியாலும்; ஐய பித்த தொந்தத்தாலும் இரைப்பு நோயுண்டாகும் என்பதேயாம்.

(ப.சி.நாடி).

(எச்சில்)

எச்சில் என்னும் கோழை அல்லது சளியைக் கவனிக்கும்போது அது நுரைத்தும், அளவில் மிகுந்தும், பளுவற்று மிருப்பின் வளிக் குற்றத்தால் வந்ததென்றறிக !

கறுத்து, கெட்டிப்பட்டு, புலால், மணத்துடன் கடினமாகவும் காணின் ஐயக் குற்றத்தால் வந்ததாகும்.

வெளுத்துச் சீழ் கலந்தது போலும்; மஞ்சள் நிறத்துடனும் காணின் அழற் குற்றத்தால் வந்ததென்றறிக!

(சி.ம.)

தீரும் தீராதவை.

சிற்றிரைப்பு என்னும் வளி இரைப்பு நோய் எளிதில் தீரும். மற்ற நான்கு வகை இரைப்பு நோய்களும், தக்க மருந்துகளால் சற்று சிரமங்களை நிவர்த்தித்து தற்காலச் சாந்தம் செய்யலாமெனினும் பூரண குணம் பெறுவது அரிது என நூல்கள் கூறுகின்றன.

மேலும், எந்த ஒரு இரைப்பு நோயினனுக்கும், இரைப்பு நோய் தீவிரமாகவுள்ளபோது சுரம், வாந்தி பேதி, தாகம், மதுமேகம், வீக்கம், விக்கல், மேல் மூச்சு இவை சேர்ந்து தோன்றில் அவன் பிழைப்பது இல்லை என்றே முன்னோர்கள் கூறியுள்ளார்கள்.

அன்றியும், இரைப்பு நோயினன் அதிகமான துன்பங்களை அனுபவிக்கினும் பூரண குணம் பெறாது நீண்ட நாள்கள் கஷ்டப் படினும், அந்நோயினை மற்றப் பலவான கொடிய நோய்களைப் போல் விரைவில் மரணத்திற்குள்ளாக்குவதில்லை. மேற்கூறிய துணை நோய்கள் (complication) இல்லாதிருக்கும் வரையில் நோயினன் விரைவில் சாவதில்லை எனவும் புராதன நூல்கள் கூறுகின்றன :

(கையெழுத்துப் பிரதி.)

## 9. இளைப்பு நோய்.

வேறு பெயர்கள் :—ஈளை, கபநோய் கயநோய்; சயநோய்,; க்ஷயநோய் ; அரசநோய்; ராஜ எக்ஷ்மா; யசமா; சோஷை ; முதலிய பெயர்களால் வழங்கும்.

இளைப்பு—என்னும் சொல் ஏனெனில், நோயை நோயுற்றானும், நோயறிவானும் அறிவதற்கு முன்பே உடல் இளைத்துக் கொண்டே வருவதாலும் ;

ஈளை, கபநோய்— என்னும் சொற்கள் ஏனெனில் இந்நோயில் ஈளை (அதாவது கோழை, சளி, கபம்) அதிகமுண்டாகி இருமலுடன் வெளிப்படுவதாலும் அல்லது கபதாது மிகுந்து வேற்றுநிலைப்படுவதாலும் ;

கயநோய்—என்பது உடல் நாளுக்கு நாள் தேய்தலாலும் ;

கயநோய், சயநோய்— இவ்விரண்டு சொற்களும் ஏனெனில், சாரங்கெட்டு உடல் நாளுக்கு நாள் குன்றலாலும் ;

அரசநோய், ராஜயக்ஷ்மா யக்ஷ்மா — இச் சொற்கள் ஏற்பட்ட காரணம் யாதெனில், அரசன் தன் குழுவினரோடு வாழ்ந்திருத்தல் போல இந்நோயும் தனக்குத் துணையாகப் பல்வேறு நோய்களை யுடைத்தாயிருப்பதாலும் இத்தியாதி பரியாயப் பெயர்கள் இந்நோய்க்கு வழங்கலாயிற்று.

இயல்— இந்நோயில் ஐயக்காலமாகிய மாலைப் பொழுதில் சுரம் தோன்றி உடற்றாதுக்கள் ஏழும் ஒன்றன் பின் ஒன்றாய் தத்தம் வன்மை குறைந்து ஊக்கம் இழந்து, திங்கள் (சந்திரன்) ஒளியில் தேய்ப் பிறையில் மங்குவது போல் உடலை மங்கும்படி செய்யும் நோயாம்.

(சி. ம.)

(வேறு)

இயல்— மூலத்தில் சூடு கொண்டு கபாலத்தைச் சாடி உடற் கட்டுவாகிய, ஏழு தாதுக்களும் கலகலத்து, ரத்தம் வற்றி, சுரம், தேகம், உளைச்சல், பீனிசம், இருமல், அருசி முதலியவை தோன்றி நாளுக்கு நாள் உடலை இளைக்கச் செய்யும் நோய் என்றும் கூறுவர்.

(மேற்கோள்)

" விளம்பினார் சயரோகம் வருதல் கேளு,
விசையான தலத்தில் சூடு கொண்டு,
தளம்பியே கபாலத்தின் ஓடி சாடித் தாது வெல்லாங்
கலகலத்து ரத்தம் வற்றி,
உளம்பியே நீரெரிந்து சுரமுந்தோன்றி,
உளைச்சலாடி பீனிசமிருமல் நாக்கு ருசியற்று,
கிளம்பியே எட்டு வகை சயங்களாகிக்,
*கீழாறு கொண்டு விடு மிளைப்புத் தானே " என்பதினா லறிக !

(பக்கம் 197 ப. சி. இல்லரைக் கோவை)

* கீழாறு கொண்டு—தோன்றாமல் சிதைதல்.

(வேறு)

இயல் : கண்டமும் (தொண்டை, குரல் வளை), நெஞ்சும் (மார்பு, மனம்) காய்ந்து கண்கள் குழி விழுந்து, காலையிலும், மாலையிலும், அற்பசுரம் தோன்றி இருமலும் நீடித்து நிற்கு மாயின் இதுவே கய நோயாகுமாம்.

(மேற்கோள்)

" கண்டமும் நெஞ்சுங்காய்ந்து கண்ணுமுட் குழியுநீடி,
அண்டிடு காலை மாலை யருஞ் சுரந்தோன்றிக் கூறும்,
மிண்டிய இருமல் மிஞ்சி வெகுநாளாய் நிற்கிலீது,
கொண்டிடு சயரோகந்தான் கூறுநன் மருந்துகேண்மோ! "

(வைத்திய விளக்கம்)

என்பதினாலறிக !

இளைப்பு நோய் அரசநோய் என அழைப்பதின் விவரம் சில நூல்களில் கூறியுள்ளார்கள்.

அஃது யாதெனில், அரசன் தன் குழுவினரோடு கூடி வாழ்ந்திருத்தல் போல இளைப்பு நோயும் தனக்குத் துணையாகப் பல்வேறு நோய்களோடு சேர்ந்திருத்தலே "அரச நோய்" என்று அழைப்பதற்குக் காரணமென்று மேலே கூறினோம். அப்பேற்பட்ட பல்வேறு நோய்களாவன :—

(1) சுரப்பிணி—(மந்திரிபோலாம்)

(2) பாண்டுரோகம்—கொற்றவனாம் (i.e.) அரசனது வெற்றியாளன்.

(3) காமாலை—பெண்டீராம் (மனைவி; மக்கள்).

(4) மார்பில் கோழை—அரண்மனையாம்.

(5) இரத்தபித்தம்—புதல்வன்.

(6) சுவாசரோகம்—துணைவர்கள்.

(7) இருமல்—(புரோகிதன்.)

(8) குளிர்—காவலாள்.

(9) மந்தம்—காலாள்.

(10) மற்ற ரோகங்கள்—பரிஜனங்கள்.

(11) வாதம்—அரியணை (சிம்மாசனம்).

(12) பித்தம்—தலையணை.

(13) வாந்தி—குதிரை.

(14) ஏங்கல்—கேள்வி (சங்கீதம்).

(15) அதிசாரம்—சிவிகை (பல்லக்கு).

இவ்விதமாக இளைப்பு நோய்க்குத் துணையாகபலப்பிணிகள் சூழ்ந்திருக்குமெனக் கூறப்பட்டுள்ளன.

(மேற்கோள்)

1. "செனித்து வருங்கயநோயு மரசனோ
யென்றெடுத்துத் தெளிவுகூறும் ;
தொனிக்குரையே தென்றுரைக்கில்
மந்திரியே சுரமாகுஞ் சுவாசரோகம்
யணைத்துமதன் சுதனாங்காமாலை
பெண்டீராமகலத்தாகும் ;
கனித்திருங்குங் கோழையே
குடியிருக்கும் புரிசையெனக் கருதினோமே".

2. " கருதரியபாண்டுவே கொற்றனாம், மந்தமே காலனாகும்
குரகதமேவாந்தியா மிரத்தபித்தமே சுதனாங்குளிரே
காவல்
இருமலே புரோகிதனாம் அதிசாரமெனுஞ் சிவிகை
ஏங்கற்கேள்வி,
அரியணையே வாதமாம் பித்தமே தலையணையாம்
யமர்ந்ததாமே."
(கை எழுத்துப் பிரதி)

என்பதினாலறிக !

(a) நோய் வரும் வழி.

1. அடிக்கடி பட்டினியிருத்தல்.
2. இரவில் விழித்திருத்தல்.
3. உடல் வன்மைக்கு மிஞ்சிய உழைப்பு.
4. மற்றைய நோய்களில் பன்னாட்கள் துன்பப்படல்.
5. வறுமையின் கொடுமை.
6. சிறைவாசம்.
7. உடற்கு ஊட்டமில்லாத உணவையே புசித்தல்.
8. நல்ல காற்றோட்டமில்லாத வீடுகளில் வசித்தல்.

இத்தியாதி காரணங்களால் இந்நோயுண்டாகும். பொதுவாக உடல் வன்மை குறைவதற்காக உணவாதி செயல்களே இந் நோயைப் பிறப்பிக்குமென அறிக ;

(சி. மு.)

(வேறு)

மேலும் தன்வந்திரியும் யூகிமுனியும் இந்நோயுண்டாகும் காரணங்களைக் — கூறுமிடத்து.

1. உப்பு, கார்ப்பு, கஞ்சாவாகிய பொருள்களை மிகுதியாகப் புசித்தல்.

2. கஞ்சா போன்ற பொருள்களாலுண்டாம் மயக்கம்.

3. மருந்தீடு.

4. சுணைநீர், கற்சுண்ணப்பாரையிற் சுரக்கும் நீர் முதலிய தூய்மையற்ற நீரையருந்துதல்.

5. பக்குவமற்றதும், தூய்மையில்லாததுமான பொருள்களை உட்கொள்ளல்.

6. மாசு படிந்த கடல் நீரில் முழுகுதல்.

7. வெய்யிலில் அலைந்தேனும் மாதர்கள் கலவியினாலும் பிறந்த மிகுகனல்.

8. சுரப்பிணியின் வேகம்.

9. மேக நோய்.

10. உணவாதி குற்றங்களாலேற்படும் வாத பித்த கபவிகற்பம் ஆகிய இக்காரணங்கள் இந்நோய்க்குக் காரணமாகுமென மேற் கண்ட தன்வந்திரி சிந்தாமணியிலும், யூகிசிந்தாமணியிலும் கூறப் பட்டுள்ளன.

(மேற்கோள்.)

'' வேகின்ற கஞ்சாவால் மிகுந்த உப்பால்,
மீறியதோர் காரத்தால் மிக மயக்கால்,
தோகின்ற மருந்தீட்டாற் சுணையிநீரால்,
சுசியில்லாப் பதார்த்தங்கள் சுக்கான்றண்ணீர்,
வாகின்ற வக்கினியால் மிகுந்த வெய்யில்,
வருத்தத்தில் க்ஷயரோக மருவுங்காணே ''.

(யூகிசிந்தாமணி)

என்பதினாலறிக !

(வேறு)

(c) மீண்டும், க்ஷயரோகம் உற்பத்திக்குக் காரணம் கூறு மிடத்து குருநாடியில் தெரிவிப்பதாவது : தேகத்திலுண்டாகும் உஷ்ணமிகுதியே க்ஷயத்திற்குக் காரணம் என்கிறார். எங்ஙன மெனில் '' ஏரான கயரோகம் தனக்குப் பித்தம் '' என்பதினா லறிகிறோம்.

அன்றியும் '' பித்தந்தான் ஐயத்தோடு பெரு முகந்திரும்பி நின்றால் மத்திம க்ஷயரோகத்தை வாவென யழைக்குந்தானே ''.

என்பதினாலும், பித்த மிகுதியே முதற்காரணமென்பதும் அது ஐயத்துடன் கலப்புற்றுக் கேடடையும் போது சயரோகம் பிறக்குமென்பதும் தெளிவாகிறது.

உஷ்ணமதிகமாவதற்கு காரணம் ஆகாரம், வீகாரங்களாகும். அதாவது '' உண்ணும் உணவுகளில் உட்டிணம் அதிகப்படக் கூடிய பொருள்களினாலும் ; மிகு உழைப்பு; மிகு சம்போகம்

அபக்குவ உணவு அருந்தல் முதலிய தகாத செயல்களாலும் உண்டாகக் கூடிய உட்டிணத்தால் தேகத்திலுள்ள நீர்ப்பசைகளை எல்லாம் வறளச் செய்து சிரசிற் கேற்றி அப்பால் தேகம் குளிர்ச்சி அடையும்போது கபமாகமாறி விருத்தியடையும்.

இங்ஙனம் விருத்தியடைந்த கபம் (ஐயம்) நீடித்துச் சிரசில் தங்கி யிருக்கும்போது தாபிதம் உண்டாய் இரு புறமுந் தமருண்டாகி, அத்தமர்களின் வழியாக ஐய விருத்திக்குரிய மதுரமானது சுவையோடு கூடிய கபமானது தலையிலிருந்து கீழிறங்கி சுவாச சயம் (கபாசயம்) சென்று அங்கு நீடித்துத் தங்கியிருப்பின் அதினின்றும் ஒருவிதக் கிருமியுண்டாய் விரணமுடன் நிணம், நீர், சீழ், சளிகளுமுண்டாகிச் சுரமும், இருமலும், நீடித்து நாளுக்கு நாள் உடற்கட்டில் மேலே குறிப்பிட்ட பல்வேறு குறி குணங்களையுண்டாக்கி அவற்றின் காரணமாக உடல் வன்மை யைக் குன்றச் செய்யும், உடற்றாதுக்களும் வறளுமென அறிக!

கிருமிகளுண்டாகு மென்பதற்குரிய உதாரணம்.

ஒரு நெற்குவியலில் நல்ல காற்றோட்டமில்லாவிடில் எங்ஙனம் நெல்லில் அண்டுப்பூச்சிகள் உற்பத்தியாகின்றனவோ ; கடவுள் சிருட்டியில் எங்ஙனம் சுவேதஜம் (வியர்வை); அண்டஜம், (முட்டை), உற்பீஜம் (வித்துகள்), சராயுஜம் (கருப்பைகள்)என நான்கு வகை உற்பத்திகளிருக்கின்றனவோ, அதேபோல கபாசயத் திலுள்ள கபமானது நீண்ட நாட்கள் உட்தங்கியிருப்பின் ஏதேனு மோர்பொல்லாத கிருமிகள் செனிக்கக்கூடும். காரணம் யாதனில், வித்து எதுவாயிருப்பினும் உற்பத்தியாகுமிடம் மேற்படி வித்து உற்பத்தியாவதற்கு ஆதாரமாயிருக்கிறதே காரணமாகும். வித்துவை கவனிப்பது போல நிலத்தினுடைய தன்மையும் முக்கியத்தையும் கவனிப்போமானால், வித்துவாயிருப்பினும் நிலத்தின் மகிமையால் (அல்லது அதன் நற்சொருபத்தால்) நிலமானது வித்துவினுடைய உற்பத்தி யையும் வளர்ச்சியையும் சற்றும் மிஞ்சவிடமாட்டா வென்பது சித்தமருத்துவ அறிஞர்களின் கருத்தாகும்.

That is to say, there are two chief factors, namely, the seed and the soil factors for any disease to develope or thrive in the human body. We have to take in to consideration both the seed and the soil factors together for purpose of treatment. Kayanoi is caused because of the susceptibility of the soil for the growth of the Koch Week's bacilli or க்ஷயக்குருமி If we can treat the vitiated doshas in an appropriate manner we are supposed to make the soil unsuitable for the growth of the bacilli. This is why the siddhas are very particular about treating diseases on Thiridoshic principles. That which help to set right the vitiated doshas is sure to make the body normal, which

means the soil is healthy, and thus indirectly eliminates the toxins of the bacilli and the bacilli themselves. Thus is what is known as treatment of the body as a whole" The body or the soil becomes immune or unsuitable for any organisms to thrive therein and longer by our attention and treatment to the thiridoshic disorders. We attend very little to tackle the bacilli directly and as a matter of fact we ignore the bacteriological theory of diseaes followed in modern medical science. We treat simultaneously the soil and the seed factors

(மேற்கோள்).

"க்ஷயரோக மெழுந்தவகை சொல்லக்கேளீர்.
தலைதனிலே கனலெழும்பி நீர்தானேற்று
மயமாக இருபுறமுந்தமருண்டாகி
மதுரமெனும் ருசிபிறந்து வாய்நீரூறி
சுயமாக மண்டையினீர்க் கீழிறங்கிச்
சுவாசமது நெஞ்சில் வந்து சுவறியெங்கும்
நயமான கயரோகம் நாடுங்காலை
நன்மையுடன் பண்டிதரை நாடிப்பாரே.'

(குருநாடி நூல்)

என்பதினாலறிக!

(d) அன்றியும், இரசதாது கேடடையின் மற்ற தாதுக்களும் வன்மை குன்றி இளைப்பு நோய்க் கிறையாகலாம் அல்லது கடைசி தாதுவாகிய சுக்கிலதாது கேடடைவதால் மற்ற தாதுக்களும் ஒவ்வொன்றாய் வன்மை குன்றி இளைப்பு நோயை பிறப்பிக்கக்கூடும். ஆதலால் இவ்விரு தாதுக்களும் கேடடையாதபடி பாதுகாத்தல் சாலச் சிறந்தது.

(வேறு)

(e) இளைப்பு நோயுண்டாகும் காரணம்.

(கரும சூத்திரம்)

இளைப்பு நோயானது சமானன், கூர்மன், தேவதத்தன், தனஞ்செயன் என்னும் வாயுக்களின் கொடுமையால்(இவ்வாயுக்கள் அளவுக்குமேல் மிதமிஞ்சிக் கேடடைவதால்) நீர் மிகுதிப்பட்டு நாள்தோறும் இடை விடாமல் இளைப்புத் தோன்றிப் பின்பு அந்நீர் மிகுந்த குற்றத்தினால் இருமலுண்டாகும். என்கிறார்.

(மேற்கோள்.)

''தழைத்தோங்கும் சமானனால் தயவாய்க் கேளாய்
சித்தியென்ற கூர்மனிட கொடுமையாலே
தேவதத்தன் தனஞ்செயனால் சலமேமிஞ்சி
நித்தியமும் ஓயாமல் இளைப்பு தோன்றும்''.

(கரும சூத்திரம்).

என்பதினாலறிக!

இளைப்பு நோயின் முற்குறி குணங்கள்.

1. நோய் வருவதற்கு முன்னரே நோயினனுக்கு மனம் நிம்மதியில்லாமை ; அல்லது மன வேதனை ஏற்படல்.

2. உணவில் விருப்பமின்மை ; உணவு செல்லாமை.

3. ஏக்கம் (கவலை, பயம், துக்கம்).

4. சோர்வு உண்டாதல்.

5. பசியின்மை.

6. மந்தம்

7. உணவு நன்றாகயிருப்பினும் அதில் கல், மண், தூசி, எறும்பு முதலியவை கலந்திருப்பதான எண்ணத்துடன் குற்றங் காணல்.

8. இயற்கையளவாக உண்ணினும் அது பலன் தராமை.

9. பன்னாட்கள் நோய்க்குக் பிறகு தொடரக்கூடிய நோய்களாகிய உடல் வெளுத்தல், கால்கள் வீங்கல், துரும்புபோல் இளைத்தல் ஆகிய நோய்களில் தான் ஈடுபட்டிருப்பதுபோல் நினைத்து நடுங்கல்.

10. தன் உடலைத் தானே அடிக்கடி பார்த்துக் கொள்ளல் அல்லது பார்த்துப் பார்த்து வருந்துதல்.

11. எப்போதும் உடலைப்பற்றி யோசித்தல்.

12. பயங்கரமான கனவு காணுதல், அதாவது ஊர்கள் தீப் பற்றி எரிவது போலவும், குளம் குட்டை, ஆறு இவை வற்றி இருப்பது போலவும், கொடிய புள், ஊரும் வகைகள் தன்னைத் துன்புறுத்துவது போலும், கோள்கள், மலைகள், காடுகள் இவைகள் அழிந்து வீழ்வது போலவும் கனவு காணுதல்.

13. அன்றியும், நகம், மயிர் இவை அதிகமாய் வளர்தல்.

14. உடற்றாதுக்கள் யாவும் வன்மை குறைந்துகொண்டே மெலிவடைதல்.

15. உற்றார் உறவினர்கள் தன்னை வந்து பார்ப்பதில் பிரியமில்லாமல் வெட்கப்படல்.

16. மூலக்கனல் அதிகமாதல்.

17. மூக்கில் நீர் பாய்தல்.

18. சுவையின்மை.

19. வாய் நீரூறல்.

20. மார்பு அதிரல், மார்பு நோய்.

21. சுரம்.

22. வியர்வை.

23. வாந்தி.

24. உடல் வெளுத்தல், சில வேளை மஞ்சளித்தல்.

25. நெஞ்சில் கோழை கட்டல்.

26. மூச்சு முட்டல்.

27. குத்திருமல், சிறு இருமல்

28. மருந்துகளுக்கு வசப்படாத இருமல்.

ஆகிய இத்தியாதிக் குறிகுணங்களைக் காண்பிக்கும் (சி. ம.)

### நோய் எண்.

இளைப்பு நோயைப் பல நூல்களில் அவரவர்கட்குத்தோன்றிய பிரகாரம் பற்பல விதமாகப் பிரித்துள்ளார்கள். அவற்றுள் சிலவற்றை இங்கு கவனிப்போமாக! மாணவர்கள் தங்களுக்குப் புரிந்தவரையில் ஏதேனும் ஒரு பிரிவினையை நன்கு தெரிந்துக் கொள்ளுவது நன்மை பயக்கும்.

I. இளைப்பு நோயை ஏழு வகையாகப் பிரித்துள்ளார் சிலர், அவையாவன :—

1. வாத இளைப்பு.
2. பித்த இளைப்பு.
3. ஐய இளைப்பு.
4. வாதபித்த இளைப்பு.
5. வாதகப இளைப்பு.
6. பித்தகப இளைப்பு.
7. முக்குற்ற இளைப்பு என்பனவாம்.

### ஒவ்வொரு பிரிவின் தனித்தனி குறி குணங்கள்

#### 1. வளி இளைப்பு (வாத இளைப்பு).

(ஆசிரியப்பா).

(I) ''முன்னவரா லீளை காரண மென்ன
மொழிந்த இளைப்பிருமல் நோய் மோதின் கேளாய்,
தன்னிலுறுவளி ஈளையிருமல் நோய்
தாவு சுரமுடல் மெலிவு தாகமிகுதல்,
பின்னமாய் மொழி பிதற்றல் தலை பளுவு நோதல்,
விலாப்பூட்டுகளில் பின்வரின் நோய்,
வன்மையாகக் கடுப்படா வாந்தி தோள்,
கைகால் துடித்தலொடுவரும் பேதியே.''

(வெண்பா)

(II) ''கழுத்து நீளல் இருமல் காணுடலிற் சில்விடங்கள்
உடலுற்றுங்குளிர்ச்சியுறுதல்—வழுத்ததோர்
கோழை விழுதல் குணமென்னக் கூறுவரால்
வாழவுடல் மண்ணுலகில் மாண்பு.''

(இதன் பொருள்.)

வளிக்குற்றத்தால் வருகின்ற இளைப்பு நோயில், சுரம், உடல் மெலிவு, மிகு தாகம், பிதற்றல், தலைப்பாரம், தலைவலி விலாப் பக்கங்களிலும் மூட்டுக்களிலும் வலி, நடு முதுகிலும் நோய், கடுப்பு, வாந்தி, தோள், கைகால்கள் இவை துடித்தல், பேதி, கழுத்து நீண்டு காணல், இருமல், உடலில் சிற்சில பாகங்களிற் குளிர்ச்சி, வழுவழுத்த கோழையுண்டாதலாகிய குறி குணங் களைக் காட்டும்.

#### 2. அழல் இளைப்பு (பித்த இளைப்பு).

(I) ''பித்தமெனுந்தீ முதற் காரணமாயெழு
மிளைப்பிருமனோய் பேசுங்காலை,
உற்ற ரத்த வாந்தி சிலக்குறு வாந்தி
தனியாதல் கோழை விழல் உடல் குளிர்தல்,
சித்த மயக்கம் பெருமுச்செரிதலுட
னிருமல் மூர்ச்சித்தல் குரல திரிதலுண்ட,
சிற்றுணவுஞ் செறியாமையுடல்
சிறுநீர் மஞ்சள் நீர் வேட்கை சுரஞ்சேந்துகாய்வேர்'',

(வெண்பா.)

(11) "அதிசாரமாக மதில் வறட்சியாதல்
துதியூண்வெறுப்பு மிகத் தோன்றல்—நதியாகும்
தாது கெடுதல் தலை கனத்தல் னோதலுடல்
ஓதுவார் உற்ற குறியோர்".

(இதன் பொருள்.)

பித்தப்பிணியாலுண்டாகும் இளைப்பு நோயில் ரத்த வாந்தி, சிலருக்குப் பித்த வாந்தியுண்டாதல், கோழை விழல், உடல் குளிர்தல், புத்தி மயக்கம், பெருமூச்செறிதல், இருமல், மூர்ச்சித்தல், குரல் மாறல், உண்ட உணவு சிறிதேனும் செரியாமை, உடலும், சிறுநீரும் மஞ்சள் நிறமாதல், நீர் வேட்கை, சுரம் அதிசாரம், உடல் வறட்சி, உணவில் அருவருப்பு, தாது கெடல், தலை கனத்தல், உடலும் தலையும் நோதல், விலாவும் முதுகும் மிகச் சுருங்கலாகிய குறி குணங்களும் உண்டாகும்.

### 3. ஐய இளைப்பு (கப இளைப்பு).

1. "கபமென்னுமைய முதற்காரண மாயெழும்
இளைப்பிருமனோய் கழறக்கேளாய்
தபக்காய்தல் இருமல் சீக்கோழைவிடல்,
நிணநாறல் வாந்திவரல் தலையிற்பாரல்,
சுப தூக்கமிலை யாதல் மயக்கசதி மூர்ச்சை
மனஞ்சோர்வாதல் சோம்பலருசி,
இபவன்மை யில்லையுடல் அகதிளைப்பு
யதிசாரமிஃதினுடனிழி குரலரோ."

(வெண்பா)

2. "உடல்வெளுத்தல் மூக்கினுறநீர்வடிதல்,
உடலிற்சொறி யாதலுண்டாம்—திடமாக
நச்சுக்குணமறிந்து நல்லுடலமாகுமா
ரெச்சமின்றி நீயுரை செய்யீன்று."

(இதன் பொருள்)

கபமென்னும் ஐய இளைப்பு நோயில் சுரம்; தாபம்; இருமல்; சீழகாக் கோழைவிழல்; அது நிணம்போல் நாறுதல்; வாந்தி; தலைகனத்தல்; சுகமான தூக்கமின்மை; மயக்கம்;

மூர்ச்சை ; மனச் சோர்வு ; சோம்பல் ; அருசி ; அசதி ; வன்மைக் குறைவு ; உடல் இளைத்தல் ; அதிசாரம் ; குரல் ஒலி மங்கல் ; உடல் வெளுத்தல் ; மூக்கு நீர் பாய்தல் ; உடல் முற்றும் சொறியுண்டாதல் ஆகிய குறிகுணங்கள் காணு மாகையால் இவைகள் தீங்கையே விளைவிக்குமென அறிந்து தகுந்த மருத்துவம் புரிதல் அவசியமாகும் என்கிறார்.

### 4. வளி அழல் இளைப்பு (வாத பித்த இளைப்பு).

1 ''வாத பித்த தொந்தமெனும் வளியழலின் கலப்பில்வரு
மிளைப்பிருமனோய் வழுத்தக்கேளாய்,
கோதெலும்பைப்பற்றியே சுரங்காய்தல்
நீர்வேட்கையிருமல் செங்கோழைவீழல்,
ஓதருசிவாய்நீருறல் நீரருகல்
வாய்பிதற்றல் மயக்குடம்புலர்தல்
காதியுடலெரிவு கடுப்புதடுநா கருத்தல்,
தலை நோதல் மிக வாந்தியாமே.''

(வெண்பா)

2 '' ஆகமலம்போதல் யடிக்கடிக்கு மூச்சுவிடல்
ஆகம்விழி யவையுமாவெண்மை—யாகுவதும்
கண்ணதுவும் மேற்பார்வை காணல் குணமென்ன
எண்ணி யுரைகண்டு மொழியே.''

(இதன் பொருள்.)

வாத பித்த தோடத்தால் வருகின்ற இளைப்பு நோயில், எலும்பைப்பற்றிய சுரங்காய்தல் ; தாக மிகுதல் ; இருமல் ; இருமிச் சிவந்த நிறமுள்ள கோழையைத் துப்பல் ; அருசி ; வாய் நீரூறல் ; நீரருகல் ; வாய் பிதற்றல் ; மயக்கம் ; உடல் உலர்தல் ; உடல் எரிதல் ; கடுத்தல் ; உதடும் நாவும் கருத்தல்; தலை நோதல் ; வாந்தியாதல் ; மலம் போதல் ; அடிக்கடி மூச்சுகாணல் ; உடலும் விழியும் வெளுத்தல் கண்பார்வை மேல் நோக்கலாகிய குறி குணங்களுண்டாகும். அன்றியும் கொழுப்பு தாது வெளுப்படையும் என அறிக !

## 5. வளி ஐய இளைப்பு (வாத கப இளைப்பு)

1 " வாதகபதொந்த மெனும் வளியையக் கலப்பில்வரு
மிளைப்பிருமல் வகுக்கக் கேளாய்,
கோதமருமொழியின் மிகுகுத்திருமல்
ஒலிமாறல் கம்மல் வன்கோழைவீழல்
ஏதமுடன் வாந்தி சுரமிகக் காய்தல்
மிகுமூச்சுநுரை நுரையிலெச்சிலுமிழ்தல்
ஓதுதலைநோதலுடன் வற்றல் கைகால்வற்றல்
அரோசகமுடல் வெளுப்பே."

(வெண்பா)

2 " உடல்கடுத்தல் தாதுநட்டம் உற்றபசியின்மை
உடல்வன்மை யின்மையுறுமே—திடமாகச்
சோர்வு வருமென்றுரைப் போர்த் தொல்லோர்பல பிணியுஞ்
சாறு பெறநீயு முரைதா."

(இதன் பொருள்.)

வளி ஐய தொந்தத்தினாலுண்டான, இளைப்பிருமல் நோயில் பேசும் போதே குத்திருமலுண்டாதல் ; பேச்சொலி வேற்றுமைப் படுதல் ; தொண்டைக் கம்மல் ; கடின கோழை வீழல் ; வாந்தியாதல் ; சுரமிகுந்து காய்தல் ; சுவாச முண்டாதல் ; நுரை நுரையாக எச்சிலையுமிழ்தல் ; தலை நோதல் ; உடல் வெளுத்தலுடன் கடுத்தல் ; உடல் வற்றல் ; கைகால்கள் இளைத்துச் சுருங்கல் ; அரோசகம் ; தாது நட்டம் ; பசி யின்மை ; பலஹீனம் ; சோர்வு ஆகிய குறிகுணங்களையுண் டாக்கும்.

## 6. அழல் ஐய இளைப்பு (பித்த கப இளைப்பு)

1 " பித்தகபதொந்த மெனுந்தீயையக் கலப்பில் வரு
மிளைப்பிருமல் பேசக் கேளாய்,
முற்றுமுடல்வற்றலுடன் சுரமிகக் காயலிரு
முதல்கோழை முனிந்து துப்பல்,
இரத்தம்விழல் வாந்தியிலும் பேதியிலும்
யதுகெட்ட நாற்றமுறல் வாய்பிதற்றல்,
நித்திரைகொள்ளல் சோம்பல் மிகுமயக்கு
தலைசுற்றல் நீரிரத்தம் போலிழியுமே."

(வெண்பா)

2 " 'தாதுநட்ட மஞ்சளுடல் தாவும் விழிவெளுத்தல்,
ஓதுசிறுதாக முற்றுமிகக்—காதும்
பிரலாபங்கூடுமென்ல் பேசினாரீது
வரலாறு கொண்டுரை செய்."

(இதன் பொருள்)

பித்தமுங் கபமுங் கலந்துவரும் இளைப்பு நோயில் உடல் முற்றும் வற்றிச் சுரமிகுந்து காய்தல் ; இருமிக் கோழையைத் துப்பல் ; சில சமயம் இரத்த வாந்தி ; பேதியில் இரத்தம் வெளிப்படல் ; அந்த இரத்தம் கெட்ட நாற்றமாயிருத்தல் ; வாய் பிதற்றல் ; நித்திரை கொள்ளல் ; சோம்பல் ; மிகு மயக்கம் ; தலைசுற்றல் ; நீரில் இரத்தல் போலிழிதல் ; தாது நட்டம் ; உடல் மஞ்சளித்தல் ; கண்கள் வெளுத்தல் ; அற்ப தாகமுண்டாதல் ; பிரலாபித்தலாகிய குறி குணங்களுண்டாகும்.

## 7. முக்குற்ற இளைப்பு (சந்த பாத இளைப்பு)

1 " சந்நிபாதமென்னு மோரளவை முக்குற்ற
விளைப்பிரு மனோய்சாற்றக் கேளாய்
நன்னரின்றிச் சுரங்காய்தலொலி மாறி
யிருமலுடன் கடுத்தலொடு நடுங்கல் பேதி
வன்னரத்தக்கோழை விழல்இளைப் பருசி
மயக்கம் நாநடுவதனில் வட்டக் கருப்பு
மன்றியுடல் முற்றுங்கற்றாழை மணம் வீசலொடு
மிகப்பேசல் மாண்பதாமே."

(வெண்பா)

2 " ஆமுடிவில் சாவுக்கது காரணமாதல்
ஆமுடி மூக்கண் வேர்வையாகுமே—ஏமுறுகண்
வட்டமிடுங் கண்டாய் வருமூலக மாந்தர்க்குத்
திட்டமுடன் தீரும்வகை செப்பு."

(இதன் பொருள்).

சன்னி பாத இளைப்பிருமல் நோயில் சுரங்காய்தல் ; தொனி மாறல் ; இருமல் ; உடல் கருத்தலுடன் நடுங்கல் ; பேதி ; நாற்றம் பொருந்திய ரத்தக் கலப்புற்ற கோழையைக் கக்கல்; இளைப்பு ; அருசி ; மயக்கம் ; நாவின் மத்தியில் வட்டமாய்க் கருப்புத் தோன்றல்; உடல் கற்றாழை மணம் வீசல் ஆகிய இத்தகைய குறிகுணங்களையெல்லாம் ஆயுள் முடிவுக்குக் காரண மாதலால் தலை, மூக்கு, கண் இவ்விடங்களில் வியர்வையுண் டாதல் ; கண் மேல் பார்வை நோக்கி வட்டமிடல் ஆகிய குறி குணங்களையும் விளைவிக்கும்.

(கையெழுத்துப் பிரதி.)

மேற்கூறிய எழுவகை இளைப்பு நோய் பிரிவுகளின் தீரும் தீராதவை

(a) தீரும் நோய்கள்

1 பித்த இளைப்பு.
2 ஐய இளைப்பு.

இவ்விரண்டும் தக்க மருந்துகளால் தீரக் கூடியவையாம்.

(b) தீராதவை (தீரா நோய்கள்)

1 வாத இளைப்பு.
2 வாத பித்த இளைப்பு.
3 வாத ஐய இளைப்பு.
4 பித்த ஐய இளைப்பு.

முக்குற்ற இளைப்பு ஆகிய இவ்வைந்து பிரிவு இளைப்பு நோய் களும் தீராவாம்.

பொதுவாக இளைப்பு நோய் தீரும் இலக்கணமும், தீரா யிலக்கணமும் கூறுகிறார் ;

(a) தீரும் இலக்கணம்

1. தீரும் பிணியின் தன்மையறிந்து ஊட்டும்மருந்தால் படிப் படியாய் நோய் தணிந்து வருவதுடன் உடலுரமும், வளர்ச்சியும்; மனவலிவும் பெற்று விளங்கினால் நோய் தீருமெனவும் ;

2. நாவில் இளைத்தல், சோற்றில் விருப்பு, மூக்கின் மீது கட்டிகள், முகத்தில் வியர்வையுண்டாதல், தேமலைப்போல் ஒரு வித நிறம் காட்டல், ஆகிய இக்குறிகளிருந்தாலும் சாத்தியம் எனவும் முன்னோர்கள் கூறியுள்ளார்.

## (b) தீராவிலக்கணம்

1. மிக உணவு கொண்டும் நாளுக்கு நாள் உடல் சுட்கித்தலுடன் பேதி, விதையிலும், வயிற்றிலும், கைகால்களிலும் வீக்கங் கண்டாலும் ;

2. இருமல் அதிகரித்துச் சீழ் போலும் ; ரத்தம் போலும், கருநிறமாகவும் கோழையைத் துப்புவதுடன் விடாச் சுரமுமிருந்து உடல் ஒளி, வலிமை, குரலோசை ஆகிய இவைகள் நாளுக்கு நாள் குன்றினாலும் :

3. பக்க நோய், வயிற்றுப்பிசம், இரத்த வாந்தி, சீழான வாந்தி, இரு தோள்கள் அற்றுவிழுதல் போலிருத்தல் என்னுமிக் குணங்களிருந்தாலும் ;

4. வாய்வு பெருகி வயிற்றுளைச்சல், அதிசாரம் வீக்கம், விக்கல், இவைகள் கண்டாலும் ;

5. வாயில் எப்பொழுதும் கள் நுரை போல் நுண் நுரையும், சுக்கைப் போலும், தேரையைப்போலும் உடம்பு நேர்தல், விடா இருமல், விக்கல், மேல் மூச்சு, இளைப்பு (தொய்வு) இவைகள் கண்டாலும் நோய் தீராவென அறிக !

சுருங்கக் கூறில் இளைப்பு நோய் என்னும் சயரோகம் எளிதில் தீராததும், பயங்கரமான வியாதிகளிலொன்றாகவும் முன்னோர்கள் கூறியுள்ளார். ஆரம்ப நிலையில் தக்க மருந்துகளால் குணமாகும்.

(கை எழுத்துப் பிரதி.)

## இளைப்பு நோயின் பொதுக் குறி குணங்கள்.

முக்குறியில் காணும் குறி குணங்களோடு நாளுக்கு நாள் மாலையில் வரும் சிறு சுரமானது அதிகரித்தல் ; உடல் மெலிதல் ; உடற்பட்டு ஒன்றின் பின் ஒன்றாய்க் குன்றல் ; ஐயம் ; பெருகிக் குரற்கம்மல் ; மூக்கு நீர் பாய்தல் ; பசியின்மை ; ஆகாரத்தின் மீது வெறுப்பு ; இருமல் ; கோழைக்கக்கல் ; இரத்தம் விழல் ; பக்க சூலை (விலாப் பக்கத்தில் வலி) ; இரவில் வியர்த்தல் ; கண் பஞ்சடைதல் ; காது கேளாமை; மிகுந்த கழிச்சல் ; வாந்தி அடிக்கடி மயக்க முண்டாதல்; மனந்தளரல் ; அடிக்கடி மூச்சு வாங்கல் ; ஆயாசம் ; நாடிள் வன்மை குன்றல் ; ஆகிய இக்குறி குணங்களைக் காட்டிக் கால்லுவதுமுண்டு.

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்

முதல் நிலை.—இளைப்பு நோயில் முதற் காரணமாய் நிற்பது '' அழல் '' குற்றமேயாகும் (i.e. பித்தம்); அல்லது ''அழல்ஐய'' மேயாகும் (பித்த கபம்) ; அல்லது '' பித்தத்திலுஷ்ணமுமாகும் '' என்பர்,

இதனைக் கீழ்க்காணும் மேற்கோள்களால் தெரியவரும் :—

1. '' சீரான கயரோகந் தனக்குப் பீத்தம்.''

2. '' பித்தந்தான் ஐயத்தோடு
பெருமுகந் திரும்பி நின்றால்
மத்திம சய ரோகத்தை
வாவென யழைக்குந் தானே.''

3. '' பித்தத்தில் பித்தமாகில்
பிதற்றிடுங் கிறுகிறுக்கும்
சத்தியு மதிகமாகுஞ்
சரீரத் திளைப்புண்டாகும்
அத்தியா யுலருமேனி
யாகமும் வேறதாகும்
வற்றியே வெளுத்துக்காயம்
வரண்டுபின் வீக்கமுண்டாம்.''

4. '' பித்தமே செனித்தாற்சூடு
பெலத்துடலு லரச்செய்யும்
பித்தமே மிகுந்தாலீளை
யிருமலும் பெலத்து நிற்கும்.

* * * *

5. '' தழைப்பான பித்தத்தில்
உட்ணஞ் சேர்ந்தால் சயம்.''

என்பதினாலறிக !

இரண்டாம் நிலை.—இந்நோயில் டடுத்தபடியாக (அதாவது நோய் முதிரும் இரண்டாவது நிலையில்) பித்தவாத தொந்தம் காரணமாகும்; எங்ஙனமெனில்

6. " பித்தத்தில் வாதமாகில்
பிடரியுங் காலுங்கையுங்
குத்தது போலேயாகுங்
குறுகிமெய் பதறும்பின்னே
அத்தியா யுலருமேனி
யாகமுஞ் சுரத்தில் நோவாம்.

*　　　*　　　*

என்பதினாலறிக !

மூன்றாம் நிலை.—மேற்கொண்டு இந்நோய் முதிரும் மூன்றாம் நிலையில் பித்த ஐய தொந்தம் தீவிரமான நிலையையே காரணமாகும்.

7. " பண்பான பித்தத்தில் சேத்தும நாடி
பரிசித்தாலத்தி சுரமிளைப்பு ஈளை

*　　　*　　　*

என்பதினாலறிக !

**நான்காவது நிலை.**—கடைசியில் (i) ஐயக்குற்றம் **தனித்து** மீறி நிற்றல் ; (ii) ஐயத்துடன் உஷ்ணம் சேரல் ; (iii) வாதத்துடன் சீதம் சேரல் (iv) ஐயவாதக் கலப்பு ஆகிய நிலைகளேற்பட்டு நோயை மிகவும் பலமாக்கி நோயினனை அளவில்லாத் துன்பங்களுக்குட்படுத்துமென அறியவும்.

கீழ்க்காணும் மேற்கோள்களைக் கவனிக்கவும் :—

8. " உற்பவித்த கபமீளை காச ரோகம்
உற்றிடிலோ சிலேத்துமமது மீறிக் காணும்."

9. " ஐயமே கதித்தபோது
யறியவே இருமல்காசம்
நையுமுளை மாந்தைஈளை
நளிர்குளிர் விக்கல் செய்யும்
செய்யுமே மூக்கடைப்பு
தீதுறு காசரோகம்
துய்யுமே இளைப்பு காசம்
தோன்றும் ரிஷிகள் சொன்னாரே."

10. "உற்றிடும் ஐயநாடி ஓங்கியே
துடித்து நின்றால்
பற்றிடு மிருமலீளை பதறியே
இளைப்புண்டாகும்
கொத்தவே கோழைவாயுமிகுந்திடும்.

* * *"

11. "சிலேத்தும நாடிதானே தெளிவொடு நிற்கில் தீதாம்;
சிலேத்தும மந்தம்பற்றில் சேர்த்திடுங் கோழைவாயு
* * *."

12. "ஐயமேகதித்த போதவ்வையமே மெலிந்து கொல்லும்".

13. "தானமுள்ள சேத்துமந்தா னிளகில் வெப்பு,
சயமீளை யிருமல் மந்தாரகாசம்

* * *."

14. "கதிப்பான சேத்துமத்திலுட்ணங் கூடிக்
கலந்தகுணஞ் சயமிருமல் சுவாச காசம்
* * *."

15. "இருக்குமந்த வாதத்தில் சீதஞ் சேர்ந்தால்,
இளைப்பிருமல் விடசன்னி தோடம் வீச்சு
* * *."

16. "கண்டாயோ சிலேற்பனத்தில் வாதநாடி
கலந்திடுகில் வயிறுபொருமல் கனத்த வீக்கம்,
உண்டாலோ ஓங்காரசத்தி விக்கல்,
உறுதிரட்சை வாய்வுவலி சன்னிதோடம்,
விண்டாலே இளைப்பிருமல் சோகை பாண்டு,
விடபாகம் விடசூலை பக்கவாதம்,
திண்டாடு நாசிகா பீடங் கக்கல்,
சிரநோய்கள் பலவும் வந்து சிக்குந்தானே."

(ப.சி.—நாடி நூல்.)

இத்தியாதி மேற்கோள்களால் நாம் தெரிந்து கொள்ளுவது யாதெனில் ; இளைப்பு நோயானது எக்குற்ற வாயிலாக ஆரம்பித்து, எக் குற்றங்களோடு கூடியே அல்லது தனித்து மீறி நின்றோ நோயைப் படிப்படியாக முதிரச் செய்கிறதென்பதும் நன்கு புலனாகிறது. இக்குற்ற வேறுபாடுகளுக்குப் பொருத்தமான சிகிச்சையளிப்பின் உயர்தர மருந்துகளைக் கொண்டும் அனுபவங்களைக் கொண்டும் இக் கொடிய நோயை நிவர்த்திக்கலாம்.

சுருங்கக் கூறில் ; இளைப்பு நோய்க்கு முற்குறி தோடம்—

(i) பித்த மிகுதி அல்லது பித்தத்திலுட்டிணம் அல்லது பித்த ஐயதொந்தம்.

(ii) அடுத்தபடியாக பித்தவாத தொந்தம்.

(iii) அடுத்தாற்போல் பித்த ஐயதொந்தம் தீவிரம்.

(iv) கடைசியில் ஐயதோடம் தனித்து மீறி நிற்றல்.

(v) வளிக்குற்ற மிகுதியுடன் சீதம் சேருதல்.

(vi) ஐயவளி தொந்தம்.

(vii) ஐயக் குற்ற மிகுதியுடன் சீதஞ் சேர்தல் ஆகிய இத்தியாதி முக்குற்ற வேறுபாடுகளால் ஐய நோயைப் பிறப்பித்து, வலுப்படுத்தி, அசாத்திய நிலைமையையும் உண்டாக்கும் என பழமையான நூல்கள் கூறுகின்றன.

(ப.சி.—நாடி நூல்.)

### வேறுவகைப் பிரிவினை.

சித்த மருத்துவத்தில் இளைப்பு நோயைக் கீழ்க்கண்டவாறு பிரித்துள்ளார்கள்.

இளைப்பு நோயானது உடல் வன்மையைக் கெடுத்து, உடற் கட்டுனவயுங் கெடுத்து, முகக் குற்றங்களும், நான்கு கால்களும் (வாயுக்கள்) கேடடைவதினளவாக உடலில் எவ்வுறுப்புகளையும் இந்நோய் பற்றக்கூடும் எனவும் ;

கால்கள் (வாயுக்கள்) நான்கின் அளவாகப் பிறக்கும் இளைப்பு நோய்ப் பிரிவுகள் நாலுடன்; உறுப்பு அளவாக (கீல்கள்) பிறக்கும் நோய் ஒன்று சேர்ந்து ஐந்து வகை எனவும்;

இவ்வைந்து பிரிவுகளும் எண்ணிக்கையளவாகவும், நோய் கொண் முக்குற்றங்களினளவாகவும், இங்ஙனுக்குத் தக்க (வாறும்) குறி குணங்கள் வேற்றுமையடையும் எனவும் ;

மீண்டும் எண்ணிக்கையில் பெருகும் எனவும் "சித்த மருத்துவ" நூலில் கூறியுள்ளார்கள்.

இளைப்பு நோயினை முக் குற்றயளவாக நான்கு பிரிவாகவும், பனிரெண்டு பிரிவுகளாகவும் சில நூல்கள் வகுப்பரெனவும் (எந்த நூல்களெனக் குறிப்பிடவில்லை), அவற்றுள் முதலில் கூறிய நான்கு பிரிவுகளை இங்கு விளக்கிக் கூறுவதாகவும், "சித்த மருத்துவம்" தெரிவிக்கிறது.

குறிப்பு.—"சித்த மருத்துவம்" போதிக்கிற இளைப்பு நோய்ப் பிரிவுகள் பெரும்பாலும் "நவீன மருத்துவ நூல்"களில் (Modern Medical Books) காணும் பிரிவுகளை இங்கு திரட்டி எழுதிய மாதிரி தோற்றமளிக்கிறதேயல்லாமல், சித்த மருத்துவ நூல்களில் வேறெந்தப் பழமையான நூல்களிலும் இவ்வகையான இளைப்பு நோய்ப் பிரிவுகள் வரைந்திருப்பதாக நான் நினைக்கவில்லை.

மாணவர்கள் குற்றயளவாகப் பிரித்துள்ள ஏழு வகை இளைப்பு நோய்ப் பிரிவுகளைத் தெரிந்திருந்தாலே போதுமானது. அவற்றை முன்னமேயே விளக்கியுள்ளோம். ஏதுவுக்கும் சித்த மருத்துவத்தில் வரைந்துள்ளதையும் மாணவர்களது தகவலுக்காக கீழே கூறப்பட்டுள்ளன. அவற்றையும் மாணவர்கள் தெரிந்து கொள்வது நல்லது.

I. மேல் நோக்குங்கால் வாழுமிடம் (Upper part of the body).—அதாவது உடலின் மேல்பாக உறுப்புகளாகிய மூக்கு, கழுத்து, தொண்டை, மார்பு என்பனவற்றைக் குறிக்கும். இவ்விடங்களுக்குரிய குற்றங்கள் தீயும் ஐயுமாம் (பித்தமும் கபமும்). மேற்கால் (வாயு) களில் மேல் நோக்குங்கால் (உதான வாயு) மேற் கூறிய இரு குற்றங்களால் தூண்டப்பட்டு தன்னிலை பிறழ்ந்து வரும் நோயாகும். இதனை "ஊர்த்துவகத் தோடம்" எனக் கூறுவாருமுளர் என்கிறார்.

[N.B..— "ஊர்த்துவகத் தோடம்" என்பது ஒரு வகை தோட நோய். கயம் போன்றது. இது பித்த கபஸ்தானத்திற்கு மேல் அபானவாயுவைச் சஞ்சரிக்கச் செய்து பீனிசம், இருமல், இரைப்பு, தோளில் நோவு, தலைவலி, குரற் கம்மல், அரோசகம் என்னும் குறி குணங்களையுண்டாக்கும் மெனஅறிக.]

(II.) கீழ் நோக்குங்கால் வாழுமிடம் (Lower part of the body) —உந்திக்குக் கீழுள்ள உறுப்புகளைப் பற்றிவரும் இந்நோய் கீழ் நோக்கும் கால் (அபானன்) தன்னிலை பிறழ்ந்து உண்டாவது எனவும், இதனை "அதோகத் தோடம்" எனக் கூறுவாருமுளர் எனவும் கூறியுள்ளார் (ஆனால் எக்குற்றங்

களின் மிகுதியால் இங்கே அபானவாயு தூண்டப்படுகிறதென்பது சொல்லக் காணோம். மேல் நோக்குங்கால் தன்னிலை பிறழ் வதற்குக் காரணம் சொன்னமாதிரி இங்கேயில்லை.)

[N.B.—" அதோகதத் தோடம் " என்பது நாபிதானத்தின் கீழ், வாயுவைச் சஞ்சரிக்கச் செய்து அடிக்கடி மலம் போதல், வாயுலர்தலென்னும் குறி குணங்களையுண்டாக்கும் நோய்.]

III. நடுக்கால் வாழுமிடம் (Mid part of the body).—மார்பின் கீழும் உந்திக்கு மேலும் உள்ள இடத்து நடுக்கால் சமானன் தன்னிலை பிறழ்ந்து அதன் செயலிடமாகிய வயிற்றில் வரும் நோய் எனவும் இதனைக் " கோட்டகத் தோடம் " எனக் கூறுவாருமுளர் எனவும் கூறியுள்ளார்.

[N.B.— இதிலும் அபானவாயு தூண்டப்படும் குற்றங்கள் எவை என்பதும் குறிப்பிடக் காணோம்.]

[N.B.—" கோடகத் தோடம் " என்பது வயிற்றுக்குள் வாயுவைச் சஞ்சரிக்கச் செய்து வாந்தியையுண்டுபண்ணும் நோய்.]

IV. பரவுகால் (வியானன்) உலாவுகின்ற இடங்களில் அதன் கெடுதலால் " பக்கசூலை " போன்ற குத்தல் நோய்களும், நோலைப்பற்றிய கழலைகளும் பிறக்கும் எனவும்; இவற்றைத் திரியக்கத தோடம் எனக் கூறுவாருமுளர் எனவும் கூறியுள்ளார்.

N.B.—"இதிலும் பரவுகாலைத் தூண்டும் குற்றங்கள்யெவை என்பது குறிக்கப்படவில்லை.—"திரியக்கத தோடம்" என்பது இருவிலாப்பக்கங்களிலும் குறுக்கே வாயுவைச் சஞ்சரிக்கச் செய்து அவ்விடங்களில் சூலை நோயைப் பிறப்பிக்கும் நோய்.

N.B.— மேலே குறிப்பிட்ட நான்கு வகைப் பிரிவுகளும் கால் களைப்பற்றி (வாயுக்களை) யுண்டாவனவாம்.

V. கீல்களிலும், என்புகளிலும் காணும் இந்நோயைச் " சந்திகத தோடம்" எனவும் கூறியுள்ளார். இது உறுப்பைப் பற்றியது.

இதிலும் கேடடைந்த குற்றங்களெவையெனக் குறிப்பிட வில்லை— " சந்திகத தோடம் " என்பது சகல கீல்களிலும் வாயுவைச் சஞ்சரிக்கச் செய்து சுரம் ஒன்றை மாத்திரம் உண் டாக்கும் நோய்.

குறிப்பு.— வாதம், பித்தம், ஐயம், திரிதோட க்ஷயரோகம் என நாலுவகையாகப் பிரித்து, அவற்றுள் மேலே குறிப்பிட்ட படி ஐந்து தோடங்களும் (ஊர்த்துவகத் தோடம், அதோகத

தோடம்; கோட்டகத் தோடம், திரியக்கத தோடம், சந்திகத தோடம்) அவற்றுள் அடங்கிய பதினொரு குணங்களையும் (1.e.) பீநசம், இருமல், இரைபபு, தோளில் நோவு அல்லது தலை நோவு, குரற் கம்மல், அரோசகம், மலம் நழுகல், வாயுலரல வாந்தி, சூலை, (சுரம்)—சீவரைட்சாமிர்தத்தில ரத்த பித்த ரோகப்படலம், சயரோகத்தில் கூறியிருப்பதை "சித்த மருத்துவத்தில்" நாலுகால்களையும் கீல் எலும்புகளையும் இணைத்துக் கூறியுள்ளார். இதற்கும், சித்தர்கள் வகுத்துள்ள ஏழுவகைப் பிரிவுகளுக்குமுள்ள தனமைகளைக் கவனிக்கவும்.

இதற்கு மேல், ஒவ்வொரு இடத்திலுமுண்டாகக் கூடிய இளைப்பு நோய்குறி குணங்களை விரிவாக விளக்கியுள்ளார். இவற்றைக் கவனிக்கும் போது நவீன மருத்துவ நூல்களை அனுசரித்து எழுதியது போல் தோன்றுகிறது. அவை பினவருமாறு :—

I. மேல் பாக உறுப்புகளில் தோன்றும் இளைப்பு நோய்கள் அதாவது மேல் நோக்குங்கால் தூண்டப்படுவதால் உண்டாகும் இளைப்பு நோய்கள்.

### (i) மூக்கிலுண்டாம் இளைப்பு நோயின் குறிகுணங்கள்.

அடிக்கடி மூக்கடைத்துத் தும்முதல், இருமுதல், மூக்கு நீர் பாய்தல், மூக்கு நீரானது நாள்படின் கடினப்பட்டு சளிபோல் வீழ்ந்து அப்பால சகதைத் துண்டுபோலும் விழும். மூக்குத்தண்டு இருபக்கங்களிலேனும், ஒரு பக்கத்திலேனுப் புண்பட்டு உலராமல் வீங்கித் தடித்து வெளுததிருக்கும புணணைச் சுற்றிலும் சீழிருக்கும். அன்றியும் இளைப்பு நோய்க்குரிய முற்குறி பிற்குறி குணங்களும் நாளடைவில் தொடர்ந்திருக்குமென்றும், இந்நோய் சாதாரணமாய்க் காணப்படுவதில்லை எனவும் சித்த மருந்துவம் கூறுகின்றது. (This disease is probably Tubercular Rhinitis).

### (ii) தொண்டையில் காணும் இளைப்பு நோயின் குணங்கள்.

குரல்வளையில் ஐயமிகுவதால் எளிதில் தீராத குரல்கம்மலுண்டாம். உடல் மெலியும். இளைப்பு நோய்க்குரிய முற்குறி பிற்குறி குணங்கள் சேர்ந்து தோன்றும்.

அன்றியும், குரள்வளையின் இருபக்கங்களிலும் கழலையைப் போன்ற வீக்கததை உண்டாககி வெளுத்துச சீழ் நிரம்பியது போல் காணும், பின்னாடி அக்கழலை புண்படடுப் பள்ளம் மேடாகத் தோன்றும். புண்கள் சிவந்திராமல் வெளுப்பாயிருக்கும் நாள்படின் குரற்கம்மல் எம்மருந்திலும குணமாகாவாம் எனச் சித்த மருத்துவம் கூறுகின்றது. (This is probably Tubercular Laryngitis fansilitis.)

(iii) கழுத்தில் தோன்றும் இளைப்பு நோயின் குறிகுணங்கள்.

கழுத்தைச் சுற்றிலும் அல்லது அக்குள்களிலும் கண்டமாலை வருவது போல் சிறு கழலைகள் கண்டு வீங்கி, நொந்து, நாளுக்கு நாள் பெருத்துக்கொண்டே வரும். பின்னாடி இக்கழலைகள் ஒன்றோடொன்று இணைந்து மாலையைத் தொடுத்தாற்போல் அணி அணியாகத் தோன்றும். பெரும்பாலும் இந்நோய் இளைஞரில் வருவதுண்டு.

கழுத்தில் இக்கழலைகள் நாளுக்கு நாள் பெருத்துத்திரண்டு கடினப்பட்டு உருண்டையாகக் காணும், பழுத்து உடையும், பிசுபிசுத்த சீழ் கசியும், எளிதில் புண் உலராது.

உடல் மெலிந்து எலும்புதோலுமாகும். சுரம், இருமல், பேதி முதலியன தொடர்ந்து இறுதியில் நோயினைக் கொல்லுமெனவும் சித்த மருத்துவம் கூறுகின்றது. (This is probably Tubercular gland neck).

(iv) மார்பில் தோன்றும் இளைப்பு நோயின் குறிகுணங்கள்.

இந் நோய் நுரைஈரலைப் பற்றியுண்டாகும். நோயின்ன் அறியாவண்ணம் உடலை மெலிவடையச்செய்யும், உணவில் வெறுப்பு, மூக்கு நீர்பாய்தல், இருமல், சளியுடன் குருதி கலந்து வெளியாதல் குரற் கம்மல் மாலையில் சுரங்காய்தல், மூச்சு தடைப்படல் என்னுங்குறி குணங்களைக் காட்டி பக்க சூலை, மிகுசுரம், இருமல் இரைப்பு முதலிய தீவிர குறிகுணங்களையுமுண்டாக்கி அதிகளவில் கோழையையும் கக்கச் செய்யும். சிலருக்குப் பகலில் அதிகம் சுரங்காய்ந்து இரவில் விட்டு மிகவும் வியர்க்கும்.

சிலருக்கு மேற்கண்ட குறி குணங்களொன்றையும் காட்டாமல் உடல் மாத்திரம் மெலிவடையும்; வன்மை குன்றும்; இருமல் சிறிது உணடாகி அப்பால் தீவிரப்படுத்துவது முண்டு.

மற்றும் சிலருக்கு ஐய சுரத்திலீடுபட்டு மெலிந்தபின் சிறு சுரம் தொடர்ந்து உடலை மெலியச் செய்து, இளைப்பு நோயை யுண்டாக்கிப் பிறகு மற்றையக் குறி குணங்களையும் காட்டும். (This is probably pulmonary Tuberculosis).] (கயநோய்)].

(v) அக்குளில் தோன்றும் இளைப்பு நோய்க் குறி குணங்கள்.

இந் நோய் பத்துப் பதினைந்து வயதுக்கு மேல் காணும், மேற்கூறிய குறிகுணங்கள் யாவும் கண்டு சிறு கழலைகள் அக்குள்களில் தோன்றும். இந் நோயின் தன்மை. குறிகுணங்கள் யாவும் மேற்கூறிய "கழுத்தில் தோன்றும் இளைப்பு நோயின்" தன்மையையும் குறிகுணங்களையும் ஒத்திருக்கும். (Thi is probably Tubercular glands axilla).

குறிப்பு.—இம்மட்டோடு மேல் நோக்குங்கால் தூண்டப்படுவதால் உடலின் மேல்பாக உறுப்புகளில் உண்டாம் இளைப்பு நோய்க் குறி குணங்களெனச் சித்த மருத்துவம் கூறியதைத் தெரிந்து கொண்டோம்.

இனி மேலாக ;

**II. உந்திக்குக் கீழ் (கீழ் நோக்குங்கால் தூண்டப்படுவதால்) உள்ள உறுப்புகளில் உண்டாம் இளைப்பு நோய்க் குறி குணங்கள் இன்னதெனல்.**

உந்திக்குக்கீழ் வரும் நோயில் இளைப்பு நோய்கள் குடலைப் பற்றியும், குடலைச் சார்ந்த உறுப்புக்களைப் பற்றியும் உண்டாகும். மார்பைப் பற்றிய இளைப்பு நோய்குறி குணங்களோடு அடிக்கடி கழியச் செய்யும். உடல் மிகவும் இளைக்கும், அடிவயிறு சிறிது பெருத்துக்காணும். இந்நோய் சிறு வயதினருக்குண்டாயின் வயிறு பெருத்து, கை கால் சூம்பி, முகம் சுருங்கி, உடல் வெளுத்து, சுரமும் உண்டாகும். வயிற்றுத் தோலின்கீழ் சிறுசிறு கழலைகளைப்போல் திரளும். நாளுக்கு நாள் கழிச்சலை உண்டாக்கி, வயிறு பெருத்து வயிறு நோதலுடன் பெருவயிறு போல் வயிற்றுள் நீர் கோர்த்தலாகிய குறி குணங்களையும் காட்டுமெனச் சித்த மருத்துவம் கூறுகின்றது. (This is probably Tubercular enteritis, Peritonits and Ascitis).

**III. மார்புக்குக் கீழும் உந்திக்கு மேலுமுள்ள உறுப்புகளில் நடுக் கால் (சமானன்) தூண்டப்படுவதால் உண்டாகும் இளைப்பு நோய்க் குறி குணங்கள் இவை எனல்.**

இது இடப்பாட்டீரல், நீர்க் குண்டிக்காய் (பருக்கம்) ஆகிய இவ்வுறுப்புகளில் வரும் இளைப்பு நோயாம்.

(a) இடப்பாட்டீரலைப் பற்றிவரும் நோயில், இளைப்பு நோயில் காணும் குறிகுணங்களோடு இடப்பாட்டீரலும் பெருத்துக் கொண்டே வரும்.

(b) நீர்க் குண்டிக்காயிலுண்டாம் நோயில் அவ்வாறே நீர்க் குண்டிக்காயும் வீங்கி, அடிக்கடி நீரிழிதல், நீரில் சிறிது சீழ் அல்லது குருதி கலந்து இழிதல்; நீர்ப்புழை எரிதல்; நீரை அடக்க முடியாமல் அடிக்கடி இழிதல்; உடல் இளைத்தல்; இடுப்பின் பின் பக்கத்தில் தாங்கமுடியாத வலி ஆகிய குறிகுணங்களைக் காட்டுமெனச் சித்த மருத்துவம் கூறுகின்றது. (This is probably Tubercular spleen and Tubercular Kidneys.)

IV. பரவுகால் தூண்டப்படுவதாலுண்டாகும் இளைப்பு நோய்க் குறிகுணங்களிவை எனல்.

இப்பகுதியில் (a) தோலைப்பற்றி வருவனவும்; (b) மார்பின் பக்கம் வருவதான பக்கசூலை நோயும் சேர்ந்தனவாம்.

(a) தோலைப் பற்றி வரும் இளைப்பு நோய்.—இது பெரும்பாலும் சிறுவயதிலும், நடு வயதிலும் வரும் நோயாம் இந்நோய் மூக்கு, தாடை, கால்விரல், கைவிரல்கள் முதலிய இடங்களில் படையைப்போல் தோன்றி, கழலையைப் போல் வளர்ந்து பிறகு சிவந்து வீங்கி, மருளைப் போலவும் வளர்ந்து புண்ணாகும். அதன் மேல் அடைகட்டியது போல் மூடிக்கொள்ளும். இவ்வாறாகவே புண்ணாவதும், பக்கு கட்டிக்கொள்ளுவதுமாகவே ஆறாமல் நிலைத்து விடுவதுண்டு. (This is Probably Tubercular granuloma or other Skin lesions)

(b) மார்பின் பக்கமாக வரும் இளைப்பு நோயானது பக்கசூலை நோயில் காணும் குறி குணங்களாகிய மூச்சுவிடமுடியாமை மூச்சுவிடும் போது விலாப்பக்கங்களில் எலும்பு வலித்தல் குத்தல், சிறு சுரம்; படுக்கையிலிருக்க முடியாமை; நாட்படின்; பக்க விலாச் சவ்வுகளுக்கிடையில் நீர் சுரத்தல்; விலாவெலும்புகள் தெரியாமற்படி வீங்கிக் காணுதல்; இத்தியாதி குறிகுணங்களோடு இளைப்பு நோய்க் குறி குணங்களையும் காட்டும் எனவும்;

இப் பக்கசூலை இளைப்பு நோய்க்குத் துணை நோயாகவும் வருவதுண்டு. இளைப்பு நோய் முதலில் வருங்கால் திடீரெனப் பக்க விலாவில் தாங்கமுடியாத வலியைத் தந்து; அங்கு ஏதோ பிழிந்துவிட்டது போற்றோன்றி மூச்சுவிட முடியாமற் பரிதவிக்கச் செய்யும். அத்துடன் மனம் திடுக்கிடல்; முகம் வெளுத்து நீலமாதல், கைகால்கள் சில்லிட்டுப் பிசுபிசுத்த வியர்வைவிடல்; மார்பு துடித்தல்; நாடி நடை மெலிதல்; பேசமுடியாமை ஆகிய குறி குணங்களையும் காட்டும் எனவும் சித்தமருத்துவம் கூறுகின்றது. (This Probably Tubercular Pleurisy or empyema)

V. கீல்களிலும், எலும்புகளிலும் உண்டாகும் இளைப்பு நோய்கள்.

(a) கீல்களிலுண்டாகும் இளைப்பு நோய்க் குறிகுணங்கள்.

இந்நோய் பெரும்பாலும் சிறுவர்களுக்கு முழங்கால், முழங்கைகளில் வருவதுண்டு.

நரித்தலை வாதத்தைப் போல் முட்டிகளில் ஒன்றேனும், பலவேனும் வீங்கி, நோவுடன் நீர் கோர்த்துக் கொள்ளும்; சிறு சுரம்; உடல் இளைத்தல்; மற்றும் இளைப்பு நோய்க்குரிய குறி குணங்களும் தோன்றும். (This is Probably Tubercular joints such as Knee or elbow)

இரண்டாவதாக, இந்நோய் இடுப்பின் கீழுள்ள இருபட்டை என்பும் (Pelris) கால் மேல் எலும்புங் கூடும் கிண்ணப்பந்து சந்திலுண்டாகும். (Lleo femoral articu Laticu or tiip Joint). இதில் பெரும்பாலும் மேற்காலின் எலும்பு முட்டி (Head of the femur in the ball and socket joint) முதலில் தாக்கப்பட்டு, பிறகு அக்கீல் (Hip Joint) தாபிதப்பட்டு, பரவி, என்பை அழுகச் செய்து; காலின் அளவைக் குறுகச் செய்து (Shoitening of he affected limb) அதனால் நோயுற்ற கால் மற்றக் காலைவிடக் குறுகியிருக்கும். நீட்டவும் முடக்கவும் முடியா. உடலை இளைக்கச் செய்து இளைப்பு நோயின் மற்றக் குறிகுணங்களையும் காட்டும். இந்நோய் சிறுவர்களுக்கு அதிகம் காணும். (This is probabty tubercular hip joint)

(b) எலும்பைப் பற்றியுண்டாம் இளைப்பு நோய்க் குறிகுணங்கள்.

தலையிலிருந்து கீழ்வாய்வரையிலுள்ள முதுகுத் தண்டு எலும்புகளுள் (Spinal column or vertebral column) எவ்வெலும்பையாவது பற்றி இந்நோய் உண்டாகும். பற்றிய எலும்புக்கேற்பக் குறிகுணங்களும் வேறுபாடடையும்.

(i) முதுகுத் தண்டின் கீழ்ப்பாகத்தைப் பற்றி வரும் நோயில்.—முதுகுத் தண்டின் உறுப்புகள் எப்பக்கத்தேனும் சிதைந்து; சிதைந்த எலும்பின் எடை குறைவதால் (Weight and extent of the body of the Vertebia due to the damage) முதுகுத்தண்டு வளைந்து காணும். அவ்விடத்தில் மிக்க வலியில்லாதிருப்பினும், தலையில் தட்டல் (tapping on the head), அடித்தல் முதலியனவற்றின் அதிர்ச்சியால் நோயுள்ள எலும்பு வலிக்கும். அன்றியும் முதுகுத்தண்டு வளையும் போதும் வலிக்கும் (bending of the spien to piek a eoin on the floor in painful. This is what is known as patt deseare)

(ii) மேலும், அரையின் பக்கமுள்ள தண்டெலும்புகளின் நோயுள்ளபோது காலின் நீளம் குறையும்.

(iii) அதற்கு மேலுள்ள தண்டெலும்புகளில் நோயுள்ளபோது Probably affection of the lumber region of the Spine) அடிவயிறு : பட்டம் முதலிய இடங்களில் நோவுண்டாகும்.

(vi) மார்பின் பின்புறம் தண்டெலும்புகளில் நோயுள்ளபோது : Affection of the Thoracic region of the Spine மேல் வயிறு வலிக்கும். முதுகுத் தண்டைக் குனியவும் நிமிரவும் வொட்டாமற் செய்யும். நோய் முதிர முதிர முதுகுத்தண்டு எலும்புகள் இணைந்துப் பின்பக்கமாக வளைந்து கூனடையும் அல்லது முன் பக்க மேலும்,

இடது அல்லது வலது பக்கமேனும் வளைந்து காணும். (This is probably fusion of the body of the vertebra with the result that kyphosi or scoliosis or Lardosis is developed.)

(v) இந்நோய் கழுத்தினிடமாகவுள்ள தண்டெலும்பு களிருலிப்பின் : (Cervical region of the spine) தலை நிமிர்ந்து, அதற்குத் துணையாகத் தோள் கட்டைகளை அணையச் செய்து தலையை இப்படியும் அப்படியும் திரும்பிப் பார்க்க முடியாமல், உடலோடு சேர்த்து அசையச் செய்யும். (This is stiff neck.).

எலும்பைப் பற்றிய இந்நோயில் எலும்புகள் அழுகிச் சீழ் கொள்ளுமாயின் : அச்சீழ் எலும்புகளைப் பற்றி மெல்லிய சவ்வு களின் இடையே (Periosteum) நுழைந்து, நோயுற்ற இடத்திற்குத் தகுந்தாற்போல், வாயின் கீழ்ப்புறம், விலாப் புறம், மார்பின் பக்கம் அல்லது தொடையின் இடுக்கு இவை களில் பாய்ந்து, கட்டி போற்றோன்றி (Tubercular abscess உடைந்து சீழ் வெளியாவதுமுண்டு.

(Similar to psoasabscess, etc.)

அழுகி நொந்த எலும்புகளிடையே அகப்பட்டு நரம்பு கள் சிதையு மாயின் : அந்நரம்புகளின் இயக்கங் கெட்டு அங் குள்ள உறுப்புகளின் செயலற்றுப் போதல் ; குத்தல் ; குடை தல் ; மரத்துப் போதல் ; பக்க வாதம் போல் கால் நடக்க முடியாமை ; சிறு நீரைக் கழிக்க முடியாமை முதலிய குறி குணங்களைக் காட்டுமெனவும் ; கழுத்தினிடமுள்ள தண்டெ லும்பைப் பற்றி வரும் இளைப்பு நோய்த் திடீரெனக் கொல்லு வதுமுண்டு எனவும் கூறுவர்.

(Tubercular infection of motor nerve causing hemiplegia and other saralysis, etc.)

இவ்வாறாக இளைப்பு நோய்ப் பிரிவினையையும் ; ஒவ் வொன்றின் தன்மை, குறிகுணங்கள் முதலியவற்றையும் சித்த மருத்துவத்தில் விளக்கியிருப்பதைப் பார்க்க நவீன மருத்துவ நூல்களை அனுசரித்து எழுதப்பட்டதாகக் கருத வேண்டி யிருக்கிறது. மாணவர்கள் இதனையும் படித்துத் தெரிந்து கொள்ளுவது மேன்மையாகும்.

## 10. உளைமாந்தை.

வேறு பெயர்கள் : குடல் இளைப்பு நோய் ; குடற் சயம் எனப்படும்.

இயல் : உளைமாந்தை என்னும் சொல் உள்+ஐ+மாந்தை எனப்படும்.

உள் = வயிற்றுள்.
ஐ = ஐயக்குற்றத்தால்
மாந்தை = மாந்தம் எனப் பொருள்படும்.

அதாவது ஐயக் குற்றத்தால் வயிற்றுள் மாந்தத்தையுண்டாக்கிப் பசித் தீயைக் கெடுத்து, உணவைச் செரிப்பிக்காமல் வயிறூதல், கழிச்சல், உடல் இளைத்தல், இருமல், கோழை, கக்கல், நாள் பட்டும் தீராதிருத்தல் ஆகிய இயல்புடைய நோயாம்.

குறிப்பு.—உனக்கு " உளமாந்தை வர " என்பதாக ஒருவர்க் கொருவர் திட்டுவதுண்டு. இது இந்நோயின் கொடுமையைக் காண்பிக்கிறது.

இந்நோய் இளைப்பு நோய் பகுதியெனத் தமிழ் நூல்கள் கூறும்.

(மேற்கோள்)

" உளைமாந்தை " என்னும் சொல்லின் பொருள் கூறுகிறார்.

" உளைமாந்தைப் பொருளோதுங் காலை
உளை எனுஞ் சொற்பிரியுள் ஐ என்ப
ஆதலால் உள்எனும கட்டினுள்ளே
தீதலரையதாற் சேர்ந்து சீயும்
வருதலாமதற்கடி வருமுக்குற்றம்
தருமிகல் குறைவில் தாக்கலாகும்
ஆயினுமவற்ற கதுவதன்மாறு
முணவதால் மந்தமுருவதாமென்
றப்பெயர் வளித்தாயரைவர்
தப்பி நூலோர் தாமறிமுறையே."

ஞாலறிக !

(கை எழுத்துப் படி)

"உளைமாந்தை" நோய் இளைப்பு நோய்ப் பகுதியைச் சேர்ந்தது எனத் தேரையர், யூகிமுனி போன்றவர்கள் கூறுவர்.

(மேற் கோள்)

"பாரென்ற க்ஷயமது தான்பனிரெண்டாகும்
பண்பாகக் காசமது பனிரெண்டு
ஊரென்ற உளைமாந்தை நாலுமாச்சு
உகப்பாக இருபத்தி எட்டுமாச்சு
காரென்ற திதுவெல்லாம் க்ஷயத்திற் கூட்டிக்
காரணமாந்தேரைய மாமுனிவன் சொல்ல
ஊரென்ற யூகி முனி யாகுநான்தான்
உலகத்தோர்க்காக வெண்ணி உரைசெய்தேனே."

என்பதினாலறிக!

(யூகி சிந்தாமணி)

நோய் வரும் வழி.

"அதிகப்பசியை யடக்கலுடன்
யதன்பின் மந்தத்துணவு கொள்ளல்
கதிகொள்ளோட்டம் தசைமிகுதி
கறியாக் கொள்ளல் கண்விழித்தல்
பதியிற்பகல் நித்திரை கொள்ளல்
பாவையருடன் செய்யோகமிகல்
மதியை மயக்கு முளைமாந்தை
வருங்காரண மென்றுரைப்பாரே.

என்பதினால், பசியையடக்கல், மந்தத்தில் உணவு கொள்ளல், உண்டவுடன் அதிக ஓட்டம், மாமிசம் மிகுதியாய்ப் புசித்தல், கண் விழித்தல், பகல் நித்திரை, சையோக மிகுதி ஆகிய இக் காரணங்களால் மதியை மயக்கக்கூடிய உளைமாந்தை ரோக முண்டாகுமென்பர்.

(கை எழுத்துப் பிரதி)

(வேறு)

உளைமாந்தை நோயுண்டாவதற்குக் காரணம் யூகிமுனி கூறுவதாவது.

"சாற்றவே தானி யத்தை குறைத்தபேர்க்குஞ்
சடுதியிலே சீவவதை பண்ணினோர்க்கும்
கோற்றவே குலமடந்தை கற்பழித்துக்
கொடுமையாம் கொலைகளவு கட்காமந்தான்

போற்றவே பூசைக்கு இடறுகாணல்
புருடனிட ஸ்திரிதனையே பிரிக்கின்றோர்க்கும்
ஊற்றவே உளைமாந்தை ரோகம் வந்து
உற்பவிக்கு முறுதி யென்றே உரைக்கலாமே.''

2\. '' உரைக்கவே ஊழித்தீக் கிரைகொடாமல்
உட்கார்ந்து அக்கினிதான் மந்தித்தப்போ
பரைக்கவே யசனத்தைப் பருகினோர்க்கும்
பகலுறங்கி இரவுதனில் விழித்தலாலும்
புரைக்கவே புலால்தனையே பொசித்தலாலும்
புணர்ச்சியின் மயக்கத்திற் பொருந்தலாலும்
இரைக்கவே கடுவோட்ட மோடினாலும்
எய்திடுமென்று உளைமாந்தை யிசைக்கலாமே.''

என்பதினாலும், முன்சொன்ன காரணங்களோடு, மீண்டும் கண்டு முதல் தானியத்தைக் குறைத்தபேர்க்கும், சீவவதை செய்த பேர்க்கும், பெண்களை கற்பழிப்பவர்கள், கொலை, களவு, கள், காமம், இவற்றையுடையவர்கள், தெய்வ வணக்கம் இடறு செய்தோர், கணவன் மனைவியைப் பிரிக்கின்றோர் ஆகிய இத்தகைய தகாத நடத்தையுள்ளவர்களுக்கும் உளை மாந்தை ரோகம் வந்து சம்பவிப்பது உறுதி என்கிறார் யூகிமுனி.

(யூகி சிந்தாமணி).

நோய் எண்.

1\. '' இளைப்பு நோய்ப் பிரிவெனு முளமாந்தை
வளைத்துக் கூறுவன் வளியொடு தீயை
அளைதல் நான்கென வரைந்தனர் மருந்து நூல்
கலைமிகத் தெரிந்தவர் கணித்தறி முறையிதே.''

என்பதினால்,

1\. வளி உளைமாந்தை

2\. அழல் உளை மாந்தை

3\. ஐய உளைமாந்தை

4\. முக்குற்ற உளைமாந்தை என நான்கு பிரிவுகளாகத் தொகுத்தனர் மருத்துவ வல்லார்.

(கை எழுத்துப் பிரதி.)

(வேறு)

2. "இசைக்கவே உளை மாந்தை நாலதாகும்
இதனுடைய நாமத்தை இயம்பக் கேளாய்,
வசைக்கவே வாதவுளை மாந்தையோடு
மருவுகின்ற பித்தவுளை மாந்தை யாகும்.

திசைக்கவே சிலேட்டுமவுளை மாந்தை யோடு
செயலான தொந்தவுளை மாந்தை யாகும்.
அசைக்கவே, நாலினிடவாண்மை தன்னை
அசாத்திய சாத்திய மென்றே யறிந்து உன்னே."

(யூகிமுனி சிந்தாமணி.)

என்பதினாலும் உளைமாந்தை நோய் மேற் கூறிய பிரகாரம் நான்கு வகை என்பது தெளிவாகிறது.

### உளமாந்தை நோயின் முற்குறி குணங்கள்.

ஆரம்பத்தில் தலை நோய், மந்தம், மூக்குநீர் பாய்தல், குரற் கம்மல், சிணுக்கிருமல், உணவு செல்லாமை ஆகிய இவைகளுண்டாகி, அப்பால், இடைவிடாது இருமிக் கோழையை மிகுதியாகவும், கடினத்துடனும், நாற்றத்துடனும், சீழை யொத்து வெளியாக்கும். அடிக்கடி பேதியாகும். சுரமுங் காயும் என்பதான குறி குணங்களைக் காட்டும்.

### ஒவ்வொரு பிரிவு உளைமாந்தை நோயின் தனித்தனி குறிகுணங்கள்.

### 1. வளி உளைமாந்தை.

"நெஞ்சுடன் பக்கப் பழுக்கள் நினைவழிந்திருமிநொந்து
பஞ்சுபோற் சுரமுந் தோன்றிப் பழுத்துள்ளே சீயுங்கட்டி
யஞ்சவே ஐதீமிஞ்சி யசனமு மொறுத்து வாந்தி,
யஞ்சுகை கால் கடுக்கின் உளைமாந்தை வளியிலாமே."

(கை எழுத்துப்பிரதி).

என்பதினால்,

நெஞ்சின் பழுவெலும்புகளின் பக்கம் விம்மல்; நினைவழிதல்; இருமல்; மிருதுவான சுரம்; வயிற்றுள் கட்டி போல் திரண்டு காணல்; கட்டிகள் பழுத்து உடைந்து சீழ் வாய் வழியாக வருதல்; கழிச்சலில் சீழ் கலந்திருத்தல்; ஐயமும் தீயும் மிகுதிப்படல்; உணவில் வெறுப்பு; செரியாமை; வாந்தி; கழிச்சல், கைகாலசதி முதலிய குறி குணங்களாம்.

(கை எழுத்துப் பிரதி.)

(வேறு)

" உன்னவே உறுநெஞ்சு பழுக்கள் பக்கம்,
உறுமி நினை வழிந்திருமி உரக்க நொந்து,
சின்னவே பஞ்சு போற் சுரமுந் தோன்றி,
சீய்க் கட்டி யாய்ப் பழுத்துச் சிதறி வீழும்,
தின்னவே சிலேட்டுமந்தான் மீறிக் காணும்,
செரிக்காமல் சனந்தான் றிருப்பி வீழும்,
கன்னவே காலுங்கையுங் கடுப்பு காணும்
கருகுமே வாதவுளை மாந்தை காணே."

(யூகிமுனி).

என்பதினாலும் அறிக.

2. அழல் உளைமாந்தை.

" கீழ்வயிற்றிற் றிரண்டு கெட்டியாய்ப் பொருமிக் கட்டி,
ஊழ்பெறப் புண்போல் நொந்தங்குடற்றலை யுளைச்சலாகி
மாழ்குற விருமல் வெப்ப மற்றுஞ் சீழிரைப்புந்தோன்றி
தாழ்மயக்கம் புரட்டல் தகுமிடரது புண்ணாதல்
வாழுளை மாந்தை நோயாம் வந்தது தீயிலாமே."

என்பதினால்,

அடிவயிறு திரண்டு கட்டியாகி, விம்மிப் புண்போல் நோதல்; தேக உளைச்சல்; தலைவலி; சுரம்; இருமல், இரைப்பு; சளியில் சீழ் கலந்திருத்தல்; கட்டி பழுத்து உடையுங்கால் வாந்தி, மயக்கம், முப்பிணிக் குறிகுணங்களாகிய இவை தோன்று

(கை எழுத்துப் பிரதி.)

(வேறு)

" காணுவே மிகத் திரண்டு கீழ்வயிற்றிற்,
 கட்டியாய் மிகப் பொருமிப் புண்போல் நொந்து,
ஊணவே வுடம்பெங்கு முளைச்சலாகி,
 உரப்பான தலைநோயுஞ் சுரமுங் காணும்,
ஈண்வேயிருமலொடு சீயுமுண்டாம்,
 இரைப்பாகி மிடறெல்லாம் புண்ணுமாகும்,
பேணவே மயக்கமொடு புரட்டலாகும்
 பித்தவுளை மாந்தை யென்றே பேசலாமே."

(யூகி சிந்தாமணி)

என்பதினாலுமறிக !

3. ஐய உளைமாந்தை.

"வாயிற் சீயாமனமருகல் வாந்தி மயக்கஞ் சேத்துமமும்
ஏயுமிகவு நடுக்கலுறு மிருமலுடம்பு மிக நலங்கும்
காயம் பஞ்சுபோல் வெளுக்குங்கால் முறுக்கிப் பிழிந்தாற் போல்,
நோயும் புண்ணாம் உளைமாந்தை நுழைந்ததை யந்தன்னிலாமே."

என்பதினால் ;

உடல் மெலிவடைவதால், வாயில் சீழ் வருதல், மனவேதனை வாந்தி, மயக்கம், சீதளம் அதிகரித்தல், நடுக்கல், உடல் புண் போல் நோதல், சுரம் காய்தல், தேகம் வெளுத்தல் ஆகிய குறி குணங்களாகும். (கை எழுத்துப் பிரதி.)

(வேறு)

" பேசலாமுடலுருக்கிப் பிழிந்தாற் போலப்,
 பெலமான மேனியெல்லாம் புண்போல் நொந்து,
வாசலாம் வாயிலேசீயு முண்டாய்
 மனமிறுகிச் சர்த்தியொடு மயக்கமாகும்
நாசலாம் சிலேட்டுமமும் நடுக்கலாகி
 நலங்கியே பஞ்சுபோல் மிகவெளுக்கும்
ஆசலாமைய வுளை மாந்தை யென்று
 அவனியுள்ளோர் தங்களுக்கு அறியக்கூறே."

(யூகிமுனி)

என்பதினாலுமறிக ;

### 4. முக்குற்ற உளைமாந்தை

"இருமிச் சுரமுந் தலைவலியு மிறங்காதன்னம் விடம் போல
பெருகக் குத்தித்தினவுடல் சீபெரு நாற்றமதாய் வாயில்விழும்,
உருகிச் செயலுங் கெட்டு மிக யுரக்க முறவே வீழ்ந்திருக்கும்,
ஒருமைப் படவே வருத்தி வைக்கும், உளைமாந்தைத் தொந்த
மென்றறியே."

என்பதினால் ;

உணவருந்தும் போது தொண்டையில் அடைப்பது போல் நோதல் ; உணவு செல்லாமை ; மனச் சோர்வு ; உடல் வன்மை குறைதல்; மிகுந்த தூக்கம் ; உடல் முழுதும் தினவு, சுரம், தலைவலி, கோழை மிகுதியாயும், நாற்றத்துடனும், வெளியாதலாகிய குறிகுணங்களைக் காண்பிக்கு மென்பர்.

(கை எழுத்துப் பிரதி)

(வேறு)

" கூறாகத் தலைவலியுஞ் சுரமுந் தோன்றி
குணங்கெட்ட இருமலொடு கோழை யுண்டாய்,
ஆறாக வன்னத்தை இறங்கொட்டாது
ஆங்காரமடக்கியே யசதியாகும்
ஊறாக வுரக்கமது மிகுதியாகும்,
உறுதியாய்ச் சீவிழுந்து நாற்ற முண்டாம்,
தூறாகச்சடமெங்குந் தினவுண்டாகும்,
தொந்தவுளை மாந்தை யென்று செப்பலாமே."

(யூகி சிந்தாமணி)

என்பதினாலுமறிக.

### தீரும் தீராதவை.

(வெண்பா)

" தீயாமுளைமாந்தைத்திரு மிகு மூன்றும்,
வீயாவுயர் மருந்தேவீந்திடினும்—நோயாலே,
துன்பத்திற் குட்பட்டுச் சூழ்வர் நமனுலகம்,
என்பதுறவறிவாய் ஈங்கு."

என்பதினால் ; பித்த உளைமாந்தை எளிதில் தீரும் என்றும், மற்ற மூன்று வகை உளைமாந்தை நோய் தீராதவை எனவும் அறிகிறோம். (கை எழுத்துப் பிரதி)

(வேறு)

" செப்பிய தோரசாத்தியத்தைச் சொல்லக் கேளாய்
சீறுகின்ற தொந்தவுளை மாந்தை சிலேட்டுமம்,
வப்பியதோர் வாதவுளை மாந்தை தானும்,
மாவவிழ் தந்தன்னாலும் வசப்படாது,
கப்பியதோர் பித்தவுளை மாந்தை தானும்,
கனவவிழ் தந்தன்னிற் காரியமுமாகும்,
ஒப்பியதோ ராயுருவேதத்திற்றானும்
ஒன்றும் பொய் போகாது உரைத்துப் பாரே."

என்பதினாலு மறிகிறோம். (யூகி சிந்தாமணி)

முக்குற்ற முதலிய வேறுபாடுகள் :

இளைப்பிருமல் நோய்க்குக் கூறியுள்ள முக்குற்றம், வாயுக்கள் ஆகியவற்றின் வேறுபாடுகளே உளைமாந்தை நோய்க்கும் பொருந்துமெனச் " சித்த மருத்துவம் " கூறுகின்றது.

நாடிநடை.

" பண்பான பித்தத்தில் சேத்துமங் கூடிப்
பரிசித்தா லத்தி சுரமிளைப்பு ஈளை,
கண்காது நயன மலம் நீரு மஞ்சள்
கனவயிறு பொருமல் மஞ்சள் நோய் கண்நோவு
உண்போது மறுத்தல் ரத்தவிப்புருதி தானு
முளைமாந்தை பீனிசமும் ரத்த வீக்கம்
நண்பான காமாலை சோகை வெப்பு
நணுகிவந்த பல பிணியுங் காணுந் தானே."

என்பதினால், பித்த ஐயதொந்த நாடி உளைமாந்தை நோயையும் மற்றும் பலநோய்களையும் குறிக்குமென்பதாம்.

(சதகநாடி)

## 11. தமரக நோய்.

**வேறு பெயர்கள்.**—தமரகவாயு; மார்பு நோய்; இருதய நோய்; ருத்ரரோகம்; ருத்ரவாயு; எனப்படும்.

**இயல்.**—இந் நோய் மார்பு வலி, பெருமூச்சு, மூச்சடைப்பு, இளைப்பு, ஆயாசம், கால் வீக்கம் முதலிய குறி குணங்களைக் காட்டிச் சில வேளை திடீரெனக் கொல்லும் நோயாம்.

### நோய் வரும் வழி.

"மார்பு நோய் வருதற்கு வழியதனை நன்றாக வழுத்துங்
காலை வாய்ந்தமிகு சூட்டுண்புளிப்புதுவர் மலநீர்களடக்கில்
சாலக், கூர்ந்துண்ணலான் மிக்க வடிபடலினாற் பெருகல்
கொண்டகாலுங், கூறுகைப் புணவினாலுடல் மிக வருந்த
லால் கொடிய வேலை, சார்ந்துமிகு நடைவிடாக் கல்விப்
பெண்கூடலால் தனிப்பலெண்ணம், தவித்துடலிளைப்பி
வற்றுறுதீயு மிகுசினஞ்சார்ந்தையத்தை ஆர்ந்ததை யிருக்கி
வன்னீர்க் கட்டினைக் கெடுத்ததனாற் புழுக்குழுவூமிக்,
கமைவதால் மார்பினோய ஃதாற்றொணாத் துயரையாக்கு
மாதோ."

(கை எழுத்துப் பிரதி)

என்பதினால்,

"மார்பு நோய்" என்னும் "தமரக நோய்" வருவதற்கு கீழ்க்கண்ட காரணங்களேயாகு மென்கிறார்.—மிகச் சூடான உணவு உண்ணுதல்; புளிப்பு, துவர்ப்புச் சுவையுள்ள பொருள் களை அதிகமாக அருந்துதல்; மலநீர்களடக்கல்; அளவுக்கு மீறி உண்ணல்; அடிபடுதல்; ஆகிய இக்காரணங்களினால் பெருகுகின்ற வாயுவும்; கைப்புணவு மிகுதியாகக் கொள்ளல்; உடல் வருந்தக் கூடிய தொழில்களைப் புரிதல்; மிகுந்த நடை பழகல்; ஓயாமற் படித்தல்; மிகுதியாகப் புணர்தல்; தனித்து நின்று பல பல எண்ணங்களைச் சிந்தித்தல்; தபித்தல்; உடல் வற்றல் (இளைத்தல்) ஆகிய இக் காரணங்களினாலுண்டாகும் பித்தமும் மிகு சினந்து ஐயத்தை இறுக்கி ரசதாதுவைக் கெடுப்ப தாலும்; கிருமிகள் (புழுக்கள்) அதிகமாகச் சேருவதாலும்; துயரத்தைத் தரத்தக்க இம் மார்பு நோய் உண்டாகு மெனத் தெரிந்து கொள்க!

குறிப்பு.—வாய்வு மிகுதி—பித்தப் பிரகோபம்—ஐயத்துடன் சேரல்—ரசதாது கெடல்—புழுக்கள் ஆகிய இவைகளே மார்பு நோய்க்குக் காரண மென்பது பண்டைய காலத்து சித்தர் நூல் களின் கருத்து. (கை எழுத்துப் பிரதி)

(வேறு)

தற்கால "சித்த மருத்துவ நூலில்" தமரக நோய் உற்பத்திக்குக் காரணம் பின்வருமாறு கூறியுள்ளார் :—

மிகுதியும் வளிக் குற்றத்தைத் தூண்டக்கூடிய பொருள்களைப் புசிப்பதாலும் ; தகாத நடத்தைகளாலும், பெண் கூட்டாலுண்டான நோய்களாலும், வளிக் குற்றம் தூண்டப்பட்டு மேல் நோக்குங்கால் (உதான வாயு), பரவுகால் (வியான வாயு) இவைகள் மிகுந்து இந் நோயைப் பிறப்பிக்கு மெனவும் ; அன்றியும் தாய் தந்தையர்களின் வழியே (Congenital) பிறவியிலேயே இந் நோயுண்டாகு மெனவும் ; வளிக் குற்றத்தால் (வாதரோகம்) பிறந்த நோய்களுக்கும், கீல்வாய்வு நோய்களுக்கும் துணை நோயாகவும் வருவதுண்டு என்றும் கூறியுள்ளார்.

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

1. "வாயுவினாலே வளரும் ருத்ர ரோகமாமே."

என்பதினாலும் ;

2. "ரோகங் கபத்தில் நுழைந்தேறு வாயுவால்,
வாகுற்ற நெஞ்சில் வலித்து மயக்கிடும்,
போகுற்ற பித்தத்தை போகாமற் றம்பித்துப்,
பாகுற்றுப் பேசையில் பதையாமற் கொல்லுமே."

என்பதிற்கிணங்க, மார்பு யிடத்தைப் பற்றி வருகின்ற ருத்ர ரோகமானது வாயுவை முதற் காரணமாகக் கொண்டே வரும், எங்ஙனமெனில், ருத்ர ரோகமானது கபமிருப்பிடமான மார்பினிடத்திலுள்ள கோழையில் வாயுவானது நுழைந்து, மிக்க ஊரங் கொண்டு வாயுவின் மிகக் கொடுமையால் முன்னர் அழகாயும், வன்மையாயு மிருந்தமார்பில் வலியை யுண்டாக்கித் தன்னை மறந்து விடும்படிச் செய்யும்.

வாத கபங்களால் இடுக்கண் அடையாதபடி தன் தொழிலில் சென்று கொண்டிருந்த பித்தத்தின் செயலைச் செய்ய வொண்ணாத படி தடைப்படுத்திச் சுகநிலையில் ஒருவன் பேசிக்கொண்டிருக்கும் போதே மிக்க சாவுத் துன்பத்திற்கு ஆளாக்காமல் உடனே கொன்றுவிடும் என அறிக !

தமரக நோய் உண்டாவதற்குக் காரணமா யிருக்கும் வாயு மேல் நோக்குங்காலேயாம். பிராணவாயுவும் சம்பந்தப்படும் என அறியவும்.

வாயுவானது கபத்துடன் கலந்தால் பித்தத்தின் தொழில் நிகழாதென்பதை :—

''போகுற்ற பித்தத்தை போகாமற்றம்பித்தி''—என்பதினாலறிக !

இதனையே—''வாயுவு நீரால் வழங்கிய வன்னிசாம்''— என்பதினாலும்;

''பாகுற்றுப் பேசையில் பதையாமற் கொல்லுமே.'' என்பதினாலும்;

''பித்த மொழிந்திடிற் பேசாமற் போய்விடு'' என்பதினாலும், வாயு கபங்களி தொந்திப்பினால் மார்புனிடத்தே இயங்க வேண்டிய பித்தம் செயலற்றுப் போகிற தென்பது புலனாகிறது.

(கை எழுத்துப் பிரதி மற்றும் சித்த மருத்துவம்.)

அன்றியும் ;

'' ஆமப்பா ருத்திர ரோகத் தாண்மையை யுரைக்கக் கேளு,
வேமப்பா வெம்பிப் பாய்ந்து மிகநெஞ்சிற் குத்துண்டாகிப்
போமப்பா பித்தந்தன்னைத் தப்பியே போகொட்டாமல்
பாமப்பா பேசும்போது பதையாமற் சாவார் தாமே.''

(காவியத்தின் நாடி)

என்றதால் ;

ருத்திர ரோகமென்னும் தமரக நோயில் பிணியாளன் உடல் சேர்ந்து, மயங்கி பரிதவித்து, நெஞ்சில் குத்தலுடன், பித்தமானது இயங்கத் தடைப்படுவதால் நோயினன் பேசிக் கொண்டிருக்கும் போதே சாவான் என்பதையும் குறிக்கின்றது.

நாடி நடை.

1. '' தானமுள்ள சேத்துமந்தானிளகில் வெப்பு
ஊடிமீளை யிருமல் மந்தாரகாசம்

ஈனமுறுஞ்சன்னி விடதோடம் விக்கல் இருத்ரோகங் கரப்பான் விரணதோடம்.

* * * *

2. ''பாங்கான வாதத்தில் சேத்தும நாடிப் பரிசித்தால் திமிர் மேவு முளைச்சலாகும்.

தீங்கான இருமலுடன் சன்னி தோடஞ்சேர்ந்தவிடம் வெடி சூலை இருத்ரோகம்.

* * * *

(சதக நாடி.)

3. "உறுதியுள்ள பித்தமது தோன்றில் வெப்பு
உஷ்ணவாயு வித்திசுரமதி சாரங்கள்
மறதியுடன் கிறுகிறுப்பு பைத்திய ரோகம்
வளர்சோபை யழலெறிவு காந்தல் கைப்பு
இருதயத்திற் கலக்கமது மறப்பு தாகம்.
* * * *

(சதக நாடி)

என்பதினால், ஐயநாடி இளகி நடக்கினும், வாத சேத்துமதொந்த நாடியிலும், பித்தமிகுதியிலும் தமரக நோயையுணர்த்தும்.

### தமரக நோயின் முக்குறி குணங்கள்:

சிறிது தூரம் நடக்கினும், ஓடினும், பெருமூச்செரிதல்; மார்பு துடித்தல், தலை சுற்றல்; மார்பில் வலித்தல்; மயக்கம்; கண் இருளல்; உதடு, முகம் சிலசமயம் நீலமாதல்; இரவில் தூக்க மின்மை: வாய் பிதற்றல்; சில வேளை புகைச்சல், இருமல் முதலிய முற்குறி குணங்களைக் காட்டும்.

### நோய் எண்.

இந்நோயினைக் குற்றயளவாக வளித்தமரக நோய், அழல் தமரக நோய், ஐயத்தமரக நோய், முக்குற்ற தமரக நோய் என நான்கு வகைகளும்; புழுவால் வரும் புழு தமரக நோய் ஒன்றும் ஆக மொத்தம் ஐந்து வகைத் தமரக நோய் என்பார்

(சி. ம.)

### ஒவ்வொரு பிரிவு தமரக நோயின் தனித்தனிக் குறி குணங்கள்.

#### 1. வளிதமரக நோய் (வாத மார்பு நோய்).

" வளியினால் வருமார்பு நோய்க்குறித் தன்மைகள்
வகுத்துரைப்பக் கேண்மினோ
மார்புடைதலில்லாமை சுருங்க லுள்ளளீரமிலை
மார்பு வெடித்தற் பிளத்தற்
உளிற்சூலமதிற்குத்தல் பிடிப்பதிரல் மரத்தல்
கொம்பொடு கிளறினாற்போலுறல்
ஒருவேளை விரைவாக ஓடுவதுபோற் காணல்
உறுதிணறலான மூச்சு
களியாடுமிதி யெனக்கானலுடல் நடுங்கிடல்
காரணமதின்றி யூக்கம்

கணகணென்பேச்சினொலி காது ரத்தாங்காது
கலக்கமுறல் அற்பதூக்கம்
நளியுறுப்புகளில் வலிமயக்க துக்கம்பயம்
நல்லுடற் கருமை புரளல்
நாட்டு மூச்சு பிடிப்புப்பேசக் கூசுதல்
நண்ணிவர லென்றறிவையே.''

(கை எழுத்துப் பிரதி)

என்பதினால்,

வாத மார்பு நோயில் மார்பு உடைதல்; மார்பில் ஒன்றுமில்லாமை; மார்பு சுருங்கியிருத்தல்; மார்பினுள் ஈரமில்லாமல் வறண்டிருத்தல்; மார்பு வெடித்தல்; மார்பு பிளந்து விடுதல்; மார்பில் சூலத்தால் குத்தல்; மார்பு ஒன்றோடொன்று பிடித்துக்கொள்ளல் ஆகிய இத்தியாதி குறிகுணங்களைப் போன்று தோன்றல்.

அன்றியும், மார்பு அதிரல்; மார்பு மரத்தல்; மார்பில் கொம்பினால் கிளறுவது போற் காணல்; ஒவ்வொரு வேளை விரைவாக ஓடுவது போற்காணல்; திணறித் திணறி மூச்சுவிடல்; மார்பில் ஆடுகளைக் கொண்டு மிதிக்கச் செய்தாலெப்படி யிருக்குமோ அப்படிக் காணல்; உடல் நடுக்கல்; யாதொரு காரணமுமின்றி ஒருவகைத் தைரியம் கொள்ளல்; மிகப் பேச்சொலி கேட்டால் காதுகளால் தாங்கமுடியாமை; அற்ப தூக்கம்; உறுப்புகளில் வலி; மயக்கம் தூக்கம்; பயம்; உடல் கருமை நிறமடைதல்; புரளல்; மூச்சுப் பிடித்தல்; பேசுதற்குக் கூசுதல் என்னும் இக்குறி குணங்களையும் விளைவிக்கும் என அறியவும்

(கை எழுத்துப் பிரதி)

(வேறு)

'' சித்த மருத்துவத்தில்'' கூறியுள்ள வளிதமரக நோயின் குறிகுணங்களாவன :—

வளிக்குற்ற மிகுதியினாலுண்டான சுரம் நோய்களால் தாக்கப்படும் போதும்; வளிகாலமாகிய இளவயதிலும்; உண்டாம் நோயாம். சிறுவயது முதல் முதிர்ந்த வயதுவரையிலும் வருவது உண்டு என்கிறார்.

இதில் குருதி வன்மையற்றும், முகம் வெளுத்தும், ஊதியும், மார்பு கனத்து நொந்தும், படபடத்தும், தொண்டையில் கோழை கட்டியும் வரும். சில வேளை வயிறு கடுக்கும் மார்பு பாரமாயிருப்பது போல் தோன்றும்; பெருமூச்சு; இடைவிடா இருமல், வாந்தி முதலிய குறிகுணங்களை யுண்டாக்கும் எனவும் கூறியுள்ளார்.

2. அழல்தமரக நோய் (பித்த மார்பு நோய்).

" தீச்செயலெனும் பித்தமார்பு நோய்க்குறிகளைச்
செப்புவேன் தன்மையோடு
சேர்மார்பு நோயெரிவு மஞ்சணிற மாவதொடு
திகழ்புளிப்புங் காரமும்
வாச்சதொரு வாந்தியவ் வேப்பம்வரல்
சிலகாலமாந்து முணவுண்டவாறே
வாந்திவரல் செரியாமை நாவறளல் நீர்வேட்கை
வாய்ப்புளிப்புங் காரமாம்
மூர்ச்சையுட் கலக்கமுதடுலரலாவாய்ச் சோர்வுடன்
முன்தலை சுற்றல் வேர்வை
முற்றுமுடலெரிதல் பளுவாட்ட மஞ்சள்சூலை
மோதியொரு வேளை காய்தல்
ஆய்ச்சவொரு வேளை யல்லித்தண்டு குளிர்மையாய்
ஆகுங் கழுத்தெரிதலாம்
அரிய மலநீர் மஞ்சள் கண்களிருளுதல் நடுக்
கழல் மந்தங்கீல்கள் நோவே."

3. "கழுத்தினில் வேர்வை இளைப்போடிரைப்பதுகாண்
பிதற்றல்
விழுத்தபலவாம் வளையப்புடையுடல் மேவலன்றிக்
கொழுப்புறு கொப்புளங்கண்டிட ருக்கக்குறைவுவடி
விழுப்புறமாறல் பொருள்களையுண்டிட வெண்ண
லரோ."

(கை எழுத்துப் பிரதி)

என்பதினால், பித்த மார்பு நோயில் மார்பினுள்ளே நோவு, எரிச்சல், மஞ்சள் நிறத்தோடு புளிப்புங் காரமுமாய்வரும் வாந்தி; அவ்வாறே ஏப்பமுண்டாதல்; உண்ட உணவு உண்டவாறே வாந்தியாதல்; ஒரு வேளை செரியாமையோடு வரும் வாந்தி; நாவரட்சி; நீர்வேட்கை; வாய் புளிப்புங்காரமுமாயிருத்தல்; மூர்ச்சை; மனக் கலக்கம்; உதடு உலர்தல்; உடற்சோர்வு; தலை சுற்றல்; வேர்வை; உடல் முற்றும் எரிதல்; உடல் பளுவாகவும் வாட்டமாகவும் மஞ்சள் நிறமாகவும் காணுதல்; சூலையுண்டாதல்; சுரங்காய்தல்; ஒரு சமயம் அல்லித்தண்டு போல் உடல்முற்றும் சில்லென்று குளிர்ச்சியாயிருத்தல்; கண்டத்திலெரிதல்; மலமும் நீரும் மஞ்சளித்தல்; கண்களிருள் கம்மல்; உடல் நடுக்கல்; பசித்தீவன்மை குறைதல்; கீல்கள் நோதல்; கழுத்தில் வியர்வை; இளைப்பு, இரைப்பு இவையுண்டாதல்; வாய் பிதற்றல் ;

உடலில் பலநற்மான புடைகளுண்டாதல்; அற்ப தூக்கம்; வடிவ நிறமாறல்; எப்பொருளையாவது உண்ணலாமென்ற எண்ணமுண்டாதல் ஆகிய இக்குறி குணங்களைக் காட்டுமென்பதேயாம்.

(கை எழுத்துப் பிரதி)

(வேறு)

''சித்த மருத்துவத்தில்' கூறியுள்ள அழல் தமரக நோய்க் குறி குணங்களாவன.

இந்நோய் நடுவயதான தீக்காலத்தில் வரக்கூடியதெனவும்; உடல் வன்மையுள்ள காலத்து ஆடல், பாடலில் பொழுதுபோக்கும் நாள்களில் திடீரென மார்பு நொந்து, உடல் துடித்து, உயிரே போய் விடுமோவென்னும் பயத்தை யுண்டாக்கி, தலை கிறுகிறுத்து மூர்ச்சையை யுண்டாக்கும். அன்றியும் நாவறட்சி, உடல் அழற்சி, வாய் நீரூறல், தொண்டையடைப்பு, வியர்வை என்னும் குறி குணங்களையும் காட்டும். பெரும்பாலும் இந்நோய் நரம்புத் தளர்ச்சியால் பிறக்குமென அறிக! இஃது எளிதில் தீரக் கூடிய நோய் எனவும் கூறியுள்ளார்.

### 3. ஐயதமரக நோய் (கப மார்பு நோய்).

'' ஐயத்தாலுண்டாகு மார்பு நோய்க் குறித்தன்மையறையக் கேண்மோ.

யடர் கோழைநிறைந்து மார்பதிற் பரவல் பளுவதாதல்
ஐயமொரு கோழையாய் மார்பினுள் வெளி வீங்கலசைக் கலாகா
தார்மார்பு கெட்டியாய்மூச்சுப் பிடிப்புறுதலரிய கல்லைச்
செய்யமார்புள்வைத்தல்போலிருமல் சுரம்சேர்தல் வாய்நீர்
திகழ்வாயினித்தல் சுவையின்மை சோம்பல் பசித்தீவன் மையில்
வையமதிற்றூக்க மிகலென்னுமிக் குறிகளில்வந்த தன்மை
வகைகளிற் சிலவரினு மப்பிணியினாரெண்ணுமன்னியறியே.''

(கை எழுத்துப் பிரதி)

என்பதினால்;

ஐயமார்பு நோயில், மார்பில் மிகுந்தகோழை நிறைந்து பரவல்; ஆதலால் மார்பு திண்மையாயிருத்தல் போல் தோன்றல் அல்லது மார்பு பளுவாகத் தோன்றல், அக் கோழையால் மார்பு உள்ளிலும் வெளியிலும் வீங்கல்; மார்பை அசைக்கமுடியாதபடி கெட்டியாய் மூச்சுப் பிடித்தல்; பெரிய கல்லைத் தூக்கி மார்பினுள் வைத்தது

போலிருத்தல் ; இருமல்; சுரம்; வாய் நீர் சுரத்தல்; வாய் தித்தித்தல்; சில வேளை நா சுவையறியாமை; சோம்பல்; பசித்தீ குறைதல்; மிகுந்த தூக்கம்: என்னும் இக்குறி குணங் களுள் சிலவேனும் பலவேனும் தோன்றும் என்பதாம்.

(கை எழுத்துப் பிரதி)

(வேறு)

''சித்த மருத்துவத்தில்'' கூறியுள்ள ஐயதமரக நோயின் குறிக் குணங்களாவன.

இந்நோய் ஐயமொடுங்குங்காலமாகிய முதிர்ந்த வயதிலுண் டாம் நோயாம். பார்வைக்கு வியாதி ஒன்றுமில்லாதது போல் வாழும் நாளில் திடீரென மார்பைக் கட்டி யிறுக்கியது போலவும் நடுமார்பு எலும்பைக் குடைவது போலவும்; மூச்சை அடைப்பது போலவும்; உயிர் மாய்ந்துபோவது போலவும் பயத்தை உண் டாக்கும். தக்க மருத்துவத்தில் குணமாகும். சில வேளை மேற் கூறிய குறி குணங்கள் ஒன்றின் பின் ஒன்றாக விரைவில் தோன்றி, மார்பில் தாங்க முடியாத வலி; அவ்வாறே

இடது பக்கம் மார்பிலிருந்து இடது தோள், புஜம், கை, விரல் களின் நுனி வரையிலும் பாய்ந்து குடைவது போன்ற வேதனை; முகவாட்டம் ; கை கால்கள் சில்லிடல் ; மரத்துப் போதல், மிகப் பீதியுண்டாதல் ; திணறித் திணறி மூச்சு வாங்கல், ஆகிய குறி குணங்களுண்டாய் பின்பு குணமாவது முண்டு எனவும், இவ் வாறாக மார்பு வலி பன் முறைகள் வரக்கூடும். நோய் முதிரின் உடல் வன்மை குறைந்து குருதியின் ஓட்டம் மெலிந்த நிலையில் திடீரென ஓர் இரவில் தாங்க முடியாத மார்பு வலியுண்டாய் அலண்டு புரண்டு, பயந்து, வியர்த்து, முகம் கருத்து உயிர் நீங்கும் எனவும் சித்த மருத்துவம் கூறுகின்றது.

4. முக்குற்ற தமரக நோய் (முக்குற்ற மார்பு நோய்).

''முக்குற்றத்தா லுண்டாம் மார்புநோய்க்
குறித்தன்மை மொழியக் கேண்மோ
தக்கமார்பதிலீட்டியாற் குத்தல்போ
லோடித் தாக்கிக் குத்தல்
மிக்கவது பிளத்தல் போலு ரலெரிவு
நீர்வேட்கை மிகுந்து பளுவாம்
துக்கவலை சுரமயக்க மூன்று நோய்
களாய்த் தோன்றலன்றோ''

(கை எழுத்துப் பிரதி)

என்பதினால்,

முக்குற்றத்தாலுண்டாம் மார்பு நோயில் மார்பில் ஈட்டியாற் குத்துவது போலோடி ஓடிக்குத்தல்; மார்பு பிளப்பது போலிருத்தல்; மார்பில் எரிச்சல், மார்பு பளுவாயிருத்தல்; நீர் வேட்கை; துக்கித்து அழுதல்; சுரங்காயுதல்; மயக்கமாகிய இவற்றுடன் வளி, அழல், ஐயம் இம் மூன்று மார்பு நோய்களுக்குரிய குறி குணங்களும் தன்மைகளும், இவற்றில் வராத குறி குணங்களும் கூடச் சேர்ந்து தோன்றும் நோயாம்.

(கை எழுத்துப் பிரதி)

(வேறு)

**சித்த மருத்துவத்தில் கூறியுள்ள முக்குற்ற தமரக நோயின் குறிக் குணங்களாவன.**

இந்நோய் வேறு நோய்களால் துன்புற்று உடல் மெலிந்து, முக் குற்றங்களும் கூடி மிகுந்து நிற்குங்காலையில் உண்டாகும் நோய் எனவும்; இந்நோயில் சுரம், தலைவலி, உடல் முழுமையும் நோதல்; கீல்கள் வீங்கி நீட்டவும் முடக்கவும் முடியாமை: வாய் பிதற்றல்; மூர்ச்சையாதல்; மயக்கம் என்னும் குறி குணங்களும் ஏற்படும் எனவும் ஐயவளிச் சுரத்திற்குத் துணை நோயாக இந்நோய்வரின் மிகுந்த வியர்வை வாய் பிதற்றல், அறிவழிதல் ஆகிய குறி குணங்களையும் காட்டும் எனவும், நோயினனை அதி சீக்கிரம் கொல்லுமெனவும் சித்த மருத்துவம் கூறுகின்றது.

## 5. புழுத் தமரக நோய் (புழு மார்பு நோய்).

"புழுமார்பு நோய்வழி மிகுந்த
குளிர்பொருள் களாற் கருணை சேம்பு,
புசித்தலாற் சீதவிடஞ் சிறிது பெரியதாய்ப்
புழுக்கள் புகுந்து குடலில்.
வழுவாம லொட்டி மார்பிடமாக மேலேறி
வருதலாலே,
மார்பு துடிப்பதிர்ச்சி வீங்குதலும்
நமைசூலை நோய் வாளறுத்தற்,
தழுவல், பலகால் வறளல் வருந்தல்
சுவையின்மை உடல்தானிளைத்தற்:
றன்கண் கருத்தல் இருட் கம்மல் பீளை
மிகச்சாரவே முனமுனத்தல்,

கொழுவுறு மயர்ச்சி வொன்றறியாமை
மூச்சு வழி கூர்ந்தடைத்துக்,
கொடுமை பல விளைவிப்பதீதாகுமிதனை
யறி-குறித்து முனமே.''

(கை எழுத்துப் பிரதி).

**என்பதினால்,**

புழுவாலுண்டாகும் மார்பு நோய்க்கு மிகுந்த குளிர்ச்சியுள்ள பொருள்கள், கருணைக் கிழங்கு, சேம்பு ஆகிய இவைகளை உண்ணுதல் காரணமாகும், எங்கனமெனில். இவை விடமித்து ஆமாசயத்தில் சிறிதும் பெரிதுமான புழுக்கள் உண்டாகிக் குடலில் புகுந்து ஒட்டிப் பின்னிக் கொண்டு, மார்பிடத்திற்கு மேற் பக்கமாக எதிர்த்து ஏறுவதால் மார்பு துடித்தல், அதிர்ச்சி, வீங்குதல், நமைச்சல், சூலத்தால் குத்துவது போல் குத்தல்; வலித்தல்; வாளால் அறுப்பது போலிருத்தல் ; நா வரளல் ; உடல் வருந்துதல்; உடல் இளைத்தல்; நா சுவையின்மை; கண் கருத்தல்; இருள் கம்மல்; பீளைசாரல்; முன முனத்தல்; அயர்ச்சி, யாதொன்றும் அறியாமை ; மூச்சுப் பாயும் வழியை யடைத்துப் பல கொடுமைகளையும் விளைவிப்பதாகிய இக் குறிகுணங்களை உண்டுபண்ணும் என்பதாம்.

(கை எழுத்துப் பிரதி)

(வேறு)

''சித்த மருத்துவத்தில்'' கூறியுள்ள புழுத் தமரக நோயின் குறிக்குணங்களாவன.

உண்ணும் உணவுகளாலும், குடிநீர்க் கேட்டாலும், வயிற்றில் மண்ணுண்ணிப் புழுக்கள் (Like earth worms) போன்றவை குடலில் எண்ணிலும் வடிவத்திலும், பெருத்து ; குடல், மார்பு வரையில் உலாவிச் சிலவேளை மார்பை அடைத்தல் போல் மார்பு துடிப்பு, அதிர்ச்சி, வீக்கம், தாங்க முடியாத வலி என்னுங் குறிகுணங்களைக் காட்டி, கண் பஞ்சடைதல், வாய் நீர் சுரத்தல், இருமல், கோழை கக்கல், மூச்சுத் தடுமாறல், முகம் கருத்தல், வலி முதலியவற்றை யுண்டாக்கிக் கொல்லுமென நூல்கள் கூறுகின்றன எனவும் ; வயிற்றுப் புழுக்கள் சில வேளைகளில் மேல் நோக்கி வாய் வழியாக வெளியாவதுமுண்டு. ஆதலின் மேல் நோக்கிவரும் புழு உறக்கத்தில் வாயை மூடிக்கொண்டிருக்கும் போது மூக்கு வழியே புகுந்தாயினும், நுரை ஈரல் குழையுள் புகுந்தாயினும் மூச்சையடைத்து, மேற்கூறிய குறி குணங்களைக் காட்டி நோயினனை உடனே கொல்லுமெனவும் ; இப் புழுக்கள் காரணமாக மார்பைப் பற்றி யுண்டாம் குறி குணங்களாகையால்

இதனையையும் மார்பு நோய் என்னும் தமரக நோயில் ஒன்றாயல் இணைத்திருக்கிறார்கள் போலும் எனவும் சித்த மருத்துவம் கூறு கின்றது. புழு மார்பு நோய்க்குறி குணங்கள் யாவும் மாணவர் கள் தெரிந்திருக்க வேண்டியது அவசியம்.

(சி. ம.)

குறிப்பு.—பொதுவாக தமரக நோய் முதிர்ந்த நிலையில் நோயினனுக்கு மனக் கலக்கம், ஏக்கம், பயம், ஆகிய இவைகளால் தூக்கமிராது! அன்றியும் உடல் நிலையும், மன நிலையும் கெடுவ தன்றி நோயின் வன்மையும் பெருகும். இவற்றை அறிந்து நோய்க்கான மருத்துவத்துடன் மனநிலை கெடாதிருக்க வேண் டிய பரிகாரமும் புரிதல் வேண்டும் எனவும் கூறியுள்ளார்.

(சி. ம.)

**மார்பு நோயிலுண்டாகும் சாதாரணமான துன்பங்களாவன:—**

''இளைப்பு வறட்சி இயல்மா லயர்ச்சி
தொளமார்பு நோய்ப் பொதுத் துன்பு''.

(கை எழுத்துப் பிரதி)

என்பதினால், உடம்பு இளைத்தல்; உடம்பு வறளல்; மார்பு வறளல் ; வாய் வறளல் ; மயக்கம் ; அயர்வு ; ஆகிய இவைகள் மார்பு நோயில் பொதுவாக உண்டாகக் கூடிய துன்பங்களாம்.

(கை எழுத்துப் பிரதி)

**புழு மார்பு நோயின் சிறப்புத் துன்பங்களாவன:—**

''புழுமார்பு நோய்த் துன்ப மயிர்ச்செறிவு
சொள்ளை விழல் பொருமரோந்தி,
நழுவு கீழ்காலு நீர்மலத்தடை
சூலை சுரம்-நன்கு காய்தல்,
கொழுவாந்தி மூர்ச்சை நீர்வேட்கை
வீக்கம் பளுவுகொள் பீனிசம்
வழுவாகச் சுவையறிதலின்மை
மார்படைப் பிவை வருதலாமே.''

(கை எழுத்துப் பிரதி).

**என்பதினால்,**

புழுவாலுண்டாகும் புழு மார்பு நோயில் வருகின்ற சிறப்புத் துன்பங்களை ஆராயுமிடத்து ; மயிர்க்கூச்சு ; வாயில் ''சொள்'' என்கின்ற ஒர் நீர் வடிதல் ; வயிற்றுப் பொருமல் ; காற்றுப்

பரிதல் மலமும் நீரும் தடைப்படல் ; சூலை ; கடுமையான சுரம் ; பெருவாந்தி ; மூர்ச்சை ; நீர் வேட்கை ; வீக்கம் ; மார்பில் பாரமாய்த் தோன்றல் ; மூக்கில் நீர் வடிதல் ; சுவையறியாமை ; மார்படைப்பு ஆகிய இவைகளே புழு மார்பு நோயின் சிறப்புத் துன்பங்களாகும்.

(கை எழுத்துப் பிரதி)

ஐவகை மார்பு நோயில் தீரும் தீராதவை இவை எனல்,

(வெண்பா).

''ஐந்தெனுமார்புநோயதில் முன் றெளீதேயாகும்,
பிந்திரண்டில் முக்குற்றம் பேறுமே—தந்தரிதில்
ஈற்றிற்புழுமார்பு நோயீந்து மருந்தப் பொழுதே,
பார்த்தாலும் மிக்கரிதாம்பார்''.

(கை எழுத்துப் பிரதி)

என்பதினால், வளி, அழல், ஐயம் இம்மூன்றும் தனிக்குற்றங்களாலுண்டாகும் மார்பு நோய்கள் எளிதில் தீரும் எனவும். முக்குற்ற மார்பு நோய் அரிதில் தீரும் எனவும் ; புழு மார்பு நோயில் மிக்க விரைவாக மருந்து கொடுத்தல் வேண்டும் எனவும்; அப்படி மருந்து விரைவாகக் கொடுத்து சிகிச்சை புரியினும் குணமாவது மகா அரிது எனவும் சித்தர் நூல்கள் தெரிவிக்கின்றன.

புழு மார்பு நோயில் புழுக்களை வெளியேற்றக் கூடிய கிருமினாசனி செய்கையுள்ள மருந்துகளைக் கொடுத்துப் புழுக்களை அகற்றி உடல் தேற்றி மருந்துகளால் உடல் வன்மையைப் பலப்படுத்தி உடம்பைச் சாக்கிரதையாகப் பாதுகாக்கவும் வேண்டும்.

## 12. சுவையின்மை.

**வேறுபெயர்கள்** :—சுவைகேடு ; உருசியின்மை ; அரோசகம் ; சுவை மாறு நோய் ; அருசி என்பவையாம்.

**இயல்** : இஃது உண்ணும் பொருள்களில் இச்சையின்மை, அல்லது உண்ணினும் உணவின் சுவையறியாமை என்னும் இயல்புடைய நோய் பெரும்பாலும் மனதைப் பற்றி எழும் நோயாகும்.

## நோய்வரும் வழி.

(வெண்பா)

''சுவைமாறு நோய்தனைச் சொல்வாரருசி
நவை நாவிலுள்ளத்தில் நாடு—பவை மூன்று
குற்றங்களாலென்று கூறினார் முன்னோராம்
நற்றமிழரீங்கு நாடு.''

(கை எழுத்துப் பிரதி)

என்பதினால்,

சுவையை உள்ளவாறு உணராமல் வேறு சுவையாக உணரும் வகையால் இதனைச் சுவைமாறு நோயென்றும், அருசி நோயென்றும் சொல்லுவராம். இந் நோயில் சுவையறியாக் குற்றம் உள்ளும், நாவிலும், உள்ளத்திலும், வளி, அழல், ஐயம் என்ற முக்குற்றங்கள் தனித்தும், கலப்புற்றும் கேடடைவதாலும் உண்டாகிறதென உயர்ந்த தமிழ் மருத்துவர்களாகிய முன்னோர்கள் கூறியுள்ளார். ஆதலால் மாணவர்களாகிய நீங்கள் நோயினனிடத்தில் இதனை நன்றாய் ஆராய்ந்து பார்ப்பீர்களாக வென்பதே மேற்கண்ட செய்யுளின் கருத்து.

(கை எழுத்துப் பிரதி)

குற்றத்தினளவாகவும், மனக்கலக்கம், பீதி, மிகுந்த மனமகிழ்ச்சி முதலிய மனதின் வேறுபாட்டாலும் இந் நோய் பிறக்குமென ''சித்த மருத்துவம்'' கூறுகின்றது.

## முற்குறி குணங்கள்.

வாய் நீருறல் ; அந்நீர் சுவையின்றியிருத்தல் ; உணவில் வெறுப்பு ; உண்ணும் பொருள் எதைக் காணினும் பொறுக்க முடியாமை ஆகிய குறி குணங்களுண்டாம்.

(சி.ம.)

(வேறு)

(வெண்பா)

'' உண்ணுஞ் சோற்றைக் காணின் ஓதக்கேட்கின் வெறுப்,
பண்ணினுண வெறுப்பாற்றுவார்—நண்ணுமதில்
அக்கறையே யின்றேல் அன்பு வெறுப் பெண்பாரால்,
தக்கவர்களென்றறி வைதான்.''

(கை எழுத்துப் பிரதி.)

**என்பதிற்கிணங்க**; உண்ணுகின்ற சோற்றைக் கண்டாலும் உண்ணுதற்கு அழைப்பதைக் காதால் கேட்டாலும், வெறுப் புண்டாயின் அதனை ''ஊண்வெறுப்பு'' எனவும், அன்றியும், அவ்வுணவில் வெறுப்பின்றி இச்சை மாத்திரமில்லையானால், அதனை ''அன்பு வெறுப்பு'' எனவும் முன்னோர்கள் கூறுவராம்.
(கை எழுத்துப் பிரதி).

நோய் எண்.

(வெண்பா)

'' சுவைமாறு நோயைந்தாய்ச் சொல்லி னாரேனும்,
யவையைந்து மீண்டும் மிரண்டாகும்—நவையாறும்
முக்குற்றத்தாலொன்று முன் திடீரெனவே
சிக்கிடையில் உண்டென்று தேர்.''
(கை எழுத்துப் பிரதி.)

**என்பதினால்**; முன்னோர்கள் கூறிய ஐந்துவகைச் சுவைமாறு நோயை இரு பிரிவுகளாகப் பாவிக்கலாமெனவும்; அதாவது மூக்குற்ற வாயிலாக வரக்கூடிய வளி, அழல், ஐயம், முக்குற்றம் என்னும் நான்கு வகைச் சுவைமாறு நோய்களும்; திடீரென வுண்டாகும் ''மனக்கலக்கச் சுவைமாறு'' நோய் ஒன்றும் ஆக ஐந்து பிரிவுகளெனப் பொருள்படக் கூறியுள்ளார்கள்.
(கை எழுத்துப் பிரதி.)

''சித்த மருத்துவத்திலும்'' மேற்கண்டவாறே பிரித்துள் ளார்; அவையாவன :—

1. வளி சுவையின்மை.
2. அழல் சுவையின்மை.
3. ஐய சுவையின்மை.
4. முக்குற்ற சுவையின்மை.
5. மனக்கலக்க (துக்கம் அல்லது ஆகந்துவம்) சுவையின்மை என ஐவகை நோய்களென்பர்.

நாவின் சிறப்பு நோய் இன்னதெனல்.
(வெண்பா)

'' சுவைமாறு நோயுஞ்சுரத்தின் தொகைகள்,
அவைகளிலுமிக்க இருமல்—இவை முதலாயதுவே
பன்னோயில் ஒருறுப்பாய்ப் பற்றிடினுமீண்டு
[illegible] றாய்ச்சி றப்பதுநோய் நாடு.''
(கையெழுத்துப் பிரதி).

என்பதினால், நாவானது எல்லாச் சுரங்களிலும், இருமல் முதலிய பலான நோய்களிலும் சுவையின்மை உண்டாகும் குறி குணங்களுக்குக் காரணமாக ஓர் உறுப்பாகயிருப்பதால், அந் நோய்கள் குணமடையுங்காலத்தில் நாவும் சேர்ந்து தன் சுயமான ருசியை மீண்டும் பெறுவதால், இச்செயல்கள் நல்ல நாவுக்கே உரியது என நாவின் சிறப்பு நோய்ப்பற்றி ஆராய்ந்த றிகவென்பதேயாம்.

(கைஎழுத்துப் பிரதி.)

## ஒவ்வொரு பிரிவு சுவையின்மை நோயின் தனித்தனிக் குறி குணங்கள்

### 1. வளி சுவையின்மை நோய் (வாத சுவைமாறு நோய்.)

(வெண்பா)

" வளியாற் சுவைமாறல் வாய்துவர்த்தல் நீர்பல்,
புளிதின்றாற்போல் கூசல்—வூணூண்களியாகும்
எச்சுவைகளிலுந்துவர்ப் பெய்த லோக்காளமும்
அச்சுவையுமார் நோயுமாம்."

(கைஎழுத்துப் பிரதி.)

என்பதினால், வளிக் குற்றத்தால் வரும் சுவைமாறும் நோயில் வாயும், வாயில் சுரக்கும் நீரும் எச்சுவைகளுடைய பொருள்களாயினும் துவர்த்தல், ஓக்காளமும் துவர்ப்பாயிருத்தல், பற்கள் புளித் தின்றாற் போல் கூசல், மார்பு நோதலாகிய குறி குணங்களுண்டாகும். உண்ணும் பொழுதே சில வேளை ஓக்காளித்தலும் செய்யும்.

### 2. அழல் சுவையின்மை (பித்த சுவை மாறு) நோய்.

(வெண்பா)

" தீயாற் சுவைமாறல் தீயினாற்றஞ் சூடாக
வாயாங்கசப்பு நீர்வாய்த்த பொருள்—ஓயாமல்
எச்சுவையு மோக்காளமெய்தில் கைப்பு புளிப்ப
எரிச்சல் வரளல் நீர் வேட்கையே."

(கைஎழுத்துப் பிரதி.)

என்பதினால், அழல் குற்றத்தாலுண்டாகும் சுவைமாறு நோயில் தீனாற்றத்தோடும் சூடாகவும் வாயில் கசப்பான நீர் சுரத்தல்; வாய்கைத்தல்; எச்சுவைப் பொருள்களையும் வாயி

விட்டால் அவை கைப்பாகவோ அல்லது புளிப்பாகவோ தோன்றல்; குமட்டிக் குமட்டிக் கைப்பு ஓக்காளம் வருதல்; நாவு எரிச்சல்: நாவறளல்; நீர் வேட்கை என்னும் குறி குணங்கள் தோன்றும்.

### 3. ஐயச் சுவையின்மை நோய் (ஐயசுவைமாறு) நோய்

(வெண்பா)

" ஐயச் சுவைமாறலார் வாய் நீ ருண்பொருள்கள்
செய்ய வோக்காளந்தித்திப்புப்பா—மைய்ய
நாவழுத்தலைவீழ நாடு பளுதற்பதடிப்
பாவ சைக்கக் கூடாமையால்."

(கைஎழுத்துப் பிரதி.)

என்பதினால், ஐயக் குற்றத்தாலுண்டாம் சுவைமாறு நோயில் வாயும், வாயில் சுரக்கும் நீரும், உண்பொருள்களும், ஓக்காளமும் இவை யாவும் இனிப்பு சுவையாகவும், சிலருக்கு உப்பாகவுமிருக்கும். அன்றியும் நா வழுவழுத்தல்; சிறு கோழை புலால் மணத்தோடு வாயிலிருந்து ஒழுகுதல்; நாவு பளுவாகவும் தட்பமாகவும், தடிப்பாகவும், அசைக்கக் கூடாமையாகவுமிருக்கும்.

### 4. முக்குற்ற சுவையின்மை நோய் (முக்குற்ற சுவைமாறு நோய்).

(வெண்பா)

" முக்குற்றமாறு சுவைமுன் கூறவாய் நீரு
மிக்குணவு வொக்காளமேவு சுவை—தக்க
பலசுவையாய்த் தோன்றல் பகரொணாத்தோற்றல்
பலதுன்பமாதலு மாம்பார்."

(கைஎழுத்துப் பிரதி.)

என்பதினால், முக்குற்றங்களில் கலப்பாலுண்டாகும் சுவைமாறு நோயினால் நாவும், நாவிற் சுரக்கின்ற நீரும், வாயிலிட்டு உண்ணும் உணவும், ஓக்காளமும் ஒருக்கால் பல சுவைகள் விரவியதாகவும், ஒருக்கால் யாதொரு சுவையுமில்லாத மாதிரியும் தோன்றும். அன்றியும் முன் கூறிய வளி, அழல், ஐயம் இம்மூன்று சுவைமாறு நோய்களில் காணும் குறி குணங்களும் கலந்து தோன்றும் என்றறிக!

5. மனக்கலக்க சுவையின்மை நோய் (திடீரெனவுண்டாகும் மனக்கலக்க சுவைமாறு நோய்)

(வெண்பா)

"இடையிற்றிடீரென்றெழு சுவைமாறன் நோய்,
தடையில்லாத்துக்க சினந்தங்கல்—யடைந்த பயம்
பேராசை யிச்சையின்மை பேண்டுய்மை யில்லாமை
வாராத்தீனாற்ற வுணவால்."

(கைஎழுத்துப் பிரதி.)

என்பதினால், துவக்கம், சினம், பயம், பேராசை, இச்சை யின்மை, தூய்மையில்லா உணவுப் பொருள், கெட்ட நாற்றமுள்ள உணவுப் பொருள் ஆகிய இவைகளில் ஏதேனுமொன்று திடீரென இடையில் தோன்றுமானால்; அதனால்—

(வெண்பா)

2. "உண்டாகு முக்குற்ற மூணமிலாதே மிகுதல்
கண்டாலுந்தாழ்ந்தாலுங் காணுமே—கொண்ட
சுவைமாறு நோயென்று தொன்னாள் மருந்தின்
அவையோரறைந்தனரால்."

(கைஎழுத்துப் பிரதி).

என்பதினால், வளி, அழல், ஐயம் என்னும் மூன்று குற்றங் களும் யாதொரு தீங்கில்லாமல் மிகுந்தாவது, குறைந்தாவது சுவைமாறு நோயை உண்டாக்குமென மருத்துவக் குழுவினர் மொழிந்திட்டனர் என அறிக!

இதன் குணம்

(வெண்பா)

3. "இடையில் வருநோயாயியம்பு சுவைமாறல்,
படுநோயினுள்ளம் பலவாய்க்—கடுமைக்
கலவரமாமாரி மிப்புக் காண் வாயிற் கோழை
பலமா வெளிச்செய்யும் பண்பு."

(கைஎழுத்துப் பிரதி.)

என்பதினால், இடையில் திடீரென வுண்டாகும் சுவைமாறு நோயில் (மனச்சுவையின்மை அல்லது மனக்கலக்க சுவை யின்மை நோயில்) மனம் பல பலவாய்க் கலவரப்படுதல் ; மயக் கம் ; உடல் திமிர்தல்; கோழை மிகுதியாக வெளிப்படல் ; எச்சுவையுமறியாமை ; உணவில் வெறுப்பு ஆகிய இக்குறி குணங் களையுடையதாகும்.

குறிப்பு.—சித்த மருத்துவத்திலும் மேற்கண்ட வசனத்தில் கூறியபடியே குறி குணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

## தீரும் தீராதவை.

வளி, அழல், ஐயம் என்னும் தனிக் குற்றத்தாலுண்டாகும் சுவையின்மை நோய்கள் தீரக்கூடியவை.

முப்பிணி சுவையின்மை நோய் தக்க மருத்துவத்தால் குண மாகும்.

மனக்கலக்க சுவையின்மை நோயானது மனக்கலக்கம் நீங்கி னாலொழிய தீராது.

(சி. ம.)

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவாதி செயல்களால் தீக்குற்றம் மிகுந்து மேல் நோக்குங் காலைத் தூண்டி வாய் நீர் சுரந்து, மற்றைய வளி, ஐயக் குற்றங்களைக் கேடடையச் செய்வதால் இந்நோய் பிறக்கு மென்க !

(இ. ம.)

## நாடி நடை.

1 " பொருளான வாதத்தில் பித்தஞ் சேர்ந்து,
பொருந்துங் குணங்களுட்ணவாயு சத்தி,
செரியாமை புளித்தேப்பம் பொருமல் நீரிற்
சிவப்புமலம் பிடித்தலுருத் தாது நட்டம்
கருவான தேகமதிலுளைச்சல் சோம்பல்
கைகால் தறிப்பு நாக்கூசக்கு மன்னம்
பரிவானவூண் குறைதல் ருசிகேடாதல்
பல நோயும் வருத்தி வைக்கும் பாங்கு தானே."

(சதக நாடி)

2 " தலைப்பான பித்தத்திலுட்ணங் கொண்டால்,
சயமத்தி சுரம் வெதுப்புச் சத்திகுன்மம்
களைப்பான பொறுத்துளைவு அதிசாரங்கள்
கடுப்புடனே வயிற்றுவலி மூலவாய்வு
இளைப்பாகி யூன்மறுத்தல் நாக்கசப்பு
இரவில் கனவுடனே சங்கார தோடம்,
வளைப்பான பயித்திய நோய் எரிவு தாகம்
வந்தணுகில் பலபிணிக்கும் வகையதாமே."

(சதக நாடி).

என்றதால், வாதபித்த தொந்தம், பித்த மிகுதியுடன் உட்டிணம் கலத்தல் இவைகள் சுவையின்மை நோயை உணர்த்துமென்க !

## 13. நீர்வேட்கை நோய்.

வேறு பெயர்கள் : நாவறட்சி, தாக நோய்.

இயல் : அடிக்கடி நீரைப் பருக வேணுமென்ற ஒரு வித உணர்ச்சியை எழச் செய்யும் நோயாகும்.

### நோய் வரும் வழி.

இஃது உணவின் வேற்றுமையாலும் ; வேறு சில நோய்களுக்குத் துணையாகவும் வருவதுண்டு. எளிதில் செரிக்கக் கூடாத உணவுகளைப் புசிப்பதால் அது சரிவரச் செரிக்கு மட்டும் நீர் வேட்கையை உண்டு பண்ணும் ; அல்லது தீக் குற்றம் (பித்தம்) மிகுதியால் வரும் நோய்களிலும் ; பேதி, வாந்தி, நீரிழிவு, ரத்தப் போக்கு இவற்றில் உடலின் நீர் மிகுதியும் வறளச் செய்வதாலும் ; முப்பிணி நோயிலும் ; ஆடல், பாடல், ஓடல் முதலிய செயல்களிலும் நீர் வேட்கை எழும்.

(சி.ம.)

### முற்குறி குணங்கள்.

இதில், நாவறண்டு போதல் ; நீரைப் பருக வேண்டுமென்ற இச்சை ; நீரைப் பருகினும் வேட்கை யடங்காமை ; இளைப்பு ; மயக்கம் என்னும் குறிகுணங்களைக் காட்டும். அன்றியும், உடல் நடுக்கம் ; எரிச்சல் ; உதட்டை நாவினால் நனைத்தல் ; குரற்கம்மல், உடல் தளர்ச்சி ஆகிய குறிகுணங்களுமுண்டாகும்.

### நோய் எண்.

முக்குற்ற யளவாக நீர் வேட்கை நோயை நான்கு வகையாகப் பிரித்துள்ளார் அவையாவன :—

(1) வளி நீர் வேட்கை.

(2) அழல் நீர் வேட்கை.

(3) ஐய நீர் வேட்கை.

(4) முக்குற்ற நீர் வேட்கை.

என்பவையாம்.

அன்றியும், இரச தாது கேடடைவதாலுண்டாகும் நீர் வேட்கை ஒன்றும் ; செரியாமையாலேற்படும் நீர் வேட்கை நோய் ஒன்றும் சேர்ந்து மொத்தம் ஆறு வகை நீர் வேட்கை நோய்களென்பர்.

### ஒவ்வொரு பிரிவு நீர் வேட்கையின் தனித்தனிக் குறி குணங்கள்.

### 1. வளி நீர் வேட்கை நோய்.

உடல் வாடல், கருத்தல், தலை சுற்றல் ; மனக் கலக்கம், சுவையறியாமை, காது கேளாமை, மிகு துக்கம், உடல் வன்மை குறைதலாகிய குறி குணங்களுண்டாகும். குளிர்ந்த நீரை எவ்வளவு முறை பருகினும் நீர் வேட்கை நீங்காமையுமிருக்கும்.

### 2. அழல் நீர் வேட்கை நோய்.

உடல் எப்போதும் வெப்பமாகயிருத்தல் ; நா, உதடு, அண்ணாக்கு இவை வறண்டு போதல் ; தொண்டை, நா இவை சிவந்து முள் போல் காணல், நாவு எரிதல் ; தொண்டை புகைதலாகிய குறி குணங்களுண்டாம்.

### 3. ஐயநீர் வேட்கை நோய்.

தொண்டையுள் அடைத்துக் கொண்டது போன்ற உணர்ச்சி ; வாய் இனித்தல் ; வயிறு பொருமல் ; பசியின்மை ; தலைநோய் ; உடல் குளிர்தல் ; வாய் சுவையறியாமை ; உண்ட உணவு செரியாமை என்னும் குறி குணங்களைக் காட்டும்.

## 4. முக்குற்ற நீர் வேட்கை நோய்.

இதில் சுரம்; முப்பிணி (சன்னி); நீரிழிவு; இளைப்பு நோய் முதலிய நோய்கள் முற்றி முக்குற்றங்களும் ஒருங்கே சேருங் காலத்தில் பிறப்பதாம். இது மருந்துகளால் தீராது. நோயினன் ஆயுள் முடிவைக் குறிக்க வந்த நோயெனச் சொல்லல் வேண்டும்.

## 5. இரச நீர் வேட்கை நோய்.

இந்நோய் உடற்றாதுக்களில் இரசமானது இரத்தமாக மாறும் பொழுது உண்டாகும் நோய். அன்றியும் குருதி அளவுக்கு மிஞ்சி வெளியாயின் மிகுந்த நீர் வேட்கை; நாவறண்டு போதல்; மூளை கலங்கி அடிக்கடி இளைப்புண்டாதல் முதலிய குறி குணங்களைத் தோற்றுவித்துச் சில வேளை கொல்லுவதுமுண்டு.

## 6. செரியாமை நீர் வேட்கை நோய்.

மிகுந்த இனிப்பு, உப்புப் பொருள், எளிதில் செரிக்கக் கூடாத உணவு முதலியவற்றைக் கொள்வதாலும், நோயுற்ற காலத்தும்; மிகுந்த நடையினால் இளைப்படைந்த காலத்தும், மிக்க உணவை உண்பதாலும் இந்நோய் பிறக்கும்.

(சி.ம.)

## தீரும் தீராதவை.

வளி, தீ, ஐயம் இவற்றாலுண்டாம் நீர் வேட்கைகளும்; செரியாமையால் வரும் நீர் வேட்கையும் எளிதில் தீரும். முக்குற்ற நீர் வேட்கையும் இரச நீர் வேட்கையும் எளிதில் தீராவாம்.

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உடலில் வறட்சியை உண்டாக்கக் கூடிய உணவு, செயல் முதலியவற்றால் தீக்குற்றத்தைப் பெருக்கி, மேல்நோக்குங் காலைத் தூண்டி இந்நோயைப் பிறப்பிக்கும். கேடடைந்த தீக்குற்றம் மற்றக் குற்றங்களையும் துணைக் கொண்டு அந்தந்தக் குற்ற வேற்றுமைக்குத் தகுந்தவாறு நோயைப் பிறப்பிக்கும். உடற்கட்டு சம்பந்தப்பட்ட மட்டும் இரசதாது, இரத்ததாது இவ்விரண்டும் கேடடையும்.

(சி.ம.).

**நாடிநடை.**

1. " உறுதியுள்ள பித்தமது தோன்றில் வெப்பு,
உட்ணவாயு அத்தி சுரமதிசாரங்கள்
மறதியுடன் கிறுகிறுப்பு பைத்திய ரோகம்
வளர்சோகை யழலெரிவு காந்தல் கைப்பு,

இருதயத்திற் கலக்கமது மறப்பு தாகம்,
எழுங் கனவுமேயணைவு மயக்க மூர்ச்சை,
சிறிது பெரும்பாடு ரத்தம் பிரமேகங்கள்
சேர்ந்து வெகுபிணி பலவுஞ் சிறக்குந்தானே."

(சதக நாடி.)

2. " இடமான சேத்துமத்தில் பித்தநாடி
எழுந்தணுகில் விடமுடனே வீக்கமுண்டாம்,
திடமான குளிர்காய்ச்சல் மஞ்சள் நோவுந்,
தேகத்திலுளைச்சலீளை இருமல் வாந்தி,
விடமான நெஞ்சடைப்பு சுவாசம் விக்கல்
வெகுசுரமும் நாவறட்சி பாண்டு ரோகம்,
அடமான குவளைரத்தம் அதிசாரந்தான்
அணுகி வெகுபலநோய்க்குந் தடங் கண்டாயே."

என்றதால், பித்தநாடி மிகுதி, அல்லது ஐயழல் தொந்தம் ஆகிய இவைகள் தாகரோகத்தை யுணர்த்துமென்க !

(சதக நாடி).

## 14. செரியாமை

வேறு பெயர்கள் : அசீரணம்.

இயல் : உண்ட உணவு செரிக்காமல் வயிற்றுள் தங்கி பேதி, ஏப்பம், வயறு ஊதல், வாந்தி, விக்கல் முதலிய குறி குணங்களைக் காட்டும் நோய்க்குச் " செரியாமை "எனவும் " அசீரணம் " எனவும் சொல்லப்படும்.

**நோய் வரும் வழி.**

எளிதில் செரிக்காத உணவுகளாகிய கொழுப்பு, மீன், கறி, கிழங்கு, கடலை, மொச்சை இவற்றை அளவுக்கு மிஞ்சி உண்டதாலும், ஊசிய பண்டம் மாப்பண்டம் இவைகளைப் புசிப்பதாலும், வயிற்றில் புளிப்பு மிகுந்து, பசித்தீயுங் குறைந்து உண்ட

உணவைச் செரிப்பிக்காதபடி செய்யும். அன்றியும் அகாலத்தில் உணவு கொள்ளல், நிலம் குளிர்ச்சியடைவதாலேற்படும் மந்தமாகிய இவற்றாலும், தூக்கமின்மை, மனக்கலக்கம், பேராசை, பயம், வெகுளி முதலியவற்றாலும் இந்நோய் பிறக்குமென்க.

### செரியாமை நோயின் முற்குறி குணங்கள்.

ஆரம்பத்தில் வயிறுப்பல், வயிற்றுநோய்; வயிற்றில் காற்றுச் சேர்ந்து, இரைதல்; ஏப்பம் விடுதல், தொண்டை உப்புக் கரித்தல்; வயிற்றிலுள்ள நீர் எதிரெடுத்தல்; விக்கல் என்னும் குறிகுணங்களைக் காட்டும்.

### நோய் எண்

சிலர் இந்நோயை ஆறு வகையாகவும்; மற்றும் சிலர் நாலு வகையாகவும்; வேறு சிலர் ஒன்பது வகையாகவும் பிரித்துள்ளார்கள்.

### ஒன்பது வகைச் செரியாமை நோய்களாவன.

1. வாதாசீரணம்.
2. பித்தாசீரணம்.
3. கப அசீரணம்.
4. பித்தவைய அசீரணம்.
5. வாதபித்த அசீரணம்.
6. கபவாத அசீரணம்.
7. நாட்பட்ட அசீரணம்.
8. விருப்ப அசீரணம்.
9. வல்லுணவு அசீரணம் என்பனவாம்.

### ஒவ்வொரு பிரிவு செரியாமைநோயின் தனித்தனிக் குறிகுணங்கள்

### 1. வாதாசிரணம்.

செரியாமை; வயிற்றில் சூலை; மலச்சிக்கல்; உடம்பு இளைத்தல்; பசித்தீ குறைவு; வயிறுப்பலாகிய குறிகுணங்களைக் காட்டும்.

### 2. பித்தாசிரணம்.

செரியாமை; உடம்பு சூடாகத் தோன்றல்; நீர்வேட்கை; சோர்வு; பிரமை; புளியேப்பம் ஆகிய இக்குறிகுணங்கள் வெகுவிரைவிலுண்டாகும்.

### 3. ஐய அசீரணம்.

செரியாமை; வாய் நீரூறல்; வயிற்றுவலியுடன் சிரமம் உண்டாதல்; உடம்புவலி உடல்கனத்தல்; கண்கள் தாடை அவற்றில் அதைப்பு, அடிக்கடி ஏப்பமுண்டாதல்; ஆகிய குறி குணங்களாம்.

### 4. பித்தவைய அசீரணம்.

உண்ணும் உணவுயாவும் வயிற்றில் தங்காமல் வாந்தியாதல்; உடலும் நாவும் வறளல்; செரியாமை; ஏப்பம்; உடல் எரிவு; ஒருசமயம் அல்லித்தண்டு போல் குளிரல்; கழுத்தில் வியர்த்தலாகிய குறி குணங்களைக் காட்டும்.

### 5. வாத பித்த அசீரணம்.

செரியாமை; புளியேப்பம்; உண்ட உணவு வாந்தியாதல்; வயிறுப்பல்; பேதியாதல்; ஒரு சமயம் இரைந்து புளிப்பான பேதியாதல்; முகங்கருத்தல்; உடல்வாடல்; மயக்கம்; முன்பின் தோன்றாமை; மிகுந்த நீர்வேட்கை; ஆகிய குறி குணங்களாம்.

### 6. கபவாத அசீரணம்.

உடம்பெங்கும் நோதல்; மிகுந்த சைத்தியம்; கோழையுண்டாதல்; உடலும் கண்களும் வெளுத்தல்; வெளுத்த வாந்தி; பொய்ப்பசி; நுரையாகப் பேதியாதல்; இருமல்; இரைப்பு : மேல்மூச்சு; துயரம் அதிகமாதல்; தலை புரட்டல்; மருத்துவத்திற்கடங்காமை முதலிய குறிகுணங்களாம்.

### 7. நாட்பட்ட அசீரணம்.

உண்ட உணவானது கிணற்றில் போட்ட கல்லைப் போல் வயிற்றிலடங்கிக் கனத்து நாள்பட மந்தமாயிருக்குமென்பதேயாம்

### 8. விருப்பவசீரணம்.

கார்ப்பு, புளிப்பு, இனிப்பு துவர்ப்பு, கைப்பு உப்பு என்னும் அறுசுவையுடன் கூடிய உணவுகளை உண்ணும்போது ஒருவன் அதை நேரில் பார்க்க நேரிட்டால், அவ்வுணவின் மீது விருப்பப்பட்டு இயங்கினவனாயின் அவன்தான் வழக்கமாக உண்ணும் உணவு செரிக்காமல் எலும்பைப் போலவே கிடக்கும் அப்போது புளியேப்பம் வயிற்றிலிரைச்சல், பொருமல் விகுத்தல், நோவுடன் பல துன்பங்களையும், மாறுபாடுகளையும் உண்டாக்கும்.

## 9. வல்லுணவு அசீரணம்.

செரியாமை, மனச்சங்கடம், வாந்தி மயக்கம் மூர்ச்சை நினைவு அழிதல் ; நா-கண்-மூக்கு-மெய் இவைகள் கருத்தல் ; உடல் உலர்தல் ; சோற்றில் வெறுப்பு ; நீரின் மேல் வெறுப்பு ஒரு வேளை வெளுப்பாகவும், ஒருவேள கருப்பாகவும் பேதியாதல் ; கண்களை உருட்டிப் பார்த்தல் ; உடல் உதறுதலாகிய குறிகுணங்களை விளைவிக்கும்.

(கை-எழுத்துப் பிரதி).

சித்த மருத்துவத்தில் கூறியுள்ள நான்கு வகைச் செரியாமை நோய்களாவன,

1. வளிச் செரியாமை.
2. அழல் செரியாமை.
3. ஐயச் செரியாமை.
4. முக்குற்றச் செரியாமை என்பவைகளாம்.

இவை ஒவ்வொன்றின் தனித்தனி குறிகுணங்களாவன.

### 1. வளிச் செரியாமை .

“ உண்டதோரன்னமெல்லாம் வாந்தியாகும்,
உறுதியாயழுகலாய்ப் புளித்தேப்பமாகும் ;
வண்டதோர் வயிற்றுப்பிப் பேதியாகும் ;
மகத்தான விரைச்சலோடு புளிப்புப்பேதி
உண்டதோர்முகங்கருக்கு முடலும் வாடும்
முதிர்மயக்கப்புத்தியது முன்பின்னாகும்
விண்டதோர் மிகவாதைகள் பிறக்கும்
மிகத் தண்ணீர் தவிப்பெய்து மீதுவளியே. ”

என்பதினால்,

இந்நோய் உண்ட உணவு செரியாது உண்டபடியே வாந்தியாதல் ; சில வேளை வயிற்றில் தங்கிப் புளித்து அழுகிய நாற்றத்துடன் வெளியாதல் ; வயிறுப்பல் ; பேதியாதல் ; வயிறு இரைந்து கழிதல் ; முகங்கருத்தல் ; உடல் வாடல் ; மயக்கம் ; அறிவு மயங்கல் என்னும் கொடிய துன்பங்களையுண்டாக்கும் ; அன்றியும் மிகுதியும் காற்றுப்பறியும் ; ஏருவாய் நோகும்; சிலவேளை காற்று குடலில் தடைப்பட்டு மூச்சு-வாங்கும்.

### 2. அழல் செரியாமை.

" எய்தியதோர் பதார்த்தமதை உண்ணுங்காலை
எடுக்குமே யடிக்கடிக்கும் வாந்திதானும்
பெய்தியதோர் புளித் தேப்பம் வாயெரிக்கும்
பேரான உதடோடு புரட்டும் நாக்கு
கைதிய தோர்கால் கையும் உடலெரிக்கும்
கண்டத்தில் வியர்வையுமாய்க் காயம் வற்றும்
சைதியதோர் அல்லிபோற்றளர்ச்சியாகும்
சைத்திய மாமிது யழல சீரணமாமே. "

என்பதினால்,

செரியாத உணவை உண்பதினால், உண்டது உண்டவாறே வாந்தி எழச் செய்து; வயிற்றில் புளித்து ஏப்பமுண்டாம்; எதிர்த்து வரும்நீர் வாயில் எரிச்சலையுண்டாக்கும்; கழுத்து வியர்த்தல்; உதடும் நாவும் துடித்தல்; கைகாலும் உதடும் எரிதல்; உடல் வற்றல்; தோல் சுருங்கல்; ஆகிய குறி குணங்களோடு மற்றும் அழல் குற்றத்திற் குறிய பல தீக் குணங்களையும் பெறும்.

### 3. ஐயச் செரியாமை.

" சயித்தயமாமிகவற்றுங் கோழைதானே
சடமெங்கும் வன்மையாய்க் கண்ணுந்தாழும்
பயித்தியமாய் வாந்தியது வெளுப்புமாகும்
பசிக்குமே யடிக்கடிக்கு நுரையாம்பேதி
உயித்தியமாயிருமலுடன் சுவாசந் தோனும்
உருகுகின்ற துயரமாய்த் தலைபிரட்டும்
வயித்தியந்தான் செய்தாலும் வசப்படாது
மறுக்குமையத்திற்பட்ட வசீரணந்தானே. "

என்பதினால்,

இந்நோயில் வாயில் நீரூறல்; வாய்குழ குழத்திருத்தல்; தொண்டையில் கோழை கட்டல்; வயிறு மந்தமாகயிருத்தல்; உடல் வெளுத்தல்; கண்பார்வை கீழ்நோக்கிக் காணல்; என்னும் குறிகுணங்களைக் காட்டி வெண்கோழையாக வாந்தி எழச் செய்யும்; அன்றியும், பொய்ப்பசி; நுரையாகக் கழிதல்; இருமல்; மேல் மூச்சு; தலைநோய் ஆகிய இவைகளையுமுண்டாக்கும்; மருத்துவம் புரியினும் பிழைப்பதரிது.

## 4. முக்குற்ற செரியாமை.

" மறுக்குமே மனமருண்டு வாந்தியாகும்
மயக்கமாய் மூர்ச்சையாய் வசக்கேடாகும்
கறுக்குமே நாக்கோடு கண்கள் மூக்கு
காய்ந்துலர்ந்து என்றென்றுங் கருத்துப் போகும்.
வெறுக்குமே யன்னத்தைத் தண்ணீர் தேடும்
வெளுப்போடு கறுப்பாகப் பேதியாகும்
உருக்குமே கண்கள் தனை யுருட்டிப் பார்க்கும்
உதறுமே திமிர்த்திது சன்னி வசீரணமாமே."

என்பதினால்,

இந்நோய் மனதை மருளச் செய்து உண்ட உணவை வாந்தியாக்கி மயக்கம் மூர்ச்சை வசமிழத்தல் இவைகளையுண்டாக்கும்; நா-மூக்கு-கண் இவைகள் உலர்ந்து கருத்துக் காணுதல்; உணவில் வெறுப்பு; அடிக்கடி நீர் கொள்ளல்; கருப்பு நிறத்துடன் பேதியாதல்; அடிக்கடி கண்ணை உருட்டிப் பார்த்தல்; ஆகிய இக்குறி குணங்களையும் முப்பிணிக் குறிகுணங்களையும் விளைவிக்கும். இந்நோயும் குணமாவது அரிது எனத் தெரிந்து கொள்ளவும்.

(சி.ம.)

### செரியாமை நோயின் பொதுக் குறி குணங்கள்.

இந் நோய், பசித்தீ வன்மை குறைவதால் உண்ட உணவு செரியாமல் புளித்து புளி ஏப்பம்: விக்கல்; நீர் வேட்கை; வயிறு இரைதல்; வாந்தி; அல்லது வயிறு கொட்டல் அல்லது இரண்டும் ஏக காலத்திலுண்டாதல்; காற்றுப் பரியாமல் அடிவயிறு நோதல் எனினும் குறி குணங்களைக் காட்டும்.

(சி.ம.)

### செரியாமை நோயின் முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவின் வேறுபாட்டால் பசித்தீ வன்மை இழந்து, குற்றங்களைத் தூண்டி, மிகுந்த குற்றத்தினளவாய் நோயின் வன்மையும் குறி குணங்களும் எழும். அன்றியும், முக்குற்றங்களின் கேட்டால் மேல் நோக்குங்காலும், கீழ் நோக்குங்காலும் கேடடையும், நடுக்காலும் கூடக் கெடும். நாட்படின், உணவின் சாரம் உடற்கு ஊட்டத்தைத் தாராது இரசதாது, குருதிதாது முதலிய உடற்றாதுக்களை மெலிவடையச் செய்யும். ஈதன்றியும், உணவு செயல் முதலிய வேறுபாடுகளால் உண்டான வளிக் குற்றத்தால் பசித்தீ கெட்டும், தீக் குற்றத்தால் பசித்தீ மிகுதிப்பட்டும்; ஐயக் குற்றத்தால் பசித்தீ அணைந்தும் நோய்களைப் பிறப்பிக்கும்

அவைகள் முறையே "விடமாக்கினி" "தீட்சணாக்கினி"; "மந்தாக்கினி" எனவும்; முக் குற்றங்களும் தன்னிலை பெறின், "சமாக்கினி" எனவும் சித்த மருத்துவத்தில் கூறியுள்ளார்.

தோடம்.

1. "முந்திய வாதம் ரெண்டும்
 பித்த மொன்றெழுந்ததாகில்,
வந்துதான் வயிறு விம்மும்
 வலித்திடுந்தாகம் மோகம்,
சிந்தனை மிகவுண்டாகும்
 பொசிப்பையும் செரியாதாக்கும்,
பைந் தொடிவாத பித்த மென்று
 தான் பகரலாமே."

வெண்பா.

2. "வாதத்திற் பித்தம் வளர்
 பித்தத்தில் வாதம்,
கோதுற்றுச் செம்மையாய்க்
 கூடினால்—தீதுற்று
கொண்டதோர் எவ்வுணவுங்
 குக்கிதனில் செரியா
துண்ட சீரண நோயெனச்
 செப்பு."

(ப. சி. நாடி.)

நாடி நடை.

3. "மத்தகஜம் போல் நடந்து மந்தித் திருக்குமேல்,
 அத்தக யசனத்தால சீரணமே."

(கை எழுத்துப் பிரதி)

என்பதினால்,

வாத பித்த தொந்தம் அல்லது பித்த வாத தொந்தம் நாடிகள் செரியாமையை அறிவிக்குமெனவும்; நாடிகள் மூன்றும் யானையின் கதியைப்போல் நடந்து அப்பால் மிகவும் தாழ்ந்து மந்தமாக நடக்கின் அது அசீரணத்தைக் குறிக்குமெனவும் அறிகிறோம்.

(வேறு)

4\. ''சிறப்பான பித்தத்தில் வாத நாடி
சேரிலுறுந்தாது நட்ட முதரபீடை,
உறைப்பாகச் செரியாமை குன்மஞ் சூலை
உற்ற சுரங்கிராணி வயிற்றிரைச்சல் மந்தம்,
அறைப்பான ஓங்காரபுற நீர்க் கோவை,
ஆயாசங் கிரக்கமொடு மயக்க மூர்ச்சை,
முறைக்காய்வு விடவீக்க மூலவாய்வு,
முரடான நோய் பலவுமுடுகும் பண்பே''

(சதக நாடி)

5\. '' பொருளான வாதத்தில் பித்தஞ் சேர்ந்து,
பொருந்து குணங்களுஷ்ண வாயு சத்தி,
செரியாமை புளித்தேப்பம் பொருமல் நீரிற்
சிவப்புமலம் பிடித்தல் உருத்தாது நட்டம்,
கருவான தேகமதிலுளைச்சல் சோம்பல்,
கைகால் தறிப்பு நாக் கசக்கு மன்னம்,
பரிவானவூண் குறைதல் ருசி கேடாதல்,
பல நோயும் வருத்தி வைக்கும் பாங்குதானே.''

(சதக நாடி)

என்பதினாலும்; பித்தவாதம் அல்லது வாத பித்தம் இவ்விரு தொந்த நாடிகள் செரியாமையைக் குறிக்குமென்பது முன் கூறியது போல் நிச்சயமாகிறது.

**தீரும் தீராதவை.**

மேற்கூறிய நான்குவகைச் செரியாமை நோய்களுள் வளிச் செரியாமை, அழல் செரியாமை, இவ்விரண்டும் எளிதில் தீரும். ஐயச் செரியாமையும், முக்குற்றச் செரியாமையும் தீராவாம்.
(சி. ம.)

## 15. விக்கல் நோய்.

**வேறு பெயர்கள் :** இகமா; விக்குள் என்பனவாம்.

**இயல் :** இந்நோய் ''விக்'', ''விக்'' என்னும் ஒலியுடன் எழுதலால் ''விக்குல்'' அல்லது ''விக்கல்'' எனவும்; ''இக்'', ''இக்'' என்னும் ஒலியுடன் எழுதலால் ''இசுமா'' என்றும் கூறுவர்.

இருமி எழும் ஒலியுடன் ''இக்'' என்னும் ஒலியும் கூடுவதால் இதனை மேல் நாட்டார் ''இக்கல்''' (Hiccup or Hiccough) என்கின்றனர் போலும்,

''விக்குள்'' அல்லது ''விக்கல்'' இவ்விரண்டும் ஒரு பொருளதே. ''விக்குள்'' என்பது ''விக்'' என்னும் முதனிலையோடு ''உள்'' எனும் தொழிற் பெயர் கடைனிலையும் சேர்ந்து உண்டாயிற்று. ''விக்கல்'' என்பது ''விக்'' எனும் முதனிலையோடு ''அல்'' எனும் தொழிற் பெயர் கடைனிலையும் சேர்ந்து தொழிலாகுபெயராய் அந் நோய்க்கு இவ்விரண்டு வார்த்தைகளும் காரணப் பெயராயிற்று.

## நோய் வரும் வழி.

இந்நோயானது காலை, மாலை இரு வேளைகளிலும் விடாமற் காயும் கனவெட்டையினாலும், கால் கைகளை அத்தொழிலாளர்களைக் கொண்டு நன்றாய்ப் பிடித்துக் கொள்ளுவதினாலும், மிக விரைவாக ஓடுவதினாலும், எவ்வழியிலேனும், அடக்க முடியாத மகிழ்ச்சியினாலும், உண்ணும் உணவுகளை மிகச் சூடாக உண்பதாலும், மிகக் காரமான உணவுகளைக் கொள்ளுவதாலும், இவை போன்ற இதர காரணங்களாலும், மேற் கிளம்பும் சூட்டினாலும், மிகுதிப்படும் காற்றாலும் குளிர்ந்த நீரில் தலை முழுகுவதினாலும், குளிர்ந்த காற்றில் இருத்தலாலும், உண்டாகும் கனவாயுவாலும், பத்து வாயுக்களிலொன்றான ''நாகன்'' எழுப்பப்பட, அந் நாகனும் தனக்கு இயற்கைத் தன்மையாகவுள்ள ஊற்றின் பண்பாலும் அதாவது ''தண்மையுறுதல்'', ''வெம்மையுறுதல்'' என்னுமிவ்விரண்டில், தனது ''தண்மை'' தன்மையினால் ஐயத்தை மிகிதிப்படுத்தியும், ''வெம்மை''த் தன்மையினால் ஐயத்தை இளக்கிக் கொதிப்பித்தும், தன் இயற்கைக் குணமான ''வரட்சி'' தன்மையினால் உள்ளிடத்தை வளரச் செய்தும் ''விக்'', ''விக்'' என்னும் ஒளியால் வெளியில் செலுத்தப்படுவதாம். இதனை ''விக்குள்'' அல்லது ''விக்கல்'' என்றும் கூறுவர்.

'' தான் மிகக் குளிர்ச்சி கொள்ளின்
தயங்கிய நாடி வாதம்.''

என்பதிற்கிணங்க வாயுவானது குளிர்ச்சிப் பொருள்களால் ''கனவாயு'' வாகிக் குளிர்ந்து ஐயத்தை மிகுதிப்படுத்தி நோயை விளைவிக்குமென பழமையான சித்தர் நூல்கள் கூறுகின்றன.

(கை எழுத்துப் பிரதி)

### ''சித்த மருத்துவத்தில்'' கூறியுள்ள விக்கலுக்குரிய நோய் வரும் வழி.

மிகுதியும் காரம், இனிப்பு, கைப்பு ஆகிய பொருள்களை உண்பதாலும், மாப்பண்டத்தை மிகுதியாய்ப் புசித்தலாலும், அவைகள் வயிற்றுள் புளித்து வயிற்றுள் காற்றைப பெருக்கும், அன்றியும் வாயுவைப் பெருக்கும் பொருள்களைக் கொள்வதாலும், மூச்சை அடக்கலாலும் உண்டான கேட்டால், அகட்டில் ஐயம் மிகுந்து அது மேல் நோக்குங்காலைத் தூண்டச்செய்து (உதான வாயுவை) விக்கல் நோயைப் பிறப்பிக்கும். ஈதன்றியும் நெடுநாள் நோயுடன் படுக்கையிலிருப்போர் முக்குற்ற நோயிலீடுபட்டோர், நீர்வேட்கையுற்றோர், பசியால் வாடினோர், நீரிழிவு நோயினர் ஆகிய இவர்கட்கும் ''விக்கல்'' துணை நோயாக வருவதுண்டு எனவும் கூறியுள்ளார்.

(சி. ம.)

### விக்கல் நோயின் முற்குறி குணங்கள்.

தொண்டை வறண்டு போதல்; நாவறளல்; வயிற்றில் ஏதோ உலாவுவதுபோல் தோன்றல்; வாய் கைத்தல்; நீர் வேட்கை, கண் சிவத்தல் ஆகிய குறிகுணங்களைக் காட்டி விக்கல் நோய் உண்டாகும்.

### நோய் எண்.

விக்கல் நோய் ஐந்து வகைப்படும். அவையாவன :—

1. வளி விக்கல்.
2. அழல் விக்கல்.
3. ஐய விக்கல்.
4. முக்குற்ற விக்கல்.
5. செரியா விக்கல் என்பவையாம்.

விக்கல் நோய் தனித்தும் மற்ற நோய்களுக்குத் துணை நோயாகவும் உண்டாகும்.

## ஒவ்வொரு பிரிவு விக்கல் நோயின் குறிகுணங்கள்.

### 1. வளி விக்கல் நோய்.

வளிக்குற்றத்தைப் பெருக்கக்கூடிய செயலாகிய பெரு மகிழ்ச்சியைத் திடீரெனக் கொள்ளல், வெயிலில் திரிதல், வறண்டு திரிந்த பின் நீர் பருகல், கடுமையாக ஓடல் ஆகிய இவைகளால், கை கால்கள் உளைச்சலாகி மேல் நோக்குங்காலும் (உதானவாயு) ''நாகன்'' என்ற வாயுவும் மிகுந்து உண்டான இந்நோயில் விக்கல், கண்கள் துடித்தல், வாய் துவர்த்தல், சிற்றிருமல் ஆகிய குறிகுணங்களைக் காட்டும். இஃது உணவில் மிகுதியும் காரமான பொருள்களைச் சேர்ப்பதாலுண்டாகும்.

### 2. அழல் விக்கல் நோய்.

மிகுபசி, களைப்பு, இளைப்பு இவற்றாலும், தீக் குற்றத்தைப் பெருக்கக்கூடிய உணவு வகைகளாலும், தீக் குற்றம் மிகுவதாலுண்டாம் விக்கல் நோயில் மேனிகன்றல், நாடி படபடத்தல், உடலில் அனல் வீசுதல் போன்ற தோற்றம், கொட்டாவி, மிகு கோபம், அறிவு மங்கல், விக்கல் ஒலி நெஞ்சுக் குழியிலிருந்து எழுவது போலத் தோன்றல் ஆகிய குறிகுணங்களாம்.

### 3. ஐய விக்கல் நோய்.

ஐயக் குற்றத்தைப் பெருகச் செய்யும் உணவு செயல்களால் வயிற்றில் செரியாமையையுண்டாக்கி மார்பில் கோழையைக் கூட்டி விக்கலைப் பிறப்பிக்கும். வயிறு உப்பல், பேதி, வாந்தி, விக்கலுண்டாகும் போதெல்லாம் கண் கலங்குதல், கண் நொந்து தெரித்து விழுவது போன்ற தோற்றம், கண்ணீர் வடிதல், முகம் வெளுத்தல், உடல் திரைதல், கொட்டாவி விடல், உணவில் வெறுப்பு, விழுங்க முடியாமை, நெஞ்சுலர்தல், மூக்கும் கண்ணும் வெளுத்தல் ஆகிய குறி குணங்களாம்.

### 4. முக்குற்ற விக்கல் நோய்.

நெடு நாட்களாய் சுரம் முதலிய நோய்களால் உடல் வன்மை குறைந்து மூன்று குற்றங்களும் ஒன்று கூடிய நிலையில் இவ் விக்கல் நோய் பிறக்கும். இதில் காணும் விக்கல் உந்தியிலிருந்து எழுவது போன்று உந்தியை அதிரச் செய்யும். விக்கல் அடுக்கடுக்காய் ஒன்றின் பின்னே ஒன்றாய் எழும். மார்பு நோதல், மூச்சு திணறல், ஆயாசம், உடல் ஓய்ச்சல் முதலியன உண்டாகும். புருவங்களும் இரு நெறிகளும் தெறித்து விழுவதுபோற் காணும்

## 5. செரியா விக்கல் நோய்.

மிகக் காரமான பொருள்கள், செரியாப் பொருள்கள், வறண்ட பொருள்கள் என்னும் இவைகளைப் புசிப்பதால் இவ் விக்கல் நோயுண்டாகும். தொண்டை வறண்டு, குரலோசை குறைந்து இருமலுண்டாய் அப்பால் விக்கல் தொடரும். உண்ட உணவு செரித்து விட்டால் விக்கல் நின்று விடும். உணவு செரிக்கும் வரைக்கும் விக்கல் இருந்து கொண்டேயிருக்கும்.

### தீரும் தீராதவை.

வளி விக்கல், அழல் விக்கல், செரியா விக்கல், இம்மூன்றும் எளிதில் குணமாகும். ஐய விக்கல் தகுந்த பரிகாரத்தினால் சில நாட்கள் சென்று குணமாகக்கூடும். முக்குற்ற விக்கல் தீராவாம். இது நோயினனைக் கொன்று விடும்.

அன்றியும், நீரருகல், நீரிழிவு, நாள்பட்ட சுரங்கள், குன்மம் முதலிய நோய்களில் பிறக்கும் விக்கல் நோய் தீராவாம்.

மேலும், முப்பிணி (சன்னி நோய்), ஊழி (வாந்தி பேதி), மிகு கழிச்சல் (அதிசாரம்), நாட்பட்ட கழிச்சல் (கிராணி), இளைப்பு நோய் ஆகிய இந்நோய்களில் விக்கல் நோயுண்டானால் கொல்லும் என்று அறியவும். "**விக்கல் கண்டால் ஏக்கம் — வீக்கம் கண்டால் தூக்கம்**" எனவும் பழமொழி வழங்குவதுண்டு.

### விக்கல் நோயின் முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவாதி செயல்களால் ஐயம் மிகுந்து, வாயுவைத் தூண்டி எழச் செய்து, அகட்டை அணுகி, உண்ட உணவைச் செரியாதாக்கி, அன்னப் பிழம்பைப் பரவ வொட்டாமல் தடுத்து, மேல் நோக்குங் காலைத் தூண்டி விக்கலைப் பிறப்பிக்கும்.

கால் : மேல் நோக்குங்கால் (உதானன்) ; நாகன் இவ்விரண்டு வாயுக்களும் வளர்ச்சி யடையும்.

### நாடி நடை.

1 "சேத்துமத்தின் கோதமலாது
விக்கலெடாது." (தேரன்)

2 "உறுதியெனும் விக்கலுக்குச்
சேத்துமவாதம்."

என்பதினால் விக்கலுக்கு ஐய வளி என்பது தெரிய வருகிறது.
(அகத்தியர் நாடி ...nd சி.ம.)

(வேறு).

3 ''தான்மிகக் குளிர்ச்சி கொள்ளின்
தயங்கிய நாடி வாதம்.''

என்பதற்கிணங்க, வாயுவானது குளிர்ச்சிப் பொருள்களால் கன வாயுவாகிக் குளிர்ந்து, ஐயத்தை மிகுதிப்படுத்தி நோயை விளை விக்குமென்பதாக ஏற்படுகிறது.

4. வளிக் குற்றமானது சூட்டினால் நுண்ணிதாயோடுந் தன் மைப் பட்டு, ஐயத்தைக் கொதிப்பித்தலானும் அது பித்தத்தின் செய்கையாதலானும் ;

(i) ''கோதாமையக் கொதிப்பிலென்றும்.''

(ii) ''ஏதில் ஐயப் பித்திலென்றும்.''

(iii) ''ஆதலால் நாடியில் ஐயமிளகில்.''

என்றும் வருவதைக் காண்க !

அன்றியும், சூட்டுப் பொருள் உணவுகளால் வாயு பெருகுவது இயற்கையாதலால் ;

(iv) ''பித்தத்தால் வளி பெருகின்'' என்று வருதலாலும் காண்க !

முடிவில் விக்கல்ரோகம் சிலேத்தும சம்பந்தமுடைய வாயுவே காரணமாகயிருப்பதால் மேலே குறிப்பிட்டபடி :

(v) ''சேத்துமத்தின் கோதமலாது விக்கலெடாது.''
எனத் தேரனும் ;

(vi) ''உறுதி யெனும் விக்கலுக்குச் சேத்தும வாதம்'' என அகத்தியரும் கூறியவற்றாலும் அறிகிறோம்.

(vii) ''தானமுள்ள சேத்துமந்தானிளகில் வெப்பு
சயமீளை யிருமல் மந்தாரகாசம்
ஈனமுறுஞ் சன்னிவிடதோடம் விக்கல்
இருதரோகங் கரப்பான் விரணதோடம்
மானனையீர் சூலைதிரள் வியாதிவீக்கம்
வருஞ்சத்தி சுவாசம் நெஞ்சடைப்பு தூக்கம்
ஏனமுறுங்காமாலை பாண்டுசோபை
எழுசுரங்கள் பலபிணிகள் காணுந்தானே.''

என்பதினாலும் ;

(viii) ''இடமான சேத்துமத்தில் பித்தநாடி
எழுந்தணுகில் விடமுடனே வீக்கமுண்டாம்
திடமான குளிர்காய்ச்சல் மஞ்சள்நோவும்
தேகத்திலுளைச்சலீளை இருமல் வாந்தி
விடமான நெஞ்சடைப்பு சுவாசம் விக்கல்
வெகுசுரமும் நாவறட்சி பாண்டுரோகம்
அடமான குவளைரத்த மதிசாரந்தான்
அணுகி வெகுபல நோய்க்குந் தடங்கண்டாயே.''

என்பதினாலும் ;

(ix) '' கண்டாயோ சேத்துமத்தில் வாதநாடி
கலந்திடுகில் வயிறுபொருமல் கனத்தவீக்கம்,
உண்டாலோ. ஓங்காரசத்தி விக்கல்
உறுதிரட்சை வாய்வுவலி சன்னிதோடம்
விண்டாலே யிளைப்பிருமல் சோகைபாண்டு
விடபாகம் விடசூலை பக்கவாதம்,
திண்டாடு நாசிகா பீடங்கக்கல்
சிரநோய்கள் பலவும்வந்து சிக்குந்தானே ''.

எனவும் '' சதகநாடி '' யில் கூறியிருப்பதால் ஐயநாடி தன்னளவில் இளகி நின்றாலும் ; ஐயழல் தொந்தம் ; ஐயவளி தொந்தம் ஆகிய இவற்றிலும் விக்கல் நோய் உண்டாகுமெனத் தெளிவாகிறது.

## 16. வாந்தி நோய்.

வேறு பெயர்கள்.—வாயாலெடுத்தல், சர்த்தி ; வமனம் என்பனவாம்.

இயல்.—உண்ட உணவு, குடித்த நீர் இவை செரித்தேனும், செரியாமலேனும், விரைவாக மேல் நோக்கி வெளியாவது வாந்தி எனப்படும்.

### நோய் வரும் வழி.

'' வாந்திநோய் நனிவரு மாரதனைக்
கூர்ந்தவறி வோய்கூறக் கேண்மோ,
மிகவுனீர்த்தது வேணநெய்ப்பசை
தகவேயுள்ளது தன்னுளங் கொளாதது

உவர்ப்பாயுள்ள துண்டிடலானும்
காலமகாலங் கனமாயுண்ணல்
காலமாறல் கனநகர் மாறல்
ஏலுமுடற்கு மேறுமாறாதல்
ஆகுமுணவு கடன்பாயுணினும்
வேகுமெதையும் விரைந்துணலானும்
சிறிதாயுணினும் செரியாதாலும்
புழுக்கள் மலக்குடல் புரளுவதாலும்
வலுவாய்ப் பயமது வளருவதாலும்
பெண்கள் சூலது பெருகுவதாலும்
மேல்வளிமாறுதல் மேவியதனால்
முக்குற்றங்களை முன்மேலெழுப்பித்
தக்கவாந்தி தான்வரச்செய்தே
வருத்தலென்று வகையாய்ப்
பெருத்த நூலறிஞர் பேசினரன்றே''.

என்பதினால் வாந்தி நோயுண்டாவதற்குரிய காரணங்களைக் கூறுமிடத்து; மிகவும் நீர்வடிவமான பொருள்களையாவது; மிக்க நெய்ப்பசையுள்ள பொருள்களையாவது; மனம் ஒவ்வாத பொருள்களையாவது; உவர்ப்புள்ள பொருள்களையாவது உண்ணலானும்; தக்க காலத்திலேனும், அகாலத்திலேனும், மிகுந்த உவண் உண்ணலாலும்; உடலுக்குப் பொருந்தாத உணவுகளைக் கொள்ளலானும்; தான் வாழும் நாட்டுக்கும், அந் நாட்டில் பொருந்திய தட்ப வெப்பத்திற்கும்; தன் வயதுக்கும் பொருந்தாத உணவுகளை உண்ணலானும்; எவ்வுணவாயினும் அதனை அதிக விரைவாக உண்ணலானும்; இத்தியாதி காரணங்களாலும் சிறுக உண்டாலும் செரியாத் தன்மையாலும்; மலக்குடலில் புழுக்கள் நெளிவதாலும்; மிகு பயத்தாலும்; பெண்கள் கருவுற்றிருக்குங் காலத்திலும்; மேல் நோக்குங்காலாகிய உதான வாயு கேடடைந்து; வளி, அழல், ஐயம் என்னும் முக்குற்றங்களையும் மேலுக்கு எழச்செய்து வாந்தி பண்ணி வைக்குமென்பது முன்னோர்களாகிய பேரறிஞர்களது கருத்து என்பதைத் தெரிந்து கொள்ளவும்.

### வாந்தி நோய்க்கு வேறு காரணங்களுமுள.

"இந்த வாந்தி இடுமருந்ததனால்
உந்துமிருமலுமுண்டாய்ச் சுவைகள்
மாறிப்பின்னர் வாந்தி
சாருமென்று சாற்றினரருளால்.''

என்பதினால், பெண்கள், ஆடவர் தத்தமக்குள் ஒருவரையொருவர் மயக்க (தன் வசமாக்க) இட்ட '' இடுமருந்தின் '' கொடுமையால் இருமல் நோய் கண்டு அதனால் நாவின் சுவை பலபட மாறிப் பின்னர் அச்சுவை அறியாமையால் உணவு அருவருத்து வாந்தி நோயுண்டாகுமெனவும் கூறியுள்ளார். இதற்கு '' மருந்தீடு '' நோய் பெருகுவதாலுண்டாகுங் குற்றமே காரணமென்பதும் தெளிவாகிறது.

மேலும், வாந்தி நோய் தனித்தும் வேறுநோய்களுக்குத்துணை நோயாகவும் வரும்.

(கையெழுத்துப்பிரதி.)

(வேறு.)

''நோய் வரும் வழி'' பற்றிச் ''சித்த மருத்துவத்தில்'' கூறியிருப்பதாவது.

மாப்பண்டம், ஊசிய பொருள்கள், கொழுப்பு நிறைந்த ஊண் பொருள்கள், நத்தை, நண்டு, மீன் முதலிய செரியாப் பொருள்கள் ஆகியவற்றை உண்பதாலும் நஞ்சுப் பொருள்களாகிய வெள்ளைப் பாடாணம், மருக்காரை, எட்டி முதலியவைகளை உட்கொள்ளுவதாலும் ; குன்மம் போன்ற வயிற்றிலுண்டாகும் நோய்களில் உண்ட உணவு செரிக்குந் தன்மை இழந்து அகட்டில் தங்கிப் புளித்து வாந்தியை உண்டாக்கும்.

அன்றியும், சூல்கொண்ட காலத்திலும் ; ஒற்றைத் தலைநோயிலும் ; பித்தப் பெருக்கிலும் ; வெறி நோய் ; மூப்பு நோயிலும் வாந்தி ஏற்படுவதுண்டு. இன்னும் சுற்றிச்சுற்றிச் சுழன்று ஓடல் ; கப்பல் பிரயாணம் ; தனக்காகப் பொருளைத் தொடல் அல்லது பார்த்தலாகிய மனதின் வேற்றுமையாலும் வாந்தி உண்டாகும். ஈதன்றியும், சுரம், இருமல், குடற்பிட்டிப்பு (ஆனாகம்), கல்லடைப்பு, வயிற்றிலுண்டாகும் கழலைகள் ஆகிய பல வகைப்பட்ட நோய்களுக்குக் குறியாயும் வாந்தி எழுவதுண்டு.

குறிப்பு.—ஊழி என்னும் வாந்திபேதி நோயில் வாந்தி மிகுதியும் உண்டாகும்.

(சி. ம.)

முற்குறி குணங்கள்.

வாய் நீரூறல், வாய் குமட்டல் ; மயக்கம் ; ஓக்காளம் ; நாவு தடுமாறல் ; வயிறு இரைந்து நோதல் ; புரட்டல் ; ஏப்பம் ; விக்கல் ; மார்பு படபடத்தல் என்னும் குறி குணங்களைக் காட்டி வாந்தி செய்விக்கும்.

குறிப்பு.—சிலவேளை தலை கிறுகிறுத்து, தலைசுற்றல், கண் இருளல் ஆகிய குறி குணங்களையுண்டாக்கி வாந்தி பண்ணும்.

(சி. ம.)

### நோய் எண்.

“ வாந்திநோய்தன்னை வருபன்னொன்றால்
தேர்ந்துரைத்தனர் செப்பியவதுதான்
வளிதீயையம் வருமுக்குற்றம்
புழுசெரியாமை புகுநீர்வேட்கை
விழுசூல்மலங் கண்ணேறுணாவெறுப்பு
காட்டியவிவைகள் காணிருவகையாம்
ஈட்டியமுக் குற்றத்தாலிடையில்
தோற்றிய செயலாற்றோன்றும்
நாட்டினிலென்று நவின்றாரென்றே. ”

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினால், வாந்தி நோயைப் பதினொன்று வகையாகப் பிரித்துள்ளார்கள். அவையாவன :—

1. வாதவாந்தி.
2. பித்தவாந்தி.
3. கபவாந்தி (ஐய வாந்தி)
4. முக்குற்ற வாந்தி.
5. புழுவாந்தி.
6. செரியாமை வாந்தி.
7. தாக வாந்தி.
8. கருப்ப வாந்தி.
9. மல வாந்தி.
10. கண்ணேறுணா வாந்தி.
11. வெறுப்பு வாந்தி.

என்பவைகளாகும்.

இப் பதினொன்றும் முக்குற்றத்தாலும், வெளிக் காரணங்களாலும் உண்டாவதுயென இருவகைப்படுத்தியும் கூறியுள்ளார்கள்.

(கை எழுத்துப் பிரதி.)

### வாந்தி நோயைத் தனி நோயெனல்.

" ஆமமுற் பேதியகலா விளைப்பு
தாமச்செம்புனல் சாரும்பித்தம்
வாந்திபேதி வன்மைக்குன்மம்
சேர்ந்தவிவை முதற்செப்பிய நோய்களில்
வந்திடும்வாந்தி வகைபோலாதே
ஆகலினிஃதஃதன்று
தனிநோயென்று சாற்றினரன்றே."

(கை எழுத்துப்பிரதி.)

என்பதினால், கிராணி, அதிசாரம், இளைப்புநோய், இரத்த பித்தம், வாந்தி பேதி, கொடுமையுள்ள குன்மம் ஆகிய இவ்வகையான நோய்களிலும் வாந்தியுண்டாகும். அவ்வாறு உண்டாகும் வாந்தி அந்தந்த நோய்க் குறி என்றறிக! அவ்வாறின்றி மேற்கூறிய " வாந்தி நோய் " தனிநோய் என்பது முன்னோர்களின் கருத்து.

### வாந்தி நோயின் முக்குற்ற வேறுபாடுகள்.

" மொழியினோய்க்கு முக்குற்றங்கள்
ஒழியாக்காரண மாயினுமுற்ற
மூன்றுந் தனித்தனியாகியு முயங்கியும்
ஆன்றநோயை யாக்குமவற்றின்
குறியாற்குற்றங் கூர்ந்திட்டறிந்து
நெறியாற்செய்ய நேர்மையாகும்
ஆதலால் ஐயுமையவளியும்
சீதப்பித்துஞ் சேர்வளிதீயும்
தீயிருபங்குந் தீயுங்காற்றும்
தீயுமையுஞ் சேர்ந்தநிலையுங்
கலந்த நிலையில் காணலாமென்
றறைந்தன ராயினுமாராய்ந்
துரைத்தல் கடனெனவுற்றறிவாயே."

(கை எழுத்துப்பிரதி.)

என்பதினால், இவ்வாறு தனி நோயாகவுண்டாகும் வாந்தி நோய்க்கு வளி, அழல், ஐயம் (வாதம், பித்தம், கபம்) என்னும் மூன்று குற்றங்களும் நீங்காத காரணமாயிருந்தாலும்; அவைகள் தனித்தனியாகவும், கலப்புற்றும் இந் நோயை விளை

விக்கும். அங்ஙனமிருப்பினும் அந்தந்தப் பிரிவு நோயின் குறி குணங்களால் இன்ன குற்றக் கேட்டால் இன்ன நோய் வந்ததென்று அறிந்து முறையாகவும், நேர்மையுடனும் மருத்துவம் புரிதல் கடமையாகும்.

அவ்வாறறியுங்கால் இந் நோயானது தனி ஐயத்தாலும்; ஐயவளியாலும்; ஐய பித்தத்தாலும்; வளி பித்தத்தாலும்; பித்த மிகுதியாலும்; பித்த வளியாலும்; பித்த ஐயத்தாலும் உண்டாகுமென்று பெரியோர்கள் கூறியுள்ளார்கள். அவர்கள் சொன்ன வாக்குப்படி மாணவர்களாகிய நாம் குற்றமடைந்த தோடம் அல்லது தோடங்களை நன்றாய் ஆராய்ந்தறிவது நம் கடமையாகும் என்பதேயாம்.

(கை எழுத்துப்பிரதி.)

(வேறு.)

முக்குற்ற வேறுபாடுகள்.

''சித்த மருத்துவத்தில்'' கூறியுள்ள முக்குற்ற வேறுபாடுகள்.

உணவின் வேற்றுமையாலும், நடத்தையின் வேறுபாட்டாலும், அழல் (பித்தம்) குற்றம் தன்னளவில் குன்றி வயிற்றுள் ஐயத்தை (கபத்தை)ப் பெருக்கிப் பசித்தீயைக் கெடுக்கும். கேடடைந்த குற்றத்தினளவாய் மேல் நோக்குங் காலும் (உதானன்), கீழ் நோக்குங்காலுங் கேடடைந்து (அபானன்), உண்ட உணவைச் செரிப்பிக்காதபடி புளிக்கச் செய்யும். செரிக்காததும், புளித்ததுமான இவ்வுணவு எதிர்த்து மேல்நோக்கி புளியேப்பத்தோடு வெளியாதல்; வயிற்றைப் புரட்டி வலித்தல்; என்னும் பண்புகளை உண்டாகும். சிலவேளை கழிச்சலையும் பெருக்கும் எனவும்; அன்றியும், மனதின் வேறுபாட்டால் உடலும் வேறுபாடடையுமாதலால், மனதின் கேட்டால் முக் குற்றங்களும் மாறுதலடைந்து இந் நோயை வருவிக்கும் எனவும் கூறியுள்ளார்.

குறிப்பு: இதில் நடுக்கலாகிய சமான வாயுவும் கேடடையும் எனலாம்.

நாடி நடை.

1 ''வளர்பித்தத்தீதலாது சர்த்தியடாது.''

2. ''பொருளான வாதத்தில் பித்தஞ் சேர்ந்து
பொருந்துகுணங்களுடனே வாயு சத்தி
செரியாமை புளித்தேப்பம் பொருமல்நீரிற்
சிவப்புமலம்பிடித்தல் உருத்தாதுநட்டம்
கருவானதேகமதி லுளைச்சல் சோம்பல்,
கைகால்தறிப்பு நாக்கசக்குமன்னம்
பரிவானவூண்குறைதல் ருசிகேடாதல்
பலநோயும் வருத்திவைக்கும் பாங்குதானே.''

3. ''தானமுள்ள சேத்துமந்தா னிளகில் வெப்பு,
சயமீளையிருமல் மந்தாரகாசம்,
ஈனமுறுஞ்சன்னி விடதோடம் விக்கல்
இருத்ரோகங் கரப்பான் விரணதோடம்
மானனையிர்சூலை திரள்வியாதிவீக்கம்
வருஞ்சத்தி சுவாசம் நெஞ்சடைப்பு தூக்கம்
ஏனமுறுங் காமாலை பாண்டுசோகை
எழுசுரங்கள் பலதிற்கு மிடமுண்டாமே.''

4. ''இடமான சேத்துமத்தில் பித்தநாடி
எழுந்தணுகில் விடமுடனே வீக்கமுண்டாம்.
திடமான குளிர்காய்ச்சல் மஞ்சள்நோவும்
தேகத்திளைச்சலீளை இருமல் வாந்தி
விடாமன நெஞ்சடைப்பு சுவாசம்விக்கல்
வெகுசுரமும் நாவரட்சி பாண்டுரோகம்,
அடமான குவளைரத்தம் அதிசாரந்தான்
அணுகிவெகு பலநோய்க்குந் தடங்கண்டாயே.''

5. கண்டாயோ சிலேற்பனத்தில் வாதநாடி,
கலந்திடுகில் வயிறுபொருமல் கனத்தவீக்கம்,
உண்டாலோ ஓங்காரசத்தி விக்கல்
உறுதிரட்சை வாய்வுவலி சன்னிதோடம்,
விண்டாலே இளைப்பிருமல் சோகைபாண்டு
விஷபாகம் விஷசூலை பக்கவாதம்,
திண்டாடுநாசி காபிடங்கக்கல்,
சிரநோய்கள் பலவும்வந்து சிக்குந்தானே.''

(சதகநாடி)

என்பதினால், பித்தம் தனித்துக் கேடடைந்தாலும்; வாத பித்தந் தொந்திப் பாலும், ஐயக் குற்றம் இளகி நின்றாலும் ; ஐயழல் தொந்தமானாலும் ; ஐயவளி தொந்தமானாலும் வாந்தி நோயையும் குறிப்பிடும் என அறிக !

### வாந்தி நோயின் பொதுக் குறிகுணங்கள்.

வாய் நீரூறல், வாய் குமட்டல், சுவை மாறல், ஓக்காளம், வயிறு நோதல், குடல் புரட்டல், நீர்வேட்கை ஆகியவைகளாம். வாந்தி அதிகப்படின் அல்லது வாந்தி இடைவிடாதிருப்பின் இளைப்பு, ஆயாசம், களைப்பு, கண் பஞ்சடைதல், கண் குழி விழல், காதுகேளாமை, வியர்வை, கைகால் சில்லிடல, மயக்கம், மூர்ச்சை என்னும் கெட்ட குறிகுணங்களையுங் காட்டிச் சில வேளை மரணமாவதுமுண்டு ; (சி. ம.)

### வாந்தி நோயின் பதினொரு பிரிவுகளின் தனித்தனிக் குறிகுணங்கள்.

#### 1. வாதவாந்தி (வளிவாந்தி).

''வளியின் வாந்தி வருங்குறித் தன்மைகள்
களியாற் கூறக் கண்டறி நம்பி
அடிமுதுகுந்தியாற் பக்கங்கள்,
கொடிநோயுண்டாய்க் கொண்டவுணவு
வாந்தியில் வெளியே வந்த பின்னர்ச்,
சேர்ந்த துவர்ப்பாய்த் தெளிவாய்க் கறுப்பாய்,
உள்ளநீர்நுரையோடுகூடி
விரைந்து சிறிது சிறிதாமளவில்
வருத்தத்துடனே வாந்தியாதலும்
அந்த வாந்தியில் குமோசையோ,
டுந்து மேப்பமுறுதலைமார்பில்
நோதலிருமல் நுவல் வாய் வரட்சி
யாதல் குரற் கம்மல் விளைப்
புண்டாகுதலெனவுரைத் தனரன்றே.''

என்பதனால், வாதவாந்தியில் அடிமுதுகு, உந்தி, இருவிலாப் பக்கங்களாகிய இவற்றில் நோயுண்டாய் ; முன்னர் உண்ட உணவு உண்டபடியே வாந்தியாகி விட்ட பின்னர் துவர்ப்பாகவும் கருப்பாகவும், தெளிவாகவுமுள்ளநீர் நுரையோடு கூடி வேகமாகவும், சிறிதுசிறிதாகவும் வருத்தத்துடனும் வாந்தியாதலும் அதன்பின் ஒலியோடு கூடிய ஏப்பம், இருமல் இவை யுண்டாதலும் ; வாய் வரட்சி, மார்பிலும், தலையிலும் நோதல், குரற் கம்மல், இளைப்பு ஆகிய குறிகுணங்களையும் காட்டும்.

(கை எழுத்துப்பிரதி.)

### 2. பித்த வாந்தி (அழல்வாந்தி)

''பித்தவாந்தியிற் பெறும் குறித்தன்மைகள்,
உற்றுரைப்பேன் உப்புநீர் போன்ற நீர்
அன்றிப் புகை நிறமாவது பச்சை,
மஞ்சள் நிறமேனுமன்னிக் குருதியோ
டணுகிப் புளிப் போடா காக்கார்ப்பு
நணுகுங்கைப்பென நாட்டுஞ் சுவைகளில்
ஒன்றினையடைந்தே யுற்ற வெப்போடு,
வன்மையாக வாந்தியாதலும்,
நீரில் வேட்கை நேர்ந்த வெரிச்சல்
மூர்ச்சைத் தலையுமுன்னே சுழலல்
என்பனவென்றே இயம்பினாரே.''

என்பதினால், பித்தவாந்தி நோயில் உப்பு நீர் போன்ற நீராவது, புகைநிறம் போன்ற நீராவது பச்சை, மஞ்சள் இந்நிறங்களைப் பெற்ற நீராவது, குருதியோடு கூடிய புளிப்பு, கார்ப்பு, கைப்பு சுவைகளில் எச்சுவை யேனு மொன்றை யடைந்து வெப்பத்துடன் வாந்தியாதலும், நீர்வேட்கை, மூர்ச்சை, எரிச்சல், தலைசுழலல் ஆகிய குறிகுணங்களையும் காட்டும்.

(கை எழுத்துப் பிரதி.)

### 3. ஐயவாந்தி.

''ஐயவாந்தியறையக் கேண்மதி
நெய்ப்பசையோடு நேர்ந்த நீராய்
துடிப்பு மிக்க தட்பமுமாகியும்
கொடிநூல் வடிவாய்க் கூறுங்கபந்தில்,
கண்கள் விட்டுக் கண்டன வினித்தல்
நன்னுமுவர்ப்பென நாட்டுஞ் சுவைகளில்
ஒன்றைப் பெற்று வாந்தியுறுதல்
தன்வாய் தன்னில் தண்ணீரூறல்
மயிர்சிலிர்த்தல் மன்முகமலைதத்தல்
செயிராஞ் சோம்பல் சேர்வாயினத்தல்
தூக்க நாவுஞ் சுவையறிவின்மை
யாக்கை பாரிப்பாய் மார்துடிப்பும்
இருமலாதலியலுமுடலம்
குருதிப் பூச்செனக் கூறல்

இவையே என்பர் இசைத் தமிழ்சித்தரே.''

என்பதினால், ஐயவாந்திநோயில் வாயில் நெய்ப்பசையோடு கூடிய நாய் வாந்தி வரல், கபத்தடிப்பையும், தட்பத்தையும், நூல் வடிவத்தையும், கண்களை யுடையதுமாயிருத்தல் ; இனிப்பு, உவர்ப்பு என்னும் சுவைகளில் எச்சுவை யாவது பெற்று வாந்தியாதல், வாய் நீர் மிகுதியாக ஊறல் ; மயிர் சிலிர்த்தல், முகம் அதைத்தல், வாயிளித்தல், சோம்பல், தூக்கம், சுவையறியாமை ; உடற்பளு வாய்த் தோன்றல் ; மார்புதுடித்தல் ; உடலில் குருதியது போற்காணல் ஆகிய இக் குறிகுணங்களையுண்டாக்கும்.

(கை எழுத்துப் பிரதி.)

## 4. முக்குற்றவாந்தி.

''முக்குற்றவாந்தி மொழியக் கேண்மோ,
பக்கமிரண்டிலும் பாரித்திழுத்தல்,
மார்பு கண்ட முந்தலை நோயாம்
சார்ந்தவுறுப்புகள் தம்மிலிருந்திருந்
தெரிச்சல்மிகு நீர் வேட்கை எய்தல்
பிரமை மூர்ச்சை பெருந்தலை சுழலல்
கைகால் விலத்தல் நடுக்கல் காணல்
தொண்டையனற் கொழு சொருகல் போல
அண்டருண்பமன்றி யினித்தல்
கைத்தலுவர்த்தல் காணிவற்றொன்றாய்
மற்றவாயிலூறிவாந்தி
யாதலுமன்றியம்முக்குற்றத்
தோது குறிகளொன்றினுந்தீரா
வாந்தி ரோகக்குறிகளுமன்னுவ
தாகுமென்றுலகரறைந்தனர்
வாகுமருத்துவ நூலோர் வகையே.''

என்பதினால், முக்குற்ற வாந்தி நோயில் இருபக்கங்களிலும் இசிவு, மார்பு, கண்டம், தலை இவற்றில் நோவு, உடல் உறுப்புகள் முழுவதும் பொறுத்துப் பொறுத்து எரிச்சலுண்டாதல், மிகுந்த நீர்வேட்கை ; பிரமை ; மூர்ச்சை; தலைசுழலல் ; கை கால் வெலவிலத்தல் ; நடுக்கல் ; தொண்டையில் காய்ச்சின கொழுவைச் சொருகினாற்போல் துன்பப்படல் ; இனித்தல் ; கைத்தல் ; உவர்த்தல் என்னும் சுவைகளில் ஒரு சுவை காணல் ; வாய் நீரூறல் ; வாந்தியாதல் ; அன்றியும் முக்குற்ற வாந்தியின் குறிகுணங்கள் யாவும் தீராவாந்தியின் குறிகுணங்களேயாகுமென முன் காலத்திய மருத்துவ நூலாராய்ச்சிக்காரர்கள் கூறியுள்ளார்கள்.

(கை எழுத்துப் பிரதி)

### 5. புழுவாந்தி நோய்.

''புழுவாந்திக் குறிகள் புகழக் கேண்மோ
    வளிமுதல் மூன்றும் வகையாய்த் தனித்தனி
மிகுதலினாலும் விரவுவதாலும்
    அகட்டிலே மார்பில் யடைத்த மலத்தில்
புழுக்கள் மிக்காய்ப் புகுந்து நெளிந்து
    வயிறு வலித்தல், வல்லுடல் நடுக்கல்,
செயிறுறு மார்பிற்றோயத்துடித்தல்,
    கோழை மிகுதல் கொண்டு வாந்தி
வீழலாகு மதனிற் புழுக்கல்,
    வெளியாமென்று விளம்பினரன்றே''.

என்பதினால், வளி, அழல், ஐயம், மூன்றும், தனித்தனி மிகுதினு லும்; ஒன்றோடொன்று கலந்தலாலும், வயிற்றிலேனும், மார்பி லேனும் மலத்திலேனும் புழுக்கள் மிகுந்து, புகுந்து நெளிந்து அதனல் வயிறு வலித்தல், உடல் நடுக்கல், மார்பு துடித்தல், கோழைமிகல் ஆகிய இவைகளோடு வரும் வாந்தியில் சிறு புழுக்களும் பெரும் புழுக்களும் வந்து விழும் என்பதே புழுவாந்தி யின் குறிகுணங்களாகும். அன்றியும் உடல் வியர்க்கும்; பெரு மூச்சு, மயக்கம்; மூர்ச்சை, உடல் இளைப்பு இவைகளுமுண் டாகுமென்பர்.

(கை எழுத்துப் பிரதி.)

### 6. செரியா வாந்தி.

''செரியா வாந்திச் செப்புங்காலை
செரியாப் பொருள்கள் தின்னலானும்
மாறும்பொருள்கள் மாந்தலானும்,
மேல்வளியுந்தியில் மேவப் பொருளைச்
செரிக்க வொட்டாமுது கிடைத்திருந்து
மறிக்கவொண்ணுமல் மடிவலித்தே
உண்டதிரண்டு மொன்றுமாகியும்,
உண்டதுண்டவாறேயுற்றும்,
வாந்தியாதலென்று
கூர்ந்தவறிஞர் கூறினரன்றே.''

என்பதனால், செரியா வாந்தி நோயில் செரிப்பதற்குக் கடினமான பொருள்களைத் தின்னலாலும்; உடற்குப்பொருந்தாத பொருள் களைக் கொள்ளலானும்; உதானவாயுவானது உந்தியிலிருந்து

அப்பொருள்களைச் செரிப்பிக்க வொட்டாமற் செய்து; முதுகு முதலிய இடங்களில் உலாவித் தடுக்க வொண்ணாத வயிற்று வலியை உண்டாக்கி; உண்ட பொருள்களை ஒன்றிரண்டாகவும் உண்டது உண்டபடியேயும் வாந்தியாதலேயாம்.

(கை எழுத்துப் பிரதி).

7. நீர் வேட்கை வாந்தி.

''நீர்வேட்கையினால் நிகழும் வாந்தி,
சார்பைக் கூறச் சார்ந்து கேளாய்,
நீர் வேட்கையினை நிரப்பாதிருப்பின்,
ஆரம்பித்தமதிகப்பட்டுத்
தன்செயலாமேனோக்குந் தன்மை,
முன்செய்தேயொரு வாந்தி மோதி,
வெண்மையாகவு மிகுந்த மஞ்சள்,
வண்ணமாகவும் வாரியாகவும்
வருத்தத்துடன் வரலென்
றுரைத்தனர் முன்னோருண்மை யறிந்தே.''

என்பதனால், நீர்வேட்கையுண்டாம் போது அதைத் தணிக்காமல் விட்டு விட்டால் பித்தமானது மீறித் தன்மேல் நோக்குந் தன்மையினால், மேலுக்கு கிளம்பி வெண்மையாகவாவது, மிக்க மஞ்ளாகவாவது, நீர்வடிவமாவது வருத்தத்துடன் வாந்தியாதலே நீர்வேட்கை வாந்தி என்பதேயாம்.

(கை எழுத்துப் பிரதி.)

8. கருப்ப வாந்தி (சூல் வாந்தி)

''சூல்வாந்தியின் முறை சூட்டக்கேளாய்,
ஏல்சூல்வாய்ந்த வியல் செயல் பெண்கள்,
கருப்பை வன்மை யிலாது கண்டால்,
தரிக்குங்குழவி தாங்கலின்றி,
வருந்தும்பித்தால் வாய் நீரூறிக்
கைத்த சுவையாற்காணல் சிலகால்,
எச்சுவையாயினும் எய்துவதாகும்.
அக்காலுணவு மருந்த வொண்ணா,
புக்கபுளிப்பைப் புன்னா விரும்பல்,
தக்கவைந்தாந்திங்கள் சாரின்,

அந்தவாந்தியகன்று நீங்கல்
விந்தையாக மேவல்குழவி,
ஈனும் வரையுமிருந்து பிறகு
தானே நீங்குமென்று மறிஞர்.
கூறும் கூற்றைக்கொண்டு
மாரிலுணர்வால் மகிழ்ந்தறிகுவையே.''

என்பதினால், சூல்வாந்தி என்பது கருப்பம் தங்கிய சில பெண்களில் கருப்பையானது வன்மையில்லாதிருக்குமாயின் , தரிக்கும் குழந்தையைத் தாங்கமுடியா வண்ணம் வருந்தச் செய்கின்ற பித்தத்தால் வாயில் நீர் சுரந்து கைப்புச்சுவையோடு வாந்தியாதலும்; அஃதல்லாமல் சில காலம் வேறு சுவைகளோடும் வாந்தியாதலுமாகும். அப்படி வாந்தியாகின்ற காலத்தில் உணவு அருந்த முடியாது. நாவானது புளிப்பு சுவையுள்ள பொருள்களை விரும்பும். இஃது சிலருக்கு ஐந்தாம் திங்கள் வரையிலும் இருக்கும். மற்றுஞ்சிலருக்கு பிள்ளைப் பேறு வரையிலும் கூட வாந்தியாகிற குணங்களைப்பெறும்.

(கை எழுத்துப் பிரதி.)

### 9. கண்ணேறுணா வாந்தி.

''கண்ணேறுணா வாற்காணும் வாந்தி
கண்டவாற்றைக் கழறக் கேண்மோ,
பொறாமைக் கரவு பூண்டவுளத்தின்
விராவிப் பார்க்க விருப்பவுணவை,
யுண்ணுவோர்க் குயுறு மறு சுவையோ
டுண்ணுபவனைப் பார்த்து யிவ்வுணவு
மேவக்கிலை யென்றே ஏங்குவோர்க்கும்,
அமரவ் வுணவை யருந்துவோர்கள்,
கூறக்கேட்டுக் கொள்விதி நமக்கு,
மாறிற்றென்று வருந்துவோர்க்கும்
வாந்தியுண்டாம் வருமவ் வாந்தி,
நாற்றந் தூய்மை நண்ணுதலின்மை.
கண்டபடியே கசடதாக
யுண்டாமென்றே யுரைத்தனர்,
பண்டையோரிதனைப் பகுத்தறிவாயே.''

என்பதினால், கண்ணேறுணா வாந்தியில் பொறுமை, வஞ்சகம்முதலிய கெட்ட எண்ணமுள்ளவன் பார்க்கும்படி உண்பவனுக்கும்; ஒருவன் அறுசுவையோடு உண்பதைப் பார்த்து நமக்கு இவ்வுணவு கிடைக்கவில்லையே என்று ஏக்கங் கொள்பவனுக்கும்; அவ்வாறான உணவை உண்டவன் சொல்லக்கேட்டு இப்படிப் பட்ட உணவை உண்ணக் கூடிய விதி நமக்கில்லாமற் போய்விட்டதே என்று வருந்துபவனுக்கும் வாந்தி நோயுண்டாகும். அவ்வாந்தி நாற்றமாயும், தூய்மையில்லாமலும், கண்ட கண்ட விதமாகக் கசடாக யிருந்தலுமாகிய குறிகுணங்களையும் பெற்றிருக்கும்.

(கை எழுத்துப் பிரதி.)

## 10. மல வாந்தி.

"மலவாந்தியினை வகுக்கக் கேண்மோ,
பலமாயங்கி பற்றிமலப்பைத்
தங்குமலத்தைத் தளர்த்தி இளக்கி,
அங்கொடு வளியையாக்கி மேலாய்,
அதனுடன் ஐயுந்தானு மளைஇ
சிதைந்து குற்றஞ்சேர்ந்தம் மலத்தை
வாந்தியில் வெளியில் வரச்செய்துடற்றித்
தலைவலி வயிற்றிற் றுங்கொணாநோயும்
உலைநெருப்பென வேயாக் காய்ச்சலும்,
உளைமாந்தையைப் போல் உட்கார்ந்திருத்தலும்,
களையு முகரொணா கடிய நாற்றமும்,
துன்னல் என்று சொற்றனர்
நன்னீருலகில் நயந்துணர்தற்கே.'

என்பதனால், மலவாந்தி நோயில் பித்தமானது மலப்பையிற் சென்று தன் தொழிலாகிய வெம்மை, இளக்கல் என்பவற்றால் அம்மலத்தை இளக்கி, அதை சிறப்பிடமாகக் கொண்ட வாயுவை மேல் நோக்கச் செய்து, அதனாலுண்டாம் ஐயுடன் கலந்து, மூன்ம் மிகுந்த குற்றத்தையடைந்து அவ்வாயுவின் துணையாலே அவ்வாந்தியில் அம்மலத்தை வெளியில் வரச் செய்து, நோயாளியை மிகவும் வருத்தப்படுத்தித் தலைவலி, வயிற்றுநோய், மிகுந்த சுரம், உளைமாந்தை நோயினனைப்போல் உட்கார்ந்திருத்தல், களை கொள்ளல், வெளிப்பட்ட அம்மலம் முகரவொண்ணா நாற்றம் வீசுதல் ஆகிய குறிகுணங்களைக் காணலாம்.

(கை எழுத்துப் பிரதி.)

## 12. வெறுப்பு வாந்தி.

''வெறுப்பு வாந்தியை விளக்கக் கேண்மோ.
பொறுக்கமுடியா புன்தீ நாற்றம்
உள்ளமலமும் உற்ற தூய்மை
இல்லாப்பொருள்களருவருப்
புள்ளப் பொருள்களிவை போன்றவையைக்
காண்டல் கேட்டல் கருதலிவற்றால்
ஆண்டேயுண்டா மருந்துறதனால்
உணவுப்பொருளிலுள்ளஞ் செல்லா
தெனவும் வாந்தியாமென்
றுணர்த்தினார் முன்னவரென்றோதே.''

என்பதனால், கண்களால் பார்த்தாலும், மூக்கால் மணங்கொள்வதாலும், பொறுக்க முடியாத அற்பமான கெட்ட மணமுள்ள மலத்தையும், மிக்க தூய்மையில்லாப் பொருள்களையும், அருவருக்கத்தக்க பொருள்களையும், மற்றும் இவை போன்ற பொருள்களையும் காண்பதனாலும், கேட்டலினாலும், நினைத்தலினாலும், துன்பங்களினாலும், உண்ணும் உணவுப் பொருள்களில் மனம் செல்லாது அருவருத்து வாந்தியுண்டாவதை வெறுப்பு வாந்தி நோயெனக் கூறுவர்.

(கை எழுத்துப் பிரதி.)

### நோய் எண் (வேறு)

சித்த மருத்நூலத்தில் வாந்தி நோயைப் பத்துப் பிரிவுகளாக வகுத்துள்ளார் அவையாவன :

(1) வளி வாந்தி.
(2) அழல் வாந்தி.
(3) ஐய வாந்தி
(4) முக்குற்ற வாந்தி.
(5) வெறுப்பு வாந்தி
(6) புழு வாந்தி.
(7) கண்ணேறுணாவாந்தி.
(8) எரு (மலம்) வாந்தி.
(9) குருதி வாந்தி.
(10) சூல்வாந்தி, என்பவையாம்.

இப்பிரிவில் '' குருதிவாந்தி '' ஒன்றைச் சேர்த்தும்; '' செரியா வாந்தி'' 'நீர்வேட்கை வாந்தி'' இவ்விரண்டையும் நீக்கியும் சித்த மருத்துவத்தில் வகுத்துள்ளார்.

சித்த மருத்துவத்தில் கூறியுள்ள பத்து வகை வாந்தி நோய்களின் குறிகுணங்களாவன.

### 1. வளி வாந்தி.

வாய் குமட்டல்; வாய் நீருறல்; வெள்ளோக்காளம்; வாய் துவர்த்தல்; கைத்தல்; அடிவயிறு, அடிமுதுகு , வயிற்றின் இரு பக்கம் இவ்விடங்களில் வலி; குடற்புரட்டல் , இரைதல், நோதல், இவற்றுடன் இடைவிடாது வாந்தியாகும். வாந்தியானது தொண்டையைக் குத்திக் குத்தி மிகுந்த ஒலியுடனும், விரைவாகவும் வெளிப்படும். மேலும் ஏப்பம் , விக்கல், மார்புநோய் மார்பு படபடப்பு, இளைப்பு, ஆயாசம் ஆகிய குறிகுணங்களையும் காட்டும்.

### 2. அழல் வாந்தி.

நீர் வேட்கை; வாய் கைத்தல்; உவர்த்தல்; தலை நோதல்; தலை சுழற்றல்; மூர்ச்சை; மயக்கம்; உடல் எரிதல்; என்னும் குறிகுணங்களை உண்டாக்கி வாந்தியும் உண்டாகும். வாந்தியானது மஞ்சள், இலைப் பச்சை, சிவப்பு நிறங்கள் இவைகள் கலந்த நீர் போன்று காணப்படும். சுவையில் கைப்பு, கார்ப்பு அல்லது உவர்ப்பு கலந்திருக்கும். இவை அழல் வாந்தியின் குறிகுணங்களாம்.

### 3. ஐய வாந்தி.

மிகுதியான வாய்நீர் சுரத்தல் ; வாயில் நெய்பூசியது போல் குழத்தல்; தொண்டையில் கோழை கட்டல்; வாய் நாற்றம்; வாய் நீரினித்தல் அல்லது துவர்த்தல் ஆகிய குறிகுணங்களைக் காட்டி இடைவிடாது வாந்தி பண்ணும். வாந்தி எழும்பொழுதே மார்பு நொந்து துடித்து, முகம் வியர்த்துக் கண் பஞ்சடைவதுண்டு. இக்குறி குணங்கள் ஐயவாந்தியைச் சேர்ந்தவை.

### 4. முக்குற்ற வாந்தி,

இந்நோயில் வாய் நீர் சுரந்து வடிதல்; அந்நீர் பலவகைப்பட்ட சுவையோடிருத்தல்; தொண்டையை அடைத்தது போன்றிருத்தல்; தாகம், மூர்ச்சை, நடுக்கல், கோழையோடு கூடிய வாந்தி இவற்றை உண்டாக்கும்; வாந்தி எடுத்த பின் வியர்த்தல்; தலை நோதல்; அறிவிழத்தல் ; ஆகிய குறிகுணங்களையும் இரு விலாப் பக்கங்களிலும் புடைத்தலையுமுண்டாக்கும்.

## 5. வெறுப்பு வாந்தி.

இந்நோயில் தனக்கு ஒவ்வாப் பொருள்களைப் பார்த்தல்; அதனைத் தொடல்; இவற்றால் வாய் நீரூறி, குமட்டி வாந்தி எழச் செய்யும்; அல்லது அப்பொருள்களை மனதில் நினைத்த மாத்திரத்தில் வாந்தியையும் மயக்கத்தையுமுண்டாக்கும்.

## 6. புழுவாந்தி

இந்நோயில், வயிற்றுள் புழு மிகுதியாகச் சேரின் அவைகள் கீழ் நோக்கி வெளியாகிவிடும். சில வேளை அகட்டில் தங்கி மேல் நோக்கும்பொழுது வாய் குமட்டி உமிழ்நீர் பெருகி வாந்தியை எழச் செய்யும், அத்துடன் அப்புழுவும் வெளியாகும் என்பதேயாம்.

## 7. கண்ணேறு வாந்தி

இது, கண்ணேறு (திருட்டி) படுவதாலுண்டாகும் வாந்தி எனப்படும். ''கல்லடிபட்டாலும் படலாம், கண்ணடிப்பட முடியாது''—என்னும் பழமொழியைப் போல், ஒருவன் உண்ணும் உணவின் அளவு, வகை முதலியவற்றைக் கண்ட மற்றொருவன் அவ்வாறான உணவு தனக்கில்லை என்று நினைத்த மாத்திரத்திலுண்டாவது இந்நோய் என்கிறார்.

## 8. எரு (மலம்) வாந்தி.

இந்நோயில், கீழ்நோக்கி வெளியாகவேண்டிய எரு இயற்கை வழி மாறி, மேல் நோக்கி வெளியாகும். பெருங்குடலிலுள்ள எரு (மலம்) தீ (அழலின்) மிகுதியால் வரண்டும், குடலின் செயல் இழந்துள்ள போது, அழலின் பெருக்கால், முக்குற்றங்களையும் கேடடையச் செய்து, மேல் நோக்குங்கால் தூண்டப்பட்டு வயிறு கடுத்தல், புரட்டல், வேதனை, மூச்சுத் தடுமாறல், கைகால்கள் சில்லிடல், வயிறுப்பல், வயிற்றைத் தொட்ட மாத்திரத்தில் நோதல், (Tenderness) நீர் வேட்கை, சுரம், தலை நோய், மயக்கம், வாய் நீரூறல், முதலிய குறி குணங்களைக்காட்டி வாந்தியோடு எருவையும் வெளியாக்கும். இந்நோய் ''குடற்பிடிப்பு நோய்'' ''குடலண்டவாயு''; ''வயிற்றிலடிபடல்'' ஆகிய இவற்றிலும் உண்டாகும் எனக் கூறியுள்ளார்.

## 9. குருதி வாந்தி (இரத்த வாந்தி).

இவ்வாந்தி இளைப்பு நோயில் நுரை ஈரல் கேடடைந்து ஆங்குள்ள குருதி மாறுதலின்றி நுரையுடன் கலந்து வெளியாகும். குன்ம நோயிலும் அகடு புண்ணாய் அதிலிருந்து கசிந்த ரத்தம்

உணவுடன் கூடிக் கறுத்து வெளியாகும். வலப்பாட்டீரல், இடப்பாட்டீரல் நோய்களிலும் வாந்தியில் குருதி வெளியாகக் கூடும். குருதியழல் நோயிலும், தமரக நோயிலும் குருதி வாந்தியாவது உண்டு.

### 10. சூல் வாந்தி.

சூல் கொண்ட பெண்களில் சிலருக்குக் கருப்பம் தரித்த முதல் மாதம் முதல் பிள்ளை பெறும் வரைக்கும் வாந்தியாவதுண்டு. இவ்வாந்தியானது, நீர்ப்பொருள்கள் சிறிது கொள்ளினும் வயிற்றில் தங்காதவாறு வாந்தி செய்வித்து உடலை வாட்டுவிக்கும். மற்றும் சிலருக்கு மசக்கைக் காலமாகிய நான்காம் திங்கள் முதல் ஐந்து அல்லது ஆறாம் திங்கள் வரையில் வாய் குமட்டி உணவில் வெறுப்புண்டாகி வாந்தியை உண்டாக்கும். ஆயினும் இஃது உடல் வன்மையைக் கெடுக்காது எனவும் கூறியுள்ளார்.

(சித்த மருத்துவம்)

### வாந்தி நோய்த் துன்பங்கள்.
(துணை நோய்கள்.)

''வாந்தி நோய்த் துன்பம் வகுத்துரைக்கின்,
ஏய்ந்தவிருமலிரைப்பு விக்கல்,
சுரநீர்வேட்கை சோருள மயக்கம்,
இளைத்தல் மார்பு நோய்
என்பவையாமே''.

என்பதினால், வாந்தி நோயில் அணுகும் துணை நோய்கள் :— இருமல், இரைப்பு, விக்கல், சுரம், நீர்வேட்கை, புத்தி மயக்கம், இளைப்பு, மார்பு நோய் ஆகியவைகளாம்.

(கை எழுத்துப் பிரதி.)

### தீரும் தீராத வாந்திகளாவன.

''வாந்தியிற்றீராவாந்தி மலமும்,
சேர்முக்குற்ற வாந்தியுந் தீரா,
மற்றவை தீருமன்னெனச்
சொற்றனர் தூயோர் தொல் மருத்துவரே''.

என்பதினால், மல வாந்தி, முக்குற்ற வாந்தி ஆகிய இவ்விரண்டும் தீராவெனவும்; மற்ற ஒன்பது பிரிவு வாந்திகளும் (முதலில் கூறிய பிரிவுப்படி) எளிதில் தீரும் என்பது தெரியவருகிறது.

(கை எழுத்துப் பிரதி.)

## வாந்தியால் மரணக் குறியறிதல்.

1. "கைகால் குளிரல் கனமார்பு துடித்தல்
மெய்நாவரளல் மிகப்பல் கருத்தல்,
கண்ணில் மூக்கில் கன நீர் பாய்தல்
நன்னில் வாந்தி நாடிவரினே,
மன்னிற் சாவு வருமென்
றன்னலுரைத்தவருநூல் முறையே."

என்பதினால், கை கால்கள் சில்லிட்டு, மார்பு துடித்து, நாவில் நீரில்லாது வறண்டு, பற்கள் மிகவும் கருத்து, கண்களிலும் மூக்குத் துளைகளிலும் நீர் வடிந்து கொண்டிருக்குங் காலத்தில் வாந்தியும் வந்து கொண்டிருப்பின் மரணம் நிச்சயமாம்.
(கை எழுத்துப் பிரதி.)

(வேறு.)

2. "மலநீரடைத்து வத்து வேர்வை
வலிவாய்க்கைகால் வாங்கி வீங்கி,
வயிறு பொருமி வரண்டு நாவும்,
செயிராய் மூச்சும் சேரவடைத்து,
விக்கலிளைப்பு மேவி மயக்கம்,
தக்கவுடலம் தண்ணென வாகில்,
வாந்தி வரினே காலன்
சேர்ந்தானென்று செப்பினரன்றே".

என்பதினால்,
மலமும் நீருமடைத்து உடல் முற்றும் வியர்வையுண்டாய், கைகளிலும் கால்களிலும் வீக்கமுண்டாய், பின்னர் வாங்குதலும் வீங்குதலுமாய் வயிறு பொருமி, நாவறண்டு, மூச்சடைத்து, விக்கல், இளைப்பு, மயக்கம், உடம்பு சில்லிடல் என்னும் இக்குறி குணங்களுண்டாயிருக்குங் காலத்தில் வாந்தியுமிருந்து கொண் டிருப்பின் காலன் அந்நோயினனைச் சேர்ந்து விட்டானென்றறிக.
(கை எழுத்துப் பிரதி.)

(வேறு.)

3. "இரண்டு விலாவுமெடுத்தடித்தல்,
திரண்ட விக்கல் சேருடற் சோர்வு,
புடைத்தல் குளிரல் போத வெளுத்தல்,
புறங்கை புறங்கால் புகழ் குறி வீங்கல்,
இளைப்பிவற்றில் வாந்தி
கிளைக்கிற் சாவு கிளத்தினரே".

என்பதினால், இரண்டு விலாக்களும் எடுத்தெடுத்துப் போடல் (High spasm), மிகுந்த விக்கலுண்டாதல்; உடல் சோர்வு; உடம்பு புடைத்தல்; உடல் குளிரல்; மிகவும் வெளுத்தல், புறங்கை, புறங்கால், குறிகள் இவை வீங்கல்; இளைப்புண்டாதலாகிய இக் குறிகுணங்களோடு வாந்தியும் சேர்ந்திருப்பின் நோயினன் இறப் பானென்பது திண்ணம்.

(கை எழுத்துப் பிரதி.)

சித்த மருத்துவத்தில் கூறப்பட்ட தீரும் தீரா வாந்திகளிவை எனல்.

1. முக்குற்ற வாந்தியுமல வாந்தியும் தீராவாம் ;

2. குருதி வாந்தி நாள்பட்டு நிற்குமெனவும் ;

3. சூல் வாந்தியில் சில எளிதில் தீராவெனவும் ;

4. மற்ற ஆறு வாந்தி நோய்களும் தகுந்த மருத்துவத்தினால் குணமாகுமெனவும் கூறியுள்ளார்.

அன்றியும், வாந்தி நோயின் தீரா இலக்கணங்களைக் குறிப்பிடு மிடத்து முன் கூறியது போலவே மலமும் நீரும் அடைபட்டு, உடல் முழுமையும் வியர்வையுண்டாய், கையுங் கால்களும், வீங்கலும், வயிறு பொருமி, நாவறண்டு, மூச்சுத் தடைப்பட்டு, இளைப்பு, விக்கல் மயக்கம் என்னும் இக் குறிகுணங்கள் காண்ப தோடு இடைவிடாத வாந்தியுமிருப்பின் மரணம் சம்பவிக்கு மெனவும் சித்த மருத்துவம் கூறுகின்றது.

எந்தெந்த தோடங்களில் வாந்தியுண்டானால் சாவு நிச்சயம்

''பித்தும் வளியும் பெருகத் தாழ்ந்து
மெத்தவையமிளகில் மேவும்,
வாந்தி முடிவு வருதற்
கேய்ந்த குறியென்றிசைந்தாரன்றே''.

என்பதினால் பித்தமும், வாதமும் மிகத் தாழ்ந்து (தன்னடை வன்மையிற்குறைந்து) ஐயமானது இளகி நின்றால், அப்போது உண்டாம் வாந்தியானது முடிவு காலமுண்டாவதற்குரிய அறிகுறி என்று முன்னோர்கள் தெரிவித்துள்ளார்கள்.

## 17. மாந்த நோய்.

வேறு பெயர்கள்.—மந்தம், அலசம் ; அலசகம்; கீழ் வாய் விகுத்தல் நோய்; செரியாமை என்பனவாம்.

**இயல்.**—உண்ட உணவு செரியாமலும், வாந்தியாகாமலும், பேதியாகாமலும் இரைப்பையிலேயே தங்கி வயிறு இரைதல், ஏப்பம் விடக்கூடாமை, வாந்தி செய்யக்கூடாமை என்னும் துன்பங்களை உண்டாக்கும் நோயாம்.

நோய் தோன்றும் வழி.

1. ''காணப்பா முறைபாடெல்லாங்
காண்பது மந்தத்தாலே,
பூணப்பா மந்தமானால்
புகுந்திடும் வாய்வுதானும்,
வாணப்பா நோய்களெல்லாம்
வாயுவால்வளரும்பாரு,
மூணப்பா வப்பு வன்னி
முத்தோடம் மூன்றும் பாரே''.

2. ''பாரப்பா மந்தமுண்டாம்
பரிசனமுரைக்கக் கேளு
காரப்பா மிகுந்து மெத்த
கபளிக்குமன்னத்தாலே
வாரப்பா விறைச்சியாலும்
மாப்பண்டத்தாலுந்தானுஞ்
சேரப்பாமேதிப்பாலால்
சேர்ந்திடுமந்தந்தானே.''

3. ''தானென்ற வன்னத்தாலே
தலைப்பட்டவுடம்பிதப்பா
தானென்ற வன்னமப்பா
துணிப்பழி கொண்டு மீறில்
தானென்ற வன்னமெல்லாஞ்
சகல வித்தாகுமாகும்பாரு
தானென்ற தானுக் கெல்லாம்
தத்துவ முரைக்கக் கேளே.''

4. ''கேளப்பா வெட்டை பித்தங்
கெடியானவாதம் வாய்வு,
வாளப்பா அய்யஞ் சீதம்
வந்திடுமன்னத் தாலே
பாளப்பாவன்னந்தானும்
பகையுடன் பழியுங் கொள்ளும்
வேளப்பா வன்னத்தாலே
மேகங்கள் நிறப்பைக் கேளே'.

என்றதால், கறி(மாமிசம்), ஆட்டுப் பால், மாப்பண்டம்,சோறு முதலியவற்றை அளவுக்கு மிஞ்சி உண்பதாலும்,அபக்குவ உணவுகளை உண்பதாலும், அவை செரியாமல் வயிற்றுள் தங்கி ''மேல் நோக்குங்காலை'' (உதானவாயுவைக்)கேடடையைச் செய்து இந்நோய் பிறக்கும். அல்லது தீக்குற்றம் மிகுந்து வாயுவைத் தூண்டி இந்நோயைப் பிறப்பிக்கும் அல்லது வாயுவுடன் ஐயுங்கூடியும் இந்நோய் பிறக்கும்.

அன்றியும், உணவில்லாது பட்டினி கிடந்தவர்களுக்கும்; நோயிலீடுபட்டு உடல் மெலிந்தவர்களுக்கும், இயற்கையில் பசித்தீ குறைந்திருக்குமாதலால், அவர்கள் அளவுக்கு மீறி உணவு கொள்ளினும், செரியாது முக்குற்றங்களும் கேடடைந்து இந்நோய் பிறக்கும் எனவும் அறிக என்பதாம்.

முக்குறி குணங்கள்.

இந்நோய் ஆரம்பத்தில் வாய் குமட்டல், வாய் நீரூறல், ஏப்பம் விட முயற்சிப்பினும் ஏப்பம்வராமை; வயிறு இரைந்து நோதல்; புரட்டல், தலை சுற்றல்; உடல் நடுக்கல்; நாவறட்சி, மிகுந்த நீர்வேட்கை முதலிய குறி குணங்கள் உண்டாகுமெனலாம்.

நோய் எண்

இந்நோய் மூன்று வகைப்படும். அவையாவன :—

1. ஐயச் செரியாமை (சீதக்கட்டு மந்தம்).
2. கோல் செரியாமை (கோல் மந்தம்).
3. நஞ்சு செரியாமை (நஞ்சு மந்தம்) என்பவையாம்.

ஒவ்வொன்றின் தனித்தனி குறிகுணங்கள்.

1. ஐயமந்தம்.

இதனைச் ''சீதக்கட்டு மந்தம்'' எனவும் ''செரியா மந்தம்'' எனவும் கூறுவர், இது உடற்கு வேண்டிய அளவு உணவு கொள்ளாதிருத்தல், அன்னத்தை இறைத்து உண்ணல், அளவுக்கு மிஞ்சியுண்ணல், அல்லது செரிப்புத்தன்மைக்கு மேற்பட்டு உண்ணல், மலமும் நீரும் இயற்கையாகக் கழிக்காதிருத்தல், பல தடவைகளில் உணவு மிதமிஞ்சிக்கொள்ளல் ஆகிய இக்காரணங்களால் எழும் இந்நோயில், உணவு செரியாமல் வயிற்றில் தங்கிப் புளித்து மேல்நோக்கி வாந்தியாகாமலும், கீழ்நோக்கிப் பேதியாகாமலும் சீதக்கட்டுடன் பீசரிக்கொண்டு வாயுவும் வெளியாகாமல் வயிற்றை ஊதச் செய்தும், வயிறு

புரட்டல், நோதல், மூச்சு விடமுடியாமை, வாய் நீரூறல், நாவறட்சி, மிகுந்த நீர் வேட்கை ஆகிய குறி குணங்களைக் காட்டி படுக்கையிற் புரளச் செய்யும், இந்நோயில் மலவாயிலில் ஆப்படைத்தது போலிருக்குமெனவும் கூறுவர்.

## 2. கோல்மந்தம்.

இதுவும், உண்ட உணவைச் செரிப்பிக்காமற் செய்து, வாந்தியாகாமலும் கழிச்சலாகாமலும் தடுத்து வயிற்றை ஊதச் செய்யும். வயிற்றுள் இரைச்சல், புரளல், வலித்தல் முதலிய குறிகளுண்டாகி, வயிறு மத்தளம் போலப் பெருத்துக் காணும். அதைத் தட்டினால் மத்தளம் போல் ஒலி கேட்கும். வயிற்று வலி தாங்கமுடியாது புரளச் செய்யும். மேலும், மிகுந்த நீர் வேட்கை, உடல் சிலிர்த்தல்; கண்கள் இருண்டு பஞ்சடைதல்; கைகால் சில்லிடல்; பிசுபிசுத்த வியர்வை; நாடிகள் தளரல் ; உடல் நிறமாறல்; காதடைத்தல் ; மேல் மூச்சுண்டாதல்; உடலை அசைக்க முடியாமை; உடல் கோல் போல் வளைக்கவும் நிமிரவும் முடியாது இடத்தல் ஆகிய இக்குறிகுணங்களை காணும். இம் மந்த நோய் பிணியாளனைக் கொல்லுமெனவும் கூறுவர்:

## 3. நஞ்சுமந்தம்.

இது அதிக நாள்பட்ட பழைய உணவுகளையோ, ஊசிப் போன பொருள்களையோ கொள்வதாலும்; அழுகிய மீன், கறி வகைகளை உண்பதாலும் காளான் முதலிய பூஞ்சாலப் பொருள்களைப் புசித்தலாலும் உண்டாகும் நோயாம். இவற்றை உட்கொண்ட சிறிது நேரத்திற்கெல்லாம் வாயில் ஒரு விதச் சுவை மாறி வாய் நீருதல்; வாய் குமட்டல்; மயக்கம்; வயிற்று வலி முதலிய குறிகுணங்களையுண்டாக்கி, வாந்தி, குடற்புரட்டல், கழிச்சல், தாங்கமுடியாத வயிற்றுவலி, வியர்த்தல், கைகால்கள் சில்லிடல் ஆகிய குறி குணங்களையுண்டாக்கும். இது நஞ்சுக் குணங்கள் போல் மிகுந்த துன்பத்தை விளைவித்து நோயினனைக் கொல்லுமெனவும் கூறுவர்.

## தீரும் தீராதவை.

''செரியாமாந்தம்'' என்னும் ''ஐயமந்தம்'' தக்க மருத்துவத்தால் குணமாகும். மற்ற இரண்டும் எளிதில் தீராவாம்.

## மந்தம் நோயின் பொதுக் குறி குணங்கள்.

உண்ணும் உணவுகள் செரியாமல், மேல் நோக்குங்கால், கீழ்நோக்குங்கால் இவ் விரண்டும் கேடடைவதால், செரியா உணவு வாந்தியாகாமலும், கழியாமலும் தடைபட்டு

வயிற்றுள் தங்கி புளித்து, நஞ்சுத் தன்மையையடைந்து வாய் நீரூறல், தலைவலி, தலை சுற்றல், மயக்கம், கண் இருளல் என்னுங் குறிகுணங்களை யுண்டாக்கி, வயிறு இரைச்சலுடன் சூலை நோயைப் போல் வலியுமுண்டாகும். பிறகு வயிற்றிலிருந்த செரியாத சீதக் கட்டான உணவு மீண்டும் கீழிறங்கிச் சிறு குடலையும், பெருங் குடலையும் தாபிதப் படுத்தி வயிற்றை முறுக்கி வலிக்கும். நோய் முதிர முதிர வலி அதிகமாகி உடலை வளைக்கவும், நிமிரவும் முடியாமற் செய்யும். படுக்கையிற் கிடத்திப் புரளவும் செய்யும். மலவாயில் ஆப்படைத்தது போலும் தோன்றும். ஒருக்கால் உயிரையும் மாய்க்கச் செய்யும் என அறிக!

## முக்குற்ற வேறுபாடுகள்

உணவாதிச் செயல்களால் வளிக் குற்றம் மிகுந்து ஐயத்தையும் பெருகச் செய்து வயிற்றில் உணவைச் செரிப்பிக்காத படி செய்து இவற்றின் தூண்டுதலால் மேல் நோக்குங்கால் கீழ் நோக்குங்கால் இவ்விரண்டும் தமது இயற்கைத் தொழிலை இழக்கும்படி செய்து, செரியா உணவை மேல் நோக்கி வாந்தி செய்யாமலும்; கீழ்நோக்கிக் கழியாமலும் வயிற்றுள் தங்கும்படி செய்து, புளித்து நஞ்சுத் தன்மையடைந்து வயிற்று வலியுடன் கொடுமை பல விளைவிக்கும் என்பதாம்.

## நாடி நடை.

1. ''வாதமெனும் நாடியது தோன்றில்
சீதமந்த மொடு வயிறு பொருமல் திரச்சிவாயு,
சீதமுறுங் கிராணி மகோதரம் நீராமை
திரள்வாய்வு சூலைவலி கடுப்புத் திரை,
நீதமுறுங் கிருமி குன்ம மண்டவாதம்
நிலையில் நீர்க்கிரிச்சனங்கள் தந்து மேகம்,
பேத்கமா மூத்திரபிணி மூலரோகம்
பேசவெகு பிணிகளுமே பொருளதாமே.''

2. ''சிறப்பான பித்தத்தில் வாதநாடி, சேரிலுறு தாதுநட்ட முதிரபீடை,
உறைப்பாகச் செரியாமை குன்மஞ்சூலை, உற்றசுரங் கிராணி வயிற்றிரைச்சல் மந்தம்,
அறைப்பான ஓங்கார புறநீர்க் கோவை, ஆயாசங்கிரக்க மொடு மயக்க மூர்ச்சை,
முறைக்காய்வு விடவீக்கம் மூலவாய்வு, முரடான நோய் பலவு முடுகும் பண்பே.''

3. ''பொருளான வாதத்தில் பித்தஞ் சேர்ந்து,
பொருந்துங் குணங்களுட்ண வாயுசத்தி,
செரியாமை புளித்தேப்பம் பொருமல் நீரிற்,
சிவப்புமலம் பிடித்தலுருத்தாது நட்டம்,
கருவான தேகமதிலுளைச்சல் சோம்பல்,
கைகால் தறிப்பு நாக்கசக்கு மன்னம்,
பரிவான வூண்குறைதல் ருசிகேடாதல்
பலநோயும் வருத்தி வைக்கும் பாங்குதானே.''

என்பதினால், (சதகநாடி)

வாத மிகுதியிலும்; பித்த வாத தொந்தத்திலும்; வாத பித்த தொந்தத்திலும்; செரியாமை என்னும் மந்த நோயுண்டாவதைக் காணலாம் என்பதேயாம்.

## 18. குன்மம்.

வேறு பெயர்கள்.—குன்மம்; வயிற்றுள் புரளல்; வயிற்றுள் புரளலுடன் நோதல் என்பனவாம்.

இயல்.—செரியாமை; வயிற்றில் எரிச்சல்; வாந்தி; உடல் வன்மை குறைதல்; தேகம் மெலிதல்; மனம் குன்றல் ஆகிய குணங்களையுடைய நோயாம்.

மேலும், வயிற்றுள் உணவு செரிக்காமல் காற்றுக் கூடி வலியுடன் பந்து போல் புரளச் செய்யும் நோய் எனவும்; இந் நோயால் வருந்தும் போது மனம் குன்றும் காரணத்தாலும்; வலி வரும்போது நோயினனை முன் பக்கம் குன்ற வைக்கும் காரணத்தாலும் இதனைக் குன்ம நோய் எனவும் கூறுவர்.

### நோய் வரும் வழி.

1. ''கயமான குடலுனுள்ளே கல்லுமி நெல்லுமாமே,
கல்லொடு மயிராயுள்ள கசடது குடலிற் பற்றி,
வல்லபாங்கதுவா யன்னஞ் செரியாத மாசினாலே,
மெல்லிய கிருமி கொண்டு குன்ம நோய் மருவுங் காணே.''
(பராரசசேகரம்)

(வேறு)

2. ''செய்யான குன்மத்தின் தோற்றந்தன்னைச்
செப்பிடவே துவர்ப்பான பொசிப்பினாலும்,
மெய்யான மங்கையுடன் மருவலாலும்,
வகையாகுங் கிழங்கு வகை யருந்தலாலும்,
உய்யான மிளகு வகை உரைப்பினாலும்,
உறுபசியை யடக்கிடும் மந்தத்தாலும்,
தய்யாள சண்டாள கோபத்தாலும்,
சலிப்பாலும் குன்மம் வந்தடையும் பாரே.''

(யூகிசிந்தாமணி)

(வேறு)

3. ''குன்மமது தானெழும்பும் விவரமென்னில்,
குடல்தனிலே கல்லுமியும் நெல்லுமூக்கும்,
பின்னமுடன் வரும் பித்தம் கோரைச் சார்ந்தால்,
பீளுமது குடலோடே மாசுபற்றி
அன்னமது செரியாது மயிரினாலே
அசனமுஞ் செல்லாது கிருமி துக்கம்,
வன்னமயில் குழலாளே குன்ம ரோகம்
மாசற்றால் குன்மமற வகைதான் பாரே.''

(ப.சி. நாடிநூல்)

என்பதிற்கிணங்க,

மிகுதியும் சூடுள்ள பொருள்களையும், வாயுப் பொருள்களையும், மண், உமி, கல், தூசு, மயிர், நெல்லின் மூக்கு ஆகிய இவைகள் கலந்த பொருள்களை உண்பதினாலும்; சுனைநீர், ஓட்டமற்ற நீர், சுண்ணாம்பு கலந்த நீர் இவைகளை அருந்தலாலும், தேங்காய்ப் பால் போன்ற மந்தப் பொருள்களை மிகுதியும் கொள்வதாலும்; அடிக்கடி சினங் கொள்ளல்; பட்டினி யிருத்தல்; மனச் சலிப்பு; துக்கம் ஆகியவற்றாலும் இந் நோய் உண்டாகும். இக் காரணங்களால் வயிற்றுள் மாசு பற்றிக் கிருமிகளுண்டாய் உண்ட உணவு செரிக்காதபடி செய்து தாபித முண்டாய் வயிற்றுள் வலியுடன் கொடிய துன்பங்களை விளைவிக்கும். அன்றியும் யோகாப்பியாசம் செய்பவருக்கு மூச்சை யடக்குவதால் இந் நோய் உண்டாவதாகவும் கூறுவர்.

## முற்குறி குணங்கள்.

ஆரம்பத்தில் பசியின்மை ; உணவில் வெறுப்பு; குமட்டல்; ஏப்பம் ; வாய் நீரூறல்; எதிர்க் கழிப்பு (எதிரெடுத்தல்) ; வயிறு புரட்டி நோதல்; வாந்தி: புளியேப்பம் ; வயிறு இரைதல் போல் வயிற்றில் புரளல் ஆகிய குறிகுணங்களைத் தோற்றுவிக்கும்.

## நோய் எண்.

'' செய்யவே யட்ட குன்மஞ் செயலைக் கேளாய்
செயலான வாதகுன்மம் சூலைகுன்மம்,
எய்யவே பித்தகுன்மம் எரிகுன்ம மாகும்
ஏலான வலிகுன்மம் சத்தி குன்மம்,
தையவே சன்னி குன்மஞ் சிலேட்டும குன்மம்,
சாகசமாம் குன்மமது எட்டதாகும்,
கொய்யவே யிதனுடைய குணங்களெல்லாம்
குறிப்பறிந் தொவ்வொன்றாய்க் கூர்ந்து பாரே.''

(யூகிசிந்தாமணி)

என யூகி முனி வகுத்தபடி ; குன்ம நோயை எண் வகையாக பிரித்துள்ளார், அவையாவன :—

(a) 1. வாயுகுன்மம்.
2. வாதகுன்மம்.
3. பித்தகுன்மம்.
4. எரிகுன்மம்.
5. வலிகுன்மம்.
6. சத்தி குன்மம்.
7. சன்னி குன்மம்.
8. ஐய குன்மம்.

என்பவையாம்.

முன்னோர்கள் குன்ம நோயினைப் பற்பல விதமாகப் பிரித்துள்ளார்கள் : அவற்றுள் சிலவற்றை இங்கு கூறுவோமாக !

(b) திருகண்ட முனிவர் கணிதப் படி எண் வகைக் குன்மங்களாவன :—

1. வாதகுன்மம்.
2. பித்தகுன்மம்.
3. கபகுன்மம்.

4. வாதபித்த குன்மம்.
5. வாதகப குன்மம்.
6. பித்த சிலேத்தும குன்மம்.
7. திரிதோட குன்மம்.
8. இரத்த குன்மம்.

என எட்டு வகையாக வகுத்து " இரத்த குன்மத்தை"— " ரத்தவாத குன்ம " மென்றும் " ரத்தவாத பித்த குன்ம " மென்றும் இரண்டாகவும் பிரித்துள்ளார்.

இஃதன்றியும் " சாமானிய வாத குன்மம் " ; " சாமானிய பித்தகுன்மம் " ; " சாமானிய சிலேட்டும குன்மம் " என மூன்றாகவும் சிலர் தொகுத்துள்ளனர்.

(c) வேறு சில நூல்களில் குற்ற யளவாக வரும் குன்மங்கள் நான்கும் " பாயுறு குன்மம் " ; " எரிகுன்மம் " ; " வாந்தி குன்மம்" ; "வலி குன்மம்" ; என எட்டு வகை குன்மம் எனவும் கூறுவர்.

" பாயுறு குன்மம் " என்பது யூகிமுனி கூறிய " வாயு குன்மம்" போலும் ; பாயுறு என்றால் குதம் எனப்படும். ஆனதால் அபான வாயுவின் மிகுதியால் பிறக்கும் நோயே " பாயுறு குன்மம் " அல்லது " வாயு குன்ம " மாகும். இதன் குறி குணங்கள் யாவும் சூலை குன்மத்தை யொத்திருக்கும்.

(d) வடநூலில் வாத குன்மம் ; பித்த குன்மம் ; கப குன்மம் ; வாத பித்த குன்மம் ; வாதகப குன்மம் ; பித்த கப குன்மம் ; சன்னி குன்மம் ; பெண்களுக்கு சூலகம் நொந்து வரும் நோயாகிய " ரத்த குன்மம் " ஆகக் குன்மம் எட்டு வகை என்பர்.

(e) வேறு சில நூல்களில் சூலை குன்மம் ; வாத குன்மம் ; பித்த குன்மம் ; சிலேட்டும குன்மம் ; சன்னி குன்மம்; எரி குன்மம்; சர்த்தி குன்மம் ; வலி குன்மம் ; ஆக எட்டு வகை குன்மமாகவும் பிரித்துள்ளார்கள்.

குறிப்பு.—யூகி முனி பிரிவில் கூறியுள்ள " வாயு குன்மம் " மேலே (e)யில் கூறிய " சூலை குன்மமும் " ஒன்றேயாகும் என்பர்.

(f) திருமூலர் கணிதப்படி முக்குற்ற வாயிலாக எண் வகைக் குன்ம நோயைப் பிரிக்கும் விதம் :—

(i) வளி குன்மம்,
சூலை குன்மம்
(வாயு குன்மம்)
வலி குன்மம்.
} இம் மூன்றும் வளிக்குற்றத்தால் பிறந்தன வென்றும் ;

(ii) எரி குன்மம்,
வாந்தி குன்மம்,
பித்த குன்மம் } இம் மூன்றும் அழல் குற்றத்தால் பிறந்தன வென்றும் ;

(iii) ஐய குன்மம்,
சன்னி குன்மம். } இவ் விரண்டும் ஐயக் குற்றத்தால் பிறந்தன வென்றும் கூறியுள்ளார்.

என்பதையும் ; இதனை வைத்துக் கொண்டு குன்ம நோயின் முக்குற்ற உற்பத்தி காரண மறிந்தும் மருத்துவம் புரிதல் சுலபம் என்பதையும் தெரிந்து கொள்ளவும்.

யூகி முனியின் பிரிவுப்படி எண் வகைக் குன்ம நோய்களின் தனித் தனிக் குறிகுணங்களாவன :—

### 1. வளி குன்மம் (வாத குன்மம்).

" பிருத்தமாய் வாத குன்மம் விளம்பக் கேளாய்,
மிகத்தானு நடைகுறையும் மலம் விடாது
உகுத்தமாமுடல் தானு மிகக் கடுக்கும்
உறக்கமொடு தியக்கமா யுழலையாகும்
தகுத்தமாஞ் சரீரமது கனத்துத் தோன்றும்
சங்கையாமசன மிகத்தானுஞ் செல்லா
பிருத்தமாம் பலங் கேட்டால் கைகாலோயும்,
பேசொணா நாவறளுந் தலையு நோமே "

(யூகி முனி).

என்பதினால் உணவு செல்லாமை ; வயிற்றுள் நோவு , உடல் வன்மை குறைதல் ; நடக்க முடியாமை ; தலைவலி ; உடல் வலி ; சோர்வு ; மயக்கம் ; உழலை ; நாவறட்சி ; உடல் கறுத்தல் ; மலம் கட்டுப்படல் ஆகிய குறி குணங்களைக் காட்டும். இந் நோய் 20 முதல் 30 வயது வரையிலும் (வளிக்காலம்) உண்டாகும் எனச் சித்த மருத்துவம் கூறுகின்றது.

உணவு உண்ட பின் கொடிய வயிற்று வலியும் வாந்தியு முண்டாகும், வாந்திக்குப் பின் வலி சற்று குறையும். வாந்தியில் சிறிது குருதியும் வெளியாகும். அக் குருதி கருத்திருக்கும். நாள்கள் சென்றால் ஆயுள் காலம் பூராவும் செரியாமையை யுண்டாக்கும். வயிற்றிலும், மார்பிலும் எரிச்சலும் வலியுமுண்டாம். பசியிருப்பினும் சாப்பிடப் பிரியமிரா ! சாப்பிட்டாலும் உடனே கட்டாயமாய் வாந்தி செய்விக்கத் தோன்றும்.

(சி. ம.)

### 2. அழல் குன்மம் (பித்த குன்மம்).

" நோம்பித்த குன்மத்தினுட்பங் கேளாய்,
நுனி மஞ்சள் நிறம் போல முகமுமாகும்
வாஞ்சத்தி வாந்தி யுண்டாய் மனமறுக்கும்
மயக்கமாய் நெஞ்சுதனிற் கோழை கட்டும்,
சுரம் நெருப்பாய்த் தானிருக்குங் கைகாலோயும்
கடுவெய்யிற் கண்டவுடன் றலையுஞ் சுற்றும்,
போமூத்திரஞ் சிவந்திருக்கும் தாகங்காணும்
முக்கிய மலம் வீழும் மூச்சுண்டாமே."

(யூகி சிந்தாமணி)

என்பதினால், அழல் குற்றம் மிகுதிக் கேற்ப அகட்டில் எரிச்சலை யுண்டாக்கிக் குமட்டி வாந்தி செய்யும்; வாந்தியுடன் கோழையும் பித்த முங்கலந்து காணும்; மயக்கம்; நெஞ்சிலும், வயிற்றிலும் எரிச்சல் மிகுதியாகும்; வயிற்றில் வலித்துச் சிறுநீர் சிவந் திறங்கும்; நீர் வேட்கை; தலை சுற்றல்; எரு (மலம்) கட்டுப்படல் உடல் உரம் குன்றல்; குருதி கெட்டு உடல் மஞ்சளித்தல்; வயிற் றுள் காற்று கூடி வலியை அதிகப்படுத்தல்; உடல் சூடாயிருத்தல்; தலை நோவு; கண் எரிவு; உடல் தளர்தல் ஆகிய இக்குறி குணங் களைக் காட்டும். நோய் முதிர முதிர உணவு சாப்பிட்ட பின் அதிகமாக வலித்தல்; வயிறு கனத்தல்; புசிப்பில் வெறுப்பு; சுவையின்மை; நாவறளல்; மேல் வயிற்றில் எரிச்சல்; வயிற்றுள் உள்ள நீர் எதிர்த்து மேல் நோக்கிவரல்; அயர்ச்சி; சோம்பல்; தலைவலி; தூக்கமின்மை; புளியேப்பம்; உடல் மெலிதல்; பெருமூச்சு முதலிய கொடிய குறி குணங்களையும் காட்டும்; இந்நோய் 30 முதல் 50 வயது வரையிலும் (பித்தகாலம்) வரக் கூடுமெனச் சித்த மருத்துவம் கூறுகின்றது.

(சி. ம.)

### 3. ஐய குன்மம் (கப குன்மம்).

" உண்டாகும் வாய்நீர்தா னிலைப்புண்டாகும்
உடல்வற்றி கருத்தழியு முறத்திரைக்கும்
வெண்டாகும்பெலன் கெடுக்க மசனந்தள்ளும்
மிக்கானதலை யதுக்கும் வெளிறுமேனி
தொண்டாகு நெஞ்சுதனிற் புகைச்சலுண்டாம்
திடுக்கிட்டு நடுக்கலும் மாந் தேகந்தானும்.
திண்டாகுந்தலை யெங்கும் பாரமாகும்
சிலேட்டுமமாங் குன்மமென்றே செப்பலாமே."

(யூகி சிந்தாமணி)

என்பதினால், உணவில் வெறுப்பு ; வாயிலைத்தல் ; உடல் இளைத்து வெளுத்தல் ; தலை சுற்றல் ; நெஞ்சு புகைதல் ; நடுக்கல் ; திடுக்கிடல் முதலிய குறிகுணங்களை யுண்டாக்கும்.

ஐயக்காலமாகிய முதுமையில் இந்நோய் தோன்றுமாயின் கெடுதிகள் பல செய்யும். உண்ட உணவு செரியா ! அகட்டிலேயே உணவு தங்கி புளித்து, புலால் மனத்தோடு வாந்தியாகும். வயிறுப்பும் ; ஏப்ப முண்டாகும் ; வயிற்றில் நீர் நிறைந்து அசையும் போது ஒலி செய்யும் ; வெள்ளொக்காளம் வரும் ; வயிற்றுள் பெருகிய காற்று உண்டையைப் போல் உலாவுவதுமுண்டு. இடைவிடாத வயிற்றுவலி ; குருதி வாந்தி யாதல், உடல் மெலிதல் முதலிய குறிகுணங்களையுமுண்டாக்கும் ; அகட்டிலுண்டாகும் புற்று நோய் அதுவோவென நினைத்தற்கு இடந்தரும் (Carcinoma of the Stomach).

(சி.ம.)

குறிப்பு.—வளிக்காலம், அழல் காலம், ஐயக்காலமென சித்த மருத்துவத்தில் மேலே கூறியிருப்பது நாடி நூலில் கூறியிருக்கும் மூன்று பிராய காலம் (ஆயுள் நிரணயம்) பற்றிய விவரங்களுக்கு முற்றிலும் முரண்பாடாகயிருப்பதைக் கவனிக்கவும்.

" தானவனுமமைத்தபடி வயதுநூறு
 சகலருக்குமிளமை யிலேசேத்துமமாகும்
ஆனநடுவயது பித்தமப்பால் வாதம்
 ஆறஞ்சு மூவாண்டு மாதம் நான்கு
ஈனமுற மூவருமே மூன்றுபங்காய்
 இயல்பாக நடந்து கொள்வாரிறையோன் முன்னால்
ஏனமுறவமைத்த வண்ணமாண்டு மாதம்
 இயைவான நாள்கள் தப்பிமரிப்பதாமே."

(வேறு)

" மூன்னோருரைத்தனர் மானிடர்க்கு மொழிந்தவயது நூறென்று
இன்னமூன்று பங்காவியம் பிளமை சிலேத்துமமாம்
வ்ன்னநடு வயதுபித்தமப் பால் வாதமதாம்
பெண்ணே யிந்தக்காலத்தில் யற்றையரோர்கம்பொல்லாதே".

என்பதிலிருந்து நூறு ஆண்டு என்ற ஆயுளை மூன்று பங்கு பண்ணி இளமைப் பருவம் சிலேட்டும மென்றும், நடுப்பிராயம் பித்த காலமென்றும், முதுமைப் பருவம் வாதகால மென்றும் தெளிவாக கூறியிருப்பதைக் கவனிக்கவும்.

ப. சி. நாடி)

### 4. சன்னி குன்மம் (முக்குற்ற குன்மம்).

" செப்பலாஞ் சன்னிகுன்மம் செயலைக்கேளாய்
தியக்கமொடு மயக்கமாய்க் குளிருண்டாகும்.
அப்பமாமசன மிகத்தானுஞ் செல்லா
அடிவயிற்றி லிறைச்சலுமாம் வாய் நீரூறும்
உப்பலாய் வயிறிழியும் உட்ணமாகும்
உவர்க்கும் வாய்நெஞ்சதனிற் புகைச்சலுண்டாம்
தெப்பமாய் மூச்சதுவுஞ் சிதைந்தெழும்பும்
தேகமெங்கும் குளிர்ச்சியுமாயாகும் பாரே."

(யூகி சிந்தாமணி).

என்பதினால், உணவு ஏற்கா! வாய் நீரூறும் ; வயிறு உப்பி, இரைந்து வெப்பமாக மலம் கழியும்; வாய் உப்புக் கரிக்கும் : நெஞ்சு புகையும் ; ஏப்பம், பெருமூச்சு, மயக்கம் முதலியன வுண்டாகும். உடல் குளிர்ச்சியடையும் என அறிக !

### 5. வாயு குன்மம் (பாயுறு குன்மம், சூலை குன்மம்).

" பார்க்கவே வாயு குன்மம் பகரக்கேளாய்
பருகியதோர் பதார்த்தங்கள் செரித்திடாது
தேர்க்கவே யசனந்தான் செல்லாதாகும்
துருத்திகொள் காற்றதுபோல் வயிறுப்பும்
ஊர்க்கவே உள்பெலனும் கெடுப்பதாகும்
உடலுலரும் நடைகுறையும் ஓய்ச்சலாகும்
வேர்க்கவே யடிவயிறுதனிலே வந்து
மிகப்புரண்டு வில்லுப்போல் விகுத்தலாமே."

(யூகி சிந்தாமணி).

என்றதால், உணவு செரியாமை ; உண்டது போல் வாந்தி ; உணவு வெறுப்பு; வயிற்றுள் காற்றுக் கூடிப் பந்துபோல் உலாவுதல் ; உடல் வன்மை குன்றல் ; நடக்க முடியாமை ; கால்கள் ஓய்ச்சல் ; வியர்வை காணல் ; வயிற்றிலுள்ள காற்று மிகுதியால் வயிறு வில்லைப்போல் இழுத்துப் பிடித்து மிகுதியான வலியையுண்டாக்கல் ஆகிய இக்குறி குணங்களைக் காட்டும் ; அன்றியும் வளிக் குற்றம்மிகுந்து அகட்டைக் கெடுத்து அபான வாயுவைத் தூண்டி செரியாமையையும், வயிற்று வலியையும் உண்டாக்கும் ; நெஞ்சுக் குத்தல் குடல் முறுக்குவது போல் நோதல் ஆகிய குறி குணங்களையும் தோற்றுவிக்கும். (சி. ம.)

" பாரப்பா வாய்வு வாதம்
பரிவுடன பானனோங்கி
ஓரப்பா கும்பிதன்னி
லுருண்டுதான் மிகவேநோகும்
கோரப்பா நெஞ்சுகுத்துங்
குடலையு முறுக்கிக்கொண்டு
வாரப்பா வலிக்கு மெத்த
வாசமாய் வழங்கும் வாயுவே. "

(நாடி நூல், சி.ம.).

என்பதினாலறிக !

6. எரி குன்மம்.

" இடுக்குமா மெரிகுன்மச் செயலைக் கேளாய்
சிறுவயிற்றி லெரிந்துமே குடல்குமுரும்
வடுக்கும்வாய் நீர்சுரக்கும் தலைவலிக்கும்
வயிறுப்பிக்கிறு கிறுத்தே ஏப்பமாகும்.
வெடிக்குமயிர்க்கால் தோறும் வியர்வையாகும்
மிகப்பொருமி வயிறு கழிந் திரைச்சலாகும்
எடுக்குமேயுட லிளைக்கு மிரங்காதன்மை
எரியுமே யுடலெங்கு மிருமலாமே".

(யூகிசிந்தாமணி).

என்றதால், உண்ட சிறிது நேரத்திற் கெல்லாம் வயிற்றில் எரிச்சலை யுண்டாக்கி வயிற்றை முறுக்கி வலிக்கும். வாய் நீரூறல், தலைவலி, புளியேப்பம், வயிறு ஊதி இரைந்து கழிதல் ; மயிர்க்கால்கள் தோறும் வியர்த்தல், உடல் இளைத்தல், எரிச்சலாகிய குறிகுணங்களை உண்டுபண்ணும்.

(சி.ம.)

7. சர்த்தி குன்மம் (வாந்தி குன்மம்).

" இருமலாஞ் சத்திகுன்மம் மியல்பைக் கேளாய்
ஈரலுக்குள் வெளியாகு மேக்கமாகும்
திருமலாந்தியக்கமொடு மயக்கமுண்டாம்
சிறுவலியு முண்டாகி வாந்தியாகும்
பொருமலாம் பெலன் கெடுக்கும் மலம்விடாது
பேரான வக்கினிதான்மிக வுண்டாகும்
செருமலாம் நடைகுறையும் அருசியாகும்
சிறுநரம் பெலாம் புடைத்துத் திமிருமாமே ."

(யூகிசிந்தாமணி.)

என்றதால், உண்ட உணவு செரியாமல் வாந்தி ; மயக்கம் ; வயிறு எரிதல்; வலித்தல்; பொருமல்; எரு (மலம்) கட்டுப்படல்; உடல் காந்தல் ; நடக்க முடியாமை ; சுவையின்மை ; நரம்புகள் புடைத்துத் திமிருண்டாதல் ; வன்மைக் குறைதலாகிய குறி குணங்களுண்டாம்.

(சி. ம.)

8. வலி குன்மம்.

" திமிராக வயிறூதுந் திரையுமேனி
செடமுளைந்து கருத்தழியுஞ் சிதறுந்தூக்கம்
வமிராக வயிறிரைந்து முன்போலாகும்
வருத்தமா யசனம் மிகத்தானுஞ் செல்லா
மூமிராக விலாவதனிற் சொருகலாகு
முதுகுதண்டு வலிகாணுமிடுப்பு நோவாம்
கமிராகக் காயமது கடுப்புக் காணும்
கனசுரமாய் பொய்ப் பசியுங் காணுங்காணே. "

(யூகிசிந்தாமணி.)

என்றதால், உண்ட உணவு செரியாமை, வயிற்றுள் காற்றுக் கூடி வயிறு ஊதல் ; உடற்றோல் சுருங்கி இளைத்தல் ; மனந் தளரல் ; தூக்கங்குறைதல் ; உணவுவெறுப்பு ; வயிறு இரைந்து கழிதல் ; விலாப்பக்கம் முள் சொருகியது போலக் குத்தல் ; முதுகந்தண்டும் இடுப்பும் வலித்தல்; உடல் முழுமையும் கடுத்தல்; சுரம் ; பொய்ப் பசி ஆகிய குறிகுணங்களுண்டாம்.

(சி. ம.)

குன்ம நோயின் பொதுக்குறி குணங்கள்.

குன்ம நோய் பெரும்பான்மையாய் ஆண் மக்களுக்கு 25 வயது முதல் 45 வயது வரைக்கும் வருவதாகும். சிறுபான்மையாய் பெண்களுக்கும் வருவதுண்டு. முதிர்ந்த வயதிலும் இந்நோய் காணுமெனவும் கூறுவர். உடல் நன்னிலையிலிருக்கும் போது திடீரெனப் பசியின்மை ; வாய் குமட்டல், பித்த வாந்தி, செரியாமை, புளியேப்பம் இவை யுண்டாகி நாளடைவில் நோயை வலுக்கச் செய்யும், வயிறு பளுவாகத் தோன்றும். வயிறு புரண்டு நோதல் ; தாங்க முடியாத வலி முதலியன உண்டாகும். வலி தாங்காது கட்டாய வாந்தி செய்தால் வலி சற்று குறைவதுண்டு. வலி தாங்காது சிரமப்படுவதும், தற்கொலை பண்ணிக்கொள்வதும் குன்ம நோயில் இயற்கை எனவும் கூறுவர்.

(சி.ம).

## குன்ம நோயின் முக்குற்ற வேறுபாடுகள்.

முற்குறியாக நோய் வருமுன் : "தொடர்வாத பந்தமலாது குன்மம் வராது" என்பதிற்கிணங்க வாதமானது உணவாதி செயல்களால் தன்னளவில் மிகுந்து உதானன், அபானன், சமானன் (மேல் நோக்குங்கால், கீழ் நோக்குங்கால், நடுக்கால்) என்னும் மூன்று முக்கியமான வாயுக்கள் தூண்டப்படுவதால், அவைகள் தம்தம் தொழில்களைச் சரியாக நிறைவேற்றாமல் குன்ம நோயைப் பிறப்பிக்கும். வளிக் குற்றமும், வாயுக்களும் கேடடைவதால் மற்ற இரு குற்றங்களும் தம்தம் தொழில்களைப் புரியாது கேடடைவதால், உண்ட உணவைச் செரியாதபடி செய்து குருதியின் வன்மையையும் குறைக்கிறது. அன்றியும், எரு கட்டுப்படல், வயிற்றில் காற்றுக் கூடி வயிற்றுப் பொருமல், வலி, புரளச் செய்தல், வாந்தி முதலிய குறிகுணங்களையும் உண்டு பண்ணும்.

### நாடி நடை.

1. "வளிநாடி இடத்திலிசைந்தால் வளி குன்மமாம்."

அல்லது

"வாதம் இடம் புரண்டால் வாத குன்மம் பிறக்கும்."

2. "பித்த நாடி இடத்திலிசைந்தால் பித்த குன்மமாம்".

3. "வாதந்தான் உதறிநிற்கில்
வலி குன்மம் வந்துசேரும்."

(குணவாகடம்).

4. "ஐயநாடி இடத்திலிசைந்தால்
ஐய குன்மமாம்.

(வேறு.)

5. "ஐயமும் வாயுவுங் கூடில்
ஐய குன்ம முண்டாம்".

6. "மேகமும் வாயுவுங் கூடிடில்
சூலை குன்மமாம்."

7. "வாதமும் பித்தமுங் கூடி
வன்பெலத்துடனே யோடிற்

றீதறு வயிற்றுனுள்ளே
திரண்ட தோர் மந்தம் பற்றி

வேதனை யெரிப்புங் கூடி
வெகுண்டிடு மெரித்த குன்மம்."

(மதாந்திரம்).

8. "வாதத்தால் வலி குன்மம் சூலை
குன்மம் வளிகுன்ம முண்டாம்."

9. "பித்தத்தால் பித்த குன்மம்
எரிகுன்மம் சக்தி குன்மம் முண்டாம்."

10. "ஐயத்தால் ஐயகுன்மம் சன்னி
குன்மமுமாம்."

(வேறு).

11. "சிறப்பாக பித்தத்தில் வாதநாடி
சேரிலுறுந் தாது நட்டமுதிர பீடை
உறைப்பாகச் செரியாமை குன்மஞ் சூலை
உற்றசுரங்கிராணி வயிற்றிரைச்சல் மந்தம்
அறைப்பான ஓங்கார புறநீர்க்கோவை
ஆயாசங்கிரக்க மொடுமயக்க மூர்ச்சை
மூறைக்காய்வு விடவீக்கம் மூலவாய்வு
முரடான நோய்பலவு முடுகும் பண்பே."

(சதகநாடி.)

(இவற்றின் பொருள்).

1. வளி நாடியானது தன் இடப்பக்கத்தே மீறி நடக்கின் வளி குன்மமுண்டாம்.

2. அதே போலாக, அழல் நாடி ; ஐயநாடி இவைகள் தனித்து தத்தம் இடப்பக்கத்தே மீறி நடக்கில் முறையே அழல் குன்மம், ஐய குன்மம் உண்டாகுமாம். (வாதம் புரண்டால், பித்தம் புரண்டால், ஐயம் புரண்டால் என்றும் கூறுவதுண்டு.) ("வலத்திற் சூலை இடத்திற் குன்மம் மெனவும்" நூல்கள் கூறுவதுண்டு. அதாவது வளி, அழல், ஐயம் நாடிகள் தனித்துமீறி தத்தம் வலப் பக்கத்தே நடக்கில் சூலைநோய் எனவும் ; இடப்பக்கத்தே நடக்கில் குன்ம நோய் எனவும் முக்குற்றங்களினளவாகக் கூறுவர் என்பதாம்.)

3. வாதநாடியானது (வளி நாடி) கயிற்றை விரலாற் பிடித்துத் தூக்கிவிடின், அது எவ்வாறு உதறுமோ அவ்வாறு வளி நாடி உதறி நடக்கில் வலி குன்மம் உண்டாகும்.

4. ஐய மிகுதியுடன் வாயு கூடில் ஐயகுன்மம் உண்டாகுமாம்.

5. மேகமும் வாயுவும் கூடில் சூலைகுன்மம் உண்டாகும்.

6. வாதமும் பித்தமும் மிகுந்து கலப்புற்றால் வயிற்றுள் மந்த முண்டாகி அதன் காரணமாக எரி குன்மம் உண்டாகும்.

7. திரிதோடக் கலப்பாலும், ஐய மிகுதியாலும் ஐய குன்மமும், சன்னி குன்மமும் உண்டாகுமாம்.

(கை-எழுத்துப்பிரதியும், சி.ம.)

நாடி. (வேறு)

8. "வழங்கிய அப்புவோடு வாதமொன்றேயானால்
தழங்கிய அன்னசாரஞ் சந்திக்க வொட்டாதப்பா
புழங்கிய நிதானந்தப்பிப் புகவன்ன மேறில்குத்தும்
உழங்கிய முறுக்குமேற்றி உயிரையும் வதைக்கும் பாரே".

(நாடி நூல்.)

என்பதினால்,

குன்ம நோயில் ஐயக் குற்றமும் வளிக் குற்றமும் கலக்குமேயாயின் உண்ட உணவு செரியாமலும், அதனை வாந்தி மூலம் வெளியாக்காமலும், அகட்டிலே தங்கச் செய்து, புளித்து, நஞ்சுத் தன்மையடைந்து மேல் நோக்குங்கால், கீழ் நோக்குங்கால், நடுக்கால் இவ்வாயுக்களைக் கேடடையச் செய்து தொண்டையில் குத்தலையும் வயிற்றை முறுக்கி வலித்தலையும் உண்டாக்கி நோயினனை வலி தாங்காது மனங் குன்றிச் சிலவேளை உயிரையும் மாய்த்துக் கொள்ள வழி தேடுவரெனச் சித்த மருத்துவம் நாடி நூலிலிருந்து எடுத்துக் காண்பித்திருக்கிறது.

(சி.ம.)

தீரும் தீராதவை.

எல்லா வகைக் குன்ம நோய்களும் தக்க மருத்துவத்தில் குணமாகு மெனினும் வாத குன்மம், சன்னி குன்மம், ஐய குன்மம் இம்மூன்றும் தீருவது அரிது. அன்றியும் நோயினன் உடல் வெளுத்து வன்மை குறைந்து மெலிந்த நிலையில் குன்மக் கட்டிகள் மிகவும் பெரிதாக வீங்கி அதிகமான துன்பங்களை விளைவித்தாலும்; ரத்த வாந்தி, விக்கல், இரைப்பு, மேல் மூச்சு, மார் நோய் முதலிய துணை நோய்கள் கிளைக்கினும் அசாத்தியமாம்.

(கை எழுத்துப் பிரதி.)

## 19. சூலை நோய்.

வேறு பெயர்கள்.—முறுக்கு நோய்; குத்தல் நோய்; குடல் வலி, குடல் முறுக்கு நோய் என்பனவாம்.

இயல்.—சூலம் என்ற கருவியால் குத்துங்காலுண்டாம் வலியையொத்த நோயை இரைப்பை, குடல் பக்கம் (விலா), மூட்டுகள் இவற்றிலுண்டாக்கும் குத்தல் நோயாம்.

இந்நோயுண்டாகும் இடத்தைப் பொருத்தும், குற்றங்களைப் பொருத்தும் பெயர்கள் அமையும். உதாரணமாக விலாப்பக்கங்களில் இந்நோய் வரின் " பக்க சூலை " எனவும்; வயிற்றிலுண்டாயின் " குன்மச் சூலை " எனவும்; குற்றயளவாக வருபவைகளை வளி, அழல், ஐயம் என்ற அந்தந்தத் தோடங்களின் பெயரால் சூலை என்றும் அழைக்கப்படும். சீல்களில் மேக நோயால் வரும் சூலை நோய்க்கு "மேக சூலை" எனவும் சொல்லப்படும்.

" தோற்றாதென் வயிற்றி னகம்படியே குடரோடு
தொடக்கி முடக்கியிட ஆற்றேன்."

எனத் தேவாரத்தில் அப்பர் சுவாமிகள் கூறியபடி " வயிற்றின் குடல் முடுக்கி (நெருக்கி முறுக்கி; இழுத்து) வலித்தலும், நோதலுமான இயல்புடைய நோய் " என்பதே இதன் பொருளாகும். அன்றியும், வயிறு தவிர மற்ற இடங்களில் குத்தல், குடைச்சலுமாகிய நோவையும் உண்டாக்கு மியல்புடைய நோய்எனவும் கூறுவர்.

### நோய் வரும் வழி.

1. " சார்வான சூலை வருமாறு கேளாய்
தக்கச் சிறைப்பட்டிருக்குந் தீமையாலும்,
ஆர்வான வறச்சுடுசோ றருந்தலாலும்,
அறவுமே சலிப்பாலு மோடலாலும்,
தார்வான சபை மிகுந்த சண்டையாலும்
தகையான துவர்ப் பொசிப்பு புகைத்தலாலும்,
வேர்வான மேகத்தின் புணர்ச்சியாலும்,
மிகுந்த பசியுறுதலினாற் சூலையாமே."

2. "ஆமென்ற வன்னத்துக் கிறுதிபண்ணி
யகதிபரதேசிகளை யடித்த பேர்க்கும்,
காமென்ற கற்புடைய மங்கைமாரைக்
கருதியே மனத்துளிச்சித்த பேர்க்கும்
வாமென்ற வாழ்மரத்தை வெட்டினோர்க்கும்,
வழிமறித்து பொருள் பறித்த வழி கேடர்க்கும்,
ஏமென்ற எச்சிறனைக் கவர்ந்த பேர்க்கும்,
இகத்திலே நோவெய்திச் சூலையாமே."

(யூகி சிந்தாமணி.)

(வேறு)

3. "சூலை வரலாறுதனைச் சொல்லக் கேண்மோ
சுற்றியதோர் விசை நரம்பில் வேவு கொண்டு,
காலையுமே யூடுருவித்தமரு விம்மிக்
களிப்பது போற்மாசு பற்றி ரத்தஞ்செத்து,
மாலையது போற்றொடுத்து நரம்பின் மீதே
வகையான விசைநரம்பை மடக்கிக் கொள்ளும்,
கோலை விட்ட குருடரைப்போல் திட்டமிழந்துக்
குடிகெடுக்குஞ் சூலையது குறி கண்டீரே."

(குரு நாடி- நூல்.)

என்பதினால், சிறைவாசம், மிகச் சூடான பண்டங்களை யுண்ணல்; மனச்சலிப்பு; ஓடல்; மிகுதியாய்ச் சண்டையிடுதல்; துவர்ப்புப் பொருள்களை அதிகமாக உண்ணல்; புகை பிடித்தல் அளவுக்கு மிஞ்சிய ஆண், பெண் கலவி செய்தல், ஆகிய இக் காரணங்களாலும்; மற்றும் ஏழை பரதேசிக்கு உணவுயிடா மலடித் தோட்டியவருக்கும்; பயன் தரக்கூடிய பச்சை மரங் களை வெட்டி வீழ்த்தியவருக்கும்; வழிப்பறி செய்வோருக்கும்; தன் எச்சிலைத் தெரியாமல் பிறர்க்குக் கொடுப்பவருக்கும் இந் நோயுண்டாகுமென யூகி முனி சிந்தாமணி கூறுகின்றது.

(சி.ம.)

அன்றியும், விசை நரம்பெனக் கூறும் முள்ளந்தண்டு (முதுகந் தண்டு) நரம்புகளில் தாபித முண்டாய், ரத்தம் கெட்டு, மாசு பற்றி, வாயுக்களைக் கெடுத்து அவற்றை ஊடுருவிச் சென்று, ஆங்காங்கு தமர்கள் போன்ற ரணங்களையுண்டாக்கிக் கொடிய துன்பங்களை விளைவிக்கக் கூடிய சூலை நோயைப் பிறப்பிக்கு மெனவும் குருநாடி நூல் கூறுகின்றது.

முற்குறி குணங்கள்.

" சூலை நோயெனச் சொல் பேர்வழியைக்
கோலமாகக் கூறக் கேளாய்,
உந்தி முதலாயுறு மிருப்பாங்கரும்
பந்தவிலாவிற் பகரென்புகளில்,
ஒட்டி நரம்பையுள்ளிழுத்துச் கொண்
டுபத்திரவத்தையுடனே செய்யும்,
வலித்து முள்ளை வயிற்றி னுள்ளே
நலிந்துசொரு கல்போல வலியாம்,
முதுகுதனிலு முன்னுழத்துக் கொலும்,
விதியுணவுகளை வெறுக்கப் பண்ணும்,
ஆதலாலிந் நோய்க்கப் பெயர்
ஈதலேதகு மென்றீந்தன ரன்றோ."

(சித்த மருத்துவம்.)

என்பதினால், உடல் குளிர்ந்தாற்போற்றோன்றி மூக்கில் நீர் பாய்தல், கண் சிவத்தல், சுரம், உடல் வனப்புக் குறைதல்; பக்கம், கைகால் பூட்டுகள் இவைகளில் குத்தலையும் உண்டாக்கும் என அறிக.

நோய் எண்.

1. " சூலையாம் பதினைந்தின் சூட்சமங்கேளாய்
துளைக்கின்ற மேகத்தின் சூலையோடு,
வாலையாமுறி யென்ற சூலை தானும்,
வாதத்தின் சூலையோடு பித்த சூலை,
ஆலைதான் சிலேட்டுமமாஞ் சூலையாகு
மாமென்ற சூலையொடு கறைச் சூலையாம்,
கோல குன்மச் சூலையோடு வர்த்து சூலை
கொடி நிதம்பச் சூலையொடு உக்காரச் சூலையாமே."

2. " ஆமென்ற சுரசூலை கெற்பச் சூலை,
அதிபக்கச் சூலையோடு, தூரச்சூலை,
பாமென்ற பதினைந்து சூலையாகும்,
பசியாலும் பழகிய காடியாலும்,

தாமென்றசிலை நுதலாள் புணர்ச்சியாலும்
சருகிலையின் நீராலும் சண்டையாலும்,
வேமென்ற ரசமருந்தின் வெட்டையாலும்,
மிடுக்கான சூலை வந்து விளையுந்தானே.''

(யூகி சிந்தாமணி

என்பதினால் ; சூலை நோய் பதினைந்து வகைப்படுமெனவும்; அவை :—

1. மேகசூலை,
2. முறிச்சூலை.
3. வாதசூலை.
4. பித்தசூலை.
5. ஐய சூலை.
6. ஆம சூலை.
7. உக்கார சூலை.
8. குன்ம சூலை.
9. உலர்த்து சூலை.
10. நிதம்ப சூலை.
11. கறைச் சூலை.
12. சுர சூலை.
13. பக்க சூலை.
14. கருப்ப சூலை.
15. தூரச் சூலை என்பவையாம்.

ஒவ்வொரு பிரிவு சூலை நோயின் குறி குணங்கள்.

1. மேகச் சூலை.

'' விளைமேகசூலை யின்றன் விவரங்கேளாய்
மிகக் கைகால் கடுப்போடு குடைச்ச லாகும்,
களைநீரு மலங்கட்டுங் கைகால் வேர்வை
கசிவோடு நளிருண்டாம் மேனியெங்கும்,
இளமை யவரிதழது தான் சிவப்புமாகும்.
எரிச்சலுண்டாந்தேக மிளைத்துக் காணும்,
உளைவோடு சுரமாகுந் தாகங் காணும்,
முறுகின்ற பிரமையா மயக்கமாமே.''

(யூகி முனி.)

என்றதால்; இந்நோயில் கைகால்கள் கடுத்தல், குடைதல், கீல்களில் சிவந்து வீங்கி, சூலத்தாற் குத்துவது போன்ற ஒலி யுண்டாதல், நீட்டவும் முடக்கவும் முடியாமை, சிலவேளை சுரங் காய்தல், சிறுநீரும் எருவும் கட்டுப்படல், குளிர்தல், உடல் எரிச்சல், உதடு சிவந்து எரிதல், முதுகந் தண்டு நோதல், வயிற்றில் எரிச்சல், மயக்கம், அறிவு மயங்கல், வியர்த்தலாகிய குறி குணங்களுண்டாம்.

(சி.ம.)

## 2. முறிச் சூலை.

"மயக்குமுறிச்சூலை யின்றன் குணத்தைக் கேளாய்
மறைப்பானவாண் குறியின் யடியேயுற்று,
அயக்கின்ற வழன்றுகீழ் முதுகைப்பற்றி
அபானன் மேலடிக்குடலை யதிரச்சுற்றி
பயக்கின்ற பரவியே வலிக்கும்போது
படர்நாவி தனை நடுவிற் குழித்துவாங்கும்,
தயக்கிடுந் தலைவலியுஞ் சுரமுங்காணும்
தக்க கண் சிவந்து நீர் ததும்புந்தானே."

(யூகி முனி.)

என்றதால், இந் நோயில் அடிக்குடல் வலித்து, நொந்து, கீழ் நோக்குங்கால் மிகுதியால் வயிற்றை உப்பச் செய்யும், ஆண் குறியிலும் அடிவயிற்றிலும், முதுகின் அடிப்பாகத்திலும், பெருங் குடலிலும், ஓடி ஓடிக்குத்துதல் ; கொப்புளில் சுருட்டி இழுத்துப் பிடித்து வலித்தல் ; தலைவலி, சுரம், மலமும், நீரும் கட்டுப் படல், கண்கள் சிவந்து நீர் வடிதலாகிய குறிகுணங்களையும் உண்டுபண்ணும். (சி.ம.)

## 3. வலி சூலை (வாத சூலை)

"ததும்புமே கால்கைதானுளைவு காணுந்
தடிப்பாகத் திமிருண்டாய்த் தூக்கமிஞ்சும்
வெதும்பியே யங்கமெலாங் குளிருஞ் சற்றே,
மெய்தானும் பளபளக்கும் கனமுங்காணும்,
கதும்புமே வின்னாணிக் கடூரமாகுங்
கடுத்துமே சிறு நீருஞ் சிவந்து வீழும்
அதிருமே மெய்யெல்லாங் குடைந்து நோகும்
அதிகரிக்கும் வாதசூலை யாண்மைதானே."

(யூகி முனி)

என்றதால், இந் நோயில் குளிருடன் சுரமுண்டாகிக் கைகால்கள் நோதல், திமிருண்டாதல், நீர் வேட்கை, உடல் மினுமினுத்தல், கனத்தல், வில்லைப்போல் விகுத்தல், மிகுந்த தூக்கம், சிறு நீர் சிவந்து கடுத்திறங்கல், உடம்பெல்லாம் குடைதல், நெஞ்சி லும் மார்பிலும் குத்தலுண்டாகி, வறண்டு ஐயத்தைப் பெருக்கி நெஞ்சிலும் மார்பிலும் சீழ் கூட்டிக் கக்கச் செய்யும்.

(வேறு)

''இளைத்திடும் தாவசூலைக்கொடிய குணங்கள் சொல்வோம்
குளைத்திடுங் கைகால் நெஞ்சு குத்துடன் வரண்டிருக்கும்,
துளைத்தி டுமார்பில் சென்று தாக்குமே லேறிச் சென்று,
மளைத்திடுஞ் சீதான் கக்கு மாகாது வையகமாமே.''

(சி.ம.)

என்றதாலுமறிக

4. அழல் சூலை (பித்த சூலை)

ஆண்மையா முடல்வற்றிக் கடுப்பு முண்டாம்,
ஆறவேகை காலுங் கனத் துளைந்து,
நோன்மையாய் நோய்மிகுந்து தூக்கங்கெட்டு,
நுணக்கமாந்தாது வெலா நொய்யதாகிக்
கேண்மையாய் சடத்தினிடச் செழுமைமாறித்,
திரங்கியே மிகமின்னித் தெளிவிலாமல்,
பேண்மையாமயக் கமொடுபெலக் கேடாகும்,
பித்தகமாஞ்சூலை யென்ப் பேசலாமே.''

(யூகி முனி)

(வேறு)

'' நாட்டியபித்த சூலை நடத்திய வுறவைக் கேளும்,
ஊட்டிய அன்னமுண்ண ருசிதப்பி வாந்தியாகும்,
மாட்டியகைகால் சந்துவகை யதன்மேலும் நோகும்,
நீட்டிய வவயவங்கள் நின் றெரிந் தூறுங்காணே.''

(சி.ம.)

என்றதால், இந் நோயில் உடல் வற்றும், கடுக்கும், கை கால்கள் நொந்து கனக்கும், வலிக்கும், தூக்கமின்மை, உடல் வன்மை குறைதல், தோல் சுருங்குதல், தோல் மினு மினுத்தல், மயக்கமாகிய குறி குணங்களுண்டாம்.

அன்றியும் உண்ணும் உணவின் சுவையறியாமல் வாந்தியாதல், கைகால்கள் நீட்ட முடக்க முடியாமை, எரிச்சல், குடைதல் முதலிய குறிகுணங்களையும் காட்டுமென்பர். (சி.ம.)

### 5. ஐய சூலை (கப சூலை)

"சூலையாம் சிலேட்டுமத்தைச் சொல்லக் கேளாய்
தொண்டை யெலாம் வலித்துமே கோழை கட்டும்,
ஆலையாமடி வயிறு தன்னில் நோவாம்
யங்கமெல்லாம் புண்போல் யழற்றல் காணும்,
வேலையா மெய்யெங்கும் வியர்வை தோன்றும்
மெய்வெளுத்து நகக்கண்ரத்த மில்லையாகும்,
பாலையா யிருந்தவுடல் பஞ்சு போலாம்
பலகாலும் வாயூறிப் பரவுமாமே." (யூகி முனி,)

என்றதால், தொண்டையிலும் மார்பிலும் கோழை கட்டல், அடி வயிறு நீர் கோர்த்தல், உடல் வலித்துப் புண்போல் நோதல், வியர்த்தல், உடல் வெளுத்தல், வாய் நீரூறல், உடல் பஞ்சுபோலாதல் முதலிய குறி குணங்களை ஐய சூலை நோயில் காணலாம்.

அன்றியும், இருமல், வரட்சி, கைகால்கள் குத்தல் ஆகிய குறிகுணங்களுண்டாம்.

(சி.ம.)

### 6. ஆம சூலை (வயிற்றுச் சூலை)

"பாவுமே ஆம சூலையின் குணந்தான்
பாவான வசிரணத்தின் பண்பினாலும்,
தாவுமே தண்ணீர்தான் குடித்தலாலுந்
தகுந்த புளிப்புக் கசப்புத் தித்திப்பாலும்,
ஊவுமே யுபவாசம் பண்ணலாலும்
உறவளர்ந்த மந்தமொடு சீதந்தானும்
வாவுமே வயிறோடு விலாப் பக்கங்கள்,
வலித்துமே கடுப்பு மிகக் குத்துண்டாமே."

(யூகி முனி)

என்றதால்; உண்ட உணவு செரியாமையாலும், தூய்மையற்ற நீரைப் பருகுதலாலும், புளிப்பு, கைப்பு, இனிப்பு சுவையுள்ள பொருள்கள் மிகுதியும் உண்ணலாலும், பட்டினியிருத்த

லாகிய இக் காரணங்களால் இரைப்பையில் ஐயம் சேர்ந்து வாயுவும் கூடி, வயிறு, விலாப்பக்கம் இவ்விடங்களில் மிகுந்த வலியுடன் கடுப்பும் குத்தலுமதிகமுண்டாகும்.

(சி.ம.)

## 7. உக்கார சூலை.

'' குத்துமுக்கார சூலையின் குணந்தான்,
கோர்வையாய் விலாவதனில் முதுகில் நெஞ்சில்
அத்தியினினாபியினி லபான குதத்தில்
அதிகத் துன்மாங்கிஷந்தான் வளர்ந்து மேவிப்
ப்த்துமணற் பருக்கை போற் சலத்துவாரப்
பதிநெருக்கி மூத்திரமாங் கிரிச்சியுண்டாய்த்
தத்து சடங்கடுப் பெடுத்து மதிகலங்கித்
தளர்ச்சி யொடு மயக்கமாய்த் தள்ளுந்தானே.''

(யூகி முனி.)

என்றதால்; ஏககாலத்தில் விலாப்பக்கம், முதுகு, நெஞ்சு, எலும்பு, தொப்புள், கீழ்வாய் இவ்விடங்களில் கெட்ட சதை வளர்ந்து, கழலைகள் போற் பெருத்து நீர்த்துளையை நெருக்கி, நீரிறங்கும்போது கடுத்து, மணல் போல் சிறுசிறு கற்கள் கலந்து, சிறுநீர் மிகுந்த துன்பத்துடனிறங்கும். உடல் கடுத்தல், தளர்தல், அறிவு மயங்கல், மயக்கமாகிய குறி குணங்களையுமுண்டாக்கும், இதனைச் '' சர்க்கரா சூலை '' எனவும் கூறுவர்.''

(சி.ம.)

## 8. குன்ம சூலை.

'' தள்ளு குன்மச் சூலை தனைச் சொல்லக் கேளாய்
தளருமல மூத்திரஞ்சிக்கலாகி
வள்ளுவயிற் பொருமி சத்தி இரைச்சல் மூர்ச்சை,
வலித் தெரித்து சூலைபோல் வயிற்றிற் றோன்றித்,
தெள்ளுவாய் நீரூறலேப்ப முண்டாம்
சிறுத்துமே யூனுமிக வெதும்பலாகி,
அள்ளுமே யங்கமெலா மழற்சியாகு
மதிகமா யுடலுலர்ந்த ருசியாமே.''

(யூகி முனி.)

என்றதால் ; இந் நோயில் சிறுநீரும் மலமும் தடைப்படல், வயிறு பொருமி இரைந்து வாந்தியாதல், வயிறுவலித்து இழுத்துப் பிடித்துச் சூலத்தால் குத்துவது போன்ற தாங்கமுடியாத வலி யுண்டாதல், ஏப்பம் வரல், உடல் வெதும்பி, உலர்ந்து, நாவின் சுவையும் கெடல் முதலிய குறி குணங்களுண்டாம். இதனைப் '' பரிணாம சூலம் '' எனவும் கூறுவர்.

### 9. உலர்த்து சூலை.

'' உடலான உலர்த்தி யெனுஞ் சூலை தன்னை
உரைக்கவே யுட்டிணமாம் பித்தந்தன்னால்,
வடலானவக்கினியின் வறட்சி தன்னால்
வலித்துத்தான் மெத்தவே வீங்கித் தோன்றும்,
குடலான வாதத்தால் குன்மத்தாலும்,
குடிலமாய்க் கனத்துமே யுடம்பெல்லா நோகும்,
தடலான வுள் வலியும் புற வீக்கமாய்த்,
தடித்துலர்ந்து சடமெல்லாந் தயங்கும்பாரே.''

(யூகி முனி)

என்றதால். அழல் குற்றமிகுதியாலெழுந்த வெப்பமானது, உடல் முழுமையும் பரவி, இதற்கனவேயிருந்த குன்ம நோயில் குடல் வாயு தூண்டப்பட்டு அவ்விடங்களில் வெதுப்பி வீங்கச் செய்து இந்நோயுண்டாகும். பின்னர் தோல் தடித்து உலர்ந்து காணும்.

(சி. ம.)

### 10. நிதம்பச் சூலை.

'' தயங்குகிற நிதம்பமாஞ் சூலைதன்னைச்
சாற்றிடவே பிள்ளையது தனைப் பெற்றக்கால்
உயங்குகிற யோனிவாய் வருத்தமாகி
உள்ளடங்கிய ரத்தமுளை தேங்காய் போல
அயங்குகிற யோனிவா யடைத்துக் கொண்டு
அசக்கிலங்கு நீர் பெருகிச் சகனத்துள்ளே
மயங்குகிற யுடலமெலாம் வாடியூதி
மாசற்ற சடந்தானும் வெளுப்புமாமே.''

(யூகி முனி)

என்றதால், பிரசவித்த பெண்களின் கருவாயின் கோளாறுகளால், அங்கு புண்ணாகிக் குருதி, சீழ் பிடித்து, சதை வளர்ந்து தேங்காயின் முளைபோல் தோன்றி, கருவாயின் வாயையடைத்து, மிகுந்த வலியையுண்டாக்கும். சிறிது அசையினும் அம்முளையிலிருந்து நீர் கசியும். உடல் வெளுத்து கால், கை, முகம் இவை வீங்கும். இக்குறி குணங்கள் நிதம்பச் சூலை நோயில் காணலாம். (சி.ம.)

## 11. கறைச் சூலை.

"மாசற்ற கறைச் சூலை வன்மை கேளாய்,
மருவுதிரந்தான் திரண்டு தோலைப்பற்றித்,
தேசற்ற வளையம் போற்றிரண்டு நொந்து,
சிறந்திருந்த நரம்பு வழித் தங்கித்தங்கிக்
கேசற்ற நோவாய்க் கீழ் முதுகைப்பற்றிக்,
கெட்டியாய் வலித்துமே நோவு முண்டாங்,
காசற்ற கைகாலும் வலியதாகும்,
கருத்தழிந்து மேனியுமே கறுகும்பாரே."

(யூகிமுனி)

என்றதால், இந்நோயில் உள்ளங்கை, உள்ளங்கால்களில் எரிச்சல், குத்தல், வியர்த்தல் என்னும் குறி குணங்களையுண்டாக்கும்.

அழல் குற்றம் தோலைப் பற்றி, அத்தோலின் அடியில் குருதி பெருகி, தோலின் மேல் நரம்புகள் புடைத்து வெளியிற்றோன்றி வளையம்போற்றிரண்டு, நொந்து, கீழ் முதுகும் கைகால்களும் வலித்தல், உடல் கருத்தல், எரிதலாகிய குறி குணங்களையும் காட்டும். இந்நோய் பிரசவித்தவர்களுக்குப் பெரும்பாலும் வருவதுண்டு (Similar to Casualgia). தவிர, இந் நோயினைக் "கரபாத சூலை" என்றும், "காவாத சூலை" எனவும் கூறுவர்.

## 12. சுரச் சூலை.

"கருகுகிற சுரசூலை கருத்தைக் கேளாய்.
கடந்திரண்டு பக்கமாஞ் சூலை தோன்றி,
வருகின்றவாய் தனிலே ரத்தமுண்டாய்,
வடிவெல்லாஞ் சுரந் தோன்றி யுளைச்சலுண்டாய்ச்

சொருகின்ற தேகமெலாஞ் சூலையுண்டாய்ச்,
சுருக்கியே வயிறது தான் வலித்து நோகும்.
தெருகின்ற நெஞ்செரிந்து வாய்நீரூறிச்,
செரியாமல் வாந்தியாய்த் தியக்கமாமே.''

(யூகி முனி.)

என்றதால், இந்நோயில் சுரம் தோன்றி, இரு பக்கங்களிலும் சூலை நோயுண்டாய் நெஞ்செரிவு, செரியாமை, வாந்தி, மயக்கம், வயிற்று வலி, வாய் நீரூறல், குருதி கசிதலாகிய குறிகுணங்களைக் காட்டி உடல் முழுமையும் தாங்க முடியாதபடி குத்தலையுமுண்டு பண்ணும்.

(சி.ம.)

### 13. பக்க சூலை.

தியக்கான பக்கமாஞ் சூலை கேளாய்,
திருகியே யண்டத்திற் பொருமி நொந்து,
உயக்கான சுரந்தோன்றி வலித்து நொந்து,
உடம்புப்புண்போலுளைந்து தலை வலித்து,
பயக்கான பக்கத்திற் குத்தலுண்டாய்ப்,
பாரித்துக் கனத்துமிகத் திமிருமுண்டாய்க்,
கயக்கான கைகாலு மோய்ச்சலாகிக்
கண்புகைந்து கருமாறிப் பாய்ச்சலாமே.''

(யூகி முனி.)

என்றதால், இந்நோயில் சுரம், தலை வலி, உடல் புண்போல் நோதல், மார்பின் அடிப்பக்கத்தே சூலத்தால் குத்துவதுபோன்று தாங்க முடியாத வலியுண்டாகும். அப்பக்கம் கனத்து விலா இடைகள் தெரியாதபடி வீங்கிக்காணல், கண் புகைதல், கை கால் ஓய்தல், உருமாறிப் போதல், மூச்சு விட முடியாமை, திமிர் கொள்ளல், இருமல், இளைத்தல், தகை முதலிய குறிகுணங்களையும் தோற்றுவிக்கும்.

(சி.ம.)

### 14. கற்ப சூலை.

'' பாய்ச்சல் கெற்ப சூலையினைப்பகரக் கேளாய்,
பண்பான மருந்தீட்டின் குணத்தினாலும்,
வாச்சவஞ்சனையாலும் சூனியத்தாலும்,
மாசற்ற காயமது வேட்கையாலும்,

பீச்சவேமகப்பேறிலு திரத்தாலும்,
புரண்டு சிக்கிக் கீழ் வயிற்றில் ரத்தம் வீழ்ந்து,
கேச்சலாய்க் கெற்பம் போற்புரள்வுற்றூறிக்,
கீழ் வயிற்றில் வலி தோன்றி மயக்கமாமே.''

(யூகி முனி.)

என்றதால், இந்நோய், மருந்தீட்டின் கேட்டாலும் (இடு மருந்து), வஞ்சனையாலும், சூனியத்தாலும், வெப்பமிகுதியாலும், மகப்பேறில் குருதி சிக்குவதாலுமுண்டான குருதிப் பெருக்குச் சூலகத்திலூறி, பெருத்து, சூல் கொண்ட பெண்ணின் வயிறு போல் பெரியதாகி வயிற்றில் புரண்டு, கீழ் வாயிலில் வலியைத் தந்து மயக்கத்தையும் விளைவிக்கக்கூடிய நோய் என்பர்.

(சி. ம.)

## 15. தூரச் சூலை.

'' கீழ் வயிற்றிற்றூரமாஞ் சூலை கேளாய்,
கெடியுண்டி மறித்துமே வாய் நீரூறிப்,
பாழ் வயிற்றின் நெஞ்செரிந் தீரல்பற்றிப்,
பக்கமன்றிச் சிரத்தோடு வயிறு மூதி,
ஆழ் வயிற்றிற்றிரண்டுமே புரள்வுற்றேதான்,
அடிக்கடி வந்த மர்ந்தொதுங்கி யெழும்பி மீளுங்,
கீழ் வயிற்றில் வெளிப்பட்டே யுதிரஞ்சிக்கும்,
கிளத்து மலசலத்தானுஞ் சிக்கிப்போமே.''

(யூகி முனி.)

என்றதால், இந்நோயில், வாய் நீரூறல், நெஞ்சு எரிதல், ஈரல் பக்கம் தலை, வயிறு இவற்றில் வலியுண்டாதல், வயிறு ஊதி, வயிற்றுள் திரண்டு புரளுவது போல் அடிக்கடி காணப்படும். மலமும் நீரும் கட்டுப்படும் என்னும் குறி குணங்களாம்.

(சி. ம.)

குறிப்பு:—சில நூல்களில் அடியிற்கண்ட மூன்று பிரிவுக் சூலை நோய்களையும் சேர்த்துள்ளார்கள்

(திருமூலர் நாடி)

1. வாதபித்த சூலை.

"ஆகாத வாத பித்த மனைத்திடுஞ் சூலை கேளு,
வாகான கால்கள் கையில் வளமுடன் கரடு கட்டும்,
காகான மேனியெல்லாங் தடிப்புடன் வெடிப் புண்ணாகி,
போகாத வசாத்தியமாகிப் புணர்ச்சியால் கொல்லுந் தானே."

(திருமூலர் நாடி சி.ம.)

என்றதால் வளி, அழல் கலப்பாலுண்டாம், சூலை நோயில் கை கால் மரத்தல், உடம்பு வெடித்துப் புண்ணாதல், அப்புண் ஆறாதிருத்தல் நாள்படின் நோய்மிகுந்து கொல்லும் என்பர் கால் கை, இவற்றில் கரடு கட்டும் எனவும் கூறியுள்ளார்.

2. ஐய பித்த சூலை.

ஐயழல் கலப்பாலுண்டாம் சூலை நோயில் எலும்பில் துளைப் பதுபோன்ற குத்தல், வலியுண்டாதல், சுரங்காய்தல், நீர்வேட்கை. இருமல் முதலிய குறி குணங்களுண்டாம்.

3. ஐய வாத சூலை.

ஐயவளிக் கலப்பாலுண்டாம் சூலை நோயில், தலை வீங்கிக் கனத்தல், நீங்காக் குளிர் சுரம், காலில் ஆணியுண்டாதல், எலும் புகள் வன்மை கெடல், நோதல் என்னும் குறி குணங்களுண்டாம்.

(கை எழுத்துப்பிரதி)

(மேற்கொள்.)

ஐய பித்த சூலை— திருமூலர் நாடி.

"சொல்லிய வையமும் பித்தமுங் கூடிடில்,
மல்லி எலும்பில் வளமாய்த் துளைத்து நோய்,
அல்லிச் சுரங்காயும திகதாபமுமாகும்.
எல்லியிருமிடுமிது காணுஞ் சூலையே"

என்பதினாலறிக.

### ஐய வாத சூலை—திருமூலர் நாடி.

" காணுமே வையத்திற்கனவாத சூலை கேள்,
ஈணுங்கபாலம் புடைத்து வெடித்திடும்,
ஆணி முளையாமடங்காக் குளிர் சுரம்,
பேணி எலும்பெல்லாம் பெலன்கெட்டு நோவுமாறே."

என்பதினாலுமறிக.

### சூலை நோயின் பொதுக் குறிகுணங்கள்.

தலை நோதல், மூக்கு நீர் பாய்தல், சிறு சுரம், நோயுள்ள யிடங்களில் வீக்கம், சிவந்து குத்தலுண்டாதல், குத்தலின் வன்மைக் கேற்ப மிகு சுரம், வாந்தி, தலை நோய், கண் சிவத்தல், காது கேளாமை, மயக்கம், அறிவு குன்றல், வாய் பிதற்றல் ஆகிய குறி குணங்களேற்படும். சில வேளை உடல் வியர்த்தல், கை கால்கள் சில்லிடல், மூக்கு நுனி நீளல், கண் பஞ்சடைதலாகிய குறி குணங் களையும் காட்டும்.

அன்றியும் குன்ம நோய்க்குத் துணையாக இந்நோய் உண்டாகி வாந்தி, விக்கல், வயிற்று வலி, வயிற்றை இழுத்துப் பிடித்தாற் போல் வலித்துப் புரட்டி வாந்தியும் செய்விக்கும், அவ்வாந்தியில் குருதியும் கலந்து வெளியாகும். இதனால் கேடுகள் பல வுண்டாகி நோயினனைக் கொல்லுவதுமுண்டு. இவ்வாறே சிறு குடல் பெருங்குடல், இவற்றிலுண்டாகும் சூலை நோயிலும் காணும் எனச் சித்த மருத்துவம் கூறுகின்றது.

(சி. ம.)

### தீரும் தீராதவை.

" சிக்கான பதினைந்து சூலைதன்னில்,
சிறப்பாகக் குணா குணத்தின் செயலைச் சொன்னேன்,
அக்கானவ சாத்தியமாஞ் சூலையாறு,
ஆகாத குணங்கண்டாய் முறியென் சூலை,
உக்கானவுக் கார சூலைசேட்பம்,
உறுதி குன்மச் சூலையோ டாம சூலை,
நிக்கான நிதம்பமாஞ் சூலை சாத்தியம்,
நீங்கியத சாத்தியமாஞ் சூலையென்னே"

(யூகி மு...)

என்றதால், முறிச்சூலை, உக்கார சூலை, ஐயச் சூலை, குன்மச் சூலை, ஆம சூலை, நிதம்ப சூலை இவ்வாறும் எளிதில் தீராவாம்.

மற்றைய ஒன்பது வகைச் சூலை ரோகங்களும், இலகுவில் தக்க மருத்துவத்தால் திருவனவாம்.

### முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

சூலை நோயின் முற்குறியில் ''நெடுவாதச் சார்பதுயின்றிச் சூலை வராது'' என்பதிற்கிணங்க, உணவாதி செயல்களால் வழிக் குற்றமதிகரித்து வாயுக்களைத் (மேல் நோக்குங்கால், கீழ் நோக்குங்கால்) தூண்டி அவற்றின் வன்மை மிகுந்து சூலை நோயைப் பிறப்பிக்கும். நோயுண்டாகுமிடங்களுக்கும், கேட்டையும் குற்றங் களுக்குத் தக்கபடியும் வாயுக்கள் கேடடையும், முக்குற்றங்களும் வாயுக்களும் சேர்ந்தாற்போல் கேடடைவதற்கு ஏற்றாற் போல் நோயின் வன்மையும் பெருகும். உடலின் உறுப்புகளில் சூலத்தால் குத்துவது போன்ற வலி, குத்தல், குடைதல், புரட்டல் என்னும் குறிகுணங்களையும் வாந்தியையும் உண்டாக்கும். எருவும் நீரும் கட்டுப்படும் எனவும் கூறியுள்ளார்.

(சி. ம.)

### நாடி நடை.

1. '' வாதமெனும் நாடியது தோன்றிற்,
சீதமந்தமொடு வயிறு பொருமல் திரட்சி வாயு,
சீதமுறுங்கிராணி மகோதரம் நீராமை,
திரள் வாயு சூலை வலிக்குப் புத்திரை,
நீதமுறுங்கிருமி குன்ம மண்டவாதம்,
நிலையும் நீர்க்கிரிச் சரங்கள் தத்துமேகம்,
பேதக மாமூத்திர பிணி மூலரோகம்,
பேசவெகு பிணிகளுமே பொருளதாமே.''

2. '' வாதநாடி வலத்திலிசைந்தால் வாத சூலை.''

3. '' பித்தநாடி வலத்திலிசைந்தால் பித்த சூலை.''

4. '' ஐயநாடி வலத்திலிசைந்தால் ஐய சூலை.''

குறிப்பு.—''நாட்கள் மூன்றும் தனித்தனி வலத்திற் சூலை இடத்திற் குன்மம் '' என்பதாலறிக.

5. '' காணுமடா சூலையென்றால் சேத்தும பித்தம்.''

6. ''திருத்தமாம் வாதத்தோடே
 தீங்கொடுபித்தஞ் சேரில்,
பொருத்துகள் தோறும் நொந்து,
 போதவே பிடிக்குஞ் சூலை,
பெருத்திடு வாயு கொள்ளும்,
 பேசிய வயிறு போகும்,
கருத்தினாலறிந்து நன்றாய்க்,
 கண்டுறை மனிதர்க்கெல்லாம்.''

(குணவாகட நாடி)

7. '' பாங்கான வாதத்தில் சேத்தும நாடி
பரிசித்தால் திமிர்மேவு முளைச்சலாகும்,
தீங்கான இருமலுடன் சன்னிதோடம்,
சேர்ந்தவிடம் வெடி சூலை யிருத்ரோகம்,
வாங்காத ஈளை மந்தாரகாசம்,
வலியுடனே புறவீச்சு உள் வீச்சு வீக்கம்,
ஓங்காணுஞ் சுரமுடனே சுவாசகாசம்,
உண்டாகும் வெகுநோய்க்கு முறுதிதானே.''

(சதக நாடி.)

8. ''சிறப்பான பித்தத்தில் வாத நாடி
சேரிலுறுதாது நட்டமுதிர பீடை,
உறைப்பாகச் செரியாமை குன்மஞ் சூலை,
உற்ற சுரங்கிராணி வயிற்றிரைச்சல் மந்தம்,
அறைப்பான ஓங்கார புற நீர்க்கோவை,
ஆயாசங்கிரக்கமொடு மயக்க மூர்ச்சை,
முறைக்காய்வு விட வீக்கம் மூலவாய்வு,
முரடான நோய் பலவு முடுகும் பண்பே.''

(சதக நாடி)

9. ''தானமுள்ள சேத்துமந்தானிளகில் வெப்பு.
சயமீளையிருமல் மந்தாரகாசம்,
ஈன முறுஞ்சன்னி விடதோடம் விக்கல்,
இருத்ரோகங்கரப்பான் விரண தோடம்,

மானனையீர் சூலை திரள் வியாதி வீக்கம்,
வருஞ்சத்தி சுவாசம் நெஞ்சடைப்பு தூக்கம்,
ஏன முறுங்காமாலை பாண்டு சோகை,
எழுசுரங்கள் பலதிற்குமிட முண்டாமே.''

(சதகநாடி)

10. ''கண்டாயோ சிலேற்பனத்தில் வாத நாடி
கலந்திடுகில் வயிறு பொருமல் கனத்த வீக்கம்,
உண்டாலோ ஓங்கார சத்தி விக்கல்,
உறுதிரட்சை வாய்வுவலி சன்னி தோடம்,
விண்டாலே யிளைப்பிருமல் சோகை பாண்டு,
விடபாகம் விட சூலை பக்கவாதம்,
திண்டாடு நாசிகாபீடங்கக்கல்,
சிரநோய்கள் பலவும் வந்து சிக்குதானே.''

(சதகநாடி)

11. ''மோதிர விரல் வலத்தே முடுக்கியே யோடில்,
காதியுங்குலை நோயுண்டாங் கைத்திடும் வாய் நீரூறும்,
வாதியாளருளினாலே மயக்கமும் வாந்தியுண்டாம்;
ஆதியே யடிவயிற்றிற் சூலையு மமர்ந்து நிற்கும்.''

(குணவாகட நாடி)

என்பதினால்.—1. வளி நாடி மீறி நடக்கினும் அல்லது அதன் வலப் பக்கத்தே இசைந்து மீறி நடக்கினும் வளிசூலை நோயுண்டாகும்.

2. அழல் நாடியும், ஐய நாடியும் தனித்தனியே அதனதன் வலப்பக்கத்தே இசைந்து மீறி நடக்கின் அழல் சூலை, ஐய சூலை முறையேயுண்டாகும்.

3. ஐயழல் தொந்தம், வளி அழல் தொந்தம், வளி ஐய தொந்தம், அழல் வளி தொந்தம், ஐய நாடி தனித்து இளகல், ஐய வளி தொந்தம் இவற்றால் சூலை நோய் விளையும் என அறிக.

4. நிற்க, ஐயநாடி தனித்து முடுக்காக நடக்கின் அடி வயிற்றில் சூலை நோய் (குன்ம சூலை) உண்டாமென்றும், அதனால் சூலை நோவும், வாய் கைத்தலும், வாய் நீரூறலும், வாந்தி, மயக்க மிவை உண்டாகுமெனவும் நாடி நூல் மூலமாக அறிகிறோம்.

## 20. மண்ணீரல் நோய்.

வேறு பெயர்கள்.—இடப்பாட்டீரல் விருத்தி, பிலீக விருத்தி, இடப்பாட்டீரல் நோய் என்பனவாம்.

இயல்.—மண்ணீரல் தன் இயற்கையளவில் நிற்காமல் நாளுக்கு நாள் பெருத்துக்கொண்டே வருவதோடு உடலின் குருதியைக் குன்றச் செய்யும் நோயாம்.

### நோய் வரும் வழி

உடற்கு ஆகாப் பொருள்கள், குருதியைக் கெடுக்கக்கூடிய பொருள்கள் ஆகியவற்றை யுண்பதாலும், வயிறு நிறைய உண்ட பின் ஆடல், பாடல், குதித்தல், நீரில் நீந்துதல், ஆகாரத்திற்கு மேல் நெய், எண்ணெய், பால் முதலிய நெய்ப்புப் பொருள்களை யருந்துதல், உண்டவுடன் தூங்குதல், கழிச்சல் மருந்துகளை அடிக்கடி கொடுத்து உடல் வன்மையைக் குன்றச் செய்தலாகிய இக்காரணங்களால் இந்நோயுண்டாகும். நிற்க. குளிர் காய்ச்சல், வெளுப்பு நோய், காளச் சுரம் ஆகிய இந்நோய்களில் மண்ணீரல் வளர்ச்சியடைவதுமுண்டு.

### முற்குறி குணங்கள்.

இந்நோய் ஆரம்பத்தில் வாய் சுவையறியாமை வாய் குமட்டல், உணவில் வெறுப்பு, செரியாமை, வாந்தி வயிறு பொருமல், உடல் சூடாயிருத்தல், விட்டுவிட்டு சுரங்காய்தல், வயிறு பெருத்துக்கொண்டே வருதல், உடல் இளைத்துக்கருத்துக் காணல், மண்ணீரல் பெருத்துக் கொண்டே வருதல், தொட்டு அழுத்திப் பார்க்கினும் (palpation) தட்டிப்பார்க்கினும் (Percussion) இடப்பக்கம் கடைவிலா வெலும்புக்குக் கீழே மண்ணீரல் பெருத்து வளர்ந்திருக்கும். இதனை அறியலாம்.

### நோய் எண்.

"சித்த மருத்துவத்தில்" முக்குற்றயளவாக இந்நோயை நான்கு வகையாகப் பிரித்துள்ளார்கள் ; அவையாவன :—

1. வளி மண்ணீரல் நோய்.
2. அழல் மண்ணீரல் நோய்.
3. ஐய மண்ணீரல் நோய்.
4. முக்குற்ற மண்ணீரல் நோய் என்பவையாம்.

## ஒவ்வொரு பிரிவு இடப்பாட்டீரல் நோயின் குறிகுணங்கள்.

### 1. வளி மண்ணீரல் நோய்.

இந்நோயில், உணவில் வெறுப்பு, சுவையின்மை, வாய் கைத்தல், அடிக்கடி சுரங் காய்தல், உடல் முகம் இவை கருத்தல், வயிறு நாளுக்கு நாள் பெருத்துக்கொண்டே வருதல், வயிறு இரைதல், வயிற்றின்மேல் குருதிக் குழல்கள் புடைத்துப் பச்சை நிறங்காணல், கைகால் சூம்பல், மலம் நீர் சுருங்கல், நோய் முற்ற முற்ற உடல் வெளுத்து, கை கால்,முதுகு, வயிறு, இவை வீங்கிக் காணல், அன்றியும் வயிற்றில் நீர் கோர்த்து நீர்ப் பெருவயிறு நோயுமுண்டாகக்கூடும்.

### 2. அழல் மண்ணீரல் நோய்.

இந்நோயில், வாய்கைத்தல், வாய் நீரூறல், சோறு வேண்டாமை, வாந்தி, குமட்டிக் குமட்டிப்பிச்சு நீர் எதிர்த்து வாந்தியாதல், தலை சுற்றல், மயக்கம், மண்ணீரல் அளவில் பெருத்து வரல், நோய் முதிர முதிரக் கழிச்சல், உடல், கண், நா, முகம் இவைமஞ்சளித்தல், சில வேளை மண்ணீரல் மிகப் பெரியதாகி அடி வயிறு வரையிலுமிறங்கிவிடுவதுண்டு.

### 3. ஐய மண்ணீரல் நோய்.

இந்நோயில் உடல் வன்மை குறைதல், இரசக் குழாய்களின் முடிச்சுகளும் (Lymphatic glands) வீங்கிக் கழல்களைப் போல் திரண்டு எழும், உடல் வெளுத்துக் கை கால் வீங்கல், விட்டு விட்டு சுரங்காய்தல், நோயினனைப் படுக்கையிற் கிடத்தல், உடல் மெலிதல், குருதியுங் குறைதலாகிய குறிகுணங்கள்.

### 4. முக்குற்ற மண்ணீரல் நோய்.

மேலே கூறிய மூவகை மண்ணீரல் நோய்களின் குறிகுணங்கள் கலப்புற்றுக்காணுவதோடு, மண்ணீரல் மிகவும் பெரியதாகி உடல் வன்மை எளிதில் குறைந்து நோயை முற்றச் செய்து சீக்கிரத்தில் நோயினனைக் கொல்லுமென்பதையும் அறியவும்.

### தீரும் தீராதவை.

வளிமண்ணீரல் நோய் தக்க மருந்துகளால் குணமாகும். மற்றவை எளிதில் தீராவாம். அழல் மண்ணீரல் நோய் முக்குற்ற மண்ணீரல் நோய் தீருவது இல்லையென்றே சொல்லலாகும் எனச் "சித்த மருத்துவம்" கூறுகின்றது.

### மண்ணீரல் நோயின் பொதுக் குறி குணங்கள்.

இந்நோயில் இடப்பாட்டீரல் பெருத்துக் கொண்டேவரல், வயிற்றில் ஓர் பளு, வலி, செரியாமை, வாந்தி, கழிச்சல், வயிறுப் பல், வயிற்றில் நீர்கோர்த்தல், சுரம், உடல் கருத்து இளைத்தல் முகம் வெளுத்தல், கைகால்கள் வீங்கல், ஆகிய இக்குறி குணங் களைக் காட்டும்.

சிலவேளை வலப்பாட்டீரல் நோய்வாய்ப்பட்டு பெருத்துக் கொண்டே வருமாயின், இடப்பாட்டீரலும் கூடவே பெருத்து, வளர்ந்து கொடிய துன்பங்களையும் விளைவிக்குமெனக் கூறுவர்.

இந்நோய் சிறுவர் முதல் பெரியவர்கள் வரை உண்டாகும். இரட்டை பிள்ளைகளைப் போல் இடப்பாட்டீரல், வலப்பாட் டீரல், இரண்டிலொன்று கெடுமேயானால் மற்றொன்றும் கெடும் என்பர் சில நூலோர் எனச் சித்த மருத்துவம் கூறுகின்றது.

முக்குற்ற வேறுபாடுகள் யாவும் கல்லீரல் நோயில் கூறிய படியே இந்நோய்க்கும் பொருந்தும். ஆதலால் கல்லீரல் நோயில் பார்க்கவும்.

## 21. கல்லீரல் நோய்.

வேறு பெயர்கள்.—வலப்பாட்டீரல் நோய், வலப்பாட்டீரல் விருத்தி, கல்லீரல் வளர்ச்சி, மாந்தக்கட்டி, கல் மாந்தம், யக்ருதம் என்பனவாம்.

இயல்.—வலப்பாட்டீரல் இயற்கையாகவுள்ள தன்னளவில் நிற்காமல் பெருத்துக்கொண்டே வருவதும், தன் இயற்கைத் தொழிலை இழப்பதும், அல்லது தன்னளவில் சிறுத்துக்கொண்டே வந்து பல நோய்களைப் பிறப்பிக்கும் இயல்புடைய நோயாம்.



### நோய் வரும் வழி.

அதிக உணவு உண்ணல் அல்லது உடற்கு ஒவ்வாப் பொருள் களையுண்ணல், கள், சாராயம் முதலியவைகளை அளவு கடந்து அருந்தல், பெண்களின் கூட்டால் வரும் மேகநோய் (Veneral Diseases) சுரம் முதலிய நோய்களுக்குத் துணை நோயாக வருதல், அன்றியும், குழந்தைகளில் பால், உணவு இவைகளின் வேறுபாடுகளாலும் வருவதுண்டு (Infantile Biliary Cirrhosis of the Liver).

### முற்கூறி குணங்கள்.

இந்நோய் ஆரம்பத்தில் வாய்கைத்தல், சுவையின்மை, வாய் நீருறல், பசியின்மை, பித்தவாந்தி, முகம் சுருங்கி முகத்தில் எலும்புகள் எடுத்துக் காட்டல், கைகால் சூம்பல், வயிறு பெருதல், அடிக்கடி சுரங் காய்தல், வலப்பாட்டீரல் பெருத்துக் கொண்டே வருதல் ஆகிய குறிகுணங்களாம்.

### நோய் எண்.

கல்லீரல் நோயை மூன்று வகையாகச் சித்த மருத்துவத்தில் பிரித்துள்ளார்கள். அவை—

1. வளிக் கல்லீரல் நோய்.
2. அழல் கல்லீரல் நோய்.
3. ஐயக் கல்லீரல் நோய் என்பவையாம்.

### ஒவ்வொரு பிரிவுக் கல்லீரல் நோயின் தனித்தனிக் குறிகுணங்கள்.

1. வளிக் கல்லீரல் நோய்.—வளிக்குற்றம் பெருகி அழல் குற்றமும் சேர்ந்து சுரமுண்டாதல், உடல் இளைத்தல், உடல் கருநிறமடைதல், உடல் வன்மை குறைதல், வயிறு பெருத்தல், இரசுநாளங்களின் முடிச்சுகள் கனத்துத் தோன்றல், நோய் முற்ற முற்ற படுக்கையில் கிடத்தல், உடற் குருதி குறைந்து உடல் வெளுத்து, கால் கை, வயிறு இவை வீங்கலாகிய குறிகுணங்களைக் காட்டும்.

2. அழல் கல்லீரல் நோய்.—இதில் உடல் முழுமையும் பித்த நீரை வீசி உடலை மஞ்சளிக்கச் செய்யும், வாய்கைத்தல், பித்த வாந்தியாதல், முகம் சுருங்கல், கைகால் வீங்கல், உடல் வெளுத்தல், பெரு வயிறு நோய் குறி குணங்களும் தொடரல் ஆகிய குறிகுணங்களாம்.

3. ஐயக் கல்லீரல் நோய்.—இந்நோயில் கல்லீரல் பெருத்துத் தொடுகைக்குக் கட்டி முட்டியாகக் காணல், சுரம், வாந்தி, தலை நோய், கழிச்சல், சிறு நீர் சிவந்தும் அளவில் குறைந்தும் இழிதல், மஞ்சள் காமாலை நோய்க் குறி குணங்கள் தோன்றல், உடல் வீங்குதல், வெளுத்தல், பெரு வயிறு நோய்க் குறிகுணங்களுமுண்டாகியவைகளைக் காட்டும்.

### தீரும், தீராதவை

வளிக் கல்லீரல் நோயும், ஐயக் கல்லீரல் நோயும், இவ்விரண்டும் தீராவாம். **அழல் கல்லீரல் நோய் தக்க மருந்துகளால் குணமாகும்.**

### கல்லீரல் நோயின் பொதுக் குறிக்குணங்கள்.

இந்நோயில் உணவில் வெறுப்புண்டாதல், நா சுவையறியாமை, வாய் குமட்டல், வாந்தி யாதல், காலை நேரங்களில் பித்த வாந்தி யாதல், செரியாமை, உடல் இளைத்தல், முகம் சுருங்கல், முகம் தாடை இவற்றின் எலும்புகள் எடுத்துக்காட்டல், கைகால்கள், சூம்பி யிருத்தல், உடல் வெளுத்தல், வயிறு பெருத்தல், மஞ்சள் காமாலை, பாண்டு, ஊதல் நோய், பெருவயிறு நோய் ஆகிய இந்நான்கும் ஒன்றின் பின் ஒன்றாய்த் தொடர்தலாகிய குறி குணங்களைத் தோற்றுவிக்கும்.

(சிம..)

### முக்குற்ற வேறுபாடுகள்.

மண்ணீரல், கல்லீரல் நோய்களிரண்டும் பெரும்பாலும் முக் குற்ற வேறுபாடுகள் ஒன்றேயாகும். இவ்விரண்டு நோய்களும் அழல் குற்றத்தின் பெருக்கால் உண்டாகும், ஒன்றுக்கொன்று தொடர்பாகவும் வரும். ஆதலால் இரண்டு நோய்களின் முக்குற்ற வேறுபாடுகளைச் சித்த மருத்துவத்தில் ஒன்றுபடக் கூறியுள்ளார்.

இந்நோய்களிரண்டும் முதலில் அழல் பெருக்கால் எழுந்து மற்ற இரு குற்றங்களையும் கேடடையச் செய்து, பரவுகாலை (வியான வாயு) தூண்டி அதன் தொழிலை நடைபெறாது தடுத்தலால் உண்டாகும் நோய்களாம்.

அழல் குற்றம் கெடுவதால் இரசம், இரத்தம் இவ்விரு தாதுக் களின் வன்மைகுன்றும், உடல் வற்றும், கழிச்சல், வாந்தி பித்த நீர்க்கேடு களையும் உண்டாக்கும், கீழ் நோக்குங்கால் (அபானன்) மேல் நோக்குங் கால் (உதானன்) நடுக்கால் (சமானன்) ஆகிய இவ்வாயுக்களும் கேடடைந்து தத்தம் தொழில்களை சரியாக நடைபெறாது தடுத்தலால் கல்லீரல், மண்ணீரல் நோய்கள் மீண் டும் பெருகி வன்மை பெற்று நோயினனைப் பல துன்பங்களுக்கு ஆளாக்கும்.

## 22. வெளுப்பு நோய்.

வேறு பெயர்கள்.—வெண்மை நோய், பாண்டு, வெண்பாண் டம் என்பவனவாம்.

இயல்.—இயற்கை நிறம் மாறி, உடல் வெளுத்து, கண், நகக் கண் இவைகளை நீக்கிப் பாக்கில் குருதியின்றி வெளுத்திருக்கும் நோயாம்.

## நோய்வரும் வழி.

குருதியின் வன்மையைக் குறைக்கக் கூடிய உப்பு, புளிப்புச்சுவையுள்ள பொருள்களை மிகுதியாக உண்ணல், சுரம், பேதி, வாந்தில் வாயு முதலிய நோய்களில் துன்பப்படல் ; குருதியை அளவு கடந்து வெளியாக்கும் பெரும்பாடு, குருதி அழல் நோய், குருதிக் கழிச்சல், குருதி வாந்தி, முளை நோய் முதலிய நோய்களில் கஷ்டப் படல் ; வெட்டுப் பட்ட காயங்களிலிருந்து குருதி மிகுதியாக வெளிப்படல், அன்றியும் நஞ்சுத்தன்மையுள்ள மருந்துகளை நாள் அளவுக்கு மிஞ்சி உண்ணல், உடலை இளைக்கச் செய்யும் வயிற்றுப் புழு நோய், இளைப்பு நோய், நிணக் கழிச்சலாகிய நோய்களில் கஷ்டப்படல் குருதிப் பெருக்கைக் கெடுக்கக் கூடிய ஈரல் நோயில் வருந்துதல், புகையிலை, வெற்றிலை பாக்கு, மண் சாம்பல், திருநீறு, கர்ப்பூரம் முதலியவைகளை அதிகம் கொள்ளல் ஆகிய இக்காரணங்களால் வெளுப்பு நோயுண்டாகும்.
(Please refer to the quotations at the end from Yugimuni)

## முற்குறி குணங்கள்.

உணவாதி செயல்களால் தீக்குற்றம் மிகுந்து குருதியின், நிறத்தையும் எடையையும் கெடுத்து, உடலுக்கு வேண்டிய ஊட்டத்தையும் கொடாமல் உடலை வெளுக்கச் செய்யும். சிறிது தூரம் நடக்கினும் கால்கள் ஓய்தல், பெருமூச்சு வாங்கல், உணவில் விருப்பமின்மை, வாய் குமட்டல், தலை சுற்றல், கண் இருளல், மயக்கம், மார்பு துடித்தல், உடலிளைத்தல் ஆகிய குறி குணங்களை காட்டும்.

## நோய் எண்.

முக்குற்றங்களால் வருவன நான்கும், நஞ்சால் வருவன ஒன்றும், ஆக ஐந்து பிரிவுகளாக வெளுப்பு நோயை வகுத்துள்ளார்கள். அவை யாவன :—

1. வளிப்பாண்டு (வாத பாண்டு)
2. அழல்பாண்டு (பித்த பாண்டு)
3. ஐயப்பாண்டு (கபப்பாண்டு)
4. முக்குற்றப் பாண்டு (திரிதோடப்பாண்டு)
5. நஞ்சு (விடப் பாண்டு) என்பவையாம்

(Please refer to the quotations at the end from yugimuni.)

அன்றியும், மண்ணுண் வெளுப்பு நோய் (மண்ணுண் பாண்டு) ஒன்றுளது எனவும் கூறுவர். இதனைச் சேர்த்து மொத்தம் ஆறு எனலாம்.

நிற்க, குருதிக் குறைவால் உடற்கட்டுகள் மெலிந்து, உடல் வீங்கி நிறம் மாறி, மஞ்சள் அல்லது நீல நிறம் பெற்று மிகுந்த நீர் வேட்கை, அடிக்கடி மயக்கம், மனச் சோர்வு, அறிவு தடுமாறல், ஆண்மை குறைதல் முதலிய குறிகுணங்களைக் காட்டும். இந் நோயினை ''நீலப்பாண்டு'' ''அலசப் பாண்டு'', ''அலிமுகப் பாண்டு'' என மூவகையாக வழங்குவராயினும், இவைகள் வெளுப்பு நோயில் காணும் குறி குணங்களையே பெறுமாதலின் இவற்றைத் தனித்துக்கூற வேண்டியதில்லையெனச் ''சித்தமருத் துவம்'' கூறுகின்றது.

ஒவ்வொரு பிரிவு வெளுப்பு நோயின் குறி குணங்கள்.
(Please refer to the quotations at the end from yugimuni.)

1. வளிவெளுப்பு நோய்.

இந்நோயில் வயிற்று வலி, நீர் வேட்கை, பசி மந்தமாகி, இவற்றுடன் குருதி நாளங்கள் கருப்பாகிப் பரபரத்துக் காணும். உடல் நடுக்கம், கண் சிவப்பு, உடல் வெளுத்து வீங்கல், வீக்கத்தில் வலியும் முண்டாதல், மலம் தீய்ந்து கட்டுப்படல், ருசியின்மை. வயிறு பொருமல், குடற்புரட்டல், என்னும் குறிகுணங்களும் தோன்றும்.

2. அழல் வெளுப்பு நோய்.

இதில் உடல் மஞ்சள் நிறமடைதல், நா, கைகால்கள் வெளுத்தல், கண்பார்வை மங்கல், நீர் வேட்கை மயக்கம், வாய் காரச் சுவையோடிருத்தல், சிலசமயம் வாய் கைத்தல், நெஞ்சை இறுக்கி பிடித்ததுபோலிருத்தல், மூச்சு முட்டல், தலை கிறுகிறுப்பு ஆகிய குறி குணங்கள் உண்டாம்.

மேலும், குளிர்ச்சி தரும் பொருள்களில் விருப்பம், புளியேப் பம், வாய்நாற்றம், உடல் வெளுத்து மஞ்சளித்தல், வாய்ப்புண், மஞ்சள் நிறக் கழிச்சல் முதலிய குறி குணங்களையும் காட்டும்.

3. ஐய வெளுப்பு நோய்.

இந்நோயில் தோல் வெளுத்தல், நரம்புகள் புடைத்தல், நா உப்புக் கரித்தல், மயிர் சிலிர்த்தல், வாந்தி, குரற்கம்மல், தும்மல், இருமல், கோழை கக்கல், மயக்கம், இடுப்பு நோதல், ஆண்மை குறைதல், சீறிச் சினங் கொள்ளல், சோர்வும் தளர்வும் உண்டாத லாகிய குறி குணங்களை காட்டும்.

4. முக்குற்ற வெளுப்பு நோய்.

இதில் இரைப்பு, பெருமுச்சு, இளைப்பு, உடல் வன்மை குறை தல், மார்பு துடித்தல், உடல் அழல் கொண்டு சிறு நீர் அடிக்கடி இழிதல், வெப்பமும் தியக்கமும் உண்டாதல், தும்மல், உடல் ஊதலாகிய குறி குணங்களைத் தோற்றுவிக்கும்.

### 5. நஞ்சு வெளுப்பு நோய்.

உடலுக்கு ஒவ்வாத பொருள்களை யுண்பதால் பிறந்த நஞ்சின் அளவாக உடல் வெளுக்கும், நீர் வேட்கை, சுவை யின்மை, வாந்தி, விக்கல், இருமல், பெருமூச்சு, உடல் வீங்கல் ஆகிய குறி குணங்களோடு நரம்புகள் புடைத்து உடல் சூடாகத் தோன்றும்

### 6. மண்ணுண் வெளுப்பு நோய்.

இஃது சிறு குழந்தைகளும், சிறு வயதினரும், கருவுற்ற பெண் களும் மண், சாம்பல், செங்கல், திருநீரு, கர்ப்பூரம் இவற்றின் மீது தனித்த இச்சைகொண்டு, அளவு கடந்து உண்பதால் காணும் நோயாகும், உட்கொண்ட பொருள்களுக்கேற்ப வயிறு ஊதல், செரியாமை, வாந்தி, கழிச்சல், சுரம் வயிற்றுப் புழு முதலிய நோய்கள் கண்டு, உடல் மெலிந்து, குருதி வற்றி, வெளுத்து வீங்கி, மார்பு துடித்தல் முதலிய குறிகுணங்களையும் காட்டும்.

### தீரும் தீராதவை.

நஞ்சு வெளுப்பு நோய் தீருவது அரிது, மற்ற ஐந்து வெளுப்பு நோய்களும் தக்க மருந்துகளால் எளிதில் குணமாகுமெனினும், அந் நோய்களில் வாந்தி, கழிச்சல், வீக்கம் (ஊதல் நோய்) நீர் வேட்கை, விக்கல், மதுமேகம், இளைப்பிருமல் ஆகிய குறி குணங்களிலேதேனுமொன்று அல்லது பல அந் நோய்களில் துணை நோயாகித் துன்பங்களை அதிகமாக விளைவிக்கின் நோயினன் பிழைப்பது அரிது எனவும் நூல்கள் கூறுகின்றன.

### வெளுப்பு நோயின் பொதுக்குறி குணங்கள்.

இந் நோயில் உடல் வன்மை நாளுக்கு நாள் குறைந்து, நடக்க இயலாமை, தலை நோதல், மார்பு துடித்தல், கண் இருளல், தலை சுற்றல், மயக்கம், மூச்சுத் தடுமாறல், பசித்தீகெடல், உணவு வேண்டாமை, வாந்தியாதலாகிய குறிகுணங்களுண்டாகும்.

இன்னும் உடல் வெளுத்துத் தோல் சுருங்கல், உடல் மெலிந்து பள பளத்து வெளுப்பாதல், நகக்கண்கள் தடித்து வெளுத்திருத் தல், நா வெடித்துப் புண்ணாதல், நா சிவந்திருத்தல், நா வழு வழுத்தல், சில வேளை நா வெளுத்தும் காணல், தொண்டை கம்ம லாகிய குறி குணங்களும் காணும்.

இந் நோய் பெண்களுக்குண்டாயின் சூதகத்தில் வெளியாகும் குருதி தன் நிறம், எடை, நாள், அளவு முதலியன குறைந்து வெளி யாகும். சில வேளை மாத முழுக்குண்டாகாமலுமிருக்கக்கூடும்.

குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்குமுண்டாகும் வயிற்றுப் புழு நோய், குருதி அழல் நோய் இவற்றிற்குத் துணை நோயாக வும் வெளுப்பு நோய் தோன்றும்.

அழல் உடலோர்க்கு (பித்த தேகிக்கு) இந் நோய் பிறக்குமாயின் முதலில் பசித்தீ கெடும். செரியாமையுண்டாகும். உடல் எரிவு, சுரம் போல வெப்பு தோன்றல், நா வெளுத்துச் சிவத்தல் அல்லது நா வழுவழுத்தல், உணவை மெல்லவும் விழுங்கவும் முடியாமை, பித்த நீர் கலந்து வாந்தியாதல், வாய் கைத்தல், வயிற்று நோய், வயிறு கடுத்து நுரை நுரையாகக் கழிதல், ஆகிய குறிகுணங்களும் உண்டாகும்.

அன்றியும், நாள்படின் உடலின் குருதியின் அளவு, எடை நிறம் யாவும் குறைந்து உடல் மஞ்சள் பூத்தது போலாகி மஞ்சள் காமாலை நோயினைப் போல் காணும்.

நோய் பெருகிய நிலையில் (முதிரின்) ஆயாசம், இளைப்பு, பெரு மூச்சு, கழிச்சல், உணவெறுப்பு, வன்மை இழத்தல், உடல் ஊதல் என்னும் கொடிய குறி குணங்களும் தொடரும் என அறியவும்.

(சி.ம.)

### முக்குற்ற வேறுபாடுகள்.

ஆரம்பத்தில் கூறியபடி உடல் வன்மை குறைந்து பசித்தீ கேடடைந்து உண்ட உணவு சரியாகச் செரியாத காரணத்தால், இரசக் குருதிகள் ஊட்டம் பெறா, அவைகளுடன் "அனல் பித்தமும்" கெட்டு, தோலுக்கு நிறத்தைக் கொடுக்கும் அழல் (ரஞ்சித பித்தமும்) மெலிந்து நிறத்திலும் எடையிலும் குறைந்து தீக் குற்றத்தைப் பெருக்கும். அதன் காரணமாக மற்ற இரு குற்றங்களும் தன்னிலை மிகுந்து பரவுகாலின் (வியானன்) வன்மையை கெடுத்து வெளுப்பு நோயை உண்டாக்கும்.

நோயின் வன்மை பெருகப் பெருக ஐயமும் பெருகி வீக்கம் (ஊதல் நோய்) முதலியவற்றைத் துணை நோயாக்கிக் கொள்ளும். பாண்டுநோய் முற்றியிருக்கும்போது பித்த வஸ்துக்களை அதிகமாகப் புசித்தாலும், பெண்கள் சங்கமம் செய்தாலும் காமாலை ரோகம் துணைக் கொள்ளுமென யூகிமுனி கூறியுள்ளார். இதனை—

"விளம்பவே பாண்டு முற்றிருக்கும்போது,
மீறியே பித்தவஸ்துதனைப் புசித்தால்,
புளம்பவே மங்கையுடன் புணர்ச்சி செய்தால்,
பூண்டிடுமே காமாலை யென்னும் ரோகம்."
* * * *"

(யூகிமுனி).

என்பதினாலறிக.

நாடி நடை.

1 ''தானமுள்ள சேத்துமந்தானிளகில் வெப்பு,
சயமிளையிருமல் மந்தாரகாசம்,
ஈனமுறுஞ்சன்னி விடதோடம் விக்கல்
இருத்ரோகங் கரப்பான் விரண தோடம்,
மானனையிர் சூலைதிரள்வியாதி வீக்கம்,
வருஞ்சத்தி சுவாசம் நெஞ்சடைப்பு தூக்கம்,
ஏனமுறுங் காமாலை, பாண்டு சோகை.
எழுசுரங்கள் பலதிற்குமிட முண்டாலே.''

2 ''கண்டாயோ சிலேற்பனத்தில் வாதநாடி,
கலந்திடுகில் வயிறு பொருமல் கனத்த வீக்கம்,
உண்டாலோஓங்காரசத்தி விக்கல்
உறுதிரட்சை வாய்வு வலிசன்னி தோடம்,
விண்டாலே இளைப்பிருமல் சோகை பாண்டு
விடபாகம் விடசூலை பக்கவாதம்,
திண்டாடு நாசிகாபிடங்கக்கல்
சிரநோய்கள் பலவும் வந்து சிக்குந்தானே.''

3 ''சிறப்பான பித்தத்தில் வாதநாடி சேரிலுந்தாது நட்ட முதிரபீனம்.
உறைப்பாகச் செரியாமை குன்மஞ்சூலை,
உற்றசுரங்கிராணி வயிற்றிரைச்சல் மந்தம்,
அறைப்பான ஓங்காரபுற நீர்க் கோவை,
ஆயாசங்கிரக்கமொடு மயக்கமூர்ச்சை,
முறைக்காய்வு விடவீக்கம் மூலவாய்வு,
முரடான நோய்பலவும் முடுகும் பண்பே.''

4 ''இடமான சேத்துமத்தில் பித்தநாடி
எழுந்தணுகில் விடமுடனே வீக்க முண்டாம்,
திடமான குளிர்க்காய்ச்சல் மஞ்சள்நோவுந்,
தேகத்திலுளைச்சலீளை யிருமல் வாந்தி,
விடமான நெஞ்சடைப்பு சுவாசம் விக்கல்,
வெகு சுரமும் நாவரட்சி பாண்டு ரோகம்
அடமான குவளை ரத்தம் அதிசாரந்தான்,
அணுகி வெகுபல நோய்க்குத் தடங்கண்டாயே.''

4 "இருக்குமந் தவாதத்தில் சீதஞ்சேர்ந்தால்,
இளைப்பிருமல் விடசன்னி தோடம் வீச்சு,
மருக்கின்ற குளிர்க்காய்ச்சல் விரண தோடம்,
வாந்தியொடு உளைவு மயக்கஞ் சோர்வு,
ஓருக்கின்ற மலபந்தம் பொருமல் வீக்கம்,
உள்வீச்சு சூலையொடு பாண்டு ரோகம்,
தருக்கின்றதநுர்வாதம் பக்கவாதம்
சார்ந்து வெகுபிணி பலவுந் தழைக்கும்பாரே."

(சதகநாடி)

என்றதால், சேத்துமநாடி (ஐயம்) இளகி நின்றாலும், சேத்துமவாத தொந்தம் (ஐயவளி) ஏற்படினும்; பித்தவாத தொந்தம் (அழல்வளி) ஏற்படினும், சேத்தும பித்த தொந்தம் (ஐயழல்) ஏற்படினும், வாத மிகுதியுடன் சீதளம் சேர்ந்தாலும் பாண்டு ரோகம் உற்பத்தியைக் குறிக்குமென்றறிக.

பாண்டுரோக விவரங்களைப் பற்றி யூகி சிந்தாமணியிலிருந்து எடுத்தெழுதிய மேற்கோள்கள்:

### பாண்டு நோய் எண்

" கூறவே பாண்டு விடப் பெயரைக் கேளாய்
குறிப்பாக வைந்து விதமாகும் பாரு
வாறவே வாதமாம் பாண்டுவோடு,
மார்க்கமாம் பித்தத்தின் பாண்டு வாகும்,
தேறவே சிலேட்டுமமாம் பாண்டு தானாம்,
திரி தோடப்பாண்டோடு விடப் பாண்டாகும்,
ஆறவே பாண்டுவிட வாண்மையெல்லாம்
ஆராய்ந்து சொல்லவேயறிந்து கொள்ளே."

என்பதினால் முன்சொன்ன ஐந்து வகை வெளுப்பு நோய்ப் பிரிவுகள் தெரியலாயிற்று.

### பாண்டுநோய் வரும் வழி

1 " அறிந்துமே உற்பத்தி சொல்லக் கேளாய்,
அதிசாரமலமிளகி யெந்நேரந்தான்,
பிறிந்துமே புளியுப்பு பெருத்தலாலும்,
பெத்தமாமக்கினி யிருத்தலாலும்,

மிறிந்து தாம் பூலமிக அருந்தலாலும்,
மீறியேமதுக் களைத்தான்புசித் தலாலும்,
பறிந்துமே பகல் நித்திரை செய்தலாலும்,
பாண்டுவந்து பாரிலுள்ளோர் படும் பாடாமே.''

2 '' பாடான பஞ்சு தனைத்திருடினோர்க்கும்,
பாங்கான சிவதுகிலைப் பற்றினோர்க்கும்,
மாடான பசுவதைப் பட்டினியதாக
வைக்கின்றோர் மறைவழியே நடந்திடாதார்,
காடான வாரணியந்தனிற்வழி பறித்துக்
கடுவதைகள் செய்கின்றோர்கண் காணாத,
கோடான பழி சொல்லிக் குடிகெடுக்குங்
கொடும்பாவி பாண்டுவினாற் குதிகொள்வாரே.''

என்பதினால் பாண்டு நோய் உற்பத்திக்குக் காரணம் இன்தென்பது தெரிய வருகிறது.

### பாண்டு நோய்ப் பிரிவு ஒவ்வொன்றின் குறிகுணங்கள் பற்றிய மேற்கோள்கள்

#### 1. வாதபாண்டு ரோகம்.

'' கொள்ளவே வாதபாண்டு ரோகங்கேளாய்
குடல் புரட்டியடி வயிறுதான் வலிக்குந்
தள்ளவே தாகமொடு பசியுமில்லை
தழலான சரசரப் பாகத்தானும்
நள்ளவே நரம்பெல்லாங் கறுப்புமாகும்
நடுக்கலொடு கண் சிவப்பு மலபந்தந்தான்,
விள்ளவே தலைவலிக்கு மேனி வீங்கும்,
வெளுப்பாகும் வாதத்தின் பாண்டுதானே.''

#### 2. பித்த பாண்டு ரோகம்

'' வாமென்ற மேனியெல்லாமஞ்சளித்து
மகாவெளுப்பு உண்டாகி மந்தக் கண்ணாந்
தாமென்ற தாகமொடு மூர்ச்சையாகுந்
தனிவாயில் மிளகுபோற்றானுறைக்கும்,

நேமென்ற நெஞ்சு முள்தானுமுண்டாய்
நெருக்கியே மூச்சு முட்டதுவேயாகுங்
கோமென்ற கிறுகிறுத்துவாய் கைப்பாகுங்
கிளர்பித்த பாண்டுவெனக் கூறலாமே.''

3. சிலேட்டும பாண்டு ரோகம்

'' கூறியதோர் நரம்புதோல் மிக வெளுப்பு
கிளர் நாவு உப்புறைக்கும் மயிர் கூச்சாகும்,
வாறியதோர் வாந்தியாங் குரலுங்கம்மும்,
மகத்தானதும்மலுடன் கோழையாகும்,
ஈறியதோர் இருமலொடு மயக்கமுண்டாம் ;
இடுப்பசதியிந்திரிய நஷ்டமாகும்,
சீறியதோர் சோபமொடு தாபமாகுஞ்
சிலேட்டுமத் தின்பாண்டெனச் செப்பலாமே.''

4. திரிதோடப் பாண்டுரோகம்

'' செப்பவேயருசியொடு சோபதாகஞ்
செயலான சுவாச மொடு இளைப்புமாகும்,
வெப்பவே மேகனத்தில் சிறுநீர்தான் வீழும்
மிடுக்கான பெல ஈனமார் பிடித்தல்
துப்பவே சூட்டோடு தியக்கமாகுந்
தும்மலாயுடம் பெங்குழுதிக் காணுந்
திப்பவேதேகமெங்குமசதியாகும்
திரிதோடப் பாண்டென்னச் செப்பும் நூலே.''

5. விடப்பாண்டு

'' நூலாக நலத் தோடேயுடல் வெளுக்கும்,
நோய் நரம்பு சூடாகும் தாகமாகும்,
ஆலாகயருசியொடு சத்தி விக்கல்,
அதட்டியே இருமலுடனதி சுவாசம்,
வாலாக வயிற்றிரைச் சல்திசார தோஷம
மாசுரமுமுண்டாதல் மார்கனத்தல்
வேலாகமேனியெங்கு மிகவே ஊதல்,
விடபாண்டு அசாத்தியமென்றே விளம்புலாகு.''

என்பதினால் ஐவகைப் பாண்டு நோய்ப் பிரிவுகளின் குறி குணங்கள் தெரியலாயிற்று.

மேலும் கூறுவதாவது :—

" விளம்பவே பாண்டுமுற்றி இருக்கும்போது
மீறியே பித்தவஸ்து தனைப் புசித்தால்,
புளம்பவே மங்கையுடன் புணர்ச்சி செய்தால்,
பூண்டிடுமேகாமாலை யென்னும் ரோகம்,
* * * *

என்றதால் பாண்டுநோய் முற்றிக் காமாலை நோயைப் பிறப்பிக்கு மென்பதற்குக் காரணமும் கூறியுள்ளார்.

(யூகி சிந்தாமணி)

## 23. ஊதல் நோய்

வேறு பெயர்கள் : சோகை, சோபை; தொம்மை நோய் ; அதைப்பு நோய் ; சோவை ; சுரப்பு நோய் என்பனவாம்.

இயல்.—இந்நோயில் உடற்குருதி கெட்டு உடல் வெளுத்து ; கைகால்கள் முகம்வயிறு முதலியன இயற்கைக்கு மாறாக ஊதிக் கொண்டே வருதலால், இதனை "ஊதல் நோயென்றும்" ; சோகம் உண்டாவதால் "சோகை" அல்லது "சோவை" என்றும் கூறப்படும். சிலர் வீக்கம் உண்டாவதால் "சோபை" என அழைப்பர் எனவும் கூறியிருக்கிறார்கள். எனினும், சோகை, சோவை, சோபை இம்மூன்று சொற்களும் ஒரே கருத்தை உடையவைகளே. "அதைப்பு" ; "சுரப்பு" என்னும் சொற்கள் "வீக்கம்" உள்ளதையே குறிக்கும்.

சுருங்கக்கூறில், உடலில் இரத்தம் குறைந்து நீர் கோர்த்து ஊதுதல் என்பதேயாகும்.

அடிபட்டு வீங்குவதையும், கட்டி முதலியவற்றால் வீங்குவதை யும், சில நூலோர் "சோபை" எனக் கூறுவர்.

நோய்வரும் வழி.

முன்கூறிய வெளுப்பு நோயின் தொடர்பாலும் ; நஞ்சுப் பொருள்களை உட்கொளுவதாலும் ; உணவுகளின் வேறுபாட்டாலும் ; குளிர்காற்றில் தாக்குண்டதாலும் ; குருதியானது கேடடைந்து முக்குற்றங்களைத் தூண்டிப் பரவுகால் (வியானன்) தன் தொழிலில் பிறழ்ந்து ஊதல் நோயைப் பிறப்பிக்கு மெனச் சித்த மருத்துவம் கூறுகின்றது.

அன்றியும்; யூகி சிந்தாமணியில் கூறியுள்ள இந்நோய் உற்பத்திக்குக் காரணத்தைக் கவனிக்குமிடத்து:

" பாங்கான சன்னிபாதச் சுரங்கள்
பகர்சித்தப் பிரமை சன்னி பரவலாலும்,
தேங்கான பன்னாகந்தான் றீண்டலாலும்,
சில்விஷங்கள் தேகத்தி லூறலாலும்,
ஆங்கான சிறையிருத்தலடி படுதலாலும்,
அநேகவழி நடக்கைமலையிருக்கையாலுந்
தாங்கான சலக்கரைகள் தனிலிருத்தல்,
சாம்பல் மண் மா தவிடுதன்னாற் சோபையாமே."

என்றதால், சன்னி பாதசுரங்களாலும், சிறப்பாகச் சித்தப் பிரமைச் சன்னியாலும், பாம்பு கடியாலும், சில்விடங்களாலுண்டாம் ஊறலாலும், சிறையிருத்தல், மலைவாசம், நீர்நிலைகளின் தரைகளில் வசித்தல்; சாம்பல், மண், மா, தவிடு போன்ற பொருள்களை மிகுதியும் உண்ணல். ஆகிய இக்காரணங்களாலும் சோபை நோயுண்டாகும் என யூகிமுனி கூறியுள்ளார்.

### முற்குறி குணங்கள்.

இந்நோய் ஆரம்பத்தில் உடல் வெளுத்து, வன்மையற்று, சிறிதளவு நடக்கினும் கணுக்காலில் வீக்கமுண்டாதல்; ஆயாசம்; இளைப்பு; தலை சுற்றல், மயக்கம் முதலியன உண்டாதல்; பின்பு நாளுக்கு நாள் வீக்கம் மிகுந்து கால், முகம், வயிறு இவைகளிலேனும், அல்லது கால் முதல் தலை வரையேனும், அல்லது முகத்தில் ஆரம்பித்துக் கீழ் நோக்கி வீங்குதலேனும் ஆகிய இக் குறிகுணங்களை ஊதல் நோயில் காணலாம்.

### நோய் எண்.

" தானான சோபையது நாலுவித மாகுஞ்
சாற்றிடவே வாதத்தின் சோபை யோடு
தேனான பித்தத்தின் சோபையாகும்
சிலேட்டுமத்தின் சோபைதிரிதோட சோபை
நானான நாலு விதச் சோபை தன்னில்
நாட்டமெல்லாஞ் சொல்லிடநீ நயந்து கேளாய்
பானான உமைதனக்குச் சிவன் றான்சொன்ன
பாங்கதனைப் பகருவன்யான் பரிந்துகேளே."

(யூகி சிந்தாமணி.

என்பதற்கிணங்க, ஊதல் நோயை முக்குற்றயளவாக யூகி முனி வகுத்த பிரகாரம் நாலு வகைப்படும்; அவை :—

1. வளி ஊதல் நோய் (வாத சோபை).

2. அழல் ஊதல் நோய் (பித்த சோபை).

3. ஐய ஊதல் நோய் (கப சோபை அல்லது சிலேட்டும சோபை).

4. முக்குற்ற ஊதல் நோய் (திரிதோட சோபை)— என்பவையாம்.

வேறு சில நூல்களில் சோபை நோயை, தனித்தனிக் குற்ற யளவாக மூன்றும்; இருகுற்றக் கலப்பால் மூன்றும்; முக்குற்றத் தாலுண்டாவது ஒன்றும்; நஞ்சால் வருவது ஒன்றும்; அடிபடுதல், கட்டிகள் இவற்றால் வீங்குவது ஒன்றும், ஆக மொத்தப் ஒன்பது வகை ஊதல் நோய் எனக் கூறியுள்ளார்.

ஆயினும் இங்கே நாம் தெரிந்துகொள்ள வேண்டிய ஊதல் நோய் பிரிவுகள் முதலில் கூறிய யூகிமுனியின் பிரிவாகிய நான்கு வகையேயாம். இதனையே சித்த மருத்துவத்திலும் வரைந்துள்ளார்.

ஒவ்வொரு பிரிவிலும் ஊதல் நோயின் தனித்தனிக் குறி குணங்கள் :

1. வளி ஊதல் நோய்.

" சோபைதான் வருமுன்னே உடல்தான் வற்றும்,
சகநரம்புதான் வெளுக்கும் அசீரணமாகுந்,
தூபைதான் பெலச் சயமாய் நடுக்கலாகுஞ்,
சுரமொடுமிக வெளுப்பு மிளைப்புமாகும்,
மாபைதான் மயிர்முனைகள் சிவந்துபோகு
மகத்தான நித்திரையு மந்தமாகும்,
சோபைதான் அங்குலிலே சடமெங்குந்தான்
கொடுவலியாம் வாதத்தின் சோபையாமே."

(யூகிமுனி.)

என்றதால், இந்நோய் வருமுன்னே உடல் வற்றி வெளுத் திருக்கும்; உடல் வன்மை குறையும்; செரியாமையுண்டாம்; சிறிது நடக்கினும் இளைப்புண்டாகும்; மயிர் முனைகள் சிவந் திருக்கும்; தூக்கம் கெடும்; உடல் வலி ஆகிய இக்குறி குணங் களைக் காட்டி உடல் நாளுக்கு நாள் ஊதிக்கொண்டே வரும் என) அறிக.

### 2. அழல் ஊதல் நோய்.

'' வலியாக மயிர் மஞ்சளித்திருக்கு
மகத்தான சத்தியுமே மிக விரும்பும்,
தலியாகத் தாபமொடு விளைப்பு காணுஞ்
சரீரந்தான் மிகச் சிவப்பாந்தலைவலிக்கும்,
புலியாக யிருந்தது போய் பெல வீனத்தால்,
புகலரிய மயக்கமொடு வியர்வையாகும்,
நலியாகக் கண்புருவ மூக்குத்தண்டு,
நலங்குமே பித்தத்தின் சோபைதானே.''

(யூகிமுனி.)

என்றதால், இந்நோயில் உடல், கண், புருவம், மூக்குத் தண்டு, மயிர், இவைகள் மஞ்சள் நிறமாகும். சில சமயம் உடல் சிவக்கும். வாந்தி, நீர் வேட்கை, இளைப்பு, சோர்வு, தலைவலி என்னும் குறி குணங்களைக் காட்டி, நாளுக்குநாள் உடல் வன்மை குறைந்து சத்தற்று, நடக்க முடியாமற் போகும். மயக்கம், வியர்த்தல், உடல் குளிர்தல், என்னும் குறி குணங்களையும் காட்டும்.

### 3. ஐய ஊதல் நோய்.

'' நலங்குமே வடிவெல்லாந் தினவுண்டாகும்
நல்ல மயிர்க்கால் வெளுக்கு முடல் வெளுக்குந்
திலங்குமே தேகமெங்குஞ் சுரசுரப்புத்
திடுக்கிடுமே மிகக்குளிரும் நித்திரையில்லை
விலங்குமே விழியனலாங் குரல் நெறிவதாகும்,
விகூசியாய் பேதி தலை கிறுகிறுப்பு,
சிலங்குமே ரத்தங்கள் சுரந்து வீங்கும்,
சிலேட்டுமத்தின் சோபையென்றே செப்பலாமே.''

(யூகிமுனி.)

என்றதால், உடலின் தோல் தினவெடுத்து, மயிர்க் கால்கள் தோறும் வெளுத்துப் பின்பு உடலும் வெளுக்கும்; குளிர் சுரம் அடிக்கடி வரும்; தூக்கமின்மை, கண் எரிச்சல், குரற் கம்மல்; ஊழிநோய்ப் போன்று பேதியாதல்; தலை சுற்றல்; உடல் முழுமையும் ரத்தம் சுரந்து வீங்கல்; மனம் அடிக்கடி திடுக்கிடல் முதலிய குறிகுணங்களைக் காட்டி உடல் நாளுக்கு நாள் வீங்கிக் கொண்டே போகும் என்பதேயாகும்.

### 4. முக்குற்ற ஊதல் நோய்.

" செப்பவே மெல்லியர் மேல் மிகுந்த கோபம்
சடம் வீக்கமுபாதியுமாய்ச் சுரமுண்டாகும்.
அப்பவேயதிசாரம் வயிற்கடுப்பு
ஆசனத்தில் மிகக் கடுப்பு அசனஞ்செல்லா
நப்பவேகால் கையுந் துவண்டுகாணும்
நடக்கவே பெருமூச்சாய்க் கிறுகிறுக்கும்,
திப்பவே உமிழ்நீர் தான் மிகவேயூறும்
திரிதோட சோபையசாத்தியமாய்ச் சொல்லே."

(யூகிமுனி.)

என்றதால், இந் நோயில் அடிக்கடி பெண்கள் மேல் சினங் கொள்ளல் ; உடல் வீங்குதல் ; சுரங்காய்தல் ; வயிறு கழிதல் ; வயிற்றுக்கடுப்பு ; கீழ்வாய்க் கடுப்பு ; உணவு வேண்டாமை முதலிய குறி குணங்களையும் ; காலுங்கையுந் துவளல் ; நடந்தால் பெருமூச்சு வாங்கல் ; தலை சுழலல் ; வாயில் நீர் சுரத்தலாகிய குறிகுணங்களைப் பெறும்.

### தீரும் தீராதவை.

முக்குற்ற ஊதல் நோய் எளிதில் தீராவாம். மற்ற ஊதல் நோய்கள் தக்க மருந்துகளால் தீருமெனினும் ; எவ்வகை ஊதல் நோயாகயிருப்பினும் கீழ்க்காணும் குறி குணங்களை ஆராய்ந்து, அப்பால் தீரும் தீரா வென்பதைத் தீர்மானித்தல் வேண்டும்:—

1. பொதுவாக ஊதல் நோயானது வீங்கி, வடிந்து, மீண்டும் பன்முறை வீங்குமாயின் தீராவாம்.

2. உடல் மிக வீங்கித் தோல் வெடித்துத் தானாகவே அதிலிருந்து நீர்கசியுமாயினும் தீராவாம்.

3. பெரிதும் வீங்கியுள்ள உடல் திடீரென நீர் வற்றிச் சுருங்கினும் தீராவென அறிக

4. பெருமூச்சு வாங்கல் ; மூக்கந்தண்டு சில்லிடல் ; மிகு வாந்தி ; விக்கல் ; கழிச்சல் ; வயிற்றுப் பொருமல் ; தொண்டையில் கோழை கட்டல் ; முதுகில் வீங்கல் என்னும் குறி குணங்கள் தோன்றுமாயினும் நோய் நீங்காவாம்.

5. இவையன்றியும் ; வீக்கம் காலில் துவங்கி மேல் நோக்கி முகம் வரை பரவுமாயின் அதனை "ஏறு வீக்கம்" எனவும் : முகத்தில் வீக்கம் ஆரம்பித்துக் கீழ் நோக்கிக் கால் வரை பரவுமாயின் அதனை " இறங்கு வீக்கம் " எனவும் கூறுவார். இவற்றுள் முதல் வகையது (i.e. ஏறு வீக்கம்) தீராதெனவும் கூறுவாருமுளர்.

எந்தெந்த நோய்களில் வீக்கங் காணில் அசாத்திய மெனலாம்?

(வெண்பா.)

1. " சன்னி விடசோபைசார்குன்மம் நீரிழிவு
துன்னுங்கிராணி சுரம் பேதி—பண்ணு பிர
மேகம் க்ஷய மிவற்றுள் மூச்சு விக்கல் மேல்வீக்கம்
ஆகிலுயிர்போமறி."

(வேறு).

2. " சன்னி அதிசாரஞ் சாருங் கிராணி குன்மம்
உன்னி சயகாச முட்காய்ச்சல்—துன்னிபே
போக்கும் விடசோபை பொல்லாத நீரிழிவில்
வீக்கங்கூடா தென்றேவிள்."

என்பதினால், சன்னி, விடசோபை ; குன்மம் ; கிராணி ; அதிசாரம் ; சுரம் ; பேதி; பிரமேகம்; க்ஷயம் ஆகிய இந் நோய்களில் வீக்கம் கூடாவாம் ; அன்றியும் மேல் மூச்சு, விக்கல், வீக்கம் இவை சேரின் அந் நோயினன் பிழைப்பது அரிது.

ஊதல் நோயின் பொதுக் குறிகுணங்கள்.

" சோகையினிலக்கணங்கேள்
சோர்வு கைகால் கட்குண்டாம்,
சோறு வேண்டாமை தூக்கம்
சோளி போலண்டம் வீங்கும்,
சோதினியெனக் காதாகும்
சோங்கடர் காகமாங்கண்,
சோம்பலுக்குறையுளாமெய்

சோணிதமெங்கே போமோ,
சோத்திரங்க்வியை யொப்பாஞ்
சோலி செய்யிந்த நோய்க்கு
சோகையென்றோரு பேராம் ".

(தேரன் கரிசல்.)

என்பதிற்கிணங்க, ஊதல் நோயில் சோற்றில் வெறுப்பு; உடல் வன்மை குறைதல்; கைகால்கள் சோர்வடைதல்; உடல் முழுமையும் வீக்கம்; விரையானது பெரிய பையைப் போல் வீங்குதல்; காது குரங்கின் காது போல் மெலிந்து காது கேளாமை; கண் காகத்தின் கண்ணைப் போல் சாய்ந்து நோக்குதல்; சோம்பல்; இருந்தயிடத்தை விட்டு அசைய முடியாமை; படுக்கையில் கிடத்தல்; உடல் வெளுத்தல்; பெருமூச்சு விடல்; ஆயாசம்; இளைப்பு; இருமல்; மயக்கம்; கண்கள் இருளல் என்னும் குறி குணங்களைக் காட்டும்; நீரும் மலமும் கட்டுப்படும்; சிலவேளை பேதி காணும்; சிறுநீர் சுரப்பது மிகவும் சுருக்கமாக விருக்கும்.

(சி. ம.)

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

" கபமான நீரதுவின்றிச் சோபை வாராது" என்னும்தேரன் மொழிக் கிணங்க இந்நோய் குருதியின் வன்மை குறைந்து, முறிந்து அல்லது நீர்த்து உடலில் ஐயமிகுதியை விளைவித்து நீரைப் பெருக்கி (குருதியின் நீர்ப்பாகத்தை அதிகமாக்கி) உடல் முழுமையும் நீர்மயமாக நீர் கோர்த்து ஊதச் செய்யும் எனவும்;

மிகுந்த குற்றத்தினளவாய்க் கீழ் நோக்குங்கால் தன் வன்மை இழந்து சிறுநீரையும், எருவையும் இயற்கைப் பிரகாரம் கழிக்காதபடி செய்து இவ்விரண்டையும் தடைப்படுத்தும் எனவும்; பரவுகால் (வியானன்) குருதியை உடலில் சரியாகப் பரவச் செய்யாவண்ணம் தன் வன்மை இழந்து நிற்கும் எனவும் சித்த மருத்துவம் கூறுகின்றது.

## நாடி நடை.

1. " கபமல்லாது சோபை வாராது " அல்லது
" கபமான நீரதுவின்றிச் சோபை வாராது."

(தேரன்)

2. " உறுதியுள்ள பித்தமது தோன்றில் வெப்பு,
உஷ்ணவாயு அத்திசுரமதி சாரங்கள்
மறதியுடன் கிறுகிறுப்பு பைத்திய ரோகம்,
வளர்சோகை யழலெரிவு காந்தல் கைப்பு,

இருதயத்திற் கலக்கமது மறப்புதாகம்,
எழுங்கனவு மயக்க மூர்ச்சை,
சிறிது பெரும்பாடு ரத்தம் பிரமேகங்கள்,
சேர்ந்து வெகு பிணிபலவுஞ் சிறக்குந்தானே."

3. "பண்பான பித்தத்தில் சேர்த்துமங் கூடிப்
பரிசித்தாலத்தி சுரமிளைப்பு ஈளை
கண் காது நயனமலம் நீருமஞ்சள்
கனவயிறு பொருமல் மஞ்சள் நோய் கண்ணோவு,
உண்போது மறுத்தல் ரத்தவிப்புருதி தானு
மூளைமாந்தை பீனிசமும் ரத்த வீக்கம்,
நண்பான காமாலை சோகை வெப்பு
நணு கிவந்த பல பிணியுங்காணுந்தானே."

4. "தானமுள்ள சேத்துமந்தானிளகின் வெப்பு,
சயமீளையிருமல் மந்தாரகாசம்,
ஈனமுறுஞ்சன்னி விடதோடம் விக்கல்,
இருதரோகங்கரப்பான் விரணதோடம்,
மானனையீர்சூலை திரள் வியாதி வீக்கம்,
வருஞ்சத்தி சுவாசம் நெஞ்சடைப்பு தூக்கம்,
ஏனமுறுங்காமாலை பாண்டு சோகை
எழு சுரங்கள் பல துக்கம் விட முண்டாமே

5. "கண்டாயோ சிலேற்பனத்தில் வாதநாடி
கலந்திடுகில் வயிறு பொருமல் கனத்த வீக்கம்
உண்டாலே ஓங்கார சத்திவிக்கல்
உறுதிரட்சி வாய்வு வலி சன்னி தோடம்,
விண்டாலே இளைப்பிருமல் சோகை
விடபாகம் விடசூலை பக்கவாதம்,
திண்டாடு நாசிகா பீடங்கக்கல்
சிரநோய்கள் பலவும் வந்து சிக்குந்தானோ."

(சதகநாடி.)

என்பதினால்; கபம் நாடி மீறி நடந்தாலும், அழல் நாடி மீறி நடந்தாலும், அழலையம் கலப்புற்ற காலத்தும்; ஐயநாடி இளகி நின்றாலும், ஐயவளி இரண்டும் கலப்புற்று நின்றாலும் "ஊதல் நோய்" உற்பத்தியைக் காண்பிக்குமென அறிகிறோம்.

### சிறுநீர்.

ஊதல் நோயில் சிறுநீர் சுருங்கிச் சிவந்து இழியும். நீர்ப்பையில் சிறு நீர் கூசிவது மிகவும் சுருக்கமாகும்.

### மலம் (எரு).

இந்நோயில் மலம் கட்டுப்படும்; சில வேளை மிகுதியாகவும் கழியும்.

(சி.ம.)

## 24. மஞ்சள் நோய்

வேறு பெயர்கள் : காமாலை, மஞ்சட் காமாலை; பித்து நோய்; காமலா; காமிலா என்பவையாம்.

இயல் : சிறுநீர், கண், நா, உடல் யாவும் மஞ்சள் நிறமாக யிருத்தல் என்பதான நோயாம். ''காமாலை'' என்னும் பத ''காமம் அல்லை'' எனப் பொருள்படும். அதாவது ''எதிலும் இச்சையில்லாமை'' யைக் குறிக்கும் என்பதாம். பித்துவை இயற்கைக்கு மாறாக வெளித் தோற்றமாய்க் குருதியுடன் கலந் திருக்கும் நோயாதலால் ''பித்து நோய்'' எனப் பெயராயிற்று எனலாம். உடல் ஆதியந்தமும் மஞ்சள் நிறமாகத் தோன்றுவதால் ''மஞ்சள் நோய்'' என அழைத்தனர் போலும்.

### நோய் வரும் வழி.

தீக்குற்றத்தையும் ஐயத்தையும் பெருக்கக்கூடிய உணவாதி செயல்களாலும், அளவுக்கு மிஞ்சிய உணவையும் உட்கொள்ளு வதாலும், அசீரணமுண்டாய், கேடடைந்த தீ ஐயக்குற்றங்களி னளவாக வாயுக்களும், குருதியும் கெட்டு வலப்பாட்டீரலைத் தாக்கி தாபிதமுண்டாய், பித்து நீரை இயற்கை வழியில் செல்ல வொட்டாமற் தடுத்து, குருதியுடன் கலக்கச் செய்வதால், உடலு றுப்புகளாகிய சதை, தோல், கண், நகக்கண், நாக்கு, உண்ணாக்கு முதலியவற்றில் குருதியோடு பித்து நீர் சேர்ந்து தங்குவதால் இந்நோய் பிறக்குமென நூல்கள் கூறும். அன்றியும், பித்து நீருடன் கலப்புற்ற குருதி செல்லுமிடம் முழுமையும் மஞ்சள் நிறமடையுமென அறிந்து கொள்ளவும். நமக்கு வெளித் தோற்ற மாக மஞ்சள் நிறம் தெரியக்கூடிய இடங்கள் மேலே கூறிய இடங் களேயாகும். கண்மலம், காது மலம், மூக்குமலம், இவைகளுங் கூட மஞ்சள் நிறத்தையடையும். உடல் ஆதியந்தமும் மஞ்சள் நிறமேனி என அறியவும்.

**மஞ்சள் நோயின் முற்குறி குணங்கள்.**

" பருகவே உள்ளங்கா லுள்ளங் கைகள்,
பகர் முகங் கண்ணுடம்பு மிக வெளுப்ப காணும்
கருகவே கால்கைகளோய்ச்சலாகுங்
கனமாக நடுக்கியே இளைப்புண்டாக்குஞ்
சுருகவே மலந்தானும் வறண்டு கட்டுந்
தூயமுக மஞ்சளிட நிறமதாகும்,
வெருகவே வீக்கமாய்க் களைப்புண்டாகும்
மிகக் காது மந்தந் தலை கனப்புண்டாகும் "

(யூகி முனி

என்பதற்கிணங்க மஞ்சள் நோயில் உள்ளங்கால், கை, முகம், கண், உடம்பு இவைகள் வெளுத்தல், கைகால்கள் சோர்வடைதல்; உடல் நடுக்கல்; அடிக்கடி இளைப்பு தோன்றல்; எருகட்டுப் பட்டுத் தீய்ந்துவெளியாதல்; மிகத் தூக்கம்; தலை கனத்தல் முதலிய குறிகுணங்களைக் காட்டி உடல் முதலியன மஞ்சள் நிறமடையும், வீக்கம், களைப்பு, காது மந்தம் முதலியவைகளும் உண்டாகக்கூடுமென யூகிமுனி கூறலுற்றார்.

மேலும், இந்நோயில், வாய் நீரூரல், வாய் குமட்டல், நாகைத்தல், உணவில் வெறுப்பு, உண்ணினும் செரியாமை, உடல் வறட்சி, தோல் சுருங்கித் தவளைத் தோலை ஒத்தல் என்னும் குறிகளைக் காட்டி, கண், நகக்கண், உடலின் தோல், நா முதலியவைகளும், சிறுநீரும் மஞ்சளிக்குமெனச் சித்த மருத்துவம் கூறுகின்றது.

**நோய் எண்.**

1. " உரைக்கவே ஊதுகாமாலையோடு,
உயர்ந்த வறட்காமாலை வாதக் காமாலை,
புரைக்கவே பித்த காமாலையோடு,
பேரான சிலேட்டும காமாலையாகும்,
வரைக்கவே வாத சிலேட்டும காமாலை
வகையான பித்த சிலேட்டுமக் காமாலை,
துரைக்கவே தொந்த காமாலையோடு,
சூட்சமமா மஞ்சட் காமாலையாமே."

2. " மஞ்சளா மழகு காமாலையோடு
மருவுகின்ற செங்கமலக் காமாலையாகும் ;
குஞ்சலாங் கும்பகாமாலையோடு
கொடிய குன்மக் காமாலை பதின்மூன்றாகும்,
* * * * * "

(யூகிமுனி.)

என்றதால் மஞ்சள் நோயை பதிமூன்று பிரிவுகளாக வகுத்துள்ளார்கள். அவை :—

1. ஊதுமஞ்சள் நோய்
2. வறள் மஞ்சள் நோய்
3. வளிமஞ்சள் நோய்
4. அழல் மஞ்சள் நோய்
5. ஐய மஞ்சள் நோய்
6. வளி ஐயமஞ்சள் நோய்
7. அழலையம் மஞ்சள் நோய்
8. முக்குற்ற மஞ்சள் நோய்
9. பெருமஞ்சள் நோய்
10. அழகு மஞ்சள் நோய்
11. செங்கமல மஞ்சள் நோய்
12. கும்ப மஞ்சள் நோய்
13. குன்ம மஞ்சள் நோய்

என்பவைகளாம்.

## ஒவ்வொரு பிரிவு மஞ்சள் நோயின் குறிகுணங்கள்.

### 1. வளி மஞ்சள் நோய்.

" வாறானவயிறு தனைப் பொருமிவிக்கும்
மலந்தானுங்கழியாது உடம்பு வீங்கும்
புறானபுறங்காலு முகமதைக்கும்
புகழ்கருமமொன்றையுந் தான்செய்யவொட்டா

ஊறான வுடல்கடுக்கு மிகவிளைக்கும்
உறுக்காதுமிக வீங்குங்கண்பருக்கும்
பாறானபசியில்லாதுறக்கமாகும்
பண்பான வாத காமாலையாமே.''

(யூகி முனி.)

என்றதால், வளி மஞ்சள் நோயில் வயிறு பொருமல், விக்கல், மலக்கட்டு, புறங்காலும் முகமும் உப்பிக் காணல், சோம்பல், எத்தொழிலும் செய்ய முடியாமை, உடல் வலித்தல், இளைத்தல், கைகால்கள் வீக்கம், கண் ஒளி குறைந்து பருத்தல், பசியின்மை, தூக்கமின்மை ஆகிய இக்குறி குணங்களைக் காண்பிக்கும்.

(சி. ம.)

## 2. அழல் மஞ்சள் நோய்.

'' மாலையாயுடம்புலர்த்து முறக்கமில்லை
மகத்தான படுக்கைவிட்டு ஏதுஞ்செய்யா
சேலையாய்ச் சோறுமே செரியாமற்றான்
சடமெங்கும் வாயுவாய்த் தியக்கமாகும்
பாலையா மூச்சதுவு மிகவுண்டாகும்
பருக்கையாய் கழியுமே வயிறுதானும்
ஆலையாய் வயிற்றிரைச்சலதிகமாகும்
அசதியாம் பித்த காமாலையாமே.''

(யூகிமுனி)

என்றதால் உடலின் தோல் வறண்டு காணல்; தூக்கமின்மை, சோம்பிப் படுக்கையிலேயே கிடத்தல், செரியாமை, உடம்பு நோதல், பெருமூச்சு, வயிறு கழிதல், இரைதல், கைகால்கள் வன்மையின்மை ஆகிய குறிகுணங்கள் அழல் மஞ்சள் நோய்க் குரியவை.

(சி. ம.)

## 3. ஐய மஞ்சள் நோய்.

'' தாமென்று சடத்தையே யறிவழிக்குந்
தாக்கான இருமலே மிகவுண்டாகும்
வேமென்ற தலைமுகமும் வியர்வையாகு
மிடுக்கான நடைகுறையு மூச்சுமாகும்

பாமென்ற பாக்கருந்தில் மிகச் செருக்கும்
பண்பான விழிசிவக்கும் உடல் நடுக்கும்
நேமென்ற நெஞ்சுதான் மிகக் கனக்கும்
நெடிதுயிர்க்குஞ் சிலேட்டும காமாலையாமே.''

(யூகி முனி)

என்றதால், உடல் முழுமையும் மஞ்சள் நிறமடைதல், இடைவிடா இருமல், தலையும் முகமும் வியர்த்தல், நடக்க முடியாமை, பெருமூச்சுவாங்கல், கண் சிவத்தல், உடல் நடுங்கல், நெஞ்சு கனத்தல் ஆகிய இக்குறி குணங்கள் ஐயமஞ்சள் நோயில் காணலாம். அன்றியும் பாக்கு கொள்ளின் மயக்க முண்டாகுமாம்.

(சி. ம.)

4. வளி ஐய மஞ்சள் நோய்.

'' துயிர்க்கு மன்னந் தனைத்தானுஞ்சீரணமாக்கா
செரிக்க சுகமாக வொட்டாச் செருமலாகும்
முயிர்க்கு முகமூக்கு கண்மிகவேவோர்க்கும்
முடுகியே வயிறிரைந்து பொருமிக்கொள்ளுங்
கயர்க்கு நாக்குக் கண்ணுமிகவெளுக்குங்
கனமான நடையினில் மூச்செறியவைக்கும்
வியர்க்குமே முகமெல்லாம் வீக்கமாகு
மிடுக்கான இருமலுண்டாம் வாதசிலேட்டுமம்.''

(யூகி முனி)

என்றதால், உணவு செரியாமை, உடல், முகம், மூக்கு, கண் இவைகளில் வியர்த்தல், வயிறு இரைந்து பொருமல், நா கைத்தல், நாவும் கண்ணும் வெளுத்தல், பெருமூச்சு வாங்கல், முகம் வீங்கல், இருமலாகிய குறிகுணங்களை ஐயமஞ்சள் நோயில் காணலாம்.

(சி. ம.)

5. அழலைய மஞ்சள் நோய்.

'' உண்டாகிவாந்தி பண்ணுஞ் செருமலாகும்
ஓயாமற் றலைவலிக்கு மனமறுக்கும்
வண்டாகி வயிற்கழியுந்தாக முண்டா
மனமெல்லாம் புண்ணாகி மயக்கமாகுந்

துண்டாகிச் சாதமுப்பிச் சீரணியாது
தாய்முகமுங் காலொடு கைவெளுக்கும்
வெண்டாகி மேனியுமே யூதிக்காணு
மிகப்பித்த சிலேட்டும் காமாலையாமே.''

(யூகி முனி)

என்றதால், உடல் மஞ்சளித்து வாந்தியாதல்; தலைவலி; நெஞ்சு புண்பட்டுத் தளரல்; வயிறு வெண்மையாகக் கழிதல்; நீர்வேட்கை; செரியாமை; மயக்கம்; உடல் வீங்கல்; முகம், கை, கால்கள் வெளுத்தலாகிய குறிகுணங்களை அழலைய மஞ்சள் நோயில் காணலாம்.

(சி. ம.)

### 6. முக்குற்ற மஞ்சள் நோய்.

'' ஆமென்றவங்கமழன்றே யெரிக்கு
மசதிவரு மடிக்கடிக்கு இருமலுண்டாந்,
தாமென்ற தண்ணீர்தான் மிகத் தவிக்குஞ்
சடமெங்குங் கடுப்பெடுக்கும் புளித்தேப்பமாகும்,
போமென்ற நாவதுதான் மிகப்புளிக்கும்,
புரையான பசியெடுக்குங் குளிருண்டாகும்,
வேமென்ற அடிவயிறு வீங்கும் வேர்க்கும்,
மிக்கதொந்த காமாலை விவரந்தானே.''

(யூகி முனி)

என்றதால், முக்குற்ற மஞ்சள் நோயில் உடல் சத்தற்று அழன்று எரிச்சலை யுண்டாக்கும். உடம்பில் அசதி, இருமல், நீர்வேட்கை விக்கல், உடற்கடுப்பு, புளித் தேப்பம் ஆகியவையுண்டாகும். நா புளிக்கும். பொய்ப் பசியுண்டாம். குளிரு முண்டாகும். அடி வயிறு வீங்கும், வியர்க்கும் ஆகிய இக் குறிகுணங்களைக் காண லாம்.

அன்றியும் மேற் கூறிய வளி, அழல், ஐயம், இம்மூன்று மஞ்சள் நோய்களின் குறிகுணங்கள் இதில் கலந்து காணும்.

(சி. ம.)

### 7. ஊது மஞ்சள் நோய்.

'' கனப்பாகக் கண்ணுமுகங் கசிவுண்டாகுங்
கனவீக்க முடலெங்கு முளைவுண்டாகும்
அனப்பாக வழற்றலாய்த் தேக முணர்வில்லை
யதிகமாய்ச் சீதவெப்புதலை திருப்பும்

தினப்பாகத் தியக்கமொடு ெறுநீர் மஞ்சள்
தேகமெங்கும் வாடியே திமிருண்டாகும்,
உனப்பாக உள்ளுதலாயிருக்கும்
ஊது காமாலையென உரைக்கலாமே.''

(யூகி முனி)

என்றதால், ஊது மஞ்சள் நோயில் கண்களில் பீளைசாருதல்; முகத்தில் வியர்வை; உடல் வீங்கி உளைதல்; உடல் அழற்றல்; உடல் உணர்ச்சயறியாமை; வெப்பமிகுந்து ஐயத்தைப் பெருக்குதல்; மயக்கம், உடல் வாடல்; திமிருண்டாதல்; உடல் ஊதலாகிய குறி குணங்கள் தோன்றும். (சி.ம.)

## 8. வறல் மஞ்சள் நோய்.

'' உரைக்கவே கால்கைகள் மிகவும் வற்றும்
ஊணவே கால்தவறு மசதியாகும்
நிரைக்கவே நீலம்போல் மலமிறங்கும்
நீர்தானுஞ் சிவந்துமே நெருப்பாய்க்காணுந்
துரைக்கவே சூலைநோவென்னக் குத்துஞ்
சோறுருசியில்லாது மாலைக்கண்ணாம்,
வரைக்கவே வடிவெல்லாங் கறுகிக் காணும்
மயங்குவறட் காமாலை வகுத்தவாறே.''

(யூகி முனி)

என்றதால், வறல் மஞ்சள் நோயில் கால்கைகள் வற்றிப்போதல்; நடக்கும்போது தத்துதல்; கால் கைகள் ஓய்ச்சல்; எரு நீல நிறமாகக் கழிதல்; சிறுநீர் சிவந்து இழிதல்; நீர்க் குழை எரிதல்; நா சுவையறியாமை; மாலைக்கண்; உடல் கருத்தல்; மயக்கம் முதலிய குறிகுணங்களுண்டாம்.

(சி.ம.)

## 9. பெரு மஞ்சள் நோய் (மஞ்சட் காமாலை).

'' விவரமாய் மூத்திரந்தான் மஞ்சளாகும்
வீங்குமே சரீரமெங்கு மெலிவுண்டாகும்
பாாய முகங்கால்கண் கையுண்ணாக்கு
மொழிமஞ்சள் நிறமாகும் முகமினுக்கும்,

அபரமாயன்னத்தை யிறங்கொட்டாது
அழுகையாய் மனஞ்சலிக்கும மூச்சுண்டாகுந்
துபரமாய்த் தாது நட்டமலமும் பந்தஞ்
சார்ந்த மஞ்சட் காமாலைத் தன்பேராமே.''

(யூகி முனி)

என்றதால், இந்நோயில் சிறுநீர் மஞ்சளிக்கும் ; உடலெங்கும் வீங்கும், உடல் மெலியும், முகம், கால், கண், கை, உண்ணாக்கு, நா, அண்ணாக்கு, தோல் இவை யாயும் மஞ்சள் நிறத்தைப் பெறும். உடல் மினுமினுத்தல் ; உணவு செல்லாமை ; உடல் இளைத்தல், மனஞ் சலித்தல் ; பெரு மூச்சு வாங்கல் ; வருத்தப் பட்டு அழுதல் ; ஆண்மை குறைதல் ; மலக்கட்டு ஆகிய இக்குறி குணங்களைக் காணலாம்.

(சி.ம.)

## 10. அழகு காமாலை (அழகு மஞ்சள் நோய்).

'' பேரான கால்கையு மசதியாகும்
பேர்புருவங்கண்கள் கழற்கொடிக்காய் போலப்
பாரான பச்சென்று தானிருக்கும்
பருகு நீர் மஞ்சணிறமாய் விடுக்குந்
தீரானலிங்கத்து ளெரிப்புமாகுஞ்
செரிக்கவொட்டா தன்னத்தைச் சிதறியுப்பும்
ஆரான யழல்போல் வெதும்புமேனி,
அழகுகாமாலை யிடவாண்மைதானே.''

(யூகி முனி)

என்றதால், அழகு மஞ்சள் நோயில் கை கால்கள் அசதி ; புருவம், கண் இவை பச்சை நிறமடைதல், நீர்வேட்கை, சிறுநீர் மஞ்சளித்தல் ; நீர்ப்புழை எரிதல் ; செரியாமை ; வயிறுப்பிசம் : உடல் வெதும்பல் ; ஆகிய இக்குறி குணங்களைத் தோற்று விக்கும்.

## 11. செங்கமல மஞ்சள் நோய்.

'' ஆண்மையில்லாத்தமரகத்தின் குணமுமாகு
மங்கமெலா மழற்சியுமாய்ச் சோம்புமாகுந்
தீண்மை சிறுநீர் சிவந்து மஞ்சளித்துச்
சிறுகியே சிறுநீர் தானறுக்கி வீழும்

நாண்மையாய் நகங்களுடல் மிகவெளுத்து
நற்காயம் வற்றியே சுரமுண்டாகும்
ஊண்மையா யுண்ணாக்கு உமிநீர் நாக்கு
முறுமஞ்சள் செங்கமலக் காமாலையாமே.''

(யூகி முனி.)

என்றதால், செங்கமல மஞ்சள் நோயில் தமரகம் வன்மையற்று உடலில் அழற்சியுண்டாகிச் சோம்பலைத் தரும். சிறுநீர் சிறுத்துச் சிவந்த மஞ்சள் நிறமாக இழியும். உடல், நகம் இவை வெளுத்து, உடல் வற்றிச் சுரமுண்டாகும். உள்நா, வெளிநா, உமிழ்நீர் இவை மஞ்சள் நிறமடையும். இக்குறி குணங்களை இந்நோயில் காணலாம்.

### 12. கும்ப மஞ்சள் நோய்.

'' காமாலையடிக்கடிக் களையேபோடுங்
கனமாகு முடம்பு சிறுநீரே மஞ்சள்
வேமாலை நேரத்தில் வியர்வையாகும்
மேனோக்கும் வாதந்தான் கண்சிவக்கும்
பூமாலைபோலவே துவண்டுபோகுங்
புகழான மயிலுறக்கம் போலேயாகும்
கோமாலை மலந்தானுங்குதுக் கென்றாகுங்
கொடிய கும்ப காமாலைக் குணமிதாமே.''

(யூகி முனி.)

என்றதால், உடல் கனத்து அடிக்கடி களைப்புண்டாதல்; சிறுநீர் மஞ்சளித்தல்; மாலை நேரம் உடல் வியர்த்தல்; கண்கள் சிவத்தல்; பூமாலை துவள்வதுபோல் துவண்டுகிடப்பன்; மயிலானது நின்று கொண்டே தூங்குவதுபோல் இன்னும் நோயின் கொடுமையால் நின்று கொண்டே தூங்குவான்; சீதக் கழிச்சலில் வெளியாவது போல அடிக்கடி மலம் குதுக்கெனக் கழியும். ஆகிய இக்குறி குணங்களை கும்ப மஞ்சள் நோயில் காணலாம்.

### 13. குன்மக் காமாலை (குன்ம மஞ்சள் நோய்).

'' குணமானவாய்வெளுப்பு கண்தான் பச்சைக்
கொடுமூத்திர மஞ்சளித்துக் குழம்புமாகும்
அணமானவன்னந்தான் செரிக்கும்போது
அடிவயிற்றில் வலியுண்டாம் வாந்தியாகும்

மணமானதொன்றுமே யறிந்திடாது
மயிலுறக்க மிரைப்பிருமல் மூச்சுமாகும்
பிணமானது போலக் கிடைகிடக்கும்
புரளுமே குன்மமாலை தானே.''

(யூகி முனி)

என்றதால், குன்மக் காமாலை நோயில் பிணியாளனது வாய் வெளுத்துக் கண் பசுமை நிறமடையும்; சிறுநீர் மஞ்சளித்துக் குழம்புபோல் வெளியாகும்; உணவு செரிக்கும்போது வயிறு வலித்து வாந்தியாகும். மூக்கு வாசனை அறியாது, அடிக்கடி இரைப்பு, இருமல், பெருமூச்சு இவையுண்டாகும். மயிலுறக்கம் போலுமிருப்பதுண்டு. பிணம்போல் அசையாது கிடத்தல்; அல்லது வயிற்று வலி பொறுக்கமாட்டாமல் படுக்கையில் புரண்டு கொண்டிருத்தலாகிய குறி குணங்களை உண்டு பண்ணும்.

## தீரும் தீராதவை.

(சாத்தியம்)

1. '' தானான காமாலைப் பதின்மூன்றாகுஞ்
சாத்தியந்தானேழாகும்பேரே தென்னில்;
பானான பித்தக் காமாலையோடு
பரவுமஞ்சட் காமாலை சிலேட்டுமமாகும்
ஊனானஊது காமாலையோடு
உணர்த்தும் வறட்காமாலை வாதசிலேட்டுமம்
கோனான பித்தசிலேட்டு மக்காமாலை
குணமாகவேழுந்தான் கூர்ந்துகேளே.''

அசாத்தியம்

2. '' கேளென்ற கும்பகாமாலை யோடு
கெடிகொள் குன்மக் காமாலை தொந்தகாமாலை
வாளென்ற வாதகாமாலை யோடு
மருவுகின்ற செங்கமலக் காமாலையாகும்
ஆளென்ற அழகுகாமாலை யோடு
ஆறுந்தான சாத்தியமாமறிந்து கொள்ளு
கோளென்று சொல்லிமகா கொடுமைசெய்த
குணங்கெட்ட மானிடரைக் கூடுந்தானே.''

(யூகி முனி)

என்றதால், அழல் மஞ்சள் நோய்; பெருமஞ்சள் நோய், ஐய மஞ்சள் நோய்; ஊது மஞ்சள் நோய்; வறட்டு மஞ்சள் நோய்; வளி ஐயமஞ்சள் நோய்; அழல்ஐயமஞ்சள் நோய் ஆகிய இவை ஏழும் தக்க மருந்துகளாலும், பத்தியங்களாலும் குணமாகும்.

மற்றுமுள்ள கும்ப மஞ்சள் நோய் ; குன்ம மஞ்சள் நோய் ; முக்குற்ற மஞ்சள் நோய்; வளி மஞ்சள் நோய்; செங்கமல மஞ்சள் நோய்; அழகு மஞ்சள் நோய் ஆகிய இவை ஆறும் எளிதில் தீரா வென அறிக.

### பொதுக்குறி குணங்கள்.

மஞ்சள் நோய் ஆரம்பத்தில் கண்ணின் வெள்ளை விழியும், அதன் பின் முகம், கழுத்து, உடல் முதலியன மஞ்சளிக்கும், நோய் முதிர முதிர நா, அண்ணாக்கு, உதடு, உள்நா, சிறுநீர் இவை மஞ்சள் நிறமடைந்து கொண்டே வரும், அதன்பின் தோல் மஞ்சளிப்பதோடு பச்சை நிறம் பெற்றது போல் காணும். நோய் தீவிரமாயின் மூக்கு, பல்லீறு, வாய் இவற்றிலிருந்து குருதி கழி வதுண்டு. சிறுநீர் மஞ்சளித்துக் குருதி கலந்தாற் போலும், ஆடையில் படின் கறைபோலும் காணும். வியர்வையு மஞ்சளிக் கும். எரு (மலம்) வெளுப்போடு குழ குழத்து இழியும். சில வேளைகளில் மண் நிறம் போலும் கழியும். சிலருக்கு உமிழ்நீர், கண்ணீர், பல் இவைகளும் கூட மஞ்சளித்திருப்பதுண்டு. அன்றி யும், உடல் வறண்டு நமைச்சலுண்டாகும். தோலானது தவளை யின் தோலைப் போல் காணும். நாடி நடை தளரும் (மெது வாய் நடக்கும்)— ஊக்கமிராது, எப்பொருள்களும் மஞ்சள் நிற மாகக் காணப்படும். இத்தியாதி குறி குணங்களை மஞ்சள் நோயில் காணலாம் எனச் சித்த மருத்துவம் கூறலாயிற்று.

### முக்குற்ற வேறுபாடுகள்.

அழல் குற்றத்தைப் பெருக்கக் கூடிய உணவு ; வெய்யிலில் செல்லல்; இராக்கண் விழித்தல், முதலியவற்றால் அழல் குற்றம் மிகுந்து, அத்துடன் ஐயத்தையும் துணைக் கொண்டு அழலைய மாகி, இவ்விரு குற்றங்களும் மிகுந்த நிலையில் பரவுகாலை (வியானன்) தன் தொழில் நடைபெறாதபடி கேடடையச் செய்து குருதியின் வன்மையையும் கெடுத்து இந்நோயைப் பிறப்பிக்கும். இதே காரணமாக வலப்பாட்டீரல் தாக்கப்படுவதால் பித்த நீர் இயற்கை வழியில் செல்லவொட்டாமற் தடைப்பட்டுக் குருதி யுடன் கலக்கச் செய்வதால் பித்த நீரும் குருதியும் சேர்ந்து கெடுதிகள் பல விளைவிக்கும். அன்றியும் இந்நோயில் மற்றக் கால்களும் கேடடையுமெனவும் அறிக !

நாடி நடை.

" பண்பான பித்தத்தில் சேத்துமநாடி
பரிசித்தாலத்தி சுரமிளைப்பு ஈளை
கண்காது நயனமலம் நீருமஞ்சள்
கனவயிறு பொருமல் மஞ்சள் நோய் கண்ணோவு
உண்போது மறுத்தல் ரத்தவிப்புருதிதானும்
உளைமாந்தை பீனிசமும் ரத்தவீக்கம்
நண்பான காமாலை சோகை வெப்பு
நணுகிவந்த பலபிணியுங் காணுந்தானே."

(சதகநாடி)

2. " சாறுமடா பித்தமந்த வாதத்திலேறில்
தளஞ்செய்யும் பாண்டுகாமாலை தானும்."

(நாடி நூல்)

என்பதினால், பித்த ஐயக் கலப்பாலும்; பித்தவாதக் கலப்பாலும்; மஞ்சள் நோய் உற்பத்தியாகுமென்பது தெரியலானோம்.

## 25. பெரு வயிறு.

வேறு பெயர்கள்.—பெரும் பண்டி; மகோதரம்; தொந்தி நோய்; என்பனவாம்.

இயல்.—வயிறு நாளுக்கு நாள் இயற்கைக்கு மாறாகப் பெருத்தும்; அதனுள் நீர், காற்று ஏதேனுமொன்று பெருகி வருவதும்; உள் உறுப்புகளாகிய ஈரல்கள், குடல், கருப்பையின் கழலை இவற்றிலொன்று பெருத்துவரக்கூடியதுமான இயல்புடைய நோயாம்.

சுருங்கக் கூறில், உட்கருவிகள் குற்றமடைந்து வயிறு பெருத்துக் கொண்டே வருவதால் " பெருவயிறு " எனப் பெயராயிற்று எனலாம்.

நோய் வரும் வழி.

* * *

1. " உலமான உற்பத்தி யுரைக்கக் கேளாய்
உமியினால் கல்லினால் ரோமமுள்ளால்
சுலமான சுனையினால் தோடநீரால்

தும்பிய நீர் தேரைநீர் அலர்ந்த சோற்றால்
மலமான மங்கையர்கள் மருந்தினிட்டால்
மகோதரமாய் வந்து மருவுங்காலே.''

2. '' காலான மேகந்தான் வயிற்றிற் கட்டி
கடிசான சீழ்சீதம் வயிற்றிற் றங்கில்
தாலான சதையுதிரம் வயிறுதன்னில்,
தயங்கினாற் பாடாணந்தரிக்கிற் சூதம்
சேலான செம்பினிடவூறல் தங்கில்,
சீரணத்தில் மேலன்னஞ் செலுத்தலாலும்,
மாலான மங்கையர்கள் மருந்தினாலும்,
மகோதரங்கள் வந்துவுற்பத்தியாமே.'' (யூகி முனி)

என்றதால், உமி, கல், மண், மயிர், முள் இவை கலந்த உணவு கொள்ளல், சுனை நீர், குற்றமுள்ள நீர், வண்டுகள் மொய்த்த நீர், தேரை தங்கிய நீர், கள், சாராயம் இவைகளை அடிக்கடி பருகுதல், மருந்திடு, மேக நோய், செம்பின் களிம்பு, ரசம், கெந்தி, பாடாணம் போன்ற மருந்துகளை அளவு கடந்து உண்ணல், செரியாமை ஆகிய இக்காரணங்களால் மகோதரம் என்ற பெருவயிறு நோயுண்டாகும்.

அன்றியும், இந்நோய் நீர்க்குண்டிக்காய் (பருக்கம்), தமரகம், கல்லீரல் இவ்வுறுப்புகளில் காணும் தனி நோய்களுக்குத் துணை நோயாகவும் வருவதுண்டு எனச் சித்த மருத்துவம் கூறுகின்றது.

### முற்குறி குணங்கள்.

இந்நோய் ஆரம்பத்தில் வாய் நீரூறல், வாய் கைத்தல், பசியின்மை, செரியாமை, குமட்டல், வாந்தி, பித்தவாந்தி, ஊண் வெறுப்பு, உடல் வன்மை குறைதல், பெருமூச்சு, கழிச்சல், சில வேளை மலச்சிக்கல், கை கால்கள் சூம்பல், முகத்தில் மங்குண்டாதல், முக எலும்பு மோடிட்டு கண், தாடை, உதடு இவை வரண்டு சுருங்கல், கணுக்கால் வீக்கம், உடல் வெளுத்தல், சிறு நீர் சுருங்கல், வயிற்றின் தோல் சுருங்கி, மினுமினுத்துக் குருதி நாளங்கள் புடைத்து விம்மி, தோல் நீல நிறத்தோடு, கொடி கொடியாய்த் தோன்றி, வயிறு வீங்கிக் கொண்டே வருதல் ஆகிய இக்குறி குணங்களை விளைவிக்கும்.

(சி. ம).

## நோய் எண்.

பெருவயிறு நோயை சிலர் எண் வகையாகவும், "யூகி சிந்தாமணி" யை அனுசரித்துச் சித்த மருத்துவத்தில் முப்பத்திரண்டு பிரிவுகளாகவும் வகுத்துள்ளார்கள். மாணவர்கள் இருசாராரார்களது பிரிவினைகளைப் பற்றித் தெரிந்திருப்பது உத்தமம்.

### 1. எண்வகைப் பிரிவும் பெருவயிறு நோய்களாவன.

1. வாதப் பெருவயிறு.

2. பித்தப் பெரு வயிறு.

3. ஐயப் பெரு வயிறு.

4. முக்குற்றப் பெரு வயிறு.

5. எகுர்திப் பெரு வயிறு (கல்லீரல் அல்லது வலப்பாட்டீரல் பெரு வயிறு).

6. வல்லை அல்லது பிலீகப் பெரு வயிறு (மண்ணீரல் அல்லது இடப்பாட்டீரல் பெரு வயிறு.)

7. நீர்ப் பெரு வயிறு.

8. தசைப் பெரு வயிறு என்பனவாம்.

(கை எழுத்துப் பிரதி.)

### அவை ஓவ்வொன்றின் தனித்தனிக் குறிக்குணங்கள்.

**1. வாதப் பெரு வயிறு (வளிப் பெரு வயிறு)**

" துடர்ச்சியாங் காயமது வெளுப்புமாகும்,
சூட்சமாய்ச் சடம்வற்றித் தூர்ப் பலந்தான்,
அடர்ச்சியாயன்னமது வேண்டாதாகு,
மடிவயிற்றிலிரைச்சலு மாயுப்பிசமாகும்,
புடர்ச்சியாய்ப் பிணமுகமாய்ச் சாயலாகும்.
புளிப்பான வசீரணத்திற் பசியு முண்டாம்,
தடர்ச்சியா யடிவயிறு தன்னில் வீங்குஞ்
சஞ்சலிக்கும் வாத மகோதரந்தானென்னே."

(யூகி சிந்தாமணி.)

என்றதால், வாத மகோதரம் என்ற வளிப் பெரு வயிறு நோயில், உடல் வெளுத்தும், வற்றியும், வன்மை குன்றியுமிருக்கும். உணவு வேண்டாமை, அடி வயிற்றிலிரைச்சல், உப்பிசம், வீக்கமுங் காணும், பிணத்தையொற்ற முகமும், அசீரணம், பொய்ப்பசி, புளியேப்பமு முண்டாகும், மனம் சஞ்சலிக்கும்.

(கை எழுத்துப் பிரதி.)

2. பித்தப் பெரு வயிறு (அழல் பெரு வயிறு.)

'' என்ற கண்ணிற்காசவன்னமுமாய்த் தோன்றி,
ஏற்ற சுரமோகமாய்த் தாகமாகும்,
அன்றவதிசாரமுமாய் வயிறு போகு,
மழற்சியோடு வியர்வை மேல் மஞ்சளிப்பு,
துன்ற தோல் சுறசுறப்புத் துரட்டி போலாஞ்,
சுய நரம்பு பலவிதமாய் வன்னமாகும்,
பன்றசனஞ் செரியாமல் மலமும் போகும்,
பயித்திய மகோதரத்தினிடப் பண்புதானே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், பித்த மகோதரம் என்னும் அழல் பெரு வயிறு நோயில் கண்கள் காயாம்பு நிறமடையும்.( i. e. கருமை அல்லது நீல நிறம்), உடலில் வெப்பம், தாகம், வியர்வை, அழற்சி, அதிசாரம்போற் கழிச்சல், இவையுண்டாகும். உடல் மஞ்சள் நிறமடையும், உணவு செரியா, தோல் சுர சுரத்தலும், ரத்த நாளங்கள் (நாடி நரம்பு ரத்தக் குழாய்கள்) பலவித வருணமாகவும் காணுதலும், மூர்ச்சை, வாய் காரமாயிருத்தல், உதடு சுருங்குதல் ஆகிய குறி குணங்களுமுண்டாகும்.

(கை எழுத்துப் பிரதி.)

3. ஐயப் பெரு வயிறு (சிலேட்டும மகோதரம்).

'' பண்பானவுடல் நடுக்கிய ருசியாகும்,
படுக்கை தனி லுறக்கமில்லாதுப்புறைக்கும்,
குண்பான குளிர் காய்ச்சல் சுவாசகாசங்,
கோபமொடு வயிறு ப்பிசமுமாகும்,
வெண்பான பஞ்சுபோல் மிக வெளுக்கு,
மிடுக்கான நீர் மல முழங்கடு கடுக்கும்,
திண்பான விருமலொடு கோழை மிஞ்சுஞ்,
சிலேட்டும மகோதரத்தின் செயலிதாமே.''

(யூகி முனி சிந்தாமணி.)

என்றதால், ஐயப் பெரு வயிறு நோயில், உடல் நடுக்கட, பஞ்சுபோல் வெளுத்தல், சுவையின்மை, உப்பு உறைத்தல், (உப்பு சுவை மிகுதியாகத் தோன்றல்) படுக்கை, பொருந்தாமை, குளிர் காய்ச்சல், சுவாசகாசம், கோபமுண்டாதல், வயிறுபிசம் நீரு மலமும் கடுத்து வெளிப்படல், இருமல், கோழை கட்டல், ஆகிய குறி குணங்களுண்டாகும்.

அன்றியும் வயிறு நாளுக்கு நாள் கனத்துப் பருத்துக் கடினத்துடன் அழுத்தமாய், அசைவற்று வெளுத்த புடைகளைப் பெற்று மினுமினுத்துக் குளிர்ச்சியடைந்திருக்கும். அப்போது தேகம் கனத்து நோதலுடன் நோயினன் தூங்கி விழல் அல்லது உட்கார்ந்திருந்தபடியே தூங்கி விழல், உட்கார்ந்திருந்த இடத்திலேயே இருக்க நினைத்தல் ஆகிய குறி குணங்களையும் உண்டாக்குமென்பர்.

(கையெழுத்துப் பிரதி)

## 4. முக்குற்றப் பெரு வயிறு.

"அதிராக மஞ்சணீராக்கையாகும்,
அதட்டியாய் வாதத்தின் நாடியாகும்,
பதிராகப் பஞ்சுபோற் கண்ணீருருக்கும்,
பங்கமாயங்கமெலாம் பருக்க வீங்கும்,
வதிராக வஞ்சகமாய்க் கால் கை வற்றும்,
வற்றியேயுடம் பெல்லாம் வயிறு விம்மும்,
சுதிராகத்தலை சுற்றல் தியக்கமாகும்.
தொந்தமாமகோதரத்தின் சூட்சம் பாரே,

(யூகி சிந்தாமணி).

என்றதால், முக்குற்றப் பெருவயிறு, நோயில் உடலில் அச்சமுண்டாக்கத் தக்க மஞ்சள் நீர் பரவியிருத்தல், வயிறு மிகப் புடைத்தல், வாத நாடி துடிப்பாக நடத்தல், கண்கள் வெளுத்தல், நீர் வடிதல் உடல் முழுமையும் சேறு பூசியது போல் பருத்து வீங்கல், கால் கைகள் வற்றி வயிறு விம்மல், தலை சுற்றல், தியக்குமுண்டாதலாகிய இக்குறி குணங்களைக் காணலாமென்பர்.

(கையெழுத்துப் பிரதி).

## 5. மண்ணீரல் பெரு வயிறு (பிலீகப் பெரு வயிறு).

"குறிப்பாகப் பரிசத்திற் கூர்மையாகும்,
குணமாக மலமோடு சலமுமுண்டாந்
தெறிப்பாக வாயுவது கீழே நோக்கும்,
[illegible]லமெலாம் வீங்காமற் கொஞ்சம் வீங்கும்.

முறிப்பாக அசனமுந்தான் மிகவே வேண்டும்,
மூத்திரந்தான் மிகுதியாம் மூர்ச்சையில்லை
பிறிப்பாகக் கண்களிலேரத்தமாகும்,
பீலிகை மகோதரமாய்ப் பேசலாமே.''

(யூகி சிந்தாமணி).

என்றதால், மண்ணீரல் பெரு வயிறு நோயில், இடப்பாட்டீரலிருக்கப் பட்டயிடத்தில் விரல்களால் சற்று அழுத்திப் பரிசித்துப்பார்க்க ஈரல் பெருத்துக் கொண்டே வருவது நன்றாய்த் தெரியவரும். உணவு அதிகம் வேண்டியிருக்கும், ஆனால் உணவு செல்லாமையாகும், உடல் வெளிரும், மலமும் நீரும் பெருகும். அபான வாயு மிகுதியும் கீழ் நோக்கி வெளி யாகும். உடல் சிறிது வீங்கல், கண்களில் ரத்தம் கசிதலாகிய இக்குறி குணங்களைக் காண்பிக்குமென்கிறார். அன்றியும் மண்ணீரல் விருத்தி நோயில் கூறிய குறி குணங்களும் தோன்றும்.

(கையெழுத்துப்பிரதி)

மண்ணீரல் பெரு வயிறு உற்பத்திக்குக் காரணமும் கூறியுள்ளார்.

அளவுக்கு அதிகமாக உண்டு பூமியில் புரளல், யானை, குதிரை, ஒட்டகம், எருது, சகடம், சிவிகை முதலியவற்றில் ஏறி வேகமாய்ச் சென்று களைத்தல், தன் வன்மைக்கு இயலாத காரியங்களில் தலையிடுதல், குடல் குலுங்கும்படி மருவுதல், ஓயாமல் நடக்குதல், நெடுந் தூரம் ஓடுதல் ஆகிய இச்செயல்களாலும், உடல் இளைத்தலினாலும் மண்ணீரலானது (இடப்பாட்டீரல்) தன் இடத்தைவிட்டு நகர, அதிலிருந்து செந்நீர் வெளிப்பட்டு, அதிலேயே தோய்ந்து, உணவின் சாராதிகளால் பெருகி ஆமை வடிவத்தை ஒத்து, அதின் ஓடு போன்ற கடினத்தையுமடைந்து, நாளுக்கு நாள் அதிகரித்து, இடப்பக்கத்தில் வளர்ந்து வயிறு பருத்து, சுபாவ நிறத்தை ஒழித்து, சிவந்த நிறத்தைத் தாங்கி மஞ்சள், கருப்பு, நிறமுடையதாய்க் கெட்டிப்பட்டுக் கல்லைப் போல் இருக்குமென்பர்.

(கையெழுத்துப் பிரதி.)

மேலும், குளிர் காய்ச்சலிலும், வெளுப்பு நோயிலும், காளச் சுரத்திலும் மண்ணீரல் வளர்ச்சியடையுமென அறிக.

(சி. ம.)

## 6. கல்லீரல் பெரு வயிறு (எகுர்தி வலப்பாட்டீரல் பெரு வயிறு.)

முன் சொன்ன பீலிகப் பெரு வயிறு நோய் தோற்றுவிக்குங் காரணங்களாலும், அளவுக்கு மிஞ்சி அதிகமாக உண்ணும் உணவின் கேட்டாலும்; வலப்பாட்டீரல் தன் இடத்தை விட்டு நழுவி முன் சொன்ன பிலீகம் இடக் பக்கத்தில் வளர்ந்து பெருத்து வருவது போல் கல்லீரலானது வலப் பக்கத்தில் வளர்ந்து பருத்து வயிற்றையும் பருக்கச் செய்யும் என அறிக.

அப்போது விரல்களால் அழுத்திப் பார்க்கக் கல்லீரல் பருத்திருப்பது நன்றாய் அறியலாம்.

இந்நோயில் உணவு செல்லா, உடல் மஞ்சளிக்கும், ஈரல் நாளுக்கு நாள் வளர்ச்சியடைந்து, வயிற்றை பருக்கச் செய்யும், கல்லீரல் மண்ணீரல் இரண்டும் சேர்ந்தும் வளர்ச்சியடையும், இரைப்பு, இருமல் முதலிய குறி குணங்களோடு கல்லீரல் விருத்தி நோய்க் குறி குணங்களையும் உண்டாக்கும்.

(கையெழுத்துப் பிரதி)

## 7. நீர் பெரு வயிறு.

''விளம்பவேயங்க மெல்லாஞ் சலந்தான் கோர்க்கும்,
மேனியுமோ மஞ்சணிறமாகும் பாரு,
உளம்பவேயுப் பிசமு முழலையாகு,
முயர்கின்ற லிங்கந்தான் தளர்ந்து போகும்,
முளம்பவே முதுகோடு வயிறு வீங்கும்,
மூலமர்ந்தாதுக்கள் திகைத்தே நிற்கும்.
புளம்பவே பொறியைந்துங் கலங்கி ப்போகும்,
பொருமுமெத்தசல மகோந்தரத்தின் போக்கே,

(யூகி சிந்தாமணி)

என்றதால், நீர்ப் பெரு வயிறு நோயில் (சலமகோதரம்) உடலெங்கும் நீர் கோர்த்தல், மேனி மஞ்சளித்தல், வயிறு உப்பல், ஆண் குறி தளர்தல், முதுகும் வயிறும் வீங்குதல, நாடிகள் மூன்றும் திகைத்து நடத்தல், ஐம்பொறிகள் கலங்குதலாகிய குறி குணங்களைக் காணலாம்

(கையெழுத்துப் பிரதி)

8. தசைப் பெரு வயிறு (சடைப் பெரு வயிறு)

போக்கான மாமிசந்தான் வளர்ந்து மீறிப்
பொருமியே அடிவயிற்றில் கல்லைப் போலத்
தாக்கான, சடந்தானு முலர்ந்து வற்றித்
தவிக்குமேயடிக்கடிதான் தண்ணீர் தேடி,
வாக்கான மதுரமொழி குளறிப் பேசி
வாயுதான் அடிக்கடிக்குப் மேலே நோக்கும்,
நீக்கான மலசலத்தில் மாமிசங் காணும்,
நேரான மாமிச மகோதரத்தினேரே.

(யூகி சிந்தாமணி.)

என்றதால் சதைப் பெரு வயிறு நோயில், சதையானது அடி வயிற்றில் மிகுதியாக வளர்ச்சியடைந்து, வயிறு பொருமி கல்லைப் போல் கனத்துக் காணல், உடல்வற்றி நீர் வேட்கை கொள்ளல், வாய் குளறல், வாயு அடிக்கடி மேல்நோக்கல் சதை துணுக்கல் இற்று மலசலத்துடன் வெளிக்காணுதல் ஆகிய குறி குணங்களைக் காட்டும் என்பதேயாம்.

(கையெழுத்துப்பிரதி.)

II. (வேறு—நோய் எண்)

யூகி முனி சிந்தாமணியில் கூறியிருப்பதை ஆதாரமாகக் கொண்டு சித்த மருத்துவத்தில் விளக்கியுள்ள முப்பத்திரண்டு வகைப் பெரு வயிறு நோய்ப் பிரிவுகளைக் கீழே கவனிக்கவும்;—

1. வளிப் பெரு வயிறு
2. அழல் பெரு வயிறு
3. ஐயப் பெரு வயிறு
4. வளி ஐயப் பெரு வயிறு
5. அழலையப் பெரு வயிறு
6. முக்குற்றப் பெரு வயிறு
7. கல் பெரு வயிறு
8. வில் பெரு வயிறு

9. வழுவைப் பெரு வயிறு
10. நழுவைப் பெரு வயிறு
11. தீராம்பல் பெரு வயிறு
12. ஊராம்பல் பெரு வயிறு
13. வெப்புப் பாவை பெரு வயிறு
14. குலைமுட்டிப் பெரு வயிறு
15. கீழ் கவிசைப் பெரு வயிறு
16. மேற்கவிசைப் பெரு வயிறு
17. பக்கக் கவிசைப் பெரு வயிறு
18. பழுக்கவிசைப் பெரு வயிறு
19. மாபெரு வயிறு (பெரு வயிறு மகோதரம்)
20 சூல் பெரு வயிறு
21. வல்லைப் பெரு வயிறு
22. நஞ்சுப் பெரு வயிரு
23. வெளுப்புப் பெரு வயிறு (பாண்டு மகோதரம்)
24. வீங்குப் பெரு வயிறு (சோபை மகோதரம்)
25. மஞ்சள் பெரு வயிறு (காமாலை மகோதரம்)
26. குன்மப் பெரு வயிறு
27. உத்ர மகோதரம் (மாபெரு வயிறு)
28. ஆமைப் பெரு வயிறு
29. மண்ணீரல் பெரு வயிறு (பீலிக பெரு வயிறு)
30. சுரப் பெரு வயிறு
31. நீர்ப் பெரு வயிறு
32. சதைப் பெரு வயிறு

என்பவைகளாம்.

(மேற்கோள்—யூகி சிந்தாமணி)

செய்ததோர் மகோதரந் தான் முப்பத்திரண்டு
சிறப்பான பெயரையெல்லாஞ் சொல்லக் கேளாய்
வைத்ததோர் வாத மகோதரத்திேனாடு
வளுகயான பித்த மகோதரஞ் சிலேட்டுமம்

கொய்ததோர் வாத சிலேட்டுமத்திேனாடு
கொடும் பித்த சிலேட்டும மகோதரமுமாகும்
தொய்ததோர் தொந்த மகோதரத்திேனாடு
துரிதமாங்கல், மகோதரமுங் காணே.

2. காணவே வில்மகோதரத்திேனாடு
கடியதோர் வழுவை மகோதரமுந்தானும்
நாணவே நழுவை மகோதரம் நீராம்பல்
நலத்த ஊராம்பலோடு வெப்புப் பாவை
கோணவே குலை முட்டி மகோதரந்தான்
கொடிய கீழ்கவிசை மேற் கசிவையாகும்
பாணவே பக்கமாங் கவிசையோடு
பழுக்கவிசை பெரு வயிறு மகோதரந் தானே

வயறானசூல் மகோதரமும் வல்லை
மகோதரமும் விடமகோதரத்திேனாடு
கொயறான ஆயுர்வேதத்திற் சொல்லுங்
கொடிதான சோபை மகோதரங் காமாலை
புயறான கர்மமுடன் பீலிகையுமாகும்
புரமசுர மகோதரமுங் குன்ம மகோதரம்
வெயறான பாண்டுவோடுதர மகோதரம்
வீசுகின்ற மகோதரமுஞ் சலமுமாமே

4. " சலமான மகோதரமாங்கிஷ் மகோதரமாகும்
தக்கான மகோதர முப்பத்திரண்டு"

என்பதினால், முப்பத்திரண்டு பிரிவும் மகோதர நோய்களின் பெயரை அறியலாயிற்று.

குறிப்பு.—சித்த மருத்துவத்தில் இரண்டு இடங்களில் " மா பெரு வயிறு " எனக் கூறியிருப்பதை (1) பெருவயிறு மகோதரம் ; (2) உதர மகோதரம் அல்லது உதரப் பெரு வயிறு என யூகி சிந்தாமணியில் சொல்லிய பிரகாரம் அழைப்பது பொருத்தமாகும். இரண்டிற்குமுள்ள வித்தியாசத்தைப் பின்னால் பார்க்கவும்.

## ஒவ்வொரு பிரிவுப் பெருவயிறு நோயின் தனித்தனிகுறி குணங்கள்.

(யூகி சிந்தாமணி—சித்த மருத்துவம்.)

### 1. வளிப் பெரு வயிறு.

மேலே எண் வகை மகோதரங்களில் ஒன்றாகிய வாத மகோதர நோயின் குறி குணங்களே வளிப் பெரு வயிறுக்குமுளது.

### 2. அழல் பெரு வயிறு.

மேலே பித்த மகோதரம் (பித்த பெரு வயிறு) நோயில் கூறிய குறி குணங்களே அழல் பெரு வயிறுக்குமுளது.

### 3. ஐயப் பெரு வயிறு.

மேலே சிலேட்டும் மகோதரம் (ஐயப் பெருவயிறு) நோயில் கூறிய குறி குணங்களே இதற்குமுளது.

### 4. வளி ஐயப் பெரு வயிறு.

" செயலான சடம் வெளுத்தாற்போற் கடுத்தல்
துனி வயிற்று மடிப்புத்தான் மறைய வீங்கல்
நயமான நரம்பு வயிற்றி னிற்புடைத்தல்
நலமான துர்க்கந்த வாயுமீறல்
அயலான வண்டங்கள் திடுக்கிட்டாற் போல்
அடிவயிற்றில் முழக்கமாமலம் விடாது
பியலான பீசந்தான் மிகுதி வீங்கும்
பிரிவாத சிலேட்டும் மகோதரந்தானென்னே "

(யூகி சிந்தாமணி)

என்றதால், உடல் வெளுத்து நொந்து, வயிற் மடிப்புகள் மறைந்து வீங்கல், வயிற்றின் நரம்புகள் புடைத்து, விம்மல், வாய்நாற்றம், அடி வயிற்றில் வாயுக் கூடி இரைதல், மலம் கட்டுப்படல், விரை வீங்கலாகிய குறி குணங்களை வளி ஐயப் பெரு வயிறு நோயில் காணலாம்.

(சி. ம.)

### 5. அழல் ஐயப் பெரு வயிறு.

"பிரிவாக நாபி மாரளவு மட்டும்
பிதுங்கலாய் வயிறு மெத்தப் புடைக் கிடைக்கும்.
வரிவாக வாயுதான் மிகத் தம்பிக்கும்
மலங்கட்டும் நீர்குறையும், மார்பில் நோவாம்.
எரிவாக எலும்பின் மூளையிலே தாக்கி
ஏற்றமாம் நயனவொலி மிகக் கிடைக்கும்
அரிவாக வங்கங்கள் கால் கை வீங்கும்
அதிர்பித்த சிலேட்டுமத்தின் மகோதரமாமே."

(யூகி சிந்தாமணி.)

என்றதால், பித்த சிலேட்டும மகோதரம் என்னும் அழலையப் பெரு வயிறு நோயில் அடிவயிறு முதல் உந்தி மார்பு வரை மிகப் புடைத்துப் பெருத்திருக்கும். காற்று வெளியாகாமல் வயிற்றுள்ளே தம்பிக்கும். மலம் கட்டுப்படும். சிறு நீர் குறைந்து இழியும் மார்பு எலும்பு வலிக்கும். மூளையில் வெப்பமுண்டாகும், கண் ஒளிகெடும், உடல், கை, கால் இவை வீங்கும் என்னும் குறி குணங்களைக் காணலாம்.

### 6. முக்குற்றப் பெரு வயிறு.

மேலே எண்வகைப் பிரிவு மகோதர நோய்களில் ஒன்றாகிய முக்குற்ற மகோதர நோயில் கூறிய குறி குணங்களே இதற்கு முளது.

### 7. கல் பெரு வயிறு.

"சூட்சமாயிரு மலொடுவிளைப்பு மாகுஞ்
சுருபந்தான் மஞ்சணிறமாக வீங்கும்,
மோட்சமாய் மேல் வயிறு கருங்கல்போல்.
முரண்டியே மிகவீங்குமசனஞ் செல்லா

காட்சமாய் முகங்கருகிக் கண்டிப்பாகுங்
கசடற்ற நரம்பெல்லாம் பசுமையாகும்,
தீட்சமாய்ச் சலமலங்கள் சுருக்கிக்கொள்ளுஞ்
சடம் வெளுக்குங்கல்மகோ தரமாமென்னே."

(யூகி சிந்தாமணி.)

என்றதால், கல் பெரு வயிறு நோயில் உடல் மஞ்சளிக்கும், வீங்கும், மேல் வயிறு கருங்கல்லைப் போல் கடினப்பட்டு, வீங்கும், உணவு செல்லாமை, இருமல், இளைப்பு, முகங்கருத்தல், வயிற்றின் நரம்புகள் புடைத்துப் பசுமை நிறமடைதல், உடல் வெளுத்தல், சிறுநீரும், எருவும் சுருங்குதல் ஆகிய குறி குணங்களைக் காட்டும்.

(சி. ம.)

8. வில் பெரு வயிறு.

" ஆமென்ற வருணனிடவில்லு போல
அதட்டியே வளைந்தாற் போல் பிகுவுமுண்டாய்,
வேமென்ற மேல்வயிறுதனில் வலித்து
மிடுக்காகவுப்பிசமாய் விரையும் வீங்கி,
வாமென்ற மலசலமுஞ் சுருக்கிக் கொண்டு
வாதையாய்க்கிடை கொடா மயக்கமாகித்.
தாமென்ற தண்ணீர்தான் மிகவும் வேண்டுஞ்
சஞ்சலிக்கும் வில் மகோதரந் தானென்னே."

(யூகி சிந்தாமணி.)

என்றதால், வில் பெரு வயிறு நோயில் வயிறு வானவில் போல் குவிந்து வளைந்து, அழுத்தமாயிருக்கும், மேல் வயிறு வலித்துக் கடுத்து உப்பி இரையும், விரை வீங்கும், சிறுநீரும் எருவும் அளவில் சுருங்கி வலியுடன் கழியும், நீர் வேட்கை, மனக்கலக்கம் ஆகிய இக்குறி குணங்களுமுண்டாம்.

(சி. ம.)

9. வழுவைப் பெரு வயிறு.

" தரமான தண்ணீரிற் சொறியைப் போலத்
தளதளத்து வயிறுதனில் வளர்ந்தே யேறும்,
மரமானத்து போலத்தி மிருண்டாகி,
மாமிசந்தான் சோறு போல் வயிற்றிற்றுன்ன

பரமானததை நினைந்து பசியில்லாமல்
படுக்கைக்கு இடமின்றிப்பர தவிக்கும்.
அரமானவன்னத் தைக்கிட் டொட்டாது.
ஆகாத வழுவை மகோதரந் தானாமே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், வழுவைப் பெரு வயிறு நோயில் நீர் ஊற்றுப் போன்று வயிற்றில் தண்ணீர் பெருகித் தோற்பையைப் போல் தளதளத்து வீங்கிக் காணும். அந்நீர் நாளுக்கு நாள் சுரந்து மேல் நோக்கி கைகால்களை மரம் போல் திமிர்க்கச் செய்து வயிற்றுள் கறியை (மாமிசத்தை) அடைத்தாற் போற் காணும், பசி கெடும், படுக்கை பொருந்தாது. உணவில் வெறுப்பு ஆகிய குறி குணங்களைப் பெறும்.

(சி.ம.)

## 10. நழுவைப் பெறு வயிறு.

" ஆமேதானடி வயிற்றிற் கட்டியாகும்
அழுத்தியே பார்த்தாக்கால் நழுவிப் போகும்
வேமேதான் மேல் வயிற்றில் வன்னி போல
மிடுக்கான பெலங் குறைந்து மேல் மூச்சாகும்,
சாமேதான் பிணம் போல நடக் கொட்டாது,
தரிக்கொண்ணாத் தாபமுமாந் தளர்ச்சியாகும்,
நாமேதானா வரண்டு நெஞ்சு புண்ணாம்,
நழுவை மகோதர மென்றே நாட்டலாமே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், நழுவைப் பெரு வயிறு நோயில், அடிவயிற்றில் பந்து போல் உருண்டு திரண்ட கட்டி காணப்படும். அதனை அழுத்திப் பார்க்கில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு நழுவிப் போகும். மேல் வயிற்றுள் அனலையும் எரிச்சலையு முண்டாக்கும். உடல் வன்மை குறைந்து மேல் மூச்சு உண்டாகும், நடக்க முடியாது. உடல் எரிச்சல், தளர்ச்சி, நாவறட்சி, நெஞ்சு புண்ணாதலாகிய குறி குணங்களைப் பெறும்.

(சி.ம.)

## 11. நீராம்பல் பெறுவயிறு.

" நாட்டமாய் நாவறண்டு இருமலுண்டாய்
நளிராகியடி வயிறு கதித்து விம்மிக்
காட்டமாய்க் கடைக்கண் தான் மிகவெளுத்துக்

கதும்பலொடு புறங்கால்களை தைத்து வீங்கி
வாட்டமாய் மூச்சோடு மயக்கமாகி
மலத்தானு மிகத்தளர்ந்து வடிவம் வேறாய்
நீட்டமாய்க் கால் கையு முடக் கொணாது
நீராம்பல் மகோதரத்தி னேர்மை தானே

(யூகி சிந்தாமணி.)

என்றதால், நீராம்பல் பெருவயிறு நோயில் நாவறட்சி, இருமல், நளிர் சுரம், அடிவயிறு கதித்து விம்மல், கடைக்கண் மிக வெளுத்தல், புறங்கால், அதைத்து வீங்கல், பெரு மூச்சு, மயக்கம், கழிச்சல், உடல் தளர்ச்சி, வடிவுவேறாதல், கால்கைகள்நீட்டவும் முடக்கவும் முடியாமையாகிய குறிகுணங்களைக் காண்பிக்கும்.

(சி. ம.)

## 12. ஊராம்பல் பெருவயிறு.

" நேர்மையாய் மேல் வயிறு பொருமிக் கொண்டு
நெடிது தகந்தேடியே மேனி கண்ணும்,
வார்மையாய் மனத்துயர மிகுந்திருக்கும்,
மயக்கமொடு தியக்கமாய் மாழ்கித்துஞ்சும்
கார்மையாய் முகம் வியர்த்து வெளுத்து நொந்து
கனகனத்து உடம் பெல்லாம் கடிதுவற்றி,
சீர்மையாய்ச் சிரசதனிற் பாரங்காணுஞ்
சினத்த ஊராம்பல் மகோதரமு மாமே."

(யூகி சிந்தாமணி.)

என்றதால், ஊராம்பல் பெருவயிறு நோயில், மேல் வயிறு பொருமல், உடல், கண் இவை வருந்தல், மனத்துயரம், மயக்கம், தியக்கம், முகத்தில் வியர்வை, உடல் வெப்பத்தினால் வற்றல், வெளுத்தல், நோதல், தலைகனத்தல், சினங்கொள்ளலாகிய குறி குணங்களைப் பெறும்.

(சி. ம.)

## 13. வெப்புப்பாவைப் பெருவயிறு.

" சினத்தவுப்பங்காற்றுமே மிகவுமுண்டாய்த்
தேக்கியே உடலதிர்ந்து மிகவும் பற்றி
கனத்தகைப்புப்புளிப்பு மிகத் தெகிட்டலாகுங்
கல்போலச் சரீரமெங்குங் கனத்துக் காணும்

வினத்த வயிற்தனிற் புரண்டு வெதும்பல் செய்யும்,
விலாப்பக்கந்தனில் வந்து கட்டிச் சேரும்,
தனத்தவுப்பு நாவி லேமிகுதி யாகும்,
நலியு வெப்புப் பாவைமகோ தரமாய் நாட்டே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், வெப்புப்பாவைப் பெருவயிறு நோயில் சினத்துடன் பேசல், வயிற்றுள் காற்றுக் கூடிவயிறு உப்பல், மிக்கச் கசப்பும் புளிப்பும் பிடியா; நாவில் உப்புச் சுவைகாணல், கல்போன்று உடல் கனத்து வயிறு புரண்டு வெதும்பல், விலாப்பக்கம் கட்டி போல் எழும்பல் ஆகிய இக்குறி குணங்களைக் காட்டும்.

(சி. ம.)

## 14. குசலமுட்டிப் பெருவயிறு.

'' நாட்டவே குழவிபோல் குலையிற்சேர்ந்து
நலமாகக் கீழ்மூடிப்பக்கம்வந்து
ஆட்டவே யன்னத்தை யருந்தொட்டாமல்
அபானத்தை இறுக்கியே மலம்விடாது,
தேட்டவே தேகமெங்குங் கருகிவற்றி,
சிரசோடு முகங்கால் கைவீக்க முண்டாம்,
கூட்டவே மேல் மூச்சுக்குரலுங் கம்மும்,
குலைமுட்டி மகோதரத்தைக் கூறிடாயே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், குலைமுட்டிப் பெருவயிறு நோயில், அம்மிக்குழவியைப் போன்ற கழலை அடிவயிற்றின் பக்கத்தில் தோன்றிப் பாய்ந்து வலிக்கும். உணவு செல்லாது. அபானவாயுவை இறுக்கிக் கழிய வொட்டாமற் செய்யும், உடல் கருகி, வற்றி, தலை, முகம், கால் கைகள் இவைகளில் வீக்கமுண்டாதல், மேல் மூச்சு வாங்கல், குரலோசை கம்மல் என்னும் குறி குணங்களைக் காணலாம்.

## 15. கீழ்க் கவிசைப் பெரு வயிறு.

'' கூறிடவேயடிவயற்றில் வில்லைப்போலக்
கூறிப்பாகக் கட்டி வயிற்றையுப்பும்,
மீறிடவே மேல் வயிற்றில் வில்லுபோல
இசிவாகிச் சந்தெங்குங்குடைச்சலாகும்,

பீரிடவே மனசு நொந்து பெருமூச்சாகும்,
பிதற்றலாய் மனதில் வந்தபடியே பேசும்
மாறிடவே மலசலமுஞ்சுருக்கிக் கொள்ளும்,
மருவு கீழ்க்கவிசை மகோதரமுமாமே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், கீழ்க் கவிசைப் பெருவயிறு நோயில், அடிவயிற்றில் வில்லைப்போல் கட்டியுண்டாய் வயிற்றை உப்பச்செய்யும். மேல் வயிறு வில்போல் வளைந்தும் இசிவாகியும், கால் கைகளின் பூட்டுகள் குடைதலும், பெருமூச்சு, வாய் பிதற்றல், மனதில் தோன்றியபடி பேசல்; நெஞ்சு நோதல் சிறுநீரும், மலமும் சுருங்கல் ஆகிய இக் குறி குணங்களைக் காணலாம்.

### 16. மேல் கவிசைப் பெருவயிறு.

'' விசையான மேல் வயிற்றில் வில்லைப்போல
விளையுமே ஊனெல்லாந் திரட்டித்கொண்டு.
கசையான நரம்புத் தோல் சுருங்கிக்காணும்
க்ஷணத்திலே படபடப்பு மூச்சு மாகும்,
குசையான மாரடைப்புக்குத்தலுண்டாங்
குமட்டியே வாய் நீருங்குதி கொண்டோடும்.
அசையான அன்னந்தான் வேண்டாதாகு
மழுக்குமே மேற்கவிசை மகோதரந்தானே''

(யூகி சிந்தாமணி.)

என்றதால் மேற்கவிசைப் பெருவயிறு நோயில் வயிற்றுப்பக்கமுள்ள ஊன் திரண்டு மேல் வயிற்றினை வில்லைப் போல் வளையச் செய்யும். வயிற்றின் தோல் நரம்புகள் யாவும் சுருங்கிக்காணும் வலியுமுண்டாம். மூச்சு படபடத்துக் காணும். மார்பு அடைப்பு, மார்பில் குத்தல், வாய் குமட்டல், வாய் நீருரல், உணவு வேண்டாமை ஆகிய இக்குறி குணங்கள் காணும்.

(சி. ம.)

### 17. பக்கக் கவிசைப் பெருவயிறு.

'' கவிசைபோல் பக்கத்திற் பற்றிக் கொண்டு
கனமாக வயிறு கல்லழுந்தலாகும்,
அவிசையாயடி வயிற்றிற் குமுறல் காணும்,
அங்கதாகத் தோடு எரிவுண்டாகும்,

புவிசை போற் பொருமி வயிறுப்பிக் கொள்ளும்,
புளிதேங்காய் நெஞ்சிலே எரிச்சலுண்டாம்,
பவிசையாய் மலசலமுஞ் சுருக்கமாகும்
பக்கமகோதரத்தினிடப்பரிசுதானே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், பக்கக் கவிசைப் பெருவயிறு நோயில் வயிற்றுள் எரிச்சல், வயிறு கனத்துக் கல்போலாகும், அடிவயிற்றில் காற்றுக் கூடி இரைதல், வயிறு பொருமி உப்பல், புளியேப்பம், தாகம், நெஞ்செரிதல், மலம், நீர் சுருங்கலாகிய குறி குணங்களுண்டாம்.

(சி. ம.)

## 18. பழுக்கக் கவிசைப் பெரு வயிறு

'' பரிசாகப் பழுவெலும் பின்முளையைப் போலப்,
பற்றியே வயிறெல்லாங்கனத்து விம்மும்,
உரிசாக உப்பிசமு மேல்மூச்சாகும்
உழலையோடு தாபமுமாயுறக்கமாகும்,
அரிசாக அன்னந்தானிறங்கொட்டாது
வடிக்கடிக்கு வாயுத்தானதட்டியாகும்
செரிசாக வீங்கியே வற்றியூதும்
திணறுமே பழுக்கவிசை மகோதரந்தானே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், பழுக்கக்கவிசைப் பெருவயிறு நோயில், பழு வெலும்பு முளை (ஆப்பு) யைப் போல வயிற்றுள் எழும்பி, வயிறு முழுமையும் கனத்து விம்மும். வயிறு உப்பும். மேல்மூச்சு வாங்கும். நாவறட்சி, தாபம், உறக்கம், வயிற்றுள் காற்றுக்கூடி வீங்கல் ஆகிய இவையுண்டாகும். அன்னஞ் செல்லாது. செரிக்கவு மாட்டாது. உடல் ஊதி மூச்சுத் திணறும்.

(சி. ம.)

## 19. பெருவயிறு மகோதரம்

'' திணறுமே காயந்தான் மிகவும் வற்றிச்
சீரணமுமாய் மந்தமுமாமுதரந்தானும்,
உணறுமேகல்லழுத்தமாக வீங்கி
யுறுதியாய் நரம்புமே புடைத்துக்காணும்

மண்றுமே மலத்தைதயேமிகமறிக்கும்
வாடாமலூதியேமயக்குவிக்கும்,
கிணறுமே தூறெடுக்க ஊறுமாப்போல்
கெட்டிக்கும் பெருவயிற்று மகோதரந்தான்.'

(யூகி சிந்தாமணி.)

என்றதால், பெருவயிறு மகோதர நோயில் குருதி வன்மை குறைந்து உடல் வற்றும். மந்தம், உணவு செல்லாமை, செரியாமை இவையுண்டாகும். வயிறு கல்லழுத்தமாகக் கெட்டியாக விளங்கும். இவ்வீக்கம் எளிதில் வாடாது. வயிற்றின் மேலுள்ள நாடி நரம்பு ரத்தக் குழாய்கள் புடைத்துக் காணும்; மூச்சுத் திணறல், மலம் கட்டுப்படல், மயக்கம் இவை யுண்டாகும். வயிற்றின் நீரை வெளியாக்கு மருந்துகளுக்கு வசப்படா! கிணற்று நீர் சுரப்பது போல் வயிறு வீக்கம் சுரந்து கொண்டேயிருக்கும்.

## 20. சூல் பெரு வயிறு.

" மகோதரம் போற்சூலான மங்கையர்க்கு
மாவருத்தமுண்டாகி மயக்கமாகும்,
அகோதரமாயங்க மெல்லாமழற்சியாகு,
மன்னந்தான் செல்லாது, தண்ணீர் வேண்டும்,
சகோதரமாங்கால்கையுஞ்சந்து வீங்கும்,
கழலான காய்ச்சலொடு அருசியாகும்,
உகோதர்மாயும்டபெல்லா முளைச்சலாகும்,
உற்றசூல் மகோதரத்தினுண்மைதானே."

(யூகி சிந்தாமணி.)

என்றதால் சூல் பெருவயிறு என்பது பெண்கள் சூல் கொண்ட காலத்தில் வரும் நோயாம். இவர்களில் சிலருக்கு மனதில் வருத்தமுண்டாகி மயக்கமாகும். உடல் முழுமையும் அனலாயிருக்கும். அன்னஞ் செல்லாது—சுவையறியாமை, நீர் வேட்கை, கால் கைகளின் பூட்டுகள் வீங்கல், சுரம், உடல் நோதல், வயிறு பருத்தலாகிய குறி குணங்களையும் காணலாம்.

(சி. ம.)

## 21. வல்லைப் பெருவயிறு.

" உண்மையாயுந்தியின்றன்நடுமய்யத்தில்
உள்ளங்கையகலந்தான் கட்டியாகத்,
தண்மையாய்த் தமர் கொண்டு அடைத்தாற் போலச
சாங்கமாய்க் கருங்கல்லாய்த் தானிருக்கும்,

பண்மையாமசனமது முண்டாற் செல்லாப்
பருகிடுமே சுடுதண்ணீர்தன்மேல் இச்சை
வெண்மையாய்க் கால்கையுமசதியாகும்,
மிடுக்கான வல்லைமகோதரமுமாமே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், வல்லைப் பெருவயிறு நோயில் உந்திக்கும், மார்பு எலும்புக்கும் நடுவில் உள்ளங்கையகலமுள்ள கட்டிதமர் கொண்டு அடைத்தாற் போல் அடைத்துக் கொண்டு கருங்கல்லைப் போல் கடினமாகக் காணும். அதனால் உணவு செல்லாமை, சுடுநீரின் மேல் இச்சை கொள்ளல், கால் கைகள் வெளுத்துச் சத்தற்றுப் போதல் முதலிய குறிகுணங்களைக் காணலாம்.

(சி. ம.)

## 22. நஞ்சுப் பெருவயிறு.

'' மிடுக்காக மேனி யொடுபொத்தி பீசம்,
வீங்கியே வெருப்பாக மெலிவுமாகும்,
அடுக்காகச் சிறுத்துமே பருத்துக்காணும்,
ஆண்மையாய்ப் பீசமதுதளர்ந்திருக்குந்
துடுக்காகமனிதருடன் வார்த்தைபேசுந்
துக்கமாய் மனக்கிலேசமெப்போதுந்தான்
நடுக்காகவுடம்பெங்குந்திமிருமாகும்
நலியும் விடமகோதரந்தான் நாடிப்பாரே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், விடமகோதரமென்னும் நச்சுப் பெருவயிறுநோயில் உடல் வெளுப்பாகி மெலிதல், விரைகள் வீங்கல், ஆண்மை குன்றல் பிறருடன் படபடப்பாகப் பேசல், மனவருத்தம், துக்கம், உடல் நடுக்கம், திமிருண்டாதலாகிய குறிகுணங்களைக் காண்பிக்கும்.

(சி. ம.).

## 23. வெளுப்புப் பெருவயிறு (பாண்டு மகோதரம்.)

'' நாடிப்பார் வாடியேயூதிக் கொள்ளும்
நன்னாடிச் செம்மையாய் நடக்கொட்டாது,
வாடிப்பார் வகுத்தடியும் புறங்கால் வீங்கும்,
வன்னமுகம் வேறுபட்டுமயிலூரக்கம்,

தேடிப்பார் உரோமமெங்குஞ் செம்மையாகுஞ்
செயலான ரத்தமில்லா தெலும்பு மாகுங்
கூடிப்பார் மூச்சோடு குளுப்பையாகுங்
குணக்கேடாம் பாண்டு மகோதரத்தின் கேடே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், வெளுப்புப் பெருவயிறு நோயில் உடல் முழுமையும் வீங்கும். குருதி வன்மை குறையும். நாடிகள் சரியாக நடை பெறா. வயிறும் பெருங்காலும் அதிகமாய் வீங்கும். முகத்தின் நிறம் வேறுபடும். மயிலுறக்கம் போல் தூக்கம் வரும். மயிர் சிவக்கும். இரத்தக் குறைவால் உடல் எலும்புக் கூடாகி நடக்க முடியா. பெருமூச்சு வாங்கும். முகம் குளுப்பைபோல் வீங்கும். வயிறு நாளுக்கு நாள் பெருத்துக் கொண்டே வரும். இத்தியாதி குறி குணங்களை காணலாம்.

(சி. ம.)

24. வீங்குப் பெரு வயிறு (சோபை மகோதரம்).

'' கூறான அடிவயிறு குழைந்து உப்பிக்
கூப்பிட்டு மேல்வயிற்றில் பிகுவுமாகும்,
தேறான வண்டமொடு கால்கள் கைகள்
சிதைந்து மெத்தவீங்கியே செழும்பலாகும்,
வீறான மேல்மூச்சு இருமல் தாகம்
விக்கியே சரீரமெல்லாங் குளிர்ச்சியாகும்,
தூறான மூத்திரமலஞ் சுருங்கிக்காணும்
சோபை மகோதரமென்று செப்பலாமே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், சோபை மகோதரமென்னும் வீங்குப் பெருவயிறு நோயில், மேல் வயிறு அழுத்தமாயும், அடிவயிறு குழைந்தும் உப்பும். மேல் மூச்சு வாங்கும். இருமல், நீர்வேட்கை, விக்கல், உடல் குளிரல், இவை யுண்டாகும். சிறுநீரும், எருவும் அளவில் சுருங்கும். வயிறும், விரையும் வீங்கும். உடல் முழுமையும் கை கால்கள் உள்பட அதிகமாக வீங்கும். இத்தியாதி குறிகுணங்களை காட்டும்.

(சி. ம.)

25. மஞ்சள் பெருவயிறு (காமாலை மகோதரம்).

" செப்பவே நடுக்கலொடு குளிர்ச்சியாகும்
சிறியதோர் மூக்குமுகம் மார்புவேர்க்கும்
உப்பவே உடம்புலரும் புறங்கால் வீங்கும்
உளைந்துமே அடிவயிறு மிகச்சுருங்கும்
துப்பவே கோழையொடு சுரமு முண்டாம்
சுகமில்லா நித்திரைதான் தலைவலிக்கும்
தப்பவே மிகத்தாகஞ் சலிக்குஞ் சிந்தை
தளருங்காமாலை மகோதரந்தானாமே."

(யூகி முனி.)

என்றதால், மஞ்சள் பெருவயிறு என்ற காமாலை மகோதர நோயில் மஞ்சள் நோயைப் போல் உடல் மஞ்சளிக்கும். உடல் நடுக்கத்துடன் குளிருமுண்டாகும். மூக்கு, முகம், மார்பு இவை வியர்க்கும். தலை வலிக்கும், உடம்புலரும், புறங்கால் வீங்கும், அடிவயிறு மிகச் சுருங்கும். கோழையோடு சுரமுங்காயும், உறக்க மின்மை, சிந்தை சலித்தல், மிகுந்த தாகமாகிய இக்குறி குணங் களுண்டாம்.

(சி. ம.)

குறிப்பு.—கல்லீரல் பெருத்து அத்துடன் காமாலை நோயு முண்டாகி இந்நோயை விளைவிக்கவும் செய்யும் என அறியவும்.

26. குன்மப் பெருவயிறு.

" தானாகக் குலைதனையே மிகவலிக்குஞ்
சாப்பாடு செரியாமல் வயிறுகுத்தும்
வேனாக மேனோக்கிச் சர்த்தியாகும்
இடுக்கான வசீரணமாய்ப் பேதியாகும்
பானாகப் பக்கவிலா விடுப்புகுக்ஷி
பனைத்துமே வீங்கியே கல்லுபோலாம்
கோனாகக் கோமயம்போ னீரிறங்கும்
குன்ம மகோரத்தினிடக் குணங்கள்தானே."

(யூகி சிந்தாமணி.)

என்றதால், குன்ம மகோதர நோயில் ஈரல் குலை மிகவும் வலிக்கும். உணவு செரியாது. குடலைப் புரட்டி வலிக்கும். வாந்தி, கழிச்சல் இவையுண்டாகும். பிறகு விலாப்பக்கம், இடுப்பு, வயிறு இவை வீங்கிக் கல்லைப்போல் கடினமாயிருக்கும். பசுவின் நீர்போல் சிறுநீரிறங்கும். இத்தியாதி குறி குணங்களைக் காணலாம்.

(சி.ம.)

## 27. உதர மகோதரம் (உதரப் பெருவயிறு)

" குணமாக நாவறண்டு கண்சிவந்துகொள்ளுங்
கொடிதான வாயுவது திரட்சியாகும்
பணமாக பகர்ந்து நீர்போதவாங்கும்
பசியின்றிக் கனத்திருக்கு மலம்விடாது
வணமாக வயிறெல்லா மெத்தவூதி
மார்பளவுங் கழுத்தளவு மறையவீங்கும்
மணமாக வயிறுதான் மிகவேபீறும்
மகா உதரரோகத்தின் வளப்பந்தானே."

(யூகி சிந்தாமணி).

என்றதால், உதரப் பெருவயிறு என்னும் உதர மகோதர நோயில் நாவறட்சி, கண்சிவத்தல், வாயுக்கூடி வயிறு உப்பல், நீர் வேட்கை, பசியின்மை, வயிறு கனத்திருத்தல், மலக்கட்டு, அடி வயிறு முதல் மார்பு, கழுத்து வரையிலும் வயிறு ஊதி ஒரே வீக்கமாயிருத்தல், வயிறு மிகவும் பீறுதல் ஆகிய இத்தியாதி குறிகுணங்களைக் காணலாம்.

(சி.ம.)

## 28. ஆமைப் பெருவயிறு (கூர்ம மகோதரம்)

வளப்பந்தான் வறண்டுமே கண் சிவந்து
வயிறுவிம்மி வாயுவுந்தான் திரட்சி யாகும்
இளப்பந்தானி ருகண்ணுஞ்சுருங்கிக் கொள்ளு
மிருமலோடிளைப்புநீர் போதவாங்கும்
அளப்பந்தானா மைப்போல் வயிற்றிற்கட்டி
அசனந்தான் செல்லாது பெலனுங்குன்றும்
குளப்பந்தா னிரைச்சலோடு குமுறலாகுங்
கூர்மமாமகோதரத்தின் குறிப்பிதாமே."

(யூகி சிந்தாமணி.)

என்றதால், ஆமைப் பெருவயிறு நோயில் இரு கண்களும் பசை யிழந்து வறண்டு சிவந்து சுருங்கும். இருமல், இளைப்பு, நீர் வேட்கை இவையுண்டாகும். வயிற்றுள் வாயுமிகுந்து திரண்டு உருண்டு ஆமையோடு போல் கட்டிக் கொண்டு இரைச்சல், குமு றல் முதலியன வுண்டாகும். சோறு வேண்டாமை, உடல் வன்மை குறைதலாகிய குறிகுணங்களுண்டாகும்.

(சி. ம.)

### 29. மண்ணீரல் பெரு வயிறு (பிலீக மகோதரம்)

மேலே எண்வகைப் பெருவயிறு நோய்களிலொன்றாய்க் கூறப் பட்டிருப்பதைக் கவனிக்கவும்.

### 30. சுரப் பெருவயிறு.

" பேசவே காலொடு வயிறுபொத்திப்
பெருங்கணைக் காற்புறங்காலு மெத்தவீங்கி
வாசவே மார்பிடரி நரம்புதோன்றி
வயிறுதான் மிகப்பொருமி மெத்தவீங்கும்.
கூசவே சுரமோடு அசதியாகும்
கொடியதோர் தாப முண்டாம் எரிச்சலாகும்
வீசவே மிகவேண்டும் எரிச்சல் தன்னால்
வீங்குங் கண்சுரம கோதரம் விளம்பே."

(யூகி சிந்தாமணி.)

என்றதால், சுரப் பெரு வயிறு நோயில் சுரமும், வெப்பமுமுண் டாகி, உடல் சத்தற்று, உடல் முழுமையும் எரிச்சலுண்டாகும். வயிறு, புறங்கால், கணுக்கால், இவை வீங்கும். மார்பு, பிடரி இவற்றில் பச்சை நரம்பு புடைத்துக் காணும். வயிறு மிகப் பொருமி வீங்கும். தாபமுண்டாம். எரிச்சலினால் கண்கள் வீங்கும். இத்தியாதி குறி குணங்களைக் காணலாம்.

### 31. நீர்ப் பெருவயிறு (சல மகோதரம்).

மேலே எண்வகைப் பெரு வயிறு நோய்களிலொன்றாய்க் கூறப் பட்டிருப்பதைக் கவனிக்கவும்.

### 32. சதைப் பெரு வயிறு. (மாமிச மகோதரம்)

மேலே எண்வகைப் பெருவயிறு நோய்களிலொன்றாய்க் கூறப் பட்டிருப்பதைக் கவனிக்கவும்.

தீரும் தீராதவை.

(யூகிமுனி)

சாத்தியம்.

நேரான சாத்தியத்தைச் சொல்லக் கேளாய்
நேர்பான வாதமகோதரமும் பித்தம்
வாரான வழுவையொடு நழுவை நீராம்பல்
மகத்தான ஊராம்பல் வெப்புப்பாவை
வேறானமேற் கவிசைசூல் மகோதரமும்
விடமகோதரம் வல்லைப்பாண்டு வாகும்
தூரான சோபை மகோதரங் காமாலை
துடி உதரமகோதரமாங்கூர் மந்தானே.''

2. ''கூர்மமொடு பதினாறுஞ் சாத்தியம் ............''

என்பதினால்,

1. வளிப் பெருவயிறு.
2. அழல் பெருவயிறு.
3. வழுவைப் பெருவயிறு.
4. நழுவைப் பெருவயிறு.
5. நீராம்பல் பெருவயிறு.
6. ஊராம்பல் பெருவயிறு.
7. வெப்புப்பாவைப் பெருவயிறு.
8. மேற்கவிசைப் பெருவயிறு.
9. சூல் பெருவயிறு.
10. நச்சுப் பெருவயிறு.
11. வல்லைப் பெருவயிறு.
12. பாண்டுப் பெருவயிறு.
13. சோபைப் பெருவயிறு.
14. காமாலைப் பெருவயிறு.
15. உதரப் பெருவயிறு.
16. ஆமைப் பெருவயிறு.

இப்பதினாறு வகைப் பெருவயிறு நோய்களும் தக்க மருந்துகளால் தீரக் கூடியன என்றறிக !

(சி.ம.)

அசாத்தியம்.

1 " கூர்மமொடு பதினாறுஞ் சாத்தியமாகும்
குணமில்லா வசாத்தியத்தைக் கூறக்கேளாய்
தீர்மமொடு சிலேட்டுமமாம் வாதசிலேட்டுமம்
சீறிய பித்தச்சிலேட்டு மந்தொந்தமாகுங்
கார்மமொடு கல்மகோதரங் குலையின்முட்டி
கடியவில் மகோதரங் கீழ்க்கவிசையாகும்
பார்பக்கக் கவிசையொடு பழுக்கவிசையாகும்
பாரமாம் பெருவயிறு குன்மந்தானே."

2 " குன்மமொடு சுரமகோதரம் பீலிகையுங்
கொடிய சலமகோதரந்தான் மாமிசமாகும்
பன்மமொடு பதினாறும் சாத்தியமாகும்
பாடினதோர் முப்பத்திரண்டு மாச்சு."

* * *

என்பதினால்,

1. ஐயப் பெருவயிறு.
2. வளிஐயப் பெருவயிறு.
3. அழலையப் பெருவயிறு.
4. முக்குற்றப் பெருவயிறு.
5. கல் பெருவயிறு.
6. குலை முட்டிப் பெருவயிறு.
7. வில் பெருவயிறு.
8. கீழ்க் கவிசைப் பெருவயிறு.
9. பக்கக் கவிசைப் பெருவயிறு.
10. பழுக்கவிசைப் பெருவயிறு.
11. பெருவயிறு மகோதரம்.
12. குன்மப் பெருவயிறு.
13. சுரப் பெருவயிறு.
14. பிலீகப் பெருவயிறு.
15. நீர்ப் பெருவயிறு.
16. சதைப் பெருவயிறு.

இப்பதினாறு வகைப் பெருவயிறு நோய்களும் எளிதில் தீரா நோய்களென்றறிக.

(வேறு.)

சாகுங் குறிகுணங்கள் அல்லது அசாத்தியக் குறி குணங்களாவன.

(கை-எழு-பிரதி)

"காலொடு கையும் வயிறும் பற்றிக்
கனக்கவே வீங்கும் போது
மார்பிடை நரம்பு தோன்றில்
வயிறு மேலான போது
கூசிட வேண்டா மிந்தக்
குறிகளுண்டான போது
பொருமலு மிருமல் காணும்
போதவே துரந்து நிற்கும்
பருகிடும் தண்ணீர் தன்னைப்
பஞ்சிடுங் கண்கள் தானும்
வற்றிடு மிவைகள் கண்டால்
மரண மென்றறிந்து கொள்ளே."

என்பதினால் பெருவயிறு நோயினனுக்குக் கைகால்களும் வயிறும் திடீரென வீங்கி கண்கள் சோர்ந்து பஞ்சடைந்து நீர்வடிந்து பீளை சாடினும்; நாவறண்டு தனஞ்செயன் என்னும் வாயு கீழ் நோக்கினும், கையுங்கால்களும் தளதளப்பாகக் காணினும், மார்பிலும் வயிற்றின் பேரிலும் நாடி நரம்பு ரத்த நாளங்கள் புடைத்துத் தோன்றினாலும்; பொருமல், இருமல் இவை காணினும்; தண்ணீர் மிகப்பருகினும்; அந்நோயினன் தேறுவது கஷ்டமென்றறிக!

சாகாக் குறிகுணங்கள் அல்லது சாத்தியக் குறி குணங்களாவன.

1 " தாகமும் பசியுமுண்டாய்ச்
சலமொடு மலமு முண்டாய்,
மேல் வயிறதைப்பும் விட்டு
மெத்தெனக்குழைந்திருக்கில்,
கூசிட வேண்டாமிந்தக்
குறியிடங் கண்டபோது
மாசிலானருளைக் கொண்டே
மருந்து செய்ய விரும்பிடாயே."

2 " விரும்பிடு மருந்து செய்ய
மெத்தெனப் பொருந்திக் கொண்டு
கலங்கிட வேண்டா மிந்தக்
கருதிய குறிகள் கண்டால்
குலங்கள்ளோர் மருந்து கொண்டு
நருவருளப்படியே செய்து
நலம் பெறக் கொடுப்பாயானால்
நல்லதோர் சுகமுமாமே."

என்பதினால், பெருவயிறு நோயினனுக்கு நல்ல பசியுடன் தாக முண்டாய், மலசலம் சரிவரக் கழிந்து கொண்டு, மேல் வயிற்றுப் பக்கமுள்ள வீக்கம் நாளுக்கு நாள் குறைந்து மெத்தெனப் பஞ்சு போலிருக்குமாயின் பயப்படத் தேவையில்லை. தக்க மருந்து களினால் எளிதில் குணமாகிவிடுமென அறிக !

மகோதர நோயின் பொதுக் குறிகுணங்கள்.

(கை எழுத்துப் பிரதி.)

1 " மகோதரமான போது வாயுவும் நேரேயோடும்,
மகோதரமான போது வாடியே ஊதிக் கொள்ளும்,
மகோதரமானபோது வயிற்றடி புறங்கால் வீங்கும்,
மகோதரமானபோது வந்திடுங் குறிகள்தானே."

2 " வறண்டு கண் சிவந்து கொள்ளும்,
வாயுவுந்ததசையி லோடாப்
பரந்து நீர்போத வீங்கும்
பசியின்றிக் கனத்திருக்கும்,
விடிந்த போதெழுந்திருந்தால்
விம்மிடு மூதிக் கொள்ளும்
கடிந்திடு மகோதரத்தின்
கணக்கிவை யறிந்து கொள்ளே."

3 " சாரவேகையுங் காலுஞ்
சடக்கென வீங்கும்போது
கூரிய விழிகள் சோருங்
குறுகிடும் புற நீராகும்

தாதுடன் கூடி நின்றோர்
தனஞ் செயன் கீழேயாகும்
பாருமோர் மகோதரத்தின்
பண்புடை பாசமெல்லாம்.''

4 '' பலமுடனறிந்து கொண்டு
பரத்திடும் பரீட்சை கேளாய்
மலமுடன் சலமு முண்டாய்
வாயுவுங் கீழே நோக்கில்
சலமுடன் தீருமென்று
தீரவரறிந்து கொண்டு
பலமுடன் விடுவதென்று
பரிவுடன் மருந்து செய்யே.''

என்பதினால், மகோதர நோயில் வாயு மிகுந்து வயிறு ஊதிக் கொள்ளும் ; அடி வயிறு, புறங்கால்கள் இவை வீங்கும் ; கண்கள் வறண்டு சிவந்து காணும் ; தசைகளில் வாயுவு இயங்க முடியாது; எங்கும் நீர் கோத்துக்கொள்ளும் ; வீக்கமு முண்டாம் ; வயிறு கனத்திருக்கும் ; பசியிராது ; இரவில் தூங்கிக் காலையில் விழித்தெழும்போது வயிறு விம்மி ஊதிக் கொள்ளும் ; கையுங் கால்களும் திடீரென வீங்கிக் கொள்ளும் ; கண்கள் சோர்ந்து, சிறுத்துப் பஞ்சடைந்து, பீளை சாருதலுடன் கண்ணீரும் வடியும் ; தனஞ்செயன் என்ற வாயு கீழ் நோக்கும் ; இத்தியாதி குறி குணங்களை பெருவயிறு நோயில் காணலாம். அன்றியும், மல சலம் ஒழுங்காய் கழிந்தும், வாயுவும் கீழ் நோக்கில் எளிதில் தீரும் நோயாகுமென்றும் கூறியுள்ளார்.

## பொதுக்குறி குணங்கள் (வேறு).

### (சித்த மருத்துவம்.)

முற்குறியில் கூறிய குறிகுணங்களைக் காட்டி வயிறு முன் புறமாக (அடியிலிருந்து) பெருத்துக்கொண்டே வரும். நீர் பெருகப் பெருக மேல் நோக்கி மார்பு வரையிலும் வயிற்றினிரு பக்கங் களிலும் முட்டிப் பெருகும். வயிற்றின் மடிப்புகள் மறையும். வயிற்றின் சதை சத்தற்றுப்போம். தோலானது விரிந்து வெளுத்துக் கோடு கோடாகக் காணப்படும். தொப்புள் குவிந்து, தோல் தளதளத்து வெளிக்காணும். வயிற்றுள் நீர் அதிகமானால் வயிறு தளதளக்கும். உடல் அசையும்போது தோற் பையி லுள்ள நீர் அலைவதுபோல் வயிற்று நீர் அலை மோதும்.

தொடை, கால்கள், விதை, ஆண்குறி இவைகளிலும் நீர் கரந்து தளதளத்துக் காணும். மென் மேலும் நீர்க்கட்டு, மேல் மூச்சு, மார்பு துடிப்பு, படபடப்பு, மயக்கம் ஆகிய இக் குறி குணங்களையும், முதுகுப்புறம் வீங்குதலையும், பெருவயிறு நோயில் காணலாம்.

## முக்குற்ற வேறுபாடுகள்.

ஆரம்பத்தில் வளி, அழல் குற்றங்களிரண்டும் மிகுந்து கூடும் அதனால் மேல் நோக்குங்கால் (உதானவாயு) தூண்டப்பட்டு புளியேப்பம், வாந்தி, குமட்டல், சுவையின்மை முதலியன உண்டாகும். நடுக்கால் (சமானவாயு) தூண்டப்படுவதால் உணவு செரியாமை யுண்டாகும். பரவுகால் (வியானன்) தூண்டப்படுவதால் உணவின் சாரத்தையும், குறுதியையும் சரிவர உடலெங்கும் பரவ வொட்டாமற் செய்யும். ஆதலால் உடலின் வன்மை, குருதியின் நிறம், எடை முதலியவை குறையும். உடல் வெளுக்கும். கீழ் நோக்குங்கால் (அபானன்) கேடடைவதால் மல்மும், சிறுநீரும் கட்டுப்பட்டு ஒழுங்காய்க் கழியாமல் உடலில் நீர் கோத்து வீங்கச் செய்யும். அன்றியும் கட்டுப்பட்ட அபான வாயு வயிற்றுள் தங்கி, நிறைந்து பலவிதத் துன்பங்களை விளைவிக்கும் எனவும் அறிக !

## நாடிநடை.

1. "வாதமெனும் நாடியது தோன்றிற்
சீதமந்த மொடுவயிறு பொருமல் திரட்சிவாயு,
சீதமுறுங்கிராணி மகோதரம் நீராமை
திகழ்வாயு சூலை வலி கடுப்புத்திரை
நீதமுருங்கிருமி குன்ம மண்டவாதம்
நிலையும் நீர்க்கிரிச்சரங்கள் தத்துமேகம்,
பேதகமா மூத்ரப்பிணி மூலரோகம்
பேசவெகுபிணிகளுமே பொருளதாமே."

(சதகநாடி.)

என்பதினாலும் ;

2 "சாறுமடா பித்தமந்த வாதத்தேறில்,
களஞ்செய்யும் பாண்டுகாமாலைதானும்,
சேறுமடா நீராம்பல் மகோதரங்கள்."

*  *  *  *

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினாலும், வளிக்குற்றப் பெருவயிறு நோயில் வளி நாடி மிகுந்து நடக்குமெனவும்; பித்தவாத தொந்தநாடியிலும் (அழல்வளி) பெரு வயிறுநோய் உண்டாகுமென்பதும் தெரிகிறோம்.

## 26. குடல் பிடிப்பு நோய்

**வேறு பெயர்கள் :** ஆநாக நோய்; ஆநாகரோகம்.

இயல் : இது, வயிற்றிரைச்சல், வயிற்று வலி, வயிற்றுப் புரட்டல், மலக்கட்டு, பெருமூச்சு, சுரம் இவற்றையுண்டாக்கி வயிற்றை இழுத்துப் பிடித்துக் கொண்டு நிமிர முடியாதவாறு துன்புறுத்தும் நோய் என்பர்.

''ஆநாக ரோகம்'' என்றால் வயிற்றை இழுத்துப்பிடித்துக் கொண்டு வலிக்கும் நோய் எனப் பொருள்படும்.

இதன் இலக்கணத்தைக் கூறுகையில் இது, குதஸ்தானத்தில் கீழ் நோக்குங்கால் (அபானன்), இதயஸ்தானத்தில் மேல் நோக்குங்கால் (உதானவாயு), இவ்விரண்டு வாயுக்களும் தத தமக்குரிய தொழிலை விட்டு ஒன்றாகச் சேர்ந்து வயிற்றை இழுத்துப் பிடித்து வலித்துக்கொள்ளுமெனவும்; அக்காலத்தில், வயிற்றிலிரைச்சல், மலச்சிக்கல், சுரம், மேல் மூச்சு (சுவாசம்) முதலிய துன்பங்களை விளைவிக்குமெனவும் அகராதிகளில் கூறப்பட்டுள்ளது.

### நோய் வரும் வழி.

தன்வன்மைக்கு மிகுந்த உழைப்பு, விரைவாக ஓடல், எளிதில் செரிக்கக்கூடாத உணவுகளை யுண்ணல், வயிற்றின் மேல் அடிபடல், பட்டினியிருந்து அப்பால் அதிகமாக உண்ணல் ஆகிய இக்காரணங்களால் இந் நோயுண்டாகும்.

அன்றியும், வயிறு, குடல் இவைகளிலுண்டாகிய புண் குடலைத்துளைத்தலாலும், குடல் ஏற்றம், குடல் தாபிதம் முதலியவைகளிலும் இந் நோய் உண்டாகுமெனச் ''சித்த மருத்துவம்'' என்ற நூலில் கூறப்பட்டிருப்பினும் இவை ஒவ்வொன்றும் தனித்தனி நோயாகும். மேலே குறிப்பிட்ட உணவாதிசெயல் காரணங்களினாலேயே, இங்கு இப்போது குறிப்பிட்ட நோய்களும் உற்பத்தியாகும். எனவே, மேலே குறிப்பிட்ட உணவாதி செயல் காரணங்கள் தெரிந்திருந்தால் ''குடற்பிடிப்பு'' நோய்க்குக் காரணம் தெரிந்த மாதிரியாகும். ஒருவனுக்குக் குடலைத் துளைபோடும் அளவுக்குப் புண் ஏற்பட்டிருந்து ''குடலில் துளை'' உண்டாயின் (i.e., probably the author means perforation of the bowels) நோயினனது

நிலை எப்பேர்ப்பட்டதென்பதை உணர்ந்தால் இதிலிருந்து ''குடற்பிடிப்பு'' நோயுண்டாவதாகக் கூற இயலுமாவென்பதை யூகிக்க இடந்தரும் ; குடலைத் துளை போடுவதற்கு முன்னே குடற்பிடிப்புமிருக்கக்கூடும். அபான வாயுவும், உதான வாயுவும் தம் தம் தொழிலில் கேடடைந்த காரணத்தால் ''குடற்பிடிப்பு'' நோய் உண்டாவதாகக் கூறுவதே சாலச் சிறந்தது. இவ்விரண்டு வாயுக்களும் கேடடைவதற்குக் காரணம் மேற்கூறிய உணவாதி செயல்களேயாகும். வளிக் குற்ற மிகுதியும் சேர்ந்துள்ளது.

### முற்குறி குணங்கள்.

இந்நோய் ஆரம்பத்தில் வயிறு இரைந்து நோகும். வயிறூதிக் கொள்ளும். வயிற்றுள் தாங்கமுடியாத வலியுண்டாகும். குடற் புரட்டல், மூச்சுவிட முடியாமை, வயிற்றை இழுத்துப் பிடித்து நிமிர வொட்டாதவாறு செய்தல், வாந்தியுண்டாதல், ஏப்பம் வரல், ஒன்றிலும் விருப்பமின்மை, பேதிக்குக் கொடுக்கும் மருந்துகள், பீச்சு முதலியவை பயன் தராமை, மலசலம் தடைப்படல், சுரம் காய்தல் ஆகிய இக்குறி குணங்களைப் படிப்படியாகக் காணலாம்.

(சி. ம.)

### நோய் எண்.

இந்நோய் ஒன்றேயாயினும் இதில் தோன்றும் சிலகுறி குணங்களைக் கொண்டு நான்கு பிரிவுகளாக வகுத்துள்ளார்கள். அவை :—

1. அட்டிலம்,
2. பிரதி அட்டிலம்,
3. துநி,
4. பிரதி துநி,

என்பனவாம்.

### இவை ஒவ்வொன்றின் இலக்கண..

#### 1. அட்டிலம்.

இந்த வகைக் குடற்பிடிப்பு நோயில் வயிற்றில் வட்டமாகத் திரண்டு, கடினப்பட்டு ஒரு கட்டியைப்போல் வயிற்றில் மேலெழுந்து காண்பது.

#### 2. பிரதி அட்டிலம்.

இந்நோயில் மேற்கூறிய ''அட்டிலம்'' என்ற அவ்வெழுச்சிக் கட்டியானது நீண்ட வடிவத்துடன் அம்மிக் குழவிபோல் காண்பது எனப்படும்.

### 3. துநி.

இந்நோயில் மேல்வயிற்றிலிருந்து கீழ்நோக்கி காற்று இரைந்து தாக்கித் தாங்கமுடியாத வலியை உண்டாக்குவது எனப்படும்.

### 4. பிரதி துநி.

இது முன்கூறிய ''துநி'' நோய்க்கு எதிர்ப் பாகமாயுள்ளது. அடி வயிற்றிலிருந்து மேல்நோக்கிக் காற்று இரைந்து, தாக்கித் தாங்கமுடியாத வலியை யுண்டாக்குவது எனப்படும். இவ்வாறாக நான்கு வகைக் குடற் பிடிப்பு நோய்களாக வகுத்துள்ளார்.

இவையன்றியும், சிலர் தடித்துக் குளகுளத்த சுனைநீர், மிகக் குளிர்ச்சியான உணவு, ஊசிய உணவு இவற்றைக் கொள்வதால், அவைகள் வயிற்றில் செரியாமற்றங்கி யிருந்து, வயிற்றை உப்பச் செய்து, கட்டியைக் கவிழ்த்தியது போன்ற வடிவத்துடன் வயிற்றில் ஓரிடத்தினின்று மற்றோரிடத்திற்கு ஓடித் திரிந்து, உலாவிப் பல துன்பங்களை விளைவிக்கும் எனவும்; அந்நோய் தீராமை எனக் கருதி அதனைக் ''குடற்பிடிப்பு'' என்னும் ''ஆநாக'' நோயில் இணைத்துள்ளனர். இது வடிவினில் கட்டிபோல் தோன்றினும் உண்மையில் கட்டி அல்ல.

மேற்கூறிய உணவு வயிற்றுள் செரிக்காமற் புளித்து, அடை போல் உப்பி, வாயு (காற்று) மிகுந்து கூடி, குடலில், நிறைந்து எளிதில் வெளியாகாமல் குடல் வழியாக யோடிப் புரளும் வடிவே யாகுமென அறியவும்.

கீழ்நோக்குங் காலாகிய அபான வாயுவைத் தூண்டிக் கழியச் செய்யும். மருந்துகள் கொடுக்கின் கழிச்சல் நிற்கும். வயிற்றில் கட்டிபோன்று புரளுவதும் நின்றுபோம். நோயும் குணமாகும்.

(சி. ம.)

### பொதுக் குறிகுணங்கள்.

முற்குறியில் கூறிய குறி குணங்கள் தோன்றிய சிறிது நேரத்துக்கெல்லாம் தாங்கமுடியாத வலியை யுண்டாக்கி நோயினனைப் படுக்கையிற் கிடக்கச் செய்யும். தாங்கமுடியாத வயிற்று வலியின் கொடுமையால் அடிவயிற்றை அசைக்க முடியாமை, கைகால்கள் சில்லிடல், தாடை வெளுத்தல், வாந்தி, அடிக்கடி காற்றுப் பரியினும் மலம் கழியாமை, விக்கல், கை, கால்கள் தளரல், கண் பஞ்சடைதல், நாடிகள் தளரல், பிசுபிசுத்த வியர்வை, குளிர் நடுக்கல், சிறு சுரம் ஆகிய இக்குறி குணங்களோடு நோய் தீவிரமாயின் முப்பிணிக் குறி குணங்களையும் காண்பிக்கும் என அறிக!

### மேற்கூறிய நான்கு பிரிவு குடற்பிடிப்பு நோய்களின் தனித்தனிக் குறி குணங்கள்.

#### 1. அட்டிலம் (மேல் அட்டிலம்).

இது, வயிற்றில் வட்டமாய்த் திரண்டெழுந்து கடினமாயும் கட்டி போன்றும் காணும். இந்நோய் வயிற்றை (தீனிப் பையைப்) பற்றி வருவதாகும். பொதுக்குறி குணங்களில் கூறியவைகள் தோன்றும். அத்துடன், வயிற்றுவலி, மேல் வயிறு மிகுதியாக நோதல், வாந்தி மிகுதியாக வுண்டாதல் வெகு விரைவில் முப்பிணிக் குறி குணங்களையு முண்டாக்கிக் கெடுதிகள் பலவற்றை விளைவிக்கும்.

#### 2. பிரதி அட்டிலம் (கீழ் அட்டிலம்).

இது, வயிற்றில் நீண்டு திரண்டு அம்மிக் குழவியைப் போன்ற வடிவத்தில் எழும் நோயாகும். சிறுகுடல், பெருங்குடல் இவற்றில் நோய் மிகுதியாக யிருக்கும். மேலே கூறிய ''அட்டிலம்'' நோயில் காணும் குறி குணங்களும் விரைவில் தோன்றும்.

#### 3. துநி.

இதில் உண்ட உணவு செரிப்பிக்காமல் குடலில் தங்கிப் புளித்து, தாபிதத்தை உண்டாக்கி, குடல் இயற்கையாகக் கீழ் நோக்கி ஊடுருவுவதை விட்டு (Natural on ward peristalsis), பெரும் புழுவைப் போல் எதிர்த்து மேல்நோக்கிக் குடலை ஊடுருவச் செய்யும் (i.e. Reverse Peristalsis). இவ்வாறு குடல் மேல் நோக்கி எதிர்த்து ஊடுருவுவது கண்ணுக்கும் புலப்படும். அன்றியும் பொதுக்குறி குணங்களிற் கூறியவைகளும் தோன்றும்.

#### 4. பிரதி துநி.

இதில் உண்ணும் உணவு அகட்டில் (வயிற்றில்) சென்று அங்கு சமைக்கப் பெற்றுக் கீழ்நோக்கிக் குடல் வழியே உணவின் சாரத்தை ஊட்டி, பின் வேண்டாப் பொருளைக் கழி பொருளாக வெளிப்படுத்து முறையில் வயிற்றிலிருந்து கீழ்வாய் வரையில் உள்ள குடல், புழு ஊடுருவதுபோல் கீழ்நோக்கி ஊருவதைவிட்டு இயற்கைக்கு மாறாக மேல் நோக்கி ஊரும். (Normal processes of digestion absorption assimilation and excretion are interfered with and there is reverse peristalsis of the bowels.)

ஆதலின் முதன் முதலில் வயிற்றிலுள்ள பொருள்கள் யாவும் வாந்தியாய், மேல்நோக்கி வெளியாகும். பிறகு பித்துநீர், நீராக வாந்தியாகி, அதன்பிறகு சிறுகுடலிலுள்ளதும், அதன்பின் பெருங்குடலிலுள்ளதுமான கழி பொருள்கள் யாவும் (மலம்) வாந்தியோடு வெளியாகும். இந்நோயில் மேல்நோக்கி ஊரும் குடலின் இயக்கத்தின் வடிவை நாம் நன்றாய்க் காணக்கூடும். மற்றும் பொதுக்குறி குணங்களில் கூறியவைகளும் தோன்றும்.

### முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவாதி செயல்களால் வளிக் குற்றம் தன்னளவில் மிகுந்து, மேல்நோக்குங்கால், கீழ்நோக்குங்கால், நடுக்கால்(உதானன், அபானன், சமானன்) ஆகிய இவ் வாயுக்கள் தத்தம் இயற்கைத் தொழிலைவிட்டு அதற்கு எதிரான தொழிலைச் செய்யுமாறு தூண்டப்பட்டு, அதே காரணமாக ஐயமுமிகுந்து, வளி ஐயமாகி நோயை மீண்டும் வலுப்படுத்தும். இறுதியில் முக்குற்றங்களும் கேடடைந்து முப்பிணியாகி நோயினனைப் பல துன்பங்களுக் காளாக்கிக் கொல்லுமெனவும் அறிக !

### தீரும் தீராதவை.

மேற்கூறிய நான்குவகைக் குடற்பிடிப்பு நோய்களும் பொதுவாகத் திருவது அரிது. நோய்கண்டவுடனேயே துரிதமாகத் தக்க மருத்துவம் புரிதல் அவசியம். தக்க மருந்துகள் கொடுத்தும் இரண்டொரு மணி நேரத்திற்குள் நோய் கட்டுப்படவில்லையானால் அப்பால் மீண்டும் மருந்துகள் கொடுப்பதில் பயனில்லை என்பதை உணரவும். நவீன முறைப்படி அறுவை மருத்துவத்தால் ஒருக்கால் குணமாகலாம்.

(சி. ம.)

(மேற்கோள்.)

'' உண்ட ஊண் செரியாதாகில்
ஊண்மிகச் செல்லாதாகில்
கொண்டதோர் வாயுமுற்றிக்
குடல்வலிப் புரளுமாயில்
பண்டுகொல் மருந்துசெய்யில்
பார்க்கவே வேண்டுமென்றால்
வண்டுசேர் குழலினாளே
மரணமென்றிதனைச் சாற்றே.''

(நாடி நூல்.)

என்றதால் இந்நோய் தீருவது அரிது என்பது புலனாகிறது.

## 27. பெருங் கழிச்சல்.

வேறு பெயர்கள் : மிகு கழிச்சல் ; அதிசாரம், நீர்ப்பேதி, மிகுபேதி என்பனவாம்.

**இயல்.**—உண்ட உணவு செரித்தும் செரியாததுமாய்க் கழிவதும்; கீழ்க்குடல் வெதும்பி யிருப்பின் அங்கு தங்கமுடியாமையால் உடனே கழித்துவிடுவதும்; உடற்கு ஊட்டம் தருவதற்காக உண்ணும் உணவு குடலிற்றங்காது வெளியாகிவிடுவதாலும்; உடலின் ஊட்டம் குறைந்து உடல் மெலிவடைவதும்; உண்ட பொருள் அனைத்தும் அடிக்கடி பல முறை கழிவதுமான இயல்புடைய நோயாதலால் ''பெருங்கழிச்சல்' எனவும் உணவின் சாரத்தை உடலுக்களிக்காது வெளிக் கொண்டுவருவதால் ''அதிசாரம்'' எனவும் வழங்குவர்.

(சி.ம.)

(வேறு)

மலத்தை விரைவில் நீர்வடிவப்படுத்திப் பேதியாக்கலால் இஃது ''அதிசாரம்'' அல்லது ''பெருங்கழிச்சல்'' எனப் பெயராயிற்று எனவும்; மலமும் நீரும் தாமரைத் தண்ணீர்போல் குடலில் ஒட்டாதபடி வெளியாதலால் அப்பெயர் ஏற்பட்டதெனவும்; செரியாமை, புசிப்பில் விருப்பமின்மை, ஒருவேளை சிறிது பலவந்தமாகப் புசிப்பின் அது செரிக்காது கீழ்நோக்கிக் கழிந்து விடுமென்ற காரணத்தால் அப்பெயர் ஏற்பட்டதெனவும் கூறுவர்.

(கை-எழுத்துப்பிரதி.)

நோய் வரும் வழி.

வயிற்றில் மந்தமிருக்குங் காலத்தில் மாப்பண்டம், புலால், நெய், எண்ணெய் முதலிய உணவுகளை மிகுதியும் புசித்தல்; அழுகிய மீன் அல்லது காய்கறிகள், ஊசிய பொருள்கள், வேகாப் பொருள்கள், எளிதில் செரிக்கக்கூடாத பொருளகள், தித்திப்புப் பண்டங்கள் ஆகிய இவற்றை உண்ணலாலும்; வயிற்றில் மந்தமுற்றபோது பெண்களோடு மருவுதலாலும் பசித்தீ கெட்டு அழல், வளியாகிய இரு குற்றங்களும் கேடடைவதால் கீழ்நோக்குங்காலாகிய அபான வாயு தூண்டப்பட்டு பெருங் கழிச்சலை உண்டாக்கும்.

அன்றியும், குடலில் வயிற்றுப் புழுக்கள் மிகுந்திருப்பின் இந்நோயுண்டாகுமெனவும் கூறுவர்.

(சி.ம.)

முற்குறி குணங்கள்.

உணவு ஏதேனும் உண்டவுடன் வாய் நீரூறல், வாய் குமட்டல், ஏப்பம், விக்கல், வயிறுப்பல், குடலிரைதல், வயிறு நோதல், அடிவயிறு இழுத்துப் பிடித்தாற்போலிருத்தல் ஆகிய இக்குறி குணங்களைக் காட்டி வயிறு கடுத்துக் கழிச்சல் தொடங்கும்.

(சி. ம.)

## நோய் எண்.

1. வளிப்பெருங் கழிச்சல்.
2. தீப்பெருங் கழிச்சல்.
3. ஐயப் பெருங்கழிச்சல்.
4. முக்குற்றப் பெருங்கழிச்சல்.

என நான்கு வகைப் பெருங் கழிச்சல் நோய்களென கூறுவர் ஒரு சாரார்.

வேறு சிலர் முன் சொன்ன நான்கு பிரிவுகளோடு கீழ்க்காணும் வேறு நான்கு பிரிவுகளையும் சேர்த்து மொத்தம் எண் வகைப் பெருங் கழிச்சல்கள் என்பர். அவையாவன :—

5. தோடப்பெருங்கழிச்சல் (தோஷாதிசாரம்).

6. சுரப்பெருங்கழிச்சல் (சுராதிசாரம்).

7. துக்கப் பெருங்கழிச்சல் (துக்காதிசாரம் அல்லது பயப் பெருங்கழிச்சல் அல்லது பயாதிசாரம்).

8. குருதிப் பெருங்கழிச்சல் (இரத்தாதிசாரம்).

இவ்வாறாக எண் வகைப் பெருங்கழிச்சல் எனக் கூறுவாருமுளர். சிலர் குருதிக் கழிச்சலை அதிசார நோயில் சேர்க்காமல் துக்காதிசாரம், பயாதிசாரம் இவை இரண்டு பிரிவுகளாகத் தனித்தனியாகச் சேர்த்து மொத்தம் எண் வகை அதிசார நோய்களென்பர். சித்த மருத்துவத்தில் துக்கம், பயம் இவற்றாலேற்படும் பெருங் கழிச்சலை ஒன்றாகவும், குருதிக் கழிச்சலை ஒன்றாகவும் சேர்த்துள்ளார்.

### ஒவ்வொரு பிரிவுப் பெருங்கழிச்சல் நோயின் குறிகுணங்கள்.

### 1. வளிப் பெருங்கழிச்சல்.

" சாற்றவே வயிறுதனைப் பொருமி நொந்து
தனிச்சூலை போலவே வாயு தோன்றும்,
ஆற்றவே நீரிறங்கா அசனந்தானும்
அரைவாசி சீரணமாய்ப் பேதியாகும்,
மாற்றவே மஞ்சளித்துக் கருக்கும் பேதி
மகத்தான துர்க்கந்தம் வெளுப்புமாகும்,
நீற்றவே நெஞ்சுதனிற் புளித்தேக்காகும்
நேரான வாதாதி சாரமாமே. (யூகி முனி)

என்பதினால், வளிப்பெருங் கழிச்சல் நோயில் வயிறு பொருமி நொந்து, சூலை நோய் போல் வலித்து வயிற்றில் காற்றுக்கூடி இரையும், நீரிறங்காது, அடிக்கடி கழிச்சலுண்டாம். செரியாமை, வாந்தி, மயக்கம், நாவறட்சி இவையுண்டாகும். கழிச்சலானது நுரையும், கருமை நிறத்துடனும், மிகவும் கெட்ட நாற்றமுடனும் இருக்கும். ஏப்பமுண்டாகும். உடம்பு நோகும். இத்தியாதி குறி குணங்களைக் காணலாம்.

## 2. அழல் பெருங்கழிச்சல்.

" ஆமென்ற மலந்தானு மஞ்சளித்து
அதிகமாய் வறண்டுமே நுரைதான் பாயும்,
வாமென்ற வாயுதான் மிக வுண்டாகும்
வற்றியே வுடம்பெங்குங் கால்கை வீங்கும்,
காமென்ற கலங்காய்ச்சல் போலக் காயும்
கருதியே யுடம்பெங்கும் வெண்மையாகும்
தாமென்ற தலைவலித்து வாந்தியாகுஞ்
சமரசமாம் பித்தாதி சாரமாமே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், அழல் பெருங் கழிச்சல் நோயில் கழிச்சலானது சிவந்து அல்லது மஞ்சளித்து நுரைகூடி, மிகுந்த காற்றுப் பரிதலுடன் இழியும், உடல் கை கால் இவைகள் வீங்கும். காய்ச்சல், உடல் வெளுத்தல், தலை நோதல், வாந்தி இவைகள் உண்டாகும். கொப்பூழைச் சுற்றியுள்ள குடல் முறுக்கி வலித்து, உடலைத் துவளச் செய்து, வயிறும் கீழ் வாயும் கடுத்து முதலில் கருமையாயும், நுரையுடனும் கூடிக் கழிச்சலுண்டாகும். பிறகு குருதியாய்க் கழியும். நீர் வேட்கை, வியர்வை, மூர்ச்சை, உதடு உலர்தல், மார்புவலி, கழுத்து வலி இவையுண்டாகும், உடல் வற்றிப் பிறகு கைகால்கள் இவை வீங்கல் முதலிய குறி குணங்களை உண்டாக்கும்.

## 3. ஐயப் பெருங்கழிச்சல்.

" சாரமாய் நாற்றந்தான் மிகவுண்டாகித்
தவளம் போலே வெளுத்து நுரையுமாகி
வாரமாய் வயிறு வலித்துப் பேதியாகும்
மாமிசந்தான் சத்து சத்தாய் விடுக்கும்

ஆரமாயருசியொடு இருமல் சுவாசம்,
அழுந்தி மயிர்க்கூச்செறிந் தாசனங்கடுத்தல்,
நீரமாய்த் தேகமெங்குந் தினவுண்டாகுஞ்
சிலேட்டுமாதி சாரமென்றே செப்பலாமே.''

(யூகி முனி.)

என்பதினால், ஐயப்பெருங்கழிச்சல் நோயில் மிகுந்த நாற்றத்துடன் நுரைத்தும், வெளுத்தும், சீதமாகவும், வயிறு வலித்துப், அடிக்கடி பேதியாகும். குடல் இற்றுச் சளிபோலும், இறைச்சித் துண்டுகள் போலவும் கழிச்சலில் வெளியாகும். சுவையின்மை. இருமல், மார்புச்சளி, பெருமூச்சு, மயிர் சிலிர்த்தல், எருவாய் கடுத்தல், தேகம் வெளுத்தல், உடலில் தினவு. நீரருகல் முதலிய குறி குணங்களையும் உண்டாக்கும்.

### 4. முக்குற்றப் பெருங்கழிச்சல்

'' செப்பவே உள்ளெரிவாய்ப் புறங்குளிர்ச்சி
செழுமை விக்கல் வாந்தியோடிருமல், சுவாசம்,
துப்பவே வயிறிரைந்து பொருமலாகிச்
சுருட்டியே வயிறதுவும் வலித்துக் காணும்,
இப்பவே இரத்த சீதக் கழிச்சல்
எழிலான் நித்திரையுமுடல் நடுக்கும்
உப்பவே உடற்குத்து குணர்ச்சியின்மை
உருகுதிரி தோடவதி சாரமாமே.''

(யூகி-முனி.)

என்பதினால், முக்குற்றப் பெருங்கழிச்சல் நோயில் வயிறு இரைந்து பொருமிச்சுருட்டி வலித்துக் குருதியும் சளியுங் கலந்து அடிக்கடி கழிச்சலுண்டாகும். மார்பில் கோழை, இருமல், பெருமூச்சு வாங்கல், இழுப்பு, உடம்பினுள் ஓர்வித அழற்சி இவையுண்டாகும். உடல் வெளிப்புறமாய்க் குளிரல், வியர்த்தல், விக்கலெடுத்தல், வாந்தியுண்டாதல், கைகால்கள் சில்லிடல், உடல் நடுக்கம், உடல் ஊதலாகிய குறிகுணங்களோடு முப்பிணிக்குறி குணங்களாகிய பிதற்றல், புலம்பல், ஆடல், பாடல், எழுந்து ஓட எத்தனித்தல், போராடல் முதலிய குறி குணங்களையும் விளைவிக்கும். மிகுந்த சுரமுமுண்டாகும்.

## 5. தோடப் பெருங்கழிச்சல் (தோடாதிசாரம்.)

" உறுகின்ற நீருந்தி வழிதான் புக்கில்
உண்ணீர் தானரும்பு புரைதனிலிழிந்து,
அறுகின்ற வந்நரம்பை யழுகப்பண்ணி
அபான வாயுவொடு கூடி மலப்பைக்குள்ளே,
புறுகின்றதான் விகுத்து மூலாக் கினிக்கீழ்
பொருந்தியதோ ரசனத்தைச் செரிக்கொட்டாது
மறுகின்ற வயிறிரைந்து கழிச்சலாகும்
மகா நாற்ற முண்டாந் தோடாதிசாரம்."

என்பதினால், தோடப்பெருங்கழிச்சலென்னும் தோடாதிசார நோயில், குடிக்கும் நீரானது நேரே செல்ல வேண்டிய இயற்கை வழியாகச்செல்லாமல், நரம்புகளின்துளையில் (Probably Lymphatics) இழிந்து, அங்கு ஊறி, அந்நரம்புகளை அழுகும்படி செய்து, கீழ் நோக்குங்காலாகிய அபான வாயுவோடுகூடி மலப்பைக்குள் நுழைந்து அப்பையை விகுக்கும்படி செய்து, மூலாக்கினிக் கீழ் பொருந்தியுள்ள சோற்றைச் செரிக்க வொட்டாமற் செய்து, வயிறு இரைந்து கொடிய நாற்றத்துடன் பேதியாகும். இத்தியாதி குறி குணங்களை இந்நோய் பெற்றிருக்குமென யூகி சிந்தாமணியில் விளக்கியுள்ளார்.

ஆனால் " சித்த மருத்துவத்தில் " இந்நோயைப்பற்றி வேறு வகையாக தாற்பரியம் கூறியுள்ளார். அதாவது சிறு பிள்ளைகளுக்குப் புள்ளினம் அல்லது பறவைகளின் பார்வையால் உண்டாம் தோடம் எனவும், அதனைக் குழந்தை மருத்துவத்தில் காணலாம் எனவும் கூறப்பட்டுள்ளது. இவ்வபிப்பிராயம் பொருத்தமல்லவென்பது மேலே யூகி சிந்தாமணி மேற்கோளினாலறிகிறோம். குழந்தைப் பிணிகளில்வரும் புள்ளின் தோடம் வேறு என்பதும் தெளிவாகிறது.

## 6. சுரப் பெருங்கழிச்சல் (சுராதிசாரம் சன்னிபாதாதிசாரம்.)

" அதிசார மூர்ச்சை யொடு பிரலாபந்தான்
அடித்துடையு மயர்ந்து மிகக் கடுப்புண்டாகும்,
கதிசாரக் காய்ச்சலோடு சர்த்திதாகங்
கடுப்புண்டாஞ் சரீர மெங்குங் காந்தலாகும்,
ஒதிசாரஞ் சிறுநீர் தன்னோடு கழிச்சல்
உஷ்ணமாய் ஓயாத விருமலாகும்,
துதிசாரம் பலவன்னமாகும்
பேதி சூட்சமாஞ் சுராதியெனு மதிசாரமே."

(வேறு) சன்னிபாதாதிசாரம்.

" சுரமாகி யுடம்பெல்லா மிகவேகாயும்
சுவாசமா யிருமலோடு விக்கலாகும்,
அரமாகி நாவறண்டு அழற்சியாகி
யதிசாரமாய்க் கழிந்து ஆலோபிக்கும்,
மரமாகி யுடம்பெல்லாந் திமிருண்டாகும்
வயிறுவலி யடிக்கடிக்கு மயக்கமாகும்,
உரமாகி யுடம்பெங்குங் குளுமையாகும
உறுதி சன்னி வாதாதி சாரமாமே."

(யூகி சிந்தாமணி.)

(இதன் பொருள்.)

சுரப்பெருங்கழிச்சலென்னும் சுராதிசார நோயில் பல நிற மாய்ப் பேதியாகும். சிறுநீர் தனியாக இறங்காமல் பேதியாகும் போதெல்லாம் அது கூடவே சிறுநீரும் இழியும். மூர்ச்சை, வாய் பிதற்றல், அடித்துடை அயர்ந்து போய்க் கடுகடுத்தல், சுரங்காய்தல், வாந்தியாதல், நீர் வேட்கை, ஆசனக்கடுப்பு, இரு மல், உடல் சூடாக யிருத்தலாகிய குறி குணங்களைக் காட்டும்.

அன்றியும் இந்நோய் சன்னிபாத நிலையை யடையும்போது சுரமானது மிகுந்து காயும். சுவாசம், இருமல், விக்கல், நா வறட்சி, அழற்சி, அதிகமாய்ப் பேதியாதல், பிரலாபித்தல், உடம் பெங்கும் திமிருண்டாதல், வயிற்றுள் வலி, அடிக்கடி மயக்க முண்டாதல், உடம்பெங்குங் குளிர்ந்திருத்தல், ஆகிய இக்குறி குணங்களையும் காண்பிக்கும்.

இந்நோயைப்பற்றிச் " சித்த மருத்துவத்தில் " கூறியிருப் பது யாதெனில் : இது சுரநோய்க்குத் துணையாக வரும் நோய் என்றும் ; உதாரணமாக டைபாயிட், டைபஸ் (Enteric fever, Typhus fever) முதலிய சுரங்களில் உண்டாகும் கழிச்சல் போலாகுமெனவும், இந்நோயின் குறிகுணங்களைச் சுரப்பகுதி யில் காணலாம் எனவும் கூறியுள்ளார். ஆனால் சுரப் பகுதியில் இந்நோய் பற்றி யாதொரு விவரமும் சொல்லப்படவில்லை.

மேலே யூகிமுனி கூறிய மேற்கோள்கள் இந்நோயை அறிந்து கொள்ள மிகவும் பொருத்தமானவையாகும்.

### 7. பயம் அல்லது துக்கம் பெருங்கழிச்சல்.

பயம் அல்லது துக்கம் காரணமாக உண்டான மனக்கலக்கத்தால் முக்குற்றங்களும் தன்னிலை பிறழ்ந்து வரும் கழிச்சல் நோயாம். இந்நோயினன் மனதைத் தன்னிலைப் படுத்துவதற்கான வழியைத் தேடி, மிகுந்த குற்றத்தைத் தணிக்கப் பரிகாரம் செய்ய வேண்டுமெனச் ''சித்த மருத்துவம்'' கூறுகிறது.

வேறு சில கை எழுத்துப் பிரதி நூல்களை ஆராயுங்கால், பயாதிசாரம், துக்காதிசாரம் என இருவகையாகவும், இவை ரண்டும் முறையே திடீரென வுண்டாகும் பயத்தினாலோ அல்லது கடுமையான துக்கத்தினாலோ உடல் திடுக்கிட்ட காலத்து பித்தம் (அழல் குற்றம்) அதிகரித்து வாயுக்களைத் தூண்டி மலப் பையிலுள்ள மலத்தைக் கலக்கிச் சூட்டுடன் நீர் நீராக (சல வடிவமாக) அடிக்கடி பேதியாகப் பண்ணுமென்பதாகக் கூறப் பட்டிருக்கின்றன.

### 8. குருதிக் கழிச்சல்.

இந்நோய் மிகுந்த காரம், புளிப்பு இவை கூடிய உணவைக் கொள்ளுவதாலும், ரசம், பாடாணம் கூடிய மருந்துகளைப் பெரும் அளவிலேனும் அல்லது நீண்டநாள்கள் தொடர்ந்து உட்கொள் வதாலும்; அல்லது வெளிப்புற பரிகார முறையில் வழங்கும் குன்றிமணி, சித்திரமூலம், சேங்கொட்டை, மூசாம்பரம் இவை போன்ற புண்ணாகக் கூடிய தனி மருந்துகளையாவது, அவற்றால் தயாரித்த செய்முறை மருந்துகளையாவது அளவறியாது கொடுத்து ; அதன் காரணமாக அம்மருந்துகள் குடலைத்தாபித்துப் புண்ணாக்கி, அதினின்றும் வடியும் குருதியைக் ''குருதிக் கழிச்சல்'' என்பர் எனச் '' சித்த மருத்துவம் '' கூறுகிறது.

அன்றியும், சீதக் கழிச்சல் போலவே சீதம் அல்லது எரிவுயின்றி பச்சைக் குருதியே போன்று இழிவதையும் குருதிக் கழிச்சலென்பர் எனவும் ; இவைகளைப் பற்றிய விவரங்களை நஞ்சு நூலிலும், சீதக் கழிச்சல் பகுதியிலும் காணலாம் எனவும் ''சித்த மருத்துவம் '' கூறுகின்றது.

### பெருங்கழிச்சல் நோயின் பொதுக்குறி குணங்கள்.

இந் நோயில், வாய்நீர் சுரத்தல், உணவில் இச்சையின்மை, செரியாமை, புளியேப்பம், விக்கல், குமட்டல், வயிறுநோதல், வயிறு இரைதல், வயிறுப்பல், வயிறு இரைந்து நொந்து, வயிறுப் பிச் செரித்தும் செரியாததுமாய் அடிக்கடி கழிதல், நாளுக்கு நாள் கழிச்சல் மிகுதியால், உடல் வன்மை குறைதல் : உடல்

வாடல் ; உடல் வறண்டுபோதல் ; குருதி குறைந்து உடல் வெளுத்தல் ; கால்கள் வீங்கல், நீர் கோர்த்தல், ஊக்கமின்மை ; மனந் தளரல் ; சோர்வு, வெகுளி ; கைகால்கள் சில்லிடல் ஆகிய குறிகுணங்களைக் காணலாம்.

தக்க மருத்துவம் செய்யாவிடில் குறுக்குவலி, நாடிகள் தளரல் (i.e. வாதமடங்கல், வாதமும் பித்தமுமடங்கல்) முதலியவை கண்டு நீர்க்கட்டு உண்டாய் உயிரையும் போக்கும். புத்தி (அறிவு) மட்டும் இந்நோயில் சாகும்வரைக்கும் தெளிவாயிருக்குமென அறியவும்.

(சி. ம.)

### முக்குற்ற முதலிய வேறுபாடுகள்

உணவாதி செயல்களால் அழல் குற்றமேனும், வளி அழல் குற்றங்களேனும் கேடடைந்து, மிகுதியாகி மேல் நோக்குங்காலைத் தூண்டி எழச் செய்து, அதன் காரணமாகச் செரியாமையையுண்டாக்கி வாய் நீரூறல், விக்கல், ஏப்பம், முதலியவற்றையும் உண்டாக்கும். அதே காரணமாகக் கீழ் நோக்குங் கால் தூண்டப்பட்டு வயிறு புரட்டல், காற்றுச் சேரல், வயிறு இரைதல், கழிச்சலாகியவற்றைப் பிறப்பித்து உடற்றாதுக்களில் இரசதாதுவையும் குருதிதாதுவையும் கேடடையச் செய்வதால் குருதியின் வன்மை குறைந்து உடல் வெளுத்து கால்களில் வீக்க முண்டாவதுண்டு.

### நீர்.

கழிச்சல் நோயில் சிறு நீர் குறைந்து மஞ்சள் அல்லது சிவந்த நிறம் பெறும்.

### எரு (மலம்).

எருவானது மஞ்சள், கருப்பு, வெளுப்பு என்னும் நிறங்ககளோடு நீர் நீராக, கேடடைந்தெழுந்த குற்றங்களுக்கேற்பக் கழிச்சல் காணும். மலம் குழம்பாகவும், அசீரணமாகவும், தண்ணீராகவும், ரத்த நிறமாகவுமிருக்கக் கூடும்.

### நாடி நடை.

1. "உறுதியுள்ள பித்தமது தோன்றில் வெப்பு
உஷ்ணவாயு வத்தி சுரமதி சாரங்கள்,
மறதியுடன் சிரக்கமாம் பயித்திய ரோகம்,
வளர்சோகையழலெரிவு காந்தல் கைப்பு,
இருதயத்திற் கலக்கமது மறப்புதாகம்,
எழுங்கனவு மேயணைவு மயக்க மூர்ச்சை.
சிறிது பெரும் பாடு ரத்தம் பிரமேகங்கள
சேர்ந்து வெகுபிணி பலவுஞ் சிறக்குந்தானே."

2. " சிறப்பான வாதத்திலுஷ்ணந்தானே,
சேர்ந்திடுகில் அதிசார மழைச்சல் வாய்வு,
உறைப்பான பொருமலொடு வக்கினி மந்தம்
உண்டாகும் நீர்ச்சிறுப்புப் பிரமேகங்கள்,
பிறப்பான மதகிரி நீர் கரப்பான் ரத்தம்
பிரமேகம் பெரும்பாடு பிற நீர்க் கோவை,
அறப்பான வாய்சூலை சேத்ம ரோகம்
ஆனபல பிணியும் வந்தடருந்திருந்தானே."

3. " தழைப்பான பித்தத்திலுஷ்ணங் கொண்டால்
சயமத்தி சுரம் வெதுப்புச் சத்தி குன்மம்,
கழைப்பான பொறுத்துளைவு அதிசாரங்கள்
கடுப்புடனே வயிற்றுவலி மூலவாய்வு,
இளைப்பாகி யூண்மறுத்தல் நாக்கசப்பு
இரவில் கனவுடனே சங்காரதோடம்,
வழைப்பான பயித்தியநோ யெரிவுதாகம்
வந்தணுகில் பலபிணிக்கும் வகையதாமே."

4 " இடமான சேத்துமத்தில் பித்தநாடி
நிழுந்தணுகில் விடமுடனே வீக்கமுண்டாம்,
திடமான குளிர்காய்ச்சல் மஞ்சள் நோவுந்
தேகத்தி லுளைச்சலீளை இருமல் வாந்தி,
விடமான நெஞ்சடைப்பு சுவாசம் விக்கல்
வெகுசுரமும் நாவறட்சி பாண்டுரோகம்,
அடமான சுவளை ரத்தம் அதிசாரந்தான்.
அணுகி வெகுபல நோய்க்குத் தடங்கண்டாயே."

(சதகநாடி.)

(வெண்பா.)

5. " சேத்துமத்திற் பித்தந்திகழ்ந்தெழுந்தே யணுகில்,
காற்றதனில் வெப்பங் கலந்துவரின்—ஏற்றமுள
பித்தத்திலுஷ்ணம் பெருத்தா லதிசாரம்
பற்றிவரு மென்றுணர்ந்துபார்."

(கையெழுத்துப் பிரதி )

" கிராணி அதிசாரமென்றால்
வாத பித்தந் தளர்ந்து காணும்."

(பரிபூரண நாடி.)

(இதன் பொருள்)

## பெருங் கழிச்சல் நோயில் நாடியைப்பற்றி ஆராயுமிடத்து

1. அழல் நாடி (பித்தம்) தன்னளவில் மீறி நடந்தாலும் ;
2. வளி மிகுதியுடன் (வாதம்) உஷ்ணம் கலந்தாலும் :
3. அழல் குற்ற மிகுதியுடன் உஷ்ணம் சேர்ந்தாலும் ;
4. ஐயழல் குற்றங்கள் சேர்ந்து மீறி நடந்தாலும் ;

முன்கூறியதுபோல வளி (காற்று) மிகுதியுடன் உஷ்ணம் (வெப்பு) அதிகமானாலும்; பித்த மிகுதியுடன் உஷ்ணம் கூடினாலும் அதிசார நோயென்னும் பெருங் கழிச்சலுண்டாகுமென அறிக;

அன்றியும் இந் நோயுண்டாகியிருக்கிற காலத்தில் (கிராணி, அதிசாரம்)—வளி, அழல் இவ்விரு நாடிகளும் தம்தம் மாத்திரையளவில் மிகக் குறைந்தும், விகுத்தலில்லாமல் தளர்ச்சியாய், உள் நடையாய்க் காணப்படுமென்பதை அறிவிக்கின்றது. (''கிராணியதிசாரமென்றால் வாத பித்தம் தளர்ந்து காணும்.'' என்பதாலறிக.)

## அதிசார நோயின் தீராக் குறி குணங்கள்

(தோடக் குறிப்பு.)

வெண்பா.

1. '' ஊன்போ லடுத்துமலம் ஓகோ கழிந்திடினும்
தேன்போ லதன்சாயல் சேரிடினும்—மேன்மேலே
விக்கலுடனீளை வீக்கமதில் வேர்வை
துக்கமுடைத் தென்றே துணி.''

2. '' சூற்கொண்ட மாதர்க்கும் சொல்மகவை ஈன்றார்க்கும்,
மேற்கொண்டு பேதி மிகுந்திடினுஞ்—சேற்கண்ணாய்
ஞாலத்து நற்சிகிச்சை நன்மை யிலையாமாயின்
காலந்தாழ் வென்றே கருது.''

3.. '' உண்டவுணவுஞ் செரியா தூண் மிகுதிசெல்லா,
கொண்டதோர் வாயுங் குடலிற்றா—னண்டிப்
புரண்டு வலித்தே பொருமிவரும் பேதி
பிரண்டு வழிதப்பும் பேசு.''

(கண்ணுசாமியம்.)

(இதன் பொருள்.)

1. பெருங்கழிச்சல் நோயில், மாமிசத்தைப்போல் மலங் கழிந்திடினும், தேன் சாயலாகப் பேதியாகிடினும், இன்னும் விக்கல், இளைப்பு, வீக்கம், வியர்வை முதலிய குறி குணங்களுண்டாயினும் துன்பத்தை எளிதிலுண்டாக்கும் என்பர்.

2. கருப்பமாயிருக்கும் ஸ்திரிகளுக்கும், பிரசவித்த ஸ்திரிகளுக்கும், சீதபேதி, அதிசாரம் முதலிய ரோகங்கள் உண்டானபோது எளிதில் மருத்துவத்திற்கு வசப்படாவிடின் பெரும்பாலும் கஷ்ட சாத்தியமென்றே கற்றுணர்ந்த சித்த மருத்துவ நிபுணர்கள் கூறுவர்.

3. உட்கொண்ட ஆகாரம் நன்றாய்ச் செரியாமலும், ஆகாரம் அரோசகப்படினும், இவற்றுடன் வாயுவானது குடலிற்றங்கிப் புரண்டு வலியுடன் பேதியாகுமாயின் கஷ்ட சாத்தியமெனக் கூறுவர்.

(கண்ணுசாமியம்.)

(வேறு) வெண்பா.

1. " சன்னிவிட சோபைசார் குன்மம் நீரிழிவு
துன்னுங் கிராணி சுரம் பேதி—பன்னுபிர
மேகம் க்ஷயமிவற்றுள் மூச்சு விக்கல் மேல் வீக்கம்,
ஆகிலுயிர்போமறி."

என்பதினாலும் :

2. " சந்நி அதிசாரஞ் சாருங்கிராணி குன்மம்
உன்னிசயகாசம் உட்காய்ச்சல்— துன்னியே
போக்கு விடசோபை பொல்லாத நீரிழிவில்
வீக்கங்கூடா தென்றேவின்."

(கண்ணுசாமியம்.)

என்பதினாலும்,

அதிசாரம், கிராணி முதலிய கழிச்சல் நோய்களில் வீக்கம், இளைப்பு, மேல்மூச்சு (சுவாசம்), விக்கல் மயக்கம் இவைகள் சேர்ந்து உண்டாயின் தீருவது அரிது எனத் தெரியவும்.

-ந்தந்த நோய்களில் அதிசார நோய் இளைக்கக் கூடா வென்பதைக் கூறுமிடத்து.

" பாண்டுபிரமேகம் பன்வாத சூலைகுன்மம்,
வேண்டா க்ஷயஞ்சந்நி வெண்சோபை—நீண்ட
அதிநீரேகாமாலை யானபிணி தம்முள்
அதிசார மாகா தறி."

(கண்ணுசாமியம்.)

என்பதினால், பாண்டு, பிரமேகம், வாதசூலை, குன்மம், க்ஷயம், சந்நி, சோபை, நீரிழிவு, காமாலை முதலிய பிணிகளில் பேதி யுண்டாகில் துன்பமென்றறிக:

தீரும் தீராதவை.

(யூகி சிந்தாமணி.)

சாத்தியம்.

பித்தாதிசாரம்; சுராதிசாரம் இவ்விரண்டும் எளிதில் தீரும் எனவும்.

அசாத்தியம்.

வாதாதிசாரம்,
சிலேட்டுமாதிசாரம்,
முக்குற்ற அதிசாரம்,
சன்னிபாதாதிசாரம்,
தோடாதிசாரம்.—

இவ்வைந்தும் தீருவது அரிது எனவும் யூகிசிந்தாமணியில் கூறியுள்ளார்.

பயாதிசாரம், துக்காதிசாரம், குருதிக் கழிச்சல் (இரத்தாதிசாரம்) (இம் மூன்றையும் பற்றிய சாத்திய அசாத்தியம் காணப் படவில்லை.

## 28. நிணக் கழிச்சல்

வேறு பெயர்கள்: ஊன் கழிச்சல், பலநிறக் கழிச்சல், கொடிய கழிச்சல்; நாறுங் கழிச்சல், கிராணி, கிரஹணி; தீப் பேதி என்பனவாம்.

இயல்.—(1) பசித்தீ கெட்டு உணவு செரியாமல் வயிற்றில் புளித்துக் கழிச்சலுண்டாய், எளிதில் நீங்காமல், குடலைப் புண் படுத்தி அதிலிருந்து மலமானது நிணநீருடன் இழிவதால், "நிணக் கழிச்சல்" எனவும்;

(2) குடல் இற்று அதனின் ஊன் கழிச்சலுடன் கலந்திருப்பதால் " ஊன் கழிச்சல் " எனவும் ;

(3) குடல் சதை அழுகி இற்றுப் புலால் மணத்தோடு வெளிப்படுதலால், " நாறுங் கழிச்சல் " எனவும் ;

(4) ஊன், குருதி முதலியன பல நிறங்களோடு கழிவதால், " பல நிறக் கழிச்சல் " எனவும் வழங்கலாயிற்று.

(சி.ம.)

நோய் வரும் வழி.

" கிரஹணிப் பிறப்பைக் கிளக்குங்காலை
சரமடி மந்தம் சாரும்போது
மாவின் பண்டமாக வருந்தல்
மேவுமதுரபண்டம் விரும்பல் ;
தாவுமங்கையர் தம்மைச்சேரல்
வேவுமாமிசம் வேகாப்பண்டம்
யுண்டதாலே யுற்ற கொடுமை
மண்ணணி வருமென வகுக்கலாமே."

(கையெழுத்துப் பிரதி.)

(வேறு)

2 " மானென்ற வயிற்றின் மந்தமிருக்கும்போது
மாப்பண்ட மதுரங்கள் மங்கைகோஷ்டி
ஊனென்ற மாமிசங்கள் வேகாப்பண்டம்
உண்டதாற் கிராணி வந்துற்பவிக்குங் கண்டாய் "

(யூகி சிந்தாமணி.)

(இதன் பொருள்.)

(1) பசித்தீ குறைவாக யிருந்தசமயம் அதற்குத் தகுந்த மருத்துவம் செய்யாமல் நீடிக்கவிடின், அதனால் உண்ட உணவானது செரியாமலும் உடற்கு ஊட்டத்தைத் தராமலும், முக்குற்றங்களை மிகுதிப்படுத்தி அதன் காரணமாக வாயுக்களும் தூண்டப்பட்டு நிணக் கழிச்சலைப் பிறப்பிப்பது ஒரு விதம்.

(2) நிற்க, பெருங்கழிச்சலுண்டான காலத்தில் அதனைச் சரியானபடி மருத்துவம் செய்து பூரண குணம் உண்டாக்காமல் விடுவதினால், குடல் நாளடைவில் புண்பட்டு, அதனால் நிணக் கழிச்சலுண்டாவது மற்றொரு விதம்.

**(3)** இவையன்றியும், மேலே செய்யுளில் கூறியபடி செரியாமை சுவையின்மை முதலியவற்றின் கோளாறுகளாலும், எளிதில் செரிக்கக்கூடாத உணவுகளாகிய மாப்பண்டம், தித்திப்புப் பண்டம், மாமிசம், வேகாப் பொருள்கள், சுனைநீர், கற்சுண்ண நீர் முதலியவற்றை உட்கொள்ளுவதாலும், மிகு சம்போகம் முதலிய செயல்களாலும் பசித்தீ கெட்டு, உணவு செரியாது குடலில் தங்கிப் புளித்து நாள்படின் குடலைப் புண்படுத்தி நிணக் கழிச்சல் நோயை யுண்டாக்கும்.

## முற்குறி குணங்கள்.

நிணக் கழிச்சல் நோய் ஆரம்பத்தில் வயிறு மந்தமாயிருத்தல் ; உணவு உண்ணாதபோதும் வயிறு உண்டதுபோலிருத்தல் ; வயிறு கடுத்தல், வாய் நீருறல், வாந்தியுண்டாகக் கூடிய உணர்ச்சி யுண்டாதல் ; ஏப்பம், விக்கல், புளிப்பு நீர் எதிரெடுத்தல் ; அடிவயிறூதல் ; வயிறு இரைதல் ; வயிறு நோதல் ; வயிற்றுள் புரளல், வயிறு கழிதலாகிய குறிகுணங்களுண்டாம்.

(சி. ம.)

## (வேறு)

### கிராணி என்னும் நிணக் கழிச்சல் நோயின் முற்குறி குணங்கள்.

"புகலுங் கிராணி முற்குறிபோற்றின்
ததுவே யுரைக்கத்தாழ் குழலே கேளாய்
புசிக்குமன்னம் பொறுத்துச் செரித்தல்
நசிபுளியேப்பம் நல்லவாய் நீர்
ஊறலரோசக முதடு முலர்தல்
சோர்முக விகாரஞ் சுரந்தலைநோவு
வயிறுவிகுத்தல் வந்துபொருமல்
பயில்காதிரைச்சல் பாராயாசம்
குட்லிலிரைச்சல் கொள்ளுடலிளைத்தல்
புடைக்கண்டத்துள் புகைகம்மியதுபோல்
காணப்படுதல் கைகால்வீக்கம்
பேடுமயக்கம் பெரியமூர்ச்சை
மலபந்தமுமே மன்னுமன்றே
சிலபல நூல்கள் செப்புமாதோ."

(கையெழுத்துப்பிரதி.)

என்பதினால், அன்னம் தாமதமாகச் செரித்தல், புளியேப்பம், வாய் நீரூறல், அரோசகம், உதடு உலர்தல், சோர்வு, முகம் வேறு படல், சுரம், தலைவலி, வயிறு விகுத்தல், பொருமல், காதிரைச் சல், ஆயாசம், குடலிரைதல், உடலிளைத்தல், தொண்டை கம். மல், கைகால் வீக்கம், மயக்கம், மூர்ச்சை, மலம் வெளியாகாமை. ஆகிய இவை நிணக் கழிச்சலின் முற்குறி குணங்களெனக் கூறி யுள்ளார்.

நோய் எண்.

'' இந்தவகையி லியம்பிய கிரஹணி
முந்துவாதம் பித்தஞ் சேத்துமம்
தொந்தமுஷ்ணந் துணையந்திரவாயு
விந்தமூலவாயுவே குன்மத்துடன்
கருப்பமொட்டு களருஞ்சங்கர
கிரஹணி பன்னொன் றென்னக்கிளப்பர்.''

(கையெழுத்துப்பிரதி.)

என்பதினாலும் ;

(வேறு)

1 '' நாட்டவே கிராணிதான் பதினொன்றாகும்
நலமாகு முற்பத்திப் பெயரைக்கேளாய்
வாட்டவே வாதமாம் பித்தக்கிராணி
வகையான சிலேட்டுமமொடு தொந்தக்கிராணி
ஊட்டவே உஷ்ணவாயுக் கிராணி
உயர்கின்ற அந்தரமாம் வாயுக்கிராணி
மூட்டவே மூலவாயுக் கிராணி
முதிர்குன்மக் கிராணி கெர்ப்பக் கிராணியாமே.''

2 ''ஆமொட்டுக் கிராணியொடு சுங்கிரகக்கிராணி
* * * * * * *.''

(யூகி சிந்தாமணி.)

என்பதினாலும் ; நிணக் கழிச்சல் என்னும் கிராணி நோயைப் பதினோரு பிரிவுகளாகப் பிரித்துள்ளார்கள். சித்த மருத்துவத் திலும் அதனையே கூறியுள்ளார். அவையாவன :—

1. வளி நிணக் கழிச்சல்.
2. அழல் நிணக் கழிச்சல்.
3. ஐய நிணக் கழிச்சல்.

4. முக்குற்ற நிணக் கழிச்சல்.

5. அழற்கால் நிணக் கழிச்சல் (உஷ்ணவாயுக் கிராணி).

6. மேற்குடற்கால் நிணக் கழிச்சல் (அந்தர வாயுக் கிராணி).

7. கீழ்குடற்கால் நிணக் கழிச்சல் (மூலவாயுக் கிராணி).

8. குன்ம நிணக் கழிச்சல்.

9. சூல் நிணக் கழிச்சல் (கெர்ப்பக் கிராணி).

10. ஒட்டு நிணக் கழிச்சல்.

11. எரிச்சல் நிணக் கழிச்சல் (சங்கிரகக் கிராணி).

இவ்வாறாக நிணக் கழிச்சல் என்னும் கிராணி நோயைப் பதினொரு பிரிவுகளாக வகுத்துள்ளார்கள்.

**ஒவ்வொரு பிரிவு நிணக் கழிச்சல் நோயின் குறிகுணங்கள் :**

1. வளி நிணக் கழிச்சல் (வாதக்கிராணி).

" நோவாகும் நடுவயிறு உப்பிசமதாகும்
நுட்பமாம் பசியெடுக்கு முடம்புலர்த்துந்,
தீவாகுஞ் சீதமாய் வயிறுபோகும்
சிதறுமே மலந்தானும் வாயுதன்னால்,
காவாகுங் கட்டியாய் வயிற்றிற் காணுங்
காற்றுமே மிகக்கழியுங் கறுப்புமாகும்,
பாவாகும் பழவெல்லம் போலேவீழும்
படுவாதக் கிராணியிடப் பண்பிதாமே."

(யூகி சிந்தாமணி.)

என்பதற்கிணங்க, வளி நிணக் கழிச்சல் நோயில் நடுவயிறு உப்பல், வயிற்றில் காற்றுக்கூடி இரைந்து நோவுண்டாதல் ; உடல் இளைத்தல் ; உடல் உலர்தல் ; தாடை வற்றல் ; கண்கள் இருளல் ; காது அடைத்தல் ; விலா, கழுத்து, தொடைச் சந்து, மார்பு இவற்றில் நோவுண்டாதல் ; வயிறு அடிக்கடி பேதியாதல் ; சீதம் விழல் ; கழிச்சல் கருநிறமாயிருத்தல் ; சிலவேளை வெல்லப்பாகுபோலும், நுரையுடனும் கழிச்சல் காணும் ; கீழ் வாய் விரிதலுடன் கடுத்தலாகிய குறி குணங்களைக் காணலாம்.

(சி. ம.)

### 2. அழல் நிணக் கழிச்சல் (பித்தக் கிராணி).

" பண்பாக நடுவயிறு நோக்காடாகும்
பலிநானாவிதமாக வயிறுபோகும்,
மண்பாக வயிறுகழியு முறக்கமுண்டா
மாசற்றநரம் பெல்லாந் தளர்ந்துதொங்கும்,
உண்பாக வூனெல்லாங் கழிந்துபோகும்
உள்கடுக்கும் மருந்தழியு முணர்ச்சிகேடாம்,
பெண்பாகப் பேன்தலைவிட் டூர்ந்துபோகும்
பித்தத்தின் கிராணியெனப் பேசலாமே."

(யூகி சிந்தாமணி.)

என்பதனால், அழல் நிணக் கழிச்சலென்னும் பித்தக் கிராணி நோயில், நடுவயிற்றில் வலியுண்டாதல்; பல நிறமாக வயிறு கழிதல்; கெட்ட நாற்றமாய்க் கழிதல்; மிகுந்த தூக்கமுண்டாதல்; நரம்புகள் தளரல்; அறிவு கெடல்; இற்றுப்போன குடலின் சதை கழிச்சலில் வெளியாதல்; கொடுக்கும் மருந்துகள் பயனற்று மலத்தோடு வெளியாகிப்போதலாகிய குறிகுணங்களைக் காட்டும்.
(சி. ம.)

### 3. ஐய நிணக் கழிச்சல் (சிலேட்டுமக் கிராணி, மாமிசக் கிராணி).

" பேசியே அழல்போல நாற்றமாகும்
பெருக்கவே வெளுப்பாக மலந்தான் போகும்
காசியே கைகாலுந் தளர்ச்சி கேடாம்
கள்ளமாய்க் காய்ச்சல் வருங் கண் சிவக்கும்
நாசியே நாவோடு வறட்சி காணும்
நயந்துமே பாளையாய்க் குடல் போல் வீழும்;
ஆசியே யறிவில்லாத தசதியாகும்
அதட்டியே விக்கல் வருஞ் சிலேட்டுமந்தானே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், ஐயநிணக் கழிச்சலென்னும் சிலேட்டுமக் கிராணி நோயில் கீழ் வாயில் எரிவுடனும் நாற்றமாயும் வெளுப்பாகவும் மலங் கழியும்; கைகால்கள் தளர்வடையும்; உட்காய்ச்சலாயிருக்கும்; கண்கள் சிவந்திருக்கும்; நாவும் மூக்கும் வறட்சியாயிருக்கும்; குடல் சதை நைந்து கழிச்சலில் காணும்; அறிவு குன்றும்; உடல் சத்துக் குறையும்; விக்கலெடுக்கும்; இத்தியாதி குறி குணங்களை இந்நோயில் காணலாம்.
(சி. ம.)

### 4. முக்குற்ற நிணக் கழிச்சல் (தொந்தக்கிராணி).

" வருகுமே தாபமுடன் காய்ச்சல்தானும்
மகத்தான வேலைபோல் வயிரிரைச்சல்
தருகுமே தலைவலியுங் குளிர் நடுக்கம்
தனிப்பால் போல் மிகக் கழியுமடிக்கடிக்கு
பருகுமே பகழியெனப் பாயும் வாயு
பரிதாப முழலையொடு எரிவுமாகும்
கருகுமே கால் கையும் புறங்கால் வீங்கும்
கசி தொந்தக் கிராணியெனக் கண்டுகொள்ளே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், முக்குற்ற நிணக் கழிச்சலென்னும் தொந்தக் கிராணி நோயில் மிகுதியான காய்ச்சலுண்டாகும். வயிறு இரைச்சலுடன் கழிதல்; பால் போல் வெளுப்பாகவும் கழிதல்; குளிர் நடுக்கல்; தலைவலி; காற்று மிகப் பரிதல்; உடல் எரிச்சலாயிருத்தல்; கை கால்கள் கருத்துக் காணல்; புறங்கால் வீங்கல் முதலிய குறி குணங்களைக் காட்டும். அன்றியும் வளி, அழல், ஐயமாகிய நிணக்கழிச்சல் நோய்களில் காணும் குறிகுணங்களில் சில அல்லது பல குறிகுணங்கள் சேர்ந்து தோன்றவும் கூடும்.

(சி.ம.)

### 5. அழற்கால் நிணக் கழிச்சல் (உஷ்ணவாயுக் கிராணி).

" கண்டுகொள்ளு மலந்தனையே யிறுக்கிக்கொண்டு
கனமாக வயிரிரைந்து உப்பிசமதாகும்
பண்டு கொண்ட அசனந்தான் செரித்திடாது
பாங்கான புளித்தேக்கும் வாய் நீரூறும்
விண்டுகொண்ட கால்கையுமசதியாகும்
மேனியோ மிகக் கருகி மெலிவுமாகும்
உண்டு கொண்ட நாண்மூன்றிற் பேதியாகும்
உணருஷ்ண வாயுவென்றே யுரைக்கலாமே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், அழற்கால் நிணக் கழிச்சலென்னும் உஷ்ண வாயுக் கிராணி நோயானது அழல் குற்றம் மிகுந்து கீழ் நோக்குங் காலைத் தூண்டிக் கேடடையச் செய்வதாலுண்டாகும் நோயாம். இந் நோயில் மலம் தீய்ந்து குடலில் காற்றுக்கூடி வயிறு உப்பிசமாகும். செரியாமை, புளியேப்பம், வாய் நீரூரல், உடல்

வன்மை குன்றல், உடல் கருத்தல், மெலிவடைதல், கைகாலசந்தி. மூன்று நாட்கள் விட்டு விட்டுக் கழிச்சல் மிகுதியாதலாகிய குறி குணங்களைக் காட்டும்.

(சி.ம.)

6. மேற்குடற்கால் நிணக் கழிச்சல் (அந்தர வாயுக் கிராணி).

"உரைக்கவே பத்தியந்தான் கொண்டபோது
உறுதியாய் மலந்தள்ளி புளித்தேக்கிட்டுத்
தரைக்கவே சர்த்தியொடு அருசியாகுந்
தாகமுண்டாய்த் தானிருக்குந் தளர்ச்சியாகும்
விரைக்கவே விலாப் பக்கம் இசிவுமாகும்
மேனியெல்லாம் வெளுப்பாகும் விக்கலுண்டாம்
அரைக்கவே யசனந்தான் செரித்திடாது
அந்தரமாம் வாயுவிட வாண்மைதானே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், மேற்குடற்கால்நிணக்கழிச்சலென்னும்அந்தரவாயுக் கிராணி நோயானது மேல் நோக்குங்கால் (உதான வாயு)மிகுந்து உண்ட உணவைச் செரியாதபடியும், கீழ்நோக்க விடாமலும் அகட்டிலேயே நிலைத்துப் புளிக்கச் செய்வதாலுண்டாம் நோயாம். இதில் புளியேப்பம், வாந்தி, சுவையின்மை, நீர்வேட்கை, விக்கல் முதலிய கேடுகளை விளைவித்துப் பிறகு இடைவிடாது கழியச் செய்யும் ; அன்றியும், உடல் மெலியும்; வெளுக்கும்; உடம்பில் அசதியும், இரு விலாப் பக்கங்களிலும் இசிவு போல் இழுத்துப் பிடித்து வலிஉண்டாதலாகிய குறி குணங்களைக் காட்டும். உணவு செரியா வென்பதையும் அறியவும்.

(சி.ம.)

(அந்தர வாயு மேற்குடலில் தங்குகிற வாயு.)

7. கீழ்க்குடல் வாயு நிணக் கழிச்சல் (மூலவாயுக் கிராணி).

"ஆண்மையாய் வாயுதன்னில் மிகப் புரண்டும்
அடிவயிற்றைப் பொருமியே மலம் வரண்டு
தாண்மையாய்ச் சடம் வற்றி மந்திப்புண்டாய்ச்
சத்தமாய்த் தணியாத இரைச்சலாகும்
கேண்மையாயடித் துடையிற் குத்தலுண்டாம்
கெட்டியாம் சரீரமது கிழமுகமாகும்
மூண்மையாங் குதந்தன்னின் முளைபோல் தோன்றும்
மூலவாயுக்கிராணியென மொழியலாமே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், கீழ்க் குடற்கால் நிணக்கழிச்சலென்னும் மூல வாயுக் கிராணி நோயானது கீழ் நோக்குங்கால் (அபான வாயு) மிகுதி யடைவதால், கீழ்க் குடலையும், கீழ் வாயையும் பற்றிவரும் நோயாகும். இதில் மந்தம், பசித்தீ கெடல், செரியாமை, வயிற் றுள்வாயுக் கூடி இரைந்து பொருமிக்கொள்ளல், எருவாயில் எரிச்சல், குத்தல், முளைபோல் வெளியில் காணல், அல்லது அடி தள்ளல், ஆகிய இவையுண்டாகும். அன்றியும் உடல் தளரும்; வன்மை குறையும்: முழங்கால்களில் குத்தலுண்டாகும்; சில சமயம் மலம் வறளும். ஆகிய இக்குறி குணங்களை இந் நோயில் காணலாம்.

(சி.ம.)

## 8. குன்ம நிணக் கழிச்சல்.

"மொழியவே தலைதானுங் கனத்திருக்கு
மொளிவுறக்க முண்டாகும் பீளைசாரும்,
கழியவே விலாவெல்லாமு லாவிக்குத்தும்
சமரசமாய்த்தான் வியர்க்கும் தலைநடுக்கும்
உழியவே வுடம்பெரிப்பு முழலையாகு
முப்பியே வயிறதுவு மிறைஞ்சிப் போகும்
வழியவே வயிற்றிலொரு புறத்திற்றானும்
வளைச்சு ரெகைஷபோடு குன்மக் கிராணியாமே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், குன்ம நிணக்கழிச்சலென்னும் குன்மக் கிராணி நோயானது பெரும்பாலும் குன்ம நோயில் வருந்தி மெலிவடைந்த நிலையிலுண்டாம் நோயாம். இந்நோயில் தலை கனத்திருக்கும்; கண்கள் ஒளி இழந்து பீளை சாரும்; வயிறெல்லா முலாவிக குத்தலுண்டாகும்; உடல் வியர்க்கும்; தலை நடுக்கும்; உடம்பு எரியும்; உழலையுண்டாம்; வயிறு இரைந்து வலியுடன் அடிக்கடி கழிச்சலுண்டாகும். இத்தியாதி குறி குணங்களை இந் நோயில் காணலாம்.

(சி.ம.)

## 9. சூல் நிணக் கழிச்சல் (கெர்ப்பக் கிராணி.)

"வளைச்சுமே வயிறு கழியுங் கடுப்புமுண்டாம்
வாடியே கால்கையும் வெச்சென்றாகும்,
களைச்சுமே கண்தானு மஞ்சளாகுங்
கழியுமே பலவிதமாய்க் கடின தாகம்,

உளைச்சுமே கெர்ப்பந்தானுய ருங்காலம்
உறுவன்னம் வாந்தியா யுழலையாகும்,
முளைச்சுமே கெர்ப்பந்தான் கீழேவீழில்
முடுகாது கெர்ப்பமாங் கிராணிதானே ."

(யூகி சிந்தாமணி)

என்பதினால், சூல் நிணக்கழிச்சல் என்னும் கெர்ப்பக் கிராணி யானது சூல் கொண்ட பெண்களுக்கு வாந்தியுடன் கழிச்சலுண் டாகும் போதும் ; மற்றுஞ் சில பெண்களுக்குப் பிள்ளை பெற்ற சில தினங்களுக்குள் கழிச்சலுண்டாகும் போதும் இப்பெயரால் வழங்கப்படும்.

இதில் வயிறு கடுத்துப் பல நிறமாகக் கழியும் ; களைப்புண் டாகும்; கண்கள் மஞ்சளிக்கும் ; உடல் வெளுக்கும்; கைகால்கள் எரிச்சலுடன் ஓய்ச்சலாகும் ; பெருமூச்சு, வாந்தி, வயிற்றுவலி, கீழ்வாய்க் கடுப்பு ஆகிய குறிகுணங்களுண்டாகும்.

சூல்கொண்டபோது உண்டாகும் கழிச்சல் "சூல் நிணக் கழிச் சல்" அல்லது "கெர்ப்பக் கிராணி" எனவும்; பிள்ளைப் பேறுக்குப் பிறகு உண்டாகும் கழிச்சலை "பிரசவ நிணக் கழிச் சல்" அல்லது "பிரசவக் கிராணி" எனவும் கூறுவதுண்டு.

(சி.ம.)

### 10. ஒட்டு நிணக் கழிச்சல் (ஒட்டுக் கிராணி).

" தானான படுக்கையே இதமாய்க் காணும்
வலிப்புமே யிளைப்பாகத் தானிருக்கும்,
வானான வயிறுவலி மெத்தவாகும்
மார்போடு விலாமுதுகு வலியுண்டாகும்,
ஓனான துட்டிடையாய் வயிறு போகும்
ஒருமித்துப் போகாமல் மலமுஞ் சிக்கும்
தோனான தொப்புள்தனில் வளையம்போலச்
சுட்டிடவே சுருக்கமா மொட்டுக் கிராணி ".

(யூகி சிந்தாமணி)

என்பதினால், ஒட்டு நிணக் கழிச்சலென்னும் ஒட்டுக் கிராணி நோயில் வயிறு வலித்தல் ; மார்பு, பக்க விலா, முதுகு, இவ்விடங் களில் வலித்தல் ; பல நிறத்துடன் வயிறு நொந்து பேதியாதல்; படுக்கை பொருந்தாமை ; ஆனால் படுத்துக்கொண்டேயிருப்பது நன்மையாகத் தோன்றல்; இளைப்பு, மனக் கலக்கம்; தொப்பு ளில் இழுத்துப் பிடித்தாற்போல் வலித்தல் ஆகிய குறிகுணங்களை காட்டும்.

11. எரிச்சல் நிணக் கழிச்சல் (சங்கிரகக் கிராணி).

" சுருக்கமா யுதரமது பொருமலாகிச்
சோறு செரியாக் கழிச்சலபானச் சூடாய்
குருக்கமாய்க் குதந்தனிலே நனைதலாகிக்
குறு வியர்வை சுரமோடு அனலாய்க் காணும்,
மருக்கமாய் வாந்தியாய் மனமறுக்கும்,
மார்பிலே கோழை கட்டும் மயக்கமாகும்,
சருக்கமாய்க் கண்களிரண்டும் சுழற்சியாகுஞ்
சங்கிரகக் கிராணியென்றே சாற்றலாமே "

(யூகி சிந்தாமணி)

என்பதினால், எரிச்சல் நிணக் கழிச்சலென்னும் சங்கிரகக் கிராணியில் வயிறு பொருமிச் சோறு செரியாது கழிச்சலாகும். கீழ் நோக்குங்கால் (அபான வாயு) வெப்பத்தினால் மிகுதியாகிக் கழிச்சலை உண்டாக்கும். கீழ் வாய் எந்நேரமும் ஈரமாய் நனைந்திருக்கும். உடல் வியர்க்கும். கடுமையான சுரங் காயும். வாந்தி, மனத் துயரம், மார்பில் கோழை கட்டல், மயக்கம், கண்கள் குழி விழுந்து இருளடைதலாகிய குறி குணங்களையுண்டாக்கும்.

தீரும் தீராதவை.

" இத்தொகை தன்னிலியல் சேத்துமம்
நத்து தொந்த நவிலுங் குன்மம்,
சங்கரனான் கைச்சாருங் கிராணி
அங்கரன் சொன்னவை சாத்தியமாகும்
மற்றவை யேழும் மகிழ்வது சாத்தியமாகும்
பற்றியாய்ந்தால் பன்னூன் மறையே ".

(கையெழுத்துப் பிரதி)

என்பதினாலும் ;

(வேறு)

சாத்தியம்.

" செய்திட்ட சாத்தியத்தைச் செப்பக் கேளாய்
சீரான வாதமொடு பித்தக் கிராணி
உய்திட்ட உஷ்ணவாயுக் கிராணியோடு

உயர்ந்த வந்தரவாயு மூலக்கிராணி
செய்திட்ட கெர்ப்பமாங் கிராணியோடு
கெடி வொட்டுக் கிராணி * * *
* * * சாத்தியமாம். ''

அசாத்தியம்.

'' அசாத்தியமாங் கிராணிவகை யறியக் கேளாய்
அயசிலேட்டுமங் குன்மமொடு தொந்தக் கிராணி
தாத்தியமாஞ் சங்கிரகக் கிராணியோடு
* * * * *
* * * * *
* * * * *
* * * * *
* * * * *
* * * அசாத்தியந்தானே. ''

(யூகி சிந்தாமணி)

என்பதினாலும் ;

1. வளி நிணக் கழிச்சல்.

2. அழல் நிணக் கழிச்சல்.

3. அழற்கால் (உஷ்ண வாயு) நிணக் கழிச்சல்.

4. மேற் குடற்கால் (அந்தரவாயு) நிணக் கழிச்சல்.

5. கீழ்க் குடற்கால் (மூலவாயு) நிணக் கழிச்சல்.

6. சூல் நிணக் கழிச்சல்.

7. ஒட்டு நிணக் கழிச்சல்—ஆகிய இவ்வேழும் எளிதில் தீரக் கூடிய கிராணி வகைகளெனவும்;

1. ஐய நிணக் கழிச்சல்.

2. முக்குற்ற நிணக் கழிச்சல்.

3. குன்ம நிணக் கழிச்சல்

4. சங்கிரக நிணக் கழிச்சல்—ஆகிய இந்நான்கு கிராணி வகைகளும் தீருவது அரிது எனவும் கூறியுள்ளார்.

## நிணக் கழிச்சல் நோயின் பொதுகுறி குணங்கள்.

பெருங் கழிச்சல் நோய் கண்டு (அதிசாரம்) மருத்துவத்தில் வசப்படாது நிலைத்து நாள்படுமேயானால் இதனை நிணக் கழிச்சல் (கிராணி) என்பர். ஆதலின் பல திங்கள் கடந்திருப்பினும் அந்நோய் போகாமல் உடலை வாட்டும். வயது முதிர்ந்தவர் களுக்குச் செரிக்குந் தன்மையும், குடல் வன்மையும், மெலிந்த நிலையில் (குறைந்த நிலையில்) இந்நோயுண்டாகும். அன்றியும், எரு வாயில் எழும் புண், வெப்பு, முளை இவற்றாலும் இந்நோய் உற்பத்தியாவதுண்டு. மற்றைய நோய்களாகிய சுரம், இளைப்பு நோய், வெளுப்பு நோய், ஈரல் நோய், பெரு வயிறு முதலியவை களில் துணை நோயாகவும் வருவதுண்டு.

எங்ஙனமாயினும், அந்தந்த நோய்க் குறி குணங்களோடு உணவில் விருப்பமின்மை, செரியாமை, புளியேப்பம், வாந்தி, விக்கல், வயிறூதல், இரைதல், வலித்தல், இவற்றுடன் கழிச்சலு முண்டாகும். பல நிறமாகவும், பல வடிவமாகவும், நாற்ற மாகவும் கழியும். நாவறட்சி, தாகம், தலைவலி, களைப்பு, மயக்கம், இரத்தக் குறைவு, உடல் வன்மை குன்றல், மேல் மூச்சு முதலிய குறி குணங்களையும் காட்டும். (சி.ம.). உணவு ஏதேனும் உண்பதற்கு முன்னும் பின்னும் கழியச் செய்வது கிராணி நோயின் தனிக் குணமாகும் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவும்.

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவை வேளா வேளைக்கு உண்ணாதிருத்தல், பட்டினி, இராக் கண் விழித்தல் முதலிய செயல்களால் உடல் வன்மை குறைந்து ''தீ'' க் குற்றமும், கேடடையும்; அதனால் செரியாமை யுண்டாகும். செரியாஉணவு அகட்டில் தங்கிப் புளித்துமேல் நோக் குங்கால், கீழ் நோக்குங்கால், நடுக்கால், பரவுகால், இவைகள் மிகுதியடைந்த '' தீ'' க் குற்றத்தால் தூண்டப்பட்டு வாயுக் கள் மிகுந்து கேடடையும்.

மேல் நோக்குங்காலின் செயலால் புளியேப்பம், வாந்தி, விக்கல், நீர் வேட்கை, வாய் நீரூறல் என்னும் குறி குணங்களை யும்; கீழ் நோக்குங்காலின் செயலால் வயிறு உப்பல், புரளல், வயிறு நோதல், பேதியாதல் முதலிய குறி குணங்களையும், பரவுகாலின் செயலால் உணவின் சாரத்தை சரிவரப் பரவ வொட்டாமற் தடுத்து உடலுக்கு ஊட்டமளிக்காத வாறு செய்து, அதனால், உடல் வன்மை குன்றல், உடல் வெளுத் தல், கைகால் வீக்கம் முதலிய குறி குணங்களையும், நடுக்கால் கேடடைவதால் மற்றக் கால்களுக்கு உதவி புரிய இயலாது மேற்கண்ட செரியாமை முதலிய குறி குணங்களையும் விளை விக்கும்.

இங்ஙனம் தோன்றிய நோய் எளிதில் நீங்காது நிலைத்திருப் பின் ஏற்கனவே கேடடைந்த குற்றத்துக்குத் துணையாய் மற்றக் குற்றங்களில் ஒன்றேனுமிரண்டேனும் சேர்ந்து வாட்டித் துன் பங்களை மிகுதிப் படுத்தி உயிரையும் போக்குவதுண்டு.

### நாடி நடை.

1. ''சிறப்பானபித்தத்தில் வாதநாடி
சேரிலுறுதாது நட்ட முதிரபீடை
உறைப்பாகச் செரீயாமை குன்மஞ்சூலை
உற்ற சுரங்கிராணி வயிற்றிரைச்சல் மந்தம்
அறைப்பான ஓங்கார பிறநீர்க் கோவை
ஆயாசங் கிரக்கமொடு மயக்க மூர்ச்சை
முறைக்காய்வு விட வீக்க மூலவாயு
முரடான நோய் பலவும் முடுகும் பண்பே.'' (சதகநாடி)

2. ''வாதமெனும் நாடியது தோன்றிற்
சீதமந்தமொடு வயிறுபெருமல் திரட்சிவாயு
சீதமுறுங்கிராணி மகோதரம் நீராமை
திகழ்வாயுசூலை வலிகடுப்புத்திரை
நீதமருங் கிருமிகுன்மமண்டவாதம்,
நிலையும் நீர்க்கிரிச்சனங்கள் தந்துமேகம்
பேதகமா மூத்ரபிணி மூலரோகம்
பேச வெகுபிணிகளுமே பொருளதாமே.'' (சதகநாடி)

(வெண்பா)

3. ''வாதமிகுந்தாலும் வன்பித்தந்தன்னுடனே
வாதம் விரைவினும் வந்துறுமே—போதவுடல்
திராணி யவற்றைத்தீர்த்துக் கெடுக்கும்
கிராணிவகை எண்ணக்கேள்.''

(கையெழுத்து பிரதி) (சி.ம.)

என்பதினால், பித்தவாததொந்தம் (அழல்வளி), வாதமிகுதி வளிநாடி மீறி நடத்தல்), ஆகிய இக்குற்றங்களின் பேதத்தால்) நிணக்கழிச்சல் நோயை அறிவிக்கும்.

### நோயுள்ள காலத்தில்

" கிராயணிதி சாரமென்றால்
வாதபித்தந் தளர்ந்துகாணும் "

என்னும், "பரிபூர்ணநாடி"-யின் சொல்லுக்கிணங்க வாதமும் பித்தமும் இவ்விரண்டு நாடிகளும் தளர்ந்து நடைபெறுமென அறிக!

### எரு.

மலம் அடிக்கடி பலநிறத்தோடும், வடிவத்தோடும், நாற்றத்தோடும் குடலின் சவ்வு, இற்று சீதம் போலும் கலந்து இழியும்.

### நீர்.

சிறுநீர் அளவில் குறைந்தும், எரிவுடனும், சிறிது சிவந்தும் இறங்கும்.

## 29. கடுப்புக் கழிச்சல்.

வேறு பெயர்கள் : சீதக்கழிச்சல்; சீதபேதி; சீதரத்தபேதி என்பனவாம்.

இயல்.—வயிறுகடுத்து அடிக்கடி சிறிதாகவேனும், அல்லது கடுப்பு அதிகமின்றி அளவுகடந்தேனும் சீதக்கட்டும், குருதியுங் கூடிக் கழியும் நோயாம். சிறு குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரை இந்த நோயுண்டாகும்.

### நோய் வரும் வழி.

மிகுந்த காரம், புளிப்பு சேர்ந்த உணவு, செரிக்கக் கூடாத உணவு, காரம் மிகுந்த மருந்துகள் இவைகளை உட்கொள்ளல், குளிர்க்காற்றிலீடுபடல், கடும் வெயிலில் அலைதல், இராக்கண் விழித்தல், அதிகமான குதிரைச் சவாரி முதலிய செயல்களால் இந்நோயுண்டாகும்.

### முக்குறி குணங்கள்.

தலைநோதல், குமட்டல், வாந்தி வருவதுபோன்ற தோற்றமுண்டாதல், வயிறுகடுத்தல், வயிறு இரைதல், கீழ்வாய் எரிச்சல் வயிறு புரட்டலாகிய குறிகுணங்களை இந்த நோய் ஆரம்பத்தில் காணலாம்.

## சீதபேதி நோயின் பொதுக்குறி குணங்கள்

மேற்குறிய முற்குறி குணங்களைக் காட்டி வயிறு கடுத்துக் கழியும், சளி போன்ற சீதம் விழும், பிறகு வயிற்றுக் கடுப்பும் கீழ்வாய்க் கடுப்பும் அதிகமாகும். அப்பால் மலமில்லாமலே சீதமுங்குருதியுமாய் அடிக்கடி இழியும். அச்சமயம் தாங்க முடியாத வயிற்றுவலியுண்டாகும். வயிற்றுவலியினால் எழுந்திருக்க அஞ்சி இருந்த இடத்திலேயே இருப்பர். இவ்வாறாக ஒரு நாளைக்கு கணக்கற்ற தடவை கழிவது முண்டு. மருந்துகளுக்கு வசப்படாதிருப்பின் மென்மேலும் துன்பங்கள் அதிகமாகும். நாடிகள் தளரும். உடல் வியர்க்கும். கண்கள் பஞ்சடையும். நாவறளும். முப்பிணிக் குறிகுணங்களும் கிளைக்கும். சிலருக்கு ஒருமுறை இந்த நோய் குணமாகிப் பிறகு சிலநாள்கள் சென்று மறுபடியும் வருவதுண்டு, சீதக் கழிச்சல் கடுமையாயின் கழியும் போதெல்லாம் குடல் இற்றுதுணுக்குகள் விழும், சீதமும் குடற்புண்ணிலிருந்து ரத்தமும் மிகுதியாக வெளியாவதால் உடற்குருதி குறைந்து, உடல் வெளுத்து, உடலிளைத்து, வன்மை குன்றி, கைகால்கள், உடல் முதலியன வீங்குவதான குறிகுணங்களையும் இக் ''கடுப்புக் கழிச்சல்'' நோயில் காணலாம்.

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவாதி செயல்களின் வேற்றுமையால் அழல் குற்றமிகுந்து கீழ் நோக்குங்காலைத்தூண்டி இந்த நோயைப் பிறப்பிக்கும். அழல் மிகுதியால் ரத்தம் கேடடையும். உடல் மெலியும். ஐயத்தைத்தூண்டும். அழல் ஐயங்கலப்புற்ற காரணமாகக் குடலில் புண் உண்டாகிச் சீதம், ரத்தம் இவை வெளிப்படும். வாயு மிகுதியால் வயிற்றுவலி, கடுப்பு, முதலிய குறிகுணங்களையும் அப்பால் முக்குற்றங்களும் கேடடைந்து முப்பிணி குறிகுணங்களையும் உண்டாக்கும். நாடிகள் தளர்ச்சியடையும்.

(சி. ம.)

## நாடி நடை.

1. ''தழைப்பான பித்தத்திலுஷ்ணங்கொண்டால்
க்ஷயம் அத்திசுரம் வெதுப்புச் சத்தி குன்மம்,
கழைப்பான பொறுத்துளைவு அதிசாரங்கள்
கடுப்புடனே வயிற்றுவலி மூலவாயு
இளைப்பாகி யூண் மறுத்தல் நாக்கசப்பு
இரவில் கனவுடனே சங்கார தோடம்
வழைப்பான பயித்தியநோயெரிவுதாகம்
வந்தணுகில் பலபிணிக்கும் வகையதாமே.''

2. ''தொந்தித்தசிலேற்பனத்தில் வாய்வுகூடித்
துடர்ந்தகுன்மம் நெஞ்சைடைப்பு சுவாசகாசம்,
வந்தித்தகுரல் தனிலே வுறுத்தலீளை
வழுவழுப்பு நீரூறல் மலத்தில் சீதம்,
வெந்திரதம் கொழுத்தல் குத்துத்திமிர்வியாதி
வீச்சுடனே வலியெட்டுந்திரட்சை பாண்டு
அந்தித்த குறு குறுப்பு மயக்கம் விக்கல்
ஆனபலபிணியும் வந்தடறுந்தானே.''

(சதகநாடி)

என்பதினால், பித்தமிகுதியுடன் உஷ்ணம் கலந்தாலும், ஐயம்மிதியுடன் வாய்வு கூடினாலும் வயிற்றுக் கடுப்பு, சீதக்கடுப்பு இவற்றை அறிவிக்கும். அன்றியும் நிணக்கழிச்சலில் கூறிய நாடிகளின் பேதமும் இந்நோய்க்குப் பொருந்துமென அறியவும்.

## 30. ஊழி நோய்.

வேறு பெயர்கள் : வாந்தி பேதி; கசப்பு; விடபேதி; கொள்ளை நோய்; நட்பு நோய்; நீர்க்கொம்பன்; விஷீசி, ஊழிபேதி; கக்கல் பேதி; சாமளாதேவி; பெருவாரி நோய் என்பனவாம்.

இயல்.—உண்ட உணவு செரியாமல் மிக்க வாந்தி, கழிச்சல், நீர் வேட்கை, கண் பஞ்சடைதல், கெண்டைச் சதை குரங்கு வலித்தல், கை கால்கள் சில்லிடல், பேச்சொலி குன்றலாகிய இயல்புடைய நோயாகும்.

சுருங்கக் கூறில் வாந்தியும் பேதியுங் கலந்து காணும் ஒரு வகைக் '' கொள்ளை நோய் '' எனலாம்.

### நோய் வரும்வழி.

இந்நோய், கொள்ளை நோயாய் (Epidemic) ஆடித் திங்கள் புரட்டாசித் திங்கள் வரைக்கு முண்டாகுமென்பர். பூமியின் திடீரெனவுண்டாகும் வெப்பதட்ப மாறுதலால் இந்நோய் பெரும்பாலும் உண்டாகும். ஆனித் திங்களில் சூரிய வெப்பத்தால் பூமி வறட்சியும் வெப்பமுடைந்திருக்கும்பொழுது. ஆடித் திங்களில் பெய்யும் சிறு மழையால் திடீரெனத் தட்பமடைவதால் பூமி அடையும் வேற்றுமையை மக்களும் அடைவர். வெப்பத்தால் மிகுந்த அழல் குற்றம் திடீரெனத் தட்பத்தால் குறைந்து ஐயக் குற்றத்தை மிகுதிப்படுத்திப் பசித்தீயைக் குறைக்குமாதலின், உண்ட உணவு செரியாமல் வாந்தியையும், கழிச்சலையுமுண்டாக்கும்.

மற்றொரு காரணம் யாதெனில், சாமளாதேவி ஊழிநூலில் இந்நோய் ஒருவகை நச்சுக் காற்றாலுண்டாகக் கூடியது எனக் கூறப்பட்டுள்ளது. இக்கொள்கையைக் கொண்டே அக்காலத்தில் மகமதிய அரசரில் ஒருவர் நோயுற்றாரைக் கொள்ளை கொண்டு போகும்படி தோன்றின ஊழிக்காற்றின் நஞ்சை முறிக்க நாடு நகரங்களில் புகையிலையைப் புகைக்கும் வழக்கத்தைப் பரப்பினராம்.

மகமதியரைப் பின்பற்றி மேல் நாட்டு மருத்துவர் இதனைக் கடைப்பிடித்து இந்நோயினைப் பரிகரிக்கப் போகும் பொழுது நோயைத் தடுக்கும் பொருட்டு புகையிலைச் சுருட்டு ஒன்றை வாயிலிட்டுப் புகைத்துக்கொண்டே போனதாகவும் கூறப்படுகிறது.

பின்னாடி, நோய் வருவது ஊழிக்காற்று அன்று; நீரின் வழியே உட்கொள்ளும் நுண்புழுக்களால் ( cholera Vibrios ) என முடிவு கட்டியபோது அவ்வழக்கம் மாறிவிட்டதாகவும் சொல்லப்படுகிறது.

(சி. ம.)

ஊழிக்காற்று என்றாலென்ன என்பதும், ஊழி நோயுண்டாகும் விதமும் குறிகுணங்களும் புராதன ஏட்டுப் பிரதிகளில் கண்டவாறு இங்கு விளக்கியிருப்பதைக் கவனிக்கவும்.

## ஊழிக் காற்று

1. ''கேளப்பா ஊழியுட காற்றைச் சொல்வேன்
கெடியான சாமளா தேவியாம்,
காளப்பா மைப்போல கருத்துநிற்குங்
கண்ணுக்குத் தோற்றாது கடினவேகம்,
வாளப்பா காற்றினுட விவரமெல்லாம்
மைந்தனே சொல்லுகிறேன் வகையாய்க்கேள்,
பாழப்பா பண்ணிவிடு முலகந்தன்னைப்
பரிசுத்தமா யிருந்தால் பறக்கும்பாரே.''

2. ''பறக்குமென்று சொல்லுவதுதானாருக்கென்றால்
பாராளு மன்னர்க்குஞ் சிவயோகிக்கும்
இரக்கமொன்று மில்லையப்பா இதராள்பேரில்
என்னசொல்வேன் ஊழியுட வேகம்,

சிறக்குமென்று நினையாதே தேகந்தன்னை
க்ஷணத்திலே ஒழித்து விடுந்தெளிவாய்நீ
உறக்க விதியுள்ளவர்க்குத் தேகம்போகும்.
உத்தமனே யிதையறிந்து பாருபாரே.''

3. ''பாரப்பா புலத்தியனே அய்யாகேளு
பதிவாகவே யிருந்து இறங்குமப்பா,
ஊரிலே சனங்களுட சிரசில் பட்டால்
உற்றதொரு ரத்தமெல்லா முறிந்துநீராம்,
காருநீ கக்கலுடன் பேதிகாணும்
கண்மூடி முழிக்குமுன்னே களைத்துப்போகும்.
யாருநீயானாலுந் தேகமெல்லாம்
அப்பனே வியர்வையது பிசின்போலாமே.''

4. ''பிசின்போலே வியர்வையது பெருகிநிற்கும்
பேரான கண்டமது வறட்சி காணும்,
கசிந்துருகி தேகமெல்லாங் கடின வேதை
கக்கல்கண்ட நாழிகைக்குக் கடுப்புக்காணும்,
விசிதமாய் வயிற்றுவலி தானே காணும்
வெகுசுறுக்காய் சன்னியது பிரவேசிக்கும்,
நிசிதமா யிருந்தாக்கால் தேகம்போகும்
நிமிஷத்தில் அவிழ்தமதை நினைவாய்ப்போடே.''

(அகத்தியர் நூல்—கை-எழு-ஏட்டுப் பிரதி)

(இதன் பொருள்.)

ஊழியானது ஒரு தீக்காற்று, ''சாமளா தேவி'' எனும் பெயருடையது எனவும் ; அதுமிக்கக் கருப்பு நிறமாய் கருநிறமுள்ள மையைப் போல் கருத்திருக்குமெனவும் ; நமது கண்களுக்குப் புலப்படாது. அதிவேகமுடையதெனவும்: உலகத்தைப் பாழாக்கிவிடுமெனவும்; தூய்மையில்லாதவர்களுடைய தலையில் அக்காற்று தாக்குவதினால், தாக்கப்பட்டவர்களின் உடலிலுள்ள குருதி நீராய் முறிந்து கண் மூடித் திறப்பதற்குள் வாந்தியும் பேதியுமாய்ப் பல முறையுண்டாகிக் களைத்துப்போகும் எனவும் ; உலகமாளும் மன்னவர், சிவயோகி இவர்களைப் போன்ற பரிசுத்தமான நபர்களுக்கு இந்நோய் அணுகாது எனவும் கூறியுள்ளார். அன்றியும் வாந்தி பேதியுண்டானவர்க்கும்

பிசுபிசுத்த வியர்வையுடன் நெஞ்சுலர்ந்து நாவறண்டு, உடல் கருத்து, வயிற்று, வலியோடு சன்னியும் தொடருமெனவும், துரிதமாகத் தக்கமருத்துவம் புரியாவிடில் நோயினன் சாவது நிச்சயம் எனவும் மேற்கண்ட செய்யுள்களால் அறிகிறோம்.

### முற்குறி குணங்கள்.

வாந்தி பேதி என்னும் ஊழி நோய் ஆரம்பத்தில் திடீரென செரியாமை, புளியேப்பம், வயிறூதல், வயிறு நோதல், வயிறு இரைதல், உணவை வாந்தி எழச் செய்து பிறகு அடிவயிறு ஊதல், இரைதல், நோதல் என்னும் குறி குணங்களைக் காட்டிக் கழிச்சலையும் வாந்தியையும் களைப்பையும் மிகுதியாக்குமென அறிக ! அன்றியும் இந்நோய் '' கொள்ளை நோயாக '' ( Ededemic ) வரும் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ள வேணும். (சி. ம.)

### நோய் எண்.

சாமளாதேவி நூல் பிரகாரம் ஊழி நோயை மூன்று வகையாகப் பிரித்துள்ளார். அவையாவன :—

1. கொம்பன் வாந்தி பேதி.
2. குடற்படுவன் வாந்தி பேதி.
3. அக்கரன் வாந்தி பேதி.

என்பவையாம்.

ஆனால் ஏனைய மற்ற நூல் இந்நோயைக் குற்றயளவாக மூன்று பிரிவுகளாக வகுத்துள்ளார்கள். அவை :—

1. வளி ஊழி நோய்.
2. அழல் ஊழி நோய்.
3. ஐய ஊழி நோய் எனப்படும்.

இவ்விரண்டு வகைப் பிரிவுகளும் குற்றயளவாக யாதொரு வித்தியாசமுமில்லையெனக் கூறுவாருமுளர்.

### ஒவ்வொரு பிரிவுஊழி நோயின் தனிக் குறிக்குணங்கள்

### 1. வளி ஊழி.

" தானான விசூஷியது பிராதக்காலம்
தனிலுதித்து வாதநாடியு மிக்காகும்
வானான வயிறிரைந்து ஊதிக்கொள்ளும்
மாசிலா மேனியது கறுப்புமாகும்

கானான கண்விழிதான் திறந்தேநிற்கும்
கருத்தெல்லாங் கலங்கியே காய்ச்சலாகும்.
கோனானகுடல் குமுறிப் புரட்டலாகும்
கொடும்வாத விசூஷியிட குணமிதாமே.''

(யூகி சிந்தாமணி.)

என்பதினாலே, இந்நோயின் ஆரம்பத்தில் வாத நாடி மிகுந்து காணும். வயிறு இரைந்து ஊதிக் கொள்ளும். மேனி கருநிற மடையும். கண்கள் குழி விழுந்து திறந்தே நிற்கும். மனக்கலக்க முண்டாகும். காய்ச்சல், குடல் இரைந்து புரட்டல், வாந்தியும் பேதியும் உண்டாதல் ஆகிய இவையுண்டாகுமென அறிகிறோம்.

(வேறு)

வயிறு பொருமலுடன் கழிச்சல், வாந்தி, உடல் நடுக்கல், உடலில் ஊசியால் குத்துவது போன்ற வேதனை, வயிறு புரட்டல், இரைதல், உடல் கருத்தல், குடலிற் குமுறல், உடல் குளிர்ந் திருத்தல், வியர்த்தல், கெண்டைஏறல் (குரங்குவலி); நீர் வேட்கை வயிற்று வலி, பிசுபிசுத்த வியர்வை, முப்பிணியுண்டாதல், கை கால் சில்லிடல், உடல் பிசுபிசுத்து நாடிகள் தளர்ச்சியடைந்து மரணத்தையும் விளைவித்தலாகிய இக்குறி குணங்களை வளி ஊழி நோயில் காணலாம் எனச் சித்த மருத்துவம் கூறுகின்றது.

## 2. அழல் ஊழி.

'' குணமாகப் பகற்போது குதிகொண்டோங்கிக்
கோபித்துப் பித்தநாடியுமே மீறி
நிணமான நேருந்தன்னுடலமுழுந்தும்
நேரான மூர்ச்சை விக்கல் நிறங்குன்றாது
வணமான வாய்பிதற்றி வாந்தியாகி
மயங்கியே கிடைகொடாதே புரட்டும்
பிணமானதது போலப் பிரலாபிக்கும்
பித்தமாம் விசூஷியென்றே பேசலாமே.''

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், பித்த விசூஷியென்னும் அழல் ஊழி நோயில் குற்றம் மிகுந்து குருதியைக் கேடடையச் செய்து, ஐயத்துடன், அழல் கூடி மூர்ச்சை, விக்கல், உடல் கருநிறமடைதல், அதிக மயக்கம், வாய் பிதற்றல், படுக்கை பொருந்தாமை, வாந்தி, பிரலாபித்தல், கழிச்சல் முதலியவற்றை உண்டாக்கு மென அறிகிறோம்.

(வேறு)

அன்றியும், அடிக்கடி மிகுதியாகக் கழிதல், காது அடைத்தல், வாந்தி அதிகமாதல், மூர்ச்சை, நீர் வேட்கை, நாவறண்டு நாவை உள் இழுத்துக்கொள்ளல், பெருங் கழிச்சலில் குருதியும் சீழுங் கலந்திருத்தல், வியர்த்தல், குளிரல், எழுந்து விழுதல், ஆகிய குறிகுணங்களை அழல் ஊழி நோயில் காணலாம் எனச் சித்த மருத்துவம் கூறுகின்றது. தக்க மருந்துகளால் மூன்று நாள்களில் குணமாகுமெனவும் கூறியுள்ளார்.

### 3. ஐய ஊழி.

" பேசவே நாடியது அடங்கிக் காணும்
பிரிந்திடுமே கங்குல்தனிலி ரண்டாஞ்சாமம்
நாசவே உயிரதுவும் நாபிக்குள்ளாம்
நடைகொடாதே புறட்டுங்கொ றுக்கைவாங்கு
மேசவே கண்விழிமே லாகித்தாழும்
இடைவிடாப் பேதிதண் ணீர் மோர்போற்சாய்க்கும்
தேசவே தேகமெங்கு மிகவெளுக்குஞ்
சிலேட்டுமமாம் விசூஷியென்றே செப்புவீரே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், ஐய ஊழி நோயில், ஐயக்குற்றம் மிகுந்துகாணும். உடலோடு உயிரை வாட்டிப் படுக்கையில் கிடத்தும். அரட்டல் புரட்டல், குரங்கு வலித்தல், நாடிகள் தளரல், மயக்கம், கண்கள் குழிவிழுந்து விழி மேல் நோக்கி நீற்றல், இடைவிடாப் பேதியாதல் கழிச்சல், நீர் மோர் இவை போலிருத்தல், உடல் எங்கும் வெளுத்தல் ஆகிய இக்குறி குணங்களைக் காட்டும் என்பதேயாம்.

(வேறு)

இந்நோயில் செரியாமை, வாந்தி, கழிச்சல், நீர் வேட்கை, வயிறு கடுத்தல், உடல் வியர்த்தலாகிய குறி குணங்களைக் காட்டும். நோய் முதிர முதிர மேலே கூறியதுபோல் கழிச்சலானது நீராகவும், மோர் போன்று வெளுத்த நிறமாகவும், ஐயக் குற்ற மிகுந்து முப்பிணிக் குறிகுணங்களை யுண்டாக்கிக் கொல்லுவது முண்டு என்பதாகச் சித்த மருத்துவம் கூறுகின்றது.

## சாமளா தேவி நூலில் கூறிய வேறு மூன்று பிரிவு ஊழிநோயின் குறி குணங்கள்.

### 1. கொம்பன் வாந்தி பேதி.

கொம்பன் என்னும் வாந்தி பேதி நோயில் கழிச்சலும் வாந்தியும் அதிகமாகக் காணும். களைப்பு, மயக்கம், உடல் சில்லிடல், பிசுபிசுத்த வியர்வையுண்டாதல், உடல் உளைச்சல்,

நாவறட்சி, வயிற்று வலி, விக்கல், நாடி விழுந்து விடல், அழுந்தல் முப்பிணிக் குறிகுணங்கள் உண்டாதலாகிய இவற்றைக் காண் பித்து, நோய் தோன்றிய முப்பது நாழிகைக்குள் மரணமும் சம்பவிக்கும் என்பர்.

### கொம்பன் வாந்திபேதியின் சிறப்பு கூறுகிறார்.

ஒரு தடவை பேதியும் வாந்தியுமானவுடன் மயக்கம், களைப்பு அதிகமாகிப் படுக்கையில் கிடத்தும், வெகு விரைவில் நோய் மிகுந்து நோயினனைக் கொல்லும் என்பதாம்.

### 2. குடற்படுவன் வாந்திபேதி.

இதில் அளவுக்கு மிஞ்சிய பேதியும் வாந்தியுமுண்டாகிக் காத டைத்து மூர்ச்சை, அடி வயிற்றில் தாங்கொணாத வலி இவையுண்டாகும். உடல் குளிர்ந்து கனத்திருத்தல், சீதம் ரத்தம் கலந்து பேதியாதல், நரம்புகள் இழுத்துப் பிடித்தாற் போல் வலித்தல் முதலிய குறி குணங்களை யுண்டாக்கி நோய் தோன்றிய மூன்று தினங்களில் மரணம் சம்பவிக்குமெனவும், மூன்று தினங்களைக் கடந்து விட்டால் இந்நோய் குணமாகிவிடு மெனவும் நூல்கள் கூறுகின்றன.

### குடற்படுவன் வாந்திபேதியின் சிறப்பு விதி.

இதில் அடிக்கடி நீர் நீராகப் பேதியுண்டாகித் தாங்க முடியாத வயிற்று வலியுடன், வயிற்றைப் புரட்டி வாந்தியுமுண் டாகிச் சீதளம் மிகவுண்டாக்கும். மூன்று நாள்களில் கொல் லும். அக்கெடு கழிந்தால் குணமாகிவிடும்.

### 3. அக்கரன் வாந்தி பேதி.

இதில் சோறுபோல் மிகுதியாகப் பேதியாகும். பேதியில் சோறுவிழும். நாவுலரும், தாகமிகும், உடல் சில்விடும், மார்பு கைகால் இவைகளில் கடுப்பு அதிகம் காணும், இக்குறி குணங் களை இந்நோயில் காணலாம்.

### அக்கரன் வாந்திபேதியின் சிறப்பு விதி.

இது அசீரண பேதியைப் போல் பேதியாகி வயிறுப்பிக் கெடுதியை மெதுவாக விளைவிக்குமென்பதாம்.

(கையெழுத்துப் பிரதி.)

### ஊழி நோயின் பொதுக் குறி குணங்கள்.

உண்ட உணவு செரியாமல் மந்த முண்டாகும். வயிறு இரை யும், வாய் நீரூறும், ஏப்பம், விக்கல், வாந்தி இவையுண்டாகும். சில வேளை சுரம் வருவதுண்டு, வாந்திக்குப் பின் மீண்டும் வாய் குமட்டிக் கோழை கலந்த நீராக வாந்தியாகும், வாந்தியுடன் கழிச்சலு முண்டாகும், கழிச்சலில் முதலில் செரித்ததும் செரியாததுமாய்க் காணப்படும், மலம் பூராவும் காலியான பிறகு நீர் நீராய் கழிச்சல் காணும், கழிச்சல் நோய் முற்ற முற்ற அளவில் மிகுதியாகவும், கழுநீர் அல்லது கஞ்சித் தண்ணீர் போலும் கழியும், பிறகு கை விரல்கள், கால் விரல்கள், கெண்டைச் சதை, அடி வயிற்றின் சதை இவைகளில் கொறுக்கு வலி (குரங்கு வலி ( Muscular Cramps ) உண்டாகும்.

நோய் முதிரின் முப்பிணிக்குறி குணங்களாகிய நாவறளல், நீர் வேட்கை, பேச்சொலி கம்மல், வயிறூதல் கண் பஞ்சடைதல், காதடைத்தல், வாய் பிதற்றல், பிரலாபித்தல், நாடிகள் தளரல் அல்லது நாடி நடை காணாது அழுந்தல், மேல் மூச்சு, உடல் வியர்த்தல், பிசின் போன்ற வியர்வை கசிதல், உடல் சில்லிடல், கை கால்கள் குளிர்ந்திருத்தல், சிறு நீர் கட்டுப்படல், படுக்கை பொருந்தாமை, விக்கல், உதடு, பல், நகக்கண் இவை கறுத்தலாகிய குறி குணங்களைக் காட்டி மரணமும் சம்பவிக்குமென அறிக.

அன்றியும், உயிர் விடுவதற்குச் சற்று முன்பு வாந்தியும், கழிச் சலும் சற்று நின்று விடுவதுண்டு. ஆனால் நாடிகள் தோன்றா மையும், சன்னி பாதக்குறி குணங்களும் உண்டாகும். பொதுவாக வாந்திபேதியில் சாவோரின் அறிவு கடைசிவரையில் மாறாமலிருக் கும் என்பதையும் காணலாம்

வாந்திபேதி நோய்—குணமாகக் கூடியதாகயிருப்பின் கொடுக் கும் மருந்துகளும், நீர் வடிவான கஞ்சித் தண்ணீர் போன்ற பத்தி யங்களும் ஏற்றுக் கொண்டு, வாந்தியும் கழிச்சலும், சிறிது சிறி தாகக் குறைந்தும், மருந்தும் நீர் ஆகாரமும் உடலில் தங்கியும் உடலின் இயற்கை சூடு உண்டாகியும், சில்லிடல், குரங்கு வலி, நாவறட்சி, நீர் வேட்கை, வியர்வை, விக்கலாகிய இடக்குறி குணங்கள் நீங்கப்பெற்று, நாடி நடை வலுவடைந்து, சிறு நீரும் கழியுமாயின் இந்நோயினன் பிழைப்பதற்குரிய அறிகுறியான குணங்களெனத் தெரிந்து கொள்ளவும்.

(சி.ம.)

## வாந்திபேதி நோயை மற்றக் கழிச்சல் நோய்களினின்றும் பிரித்தறிவது எங்ஙனமெனில்.

பெரும்பாலும் வாந்தி பேதி என்னும் ''ஊழி நோய்'' ஒரு கொள்ளை நோயாய் ( Epedemic ) வருமாகலின், ஓரிடத்தில் இரண்டு மூன்று பேர்கள் அடுத்தடுத்து வாந்தியும், கழிச்சலும்

சேர்ந்தாற்போல் கண்டு இறப்பின், எவ்வகையான கழிச்சலாக இருப்பினும் நிச்சயப்படுத்தும் வரைக்கும் "ஊழி" நோய்க்குரிய மருத்துவங்களைப் புரிதல் வேண்டும்.

அன்றியும் ஊழியில் பெருவாரியாக வாந்தியும் கழிச்சலுமுண்டாகும். கழிச்சல் அரிசி கழுவிய நீர்போல் மாறும், உடல் வன்மையும் நாடி நடையும் விரைவாகக் குறையும், கொறுக்கு வலி உண்டாகும். நீரைக் கட்டுப் படுத்தும், இக்குறி குணங்களைக் கொண்டு ஊழி நோயைக் கணித்தல் நலமாகும்.

நிற்க, தூய்மைப்படுத்தாத வாளம், வெள்ளைப் பாடாணம் இவை சேர்ந்த மருந்துகளை உட்கொள்ளுவதாலும், அதிகம் உண்பதாலும் வாந்தியும் கழிச்சலுமுண்டாவதோடு ஊழிநோயைப் போன்ற குறி குணங்கள் தோன்றக்கூடும். மேற் கண்ட மருந்துகளை சாப்பிட்டதன் வரலாறு (சரிதையை ) தெரிந்து கொண்டு, நோய்இன்னதென்பதை முடிவு செய்து அவற்றிற்கேற்ற பரிகாரம் செய்தல் உத்தமமாகும்.

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

பூமியிலுண்டாம் தட்ப வெப்பத்தின் வேற்றுமையாலும், உணவாதி செயல்களின் வேற்றுமையாலும் ஐயக் குற்றமிகுந்து பசித்தீயைக் கெடுத்து உணவு செரியாமையை உண்டாக்கும். பிறகு வளி, அழல் இரு குற்றங்களும் தத்தம் தொழில்களில் கேடடைந்து முக்குற்றங்களும் கூடி மேல் நோக்குங்கால், கீழ் நோக்குங்கால், பரவுகால், நடுக்கால், முதலிய வாயுக்களை தூண்டி அவ்வவற்றின் தொழில்களை சரிவர நிகழாத காரணத்தால் ஊழிநோயுண்டாகும் என்பர்.

மேல் நோக்குங்கால் தூண்டப்படுவதால் வாந்தி, விக்கல், புளியேப்பம், நாவறட்சி, நீர்வேட்கை, வாய் நீருறல், வயிற்றுப்பல் முதலிய குறி குணங்களையும் ;

கீழ் நோக்குங்கால் தூண்டப்படுவதால் வயிறு இரைதல், கழிச்சல், குடலிரைதல், குடற் புரட்டல், குடல் முறுக்ல் குடல் முறுக்கி வலித்தல், சிறு நீர் கட்டுப்படல் முதலிய குறி குணங்களையும் ;

பரவுகால் தூண்டப்படுவதால் இரசம், இரத்தமிரண்டும் சரியாக உடலுக்குப் பயன்படாது, உடல் ஊட்டமும், உடல் வன்மையும் குறையும். வியர்த்தல், காதடைப்பு, கண் பஞ்சடைதல், கை கால்கள் உடல் இவை சில்லிடல், கொறுக்கு வலி, நாடி தளரல் முதலிய குறி குணங்களையும் ;

நடுக்கால் தூண்டப்படுவதால் மற்ற வாயுக்களுக்கு உதவி புரிய இயலாமலும், செரியாமையையும் விளைவிக்கும் என அறியவும்.

தவிர, முக்குற்றங்களும் வெகு விரைவில் தளர்ந்து (அழுந்தி) கேடடைவதால் முப்பிணிக் குறி குணங்கள் இந்நோயில் வெகு சீக்கிரத்தில் தொடர்ந்து துன்பங்களை மிகைப்படுத்தி நோயினனைக் கொல்லுமெனவும் அறியவும்.

**நாடி நடை.**

ஊழி நோய் வருந்துங்காலத்தில் முதலில் வளி நாடியும், அப்பால் அழல் நாடியும் அடங்கி முடிவில் ஐயம் பெருகி ஆயுளைப் போக்கும என்பதாம்.

(சி. ம..)

## 31. எருவாய் முளைநோய்.

வேறு பெயர்கள் : முளை நோய், அரிப்பு நோய், அடிமுளை நோய், மூல நோய் என்பவையாம்.

இயல்—கீழ்க் குடலிலிருந்து எருவாய் வரையிலுமுள்ள குடலின் கண் அமைந்த கார்க் குருதிகளில் ( Veins ) ஏதேனுமொன்று அல்லது பல தாபிதப்பட்டு, வீங்கி எருவாயிலில் எரிச்சல், நமைச்சல், அரிப்பு, சில வேளைகளில் வலி முதலிய குறி குணங்களைக் காட்டுவதும், வெளிக்குப் போகும்போது எருவைக்கட்டி, வெளிக்குப் போக முடியாது தடுத்தலும், அதனை முக்கி வெளியாக்க முயலின் நீர்வரண்டு, தேய்ந்து இறுகிய அஃது குருதி நாளங்களைக் கீறி அதினின்றும் கசியும் குருதியோடு மலம் கழிதலும், முக்குதலுக்கேற்ப முளை வெளியாகுதலுமாகிய இயல்புடைய நோயாம்.

(சி. ம.)

சுருங்கக் கூறில் ஆசனவாய் வளையங்களில் கிழங்குகளின் முளைகளைப் போலும், வேர்களைப் போலும் மாமிச முளைகளையுண்டாக்கி ஆசன வாயில் வலி, கடுப்பு, எரிச்சல், நமைச்சல், அரிப்பு, விக்கம், தாபிதம் முதலியவற்றையும், மலம் தீய்தல், மலம் கட்டுப்படல், குருதி இழிதலாகிய இயல்புடைய நோய் எனவும் கூறலாகும்.

(கை—எழுத்துப் பிரதி.)

## நோய் வரும் வழி.

"கந்தத்தில் கருணை யொழிய வேறொன்றும் புசியோம்"

என்றதால் கருணைக் கிழங்கு தவிர மற்ற கிழங்கு வகைகளைப் புசிக்கின் அவைகள் கீழ் நோக்குங்காலைக் கெடுத்து இந் நோயினை வருவிக்கும். ஆதலின் இக்கிழங்கு வகைகளையும், காரப் பொருள்களையும் மிகுதியாக புசித்தலாலும், கீழ் வாயை உறுத்தும்படி செய்யக்கூடியதான எப்பொழுதும் உட்கார்ந்திருந்தல், குதிரை, யானை, ஒட்டை இவற்றில் சவாரி செய்தல், மந்த மான உணவுகளைக் கொள்ளல், ஒக்கல் என்னும் யோக நிலையின் தன்வன்மைக்கு மிகுதியாக நிலைத்திருத்தல், மூச்சடக்கல் ஆகிய இச்செயல்களாலும் இந்நோய் பிறக்கும்.

அன்றியும் பெண்கள் கருத்தரித்துள்ளபோது சூல் பெருகப் பெருக, கீழ்க்குடல் அழுத்தப்படும்போதும், பெரு வயிறு நோய் முதிர்ந்து வயிறு மிகப் பெரியதாகும்போதும் இந்நோய் தொடங்குவதுமுண்டு.

சில வேளை தாய் தந்தையின் வழியே வருவதுண்டு, அன்றியும் பசியையடக்கல், பட்டினி கிடத்தல் இவற்றால் கீழ் நோக்குங்கால் கட்டுப்பட்டு மூலச்சூடு அதிகரித்து எருவை வெளியில் போகாத படி அடக்கிக் கீழ்வாய்கனலை மேலும் தூண்டி இந்நோயைப் பிறப்பிக்கும் எனலாம்.

(சி. ம,)

(மேற்கோள்.)

1. "காயத்தில் மூலரோகங் கண்டிடும் விதங்கள் கேளாய்,
பாயொத்த தீபனம் பசியை யடக்கில் வாயு,
மாயத்திலிருத்திக் கொண்டு மலவறையடக்கும் போது,
ஓயத்த குண்டலிக்குட் புகும் வாயுதானே."

2. "வாயு புகுந்து மலத் தோடபானத்தை,
தேயுவைக் கூட்டித் திரட்டிச் சுருக்கிடும்
தோயுமலம்வரின் சுருக்கி முன்னே
நின்றேயுமுளை போல பானனிருக்குமே."

(திருமூலர் நாடி நூல.)

என்பதினால் மேலே கூறியபடி கீழ் நோக்குங்காலும், கீழ் வாய்க் கனலும் கேட்டைவதால் இந் நோயுண்டாகுமென அறி கிறோம்.

(வேறு யூகி சிந்தாமணி)

"தத்தையாமதிகமாங் குளிரினாலுந்
தரியாத வழற்சியாற் கிரந்தியாலும்,
புத்தையாம் பொருந்தாத உஷ்ணத்தாலும்
புணர்ச்சியாற் கோபத்தாற் சலிப்பினாலும்,
கத்தையாம் வெகுகாரம் வேண்டலாலும்,
கடினமாமுப்பாலுங் காரத்தாலும்,
மொத்தையாம் வெகுதனங்கள் போனதாலும்,
மூலம் வந்துற்பத்தி முனையுந்தானே,"

என்பதினாலும் மூல நோயுற்பத்திக்குக் காரணம் இன்னதென அறிகிறோம். அதிகக் குளிர், அதிகக் காங்கை, கிரந்தி, சூடான பொருள்களைப்புசித்தல், மிகு புணர்ச்சி, மிகு கோபம், மிகு மனச் சலிப்பு, மிகு காரம், உப்பு இச்சுவையுள்ள பொருள்களை அதிகம் புசித்தலாகிய இக் காரணங்களால் மூல நோய் உற்பத்தியாகு மென யூகி முனி கூறியுள்ளார்.

முற்குறி குணங்கள்.

1. "காணப்பா வாயுவாலுங் கனத்தந்த வபானன்றன்னைப்
பூணப்பா மலத்தைக் கட்டிப் புகையெனக் கறுக்கிநாளுந்
தோணப்பா முளையைப் போலச் சுருக்கி முன் மலந்தான் வீழல்
ஆணப்பா வபானந்தன்னை அழுத்தவே யிறுக்கும் பாரே."

2. "மூலமே யெழுந்த போது மூலத்தில் கனல் தான் மீறும்
மூலமே யெழுந்த போது முளைவிந்து நாசமாகும்.
மூலமே யெழுந்தபோது முழங்கவே யிரைச்சலாகும்
மூலமே யெழுந்த போது முகிலில்லாக் கழிச்சல் தானே"
(சி.ம.)

(இதன் பொருள்.)

வளிக் குற்றத்தைப் பெருக்கக் கூடிய உணவு, செயல் முதலிய வற்றால் கீழ் நோக்குங்கால் கெட்டு எருவைக் கட்டி, புகையைப் போல் கறுக்கி வெளியாகாது செய்தல்; காற்றுப் பரியாமை; கீழ்வாய் எரிதல், தவளம் (விந்து) கெடல், வயிறு இரைதல்; வயிறு நொந்து கழிதல்; பசியின்மை; உணவு செரியாமை; புளியேப்பம்; நீர் வேட்கை; உடல் மெலிதல்; உடல் வன்மை

குன்றல் ; சோம்பலாகிய குறி குணங்களைக் காட்டும். அன்றியும் மனம் தளரும், சினங் கொள்ளும். சீறி விழும். முகம் வேற்றுமையடையும். முகத்தில் விளக்கெண்ணெய் பூசியது போலிருக்கும். இத்தியாதி குறி குணங்களை மூல நோயென்னும் எருவாய் முளை நோயின் ஆரம்ப காலத்தில் முற்குறி குணங்களாகக் காணலாம்.

(சி. ம.)

நோய் எண்.

எருவாய் முளை நோயை (மூல ரோகம்) நூல்களில் பலவகைகளாக அவரவர்களது கொள்கைக்குத் தகுந்தாற்போல் பிரித்துள்ளார்கள்.

A. தேரன்:—"மூலலட்சண மேலெனப் பல நூலிற்றச மோன மிட்டதே"

எனச் சேகரப்பா 253 ஆவது பாட்டில் "பத்து வகை" யென வகுத்து—அதன் வகைகளை—

" சீயொழுகியதுபு, ணீரொழுகியதுறு, தீயொழு, கியதுபனீயொழு, கியதற, லேயொழு, கியத்தளே யொழு, கியதுதசைக்,
காயொழுகிய, தழு, மோரொழுகியதடர் காலொழுகியதுமுளை,
யேயொழு, கியதிவை, மூலம், தாய்நெறி, யேர்பெறு, மோர்டஃதே".
(சேகரப்பா—254 பாடல்.)

என்பதற்கிணங்க; மூல நோயைக் கீழ்க்கண்டவாறு பத்து வகையாகத் தேரன் வகுத்துள்ளார் :—

1. எருவாயி லிருந்து வருவது சீயொழுகுவது; (சீழ் மூலம்).

2. எருவாயி லிருந்து புண்ணீ ரொழுகுவது; (புண் மூலம்).

3. எருவாயி லிருந்து சூடோடெரிச்சலுங் கூடிக் கழிவது; (தீ மூலம்.)

4. எருவாயி லிருந்து நீர் போலும் பிசுபிசுப்புடனும் தன்னையறியாம லிழிவது; (நீர் மூலம்).

5. எருவாய் முளையிற்று அதன் பேரி லிழிவது; (முளை மூலம்)

6. எருவாயி லிருந்து சதை யிற்று விழுவது; (சதை மூலம்).

7. காய் போல முளைகடுப்போடு வெளியாவது; (கடுப்பு மூலம்).

8. மோர் போல் வெளுத்துச் சிறுகச் சிறுக வெளியாவது; (வெளுப்பு மூலம்).

9. அடிக்கடி காற்றுப்பரிவது போல் வெளியாவது; (காற்று மூலம்).

10. கீழ்க்குடல் கருணைக் கிழங்கின் முளைபோலாகுவது (பெருமுளை மூலம்)—என்பவையாம். ஆனால் அனுபவத்தில் இப்பத்து வகை எருவாய் முளை நோய்ப் பிரிவுகளை அதிகமாகக் கையாளுவதில்லை.

(சி.ம.)

B " யூகிமுனி சிந்தாமணி" என்னும் நூலில் எருவாய் முளை நோயை (மூல ரோகம்) இருபத்தியொரு பிரிவுகளாக வகுத்துள்ளார். அவையாவன :

1. "சனிப்பான மூலத்தின் பெயரேதென்னில் சமரசமாம் நீர் மூலஞ் செண்டுமூலம்,
முனிப்பான முளை மூலம் சிற்று மூலம் மூர்க்கமாம் வறண் மூலம் ரத்த மூலம்,
திணிப்பான சீ மூலம் ஆழி மூலம் திணியான தமரகமா மூலத் தோடு
வனிப்பான வாத மொடு பித்த மூலம் வகையான சிலேட்டு மத்தின் மூலமாமே."

2. "வகையாகுந் தொந்தமா மூலத்தோடு
வளர்கின்ற வினைமூல மேக மூலம்,
பகையா கும்பவுத்திரமா மூலத்தோடு
படர்கிரந்தி மூலமோடுகுதமா மூலம்
புகையாகும் புற மூலஞ்சுருக்கு மூலம்
பொருகின்ற சவ்வாகு மூலத்தோடு,
தகையாக மூலமது இருபத் தொன்று
தன்மையாய்ச் சாற்றியதின் சுருபந்தானே."

என்பதினால், யூகிமுனியாரால் பிரிக்கப்பட்ட "இருபத்தொரு பிரிவுகளை இங்கு கவனிக்கவும். இவற்றைப் பற்றிய விவரங்களை நாம் தெரிந்துகொள்வது சாலச் சிறந்ததாகும்.

21. வகையான எருவாய் முளை நோய்களாவன— ·

1. நீர் முளை (நீர் மூலம்),
2. செண்டு முளை (செண்டு மூலம்),
3. பெருமுளை (முளை மூலம், பெரு மூலம்),
4. சிறு முளை (சிற்று மூலம்),
5. வறள் முளை (வறண் மூலம்),
6. குருதி முளை (இரத்த மூலம்),
7. சீழ் முளை (சீழ் மூலம்),
8. ஆழி முளை (ஆழி மூலம்),
9. தமரக முளை (தமரக மூலம்),
10. குழி முளை (பவுத்திர மூலம்),
11. கழல் முளை (கிரந்தி மூலம்),
12. குத முளை (குத மூலம்; அடிதள்ளல் மூலம்),
13. வெளி முளை (புற மூலம்),
14. சுருக்கு முளை (சுருக்கு மூலம்),
15. சவ்வு முளை (சவ்வு மூலம்),
16. வளி முளை (வாத மூலம்),
17. அழல் முளை (பித்த மூலம்)
18. ஐய முளை (ஐயமூலம்),
19. முக்குற்ற முளை (தொந்த மூலம்),
20. வினை முளை (வினை மூலம்),
21. மேக முளை (மேக மூலம்)

என்பனவாம்.

ஒவ்வொரு பிரிவு எருவாய் முளை நோயின் தனிக் குறி குணங்கள்.
(யூகி. முனி)

### 1. எருவாய் நீர்முளை (நீர் மூலம்)

"சுருட்டங்கேள் தொப்புளிலே மிக வலித்துச்
சுருண்டு கீழ் வயிற்றைப் பொருமிக் கொண்டு
வருபங்கேள் மலம் வறண்டு வாய் நீருறும்
வாயுதான் பரிகையிலே நுரை போற் காணும்
துருபங்கேள் புடவை தனிற்றோய்வுமாகும்
சுருக்கமாக மலம் வருதல் போலிருக்கும்
திருபங்கேளடிக்கடிக்கு நீராய் போகும்
நிலையான நீர் மூலம் நினைவாய்ப்பாரே."

என்பதினால், எருவாய் நீர் முளை நோயில் உந்தியைச் சுற்றிலும் சுருட்டி வலித்தல்; கீழ் வயிறு பொருமல்; எருவரண்டு வெளியாகாமல் காற்று மட்டும் பரிதல்; நுரையுடன் கூடிய நீர் எருவாய் வழியே கசிதல்; எரு வருவது போன்ற உணர்ச்சி, ஆனால் எரு வெளிவராது நீர்மட்டும் கசிதலாகிய குறிகுணங்களுண்டாம்.

### 2. எருவாய் செண்டு முளை.

" நினைவாகக் கருணையிட முளையைப் போல
நிமிர்ந்தெழுந்து நாள் மூன்று நிற்பமாகி,
கனவாகக் கன்றியே மிக வலிக்கும்
காரந்தான் போட்டவுடன் களையாய் வீழும்
இனவாக இரத்த மொடு தண்ணீர் காணும்
இறுகியேமலந் தீயுமிரைச்சலாகும்
தினவாக வாசனத்தைச் சுருக்கிக் கொள்ளும்
செய செண்டு மூலத்தின் திறமைதானே."

என்பதினால், எருவாய் செண்டு முளை நோயில் கருணைக்கிழங்கு முளையினுடைய அடியின் வடிவமாய்ச் சிவந்து, பருத்து வெளியாகிய அஃது உள் தள்ளினும் உள்ளுக்குப் போகாமல், கடினத்துடன் வறண்டு, கன்றிப்போன நிறத்துடன் கீழ் வாயிலிற் றோன்றி மிகுந்த வலியை உண்டாக்கும். அதினின்றும் குருதியும் நிண நீருங் கசியும். வயிறு இரையும். எரு கட்டுப்படும். எருவாய் நோகும், தினவெடுக்கும், சுருக்கிக்கொள்ளும். இத்தியாதி குறி குணங்களைச் செண்டு மூலம் என்னும் எருவாய் செண்டு முளை நோயில் காணலாம்.

### 3. எருவாய் பெரு முளை (முளை மூலம்; பெரு மூலம்).

" திறமாக வாசனத்திற் கடுப்பு முண்டாம்
திரட்சியாய்த் தடித்தெரிவு செயலுங் காணும்,
அறமாக வடி வயிறு கல்லு போலாம்
ஆசனந்தான் மிகச் சுருங்கித் தினவுமுண்டாம்,
உறமாகக் குதி கொள்ரத்தப் பீறிறங்கும்
கூசாத இரைச்சல் மிக வேப்ப முண்டாம்
மறமாகமஞ்சள் முளை போலெழும்பும்
மலந்தீயு முளை மூல வாண்மைதானே."

என்பதினால் முளை மூலம் என்னும் எருவாய் பெரு முளை நோயில் மஞ்சளின் முளையைப் போல் ஒரு முளை எருவாயில் தோன்றிக் கடுத்துத் தடித்து எரிச்சலுண்டாகி அடி வயிறு கல் போலாகும். எருவாய் சுருங்கி தினவுண்டாகும், வெளியான

முளையிலிருந்து குருதி பாயும். வயிற்றுள் காற்றுக் கூடி இரைச்சல், ஏப்பம் இவை யுண்டாகும். மலம் தீய்ந்து வெளியாகும். இக்குறி குணங்களை ''எருவாய் பெரு முளை'' நோயில் காணலாம்.

4. எருவாய் சிறு முளை (சிற்று மூலம்; சிறு மூலம்) :

'' வண்மையாயுடம் பெரியு மயக்கமாகும்
வயிறுதான் பளபளென்னும் வலி வாய்க் குற்றும்,
இண்மையாய் இறுகுறென்றே இரைச்சலாகும்
இசிவுடனே பொருமலா யிளைப்பு மாகுந்
திண்மையாய்ச் சிற்று முளைபல வுண்டாகுந்
தேகமெங்கும் வெளுப்பாகுஞ் செயலுங்காணும்,
வெண்மையாய் வெளுத்துமே பசியிராது
மேனி கன்றுஞ்சிற்று முளை மிடுக்குத்தானே.''

என்பதினால் சிற்று மூலம் என்னும் எருவாய் சிறு முளை நோயில் உடலெரியும்; மயக்கமுண்டாகும்; வயிறுதிப் பளபளப்பாகும். வயிற்றில் குத்தல், இரைதல், இழுத்தாற் போல் நோதல், பொருமலிவையுண்டாகும். உடல் இளைக்கும், சிறிய முளைகள் எருவாயிலில் உண்டாகும். அதினின்றும் குருதி வடியும். உடல் வெளுக்கும். பசித் தீ குறையும். உடல் கன்றும் (கடுக்கும்). இக் குறிகுணங்களை சிற்று மூல நோயில் காண்பிக்கும்.

5. எருவாய் வறள்முளை (வறண் மூலம்) :

'' மிடுக்காக மலத்தையே யிறுக்கிக் கொள்ளும்
மிகுவாக ரத்தமது துளியாய் வீழும்,
அடுக்காகச் சட முலர்த்தியழல் கழிக்கும்
ஆண்மை தான் மிகப்பேசிச் சண்டை கொள்ளும்,
உடுக்காக வுள்ளிருக்கு முளைகள் தானும்
ஒருவருக்குந் தெரியாது ஓடுக்கி வைக்குந்,
திடுக்காக நாள் தனிலே பெலன் குறைக்குஞ்
செயலழிக்கும் வறண் மூலச்சேதிதானே.''

என்பதினால், எருவாய் வறள் மூல நோயில் உடலில் அழல் மிகுதியால் குடல் வரண்டும், எரு உலர்ந்தும் இறுகியும், வெளியாகாமல் தடைப்படும். எருவை முக்கி வெளியாக்கின் அதனுடன் குருதியும் துளித்துளியாக விழும். முளை வெளித் தோன்றாமல் உள்ளேயே யிருக்கும். உடல் வெளுக்கும். வன்மை குறையும். செயலழிக்கும். இத்தியாதி குறி குணங்களை வறண் மூல நோயில் காணலாம்.

### 6. எருவாய் குருதி முளை (இரத்த மூலம்).

" சேதியாய்த் தொப்புள் தனில் வலித்து நொந்து
 சிறுகதிர் போற் பீறிட்டுரத்தம் விழும்
மேதியாய் மேனி வற்றிவெளுத்துப் போகும்
 மிகக்கை காலயர்ந்துமே சோபையாகும்.
மாதியாய் மார்பிளக்குந்தலை நோயுண்டாம்
 மயக்கந்தான் மிகுதியாய்த் தள்ளிப் போடும்,
நாதியாய்க் கண்ணிரண்டும் மஞ்சள் போலாம்
 நலியும் ரத்த மூலத்தின் நண்புதானே."

என்பதினால், எருவாய் குருதி முளை நோயில் தொப்புளில், வலித்து வெளிக்குப் போகும் போதெல்லாம் குருதியானது பீச்சுக் குழலிலிருந்து பீச்சுவது போலப் பீறிட்டுப் பாயும். உடல் வெளுத்து வன்மை குறைந்து கைகாலோய்ச்சலுமுண்டாகும். மயக்கம், மார்புநோய், தலைவலி, கண்கள் மஞ்சளித்தலாகிய குறிகுணங்களையும் உண்டுபண்ணும்.

### 7. எருவாய் கீழ்முளை (சீழ் மூலம்).

" நண்பாகக் குதங்கடுத்து எரிப்பு தோன்றும்
 நாற்றியே சீயோடு தண்ணீர் காணும்,
மண்பாக மாமிசங்கள் கரைந்து கொண்டு
 வடிவமெல்லாம் வெளுத்துமே மஞ்சளாகும்
மெண்பாகமேவும் வாய் நீரதாகும்
 மிடுக்கான நடை குறையும் மெலிவு மாகும்,
திண்பாகச் சிறுநீர்தான் மஞ்சளிக்குஞ்
 சீமூலந்தன்னுடைய சேதியாமே."

என்பதினால், எருவாய் சீழ் முளை நோயில் எருவாயைச் சுற்றிலுங் கடுப்பும் எரிச்சலுமுண்டாகும். வெளிக்குப் போவதற்கு முன்பு சீயொடு நீர் வடிந்து பிறகு எரு இழியும். அதில் இற்றுப் போன சதைத் துணுக்குகள் காணப்படும்; உடல் வெளுத்து மஞ்சளித்து மெலிவடையும். நடை குறையும். சிறுநீர் மஞ்சளிக்கும். இக்குறி குணங்களை சீழ் மூல நோயில் காணலாம்,

### 8. எருவாய் அழிமுளை (ஆழி மூலம்).

" சேதியாய் நீண்ட வள்ளிக் கிழங்கு போலத்
 திமிர்ந்துமே யேகமுளை யாகக் காணும்,
நீதியாய் நீராடுஞ் சீயுமிரத்தம்
 நிரைநிரையாய்த் தோன்றியே மலமுஞ்சிக்குங்,

காதியாய்க் காரங்கள் ஏற்றிடாது
கடிய பலஹீனமாந் தேகந்தானும்,
ஆதியாம் அயர்ந்ததனை யொறுத்துக் கொள்ளும்
ஆழி மூலத்தினிட ஆண்மை தானே.''

என்பதினால், எருவாய் ஆழி முளை நோயில், எருவாயிலில் வள்ளிக் கிழங்கைப் போல் பருத்து நீண்டு ஒரே முளையாய்த் தோன்றும். அதனை உள்ளுக்குத் தள்ளினும் செல்லாது. அதி னின்றும் நீரும், சீழும், ரத்தமும் வடியும். எருவெளியாகாது தடைபட்டுத் தாங்கமுடியாத வலியுண்டாகும். உடல் வன்மை குறைந்து அயர்வு உண்டாகும். இக்குறிகுணங்களை ஆழி மூல நோயில் காணலாம்.

### 9. எருவாய் தமரக முளை (தமரக மூலம்).

'' மூலமாம் பவனத்திலுலக்கைப் பூண் போல்
முதிர்ந்த தாமரைப் பூப்போலலர்ந்திருக்கும்,
நூலமாம் நொறுக்காக மலமுங்காணும்
நுணுக்கேறி இரத்தமொடு தினவுமுண்டாம்,
வாலமாய் வயிறிரைந்து நீராய்ப் போகும்
வயி றூதிப் பசியில்லாமந்தங் காணும்,
தாலமா மேல் மூச்சாய் அசதியுண்டாம்
தமரக மாமூலத்தின்றண்மை தானே.''

என்பதினால், எருவாய் தமரக முளை நோயில் எருவாயிலில் முளைவெளியே தோன்றி உலக்கைப் பூண் போலாவது, தாம ரைப் பூப்போலாவது பெரியதாய்க் காணும். குருதி மிகுதி யாய் வெளியாகும். தினவும் நமைச்சலுமுண்டாகும். உடல் மெலியும். மேல் மூச்சும் அசதியும் மிகவுண்டாகும். செரி யாமை, வயிறூதல், நீராகக் கழிதல், பசியின்மை, மந்தமா கிய இக் குறி குணங்களும் தமரக மூல நோயில் காணும்.

### 10. எருவாய் வளி முளை (வாத மூலம்).

'' தண்மை கோவைப் பழம் போற் குதஞ் சிவப்புற்
றதனிலடப்பம் பூப் போல முளை வளர்ந்து,
கண்மை கறுப்பாய் மிருதுவாயிருக்கும்
கடுப்போடு தினவு குற்றல் திமிர்த்தலாகும்,
வண்மை மயிர்தான் முளைத்து மலஞ்சிக் கென்று
மகத்தாகக் கறுத்து மெத்தத் திரண்டு காணும்,
வெண்மை வயிறு விட்டுமே குடலுள் வலிக்கும்
மிக்க தலைவலி வாத மூலமாமே.''

என்பதினால், எருவாய் வளி முளை நோயில், கீழ்வாய் கோவைப் பழம் போல் சிவந்தும், அதில் அடப்பம் பூப்போல் முளை வளர்ந்து கறுத்து, மெலிந்து, கடுப்பு, நமைச்சல், குத்தல், திமிர்த்தல் இவை யுண்டாயிருக்கும். எருவாயைச் சுற்றிலும் மயிர் மிகுதி யாய் முளைக்கும். மலஞ் சிக்கிக் கறுத்திருக்கும். தலை நோ வும், குடலுள் வலிக்கும். இக் குறிகுணங்கள் வாத மூல நோய்க் குரியவைகளாம்.

### 11· எருவாய் அழல் முளை (பித்த மூலம்).

'' தலைவலிதான் மிக வுண்டாம் பருத்திக் கொட்டைத்
  தான் போலும் நெற்போலு முளை யுண்டாகும்,
மலைவலியாய் மலஞ்சிக்கி உருண்டுருண்டு
  மாவுண்டைத் திரித்திரியாய் ரத்தஞ்சீயாய்க்,
குலைவலியாய்க் குதங்கடுத்து எரிவுமாகிக்
  கூச்சமாய்த்தாக மொடு வியர்வையாகும்,
துலைவலியாய்த்தியக்கமுமாய்க் கோபமாகும்
  சொற்பலவீனமும் பித்த மூலமாமே.''

என்பதினால், எருவாய் அழல் முளை நோயில் எரு வாயிலில் பருத்திக்கொட்டை போலும் நெல்லைப் போலும் அளவுள்ள முளைகள் தோன்றும். அழல் குற்றத்தின் கேட்டால் எரு வறண்டு, உருண்டும், திரித்திரியாயும் வெளியாகும். குருதியும் சீயும் வடியும், குலைவலி, கீழ்வாய் கடுப்பு, எரிவு, நீர் வேட்கை, வியர்வை தலைநோய், கோபம், தியக்கம், உடல் வன்மை குறை தலாகிய இக் குறி குணங்களையும் பித்த மூல நோயில் காணலாம்

### 12. எருவாய் ஐய முளை (ஐய மூலம் ; சிலேட்டும மூலம்).

'' ஈனமாங்குதத்தில் முளை வெள்ளையாகும்
  எந்நேரந்தினவதிக மெரிவுமாகும்,
கானமாங்கடுப்புடனே சீயுந் தண்ணீர்
  கனமான வலியாகி மலந்தானோங்குந
தானமாமூத்திரந்தான் சூடுண்டாகும்
  சொற்குண பேதகமாகுந்தாது நட்டம்,
பானமாம் பாண்டு வொடு அருசியாகும்
  பரவுசிலேட்டும மூலப்பாங்குதானே.''

என்பதினால், எருவாய் ஐய முளை நோயில், எருவாயில் வெண்மையான முளை தோன்றும். அதில் எந்நேரமும் தினவு, எரிச்சல் கடுப்பு முண்டாகும். சீயுந் தண்ணீருடன் கடுத்து மலமிறங்கும். சிறுநீர் சூடாயிறங்கும். சொற்கள் பேதகமாகும். தாது நட்டம், உடல் வன்மை குறைதல்; உடல் வெளுத்தல், அருசி ஆகிய இக்குறி குணங்கள் யாவும் ஐய மூல நோய்க்குரியவையாம்.

### 13. எருவாய் முக்குற்ற முளை (தொந்த மூலம்)

" பாங்கான குதமிறுகிக் கோழிச் சூடு
  பதித்தது போற்றானிருக்கும் நடக்க வொட்டா,
வாங்கான வயிறு மெத்தப் பொருமலாகும்
  வருத்தமொடு வியர்த்துமே மிக நடுக்கும்,
தாங்கான தவித்துமே தாகமாகுந்
  தரியாமல் வயிறதுவும் பேதியாகும்,
தீங்கான சடமட்டை போற் சுருங்கும்
  திடுக்குமே தொந்த மென்ற மூலந்தானே."

என்பதினால், எருவாய் முக்குற்ற முளை நோயில், கீழ்வாய் இறுகி முளையானது கோழிக் கொண்டையை அவ்விடத்தில் பதித்து வைத்தது போற் காணும். நடக்க வொட்டாது. வயிறு மெத்தவும் பொருமலாகும். வியர்க்கும், நடுக்கல், நீர்வேட்கை, கழிச்சல், உடல் இளைத்து அட்டையைப் போல் சுருக்க முண்டாதலாகிய இக்குறி குணங்கள் யாவும் தொந்த மூல நோய்க்குரியவையாம்.

### 14. எருவாய் வினை முளை (வினை மூலம்).

" திடுக்கிட்டுச் சோறு செரியாமையாகுந்
  தீபனந்தானில்லாமற் புளித்தேப்ப மாகும்,
அடுக்கிட்டவடி வயிற்றிற் குற்றலுண்டாம்
  ஆங்காரக் கோப மொடு மலமுங் கட்டுங்
கடுக்கிட்ட கைகாலு மோச்சலாகுங்
  கனமாக வயிரிரைந்து காந்த லுண்டாம்,
வெடுக்கிட்டு நரம் பெல்லாமிசிவு மாகு
  மிகக்கடுக்கும் வினை மூல விவரந்தானே."

என்பதினால், எருவாய் வினை முளை நோயில், உணவு செரியாமை, புளியேப்பம், அடிவயிறுகுத்தல், வயிறு இரைதல், கோபம், ஆங்காரம், மலம் கட்டுப்படலாகிய இவை யுண்டாகும். அன்றியும் கைகாலோய்ச்சல், நரம்பிசிவு, கடுப்பு, உடல் காந்தல் முதலிய குறி குணங்களும் வினை மூல நோயிலுண்டாகும்.

### 15. எருவாய் மேக முளை (மேக மூலம்)

" வினையாக லிங்கத்தில் வெள்ளையூற்றும்
மெத்த வாய்க் குதந்தன்னிலுதிரஞ்சாய்க்கும்
சனையாகச் சத்த மதாய்க் கழிச்சலாகுந்
தாக்கான சிறு நீருமெரிச்சலாகும்,
பனையாகப் பருக்குங்கால் தலைவலிக்கும்,
பாரமாயுடம் பெங்குந்தி மிருண்டாகும்,
முனையாக மூத்திரந்தான் மதுரமாகும்
மூர்க்கமாமேக மென்ற மூலந்தானே."

என்பதினால், எருவாய் மேக முளை நோயில் ஆண்குறியில், வெள்ளை வீழும். முளையிலிருந்து குருதி கொட்டும். வயிறு இரைந்து பேதியாகும். சிறு நீர் எரிவுடன் இழியும். தலை வலியும் உடம்பில் திமிருண்டாகும். சிறு நீர் தித்திப்புத் தன் மையோடுமிருக்கும் (மது மேகம் ; தித்திப்பு நீர்). இத்தியாதி குறி குணங்களை மேக மூல நோயில் காணலாம்.

### 16. எருவாய் குழி முளை (பவுத்திர மூலம் ; பகந்திர மூலம்.)

" மூர்க்காய்ப் பவுத்திரத்திற் கட்டியாகி
மூத்திரந்தானடிக்கடிக்கு அருவலாகும்,
கார்த்த மாங்கால் கையுகனப்புமாகும்
கனகனக்குங் குதங் குய்யஞ் சாவற் சூடு
பூர்க்கமாம் பூப்போல முளைகள் காணும்
பெருங்கோவைப் பழம் போலச் சிவப்புமாகும்,
பார்க்கமாங்காரந்தான் போடத் தீரும்
பவுத்திரமா மூலத்தின் பண்பு தானே."

என்பதினால், எருவாய் குழி முளை நோயில், எருவாயின் முளைக் குப் பக்கத்தில் சிறு கட்டியைப் போல் தோன்றி உடைந்து, உடைத்தவாய் எளிதில் உலராது. புடம் வைத்தது போல் உள்ளே துளைத்துக்கொண்டே போம். (i.e.) பவுத்திரம் அல்லது பகந் திரம் உண்டாகும்.) சீயும் கசியும். கைகால்கள் வீங்கும். குதங்குய்யமிரண்டும் சாவற்கொண்டையைப்போல் கனத்துக் காணும் (வீங்கும்). அன்றியும் முளையானது சாவற் கொண்டை யைப் போன்ற வடிவத்தோடு சிவந்து காணும். இக்குறி குணங் கள்யாவும் பவுத்திர மூல நோய்க்குரியவையாம்.

17, எருவாய் கழல் முளை (கிரந்தி மூலம்).

''பண்புதான் லிங்கத்திற்புண்ணுமாகும்
பாரமாய்க் கால்கையுங்கடுப்பு முண்டாம்,
குண்பாகக்குதத்துக்குள் விரணமாகிக்
கொடிக்கொடியாய் முளையுண்டாய்ச் சீயும் ரத்தம்,
தண்புதான் தண்ணீரும் பெருகவுண்டாந்
தணல்போல எரிவோடு கடுப்பு மாகுங்
கெண்புதான் கெட்டியாய் மலம் வறண்டு
கீற்றாக வெடித் திறங்குங்கிரந்தி மூலம்''.

என்பதனால், எருவாய் கழல் முளை நோயில் ஆண் குறியில் புண் உண்டாய் எருவாய் வரையில் சிலையோடிப் பரவி, அதிலினின்றும் முளைகள் வெளித் தோன்றும். சீழுங் குருதியும் நீருங் கலந்து வடியும். அத்துடன் எரிச்சல், கடுப்புமுண்டாகும். கைகால்கள் கடுக்கும். எரு வரண்டு கட்டுப்படும். எருவாய் வெடித்து மலமிறங்கும். இக்குறிக் குணங்கள் யாவும் கிரந்தி மூல நோய்க்குரியவையாம்.

18. எருவாய் அடி தள்ளல் முளை (குதமுளை, குத மூலம்).

''இறங்குமே மூங்கிலிடக் குருத்துபோல
இழுத்துமே தள்ளிடிலோவுள்ளே போகும்,
பிறங்குமே சீயோடு ரத்தம் பாயும்
பெருகியே வயிறு மெத்தக் கனத்துக்கொள்ளும்,
அறங்குமே கால்கையு மதைப்பு மாகும்
அடிக்கடிக்கு நாவறண்டு தண்ணீர் தேடுங்
குறங்குமே மிகவலிக்குங் கோபமுண்டாங்
கொடிய குத மூலத்தின் குணமிதாமே.''

என்பதனால், எருவாய் அடி தள்ளல் முளை நோயில், கீழ் வாயிலில் மூங்கில் குருத்து போல் தடித்து அடிக்குடல் வெளியாகித் தோன்றும். அதனை உள்ளே தள்ளின் போகும். சிலருக்கு மீண்டும் வெளியே வரும். சீழுங்குருதியும் வடியும். வயிறுப்பும். நாவறண்டு நீர் வேட்கையுண்டாகும். கைகால்கள் வீங்கும். தொடைகள் வலிக்கும். கோபம் மிக வுண்டாகும். இத்தியாதிக் குறிக் குணங்கள் குத மூல நோய்க்குரியவையாம்.

19. எருவாய் வெளி முளை (புறமூலம்).

"குணமதாயெண்ணெய் போற்றண்ணீர் போலுங்
கூற்றான கடுப்போடு சியு முண்டாந்
திணமதாய்த் தினவெடுக் குந்தி மிர்ப்புண்டாகுஞ்
சிறுசிரங்காய் மேலெல்லாஞ் சொறியுமாகும்,
பணமதாயாசனத்திற் பகுப்பு போலப்
பாங்காக விதனமாய்ப் படுக்கை கூடா
பிணமதாய் முக மெல்லாம் வாட்ட முண்டாம்
பேரான புறமூலப் புதுமைதானே".

என்பதினால், எருவாய் வெளி முளை நோயில், எருவாயிலில் சிறு பருக்களைப் போன்ற முளை வெளிப்புறமாய்த் தோன்றும். எண்ணெய் போலும் தண்ணீர் போலும் கடுப்புடன் சீழ் கசியும். தினவு, நமை, திமிர் இவையுண்டாம். உடம்பில் சிறு சிரங்காய்ச் சொறியுமுண்டாகும். படுக்கை பொருந்தாது. முகவாட்ட முண்டாம். இக்குறி குணங்களை புற மூல நோயில் காண லாம்.

20. எருவாய் சுருக்கு முளை (சுருக்கு மூலம்).

"புதுமையா யாசனத்தைச் சுருக்கிக்கொண்டு
பெருங்குடலில் வலியோடு பொருமலாகும்,
கதுமையாய்க் குதந்தன்னிற்றடிப்புண்டாகுங்
கழலுமே தண்ணீரும் ரத்தந்தானும்
வெதுமையாய் வெவ்வனல் போலழன்று காணும்
வேற்றுடம்பாய்த் தான் வெளுத்து வெறிப்புண்டாகும்,
பதுமைபோல் தேகமெங்கும் அசைவு கூடாப்
பண்பான சுருக்கென்ற மூலந் தானே."

என்பதினால், எருவாய் சுருக்கு முளை நோயில் எருவாய் சுருங்கித் தடிப்புண்டாகும். பெருங்குடல் வலியுடன் உப்பும். மலத்துடன் நீரும் குருதியும் வெளியாகும். உடல் வெப்பங் கொண்டு வெளுக்கும். உடல் ஒடுங்கும். மயக்கமுண்டாகும். இக்குறி குணங்கள் சுருக்கு மூல நோய்க்குரியவையாம்.

21. எருவாய் சவ்வு முளை (சவ்வு மூலம்).

"சுருக்கியே முதுகந்தண்டிலுற்பவித்துத்
தொப்புளிலே தாமரைப் பூப்போல் மலர்ந்து
அருக்கியே குதத்திலே காரமாக்கி
அடிவயிற்றிலோங்குமே மூல ரோகம்,

சொருக்கியே சவ்வு போலாசனத்தில்,
சுற்றியே நின்றுதான் சீயுந் தண்ணீர்,
பருக்கியே கசிவாகுந்மெந் நேரந்தான்,
பண்பான சவ்வாகு மூலந் தானே''.

என்பதினால், எருவாய்ச் சவ்வு முளை நோயில், எருவாயிலில் முளையானது குளகுளத்து நீண்டு சவ்வு போல் கீழே தொங்கும். நிண நீருஞ் சீயுங் கசியும். நமைச்சலும் எரிவுங்காணும். அடி வயிறு நொந்து எரியும். இக்குறி குணங்கள் சவ்வு மூல நோய்க் குரியவையாம்.

### தீரும் தீராதவை.

(சாத்தியம்)

1. ''தானென்ற மூலத்தில் சாத்தியந் தான்
சாதகமாய் நீர் மூல முளை மூலந்தான்,
வானென்ற வறண்மூலம் ரத்த மூலம்
வாதமாமூலந்தான் பித்தமூலம்,
வேனென்ற மேகமா மூலத் தோடு
விளை பவுத்திர மூலமாங் கிரந்தி மூலம்
பேனென்ற புற மூலஞ் சுருக்கு மூலம்
பெருகுசவ்வு மூலமது சாத்திய மாமே''.

(அசாத்தியம்).

2. ''ஆமென்றவ சாத்தியத்தைச் சொல்லக்கேளாய்
அழிவு செண்டுமூலமாஞ் சிற்று மூலம்,
தேமென்ற சீமூலமாழி மூலந்
திணிவான தமரகமா மூலத்தோடு,
வேமென்ற வினை மூலஞ் சிலேட்டுமமூலம்
மிளிர்கின்ற குதமூலந் தொந்த மூலம்
ஓமென்ற ஒன்பதுவு மசாத்தியந் தான்
உறுதியாய் மூலத்தினுண்மைதானே.''

(யூகி சிந்தாமணி).

(இதன் பொருள்.)

(சாத்தியம்.)

எளிதில் தக்க மருத்துவத்தால் தீரக்கூடியவை.

(1) நீர் முளை.
(2) பெரு முளை.
(3) வறள் முளை.
(4) குருதி முளை.
(5) வளி முளை.
(6) தீ முளை.
(7) மேக முளை.
(8) குழி முளை.
(9) கழல் முளை.
(10) புற முளை (வெளி முளை).
(11) சுருக்கு முளை.
(12) சவ்வு முளை.

இப் பன்னிரண்டு வகை எருவாய்முளை நோய்கள் குணமாகக் கூடியவையாம்.

(அசாத்தியம்.)

தீராத முளை நோய்களாவன :

(1) செண்டு முளை.
(2) சிறு முளை.
(3) கீழ் முளை.
(4) ஆழி முளை.
(5) வினை முளை.
(6) ஐய முளை.
(7) குத முளை.
(8) முக்குற்ற முளை.
(9) தமரக முளை.

இவ்வொன்பதுவகை எருவாய் முளை நோய்கள் குணமாகாதவைகளாம்.

(சி. ம).

எருவாய் முளை நோயின் பொதுக் குறி குணங்கள்.
(சேகரப்பா—255 பாடல்).

1 ''மலமிறுகித் தழைமேயுஞ் சுவேதமையின்
வகைமை யெனக்குழற் கடைத்த தாமரைப்போல்
பலமிதமாயொரு வேளையபானஞ் சுற்றிப்
பதுமமுகிழ் விரியமை திப்பிரசம்போலச்,
சலசலெனப் பொசி குருதித்தில்லை பொங்கத்,
தள்ளாடி வசமழியத் தளர்வுண்டாக்கி
நிலவரமற்றிட்வஞரையுஞற்று மையா,
நீசத்துவமூல குண நிலைமைதானே.''

என்பதனால், எருவானது இறுகி (உலர்ந்த வடிவத்தோடு கூடிய இலையைப் போல்) வறண்டு வெண்மையாக இழிதலும் ; தாமரைப் பூவைப் போல முளை எருவாயிலடைத்தலும் ; சில வேளை கீழ் நோக்குங்கால் பல வகையான கெட்ட கொடுமை பல செய்தலும் ; தயிர்க் கட்டிகளைப் போல் வெளிக்குப் போகையில் இழிதலும் ; எருவாய் முளை வெளிப் படுமாயின் தாமரை மொட்டு அலருவது போல் விரிந்து காற்றுப் பரிதலும் ; அதனோடு தாமரைப் பூவிலிருந்து சொட்டும் தேன் போல் பிசு பிசுப்புடன் நீர் சலசலவென்றிழிதலும் ; குருதி கசிதலும் ஆகிய இக்குறி குணங்களைக் காட்டும்.

அன்றியும், உடல் வன்மையை அழியும்படி செய்து, தளர் வுண்டாக்கி அறிவை மயக்கி நிலவர மற்றிடச் செய்யும். இவையே கொடிய எருவாய் முளை நோயின் பண்புகளாகுமென வும் கூறியுள்ளார்.

(சேகரப்பா—256வது பாடல்).

2 ''கொடிய பொல்லாத மூலகுணத்தையென் சொல்வேன் பாந்த
ளிடியினிலொடுங்கு மாறே யெவரையுங் கசங்கச் செய்யுங்,
குடிகெடுமாறு செய்யுங் கொண்டவராயுட் கெய்து
முடிவதினாலேயென்று மொழிந்தனர் தழைந்த நூலோர்.''

என்பதினால், ''கொடியபொல்லாத'' என இரு அடைமொழி களால் இஃது மிக்க கொடுமையான நோயெனச் சொல்லாமலே விளங்கும். எங்ஙனமெனில், பாம்பானது (i. e. பாந்தள்) இடி முழக்கத்தைக் கண்டு அஞ்சி, நடுங்கிச் சாகுமோ, அவ்வாறே இந்நோயில் வருந்துபவரை மனங் கலங்கச் செய்து குடிகெடு மாறு அஞ்சும்படி செய்யும் என்கிறார்.

மீண்டும் தேரையர் வெண்பா 130-ல் கூறியபடி, பாகம் 2 (வெண்பா).

"துருவைமலம் போற்சு ருண்டு கழ்ல்ா
தெருவை நிதமுமிழியும் — அருவருக்குங்
கல்லுமுளையாக்கையெல்லாந் தம்பிக்குந் தம்பமிரா
கொல்லு முளை மூலக்குணம்".

என்றதால், எருவானது செம்மறியாட்டின் புழுக்கையைப் போல் தீய்ந்து காய்ந்து வறண்டு சிறுசிறு துண்டுகளாக வெளியாகாதிருத்தலும் ; சில வேளை நாள் தோறும் இழிவதும்; இழியும்போது வெறுப்பையும் வலியையும், துன்பத்தையு முண்டாக்குமெனவும் ; கடினப்பட்ட எரு, முளையை இறுக்கி உடலை வளைக்கவும், நிமிர்க்கவுமாட்டாமல் துன்புறுத்தும் எனவும் தேரன் கூறியுள்ளார். பெருமுளை நோயென்னும் "முளைமூல" நோய்க் குரிய குணங்களென்கிறார்.

நிற்க, கீழ் நோக்குங்கால் கேடடைந்து பசித் தீ கெட்டு செரியாமை, வயிறூதல், கீழ்வாயிலில் நமைச்சல், எரிச்சல். தினவு இவையுண்டாகும். எரு தீய்ந்து வருத்தத்துடன் இழியும். அப்போது குருதியும் சீழுமிழியும். எருவாய் முளைவெளி வரும். குருதி பீறிட்டுப் பாயும். எருவாய் முளையை உள்ளே தள்ளின் முளையானது உள்ளே போவதும் வெளியில் மீண்டும் வருவதுமாக விருக்கும். முளை உள்ளடங்கிய பிறகு எழுந்திருந்தால் எரு வாயிலில் எரிச்சல், வலி இவற்றையுண்டாக்கும். வெளியில் வந்த முளை தன்னளவிலும் பருமனிலும் பருத்துக் கொண்டே வரின் கீழிறங்கிய முளை மீண்டும் உள்ளுக்குப் போகாமலே நிலைத்து விடுவதுண்டு. இவ்வாறு நிலைத்த முளை, எருவாய் சுருங்கும்போது தாங்கமுடியாத வலியையும் குருதிப் பெருக்கையுமுண்டாக்கும். துன்பங்களதிகமாகுமெனவும் அறிக !

### முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவு, செயல் முதலியவற்றாலெழுந்த கீழ்வாய்க் கனல் (மூலச் சூடு) தன்னளவில் மிகுந்து, வளிக்குற்றத்தைத் தூண்டி, அதன் காரணமாகக் கீழ்நோக்குங்கால் கேடடையும். இவ் விரண்டின் காரணமாக அழல் குற்றம் தூண்டப்படும்.

இதேபோல் ஒக்க நிலையில்(யோக நிலையில்)முதல் நிலையைத் தன் வழியாக்க முயலும் போது, தன் வன்மைக்கு மிகுந்து நிலைக்க முயலின், இயற்கையாகச் சிறிது சிறிதாக வெழும் கீழ்வாய்க் கனல் (மூலக்கனல்) சரேலென மிகுந்தெழுதலால் இயற்கையாயெழின் நன்மை செய்வதாகிய அக்கனல் தீங்கை விளைவிக்குமென அறிக. இதனை அப்போதே தடுக்காவிடின்

அக்கனல் எருவினைத் தீய வைத்து, வறண்டு, உருண்டு கெட்டியாகிக் கட்டுப்பட்டு, அங்ஙனே வளர்ந்து எளிதில் வெளியாக்காது முளைநோய் உற்பத்திக்கு ஈடுபடுத்தும். இதனால் பசித்தீ கெடும். உடல் மெலியும். இரசம், இரத்தம் இரண்டும் தத்தம் வன்மை இழக்கும். மனநிலை குன்றுமென்பதையும் உணர்க !

நாடி நடை.

1 "அனிலபித்தத் தொந்தமல்லாது மூலம் வாராது."
—தேரன்.

2 "வாயுபுகுந்து மலத்தோடபானத்தைத்
தேயுவைக் கூட்டித் திரட்டிச் சுருக்கிடும்."

எனத் திருமூலர் வாக்கின்படிக்கும். "வளி அழல்" என்னும் தொந்த நாடியில் மூலரோகம் பிறக்குமென்பதும், வளிக் குற்றத்தின் பெருக்கால் கீழ்நோக்குங்கால் வன்மையற்று உடற்றீயை எழுப்பி, எருவை இறுக்கி வறளச் செய்து முளை நோயைப் பிறப்பிக்குமென்பதையும் அறிகிறோம்.

3 மீண்டும் அதே செய்யுளில்,—
"தோயுமலம் வரில் சுருக்கி முன்னே
நின்றேயு முளை போலபானனிற்குமே."

எனத் திருமூலர் கூறியதால், மேற்கூறிய வளிக் குற்றத்தின் பெருக்கால் கீழ்நோக்குங்கால் வன்மையற்று, கீழ்வாய்க் கனலை எழுப்பி, எருவை இறுக்கி வறளச் செய்து, மலம் வரும்போது எருவாயைச் சுருக்கி அங்கு முளைநோயை உண்டாக்குமென்பது நன்கு தெளிவாகிறது.

4 "சிறப்பான பித்தத்தில் வாதநாடி
சேரிலுறுந் தாது நட்டமுதிரபீடை,
உறைப்பாகச் செரியாமை குன்மஞ்சூலை,
உற்ற சுரங்கிராணி வயிற்றிரைச்சல் மந்தம்,
விறைப்பான ஓங்கார பிற நீர்க்கோவை
ஆயா சங்கிரக்கமொடுமயக்க மூர்ச்சை,
முறைக்காய்வு விடவிக்க மூல வாய்வு,
முரடான நோய் பலவுமுடுகும் பண்பே."
(சதக நாடி.)

என்பதினால், "அழல்வளி" தொந்தநாடியில் மூலவாய்வு பெருகி முளை நோயுண்டாகுமென்பது தெரியவருகிறது.

5. "வாதமென்னும் நாடியது தோன்றில்
சிதமந்தமொடு வயிறுபொருமல் திரட்சி வாயு,
சீதமுறுங்கிராணி மகோதரம் நீராமை
திரள் வாயு சூலைவலி கடுப்புத்திரை
நீதமுருங்கிருமி குன்மம் அண்டவாதம்
நிலையும் நீர்க்கிரிச்சனங்கள் தத்துமேகம்
பேதகமா மூத்திர பிணி மூல ரோகம்.
பேச வெகு பிணிகளுமே பொருளதாமே."

(சதக நாடி.)

என்பதினால், வளிநாடி மிகுதியினால் மூலரோகமுண்டாகுமென அறிகிறோம்.

6 " மூவருமந்தமானால் முளைத்திடும் மூலரோகம்."

(குணவாகடம் நாடி.)

என்பதினால், வளி, அழல், ஐயம் மூன்றும் உள்ளடங்கி நடைபெறின் மூலரோகமுண்டாகுமெனவும் அறிகிறோம்.

(சி. ம.)

## எருவாய் முளை நோயின் சாதல் குறிகுணங்கள்.

(கையெழுத்துப் பிரதி.)

எந்த வகையான முளை நோயினனுக்கும் கை, கால்கள், நாபி. வயிறு, ஆசனம், முகம் இவை வீங்குமானால் மரணம் நிச்சயமாம்,

2. பெருவயிறு நோயில் துணை நோயாகவும், கிராணி, பாண்டு, சோபை, காமாலை, குன்மம் இவற்றில் முன்நோயாக முளைநோய் உண்டாகியிருக்குமானால் அந்நோயினன் அதிகத் துன்பங்களுக்கு ஆளாவதுமன்றிக் குணமாவதும் அரிது எனலாகும்.

3. அன்றியும் எருவாய் முளைநோயுடன் ''குதகீலம்'' என்று சொல்லப்படும் ''எருவாய் ஆணி'' உண்டாயிருப்பின் அந்நோயினன் அதிகமாகத் துன்பப்படுவான். தாங்க முடியாத வேதனையும், உடல் இளைத்தலோடு மிகக் கொடிய குறி குணங்களை உண்டு பண்ணிக் கொல்லவும் செய்யும் என நூல்கள் கூறுகின்றன.

## 32. சிறுநீர் நோய்

வேறு பெயர் : மூத்திர நோய்.

இயல்.—சித்த மருத்துவத்தில் இதனை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரித்துள்ளார். அவை :

1. நீரருகல் நோய்கள்.—அதாவது எக்காரணம் பற்றி யாவது சிறு நீர் தன் அளவில் (இயற்கை அளவில்) சிறுத்து இறங்கும் நோய்களைக் குறிக்கும்.

2. நீர் பெருகல் நோய்கள்.—அதாவது ஏதேனுமோர் காரணத்தால் சிறுநீர் தன் இயற்கையளவுக்கு மிஞ்சி அதிகமாக இறங்கும் நோய்களைக் குறிக்கும்.

தேரன் கரிசலில் கூறியவாறு :

'' நீரிருவினைக் குணத்தை
நீயறிவிரித்துச் சொல்வாம்
நீரினைப் பெருக்கலொன்றே
நீரினை யருக்க லொன்றே
நிரிழி வுடனே கொல்லும்
நீர்க்கட்டு வினைகளொன்று.''

என்றதாலறிக ! இம்முறையை அனுசரித்தே நீரருகல், நீர் பெருகல் நோய்களை இங்கு விவரித்துள்ளார்கள்.

I. நீரருகல் (நீரினை அருக்கல்) பகுதியில் :

1. கல்லடைப்பு.
2. நீர்ச்சுருக்கு.
3. நீர்க்கட்டு.
4. சொட்டுநீர்.
5. வெள்ளை.
6. நீரடைப்பு என்னும் தலையங்கமிட்டு விளக்கியுள்ளார் கள்.

II. நீர் பெருக்கல் (நீரினைப் பெருக்கல்) என்னும் பகுதியில் :

நீரினைப் பெருக்கல் நோய்கள் அல்லது மேகநீர் இருபது என்னும் நோய்களைப் பற்றி விளக்கியுள்ளார்கள். இவற்றுள சில சர்க்கரை, தவளம் (விந்து) இவை கலந்தும் இழிவதுண்டு. இதனை (நீரினைப் பெருக்கல் நோயை) வெகு மூத்திரம் எனவும் கூறுவர்.

III. மேற்கூறிய சிறுநீர் நோயின் இருபெரும் பிரிவுகள் நீங்கலாக :

1. நீரிழிவு

2. வெண்ணீர்.

3. தெளிநீர் என்னும் தலைப்பில் தனியாகவும் விரித்துக் கூறியுள்ளார்.

குறிப்பு.—நீரிழிவு, வெண்ணீர், தெளிநீர் என்னும் மூன்று வகைத் தனிநோய்கள் மேக நீர் இருபதிலடங்கியுள்ளன வென்பதும் தெரியவரும்.

இனி ஒவ்வொரு பிரிவு சிறுநீர் நோய்களைப் பற்றித் தனித் தனியாகக் கூறிய விவரங்களைக் கவனிப்போம்.

## 33. கல்லடைப்பு நோய்.

**வேறு பெயர் :** அச்மரி.

இயல்.—சிறுநீர் இறங்கிக் கொண்டிருக்கும்போதே திடீரென நீரடைத்தல், குறிமுனை நோதல், நீர்ப்புழை எரிதல், இடுப்பின் பின்புறத்தும் முதுகுத் தண்டின் பக்கத்தும் நோதல், சிறுநீரில் மணலையொத்த கற்கள் நிறைந்திருத்தல் ஆகிய இயல்புடைய நோயாம்.

### நோய் வரும் வழி.

1. "தெளிந்ததோர் கல்லடைப்பு உற்பத்திகேளாய்
சிறிது நாட்டொடங்கியே மேகந் தன்னால்
தளிந்ததோர் சலப்பையி லுதிரந்தோய்ந்து
சந்தசத்தாகவே பருத்துக்கொள்ளும்
வளிந்ததோர் வாதபித்தங் கோபித்தக்கால்
வந்து பெருங்கல்லாய் நீர்வழியடைத்து
தளிந்ததோர் நாலுவிதக் கல்லடைப்பு
நண்பான வரலாறு நாட்டக்கேளே."

என்பதினாலும்.

2. ''கலங்கினதோர் தண்ணீர்தான் குடித்தபேர்க்குங்
கல்லெலும்பு மயிர்மண்தான் கலந்தன்னத்தில்
அலங்கினதோ ரன்னங்களருந்தலாலும்
அழுகலோடு மூத்தபண்ட மருந்தலாலும்
மலங்கினதோர் மாப்பண்ட மருந்தலாலும்
மந்தத்தில் வாய்வான பதார்த்தந்தன்னை
துலங்கினதோர் ருசி தன்னிற் சுவைத்தலாலும்
சுருக்காய்க் கல்லடைப்புவந்து தோன்றுந்தானே.''

(யூகி. சிந்தாமணி.)

என்பதினாலும், நாம் தெரிந்து கொள்ளுவது யாதெனில் ; சுனை நீர் பன்னாட்கள் தேங்கிய நீர், சருகு ஊறிய நீர், இவைகளைப் பருகுதல், அழுகல், ஊசிய பண்டம், மாப்பண்டம், வளிக்குற்றத்தையும் அழல் குற்றத்தையும் மிகுதிப் படுத்தும் உணவு முதலியவற்றை உண்ணலாலும், விந்துவானது கட்டுப்படுவதாலும் கல்லடைப்பு நோய் பிறக்கும். அன்றியும் கல், மண், எலும்பு, தயிர் இவை கலந்த அன்னத்தைப் புசிப்பதாலும் ; மேகநோய்க் காரணத்தாலும் சிறுநீரில் கற்கள் உண்டாகிப் பருத்து நீர் வழியை யடைத்துக்கொள்ளு மென்றறியவும்.

(சி. ம.)

### நோய் எண்.

' தோன்றினதோர் நாலினிட நாமங்கேளாய்
சுறுக்கான வாதத்தின் கல்லடைப்பு
பூன்றியதோர் பித்தத்தின் கல்லடைப்பு
புரண்டதோர் சிலேட்டுமத்தின் கல்லடைப்பு
தீன்றியதோர் தொந்தமாங் கல்லடைப்பு
தேகத்தைப் பற்றியே சிறிதுகாலம்
தான்றியே சலப்பையில் வந்திழிந்து
சருவியே லிங்கத்திற் றரிக்குந்தானே.''

(யூகி. சிந்தாமணி).

என்பதினால், கல்லடைப்பு நோயை முக்குற்றயளவால் நான்கு வகையாகப் பிரித்துள்ளார்கள். அவையாவன :—

1. வளிக் கல்லடைப்பு.
2. அழல் கல்லடைப்பு.
3. ஐயக் கல்லடைப்பு.
4. முக்குற்ற கல்லடைப்பு என்பவையாம்.

வேறு சில வட நூல்களில் கல்லடைப்பு நோயை ஐந்து வகையாகவும் பிரித்துள்ளார்கள், அவை—

1. வளிக் கல்லடைப்பு.
2. அழல் கல்லடைப்பு.
3. ஐயக் கல்லடைப்பு.
4. சுக்கிரக் கல்லடைப்பு.
5. சர்க்கராக் கல்லடைப்பு என்பவையாம்.

யூகி சிந்தாமணியில் கூறிய நான்கு வகைக் கல்லடைப்பு நோய்களின் தனித்தனிக் குறிகுணங்கள்—

### 1. வளிக் கல்லடைப்பு.

*'' தரித்து நாபிக்குங் கீழ்ச்சுருக்காய்க் குத்திச்*
*சலமலந்தான் வீழாமற்றம்பமாகி*
*வரித்துமே லிங்கத்தில் வலியுமாகி*
*மருவியதோர் பொத்தியெல்லாஞ் சுரந்துகட்டி*
*திரித்தியே கிடக்கொடாப்புரட்டலாகித்*
*தேம்பியே மூச்சுமாய் வயிறு முப்பும்*
*உரித்ததோர் சதைபோல உவர்ப்புமாகும்*
*ஓங்கியதோர் வாதக் கல்லடைப்புதானே.''*

(யூகி. சிந்தாமணி.)

என்பதினால், வளிக் கல்லடைப்பு நோயில் உந்திக்குக் கீழ் சுருக்கு சுருக்கெனக் குத்தலுண்டாகும். நின்று நின்று நீரிறங்கும். ஆண் குறியில் வலியுடன் வீக்கமுண்டாம். அவ்வலியினால் உட்கார முடியாது. வலி தாங்கமுடியாது அழுதல், பெருமூச்சு, வயிறுப்பல் முதலிய குறிகுணங்களையும் விளைவிக்கும். அன்றியும் சிறு நீருடன் நீர்ப் புழையின் மெல்லிய சவ்வும் கலந்து இழியும்.

### 2. அழல் கல்லடைப்பு.

*'' அடைப்பாகிச் சலந்தானு மருவலாகி*
*அயங்காய்ச்சிச் சொருகினாற் போலேகாணும்*
*புடைப்பாகப் பொத்தியெங்கும் புழுக்கமாகிப்*
*பூட்டுபோல் விகுவாகிப் புரட்டலாகும்*
*மடைப்பாகி உதிரநிறமாய்க் கல்லாகி*
*வந்திழந்து லிங்கத்தில் மாட்டிக்கொள்ளும்*
*குடைப்பாகிக் குற்றலாய்க் கூச்சலாகிக்*
*குதட்டுமே பித்தக் கல்லடைப்புத்தானே.''*

(யூகி. சிந்தாமணி.)

என்பதினால், அழல் கல்லடைப்பு நோயில் நீர்ப்புழையில் இரும்பைக் காய்ச்சிச் சுட்டதுபோல் எரிச்சலையுண்டாக்கும். உடல் முற்றும் அனலாகயிருக்கும். சிறு நீருடன் குருதி வெளியாகும். நீர்ப் புழையில் குத்தல், குடைதல், கூச்செரிதல், வலித்தலாகிய குறிகுணங்களைக் காட்டி, நீரிழியும்போது செந்நிறமான சிறிய கற்கள் வெளியாகுமென அறியவும்.

### 3. ஐயக் கல்லடைப்பு.

"தானான தொப்புளிலே வில்லுப்போலச்
சலியாமற் சுரந்துமே சற்றேகுத்தும்
ஏனான காலொடு கைகள்சந்து
இடுப்புதான் குடைச்சலா யிசிவுகாணும்
வேனான லிங்கத்தின் வேன்மைதன்னிள்
விறுவிறென்றே கடுப்பாகி வியர்வையாகும்
தேனான வெளுப்புக்கல் சிறுகல்லாகச்
சிக்கலாய் வந்திறங்குஞ் சிலேட்டுமந்தானே."

(யூகி. சிந்தாமணி.)

என்பதினால், ஐயக் கல்லடைப்பு நோயில், தொப்புளில் வில்போலச் சுரந்து (நிமிர்ந்து) குத்தலை யுண்டாக்கும். இடுப்பு, தொடை, கால் கைகள் சந்து இவைகள் குடைச்சலோடு இசிவு காணும். ஆண்குறி விறுவிறுத்துக் கடுக்கும். ஆங்கு வியர்வையுண்டாகும். வெள்ளை நிறக் கற்கள் சிறுநீருடன் வெளியாகுமென அறிக!

### 4. முக்குற்றக் கல்லடைப்பு.

"வந்திறங்கும் நீர்த்தாரையடி யிற்றானும்
மாவருத்த முண்டாகி வலியுமாகி
நொந்திறங்கி நீர்தானுமருவிப்பாயும்
நொய்தான சிறுமனற்போல் நொறுங்கிக்கல்லாய்
சந்திறங்கி நீர்வழியில் வந்துவீழும்
தாக்கான சிறங்கைக்கல் தினமொன்றுக்கு
நுந்திறங்கித் தினந்தினமு மிழிந்துகொல்லும்
தொந்தமாங் கல்லடைப்புச் சூட்டிட்டாயே."

(யூகி. சிந்தாமணி)

என்பதினால், தொந்தக் கல்லடைப்பு என்னும் முக்குற்றக் கல்லடைப்பு நோயில், நீர்த்தாரையின் அடிப்பக்கத்தில் தாங்க முடியாத வலியும், நீர் விட்டு விட்டு இறங்குதலும், அதில் நாள் ஒன்றுக்குக் கைநிறையளவு சிறு மணல் போன்ற கற்கள் வெளியாவதும், அதனுடன் வெண்ணீர் (சுக்கிலம்) கசிவதும் ஆகிய இக்குறி குணங்களைக் காட்டும் என்பதாம்.

## குறிப்பு.

சித்த மருத்துவ நூலாசிரியர் கீழ்க்காணும் குறிப்புகளைக் கொடுத்துள்ளார். அதனை மாணவர்கள் கவனிக்கவும்.

1. கல்லடைப்பு நோயைப் பற்றிக் கூறியவிடத்து வட நூல்களிலும் சித்தர்களது நூல்களிலும், மூத்திரப்பையிலும், மூத்திர நாளத்திலும் ஏற்படும் கல்லடைப்பு நோயை முறையே ஐந்தெனவும், நான்கெனவும் வகுத்து அவற்றின் குறிகுணங்களைக் கூறினார்களேயொழிய நீர்க் குண்டிக் காயிலுண்டாகும் கற்களைப் பற்றிக் கூறியதாகயில்லை. ஆதலின் நூலாசிரியரது அனுபவத்தில் கண்டதைக் கொண்டும், மேல் நாட்டு மருத்துவ நூல்கள் கூறுவதைக் கொண்டும் நீர்க் குண்டிக் காயிலுண்டாம் கல்லைப் பற்றிச் சில குறிப்புகள் கூறுகிறார்.

நீர்க் குண்டிக்காயிலும் (பருக்கம்) கற்களுண்டாகும், எங்ஙனமெனில்.—

நாம் மருத்துவத்தில் உப்புவகைகளைச் சுத்தி செய்யும் பொருட்டுச் சோற்றுப்பு, கல்லுப்பு, வெடியுப்பு முதலியவைகளை நீரில்கரைத்து, வடிகட்டிக் காய்ச்சி உறையும்படி வைக்க அவைகள் உறைந்து நாளுக்கு நாள் பெருத்துச் சில வடிவத்தில் கூர்மையுள்ள முள்ளைப்போலவும், சில தட்டையாகவும், சில உருண்டையாகவும், வழுவழுத்த வடிவு கொள்வதையும் நாம் கண் கூடாகப் பார்க்கிறோம். அவ்வாறே நமது உணவின் சாரத்தில் கலந்துள்ள உப்புச் சத்துக்களும் உறையும்போது பல திறப்பட்ட வடிவங்களைப் பெறும்.

2. நாம் உண்ணும் உணவின் சாரத்தின் பகுதி நீர்க்குண்டிக் காயில் நீராகப் பிரிக்கப்படும்போது, அந்நீரில் நிறைந்துள்ள உப்புகள் சில வேளை நீர்க்குண்டிக்காயில் தங்கி உறைவதுண்டு. உறைந்தஉப்பின் பகுதி எந்த இடத்தில் தங்கியதோ அங்கு பெருத்து வளரும். கற்கள் சிறியதாகயிருந்தால் சிறு நீருடன் கலந்து இழிந்து நீர்ப்பையில் சில வேளைத் தங்கிவிடும். அங்கே தங்கிய உப்பு உருவத்தில் பெரியதாகிப் பல துன்பங்களையு முண்டாக்கும். அதுவே முன் கூறிய கல்லடைப்பு நோயாகும்.

3. அப்படியில்லாமல், நீர்க் குண்டிக்காயில் உறைந்த கற்கள் நீர்க் குண்டிக்காயின் உட்பக்கத்திலோ, வெளிப்பக்கத்திலோ தங்கிப் பெருத்து வளருமாயின், உப்பின் வகைகளுக்கேற்ப உறைந்த கற்களின் வடிவங்கள் பலவகைப்படும். இவ்வடிவங் களுக்கேற்ப குறி குணங்களும், துன்பங்களும் சற்று வித்தியாசப் படும். எங்ஙனமெனில், கற்களின் முனைகள் முள்ளைப்போல் கூர்மையாயிருப்பின் கடுமையான குறிகுணங்களையும் வழுவழுப் பாக யிருப்பின் இலகுவான குறிகுணங்களையும் காட்டும். உப்பு உறைந்த இடங்களுக்கேற்ப குறிகுணங்களும் வேற்றுமையடையும்.

4. மேற்கூறியவாறு உறைந்த உப்புக் கற்கள் நீர்க் குண்டிக் காயின் வெளிப்பாகத்தில் (pelvis of kidneys) சிறு அளவி லிருப்பினும் அவைகளின் முனை கூர்மையாயிருக்கில் அவைபுரளும் போது அப்பாகத்தைக் கீறி தாங்க முடியாத வலியையும், குருதிப் பெருக்கையு முண்டாக்கி, அக்குருதி சிறுநீருடன் இழியும். அப் பக்கத்து இடுப்பு, தொடை, இவை குடைதலும். அப்பக்கத்து விரை மேலுக்கு இழுத்துக் கொள்ளவும் செய்யும். அடிக்கடி சிறு நீரிறங்கும். குளிர், வாந்தி, முகம் வெளுத்தல், கை கால்கள் சில்லிடல், நாடிகள் தளரல், முகம் வியர்த்தல், உடல் சோர்வு ஆகிய இக்குறி குணங்களையும் உண்டு பண்ணும். அன்றியும் சிறுநீருடன் குருதியும், சிறிய கற்களும் இழிவதையும் காண லாம்.

5. நீர்க் குண்டிக்காயின் உட்பக்கத்தில் (Body of the kidneys) தங்கும் கற்கள் பெரிதாய் வளர்ந்து, அங்கு தாபிதத்தையும் சீழையு முண்டாக்கி, அச்சீழ் சிறு நீருடன் கலந்து இழியும். அடிக் கடி நீரிழியும். முதுகின் பக்கத்திலும் நடுவிலும் வலியுண்டா கும். இக்குறி குணங்கள் சில சமயம் மிகக் கடுமையாகவும், சில வேளை இலகுவாகவும் நீடித்துமிருப்பதுண்டு.

நீர்க்குண்டிக்காய் வன்மை குறையின் சிறு நீர் கட்டுப்படும், கற்கள் சிறியதாகயிருப்பின் அவை மெல்லமெல்ல நழுவி வெளி வந்துவிடுவதுமுண்டு. இருபக்கத்து நீர்க் குண்டிக்காய்களில் கற்க ளுண்டாயின் மிகுந்த துன்பத்தை விளைவிக்கும்.

நீர்க் குண்டிக்காயிலுண்டாம் கற்கள் நோயின் காரணமும் முக்குற்ற வேறுபாடுகளும் முன் கூறிய கல்லடைப்பு நோயை ஒத்தாகுமெனவும் கூறியுள்ளார்.

(சி.ம.)

### கல்லடைப்பு நோயின் பொதுக் குறிக் குணங்கள்.

இந்நோயில், அடிக்கடி சிறுநீரிழியும். இது முற்றும் வெளி யாகாமல் சிறுநீர் இறங்கிக் கொண்டிருக்கும் போதே திடீரென அடைத்துக் கொள்வதுண்டு. அப்போது ஆண் குறியில்

தாங்கமுடியாத வலியுண்டாகும். எருவாயின் மேற்புறமும் வலியுண்டாகும். சில வேளைகளில் கல் புரண்டு கொண்டே வந்து வெளியாவதற்கு முயன்று வெளியாகாமல் ஆண் குறி நாளத்தில் அல்லது முனையில் வந்து தடைப்பட்டு ஆங்கு மிகுந்த வலியையும், வீக்கத்தையும் உண்டாக்கும். கற்கள் கரடுமுரடாயேனும், கூர்மையாயேனுமிருப்பின் கீழ் வயிற்றிலும், நீர்ப் புழையிலும் தாங்க முடியாத எரிச்சலையும், வலியையும் தந்து குருதியையும் வெளியாக்கும் என அறிக !

### கல்லடைப்பு நோயின் முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவு, நீர் முதலியவைகளினால் வளிக்குற்றமும், தீக்குற்றமு மிகுந்து உடல் நீரைச் சுண்டச் செய்து சிறு நீரிலுள்ள உப்பை நீர்க் குண்டிக்காயில் உறையச் செய்து, கீழ் நோக்குங்கால் வன்மையோடிருந்தால் அக்கற்களை எளிதில் சிறு நீருடன் வெளியேற்றியும், வன்மை யற்றிருந்தால் கற்களை அவ்வப்போது வெளியாக்காது அங்கங்கே சிறுநீர் போகும் வழியில் எங்கேனும் தங்கச் செய்து இந்நோயைப் பிறப்பிக்கும்.

### நீர்.

சிறு நீரைத் தெளியவைக்கின் சிறு மணல்போலும், சிறு கற்கள் போலும், காணப்படும். சிறுநீர் கழியும் போது அத்துடன் கற்கள் தெரித்து விழுவதுண்டு.

### கல்லடைப்பு நோயின் தீரும் தீராதவை.

சாத்தியாசாத்தியம்.
(யூகி. சிந்தாமணி)

"சூட்டிட்ட சாத்தியத்தைச் சொல்லக்கேளாய்
சுளுக்காகும் வாதத்தின் கல்லடைப்பு
பூட்டிட்ட பித்தத்தின் கல்லடைப்புப்
புகழான சிலேட்டுமத்தின் கல்லடைப்பு
மூட்டிட்ட இதுமூன்றும் சாத்தியமாகி
முனையான மருந்துகளிற் செம்மையாகும்
தோட்டிட்ட தொந்தமாங் கல்லடைப்புத்
தொடுசுறவே கொல்லுமிது சூட்சந்தானே."

என்பதினால், வளி, அழல், ஐயம் ஆகிய மூன்றுவகைக் கல்லடைப்பு நோய்கள் தக்க மருந்துகளால் குணமாகுமெனவும் முக்குற்றகல்லடைப்பு நோய் தீராது எனவும் அறிகிறோம்.

## 34. நீர்க்கட்டு.

**வேறு பெயர்கள் :** நீரருக்கல் ; நீர்க் கடுப்பு ; மூத்திரக் கிரிச்சரம் என்பவையாம்.

**இயல்.**—தேரையர் கரிசலில் கூறியது போல் ;

"நீரினையருக்கல் என்னும்
நீர்க்கட்டின் குணத்தைக் கேட்டி
நீதமில்லாமற் கோச
நீர்ப்புழை நெருப்புப்போலாம்,
நீபனா யுதத்தாற்பட்ட
நீல வம்பரமாங்குக்கி ".

என்றதால், இந்நோயில் சிறு நீர் சுருங்கி வெளியாகாமலும் ; நீர்ப்புழையில் குத்தல், எரிச்சல், வலி முதலியவற்றை உண்டாக்கியும் ; முகத்தை வீங்கச் செய்தும் ; சொட்டு சொட்டாய் நீர் இறங்கியும் ; நீர்ப்பையில் இயற்கையான நீர் சேகரமாகாமலும் இத்தியாதி துன்பங்களை விளைவிக்கும் இயல்புடைய நோயாம் ;

### நோய் வரும் வழி.

" கருதியே மாப்பண்டங் கதித்து உண்ணல்
காலங்கள் மாறியே மிகப்பொசித்தல்
பருதியே பகல் வெனிலே ஸதிரிசங்கித்தல்
பகலதனிலே பால்கொள்ளல் பகலுறங்கல்
நிருதியே நசிதன்னிற் சயனஞ்செய்தல்
நிந்தையாம் லாகிரிகள் நிரம்பவுண்ணல்
வருதியே அக்கினியில் சஞ்சரிப்போர்
மகத்தான கிரிச்சரத்தின் மருவுவாரே ".

(யூகி சிந்தாமணி).

என்பதினால், மாப்பண்டங்களையும், வெட்பத்தைத் தரக்கூடிய பொருள்களையும் மிகுதியாகச் உட்கொள்ளல் ; காலம் தவறி அதிகமாகப் புசித்தல் ; வெய்யிலில் திரிதல் ; கள், சாராயம் போன்ற லாகிரி வஸ்துக்களை அதிகம் உட்கொள்ளல் ; நெருப்பினிடம் உட்கார்ந்து எப்பொழுதும் வேலை செய்தல் ; பகலில் பால் சாப்பிடுதல், ஸ்திரி சங்கமம் (பெண் போகம்) செய்தல் ; பகலுறங்கல் ; நிசி நேரத்தில் சயனஞ் செய்தல் ஆகிய இக் காரணங்களால் மூத்திரக் கிரிச்சரரோகம் பிறக்கும் ; அன்றியும், யோக நிலையிலிருப்போர்க்கும் தீக்குற்றம் மிகுந்து இந்நோயை உண்டாக்குமென்பர்.

### குறி குணங்கள்.

வழக்கம்போல் சிறு நீர் சரியாக இறங்காமை, மிக்க நேரங் கழித்து நீர் கழிகையில் அந்நீர் அளவில் குறைந்தும், எடையில் சுருங்கியும், நிறத்தில் சிவந்தும், சிலவேளை புலால் மணத்துடன் வெளிப்படும். நீர்ப் புழையில் தாங்கமுடியாத வலி, எரிச்சல், கடுப்பு இவையுண்டாக்கி நீர் சொட்டுசொட்டாயுமிறங்கும். இந் நோயில் ஐயங்கூடில் முகத்தில் வீக்கமும் இடுப்பில் வலியும் ஏற்படும்.

### நோய் எண்.

" தெரியவே கிரிச்சரத்தின் செயலைத்தானுஞ்
செப்பவே நாலுவகைக் கிரிச்சரமாகும்
உரியவே வாத மூத்திரக் கிரிச்சரம்
உகப்பான பித்த மூத்திரக் கிரிச்சரம்
பரியவே சிலேட்டும மூத்திரக்கிரிச்சரம்
பாங்கான மேகமூத்திரக் கிரிச்சரம்
நரியவே கிரிச்சாந்தானாலதாகும்
நாட்டமாய் உற்பத்தி நவிலக் கேளே. "

(யூகி சிந்தாமணி).

என்றதால், மூத்திரக் கிரிச்சரம் என்னும் நீர்ச்சுருக்கு நோய் நான்கு வகைப்படும். அவையாவன :—

1. வளி நீர்ச்சுருக்கு.
2. அழல் நீர்ச்சுருக்கு.
3. ஐய நீர்ச்சுருக்கு.
4. மேக நீர்ச்சுருக்கு.

என்பனவையாம்.

### ஒவ்வொரு பிரிவு நீர்ச்சுருக்கு நோயின் குறிகுணங்கள்.

#### 1. வளி நீர்ச்சுருக்கு (வாத மூத்திரக் கிரிச்சரம்).

" மருவவே மேகம்வந்துற் பவித்தல்
வளர்நாபி தன்னிற்றுன் மாமிசஞ்சுக்கித்
துருவவே சுக்கிலத்தால் மாமிசமுற்றிச்
சுழன்றுமே தம்பித்து வாயுதன்னால்
சிறுகவே சிறுநீர் வீழ்குதற்றான்சிக்குந்
தேகமெங்குந் துளைத்துமே கடுப்புமாகும்
அருவவே துன்மாமிசங் கருப்பாய்வீழும்
அருக்கமே வாதத்தின் கிரிச்சரந்தானே ".

(யூகி சிந்தாமணி).

என்றதால், வளி நீர்ச்சுருக்கு என்னும் வாத மூத்திரக் கிரிச்சர நோயில் இயற்கை எழுச்சியின் உணர்ச்சியை அடக்குவதால் (Resisting Sexual passion) தவளம் என்னும் சுக்கில மானது வாதத்தின் செயலால் இறுகப்பட்டு நீர்த்தாரையுள் தங்கி, உடல் கடுப்பு, எரிச்சல், நோதல் என்னுங் குறிகுணங்களை உண்டுபண்ணி, சிறுநீருடன் கலந்தும், தனித்தும் நீரிழிவதற்கு முன்போ பின்போ இழியும். நீர்ப்புழை நெருப்புப்போல் எரியும். இஃது நாட்பட்டிருப்பின் நீர்ப்பையிலும், நீர்ப்புழையிலும் புண் உண்டாகி நிணநீரை இழியச்செய்யும். அதனுடன் இற்றுப்போன சதைத் துனுக்குகள் கருத்துஇழியும்.

## 2. அழல் நீர்ச்சுருக்கு (பித்த மூத்திரக் கிரிச்சரம்)

''தான்மூத்திர மஞ்சளித்து மிகச்சிவக்குந்
தளர்ந்துமே கைகாலு மசதியாகும்
பானருக்கிச் சிறுகலாயருவி பாயும்
பாரமாங் குதமண்ட மிலிங்கந்தானுங்
கான்வாயுதான் மீறி வயிறுமுப்பும்
களகளென்று இரைச்சலாய்க் கசங்கியேறும்
வேள் காயும் வாயுலர்ந்து மிரட்சியாகும்
விடும்பித்த மூத்திரத்தின் விவரந்தானே.,,

(யூகி சிந்தாமணி).

என்றதால், அழலின் கேட்டால் நீர்ப்புழை வெதும்பிச் சிவந்து செந்நீர் கசியும். சிறுநீர் கழிவதற்குமுன் அச்செந்நீர் வெளியாகும். நீர் மஞ்சளித்து சிவந்திருக்கும். நீர்கழித்த பிறகு தாங்கமுடியாத எரிச்சலும் வலியுமுண்டாகும். அல்லது அழலின் கொடுமையால் நீர்ப்புழை வெந்து புண்பட்டு அப்புண்ணிலிருந்து வடியும் குருதியும், சீழும் சிறுநீருடன் கலந்து செந்நிறத்துடன் இழியும். சில வேளையில் பச்சைக் குருதியாய் நீர் கழிந்தவுடன் வெளியாகும். அடிவயிற்றில் நோதல், குத்தல் எரிச்சலாகிய குறி குணங்களுமுண்டாகும். கை கால்கள் வன்மையற்றிருக்கும்.

இவ்வாறே அழலின் கொடுமையால் நீர்ப்பையும் தாபிதப்படும். ஆங்கு சிவந்து புண்பட்டுக் குருதிவடியும். சிறுநீர் இழியும்போது எரிச்சல், குத்தல், வலி இவையுண்டாகும். சிறுநீருடன் இழியும் குருதி கருத்துக் காணும். சில வேளை சீழ் கலந்து புலால் நாற்றம் வீசும். இவையாவும் அழல் நீர்ச் சுருக்கு நோய்க்குரிய குறிகுணங்களென அறிக!

### 3. ஐய நீர்ச்சுருக்கு (ஐய மூத்திரக் கிரிச்சரம்).

" விவரமாய் வற்றியண்டங் குதம்வலிக்கு
மேனியுமோ வெளுப்பாகி மிகக் கண்பச்சை
திபரமாய்க் கிறுகிறுத்துத் தியக்கமாகுந்
தேகமெல்லா மிகக்கடுப்புச் சொறிதலாகும்
அபரமாயருக்கிநீர் எரிச்சலாகும்
அடிக்கடிக்கு நீர்கசிந்து அலைச்சலாகும்
நிபரமாய் லிங்கத்திற் கூச்சலுண்டாம்
நீச்சான சிலேட்டுமத்தின் கிரிச்சரந்தானே. "

(யூகி சிந்தாமணி).

என்றதால், ஐயமிகுதியால் நீர்ப்பையில் சீழையுண்டாக்கி, நீர்ப் பையுள் தங்கி, நீரிற்குக் கெட்ட நாற்றத்தை யுண்டாக்கி நீரிழியும் போது வலியையும் எரிச்சலையும் உண்டாக்கும். இழியும் நீர் கலங்கியும், சீழ் கலந்தும் மல நாற்றத்துடனுமிறங்கும். அடி வயிறு நோகும். நீரிறங்கிய பின்னும், சீழ்வடியும். சில வேளை முன்னாடிக் குருதி கொட்டிப் பின்னாடிச் சீழ்வடிவதுண்டு. அடிக்கடி சிறுநீர் கழிய உணர்ச்சி யுண்டாவதுடன் சொட்டுச் சொட்டாய் நீர் வடியவும் செய்யும்; அல்லது நீர் இறங்காமலே கட்டுப்படும். இவையாவும் ஐய நீர்ச்சுருக்கு நோய்க்குரிய குறி குணங்களாம்.

### 4. மேக நீர்ச்சுருக்கு (மேக மூத்திரக்கிரிச்சரம்).

கிரிச்சரமாயடிக்கடிக்கு வெள்ளை காணுங்
கிட்டுமே நீர்த்தாரையடியிற்றானும்,
புரிச்சமாய்ப்புறாவெச்சம் போல வீழும்
பிடுங்குமேயடிவயிற்றிற் புழுக்களூர்ந்து
விரிச்சமாய் வெள்ளைதான் கவிச்சடிக்கும்
விம்மும் போதுடனுச்சிமயிரைத் தூக்கும்
குரிச்சமாங்குதமிலிங்கம் வேக்காடுண்டாம்
குமுறுமே மேகத்தின் கிரிச்சரந்தானே ".

(யூகி சிந்தாமணி).

என்றதால், மேகநீர்சுருக்கு நோயில், நீர்புழையினின்று அடிக்கடி வெள்ளை வீழும். நீர்த்தாரை அடிப்பாகத்திலிருந்து புறா வெச்சம்போல் வெள்ளையானது வெளிவரும். புழுக்களூர்வது போல் அடிவயிற்றில் பிடுங்கலுண்டாம். வெள்ளையானது

கவிச்சு நாற்றம் வீசும். வயிறு விம்மும்போது உடலையும் உச்சி மயிரையும் தூக்கும். குதம், ஆண்குறி இவை வெந்து புண்ணாகி விடும். இக்குறி குணங்கள் மேக நீர்ச்சுருக்கு நோய்க்குரியவையாம்.

**தீரும் தீராதவை : அல்லது சாத்தியா சாத்தியம்.**

" மேகத்தின் கிரிச்சரந்தான் பித்தக்கிரிசரம்
மிகவிரண்டுங் குணமாகிவிரைந்துபோகும் ;
தேகத்திவிதுரண்டுஞ்சாத்தியமாகிச்
செயமான மருந்தினாற்றிரும்பலாகும்
வாதத்தின் வாத மூத்திரக்கிரிச்சரம்
மருவுகின்ற சிலேட்டும மூத்திரக்கிரிச்சரம்
பாதத்தினி திரண்டும சாத்தியமாகும்
பாடுபட்டுந்தீராது பரிந்துபாரே ".

(யூகி சிந்தாமணி).

என்றதால், அழல் நீர்ச்சுருக்கு ; மேக நீர்ச்சுருக்கு இவ்விரண்டு பிரிவு நீர்ச்சுருக்கு நோய்கள் தக்க மருந்துகளால் குணமாகு மெனவும் : வளி நீர்ச்சுருக்கு ; ஐய நீர்ச்சுருக்கு இவ்விரண்டு பிரிவு நீர்ச்சுருக்கு நோய்கள் தீராது எனக் கூறியுள்ளார்.

**முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.**

**நாடி நடை.**

1. " வாதமெனும் நாடியது தோன்றிற்
சீதமந்தமொடு வயிறு பொருமல் திரட்சிவாயு,
சீதமுறுங்கிராணி மகோதரம் நீராமை
திரள் வாயு சூலை வலிக்கடுப்புத் தீரை
நீதமுருங்கிரு மிகுன்மம் அண்டவாதம்.
நிலையும் நீர்க் கிரிச்சரங்கள் தந்து மேகம்
பேதகமாமூத்திரபிணி மூல ரோகம்
பேச வெகு பிணிகளுமே பொருளதாமே. "

(சதக நாடி).

2. " சிறப்பான வாதத்திலுட்ணந்தானே
சேர்ந்திடுகில் அதிசாரமழைச்சல் வாயு,
உரைப்பான பொருமலொடுயக்கினி மந்தம்
உண்டாகும் நீர்ச்சிறுப்புப் பிரமேகங்கள்.

பிறப்பான மதகரிநீர் கரப்பான் ரத்தம்
பிரமேகம் பெரும்பாடு பிற நீர்க்கோவை
அறப்பான வாய்ச் சூலை சேத்தும ரோக
மான பலபிணியும் வந்தடருந்தானே.''
(சதக நாடி.)

என்றதால், மூத்திரக்கிரிச்சரம்என்னும் நீர்ச்சுருக்கு நோயில் வாத நாடி மீறி நடைபெறும் ; அல்லது வாத மிகுதியுடன் உட்டிணம் கூடினாலும் நீரருக்கல் உண்டாகுமென்பர்.

## 35. நீர்க்கட்டு

**வேறு பெயர் :** நீரடங்கல்.

இயல்.—நாழிகைக் கணக்காய்ச் சிறு நீர் பெய்யாமலேயிருப் பினும் நீர்ப்பை நிறையாதிருத்தல் ; நீர்ப்புழை வழியே சல்லாக்கையிடினும் சிறு சொட்டு நீரும் வெளியாகாதிருத்தல் என்னும் இயல்புடைய நோயாம். (probably suppression of Urine.)

### நோய் வரும் வழி

இந் நோய் இருவழியாக வரக்கூடும்.—(1) நீர்க்குண்டிக்காயில் (பருக்கம்) உண்டாம் ; கற்கள் நீர்க்குண்டிக்காயின் புழையை அடைத்தல் ; அதன் காரணமாக நீர்க் குண்டிக்காயில் சுரக்கும் நீர் வெளி வராமல் தடைப்பட்டு நீர்ப்பையில் நீர்போய்ச் சேராதிருத்தலாம். அல்லது பிறவியிலேயே நீர்க்குண்டிக்காயின் புழை அடைபட்டிருத்தல். அல்லது நீர்க்குண்டிக்காயின் புழையில் கட்டி, கழலைகள் இவைகள் உண்டாதல் ; இவ்வாறு ஏற்படும் தடைகளால் சிறுநீர், நீர்ப்பையில் வந்து சேராமலும் வெளியாகாமலும் இந்நோய் பிறப்பது ஒரு வகையாம்.

(2) மற்றொரு காரணம் யாதெனில், நீர்க்குண்டிக்காய் அழல் குற்றத்தாலும் அல்லது ஐயப்பெருக்காலும் அல்லது அழலையக்கலப்பாலும் தாபிதமடைந்து இயற்கை நீரைப் பிரித்து வெளியாக்கும் தொழிலை இழத்தல் ; அல்லது நீர்க் குண்டிக்காயின் நீர்ப்புழைகளில் குருதி கட்டி அதன் காரணமாக நீரானது நீர்ப்பைக்கு வரத் தரைப்படல் ; அல்லது நீர்ப்புழைகள் அடி பட்டு நசுங்குதல் ; அல்லது நஞ்சு உட்கொள்ளல், மிகுந்த பேதி, வாந்தி, வியர்வை முதலிய கடுமையான நோய்களாலும் சிறு நீர் உற்பத்தியாகாது இந்நோய் ஏற்படுவது மற்றொரு காரண மாகும். அன்றியும், நீரிழிவு நோயின் கடையிலும் இந்நோய் வருவதுண்டு.

## குறி குணங்கள்.

ஒரு பக்கத்து நீர்க்குண்டிக்காயின் புழைகள் கேடடையின் அதிகத் தீங்குகளில்லை எனலாம். ஆனால் இரண்டு பக்கத்து நீர்க்குண்டிக்காயின் புழைகள் அடைபடின் மிகுந்த தீங்குகளை விளைவிக்கும்.

அவைகளாவன :

1. சிறு நீர் முற்றிலும் கட்டுப்பட்டுச் சிறிதும் இறங்காமை, மயக்கம், தலைச் சுற்றல் இவற்றையுண்டாக்கி வெகு சீக்கிரத்தில் படுக்கையில் கிடத்தும். அரட்டல், புரட்டல், கைகால்கள் சில்லிடல், நாவறட்சி, கொறுக்கு வலி (Cramps), கண்மணி சுருங்கல் என்னும் குணங்களைக் காட்டிக் கொல்லுவதுண்டு.

(2) ஒரு பக்கத்து நீர்க்குண்டிக்காயின் புழை அடைபட்டிருப்பின், முற் கூறியது போல் தடையதிகமில்லாதிருப்பினும் தாபிதத்தால் நீர்ச் சுரப்புக்கட்டுப்பட்டு நீரானது சிறு அளவில் கடினப்பட்டு வெளியாகும். செந்நிறத்தோடு நீரிழியும், உடலில் பிசு பிசுத்த வியர்வையுண்டாகும். வியர்வையானது சிறு நீர் மணம் வீசும். வாந்தியும், பேதியும் உண்டாகும். மூச்சுத் தடுமாறல், மயக்கம், உடல் சோர்வு, ஆகிய இக்குறிகுணங்களையும் உண்டாக்கும்.

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்

### நாடி நடை.

1 "பொருளான வாதத்தில் பித்தஞ் சேர்ந்து
பொருந்து குணங்களுட்ணவாயு சத்தி,
செரியாமை புளித்தேப்பம் பொருமல் நீரிற்
சிவப்பு மலம் பிடித்தலுறுத்தாது நட்டம்,
கருவானதேகமதிலுளைச்சல் சோம்பல்
கைகால் தறிப்பு நாக்கசப்பு அன்னம்,
பரிவான வூண் குறைதல் ருசி கேடாதல்
பலநோயும் வருத்திவைக்கும் பாங்குதானே."

(சதக நாடி.)

2 " வாதமெனும் நாடியது தோன்றிற்
சீதமந்த மொடு வயிறு பொருமல் திரட்சி வாயு,
சீதமுறுங்கிராணி மகோதரம் நீராமை
திரள் வாயு சூலை வலிக்கடுப்புத் தீரை
நீத முருங் கிருமிகுன்மம் அண்டவாதம்
நிலையும் நீர்க்கிரிச்சரங்கள் தந்து மேகம்
பேதகமா மூத்திரபிணி மூல ரோகம்
பேச வெகு பிணிகளுமே பொருளதாமே."

(சகத நாடி.)

3 சிறப்பான வாதத்திலுட்ணந்தானே.
சேர்ந்திடுகில் அதிசாரமழைச்சல் வாய்வு,
உரைப்பான பொருமலொடு வக்கினி மந்தம்
உண்டாகும் நீர்ச்சிறுப்புப் பிரமேகங்கள்
பிறப்பான மதகரி நீர் கரப்பான் ரத்தம்
பிரமேகம் பெரும்பாடு பிற நீர்க்கோவை
அறப்பான வாய்ச்சூலை சேத்து மரோக
மான பல பிணியும் வந்தடருந்தானே."

(சதக நாடி.)

என்பதற்கிணங்க, இந்நோய் வளி அழல் தொந்தம், வளிக் குற்ற மிகுதி, வளி மிகுதியுடன் உட்டிணஞ் சேரல் ஆகிய இக்குற்ற வேறுபாடுகளாலும், கீழ் நோக்குங்கால் வன்மை குறைவதாலும், பிறக்குமென அறிகிறோம். அன்றியும் அழல் குற்ற மிகுதியாலும் இந் நோய் உண்டாகுமென நூல்கள் கூறுகின்றது. பெரும்பாலும் நீரருக்கல் நோய்கள் பலவற்றிலும் முக்குற்ற வேறுபாடுகள் வித்தியாச மிரா!

## 36. சொட்டு நீர்.

**வேறு பெயர் :** சொட்டு மூத்திரம்.

**இயல்.**—சிறு நீர் தனக்குத் தெரிந்தோ தெரியாமலோ ஒழுகிக் கொண்டிருப்பது.

### நோய் எண்.

இந் நோய் இரு வகைப்படும்—

1. குழந்தைகளுக்கு வருவன ஒரு வகை.
2. பெரியவர்கட்கு வருவன மற்றொரு வகையாம்.

1. குழந்தைகளில் காணப்படும் சொட்டு நீரின் குறி குணங்கள்.

குழந்தைப் பருவத்தில் பெரும்பான்மையும் அறிவின்மையால் தமக்குத் தெரியாமலே இரவில் படுக்கையில் நீர் பெய்வதானது பெரியவர்களான பின்பும் அப் பழக்கம் தொடருவதுண்டு.

சிறு ஒலிக்கும் அஞ்சக் கூடிய குழந்தைகள் பயத்தினால் தம்மை அறியாமலே நீர் சொரிவதுமுண்டு.

மற்றும் சில குழந்தைகள் நீர் பெய்ய விரும்பினும் பெய்யாது சோம்பலினால் நீரை அடக்கி வைத்திருந்து, அந்நீர் தானாகவே சொட்டுவதுமுண்டு. இது ஒரு வகையாகும்.

வயிற்றுப்புழு, இளைப்பு நோய் (கய நோய்), நீர்ப்புழை பிறவியிலேயே சரியான அளவில்லாது குறுகியிருத்தல், நீரருகல் அல்லது நீர் பெருகல் ஆகிய இந் நோய்களிலும் சொட்டு நீர் நோயுண்டாகக் கூடும். இது மற்றொரு வகையாகும்.

2. பெரியவர்களில் காணும் சொட்டு நீர் நோயின் குறி குணங்கள்.

இந் நோயில் அடிக்கடி நீர் வெளியாகும் போல் தோன்றும் உணர்ச்சியால் அடிக்கடி சிறுநீரைச் சிறு அளவில் சொட்டி விட்டு எழுந்திருப்பது ஒரு வகை. (probably irritable bladder.)

சில வேளை இருமல், சிரித்தல், அழுதல், பயப்படுதல் முதலியவைகளில் தன்னையறியாமலே நீர் சொட்டி விடுவது மற்றொரு வகை.

நீர் பெருகல் (நீரிழிவு), நீரருகல் நோய், வெள்ளை, நீர்ப்பை தாபிதம் இந்நோய்களிலும்; நரம்புத் தளர்ச்சி, பாரிச வாயு (பக்க வாதம்), பகந்திரம் கீழ் நோக்குங்கால் வன்மை குன்றல் ஆகிய இந் நோய்களிலும் சொட்டு நீர் நோய் கிளைப்பதுமுண்டு.

## 37. வெள்ளை நோய்.

வேறு பெயர்கள்: வெட்டை நோய்; பிரமியம்; பிரமிய ரோகம்; சீழ் மேகம் என்பனவாம்.

இயல்.—சிறு நீர் இறங்குவதற்கு முன்போ அல்லது பின்போ வெண்ணிறத்துடன் சீழ் போல் இழிதல்; நீர்ப் புழையில் எரிச்சலுடன் கடுப்பு உண்டாதலாகிய இயல்புடைய நோயாம்.

### முற்குறி குணங்கள்.

இதே நோயுற்றவர்களிடம் கலவி செய்த சொற்ப தினங்களுக்குள் (சுமார் மூன்று அல்லது நான்கு நாள்களுக்குள்) குறியில் தமைச்சலும், நீர்ப் புழையில் எரிச்சலு முண்டாகும். நீரிறங்கும் போது அத்துடன் சீழ் கலந்திருக்கும். நூல் தொங்குவது போலும், வெண்டைக்காய் கழுவிய நீர் போலும் வெளியாகும். சில வேளை சுரமுங் காயும்.

(சி. ம.)

### நோய் வரும் வழி.

இந் நோய் அளவு கடந்த கலவியாலும், இந் நோயுற்றோரிடம் கூடுவதாலும் உண்டாகும். மேலும், யோகத்தில் நிலைத்து மூலக் கனலை எழுப்பும் போது இந்நோய் பிறக்கு மென்பர் சிலர்.

(சி. ம.)

### (வேறு.)

1 " பாடாகப் பெண் போக மிகவிரும்பிப் பயின்றிட்டு
பட்டினியேமிக விருத்தல்,
தாடாகத் தன் பாதத்திற் சூடுதாங்கல் சரசமாய்க்
காரத்தை மிகப் புசித்தல்,
ஊடாக வுப்புறைப்புத் துவர்ப்பு மிஞ்சல் உக்கிரமாம் பல
பலவாம் விசேஷம் செய்தல்,
காடான மனக்கிலேசுங் காரமான கைத்தலொடு
மிகுத்தலிது காணுங்காணே."

2 " காணவே முதுகெலும்பு கோர்வை சுற்றிக் கனமான
நாபியிலுங் கதித்துச் சுற்றி,
ஆணவே வடிக்குய்ய மூலாதார மழன்று மிகநோவாகிப்
பற்றிக் கொள்ளும்,
நாணவே நாடியோ டெலும்பிற் சூழ்ந்து நலமான
சுரோணிதத்தில் மிகக் கலந்து,
ஆணவே யடிவயறு இழுத்து நோவாம் ஆகாத
பிரமியத்தினாண் மைதானே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், மிக சம்போகம், மிகுந்த பட்டினி, கடுமையான வெய்யிலில் அதிகம் நடத்தலாலேற்படும் பாதங்களின் சூடு, காரமான பொருள்களையும், உப்பு, உறைப்பு, துவர்ப்பு, கைப்பு இச் சுவைகளையுடைய பொருள்களை அதிகம் புசித்தலாகிய

காரணங்களால் அழற் குற்றம் மிகுந்து முதுகந் தண்டுஎலும்பு கோர்வையும், நாபியும், குய்யம் மூலாதார மிவைகளில் கனல் மிகுந்து அழன்று நோவுண்டாகி, ஐயக் குற்றம் மிகுந்துநாடி நரம்பு ரத்தக் குழல்கள் மூலமாக எலும்பைப் பற்றியும் சுக்கில சுரோணிதத்தில் கலந்தும் நீர்ப்பை, நீர்ப்புழை இவற்றில் தாபிதத்தையும், விரணத்தையும் உண்டாக்கிச் சீழ்பிடித்து அடிவயிற்றை இழுத்துப் பிடித்தும் வலிக்கும்; இங்ஙனம் பிரமிய ரோகமென்னும் வெள்ளை நோயுண்டாகுமென்கிறார்.

(வேறு.)

3. " கன்னிமயக்கத்தால் கண்டிடு மேகமே "—என்பதினாலும்.

4. " மேகம் பிறக்கும் விதஞ் சொன்னா ரெந்நந்தி,
ஆமமிளந்தைப் பருவமதில் மோகித்தும்,
போகந்தினஞ் செய்யிற் புகழ் மந்தத்தே கூடில்,
வாகப் பசியால் வழங்குஞ் சையோகமே."

என்பதினாலும்,

5. " சையோகஞ் செய்யத் தனித்த சுழியோடும்
ஐயாவமிர்தமடக்கிக் கனலேறும்
மெய்யாக விந்து விழப்புண்ணாகும்
மையான மேகம் வளருங் கிரந்தியே."

என்பதினாலும், பிரமிய நோயுண்டாவதற்கு மிகுந்த கலவி முக்கிய காரணமென்பதும்; அதிகப் பசியிலும் அதிக மந்தத்திலும் தினந்தோறும் போகஞ் செய்வதும் ஆகிய இச் செயல்களால் மூலக் கனலை எழுப்பி அழற் குற்றத்தையும் வாயுவையும் கேடடையச் செய்து, விந்து விழும்போது புண் ஏற்பட்டு, மேகம் கிரந்தி முதலிய நோய்களை விளைவிக்குமென்கிறார்.

(கை-எழுத்துப் பிரதி.)

நோய் எண்.

" உரைத்திட்டேன் பிரமியமென்ற ரோகந்தானே,
உத்தமனே இருபத்தொன்றாகுங் கண்டாய்."

(யூகி சிந்தாமணி.)

என்பதால், இஃது இருபத்தொரு பிரிவுகளையுடையுமென அறியு வும். அவையாவன :

1. " வழுத்தவே பிரமியத்தின் பெயரைக் கேளாய்
வாதத்தின் பிரமியமாம்பித்தப் பிரமியம்
திழுத்தவே சிலேட்டுமத்தின் பிரமியந்தான்
சீரான வாத பித்தப் பிரமியமாகும்.
நழுத்தவே பித்த சிலேட்டுமப் பிரமியந்தான்
நலத்தொந்த பிரமியமாங்கட்டிப் பிரமியம்.
தழுத்தவே சலப் பிரமியந்தந்திப் பிரமியந்
தனித்த தோரிரத்தப் பிரமியம் தானென்றே."

2. " தானென்ற சீப்பிரமிய மொழுக்குப் பிரமியந்
தனியரித்தராப்பிரமியமாங் கிரிச்சரப்பிரமியம்,
கானென்ற கரப்பனாம் பிரமியத்தோடு
கல்விளையும் பிரமியமாந்தந்துப் பிரமியம்
நேனென்ற நீச்சுப்பிரமிய மலினப் பிரமியந்தான்
நேரான மதுப்பிரமியம் விரணப் பிரமியம்
ஏனென்ற பிரமியந்தானிருபத்தொன்று
யிதினுடைய உற்பத்தி யியம்பக் கேளே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால்,

1. வளி வெள்ளை,
2. அழல் வெள்ளை,
3. ஐயவெள்ளை,
4. வளி அழல் வெள்ளை,
5. அழலைய வெள்ளை,
6. முக்குற்ற வெள்ளை,
7. கட்டி வெள்ளை,
8. நீர் வெள்ளை,
9. தந்தி வெள்ளை,
10. குருதி வெள்ளை,
11. சீழ் வெள்ளை,
12. ஒழுக்கு வெள்ளை,
13. மஞ்சள் வெள்ளை,

14. கிரிச்சரம் வெள்ளை, (நீர்ச்சருக்கு வெள்ளை)
15. கரப்பான் வெள்ளை,
16. கல் வெள்ளை,
17. நூல் வெள்ளை,
18. நீச்சு வெள்ளை,
19. மலினம் வெள்ளை,
20. இனிப்பு வெள்ளை,
21. புண் வெள்ளை,

என்பனவாம்.

ஒவ்வொரு பிரிவு வெள்ளை நோயின் குறி குணங்கள்.

1. வளி வெள்ளை (வாதப் பிரமியம்.)

'' ஆண்மையாய்க் கோசலம் போல் நீரிறங்கும்,
யருக்கியேயடித்தண்டில் மிக வலிக்கும்,
வெண்மையாய்க் கட்டி கட்டி யாய்ச் சீழ்தான் வீழும்,
விரைவிலே கனத்துமே நோக்காடுண்டாம்,
பாண்மையாயடிவயிறு பக்கந்தன்னில்....
பரபரத்து நோவாகிப் பார முண்டாம்,
வாண்மையாய் வயிற்றதனில் யிசிவுண்டாகும்
வற்றுமே சரீரந்தான் வாதப் பிரமியம்.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், வளி வெள்ளை என்னும் வாதப் பிரமிய நோயில், சிறுநீர் பசுவின் நீர் போலிறங்கும். நீரிறங்கும்போது ஆண்குறி அடித்தண்டில் வலியுண்டாகும். நீரில் சீழும் கலந்து காணும். நீரிறங்கும் போது அடிவயிறு, அதன் இருபக்கம் இவற்றில் கனத்து இழுத்துப் பிடித்தாற்போல் வலியுமுண்டாகும். உடல் வற்றும். இக்குறி குணங்கள் வளி வெள்ளை நோய்க்குரியவையாம்.

2. அழல் வெள்ளை (பித்தப் பிரமியம்.)

' சரீரந்தான் மிகவற்றித்தியக்க முண்டாய்ச்
சந்தோடு கைகால்கள் தானோவுண்டாகுஞ்
சரீரந்தான் கறுத்துமே எரிவுண்டாகுங்
கனமானகுதங்குய்யக் கடுப்புக் காணும்,

வரீரந்தான் மஞ்சள் போற்சீயாய் வீழும்,
மனந்தானுமருபியாய்க்கை காலோயும்,
புரீரந்தான் லிங்கமது புளகி விம்மும்,
பேரான லிங்கம் மனோபித்தப் பிரமியம்.''

(யூகி. சிந்தாமணி.)

என்றதால், அழல் வெள்ளை நோயில், உடல் வற்றும், தியக்க முண்டாம். உடல் கறுக்கும், எரிவு காணும். கீழ் வாயிலும் பிட்டத்திலும் வலியுண்டாகும். சிறு நீர் இழியும்போது நீர்ப் புழை கடுத்து எரிச்சலுடன் சீழ் கலந்தும் மஞ்சளித்தும் நீர் வெளியாகும். ஆண் குறி வீங்கும். நோவுண்டாகும். இத்தியாதி குறி குணங்களை இந்நோயில் காணலாம்.

### 3. ஐய வெள்ளை (சிலேட்டுமப் பிரமியம்.)

'' லிங்கத்தில் நோயுண்டாய்க் கடுப்புக் காணும்
நீரிறங்கி வெள்ளையாய்ச் சலமாய் வீழும்,
பங்கத்தில் மேனி யெல்லாம் பழுப்பாய்க் காணும்,
பாண்டுவாய்க் கண்ணகங்களி ரத்தமில்லை.
சுங்கத்திற் சுருக்கிட்டு நீரிறங்குந்
துரிசாக வடிக்கடிக்குக் கருக்கல் காணும்,
அங்கத்திலனல் மிகவே யழன்று மேனி
அசாத்திய சிலேத்தும பிரமியம் யறிந்து கொள்ளே .''

(யூகி சிந்தாமணி).

என்றதால், ஐய வெள்ளை நோயில் ஆண் குறியில் வலியை யுண்டாக்கி நீரை இழியச் செய்யும். இழியும் நீரில் வெண்மையான சீழுங் கலந்திருக்கும். நீர்ப்புழை எரியும். அடிக்கடி நீர்ச் சுருக்கு உண்டாகி உடலில் அழல் காணும். பாண்டு நோய் போல் உடல் வெளுக்கும். இவை யாவும் ஐயவெள்ளை நோய்க் குரியவையாம்.

### 4. வளி அழல் வெள்ளை (வாத பித்த பிரமியம்.)

'' அறியவே யாக்கை யெலாம் வலியுண்டாகி
அடிலிங்கத்தடியில் சலாகை வைத்தாற் போல்,
மறியவே யடிக்கடிக்கு வருத்தமாகு
மாப்போலச் சிறுநீரிற் கரைந்து வீழும்,

வெறியவே யுதிரத்திற் கட்டி கண்டு
மேன்மையாய் மலமது தானிறுகிக் கொள்ளும்,
துரியவே சுருக்கென்று நீரிறங்குந்
துடிக்குமே வாதபித்தப் பிரமியந் தானே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், வளி அழல் வெள்ளை நோயில், நீர்ப்புழையில் ஏதோ அடைத்து வைத்தது போல் வலியுடன் அடிக்கடி சிறுகச் சிறுக நீரிழியும். சிறுநீரில் மாப்போல் கரைந்து வீழும். நீரிறங்கும் போது தாங்க முடியாத எரிச்சலையும் துடிப்பையும் உண்டாக்கும். உடல் முழுதும் வலிக்கும். மலமிறுகிக் கொள்ளும். இத்தியாதி குறி குணங்களை வளி அழல் வெள்ளை நோயில் காணலாம்.

5. அழலைய வெள்ளை (பித்த ஐயப் பிரமியம்).

'' பித்தமாய் வாயெல்லா மிகவே கைத்துப்
பொருமியே அடிவயிறு இசிவு காணுஞ்
சுத்தமாய் மஞ்சளித்து வெள்ளை வீழுஞ்
சுருக்குத் தான் லிங்கத்தில் மிகுதியாகும்
பத்தமாய்க் கணுக்களுக்கு நோயுண்டாகும்
பகலுறக்க மிகுதியாம் பசியெடாது.
பித்தமா யுடம்பெல்லா மூதிக் காணும்
பித்த சிலேட்டுமப் பிரமியத்தைப் பேசுங் காலே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், அழலைய வெள்ளை நோயில் அடி வயிறு பொருமி ஊதி இழுத்துப் பிடித்தாற் போல் வலியு முண்டாகும். ஆண் குறியில் சுருக்குண்டாகி மஞ்சளித்து சீழுடன் சிறுநீரிறங்கும். கீல்கள் தோறும் வலி காணும். உடல் வெளுத்து ஊதும். வாய் கைக்கும். பகலுறக்க மதிகமாம். பசியிராது ஆகிய இக் குறி குணங்களைக் காணலாம்.

6. முக்குற்ற வெள்ளை (தொந்தப் பிரமியம்.)

''பேசுமென்ற சரீரத்திற் றினவுண்டாகிப்
பேரான புழுக்கள் தானூர்தல் போல
ஆசுமென்ற அடிவயிற்றிற் சுரப்புண்டாகும்
அடிக்கடிக்கு நீர்தானுங் கடுத்திறங்கும்

கூசுமென்ற லிங்கத்திற் கசிவுண்டாகிக்
குறிகள் தான் பலவன்ன மாகக் காணுந்
தூசு தானடி தன்னிற்றோய்ந் திருக்குந்
தொந்தமாம் பிரமியத்தின் சூட்சந்தானே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், முக்குற்ற வெள்ளை நோயில், அடிவயிற்றில் சுரப் புண்டாகும். அடிக்கடி நீரிழியும். அத்துடன் வெள்ளை காணும். வெள்ளையானது பல நிறமாகவுமிருக்கும். சிறு நீரைத் தெளியவைக்கின் அதனடியில் தூசு படிந்தது போலிருக் கும். உடலில் தினவும் ; புழு ஊர்வது போன்ற உணர்ச்சியு முண்டாகும் என்னும் இத்தியாதி குறி குணங்களை யுண்டாக்கும்.

7. கட்டி வெள்ளை (கட்டிப் பிரமியம்.)

''தானாகச் சடமெங்குங் கட்டியாகித்
தரிக்காமல் வலியுண்டாய்த் தளர்ச்சி கேடாய்த்,
தோனாக லிங்கத்தில் தினவுண்டாகிச்
சொறியாகி விரையிரண்டிற் றீநீர் பாயும்,
ஊனாகக் கட்டியாய் லிங்கந் தன்னில்
உறுதியாய்ப் பருக்கை போற் சீயும் வீழும்,
மானாக வுடம்பது தான் வற்றிக் காணு
மருவு கட்டிப் பிரமியத்தின் வன்மை தானே.''

(யூகி சிந்தாமணி)

என்றதால், கட்டி வெள்ளை நோயில், வெள்ளை நோய் உடலில் ஊறிக் கட்டிகளை யுண்டாக்கும். உடல் வற்றும். வன்மை குறை யும், ஆண் குறி நீர்ப்புழை இவற்றில் எரிச்சலும் தினவு முண்டா கும். பிறகு ஆண் குறியினடிப் பாகத்திலும் கட்டிகளுண்டாகும். இக் கட்டிகள் உடைந்து நீர்ப் புழையுடன் சேர்ந்து துளை யுண்டாகி அத் துளையின் வழியே நீர்க் கசியும். இக் குறி குணங்கள் யாவும் கட்டி வெள்ளை நோய்க் குரியவையாம்.

8. நீர் வெள்ளை (சலப் பிரமியம்.)

''வண்மையாய் வடிவ மெல்லாம் வலியுண்டாதல்
வாய் கைத்து வாந்தி யொடு மயக்க மாதல்
தண்மையாய் லிங்கத்திற் சலங் கசித்தல்
தாக்கான வடிவயிற்றிற் பிடுங்க லுண்டாம்

வெண்மையாய் மலந்தனிலே சீதங் காணல்
வெளுப்பாகி நீரிறங்கிக் குத்தலுண்டாய்
அண்மையாய் அரையாப்புக் கட்டியுண்டாய்,
அழுந்துமே சலப்பிரமிய வாண்மை தானே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், சலப் பிரமிய மென்னும் நீர் வெள்ளை நோயில், ஆண் குறியில் வலியுண்டாகும். நீர்ப்புழையினின்றும் வெள்ளை விழும், அடி வயிற்றில் பிடுங்கலுண்டாகும். மலம் சீதத்துடன் வெண்மையாய்க் கழியும். வாய் கைக்கும் வாந்தியும் மயக்க முண்டாகும். சிறுநீர் கழுநீர் போன்ற வெண்மை நிறமான கலங்கலுடன் காணும். அரையில் கட்டிகளுண்டாகித் துன்பப் படுத்தும். இக்குறி குணங்களை நீர் வெள்ளை நோயில் காண லாம்.

## 9. தந்தி வெள்ளை (தந்திப் பிரமியம்.)

''ஆண்மையாயடி வயிறு புண்போல் நொந்து
அடித்தண்டு விறுவிறுத்து உச்சங்காணுந்,
தாண்மையாய் லிங்கத்தில் கின்னரத்தின்
தந்தி போல் நீருக்குமுன்னே வீழும்,
மேண்மையாய் வெளுப்புத் தான் சீலை தன்னில்
விந்தையாயடிக்கடிக்கு நனைவு காணும்,
நாண்மையாய்க் கால்கையுமெரிச்சலாகும்
நாறுதந்திப்பிரமியத்தின் நாட்டந்தானே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், தந்தி வெள்ளை நோயில், அடி வயிறு புண்போல் நோகும். ஆண் குறியின் அடிதண்டு விறுவிறுத்துப் பூரிக்கும். நீரிறங்கு முன்னே கம்பியைப் போல் ஒரே தொடர்ச்சியாய் வெள்ளை தொங்கி விழும். எப்பொழுதும் வெள்ளை கசிந்து சீலையில் ஒட்டும். கை கால்கள் எரிவு காணும். இக்குறி குணங்கள் தந்தி வெள்ளை (probably gonnorrhoea gleet) நோயைக் குறிக்கும்.

## 10. குருதி வெள்ளை (இரத்தப் பிரமியம்.)

''தந்திரமாய்த் தியங்கியே தலை திருப்புஞ்
சரீரமெங்கும் பஞ்சு போற்றளர்ச்சி கேடாம்,
மந்திரமாய் வருந்தியே நீரிறங்கும்
மாசற்றமுயலிரத்தம் போலே வீழும்,

சுந்தரம் போலிருந்த முகந்தூசியாகுஞ்
சுருக்குத்தான் சிறுநீருஞ்சிவப்பாய் விழும்,
அந்தரமாய்ப் பசாசு போலலைச்சலாகும்
அடிக்கடிக்கு நீரிறங்கு மிரத்தப் பிரமியம்.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், குருதி வெள்ளை நோயில், தியக்கம், கிறுகிறுப்பு, உடல் தளரல், வருத்தத்துடன் முயல் ரத்தம் போல் நீரிறங்கல், தேஜசு (மேனியின் தெளிவு) கெடல், பேய்ப்போலலைதல், அடிக்கடி நீர் தடைப்படல், சிறிது சிறிதாகச் சிவந்து இறங்கல் முதலிய இக் குறி குணங்கள் உண்டாகும்.

### 11. சீழ் வெள்ளை (சீப்பிரமியம்.)

''கடுத்துமே சீப்போலே வெள்ளை காணுங்
கட்டுமேயரையாப்பு பவுந்திரந்தான்,
நடுத்துமே நாபியெலாம் விரணமாகும்
நற்சந்து கணுக்காலிற் குடைச்சலுண்டாம்,
அடுத்துமேயடிக்கடிக்கு நீரிறங்கும்
அதிகமாய்க் குளிரோடு சுரமுமுண்டாம்
அடுத்துமே வருத்தமாய் மயக்கமாகும்
வடிவமெலா நொந்திடுஞ்சீப் பிரமியமே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், சீழ் வெள்ளைநோயில், வெள்ளையானது சீழ்போல இறங்கும். ஆண்குறி நொந்து நீர்ப்புழை கெடுத்து அடிக்கடி நீரிழியும். அரையில் கட்டி, பவுத்திரம், நாபியில் புண் (உந்திப் புண்) இவை உண்டாகும். சந்து, கணுக்கால் இவைகளில் குடைச்சலுண்டாகும். குளிருடன் சுரம், மயக்கம், முதலியவையும் சீழ் வெள்ளை நோயில் காணலாம் (Probably acute suppurative urethritis or even acute Gonnorrhoea)

### 12. ஒழுக்கு வெள்ளை (ஒழுக்குப் பிரமியம்.)

''சீயாகித் தண்ணீராய் இரத்தம்போலச்
சிறுகியே யொழுகு மெந்த நேரமுந்தான்,
காயாகிக் கட்டியாய் முளையுண்டாகிக்
கனமான விரணமாய்க் காயமெல்லாம்,

ஆயாகியங்கமெலாங் குடைச்சலாகும்
அழன்றுமேயக்கினி யாயண்டிக் கொள்ளும்
நோயாலெப் பாய்க்குள்ளே கிடையுமாகி
நுண்மையாயொழுகுமென்றமேகந்தானே.''
(யூகி சிந்தாமணி.)

என்றதால், ஒழுக்கு வெள்ளை நோயில், சீயுங் குருதியுங் கலந்த நீர் போல் வெள்ளை எந் நேரமும் ஒழுகிக் கொண்டேயிருக்கும். உடல் முழுமையும் சிறு பருக்களுண்டாகி உடைந்து புண்ணாகும், உடல் குடைந்து நோகும். வயிற்றில் அனலை யுண்டாக்கி (தீட்சணாக்கினி) மிகுதியாகப் புசித்துப் படுக்கையில் கிடக்கச் செய்யும். இக்குறி குணங்களை ஒழுக்கு வெள்ளை நோயில் காணலாம்.

குறிப்பு :—''வயிற்றில் அனலையுண்டாக்கி மிகுதியாகப் புசித்துப் படுக்கையில் கிடக்கச் செய்யும்'' என்னும் வாக்கியம் சித்த மருத்துவத்தில் கூறியிருப்பதாகும். ஆனால் இக்கருத்துக்கு மேற்கண்ட செய்யுளில் ஆதாரமிருப்பதாகத் தோன்றவில்லை. செய்யுளுக்குரிய கருத்தும் வாக்கியத்துக்குரிய மாறுதலும் கீழ்க் கண்டவாறு வாசித்தல் பொருத்தமாகும் :—

உடல் முழுமையும் கட்டிகளுண்டாய், உடைந்து, புண்ணாகி, அதன் காரணமாக அங்கமெல்லாங் குடைச்சலும், அழற்சியும், எரிவும் தாங்க முடியாதளவு மிகுதியாகி நோயினனைப் படுக்கையில் கிடத்திவிடும் என்பதே மேற்கண்ட செய்யுளின் தாற்பரியமாகும்.

தீட்சணாக்கினிக்கும், மிகுதியாகப் புசிப்பதற்கும் செய்யுளில் ஆதாரமில்லை.

(எம். எஸ். வி.)

### 13. மஞ்சள் வெள்ளை (அரித்திராப் பிரமியம்.)

''தானுமே மஞ்சள் போல் வெள்ளை காணுந்
தழலாக வெதும்பியே நீரிறங்கும்,
காணுமே கதிர்தனையே ஏற்றினாற்போல்
கடுப்பாக விறுவிறுக்குங் கடுஷ்ணமாகும்,
வாணமே மதியம் போற்றானிருந்த
மதிமுகங்கள் மஞ்சள் போற்றானிருக்குந்
தேனுமே கசப்பாகும் நாவு தானுந்
திடுக்குண்டாமரித்திராப்பிர மியந்தானே.''
(யூகி சிந்தாமணி.)

என்றதால், மஞ்சள் வெள்ளை நோயில், வெள்ளையானது, பசு மஞ்சள் நிறமாக வெளியாகும். நீர்ப்புழையில் நெருப்புப் போல் எரிந்து, கடுத்து நீரிறங்கும். முகம் மஞ்சள் நிறமடையும். நாவு கைக்கும். தேகம் அதிகச் சூடாகும். இக்குறி குணங்களை மஞ்சள் வெள்ளையில் காணலாம்.

### 14. நீர்ச் சுருக்கு வெள்ளை (மூத்திரக்கிரிச்சரப் பிரமியம்).

''அரித்திரம் போனீரிறங்கு மாண்மை குன்று
மருக்கியே மிகக் கடுத்து நீர்தான் வீழும்,
நெரித்திரம் போனீர்தனையே கட்டிக்கொள்ளும்
நிரசியம் போற் சரீரத்திலுறக்கமில்லை,
தரித்திரம் போலன்னத்தைப் பொசிக் கொட்டாது
சஞ்சலமாய் மனதுதான்றரிக்கொட்டாது
விரித்திரம் போலுடம் பெல்லா முளைச்சலுண்டாம்
விகிமூத்திரக்கிரிச்சரப் பிரமியந்தானே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், நீர்ச்சுருக்கு வெள்ளை நோயில், நீர்ப்புழை மிகக் கடுத்து நொந்து மஞ்சள் நிறத்துடன் நீரிறங்கும். வெள்ளை விழும். அடிக்கடி நீரடைக்கும். ஆண்மை குன்றும். இரவில் தூக்க மிராது. உணவில் விருப்பமின்றி மன நிலை கெட்டுப் போம். உடலுளையும். இக்குறி குணங்களை நீர் சுருக்கு வெள்ளை நோயில் காணலாம்.

### 15. கரப்பான் வெள்ளை (கரப்பான் பிரமியம்).

''உளைஞ்சுமே வயிறுதான் சீதங்காணும்
உஷ்ணமாய் மூத்திரந்தானுருக்கி வீழும்,
அளைஞ்சுமேயங்கமெல்லாஞ் சொறியுண்டாகு
மழலாக வெதும்பலாய்க்கை காலோயும்,
புளைஞ்சுமேலிங்கத்திற்புண் போல் குத்திப்
பொடிப் பொடியாய் சுண்ணாம்புக் கற்போல் வீழும்,
களைஞ்சுமே நீரோடு மலமுஞ்சிக்குங்
கசியுமே கரப்பானாம் பிரமியந்தானே.''

(யூகி சிந்தாமணி).

என்றதால், கரப்பான் வெள்ளை நோயில், வயிறு உளைந்து நொந்து சீதத்துடன் மலங்கழியும். சிறுநீர் மிகுந்த சூடுடன் இழியும், உடல் முழுதும் வெப்பத்தால் பொங்கி எழும் புண்கள் கரப்பான் நோய் போல் பொங்கி பரவும். ஆண்குறி புண்போல் நொந்து குத்தி நீரிறங்கும். நீரிறங்கும்போது பொடிப் பொடியான சிறிய கற்கள் சுண்ணப் பொடிபோல நீரில் கலந்து வெளியாகும். மலமும் நீரும் கட்டுப்படும். கை கால் சோர்வு முதலிய குறி குணங்களுமுண்டாம்.

## 16. கல் வெள்ளை (கற்பிரமியம்.)

''கசியுமே லிங்கத்திற்கள்ளைப் போலக்
கற்றாழை நாற்றந்தானுடம்பில் வீசுந்,
தசியுமே சாந்தரைத்துப் படுத்தகற் போல்
தயங்கியே நீர்ச் சிக்கி வயிறு விம்மும்,
விசியுமே விறுவிறுப்பாய் வயிறெல்லாந்தான்
மீறான நாபி தொட்டுப் பிசமுமாகும்,
பசியுமேயில்லாமற் பாரமாகும்
பளிங்கு நிறமாகுங்கற் பிரமியந்தானே.''
(யூகி சிந்தாமணி.)

என்றதால், ஆண்குறியில் கள்ளைப் போன்ற வெள்ளை ஒழுகும். உடம்பில் கற்றாழை நாற்றம் வீசும். கற்கள் கரு நிறத்துடன் வெளியாகும். கற்கள் நீர்ப்புழை யிலடைக்குமாயின் வயிறு விம்மும். உந்தி முதல் விளா வரையும் வயிறு விறுவிறுத்து நோகும். பசியிராது. சிறுநீர் பளிங்கு நிறமாயிருக்கும். இத்தியாதி குறி குணங்கள் கல் வெள்ளை நோய்க்குரியவையாம்.

## 17. தந்து வெள்ளை (தந்துப் பிரமியம்).

'' கல்லான சிலந்தியது நூலைப் போலக்
கன்மான லிங்கத்திற் கலந்து வீழும்,
வல்லான வண்மையோடுதிரம் காணும்
வலியெடுக்கு மடித்தண்டு விம்மும் போது,
சல்லான கல்மிஷந்தான் யடியிற்றங்குஞ்
சமத்தான விலாப்பக்கந்தனிலே குற்றும்
துல்லான மூத்திரந்தான்றுளியாய் வீழுந்
தந்து பிரமியத்தினிடச் சுருக்குத்தானே.''
(யூகி சிந்தாமணி.)

என்றதால், தந்து வெள்ளை நோயில் சிறு நீரிறங்கும் போது சிலந்தியின் நூல் போல் மெல்லியதாய் வெள்ளை வீழும். ஆண் குறி விம்மும் போது உதிரங்காணும், வலி எடுக்கும். சிறு நீரைத் தெளிய வைக்கின் அடியில் சீழ் தங்குவதோடு விலாப் பக்கம் நோகும். மூத்திரம் துளித் துளியாய் விழும். இக்குறிக் குணங்களைத் தந்து பிரமிய நோயில் உண்டாகும்.

18. நீச்சு வெள்ளை (நீச்சுப் பிரமியம்).

'' சுருக்காகக் கள்ளுப் போனீரிறங்குஞ்
சூட்சமாய் வெள்ளையோடு சீயுங்காணு
மருக்காக லிங்கமுச்சமாகும் போது
வருத்தமாயடித்தண்டு குடத்தோடொக்க
விருக்காக விறுவிறுப்பாய் வலி யுண்டாகும்.
விசையான நரம்பெல்லாம் சுருக்கமாகுங்
குருக்காக வடிவயிறு தனிலே குற்றும்
குளிருமே நீச்சுப் பிரமியத்தின் கூறே. ''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், நீச்சு வெள்ளை நோயில் சிறுநீர் இறுகிக் கள்ளைப் போல் வெளுத்துச் சீயுடனுமிழியும். அடித்தண்டு வீங்கி இறுகிப் பிடித்தாற் போலிருக்கும். விறுவிறுப்புடன் வலியுமுண்டாகும். நரம்புகள் சுருங்கும். அடி வயிற்றில் குத்த லுண்டாகும். குளிருண்டாம். இக்குறி குணங்களை நீச்சு வெள்ளை நோயில் காணலாம்.

19. வலி வெள்ளை (மலினப் பிரமியம்).

'' கூறாக வடிநரம்பு குதங்குய்யந்தான்
குற்றியே யடிக்கடிக்கு வலி யுண்டாகும்,
வாறாக வடிவெல்லாமிக வழற்றி
மயக்கமாய் நாவோடு கைத்தலாகும்,
பாறாகப்புறங் காலிற்றிமிருண்டாகும்
பருத்து மேலிங்கத்தில் வெள்ளை வீழுந்,
தூறாகத்துன் மாங்கிசஞ் சுருண்டு காணுந்
தூசி மிகப்படியும் வலிப் பிரமியந்தானே. ''

(யூகி சிந்தாமணி.)

என்றதால், வலி வெள்ளை நோயில், ஆண் குறியின் அடி நரம்புப் பிட்டம் இவைகள் வலித்தல் ; உடல் வற்றி மயக்கமுண்டாதல்: நா கைத்தல், காலின் அடிப்பக்சம் திமிருண்டாதல் ; ஆண்குறி வீங்கி நீரிறங்கும் போது இற்றுப் போன சதைத்துணுக்குகளும், வெள்ளையும சேர்ந்து இழிதலாகிய குறி குணங்களைக் காட்டும்.

### 20. தேன் வெள்ளை அல்லது இனிப்பு வெள்ளை (மதுப் பிரமியம்).

"வலியாகிலிங்கமெல்லாம் வருத்தமாகி
வண்டலாய்த் தேன் போல நீரிறங்கும்,
எலியாகி யெறும் பரிக்குஞ் சிறுநீர் தன்னில்
இறைச்சி போலுள்ளுக்குள் விரணமாகும்,
நலியாகி நாற்றமா முடம் பெங்குந்தான்.
நாவிலே யுணர்ச்சியில்லா துரிசைபோகும்,
மலியாகி நாவறண்டு மயக்கமாகும்.
வருத்த மாமதுப் பிரமிய மார்க்கமாமே."

(யூகி சிந்தாமணி.)

என்றதால், தேன் வெள்ளை நோயில் ஆண்குறி மிகவும் நொந்து நீர் வண்டலாய்த் தேன் போலிறங்கும், சிறுநீர் பெய்தயிடத்தில் எறும் பரிக்கும். நீரானது கறியைக் கழுவிய நீர்போல் சற்று சிவந்து, கொழுப்பும், சதையுங் கலந்தது போற்காணும், நீர்ப் புழை புண்ணாகி நீரிறங்கும்போது ஒருவித நெடியும் நாற்றமு முண்டாகும். உடலும் நாற்றமாய் வீசும். நாவறண்டு சுவை யறியாமையும், மயக்கமுமுண்டாகும். இக்குறி குணங்கள் தேன் வெள்ளை நோய்க்குரியவையாம்.

### 21. புண் வெள்ளை (விரணப்பிரமியம்).

"மார்க்கமா யுடம்பெங்கும் விரணமாகி
மகா வருத்தமாகவே மயக்கமாகி
தேர்க்கமாய் லிங்கமது பருத்து வீங்கிச்
சீயோடி ரத்தந்தான் மிகவே காணும்,
கார்க்கமாய் கறடோடு கணுக்களெல்லாங்
கட்டியே நோவாகிக் கடுப்புமுண்டாம்,
வேர்க்கமாய் மேனியெலாம் வெதும்பலாகும்
விறுவிறுக்கும் விரணப் பிரமியந்தானாமே."

(யூகி சிந்தாமணி.)

என்றதால், புண் வெள்ளை நோயில் உடலெங்கும் பொங்கிப் புண்ணாகி ஆண்குறி வீங்கிச் சிறுநீருடன் குருதியுங் கலந்திறங்கும். முட்டிக்கீல்கள் நொந்து கறடு கட்டியது போல் நீட்டவும் முடக்கவும் முடியாமையாயிருக்கும். கீல்களில் மிருதியான வலியுண்டாகும். உடல் வெதும்பல், விறுவிறுத்தலாகிய குறிகுணங்களையும் உண்டு பண்ணும்.

(சித்த மருத்துவம்.)

## வெள்ளை நோயின் பொதுக் குறி குணங்கள்.

வெப்பமான பொருள்களை உண்பதாலும், அளவு கடந்த கலவியாலும், யோக நிலையிலிருத்தலாலும், கீல்வாய்க்கனலெழுப்பி (மூலச்கனல்) அழல் குற்றத்தைத் கொடுத்து, நீர்ப் புழை, நீர்ப்பை இவைகளில் தாபிதத்தை உண்டுபண்ணி, புண் படுத்தி, அதினின்றும் வெள்ளை இழியச் செய்யும.

அன்றியும் இந்நோயுற்றவரிடம் கூடுவதால் இது தொத்து நோயாகி விடும். புணர்ந்த இரண்டு முதல் எட்டு நாட்களுக் குள் இந்நோய் தொத்து நோயாகப் பிறக்குமென்றும் கூறு வாருமுளர். இஃது எவ்வாறாகப் பிறக்கினும் குறிகுணங்களில் வித்தியாசமிரா ;

ஆரம்பத்தில் குறியின்நுனி சிவந்து நமைத்துக் கடுத்து வீங்கிச் சிறுநீரிறங்கும்போது நூல்போல் வெளுத்த சீழ் சிலருக்கு முன் இழியும். நாள் செல்லச்செல்ல சீழ் கடினப்பட்டு மிகுதியாகித் தாங்க முடியாத எரிச்சலையும் உண்டாக்கும். சீழ் மஞ்சள் நிறத் தையுமடையும். இடுப்பு, முதுகு, துடை இவை நோகும். சுர முங்காணும். மலச்சிக்கல், பசியின்மை, நீர்ப்புழை நெருப்புப் போலெரிதல், அதில் புண்பட்டுக் குருதியும் இழிதல் ; அப்போது நீரிறங்க முடியாமையையும், தாங்கமுடியாத வலியையும் உண் டாக்கி நோயினனை மிகவும் வருந்தச் செய்யும்.

இந்நோயை உடனே பரிகரிச்காவிடில், இந்நோய் உடலில் ஊறி, சீழ்வறண்டு, நீர்ப்புழை அதிகமாகப் புண்பட்டு நீர் அடிக் கடி தாங்க முடியாத வலியுடன் இறங்கும். சிலசமயம் நீரைச் கழிதற்காக உட்காரினும் எளிதில் நீரிறங்காமல் நீரடைத்தல், ஆண்குறியில் குத்தல, வலித்தல், பளுவாக யிருத்தல் போன்ற உணர்ச்சி யுண்டாதல், விரையில் வீக்கத்துடன் வலியுண்டாத லாகிய குறிகுணங்களையும் விளைவிக்கும்.

மறுபடியும் போகப்போகச் சதையடைப்பை யுண்டாக்கி நீர்ச் சுருக்கு, நீர்க்கட்டு முதலிய உபாதைகளையுண்டாக்கும், இந் நோய் மேற்கொண்டு முற்றினால் சீழ்மிகுந்து சதையை அழு கச் செய்து நீர்ப்புழையைத் துளைத்து தண்டின் அடியிலேனும் முனையிலேனும் கட்டிகளை யுண்டாக்கி, உடைந்து பவுத்திரம் போல் உண்டாய் (கொடிப்பவுத்திரம்) அவ்வழியே நீர்சொட்டு சொட்டாயிறங்கிக் கொண்டிருக்கும். மீண்டும் நாள்கள் செல் லின் குறியின் முனையை அடைத்துச் சிறுநீரும், சீழும் விந்துவும் மேற்கூறிய பவுத்திரத்தின் வழியே வெளியாகிக் கொண்டிருக்கும்.

இந்நோய் இத்தோடு நில்லாமல், கீல்வாயு (மேக சூலை), நரித்தலை வாயு, தமரக வாயு, மலடு, கண் நோய் முதலிய பல துணை நோய்களையும் உண்டாக்கும்.

(சி. ம.

இந்நோய் ஆரம்பத்தில் உணவாதி செயல்களால் அழல் குற்ற மிகுந்து கீழ்நோக்குங்காலையும், நீர்த் துளையிலும் எருவாயிலும் கனலை மிகுதியாக்கி, குருதியையும் கேடடையச் செய்யும். பசித்தீயின் வன்மை இழந்து மனமுஞ் சோர்வடையும்.

1. ''வளர்ந்திடும் பித்தநாடி
வலமிடம் பிசகாவண்ணம்
பிளந்தது தனித்துப் பச்சைப்
புழுவுகளதுபோ லோடில்
உளந்தனில் வரட்சிதங்கி
யுடம்புலர்ந்தத்தி தன்னில்
வளர்ந்திடுஞ் சுரங்கள்வந்து
வளர் பிரமேகமாமே.''

என்றபடியால், அழல்குற்ற மிகுதியைக் குறிக்கும் நாடியானது வல மிடம் பிசகாமல் நேராக (பச்சைப் புழுவானது எவ்வாறு தலையாலூர்ந்து உடலை வளைத்து நடக்குமோ அவ்வாறு) நடக்கின் உடல் வறட்சியுண்டாய், எலும்பைப் பற்றிய சுரமுண்டாகிப் பிரமேக நோயைப் பிறப்பிக்கும் என்பதேயாம்.

2. ''பொருளான வாதத்தில் பித்தஞ் சேர்ந்து
பொருந்து குணங்களுஷ்ண வாயுசத்தி
செரியாமை புளித்தேப்பம் பொருமல் நீரில்
சிவப்பு மலம்பிடித்தலுறுத்தாது நட்டம்,
கருவானதேகமதிலுளைச்சல் சோம்பல்
கைகால் தரிப்பு நாக்கசக்குமன்னம்
பரிவானவூண்குறைதல் ருசிகேடாதல்
பலநோயும் வருத்திவைக்கம் பாங்குதானே.''

3. ''வாதமெனும் நாடியது தோன்றில்
சீதமந்த மொடு வயிறு பொருமல் திரட்சிவாயு
சீதமுறுங்கிராணி மகோதரம் நீராமை
திகழ்வாயு சூலைவலி கடுப்புத்திரை
நீதமுருங்கிருமிகுன்மம் அண்டவாதம்
நிலையும் நீர்க்கிரிச்சரங்கள் தந்து மேகம்
பேதகமா மூத்திரப்பிணி மூலரோகம்
பேசவெகுபிணிகளுமே பொருளதாமே.''

4. "உறுதியுள்ள பித்தமது தோன்றில் வெப்பு
உஷ்ணவாயுவத்திசுரமதி சாரங்கள்
மறதியுடன் கிரக்கமாம் பயித்திய ரோகம்
வளர்சோபையழலெரிவுகாந்தல்கைப்பு
இருதயத்திற் கலக்கமது மறப்புதாகம்
எழுங்கனவு மேயனைவுமயக்க மூர்ச்சை
சிறிது பெரும்பாடு ரத்தம் பிரமேகங்கள்
சேர்ந்து வெகுபிணிபலவுஞ் சிறக்குந்தானே."

(சதகநாடி.)

என்பதினால் வளியழல் கலப்பு நாடியினாலும் வளி நாடி மீறி நடந்தாலும், அழல் நாடி மிகுதியாக் நடைபெற்றாலும், வெள்ளைநோயைப் பிறப்பிக்கும். அதாவது முறையே நீர் எரிச்சலோடு சிவந்து காணுதல்; மூத்திரக்கிரிச்சரம், தந்து வெள்ளை முதலிய மூத்திரரோகம்; ரத்தப் பிரமியம் ஆகிய குறி குணங்களை விளைவிக்கும் என்பதாம்.

பிரமேகம் என்னும் சொல் இங்கே பிரமியம் என்னும், வெள்ளை நோயைக் குறிக்கும்.

## 38. நீரடைப்பு.

வேறு பெயர்.— நீர்க்குண்டிக்காய் தாபித நீரடைப்பு.

இயல்.— சிறு நீர் சுருங்கி அளவில் குறைந்து இழிதல், நீர்ப்பையும நீர்ப்புழையும் எரிதல்; வயிறு விம்மி நோதலாகிய இயலபுடைய நோயாம்.

### நோய் வரும் வழி.

மிளகாய் போன்ற காரமான பொருள்களை மிகுதியாக உண்ணல், குதிரை முதலியவற்றில் எப்போதும் சவாரி செய்தல், மிகுந்த சம்போகம், சிறு நீரை அதிக நேரம் அடக்கி வைத்திருத்தல், பாடாண மருந்து அதிகமாக யருந்தல், சில கொடிய தோடங்களையுண்டாக்கக்கூடிய நோய்களில் நாள் பட வருந்துதல் முதலிய காரணங்களால் கீழ்வாய்க்கனல் எழுப்பப் பட்டு கீழ் நோக்குங் காலையும் தீக்குற்றத்தையும் கேடடையச் செய்யும், மற்றக் குற்றங்களும் தூண்டப்பட்டுக் கேடடைந்து நீர்க்குண்டிக்காயில் தாபிதத்தை உண்டாக்குவதால் நீரடைப்பு நோய் உண்டாகும்.

## குறிகுணங்கள்

இந்நோயில் மூக்கில் நீர் பாய்தல்; கண் இரப்பை சற்று வீங்கிக் கண்ணீர் வடிதல், மார்பு நொந்து மூச்சுத் தடுமாறல், வாந்தி, தலை நோய், மயக்கம்; உறக்கம், சுரம்; உடல் வெளுத்தல்; உடல் ஊதல்; கண்கள் ஊதி மூடிக்கொள்ளல், வயிற்றில் நீர் கோர்த்து ஊதல்; சிறு நீர் மிகச் சுருங்கல்; நீரில் குருதி கலந்திருத்தல், கரு நிறத் தோடு நீரிழிதல்; நீர்ப்புழையில் எரிச்சல், நமைச்சல், வலி யுண்டாதல்; சூட்டுடன் நீரிறங்கல் அப்போது பச்சைக்குருதி வெளி யாதல்; இளைப்பு, பெருமூச்சு; ஆயாசம்; மார்பு நோய், முக வீக்கம், இடுப்பு நோய்; ஆண் குறி வீக்கம்; அடி வயிறு நோதல், குத்தல் முதலிய குறி குணங்களை விளைவிக்கும்.

அன்றியும் இந்நோய் சிறுவயதினருக்கு உண்டாயின் நீரில் குருதி அதிகம் வெளியாகும். வெளுப்பு நோயையும் செரியாமை யையும் உண்டாக்கும்.

குறிப்பு.—இந்நோயில் இழியும் சிறு நீரை காய்ச்சிப் பார்க்கின் முட்டை வெண்கரு வெந்தபின் வெளுத்து உறைவதுபோல் உறை யும்.

**Albumen present in the Urine. This disease resembles acute Nephritis.**

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்

நோய் வரும் வழியில் கூறிய மாதிரி உணவாதி செயல்களால் கீழ் வாய்க்கனல் எழுப்பப்பட்டு கீழ்நோக்குங்காலையும், தீக்குற் றத்தையும் கேடடையச் செய்யும். இதுமீண்டும் மற்றக் குற்றங் களையும் தூண்டி கேடடையச் செய்யும். அதனால் இந்நோய் பெருகும்.

யோகிகளுக்கு ஆரம்ப நிலையில் இந்நோய் வருவதுண்டு. இள வயதினர்களுக்குக் குளிர் காற்று, ஈரம் முதலியவற்றால் ஐயம் பெருகியும் இந்நோயை விளைவிப்பதுண்டு. தீக்குற்ற மிகுதியால் குருதியும் உடல் வன்மையும் கெடும். ஐய மிகுதியால் உடல் வீக்கமும்; வளிகூடுவதால் வயிறு ஊதல் முதலிய குறி குணங்களை யும் பிறப்பிக்கும். (சி. ம.)

## நீர்.

சிறு நீர் அளவில் மிகவும் குறைந்து குருதி கூடிக்கருத்து எடையில் கனக்கும்.

## எரு.

எருவானது ஆரம்பத்தில் இறுகியும், அப்பால் நோய் முதிர முதிர இளகியும் கழியும். (சி. ம.)

குறிப்பு.—இந்நோய் தனித்து முண்டாகும் அல்லது மற்ற நோய்களுக்குத் துணை நோயாகவும் உண்டாவதுண்டு. நீர்க் குண்டிக்காய் தாபிதம், தமரகநோய், கயம், சன்னி, ஈரல் நோய், வைசூரி, மேகநீர், கிரந்தி, ஆறாத புண், புரை, பிளவை, பகந்திரம், வெள்ளை, வெட்டை, சுரம் முதலிய நோய்களில் காணலாம்.

இம்மட்டோடு, ''நீரருகல்'' சம்பந்தமான ஆறுவகை நோய்களைப்பற்றிக் கூறியுள்ளோம். இனிமேலாக ''நீர்பெருகல்'' நோய்களைப்பற்றிக் கவனிப்போம்.

## II. நீரினைப் பெருக்கல் நோய்கள் அல்லது மேகநீர் இருபது அல்லது

### 39. மேகநீர்

வேறு பெயர்கள்.—மேகநீர்; வெகுமூத்திரம்; நீரிழிவு; மிகுநீர்; தித்திப்பு நீர்; இனிப்பு நீர்; பிரமேகம்; நீர்ப்பாடு; மதுமேகம் முதலியன.

இயல்.—இயற்கைக்கு அதிகயளவில் அடிக்கடி சிறு நீரிழிதல்; ஏழு உடற்றாதுக்களும் வன்மை இழத்தல்; முதலிய இயல்புடைய நோயாம்.

#### நோய் வரும் வழி.

1. ''கோதையர் கலவி போதை
கொழுத்த மீனிறைச்சி போதை
பாது வாய் நெய்யும் பாலும்
பரிவுடனுண் பீராகில்
சோதபாண்டுருவமிக்க
சுக்கில பிரமேகந்தான்
ஓது நீரிழிவு சேர
வுண்டெனவறிந்து கொள்ளே.''

(அகத்தியர் 1200)

2. ''சரியாக மேகத்தாலபானவாயு
தான் புகைக்கு மேலேறிக்கபாலச்சூடாம்,
பெரிதான மேகத்தாலத்தி வெந்து
போமப்பாதசைவெந்து ரத்தம் வற்றிப்
பரிவாகித்தசவாயுவால் மந்தங்கொண்டு
பெருந்தீனி மலபந்தம் உதானவாயு
வரிவாகித் தேக மெலாம் விட நீராலே
மெய்யழிந்த மேக மென்ற திருபதாச்சே''

(சி.ம.)

என்பதினால், அளவு கடந்து நெய்ப்பு, இனிப்பு சுவையுள்ள பொருள்களை யுண்ணல்; மிகுதியாகக் கலவி செய்தல், எப்பொழுதும் மனம் நைதல்; உட்கார்ந்திருத்தல்; சோம்பித் திரிதல் முதலிய காரணங்களால் கீழ் நோக்குங்கால் மேல் நோக்குங்கால், பரவுகால் ஆகிய இம் மூன்று வாயுக்களும் மிகுந்து முதல் நிலையைத் தூண்டி (மூலாதாரம்) அங்குள்ள மூலைக்கனலை எழுப்பி இந்நோயைப் பிறப்பிக்குமெனச் "சித்த மருத்துவம்" கூறுகிறது.

குறிப்பு.

இங்ஙனம் "மேக நீர்" இருபதுக்கும் நோய் வரும் வழி (அதாவது காரணம்) கூறியிருக்கும் போது "மது மேகம்" அல்லது "இனிப்பு நீர்" என்னும் "நீரிழிவு" நோயைத் துண்டுபடுத்திக் கூறி, அங்கு அடியிற்காணும் காரணங்களை வசனமாகக் கூறியுள்ளார்கள்.

"மதுமேக நோயும்"; "மேகநீர் இருபதி" லடங்கியிருக்கிறதென்பது யாவரும் அறிந்த விஷயம். அப்படியிருக்க அதனை வேறுபடுத்தித் தனியாக சித்த மருத்துவத்தில் விளக்கியிருப்பதின் காரணம் தெரியவில்லை. ஒருக்கால் "மதுமேக" நோயின் முக்கியத்துவத்தை உத்தேசித்து பிரத்தியேகமாக "மதுமேக நோயை" மீண்டும் விளக்கியுள்ளார்களென நினைக்க வேண்டியிருக்கிறது.

எவ்வாறாயினும் மேகநீரிருபதுக்குக் கூறும் காரணங்கள் தான் மது மேக நோய்க்கும் பொருந்தும். ஆதலால் கீழ்க்காணும் நீரிழிவு நோயாகிய மேகநீரிருபதுக்கு முரிய பொதுக் காரணங்களைத் தெரிந்து கொண்டால் அவையே "மதுமேக" நோய்க்குமுரியதாகுமென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவும் அழற் குற்றத்தாலுண்டாம் ஆறு பிரிவு மேகநீர் நோய்களில் "தித்திப்பு நீர்" என்னும் மது மேகம் ஒரு பிரிவாகும் மென்பதை உணர்க.

(எம்.ஸ்.வி).

நோய் வரும் வழி (வேறு).

"நீரிழிவு நோயாகுமேக நீர்
வரும் வழியை நிகழ்த்தக் கேண்மோ,
நேர் நெய்பால் கள்ளிறைச்சி
சுவை மீன் வெறுப்புணவு நிறைந்த இனிமை;
சேருணவு வேகாத பொருள் மந்தப் பொருள்
ஈரஞ் சேர்ந்த சோறு,
செப்பு நேர்ய்வுயர் பெண்கள்
கூட்டுறவு மிகுபோகஞ் செறிந்ததூக்கம்,
ஆரிலாமையுமளவதில்லாதூக்க மிகு நீராக்கு முணவு,

ஐயமிகு பொருளுணவு நீர்பொருள் புத்தரிசி யரியவெல் லாம், பாரிதனிலுடல் பருத்திடல் பசித்தீ யொழிதல் பற்ற ருன்பயம், பயமிவைகள்ஆகு மென முன்னவர்கள் முதல் நூல் பகர்ந்ததன்றே.

என்பதினாலும், (கை எழு. பிரதி.)

(வேறு)

"உற்பவிக்கும் பால் நெய்யாலிறைச்சிகள்ளால்
உரிசையாம் மீன்றன்னாலருவிருத்த,
மற்பவிக்கும் பதார் த்தால் மதுர வஸ்தால்.
மந்தங்கள் தனைபொசித்தல் வேகாப்பண்டம்
குற்பவிக்குங்குளுந்த வன்னமங்கை கோஷ்டி
குறித்த நித்திரை தவிர் தலக்கினி மந்தம்
தற்பவிக்குஞ் சரீரந்தான் மிகப் பருத்தற்
சஞ்சலந்தான் மிகப்பயத்தால் தரிக்கும் நோயே"

என்பதினாலும்,

"சுருக்காக மேகம்வந்துற்பவிக்குந்தானே."

(யூகிமுனி சிந்தாமணி)

என்பதினாலும், நீரிழிவு நோயாகிய மேகநீர் உற்பத்திக்குக் காரணம் இன்னதெனக் கூறுமிடத்து; நெய், பால், கள், இறைச்சி, மிகச் சுவையுள்ள மீன் இவற்றை அதிகமாக உண்ணலாலும், வெறுப்பைத்தரத் தகுந்த உணவு, இனிப்புணவு, வேகாத பொருள், மந்தப் பொருள், ஈரம் சேர்ந்த சோறு இவற்றை அதிகமாக உண்ணல், நோவுள்ள பெண்களுடன் கூடுதல், மிகுபோகம், தூக்கமில்லாமை, காலவரை யில்லாத தூக்கம், சிறு நீரை மிகுதிப்படுத்தும் உணவு, புதிய அரிசி உணவு, வெல்லம் இவைகளை அதிகம் உண்ணல், உடல் பருத்தல், பசித்தீயொழிதல், துன்பம், பயம் முதலியவைகள் இந்நோய் உற்பத்திக்குக் காரணமென முன்னோர்கள் பழமையான சித்தர் நூல்களில் விளக்கியுள்ளார்கள். இக்காரணங்களே மேகநீரிருபதுக்கும், மதுமேக நோய்க்கும் பொருத்தமாகுமென்பதை ஞாபகப்படுத்திக்கொள்ளவும்.

(கை எழு. பிரதி.)

முற்குறி குணங்கள்.

இந்நோய் ஆரம்பத்தில் அளவு கடந்த பசி, நீர் வேட்கை எனும் குறிகளைக் காட்டி பசி கொண்ட அளவு புசிக்கினும் உடல் வன்மை பெருகாது. நாளுக்கு நாள் வன்மைகுறைந்து உடல் மெலி

யும். நீர் வேட்கையைத் தடுக்கப்பருகும் நீரின் அளவிற்கேற்ப சிறு நீர் இறங்குதல், தூக்கமின்மை, மனக்கலக்கம், பிசு பிசுத்த வியர்வை, இளைப்பு, பெரு மூச்சு, மயக்கம் என்னும் முற்குறி குணங்களைக்காட்டி நோய் வன்மை பெறும்.

(சி.ம.)

நோய் எண்.

1. ''உட்டிணரோகத்தாலும் உறும்பெரும் பசியினாலும்
கட்டவிழ் கோதை மாதர் கலவி மட்டிலாமையலாலும்
முட்டறாநாலுமாறு மும்மூன்றுமொன்று மென்று
இட்டமாய் வருவதென்று திருமுனியருளிச் செய்தார்.''

(அகத்தியர் 1200)

என்பதினாலும்,

(வேறு).

2. ''வசனித்த மேகமதுயிரண்டுபத்து
வாதத்திற் பிறந்தசலம் நாலேயாகும்
பிசனித்த பித்தத்திலுற்றபவித்த
பேரானசலந்தானுமாறு மாகும்
தெசனித்தசேட்டுமத்திலுற்பவித்த
சீரான சலந்தானும்பத்தேயாகும்,
இசனித்ததிதினுடைய குணுகுணங்க
ளொழிலான உற்பத்தியியம்பக்கேளே''.

(யூ. சி. சிந்தாமணி.)

என்பதினாலும்,

(வேறு—வெண்பா.)

3. ''நீரிழிவு நோயை நிகழ்த்துவர் மேக மென்றே
நாராழியுமஃதுவளி நான்காகச்—சாரழிந்த
பித்த நீராறுகப் பேரையம் நீர் பத்தாம்,
மொத்தமிருபான் மொழி''.

(கை-எழுத்து-பிரதி.)

என்பதினாலும், நீரழிவு நோயை மேகநீர் நோய் என்று வழங்கு வதும், அஃது வளிக் குற்றத்தால் பிறப்பன நான்கு, அழற் குற்றத்தால் பிறப்பவை ஆறு, ஐயக்குற்றத்தால் வருவன பத்து, ஆக மொத்தம் இருபது பிரிவுகளென மேக நீர் நோயை வகுத்துள் ளார்கள்.

**I. வளிக்குற்றத்தால் வரும் மேக நீர் நோய் நாலு பிரிவுகளுக்கும் பெயர் கூறுகிறார்**

1. "தரித்திட்ட வாதத்தின் சலந்தானாலு
தனியான நாலுக்கும் பேரேதென்னில்,
அரித்திட்ட ஆச்சிய கந்திமேகத்தோடு
அதன் பிறகு சுத்தமாமேக மொன்று
பிரித்திட்ட பிரமியமாமேக மொன்று
பேரானமாங்கி சசிராவிமேக மொன்று
குறித்திட்ட விதுவாத சலந்தானாலு
குணாகுணத்தினுட்ப மெல்லாங் குறிப்பாய்க் கேளே."

(யூகி முனி சிந்தாமணி.)

(வேறு).

2 "தரித்திட்ட வாதத்தின் சலந்தானாலு
தனியான நாலுக்கும் பேரேதென்னில்,
அரித்திட்ட நெய் மணமேகத்தோடு
அதன் பிறகு கோசலமா மேகமொன்று,
பிரித்திட்ட வூன் மணமாமேகமொன்று
பேரான இளமறிக் கொழுப்புமேக மொன்று
குறித்திட்ட விதுவாதசலந்தானாலு
குணாகுணத்தினுட்ப மெல்லாங் குறிப்பாய்க்கேளே."

(கை-எழுத்து-பிரதி.)

என்பதினாலும், வளிக்குற்றத்தால் வரும் மேக நீர்ப் பிரிவு நாலுக்கும் பெயர்களாவன:—

1. நெய்மண நீர் (ஆச்சியகந்தி மேகம்),

2. பசு நீர் மணநீர் (சுத்த மேகம்),

3. ஊன் மணநீர் (பிரமிய மேகம்),

4. இளமறிக் கொழுப்பு மணநீர் (மாங்கிசசிராவி மேகம்). என்பவையாம்.

**வளிக்குற்றத்தால் வரும் மேக நீர் நாலுக்கும் பொதுக்குறி குணங்கள் கூறுகிறார்.**

1 "ஆச்சென்ற நாலுக்குங் குணத்தைக் கேளாய்
யழகான கைகால் கண்ணுடலழற்றும்,
நாச்சென்ற நாவறளும் பல்லுநாக்கு
நடுத்தொண்டை கறுப்பேறு முதலெட்டாந்தான்,
பேச்சென்ற பிலக்ஷயமாங்கண் மேல்நோக்கும்
பெருகவன்னந் தண்ணீரு மிகவே வாங்குந்
தாச்சென்ற சரீரந்தான் கத்திவெட்டுத்
தான்போலக்கடுத்து மே தழலுண்டாமே."

(யூகி சிந்தாமணி).

என்பதினாலும்,

2. "தழலாக வெதும்பியே மயக்கமாகுஞ்
சஞ்சலமாமிடை கொடாதே புரட்டும்,
அழலாக யடிக் கடிக்குவாயுதானு,
மாகாத நாற்றமாய்ப் பிரியுமெத்த,
குழலாக நாடியே குடிலமாகக்
குணபேதமாய் நடக்கும் வேகமெத்த
வழலாகவாத மேகந் தனக்கு
வகுத்த முறைபாடுதானுலு மாச்சே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினாலும், வளிக்குற்றத்தாலுண்டாகும் மேக நீர் நோயில் பொதுவாகக் கை, கால், கண், உடல் இவைகள் அழல் போல் எரியும், நாவறளும். பல், நா, தொண்டை இவை கறுத்திருக்கும், பேச்சுவன்மை குறையும், கண்கள் மேல் நோக்கும், அடிக்கடி பசியும், நீர் வேட்கையுமுண்டாகும், உடல் முழுமையும் கத்தியால் வெட்டப்படுவதுபோல் வலி எடுக்கும், இத்தியாதி, குறி குணங்களைக் காட்டும்.

(சி. ம..)

அன்றியும் மேற்கூறியபடி உடல் முழுமையும் குத்தலும், எரிச்சலு முண்டாகி, வெதும்பி, மயக்கம், மனசஞ்சலம், புரளல், சூடாயும், நாற்றமாயும் அடிக்கடி வாயுபரியும், நாடிகள் குடிலமாகவும், குணபேதமாகவும், வேகமாகவும் நடைபெறும் எனவும் கூறியுள்ளார்.

(யூகி முனி.)

**வளி நீர்கள் பற்றிய பொதுக் குறி குணங்கள்.**

(வேறு.)

1. '' வளியால்வரு நீர் நான்கினில்
வருந்தன்மை கேளாய்
வருகைகால் கண்ணுடலாமழல்
வன்பல் நா நடுத் தொண்டை,
கொழுமாச் சுவை நாவுங்கரி
கூடும் வறள் நாவாம்,
கூர்ந்தேயுணு சோறு முறக்
குடிக்கும் நனிநீரை
இளைப்பாமுடல் நவியத்தினை
யெடுத்தே யடித்ததுபோல்,
எய்துங்கடுப்பது சஞ்சல
மேறுஞ் சுரமயக்கம்,
வளிகீழ்வாயின் வாங்குங்கெடு
மணமாய்ப்பல புரளல்,
வளுடி கள்குடிலங்குண
மாறுந்துடி பெறுமே.''

(கை-எழுத்து-பிரதி.)

என்பதினால், முன்கூறியது போலவே இச்செய்யுளும் பொருள் படும். அதாவது கைகால், கண், உடல் இவைகள் எரிதல்; பல், நா, தொண்டை இவை கருத்தல்; நாவறளல், உணவும், நீரும் அதிகமாகக் கொள்ளல்; உடல் மிகவும் இளைத்தல்; உடலில் கத்தியால் வெட்டுவதுபோல் கடுத்தல்; மன சஞ்சலம்; சுரம் காய்தல்; மயக்கம்; நாற்றத்தோடு அடிக்கடி வாயு பரிதல்; புரளல்; நாடிகள் குடிலமாக (i.e. குவிதல் போல்) நடத்தலும், நாடி நடையும் குணமும் வேற்றுமையடைதலுமாகிய குறிகுணங்களைக் காட்டும் என்பதாம்.

## வளிநீர்கள் ஒவ்வொரு பிரிவின் குறி குணங்கள்.

### 1. நெய் மணநீர்.

1 "குறிப்பாக ஆச்சிய கந்திசல மிறங்கும்போது
குணமான நெய்போலத் தானிறங்கும்
நெறிப்பாகச் சீலை தோய்த்துக் கொளுத்தில்
நேரான விளக்குப்போலெரியும்பாடு,
தெறிப்பாகத் தினமொன்றிற் குறுணிதானுஞ்
சீக்கிரமாயி றங்கி விடுந்தேகம் வாடும்
எறிப்பாக மேகங்கண்டேழு நாட்குள்
எய்துவா ரெமபுரத்தி லெய்துவாரே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், ஆச்சியகந்தி மேகம் என்னும் நெய்மணநீர் நோயில் சிறுநீர் நெய்யின் மணத்தையும், பிசுபிசுப்பையும் பெறும். இந்நீரைச் சீலையில் தோய்த்துத் திரியாக்கி விளக்கேற்றின் நெய் விளக்குப் போல் எரிவதுமல்லாமல், அம்மணமும் பெற்றிருக்கும் இறங்கும் நீர் மிகுதியாய்க் காணும, உடல் வாடிக் கொண்டே வந்து நோய் கண்ட ஏழு நாட்களுக்குள் நோயினனைக் கொல்லும் என்பர்.

(சி.ம.)

(வேறு).

2 "வளியால் வருநீர் நான்கினில்
வருநெய் மணநீர்த்தன்மை,
வந்தேவிழு நாளொன்றினில்
மருவும்படி நான்காய்
களியோ விலை விரைவாயிழி
கணக்கைக் கணிற் காணின்
காணீர் நெய்யின் மண நாறுதல்
யன்றன்னெயினெய்ப்பாம்,
ஒளியாததை துணியாற்றிரி
வேய்ந்தே யனற் கொழுவின்,
ஒளியா தெரிந்தணையுமிது
கண்டானுடலுடனவ்.

வளியா மொரு வழியாலொரு
வனத்தால் மிகவாடி,
வருநாட்களுமோ ரேழினிற்
மண்ணிற் பிரிவானல்.''

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினால், நெய் மண நீரானது நாள் ஒன்றுக்கு நாலு படி நீராக யளவில் மிகுந்த விரைவாக யிறங்கும். அந்நீர் நெய் யின் மணம் வீசும். நெய்ப்புத்தன்மையுமுண்டு. அந்நீரைத் துணியில் நனைத்துத்திரித்து கொளுத்தினால் நன்றாய் எரிந்து அணையும். இந்நோயினது உடல் அவ்வாயுவாலும், நீர் அதிக மிறங்குவதாலும், மிகவும் இளைத்து ஏழு நாள்களில் மரண மாவான் எனவும் கூறலுற்றார்.

(கை எழுத்துப் பிரதி.)

## 2. பசுநீர் மணநீர் (சுத்த மேகம்).

1. ''எய்துவார்சுத்தமாமேகந்தானு
மிறங்குமேகோசலம் போல் வன்னமாக,
நைதுவார் நாற்றமுமப் படியேயாகும்
நானாழிதானிறங்கு மொருவேளைக்குக்,
கைவார்காய்ச்சினால் விளக்குத்தானுங்
கடுந்துலக்கமா யெரியுங்களைமெத்தாகும்,
பைதுவார் பதினைந்து நாளிற் கொல்லும்
பாலன் போலிருந்தமுகம் கிழமுமாமே.''

(யூகி சிந்தாமணி.)

என்பதினல் சுத்த மேகம் என்னும் பசுநீர் மணநீர் நோயில் இழி யும் சிறுநீர் பசுவின் நீர் போலிருக்கும். அதன் மணமும் பெறும். நாளொன்றுக்கு நாலுபடி யளவாக நீரிறங்கும். இந்நீரையும் சீலையில் நனைத்துக் கொளுத்தினால் எரியும். பசுநீர் மணமும் வீசும். உடல் மெலியும். சோர்வுண்டாகும். நோய் கண்ட பதினைந்து நாளிற் கொல்லும் என்பர்.

(சி. ட.)

(வேறு)

'அரியால் வருநீர் நான்கினில்
ஆநீர்புரை நீர் கேள்
அடுத்தே வெளிப்படும் வேளையில்
யளவேபடி நான்காய்
வருமே சிறுநீராவி நீர்
மணமாய் நிறமஃதாய்,
வணியிற்றிரி கொளுவினஃ
தெரியுமிகு வொளியாய்,
புரியோர் பெருநோன்பால் வரு
முடலமஃதிளைப்பைப்,
பூண்டேனனிகளை யாமியே
நிறம்போய் மறுநிறமாய்,
அரிபோலழகா மிளமுகம்
போய்க் கிழ முகமாம்,
அன்னோய்ப் பதினைந்தாம் பகல்
அழிவே செய்யு மென்றுணரே.''

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினால், ஆநீரையொத்த நீரானது நாளொன்றுக்கு நாலு படி யளவாகியிறங்கும். பசு நீரின் மணத்தையும் நிறத்தையும் ஒத்திருக்கும். அந்நீரைத் துணியில் நனைத்துத் திரியாக்கிக் கொளுத்தினால் மிக்க ஒளியாய் எரியும். உடல் இளைக்கும் களையுண்டாகும். அந்நோயினனின் இயற்கை நிறமாறி வேறு நிற மாகும். பொன் போல் அழகுள்ள இளமுகம் கிழமுகமாகும். இந்நோயினன் நோய் கண்ட பதினைந்து தினங்களில் இறப்பான் என்பதாம்.

(கை எழுத்துப் பிரதி.)

3. ஊன் மணநீர் (வாதப் பிரமியமேகம்).

1. '' கிழமாகப் பிரமியந்தானிறங்கும்போது
கேவலமாங் கொழுப்பான மாமிச நாற்றம்,
பழமாக வேளைக்கு நாளாழி தானும்,
பருந்து தானிறங்குமே யடிக்கடிக்கு,
அழமாக யந்த நீர் காய்ச்சினக்கால்
யதின் வாடை தேன் போலத்தானிருக்கும்,
இழமாக யிப்படித்தான் கண்டமேக
மெமபுரத்துக்கறுமாதத்தினிற்றானேகும்.''

(யூகி சிந்தாமணி.)

என்பதினால் வாதப் பிரமிய மேகம் என்னும் ஊண் மணநீர் நோயில் சீழ் போலச் சிறுநீர் நாளொன்றுக்கு நாலுபடி யளவாக இறங்கும். அஃது கவிச்சு நாற்றம் பெறும். அதனைக் காய்ச்சின் தேன் போல் மணம் வீசும். இந்நோயினன் ஆறு மாதங்களிற் சாவான் என்பதாம். (சி. ம.)

(வேறு)

2. " காலால் வருநீர் நான்கினில்
ஊனின் மணநீர் காண்,
காலாவஃதொரு வேளையில்,
படி நானிறை காணும்,
மேலாமஃ தேலுங்கொழுப்
பூனின் மணமேவும்,
கோலாவடிந்தேனே மணம்
மதியாறினிற் கொல்லுமே."

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினால், ஊன் மணநீரானது, நாளொன்றுக்கு நாலுபடி யளவாக இறங்கும். அந்நீர் கொழுப்புள்ள இறைச்சியின் மணம் வீசும். அந் நீரைக் காய்ச்சினால் தேன் மணம் வீசும். இந்நோயினன் ஆறு மாதங்களிற் சாவான் என்பதேயாம்.

(கை எழுத்துப் பிரதி.)

குறிப்பு.—"பிரமிய மேகம்" என்ற சொல் இருப்பதால் "சீழ் நீர்" எனச் சித்த மருத்துவத்தில் பொருள் கூறியுள்ளார் போலும். ஞாயமாக நீரின் மணத்தைக் கொண்டு " ஊன் மணநீர்" என்று மற்ற நூலாசிரியர்கள் அழைத்துள்ளார்கள். சீழ் இருப்பதாகச் செய்யுளில் காணவில்லை. இதனை வாத பிரமிய மேகம் என்பர்.

4. இளமறிக் கொழுப்பு மணநீர் (மாங்கிச சிராவி மேகம்).

1. " ஏகுமேமாங்கிச சிராவி இறங்கும்போது
இளவாட்டின் கொழுப்புப் போற்றானிறங்கும்,
ஆகுமே காய்ச்சினாலாட்டி னெய் போல்
அடவாக வேளைக்குக்குருணி காணும்
காகுமே சருப்பஞ்சார் போல நாறுங்
கனத்துத்தான் மூன்றுநாள் எட்டு நாளில்,
சாகுமே யைந்தாமாதத்திற் றானுஞ்
சதுர்விதமாம் வாத சலந்தானுமாச்சே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், மாங்கிச சிராவி மேகம் என்னும் இளமறிக் கொழுப்புமண நீர் நோயில், நீரப்புழை, நீர்ப்பை, இவ்விடங்களி லுள்ளசதை, சவ்வு முதலியவைகள் இற்றுச் சிறு நீருடன் கலந்து, ஆட்டுக்குட்டியின் கறியை கழுவிய நீர் போல வேளைக்குக் குறுணியளவாக இறங்கும். இந்நீரைக் காய்ச்சின் ஆட்டு நெய் யின் நிறத்தையும், புளித்த கருப்பஞ்சாற்றின் மணத்தையும் ஒத் திருக்கும். இந்நோய் கண்ட மூன்று நாள் அல்லது எட்டு நாள் களுக்குள் நோயினன் இறப்பான். தவறின் ஐந்தாம் திங்களில் இறப்பது திண்ணம்.

(சி. ம.)

(வேறு).

2. "காற்றால் வரும் நீர் நான்கினில்
இளவாட்டினிற் கொழுப்பாய்க்,
கண்டே யிழிநீர் வேளையிற்
காணும்படி நான் காய்,
போற்றாவதைக் காய்ச்சின்மறி
நெய்போனிறம் பூணும்,
புகல்வார் கருப்பஞ்சாறடு
மணமும் பெறு மென்றே,
ஆற்றா திவன் படும் பாடதை
யறைவா ரெவரம்ம!
அன்னோய் புரிதுன்பங்களை
யவையே யெனலாமோ?
எற்றாவிவ னொரு மூன்றினில்
யன்றெட்டெனு நாளில்,
இறப்பானஃதிலையே லறு
திங்கட்ககலானே."

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினால் இளவாட்டுக் கொழுப்பு மண நீரானது நாளொன் றுக்கு நாலுபடி யளவாக இறங்கும். அந்நீரைக் காய்ச்சினால் ஆட்டு நெய்போல் நிறங் காணும். கருப்பஞ்சாற்றின் மணமும் வீசும். இவனது துன்பங்களை யாரால் எடுத்துக் கூற முடியும்? கூறவே இயலாது. இந் நோயினன் அத்தகைய கொடிய துன்பங் களை அனுபவிப்பான் என்பதாம். இந்நோயினன் மூன்று அல்லது எட்டு நாட்களில் இறப்பான். தவறின் ஆறு திங்களில் இறப்பான் எனவும் கூறியுள்ளார். இதனை "மாமிச சிராவி மேக நீர்" எனக் கூறுவர்.

(கை எழுத்துப் பிரதி.)

## அழல் குற்றத்தால் பிறக்கும் ஆறு பிரிவு மேகநீர் நோய்களாவன :

1. " முறையான பித்தசலமாறு மொழியக் கேண்மோ
முதிர்ந்த யானை மதமேக மொன்று கற்றாழை
தறையான மணமோடு சுண்ணமண மேகமொன்று
தக்கதோர்தித்திப்பு மேகம் பளிங்கு மேகமொன்று,
மறையான முயற்குருதி மேகம் மகத்தான மேகந்தன்னை
மகதேவர் சொல்லிடவே தேவி கேட்க
துறையான குணாகுணத்தை விரித்துச் சொல்ல
சுத்தமாய் யொவ்வொன்றின் சொரூபங்கேளே."

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினால், அழல்குற்றத்தால் பிறக்கும் நீர்களாவன:—

1. யானை மத நீர் (அப்பிய மேகம்).
2. கற்றாழை மணநீர் (பித்தப்பிரமிய மேகம்).
3. சுண்ணமண நீர் (சவ்விரண மேகம்).
4. தித்திப்பு நீர் (மது மேகம்),
5. பளிங்கு நீர் (சாந்திர மேகம்),
6. முயற் குருதி நீர் (ஆர்க்க மேகம்), என்பவையாம்,

(வேறு-கை எழுத்துப் பிரதி.)

2. " முறையான பித்த சலமாறுமாகு
முதிர்ந்த அப்பிய மென்றும் பிரமிய மென்றும்,
தறையான சவ்விரண மதுமேக மென்றுந்
தக்கசாந்திர மேகம் ஆர்க்க மென்றும்,
மறை யான விந்தாறு மேகந்தன்னை
மகதேவர் சொல்லிடவே தேவி கேட்க்த்
துறை யான குணாகுணத்தை விரித்துச் சொல்ல
சுத்தமாயப்பியத்தின் சுருபங் கேளே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், மேற்கண்ட இரண்டு விதச் செய்யுள்களும் கருத்தும் ஒன்றேயாகும். பெயரளவில் சற்று வித்தியாசமுண்டு. அவற்றின் பெயர்களை மேலே குறிப்பிட்டுள்ளோம்.

அறியவே பித்தசலமாறு மேதா
னங்க மதிற்செய்கின்ற குணத்தைக் கேளாய்,
தறியவே யுடல்வற்றி யெரிவுண்டாகுஞ்
சடத்திலுந்தான் நீரிலுந்தான் கவிச்சுண்டாகுந்,
தெறியவே சீப்போலுங் கற்றாழை போலுஞ்
சேல்போலுந் தேன்போலு நாற்ற முண்டாம்,
வெறிய வேபீசத்திற் கோசத்திற் குத்தல்,
மிகுமீரல் நாபியிலும் வேக்காடாமே.''

2. ''வேக்காடாய் விரணமுண்டாய் வாய்தானாறும்
விக்கலோடு அருதியாய்ச் சுரமுண்டாகும்,
தீக்காடாய் தேகந்தான் கிடக்கொட்டாது
தியக்க மொடு மூர்ச்சை யுண்டா மயக்கமாகுஞ்,
சாக்காடாய் நாவறளுங் கண்ணீர் தாகஞ்
சர்த்தியொடு சரீரமெல்லாந் தளர்ச்சி யாகுந்,
தாக்காடாய் மலசலந்தான் மிக வுண்டாகுஞ்
சமகுணந்தான் பித்தசல மாறுமாச்சே.''

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், அழல் குற்றத்தாலுண்டாம் மேக நீர் நோய்களின் பொதுக்குறி குணங்களைக் கூறுமிடத்து; உடல் முழுமையும் வெப்பு உண்டாய் எரிச்சல்; உடல் வறண்டு சுருங்கல்; உடல் வியர்த்தல், அவ்வியர்வையும் சிறு நீரும் கவிச்சு நாற்றம் வீசுதல்; இழியும் நீர் சீழ்போலும், சேல் மீன் போலும், தேன் போலும், கற்றாழை நீர் போலும் இருத்தல்; நீர்ப்புழை, விரை, ஈரல், உந்தி இவ்விடங்களில் வேக்காடு உண்டாதல், விரையிலும் ஆண் குறியிலும் குத்தல் முதலிய குறி குணங்களைத் தோற்றுவிக்கும்.

அன்றியும், மேற்கூறிய பிரகாரம் வேக்காடு உண்டாகிப் புண்பட்டு, வாய் நாற்றம், விக்கல், சுரம், உடல் எரிவு, தேகம் அமைதியின்மை, தியக்கம், மூர்ச்சை மயக்கம், நாவறட்சி, கண்ணீர் வடிதல், தாகம், வாந்தி, உடல் தளர்ச்சி, மலசலம் அதிகம் வெளியாதலாகிய குறிகுணங்களையும் உண்டாக்கும் என்பதாம்.

(வேறு)

3 ''பித்த நீராறினில் சேர்பொதுக்குறித்
தன்மை பேசுங்காலை,
பெரிதான வுடல்வற்றல் எரிதல்
விரையாண் குறியில் பின்னிக்குத்தல்,

உற்றவுடல் நீர் கவிச்சுறுதல்
சீப்போலவு முறுகற்றாழை,
யோது சேல்தேன் போலு மிக்க
நாற்றம் வீசலுந்தி ஈரல்
மெத்தவும் புண்ணாகி வாய் நாறல்
விக்கல் சுவை மிகவுமாறல்,
மேலிடுவாந்தி நீர்மல மிகுதல்
நீர்வேட்கை மேவுசுரமாம்,
சுத்தமாய் படுக்கொணா மயக்கமொடு
தியக்க முஞ்சூழு மூர்ச்சை,
சொன்னாவரட்சி யுறலுடல் தளரல்
யிவை யெலாஞ் சொல்லலாமே.''

(கையெழுத்துப்பிரதி.)

என்பதினால், மேலேகூறிய பொதுக்குறி குணங்களையே பெரும்பாலும் இச்செய்யுளிலும் விளக்கியுள்ளார். அதாவது, உடல் வற்றிப்போதல், எரிவுண்டாதல், விரையும் ஆண் குறியும் கடுத்தல், உடலும் சிறு நீரும் கவிச்சு நாற்றம் வீசுதல், சிறு நீரானது சீழ் போலும், கற்றாழை நீர் போலும், சேல்மீன் கழுவிய நீர் போலும், தேன் போலும் இருத்தல், உந்தியின் உள்ளிடம், ஈரல் இவை மிகவும் புண்ணாகி, அதனால் வாய் நாற்றம், விக்கல், சுவைமாறல், வாந்தி மிகல், நீரும் மலமும் அதிகமாய்க் கழிதல், நீர் வேட்கை, பல முறையும் நீர் மிகுதியாகக் குடித்தல், சுரம், படுக்கை பொருந்தாமை, மயக்கம், உள்ளக் கலக்கம், மூர்ச்சை. நாவறளல், உடல் தளரல் என்னும் குறிகுணங்களைத் தோற்றுவிக்கும் என்பதாம்.

### அழல் குற்றத்தாலுண்டாம் மேக நீர் ஒவ்வொரு பிரிவின் குறி குணங்கள்.

1. யானை மத நீர் (யானைக் கொழுப்பு மண நீர், அப்பிய மேகம்.)

1. '' சுருவமாயப்பியந்தாணிறங்கும் போது,
துடியானை மதம் போலத்தாணிறங்கும்,
வெருவமாய் வேனைக்கு நானாழிதானும்,
விரிசாகத் தாணிறங்குங் காய்ச்சினக்கால்,

உருவமாயு வர்மண் போறபடியும் பாரு,
உக்கிரமாய்க் கண்ட வெட்டா மாதந்தன்னில்,
இருவமாயெம புரத்துக்கெய்துவார்கள்,
ஏற்றமாமப் பியத்தின் மேகந்தானே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால் அப்பிய மேகம் என்னும் யானைக் கொழுப்பு மண நீர் நோயில் இழியும் நீர் யானையின் மத நீரைப் போல் குழப்பி வேளைக்குப் படிக்கணக்கிலிறங்கும். இதனைக் காய்ச்சின் நீர் அடியில் உவர் மண் போல் படிந்திருக்கும். நோய் கண்ட எட்டு திங்களில் நோயினன் இளமை யாகயிருந்தாலும் எட்டு திங்களில் மரணமாவான் என்பதாம்.

(சி. ம.)

(வேறு)

2 '' தீயால் வரு மறு நீரினில் திகழ் யானையின் மதனீர்,
ஏயாவிரைந்தஃ தேயென வேளைப்படி நான்காம்,
மாயாவிக தட்டாலுவர் மண்போலடிப்படியும்,
சையாமிவன் எண் திங்களில் சேர்வான் நமனுலகே.''

(கையெழுத்துப்பிரதி.)

என்பதினால் யானை மத நீரானது மேலே கூறியது போலவே அதிக விரைவாக யானையின் மத நீரைப் போல நாளொன்றுக்கு நாலுபடியளவாக இறங்கும். இந்நீரைக் காய்ச்சினால் அடியில் உவர் மண்ணைப் போல் படிந்திருக்கும். நோயாளி இளமை யாயினும் எட்டு திங்களில் சாவது திண்ணம் எனவும் கூறியுள்ளார்.

(கையெழுத்துப்பிரதி.)

2. கற்றாழை மணநீர் (பித்தப்பிரமிய மேகம்)

1 '' தானென்ற கற்றாழஞ்சாறு போலுந்,
தன்னாற்றம் போலவே மிகவே நாறுங்,
கானென்ற காய்ச்சினாற் கடிதா நாற்றங்,
கடிகைக் குளிரு நாழி தானிறங்கும்,
ஏனென்றயிக் குணமா மேகந்தானு,
மிறங்கின தோர் மூன்றாகுமாண்டு தன்னில்,
பானென்ற பரமபதமெய்து மென்று,
பரமனுரை பித்தப் பிரமியப் பண்புதானே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால் பித்தப் பிரமியமென்னும் கற்றாழை மண நீர் நோயில் சிறு நீரானது கடிகைக்கு இரண்டு படியளவாகவும், கற்றாழை நீர் போலும், அதன் நாற்றத்துடனுமிறங்கும், அந் நீரைக்காய்ச்சின் மிகுந்த நாற்ற முள்ளதாய்க் காணும், இந் நோயினன் நோய் கண்ட மூன்றாம் ஆண்டில் மரணமாவான் என்பதாம். (சி.ம.)

(வேறு.)

2 '' கனலால் வரும் நீராறினில் கற்றாழையின் மண நீர்,
எனமாமொருகடி கைக்கஃ திருநாழியாயிறங்கும்
வினவாயஃ தணுமே நிற மேவுமதன் மணமும்,
கனலாலடின் கடிநாறுறும் மூவாண்டுயிர்க் கணக்கே.''

(கையெழுத்துப்பிரதி.)

என்றதால் முன் கூறியது போலவே கற்றாழை மண நீரானது ஒரு நாழிகைக்கு இரண்டுபடி, யளவாக நீரிறங்கும், அந் நீர் கற்றாழைச் சாற்றின் நிறத்தையும் மணத்தையும் பெற்றிருக்கும். அந்நீரைச் காய்ச்சின் கொடிய நாற்றமாய் நாறும், இந் நோயினன் மூவாண்டு சீவிப்பது அரிது எனவும் கூறியுள்ளார்.

(கையெழுத்துப்பிரதி.)

### 3. சுண்ண மண நீர் (சவ்விரண மேகம்.)

1 '' பண்பாகச் சுண்ணாம்பு வழலே நாறும்,
படியுமேயடிதனிலே நீறுபோல,
நண்பாக வேளைக்கு நானாழிதானும்,
நாறியே விறங்கு மிக வெறும்பரிக்குங்
கண்பார்க்கக் காய்ச்சினாற் சுண்ண நீறுங்,
கனமாகப் படியுமே யடியிற்றானுந்,
தண்பாகக் கண்டசல மிரண்டா மாண்டிற்,
சாகுவரேசவ்விரணத் தாண்மைதானே.''

(யூகி சிந்தாமணி.)

என்றதால் சவ்விரண மேகம் என்னும் சுண்ண மண நீரானது வேளைக்கு நாலுபடி யளவாகவும், சுண்ண நீர் போன்ற மணத்தையும், காரத்தையும் பெற்றிருக்கும். நீரைக் காய்ச்சின் அல்லது காய்ச்சாவிடினும், அடியில் சுண்ணாம்பு படிந்தும், மேல் பாகம் தெளிவாகவும் காணும், நோய் கண்ட இரண்டாம் ஆண்டிற் கொல்லும் என்பதாம். நீரில் எறும்புகள் மொய்க்கும்.

(வேறு)

அழலால் வரும் நீராறினில் யாகுஞ் சுண்ண மண நீர்,
யளவே யொருவேளைக்கஃதாகும்படி நான்காய்,
கழறும் பொருள் மணமுமதன் காரம் பெறு முறையில்,
காய்ச்சாததை விடினுந் தழல் காய்ச்சிப் பிறகதனின்,
பழகுனிலை கண்டாற் கடர்த்தடியிற் சுண்ண நீராய்ப்,
படியும் வண்டற் புரையக் கனமாகப்படி நீரில்,
பழகுஞ் சிறு பெரிதாமெறும்புகள் சூழ்ந்து பருகப்,
பார்ப்பாயிவனீராண்டினிற் பார் நீப்பவனாமால்.''

(கைஎழுத்துப்பிரதி.)

என்றதால் முன் கூறியது போலவே கற் சுண்ண நீரானது வேளைக்கு (நாளொன்றுக்கு) நாலுபடி யளவாக நீர் இறங்கும். அந்நீர் சுண்ணாம்பின் மணத்தையும் காரத்தையும் ஒவ்வொரு தடவை இறங்கும் போதும் அடைந்திருக்கும். காய்ச்சினாலும் காய்ச்சா விட்டாலும் அந்நீரினடியில் சுண்ணாம்பு நீறுபோல், படிந்திருக்கும். அது வண்டல் போலக் கனமாகக் காணப்படும். அந்நீரில் எறும்புகள் சிறிதும், பெரிதும் சூழ்ந்து பருகுவதற்கு மொய்த்திருக்கும். இந்நோயினன் இரண்டாவது ஆண்டில் உயிர் துறப்பான் என்பதாம். (கை எழுத்துப் பிரதி.)

## 4. தித்திப்பு நீர் (இனிப்பு நீர், மது மேகம்.)

1 '' தண்மையாய்ச் சலந்தானும் பசுப்பு மஞ்சள்,
தானிறங்கும் பீசமுங் கோசமுங் கடுக்கும்,
அண்மையாயடிக்கடிக்கு நீரிறங்கு,
மடிக்கடிக்கு அரைநாழி தனிலே காணும்,
வெண்மையானதடியதனிற்றான் பிடிக்கும்,
மிக்கான சடம் வெளுத்து மேனி கன்றும்,
பண்மையாய்ப் பஞ்சவாண்டதனிற் கொல்லும்,
பகர்கின்ற மது மேகத்தின் பாங்குதானே.''

(யூகி சிந்தாமணி.)

என்பதினாலும்.

(வேறு.)

2 '' நெருப்பால் வரும் நீராறினில் தித்திப்பிது நீர்கேள்,
அரிப்பாயடி கடிக்காற்படி யரிதேன் பசு மஞ்சள்,
தரிப்பாமடி வெண்மையைக் குறி சாறு விதைகடுப்பாம்,
இறுப்பாமுடல் வெளுப்பா மிவனிறப் பாண்டைந்திதறியே

(கை எழுத்துப்பிரதி.)

என்பதினாலும், மது மேகம் என்னும் தித்திப்பு நீர் நோயில் நீரானது அடிக்கடி (அரை நாழிகைக் கொருமுறை) நீர் சற்று குறைந்து கால்படியளவாக இறங்கிக் கொண்டிருக்கும். நீரின் நிறம் பசு மஞ்சள் போலிருக்கும். தேன் போல் சுவையிருக்கும் நீரைக் காய்ச்சின் தேன் மணம் வீசும். அந்நீரை ஒரு கடத்தில் பிடித்துத் தெளிய வைத்துப் பார்த்தால், அடியில் வெண்மை நிறத்துடனும் பிசு பிசுப்புடனும் படிந்திருக்கும். ஆண் குறியும் விதையும் கடுக்கும். உடல் நாளுக்கு நாள் வெளுப்பாகும். இவன் இறப்பது ஐந்தாண்டில் என அறிந்து கொள்ளவும் என்பதாம்.

### 6. பளிங்கு நீர் (சாந்திர மேகம்.)

1 "பாங்கான பளிங்கு நிறம் போலிறங்கும்,
பரிபீச கோசமுமே கடுத்துக் கூசுந்,
தாங்கான தாழையோடு விழுது சாறு,
தனைப் போலத் தானிறங்கும் காய்ச்சிக்காணில்,
தேங்கான சீப்போல மிகவே நாறுஞ்,
சீக்கிரமாய் வேளைக்கு ஓர்படி தானாகும்,
ஏங்கானவிப்படித்தான் கண்ட சாந்திர
மெய்திடுமே ஐந்தாண்டில் சாத்தியந்தானே."

(யூகி சிந்தாமணி.)

(வேறு.)

2. "வனியால் வருநீராறினில் வருநீர்ப்பளிங்கது கேள்,
தனிவேளையிற்படி யந்நிறம் தாழை விழுதுகுநீர்ப்
புனைவாங்குறி விரைநோய் சீப்போனாறிங்காய்ச்சின்
இனநோயினனைந்தாண் டினிலேகுமெமனுலகே."

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினாலும், சாந்திர மேகம்என்னும் பளிங்கு நிற நீர், நோயில், நீரானது பளிங்குநிறம் போலாவது, தாழைவிழுதுச்சாறு போலாவது வேளைக்கு ஓர் படி வீதம் இறங்கிக் கொண்டிருக்கும், ஆண் குறியும், விரையும், கடுக்கும், அந்நீரைக் காய்ச்சின் சீழ் நாற்றம் நாறும், சீழ் போலுமிருக்கும், இந்நோயினன் ஐந்தாண்டில் மரணமாவான் எனக் கூறியுள்ளார்.

### 6. முயற்குருதி நீர் (ஆர்க்க மேகம்).

1. " சாத்தியமாய முயலிரத்தம் போல வீழுஞ்,
சாதகமாய் இருநாழி தானிறங்கும்,
காத்தியமாய்க் காய்ச்சினாற் புலால்போல் நாறுங்
கனமான பீசகோசங் கடுக்கும்,
ஊத்தியமாயிப்படித் தான் கண்ட மேக,
மொன்பதா மாதத்திலொடுங்குஞ் சீவன்,
ஆத்தியமா மார்க்கமா மேகமென்றே,
அவனியுள்ளோர் தங்களுக் கறியச் சொல்லே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினாலும்,

(வேறு.)

2. " அனலால் வருநீராறினில் யறைவேன் முயற்குருதி,
தினம் வேளையிலிரு நாழியில் சேருமுயற் செந்நீர்,
அனதாய் விரையாணின் குறி யடுக்குங்கடுப்படி நீர்,
வனைவாம்புலால் மணமேயிவன் மாழ்வானொன்பான்
மதியே."

(கையெழுத்துப் பிரதி.)

என்பதினாலும் ஆர்க்க மேகம் என்னும் முயற்குருதி நீர் நோயில் நீரானது நாளொன்றுக்கு இரண்டுபடியளவாக இறங்கும், அந்நீர் முயலின் இரத்தம் போல் சிவந்திருக்கும், காய்ச்சினால் புலால் மணம் கமழும், விரையும், ஆண் குறியும் கடுக்கும், நோய் கண்ட ஒன்பதாந் திங்களில் இறந்துவிடுவான் எனவும் கூறியுள்ளார்.

I. ஐயக் குற்றத்தால் பிறக்கும் பத்து பிரிவு மேக நீர் நோய்களாவன :

1. " ஆறானசிலேட்டு மசலம் பத்து தன்னை,
அரன் சொல்ல ஆத்தாள் தான் கேட்கும்போது,
வாறானவசாமேகந் தெளிமேக மூளையுருக்கு,
மேகத்தோடிள நீர் மேகந்.

தூறான சுரா சுக்கில மேகங்கழு நீர் மேகஞ்,
சுற்றமாம் பிரசமொடு சாரமேகம்,
தேறான இறைச்சியா மேகமொன்று,
செப்பினார்சிலேட்டுமத்தின் சலத்தைத்தானே."

(கை எழுத்துப்பிரதி.)

என்பதினாலும்,

(வேறு.)

2. " ஆறான சிலேட்டு மசலம் பத்து தன்னை,
அரன் சொல்ல ஆத்தாள் தான் கேட்கும்போது,
வாறான வசா மேகம் உத்தம மேகம்
மச்சை மேகத் தோடாதிக்க மேகம்,
தூறான சுராசுக்கில முதக மேகஞ்,
சுற்றமாம்பிரசமொடு சார மேகம்,
தேறான தைத்தியமா மேகமொன்று,
செப்பினார் சிலேட்டுமத்தின் சலத்தைத்தானே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினாலும் ஐயக் குற்றத்தாலுண்டாம் மேக நீர்ப் பிரிவுகளாவன :—

1. வசாநீர் (நிணம்மிதக்கும் நீர், வசா மேகம்),
2. தெளிநீர் (தூய்மை நீர், உத்தம மேகம்),
3. மூளை உருக்கு நீர், (மூளை நீர், மச்சை மேகம்),
4. இளநீர் நீர் (ஆதிக்க மேகம்),
5. கள் நீர் (சுரா மேகம்),
6. சுக்கில நீர் (வெண்ணீர் நீர், தவள நீர், சுக்கில மேகம்),
7. கழு நீர் நீர் (உதக மேகம்),
8. தேன் நீர் (பிரச மேகம்),
9. உப்பு நீர் (சார மேகம்),
10. இறைச்சி நீர் (கவிச்சி நீர், நைத்திய மேகம்)

என்பவையாம்.

ஐயக் குற்றத்தாலுண்டாம் பத்து வகை மேக நீரின் பொது குறி குணங்கள்.

1. " தசமான பத்துக்குங் குணத்தைக்கேளாய்,
சரீரந்தான் பருத்துமே வெளுப்புண்டாகும்,
அசமான தினவுண்டா மடிக்கடிக்கு,
அன்னமுமே தண்ணீருமிகவே தேடுங்,
கசமான விருமலுடன் கோழையுண்டாங்,
கனவரிவாயா யாசமுழலையாகுங்,
குமாசன, குணங்களெல்ல சிலேட்டுமந்தன்னில்,
கொடியசலக் குணமென்றே கூறினாரே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினாலும.

(வேறு.)

2\. " ஐய நீரின் பொதுக்குறி குணமறைந்திட,
மெய்வெளுத்தல் பருத்தல் மிகுசளி,
நய்தின வெரி நாடிருமவிளைப்,
புய்நீர் சோறுறயுண்டிடலுழலையே. "

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினாலும், ஐயக்குற்றத்தாலுண்டாகும் பத்து.வகை மேக நீர் நோய்களில் பொதுவாக உடல் வெளுத்தல், உடல் பருத்தல், உடலில் தோல் கேடடைந்து சொறி, சிறங்கு, தினவு (நமைச்சல்) முதலியன உண்டாதல், அடிக்கடி அன்னமும், நீரும் மிகுதியாக அருந்தல், தொண்டையில் கோழை கட்டல், இருமல், இளைப்பு, உடலெரிச்சல், நீர் வேட்கை முதலிய குறி குணங்களை உண்டு பண்ணும் என்பதாம்.

ஐயக் குற்றத்தாலுண்டாம் மேக நீர்ப்பிரிவு ஒவ்வொரு நோயின் குறி குணங்கள்.

1\. வசா நீர் (நிணம் மிதக்கும் நீர், கொழுப்பு மிதக்கும். நீர், வசாமேகம்).

1\. " தானென்ற வசாமேகமிறங்கும்போது
சலத்தின்மேல் நிணம்போலு மாடையுண்டாம்
வேனென்ற வேளைக்குக் குருணிதானும்
விடுபட்டுத் தானிறங்குங் காய்ச்சினக்கால்
நேனென்ற நிணமுருக்குப் போல நாறும்
நிலையாக விப்படித்தானிறங்கு மேகம்
ஏனென்ற வேழாண்டு தன்னிற்றானு
மெமபுரத்துக்கேகு மென்றே யியம்பிடாயே

(யூகி சிந்தாமணி),

என்பதினாலும்,

(வேறு.)

2\. ." ஐயத்துறு நீர்ப்பத்தினில்
யாகும் வசாவதினீர்
நையாவரும் வேளைப்படி
நான்காயஃதிறங்கும்.

மெய்யாம் நீர்மேல் நிணம்படியும்
மேவுமதைக் காய்ச்சின் நிணம் நாறும்
பொய்யாதிவனேழாண்டினிற்
போவானெமனுலகே ''

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினாலும், வசா மேகம், என்னும் நிணமிதக்கும் நீர் நோயில் நீரானது நாளொன்றுக்கு நாலுபடியளவாக இறங்கும்; ஒவ்வொரு தடவை நீரிறங்கும்போது நீரின்மேல் நிணம் (கொழுப்பு) ஆடை போல் படர்ந்திருக்கும். அந்நீரைக் காய்ச்சின் கொழுப்பை உருக்கிய நாற்றம் உண்டாகும். இந்நோயினன் ஏழாண்டில் மரணமாவான் எனவும் கூறியுள்ளார். (வசா—நிணம் அல்லது கொழுப்பு எனப்படும்).

குறிப்பு.— வசா மேகம் என்றதை வசம்பு நீர் என்றும், ஐய நீர் என்றும் சில நூல்களிற் கூறியிருப்பது பொருத்தமன்று.

2. தூய்மை நீர் (தெளிநீர் ; உத்தம மேகம்.)

1. '' இயம்பவே நல்ல தண்ணீர் போலிறங்கும்
எடுத்ததனைக் காய்ச்சினால் நல்ல தண்ணீர்.
நயம்பவே நாற்றமது நல்ல தண்ணீர்
நல்வேளை தனக்குமொரு குருணியாகும்
அயம்பவே யப்படித்தான் கண்ட மேகம்
ஐயிரண்டு வருடத்தில் யறியக் கேளாய்
மயம்பவே மறலியிட வூர்ப்புக்காகு
மகத்தான வுத்தமமா மேகந்தானே ''

(யூகி சிந்தாமணி.)

என்பதினாலும்,

(வேறு.)

2. '' நீராலுறு நீர்ப்பத்தினில்
நேருந் தெளிநீர் கேள்,
பேராயொரு வேளைக்கது
பெருகும்படி நான்காய்
ஆராய் மணநிறத்தாலஃ
தடினு மணமஃதே
சேராமிவன் பத்தாண்டினில்
சேர்வானமனுலகே ''

(கை எழுத்துப் பிரதி.)

என்பதிலும், உத்தம மேகம் என்னும் தெளிநீர் அல்லது தூய்மை நீர் நோயில், சிறு நீரானது நாளொன்றுக்கு நாலுபடியளவாய் இறங்கும். சுத்த சலம் போல் தெளிவாகவும், தூய்மை நீர் போலிருக்கும். தெளி நீரின் நிறமும் மணமும், பெறும். காய்ச்சி னாலும், நீரின் மணம் நல்ல தண்ணீரின் மணமாகவே இருக்கும். இந்நோயினன் பத்தாண்டிலிறப்பான் எனவும் கூறியுள்ளார்.

### 3. மூளையுருக்கு நீர் (மூளை நீர், மச்சை மேகம்.)

1. "உத்தமமாமெலும்புக்குட் சதையைப் போல
உருகியே தானிறங்குங் காய்ச்சினக் கால்
நித்தமமாய் நிண நாற்றமாயிருக்கும்
நிசமாக வேளை முந்நாழியாகும்
பத்தமமாயப்படித்தான் கண்ட மேகம்
பரமசிவனடியாரைச் சாராதாகும்
இத்தமமாயே மனிட னூர்புக்காகு
மிசைந்த வைந்து வருடத்தில் மச்சை மேகம்"

(யூகி சிந்தாமணி.)

என்பதினாலும்,

(வேறு)

2. "புனலால் வரு நீர்பத்தினில் புகநீர்மூளையுருக்கு
தனமாமெழும்பக மூளையைக் கரைத்தே வரல் போலாம்
தினமூன்றெனும்படியானிறை சேருமொருவேளை
அனல்காய்ச்சிடின் நிணநாறிடும்
யவர்காண்டஃதைந்தே."

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினாலும், மச்சைமேகம் என்னும் மூளையுருக்கு நீர்நோயில், சிறுநீரானது எலும்புக்குள்ளிருக்கும் மூளையைக் கரைத்துக் கொண்டுவருவதுபோலவரும். நாளொன்றுக்கு மூன்றுபடி யளவாக நீரிறங்கும். நீரைக் காய்ச்சினால் நிண நாற்றமாய் நாறும். இந் நோயினனது ஆயுள் அளவு ஐந்தாண்டாகுமென்பர்.

4. இளநீர் நீர்—(ஆதிக்கமேகம்).

1. "மேகந்தானிளநீர் போற்றானிருக்கு
மிகக்காய்ச்சிலிளநீர் போற்றானிருக்கும்
வாகந்தான் வாடையது இளநீர்வீசும்
வகையான வேளைக்குநாழியாகும்.
தாகந்தான் மிகவுண்டாகுமுடம்பிளைக்குஞ்
சஞ்சலந்தான் மிகவுண்டாங் கண்ட ஏழு
பாகந்தான் வருடத்திற் சாவுமாகும்
பாங்கான ஆதிக்க மேகத்தின் பண்பே."

என்பதினாலும்,

(வேறு)

2 "ஐயால் வருநீர்பத்தினில் யறைவேன் இளநீர் நீர்
எய்தாவொருவேளைப்படியிறங்குமிளநீரின்
பொய்யா நிறமண மாமடின் பொருந்துமவையிளைப்பு
நையுமுளநீர் வேட்கையாம் நமனேழாண்டுறுமே."

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினாலும், ஆதிக்கமேகம் என்னும் இளநீர் மேகநோயில், சிறு நீரானது வேளைக்கு ஒரு படியளவாக இறங்கும்; இளநீரின் நிறத்தையும் மணத்தையும் பெற்றிருக்கும். இந் நீரைக் காய்ச்சின் இளநீரின் வாடையும் நிறமும் சாட்டும். உடல் இளைப்பு, மனக்கலக்கம், நீர்வேட்கை இவையுண்டாகும். இந்நோயினன் ஏழாண்டில் இறப்பான் என்பதேயாம்.

5. கள் நீர் (சுராமேகம்).

1 "பண்பாக நுரையோடேவளுப்புப் போலப்
பனங்கள்ளுப் போலவே தானிறங்கும்,
கண்பாக வேளைக்கு நாழியாகுங்
காய்ச்சினாற்கள் மணந்தான் மிகவே வீசும்.
மண்பாக மாப்போல மணந்தானுண்டா
மயக்கமாமிப்படித்தான் கண்ட மேகம்
எண்பாக ஏழு ஆண்டதனிற்கொல்லு
மேற்ற மாஞ்சுராவென்ற மேகந்தானே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினாலும்,

(வேறு)

2 "நீரால் வருநீர் பத்தினில் நேருங்கள் நீர்வகை கேள்,
சீராயொரு வேகளப்படி சேரும் வெண்மை நுரையாய்.
ஆராய்பனங்கள்ளாமடி னதுவாமணமாக்கீழ்,
ஏராயுறுமயக்கம் பெறும் ஏழாண்டினிற்சாவே"
(கை எழுத்துப் பிரதி.)

என்பதினாலும், சுராமேகம் என்னும் கள்நீர்நோயில் நீரானது வேளைக்கு ஒரு படியாக இறங்கும். அந்நீர் பனங்கள்ளைப் போல வெளுத்தும், நுரைத்தும் புளித்தாற்போலுமிருக்கும். அந்நீரைக் காய்ச்சினால் பனங்கள் மணமும், அடியில் மாவைப் போல் வண்டலும் படிந்திருக்கும் மயக்க முண்டாகும். ஏழாண்டினில் நோயினன் சாவான்.

6. சுக்கில நீர் (வெண்ணீர், தவளநீர்) சுக்கிலமேகம், என்றதோர் மேகந்தானிறங்கும் போது ஏற்றமாஞ்சுக்கிலத்தினிறமே போலுந்,

(வேறு.)

தன்றதோர் தாளியிடச் சாறு போலுந்
தரித்துமேமெழு கூர்ந்து சிறுகிவீழும்,
கன்றதோரிதைக் காய்ச்சிற் கட்டிபோலக்
கனமான ஈரல்போற்றேய்ந்து போகும்
முன்றதோர் கண்டசலம் மூன்று மாண்டில்
முயற்சியாய்க் கொல்லுஞ் சுக்கிலமேகந்தானே."
(யூகி சிந்தாமணி.)

என்பதனாலும்,

(வேறு)

2 "தோயத்துறு நீர்பத்தினில் தோய்சுக்கிலநீர் கேள்,
ஏயுஞ்சிறு நிறையாம் விந்து வெனலாங்கனநிறமுந்,
தோயம் பசை மெழுகன்றியுஞ் சொற்றாழை நீர்வடிவாம்,
ஆயுமடினஃதிரலாமவர்க் காண்டது மூன்றே."
(கை எழுத்துப் பிரதி.)

என்பதினாலும், சுக்கிலமேகம் என்னும் வெண் ணீர் நீர் நோயில், சிறு நீரானது சிறுயளவில் குழகுழத்து இழியும். அந்நீர் சுக்கிலத்தைப்போலக் கனத்தையும் நிறத்தையும் பெற்றிருக்கும். பசையுள்ள மெழுகுபோலும், தாழைச்சாறு போலவுமிருக்கும். அந் நீரைக் காய்ச்சின் அடியில் ஈரல்போல் கட்டியாயிருக்கும். இந் நோயினன் மூவாண்டுகளுக்கு மேல் உயிர் வாழான் என்பதாகும்.

### 7. கழுநீர்—நீர் (உதகமேகம்).

1 ''மேகமாய்க் கழுநீர் போற்சிக்கிக்சிக்கி,
மிகுதியாய்த் தானிறங்குங்காய்ச் சினக்கால்,
சாகமாய்ச் சங்குசுண்ணாம்பு போலத்
தாழவேமண்டி மிகப்பாயும்பாரு,
பாகமாயிப் படித்தான் கண்டமேகம்
பாங்கமாயோராண்டு தனிலே கொல்லும்,
வேகமாய் மிக நாறும் சரீரந்தானு
மிக உதகமேகமென்றேவிளப்புவாயே.''

(யூகி சிந்தாமணி)

என்பதினாலும்,

(வேறு.)

2 ''கபத்தால் வருநீர்பத்தினில் கழுநீர் புரைநீர் கேள்
அபமாதிதி சிக்காய் வரும் யதனையடினுடனே
தபுமாவளை சுண்ணமாயடித் தங்குங்கனமாக
நிபமாயுடல் மிக நாறிடு நிகழாண்டொழிவானே.''

(கை எழுத்துப் பிரதி)

என்பதினாலும், உதகமேகம் என்னும் கழுநீர் மேகநோயில், சிறு நீரானது கழு நீரைப்போலச் சிக்குப்பட்டு (i.e.) நீர் அடைத்துச் சிக்கிச்சிக்கி) மிகுந்த அளவில் இறங்கும். இந் நீரைக் காய்ச்சின் நீரினடியில் சங்கு சுட்ட சுண்ணாம்புபோலக் கனமாகப் படியும் உடல் மிகவும் நாற்றமாய் நாறும். இந் நோயினன் ஓராண்டில் இறப்பான் என்பதாம்.

8. தேன் நீர் (பிரசமேகம்).

1 ''விளம்பவே தேன்போல மிக விறங்கு
மிக்கான தேன்போன்ற நாற்றமாகும்,
அளம்பவே மெழுகுபோலடியினிற்கு
யதிகமாயீயெறும்பு மிகவே மொய்க்கும்,
குளம்பவே வேளைக்குக் குறுணியாகுங்
குறிகண்டவைந்து மாதத்திற் கொல்லுந்,
தளம்பவே சரீரத்தில் மதுத் தானாகுந்
தனித்தோர் பிரசமென்ற மேகந்தானே.''

(யூகி சிந்தாமணி)

என்பதினாலும்,

(வேறு)

2 ''ஐயத்துறு நீர்பத்தினில் ஆகுந்தேனீரும்,
ஆகும்படி நான் காகியே யமரும் எறும் பீயும்
தோயுமதனிறம் வாசனை கனமுஞ்சுவையட்டின்,
தூய்பாகினையொப்பாகியே கொப்புளையு முடலை,
ஏய்ந்துயர் செய்தே யிழிவு மன்னிற மஞ்சள்,
எய்தும் பசுமைபோல் விரையடியில் வரும் நோவும்,
பாயும் வினையடி தண்டினியந் நீரினைப் பிடித்துப்
பார்க்கிலடி வெண்மைப் பொடியாமையாமதிற் சாவாம்.''

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினாலும், பிரசமேகம் என்னும் தேன்நீர் நோயில் இழியும் சிறு நீர் வேளைக்கு நாலுபடியளவாகும். அதில் ஈ எறும்புகள் மொய்க்கும். அதன் நிறம், வாசனை, கனம்,சுவை இவையாவும் தேனையொத்திருக்கும். அதைக் காய்ச்சின் வெல்லப்பாகின் மணம் வீசும், கொப்பூழையும் உடலையும் குடிலமாக்கிப் பாதிக்கும். இத்துடனிழிகின்ற நீர் மஞ்சள் நிறமும் பசுமை போலுமிருக்கும். கோசத்திலும் பீசத்திலும் (ஆண்குறியிலும் விரையிலும்) கடுட் புண்டாகும். இந் நீரைப்பிடித்துக் காய்ச்சாமல் வைத்தால் அதனடியில் வெண்மையாக மாப்போல் படிந்திருக்கும். இந் நோயினன் ஐந்து திங்களில் உயிரிழப்பான் என்பதாம்.

## 9. உப்பு நீர் (சாரமேகம்.)

1 ''தனித்ததோர் மேகந்தானிறங்கும் போது,
தழலான சுண்ணாம்புக் காரநீர்
மினித்ததோர் மிகுதிபோல் யாய்த் தானிறங்கும்,
வேளைக்கு நானாழி தானுமாகும்
கனிந்ததைக் காய்ச்சினாற் படியுமுப்புக்
கணடசலம் பதினைந்து வருடத்திற்றான்,
வனித்ததோர் மறலியிடவூர் புக்காகும்
வசனித்தசாரமேக வண்மை தானே.''

(யூகி சிந்தாமணி.)

என்பதினாலும்,

(வேறு.)

2 ''நீராலுறு நீர்ப்பத்தினில் நீரோர் முறை படி நால்,
ஆராவருநீர்கார சுண்ணத் திலுறு நீராம்
சேராவிதைக்காய்ச்சின் யடிசேருமுப்பைப்போல்
பாராய் பதினைந்தாண்டினில் பார்விட்டிடுவானே.''

(கை எழுத்துப் பிரதி.)

என்பதினாலும், சாரமேகம் என்னும் உப்புநீர் நோயில் நீரானது வேளைக்கு நாலுபடியாக இறங்கும். அந் நீர் காரமுள்ள சுண்ண நீர் போலிருக்கும். அந் நீரைக் காய்ச்சினால் அடியில் உப்பைப் போல் தங்கும். இந்நோயினன் பதினைந்து ஆண்டில் சாவான் என்பதாம்.

## 10. இறைச்சி நீர்.

இறைச்சி கழுவுநீர் ; கவிச்சி நீர்; தைத்திய மேகம்) :

''வண்மையாய் மேகந்தானிறங்கும் போது
மகாவிறைச்சிகழுவினதோர் தண்ணீர்போலாம்,
கண்மையாற்காய்ச்சினாற்கவிச்சடிக்கும்
கனமான நீர்த்தாரைமுறுக்கிவீழும்,
வெண்மையாய்வேளைக்கு முந்நாழியாகு
மிக்கான குறிகண்ட மூன்றாம் ஆண்டு ;
தண்மையாய் எமனிடப்புரத்துக்கேகுந்
தைத்திய மேகந்தானுந்தசமுமாமே ,''

என்பதனாலும், (யூகி சிந்தாமணி.)

(வேறு)

2. "ஐயத்துறு நீர்பத்தினில் யாகுமிறைச்சியினை
நையக்கழுவுந் நீர்முறை நண்ணும்படி மூன்றாய்
மெய்யாமஃததுபோலுறு மிக்காயடின் கவிச்சாம்
பெய்யத்துளை முறுக்குண்டுறும் பேர்வான் மூவாண்டில்."
(யூகி சிந்தாமணி)

என்பதனாலும்,

இறைச்சி கழுவு நீரானது வேளையொன்றுக்கு மூன்று படியளவாக இறங்கும். அந் நீரானது உண்மையாகவே இறைச்சியைக் கழுவினதாலுண்டாகும் நீரின் நிறத்தையடையும். அந் நீரைக் காய்ச்சினால் கவிச்சடிக்கும். ஆண்குறியானது முறுக்கிக் கொண்டு நீரிழியும். இந்நோயினன் மூன்று ஆண்டினில் பாரை விட்டேகுவான் என்பதாம்.

**மேக நீர் இருபதுக்கும் பொதுக் குறி குணங்கள் கூறுகிறார்.**

1. "கூறான மேகமதுஇருபதுக்குங்
குணந்தனைச்சிவன்சொல்லத்தேவிகேட்கத்,
தாறானதாகமொடுசோகமேக்கந்
தரியாமல் நீரிழிதலிருமல் மூச்சு,
ஆறானஅருசி சர்த்திசித்தப்பிரமை
யடிக்கடி தண்ணீர்தானன்னங்கேட்டல்,
ஈறான இடுப்புக்குக்கடுப்பு காணல்,
எலும்புழற்ற லழற்றலோடெரி வுண்டாமே."

2. எரிவோடு சரிரமமலாமறை பட்டாற்போ
லெழிலுடம்பு நோதல் நித்திரை யில்லாமை,
வரிவொடு வாயுமெத்தவும் பரித்தல்
மனது சஞ்சலப்படுதல் காற்றுவேண்டல்,
மெரிவோடுமேல்மூச்சு மிகவுண்டாதல்
விக்கலோடு மயக்கந்தான்மெத்தக்காணல்,
தெரிவோடு தேகமெங்கும் வெளியுறுண்டாதல்
தேகமெத்தவா லோபப்படுதல் காணே."
(யூகி சிந்தாமணி)

என்பதினால், இருபது வகை நீர் நோய்களின் (மேகம் இருபதுக்கும்) பொதுகுறிகுணங்களைக் கூறுமிடத்து: நீர் வேட்கை; சோகம்; ஏக்கம்; அடிக்கடி நீரிழிதல்; இருமல்; மேல்மூச்சு

சுவையின்மை, வாந்தி; சித்தங் கலங்கல்; அடிக்கடி நீரும், சோறும் கேட்டல்; இடுப்புக்குள் கடுப்பு காணல் ; எலும்பு உழற்றல்; அழற்றலுடன் எரிவுண்டாதல் ; உடல் மெலிதல்; நோதல்; தூக்கமின்மை ; வாயு மிகுதியாகப் பரிதல்; மனக் கலக்கம் ; காற்று வேண்டுதல் ; சூடாக மூச்சு வெளியாதல் ; விக்கல்; மயக்கம் மிகக் காணல் ; உடல் வெளுத்தல்; உடல் அரட்டல், புரட்டல் படுதல் முதலிய குறி குணங்களைக் காணலாம் என்பதாம். (சி.ம.).

நீரிழிவு நோயாகிய மேகம் இருபதுக்கும் பொதுவாக உண்டாகக்கூடிய துன்பங்கள் அல்லது அவத்தைகள் கூறுகிறார்.

1. ''காணவே முதலவத்தை சரீரந்தானுங்
கனமாகப் பருத்திறுகி நீர்த்துவாரம்
வேணவே வேண்டாக்கி யகலம் பண்ணு
மிக்க விரண்டாமவத்தை விளம்பக்கேளாய்,
மூணவே மூத்திரப் பீடையுமாச்சுக்கில
முகமுழுகித் தேஜசுதான் மிகவே குன்றும்,
நாணவே மூன்றாகு மவத்தைக்குத்தான்
நாவறளும் வாயுவது மீறுந்தானே.''

2. ''தானான நாலமவத்தை யங்கதாகஞ்
சன்னியது பாதமுண்டாமைந்தவத்தைத்,
தேனான நீர் பெருகுந் தாது நட்டம்
நிலையாறாமவத்தையுடற் கிடைகொள்ளாது,
மூனான மூர்ச்சை வருமேழவத்தை
மிக்கவரோசகஞ் சுவாசந் தேக சாட்டியம்,
ஏனான எட்டாவதவத்தை தானே
எழுகிரந்தி பிளவையுந்தான் மிக வுண்டாமே.''

3. ''உண்டாகு மொன்பதாவத்தை கேளாய்
ஒழக்கான வதிசாரங் கிருமியுண்டாம்
பண்டான பத்தாந் தானவத்தை கேளாய்
பாரமாம் சயங்கண்டு பரத்துக் கேகும்
வெண்டாகு மேகந்தா னிருபதுக்கும்
விளங்கிய தோர் தசவத்தை விவரஞ் சொன்னோம்.
அண்டாகுஞ் சாத்தியவ சாத்திய மிரண்டு
மறிந்து கொண்டு வடவாக வவிழ்தஞ் செய்யே.''

(யூகி சிந்தாமணி).

(இதன் பொருள்)

**நீரிழிவு நோயில் காணும் பத்து வகைத் துன்பங்கள் (அவத்தைகள்) ஒன்றன் பின் ஒன்றாய்த் தொடரும், அவைகளாவன: —**

1. நோய் தோன்றுவதற்கு முதற்குறியாக உடல் பருத்துக் கொண்டே வரும். நீர்ப்புழை அகன்று வரும்.

2. சிறு நீர் பெருகி இழியும். வெண்ணீர் (சுக்கிலம்) கெட்டு உடலின் ஒளி குன்றிக் காணும்.

3. நாவறட்சியும், வயிற்றுள் காற்றுக் கூடிப் பெருக்கும்.

4. நீர் வேட்கை மிகுந்து முப்பிணி தொடரும்.

5. சிறு நீர் பெருகி இழிந்து, விந்து நட்டமுண்டாகும்.

6. படுக்கையில் கிடக்க வொட்டாது, மூர்ச்சை யுண்டாகும்.

7. வாய் குமட்டி, சுவையற்று, பெருமூச்சு உண்டாய் உடல் சோரும்.

8. உடலில் கழலை, கட்டிகள் உண்டாகும்.

9. ஒழுக்கம் தவறல், பெருங் கழிச்சல், புழு சேரல் இவை யுண்டாம்.

10. இளைப்பு நோய் (சயம்) உண்டாய் நோயினனைக் கொல்லுமென்றறியவும்.

(வேறு)

**மேகநீர் இருபதின் துன்பங்கள் (அவத்தைகள்).**

"மேக நீரிருபதில் மேவுந் துன்பம்
ஆகத்துருவ வவை பத்தாகும்
அவற்றி லொன்றிலாகும் பருவே
இவர்ந்து சிறுநீர் இழியுந் தொளையைப்
பருக்கப் பண்ணல் பன்னு மிரண்டில்
வருத்தத்துடனே வந்திடுஞ் சிறுநீர்
மேவுமதிலே விரவும் வெண்ணீர்
வாவுமுடலின் வன்மை குறைதல்
மூன்றில் நாவு முற்றும் வறளல்
ஆண்டுவாயு யதிகமாதல்
நாவிலுறுப்புகள் நன்றாய்த் தவித்தல்
ஆலுஞ் சன்னிபாத மைந்தில்
நீரைப் பெருக்கி நிறை வெண்பாலை
நாரைப் போல, நாட்டலாறில்
பாயிற் படுக்கைப் பண்ணா மூர்ச்சை
ஏ டி மேழில் இசை சுவை மாறல்

மேல் மூச்சாதல் மெய்யுடல் நோதல்
சாலு மெட்டிற் சாற்றுங்கிரந்தி,
கோலும் பிளவை கொள் வொன்பதனில்
மிகுமலக்கழிவு தகுமொழுக்கந்தவ
ருகுபுழுகாண லோதும்பத்தில்
கயமெனு மிளைப்புக் காணலாகி
அயனார் விதிதீர்ந்தகலுமென்ன
முன்னோர் சொன்ன முறைமையாகும்.
ஆயினுந் துன்பம் அவைகள்பத்தில்
நோயுறு மூன்றா நுவலுந் துன்பம்
வரையுமருத்துவ வகை செயலாமென்
றறைவர் சிலரே யாயினுமொன்பான்
துன்பமளவும் துயர் நீக்குறைகள்
வன்பாய்ச் செயவென மருத்துவர்
நன்பாங் குரையை நாடிடுவாயால்.''

(கை எழுத்துப் பிரதி) சி.ம.

என்பதினால், முன் கூறிய பாடலும் இதுவும்கருத்து ஒன்றேயாகும்.

(இதன் பொருள்)

மேகநீர் நோயில் காணும் பத்து அவத்தைகள் (துன்பங்கள்) கூறுகிறார் —

1. உடல் கனத்து இறுகி நீர்க்குறித் துவாரத்தைப் பருக்கப் பண்ணும்.

2. வருத்தத்துடன் சிறுநீர் இழியும், அதில் சுக்கிலம் கலந்து வெளியாகும். உடல் ஒளி குன்றும்.

3. நாவறளும் ; வாயுமிகும் (இதுவரைக்கும் தக்க மருந்துக்களால் எளிதில் குணப்படுத்தலாமென்பது சிலர் கருத்து).

4. நீர்வேட்கை மிகுந்து சன்னி பாதமுண்டாகும்.

5. நீரைப் பெருக்கி விந்து நட்டமுண்டாகும்.

6. படுக்கை பொருந்தாமையுடன் மூர்ச்சை யுண்டாகும்.

7. சுவை மாறல், மேல்மூச்சு, உடல் வலியுண்டாம்.

8. கிரந்தி (கழலை), பிளவை (கட்டி) இவைகளுண்டாகும்.

9. பேதி, தவறு மொழுக்கம், புழுசேரல் முதலியவை உண்டாகும்.

10. இளைப்பு (சயம்) நோயையுண்டாக்கி மரணம் சம்பவிக்கும் என்பதாம்.

குறிப்பு.—மூன்றாவது துன்பம் வரைக்கும் தக்க மருத்துவம் செய்வதால் குணமாகுமென்பர் சிலர். மற்றும் சிலர் ஒன்பது துன்பங்கள் வரைக்கும் மருத்துவம் பிரயாசைப் படலாமெனவும் கூறுவர்.

## தீரும் தீராதவை.

1. ''செய்யவே வச்சிரமாந் தண்டமான
செயமானமுதுகுதண்டைப்பற்றி நிற்கும்
பெய்யவே பெருநரம்பில் மேகந்தானும்
பிறக்குமென்றே தானறிந்து வாதந்தன்னால்
பிய்யவே பிறந்தசலம்நால சாத்தியம்
பித்தத்திற்பிறந்த சலமாறும் யாப்யம்
பையவே சேட்டுமத்திற் பிறந்த பத்தும்
பரமனுரைத்தார் சாத்தியம் பராபரிக்கே.''

(யூகி சிந்தாமணி).

என்றதால் வச்சிரதண்டமான முதுகந் தண்டைப்பற்றி நிற்கும் பெரு நரம்பிலுண்டாம் நீர் நோய்களான வாதம் என்னும் வளிக் குற்றத்தால் பிறக்கும் நாலுவகை நீர் நோய்கள் அசாத்தியம் எனவும்; அழல் குற்றத்தால் பிறக்கும் ஆறுவகை நீர் நோய்கள் தக்க மருத்துவத்தால் கஷ்டத்தில் குணமாகும் எனவும்; ஐயக் குற்றத்தால் வருவன பத்து வகை நீர் நோய்கள் எளிதில் தீரும் எனவும் கூறியுள்ளார்.

(வேறு வெண்பா)

2 ''வளிநீர்க்கனான்கும் மருந்தினாற்றீரா
உளிற்றீயினா றுளதாயின்—களியிலா
பிக்கரிதீற்றீர்தலாமே வையநீர்பத்தும்
தக்கெளிதிற்றீர்தலென ச்சாற்று''.

(கை எழுத்துப் பிரதி)

என்பதினால், முன் யூகிமுனி கூறியது போலவே இச் செய்யுளிலும் பொருள்படக் கூறியுள்ளார். அதாவது வளிநீர் நோய்கள் நான்கும் தீராவெனவும்; அழல் நீர் நோய்கள் ஆறும் மிகுவருத்தத்தால் தீரும் எனவும்; ஐய நீர் நோய்கள் பத்தும் எளிதில் தீரும் எனவும் அறிகிறோம்.

மேக நீர் (நீரிழிவு) நோயில் வேறு தொடர்பு நோய்கள் காணின் தீராவாம் அவை எவையெனல்:

1 ''நீர்நோயி னிலதிசாரமுனிமிர் வீக்கமிளைப்பு
மார்மூச்சுறல் விக்கல்யடிக்கடி யேவரல் வயிற்றில்
சேர்நோ யொடு பிளவைவரல் தீராக்குறியென்றே
நார்கொண்டுறை செய்தாரிதை நன்றாயறிவாயே.''

(கை எழுத்துப் பிரதி)

என்றதால், நீரிழிவு நோயாகிய மேகநீர் நோயில் அதிசாரம், மிகுந்த வீக்கம், இளைப்பு, மிகு மூச்சு, விக்கல் அடிக்கடி உண்டாதல், வயிறு நோதல், பிளவை ஆகிய இவைகள் தொடருமாகில் நோயினன் குணமாவது அரிது என்பதேயாம்.

**வேறு—''பிளவையில்'' தீராக் குறி.**

2 ''அறிவாயுறை தீராக்குறி யவற்றோ டொன்றைதான்
செறிவாம்பிளவையிலே யழல் சேர்ந்தால் விக்கலீளை
அறியாமயக்கமும் வந்துடல் யறவேர்வையுமாகி
மறியாத் தண்ணீர் வேட்கையுரின் மாறுமுடலுணரே.''

(கை எழுத்துப் பிரதி).

என்பதினால், மேற்குறித்த தீராக் குறிகளிலொன்றான பிளவையுண்டான காலத்து, அத்துடன் அழற்சி (சுரம்) விக்கல், ஈளை, தன்னைத் தானறியாத மயக்கம், உடலில் வியர்வை, நீர்வேட்கை ஆகிய இவைகள் தோன்றில் உயிர் நீங்கும் என அறிக.

குறிப்பு.—முக்குற்ற முதலிய வேறுபாடுகள், நாடி நடையாவும் ''மது மேகம்'' என்னும் ''இனிப்பு நீர்'' அத்தியாத்தில் கூறியிருப்பவைகளே நீரிழிவு நோயாகிய ''மேக நீர்'' இருபதுக்கும் பொருந்தும். ஆதலால் அவற்றை ''இனிப்பு நீர்'' அத்தியாயத்தில் கவனிக்கவும்.

### முக்கிய கவனிப்பு.

நீரிழிவு நோயாகிய மேக நீரிருபதில் (1) மதுமேகம் என்னும் தித்திப்பு நீர் அல்லது இனிப்பு நீர் ; (2) தெளிவு நீர் என்னும் தூய்மை நீர்; (3) வெண்ணீர் என்னும் சுக்கில நீர் அல்லது தவள நீர்; இம்மூன்று நீர் நோய்களும் அடங்கியுள்ளன. ஆனால் இவற்றின் முக்கியத்தைப் பொருத்தோ அல்லது வேறு எக்காரணத்தினாலோ இம்மூன்று நோய்களையும் ; அப்பால் பிளவை என்னும் மேக நீர்க்கட்டிகளைப் பற்றியும் தனித்து துண்டுப் படுத்தி "சித்த மருத்துவத்தில்" எழுதியுள்ளார்கள் அவற்றையும் இங்கு தனித்துக் கூறியிருப்பதையும் கவனிக்கவும். மேக நீர் பிரிவுகளில் கூறியவைகளே இங்கே மீண்டும் இம் மூன்று பிரிவுகளைப் பற்றிய விவரங்கள் சற்று விரிவாகக் கூறப் பட்டிருக்கின்றனவேயொழிய அங்கே கூறியவை வேறு, இம்முன்று நீர் நோய்களும் வேறு என்பதாக நினைக்க வேண்டாம்.

### 40. இனிப்பு நீர்.

**வேறு பெயர்கள்**—மதுமேகம் ; தித்திப்பு நீர் என்பவையாம்.

சிலர் "நீரிழிவு" எனவும் கூறுவர். ஆனால் நீரிழிவு என்னும் சொல் மேக நீர் இருபதுக்கும் பொதுவான பெயராகும். தித் திப்பு நீரை மட்டிலும் குறிப்பதாகாது.

**இயல்.**—அடிக்கடி சிறு நீர் அளவுக்கு மிஞ்சி இழிதல். நீரி ழிந்த யிடத்தில் ஈ எறும்புகள் மொய்த்தல் ; அதனைக் காய்ச்சின் சர்க்கரை மணம் வீசல் ; உடல் நாளுக்கு நாள் இளைத்தல் என்னும் இயல்புடைய நோயாம்.

### நோய் வரும் வழி.

நீரிழிவு நோயாகிய மேக நீர் இருபதுக்கும் பொதுவாக கூறிய காரணங்களே இந்நோய்க்கும் பொருந்தும். எனினும் இங்கேயும் மறுபடியும் கூறுவோம்.

1. "கன்னி மயக்கத்தால் கண்டிடு மேகமே" என நாடி நூலிலும் (திருமூலர்) ;

2. "கிரந்திப் புண்ணிரண மேகக் கீசகனெனுந் துன் மார்க்கன் அருந்ததி யெனும் பாஞ்சாலி யன்னையைக் கண்ணுற்றானே" என மருத்துப்பாரதத்திலும் கூறி யிருப்பதால், நீரிழிவு நோய் அளவு கடந்த கலவியால் வரும் நோய் என அறியக் கிடக்கின்றது. அன்றியும் மிகு உணவு, சோம்பித் திரிதல், மனக் கலக்கம், பொருளின் மீது மிகுந்த இச்சை என்னும் இவற் றாலும் தாய்தந்தையரின் வழியாலும் வரக்கூடும்.

மேலும், நெய், பால், கள், இறைச்சி, சுவையுள்ள மீன்கள், இனிப்புச் சுவையுள்ள உணவுகள், வேகாப்பொருள்கள், ஈரப் பொருள்கள், வெறுப்பைத் தரத்தக்க பொருள்கள் (உணவுகள்) ஆகிய இவைகளை அருந்துவதாலும் இந்நோயும், மற்றும் மேக நீர் நோய்கள் பூராவுமே உற்பத்தியாகுமெனத் தெரியும்.

குறிப்பு.—இதற்குரிய மேற்கோள்யாவும் "மேகநீர்" தலைப்பில் காணவும்.

### முற்குறி குணங்கள்.

இந்நோயில் சிறு நீர் தெளிந்த நீர் போல அடிக்கடி சால் படி, அரைப்படியாக அளவுக்குயதிகமாக இழியும். இழிந்த நீர்த்துளிகள் சற்று உலரின் பிசுபிசுத்துக்காணும். உடல் வன்மை நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வரும். நா வறட்சி, தாகம், களைப்பு முதலிய குறி குணங்களும் தோன்றும்.

(சி. ம.)

### பிற்குறி குணங்கள்.

முற்குறி குணங்களில் கூறியவற்றைத் தோற்றுவித்து, சிறு நீர் மிகுந்த அளவில் இறங்கும். சிறு நீரின் நிறம் தண்ணீரைப் போலும், நிறை அளவு கடந்தும், எடை கனத்தும், மணம் தேன் போலும் காணப்படும். சிறு நீரைச காய்ச்சின் தேன் மணம் வீசும். நீர் விட்ட இடத்தில் ஈ எறும்புகள் மொய்க்கும். உடல் நாளுக்கு நாள் மெலிவடையும். தோலில் நெய்ப்பசையற்று வறண்டு சுருக்கம் விழும். உடல் வெளுத்த மஞ்சள் நிறமடையும். நா வறட்சி, மிகுந்த நீர் வேட்கை, மிகுந்த பசி, புசித்த சற்று நேரத்துக்கெல்லாம் மீண்டும்பசி எடுப்பதுபோன்ற தோற்றம் முதலியன உண்டாகும். நெய், பால், முதலிய ஊட்டம் தரக் கூடிய பொருள்களை உண்ணினும் உடல் ஊட்டம் பெறாமை முதலிய குறிகளை நிலைக்கச் செய்யும்.

இந்நோய் பெரும்பான்மையாய் ஐயக்காலமாகிய முதுமையில் உண்டாகும். சிறு பான்மை இளவயதிலும், நடு வயதிலும் வருவதுண்டு.

தக்க மருத்துவஞ் செய்து நோய் தீராவிடின் நோய் முதிர்ந்து தனக்குத் துணையாகப் பலவகைப்பட்ட கேடுகளையும் விளைவிக்கும். சிறு நீர் அடிக்கடி மிகுந்து வெளியாவதுடன் அங்கு உடல் பத்தை இளக்கிச் சர்க்கரை வடிவமாய் நீர்வழியே வெளியாகிவிடும். மயக்கம், தலை சுற்றல், களைத்து வீழ்தல், தன் சுரணையில்லாதிருத்தல், மூச்சும் வியர்வையும் தேன் மணம் வீசல், கண் மங்கல், (கண் காசம்), கண்ணில் திரை (படலம்), உண்டாதலாகிய குறி குணங்களையும் காட்டும்.

பிறகு அதிகளவில் இறங்கிக் கொண்டிருந்த சிறுநீர் நாளடைவில் அளவில் குறைந்து கொண்டேவந்து நீர்ச் சுருக்கு, நீர்க்கட்டு நோய்களை யுண்டாக்கிப் பசியின்மை, செரியாமை, ஓக்காளம், வாந்தி, வயிற்று நோய், மனக் கலக்கம, சுனம, மயக்கம் ஆகிய குறி குணங்களைக் காட்டி நோயினனைப் படுக்கையில் கிடத்தி மூச்சுத் தடுமாறல், திணரல் இவற்றை யுண்டாக்கி நாடிகள் தளர்ந்து மரணமும் சம்பவிக்கும. அல்லது இருமல், இரைப்பு, இளைப்பு (சயம்), தமரக நோய், நரம்பு தளர்ச்சி, வாதரோகம், ரத்தக் கொதிப்பு முதலிய நோய்களைத் துணைக் கொண்டு நோயினனைக் கொல்லும்.

சில வேளை சொறி, சிரங்கு, கட்டி (பிளவை) முதலியவைகளை வருவித்து பலப்பல துன்பங்களை உண்டாக்கும்.

குறிப்பு.—இந்நோயில் கிளைக்கும் கட்டி (பிளவை)வகைகளைப் பின்னாடி விவரமாயும் தனித்தும் கூறப்பட்டுள்ளன.

### முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

மேக நீர் நோய் வரும் வழி என்ற தலைப்பிலும், மதுமேகம் என்னும் இனிப்பு நீர் நோய் வரும் வழி என்ற தலைப்பிலும கூறிய படி தன் வினை-புறவினைக் காரணங்களால் முக்குற்றங்களும் கேட்டையுமு. குறிப்பாக ஆரம்பத்தில் அழல் குற்றமிகுதியினால் உடலில் காங்கையை உண்டாக்கி, வாயுக்களையும பெருக்கி, அவற்றின் காரணமாக மீண்டும ஐயக் குற்றமும் வளிக் குற்றமும் கேடடைந்து உடற்றாதுக்கள் தத்தம் தொழிலைச் சரிவரச் செய்ய வொட்டாது. அவற்றிலுள்ள உடலுயிருக்கு ஆதாரமாகிய சத்துக்களைச் சிறுநீர் வழியே வெளியாக்கும். முக்குற்றங்களும், ஐந்து பிராணாதிவாயுக்களும், ஏழு உடற்றாதுக்களுமே இந்நோயில் கெடடைவதாகக் கருத வேண்டும். கேடடையும் முக்குற்றங்கள், வாயுக்கள், உடற்றாதுக்களுக்கேற்ப இந்நோயின் வன்மையும் பொருந்தியிருக்கும். பசித்தீ கெட்டு, உடல் வன்மை குறைந்து பலவான தொடர்பு நோய்களுக்குமிடம் கொடுக்கும். இதனை—

"குறியுடனே மேகந்தான் கொடுமை செய்து,
குறைந்து வருந்தாது வெல்லாங் குன்றிப்போகும்".

எனப் பதினென் சித்தர் நாடி நூலில் கூறியிருப்பதால், உட்டிண வடிவாகி மிகுந்த உடற்றாதுக்களின் உயிர் சத்துக்களை இளக்கிச் சிறுநீர் மூலமாய் வெளியாக்குவதே இனிப்பு நீர் நோயின் அல்லது நீரிழிவு நோய் என்னும் மேக நீர் நோயின் பிரதான பண்பேயாகும்.

''மேகம் பிறக்கும் விதஞ்சொன்னா ரெந்நந்தி
ஆகுமிளந்தைப் பருவமதில் மோகித்தும்,
போகந்தினஞ் செய்யிற்புகழ் மந்தத்தே கூடில்
வாகும் பசியால் வழங்குஞ் சையோகமே''.

2 ''சையோகஞ் செய்யத் தனித்த சுழியோடும்
ஐயாவமிர்த மடக்கிக்கனலேறும்
மெய்யாக விந்து விழப்புண்ணாகும்
மையான மேகம் வளருங் கிரந்தியே.''

3. ''கிரந்தியிரணங் கிளர்ந்திடுஞ் சீமேகம்
குரைந்திவை யிரண்டாறு வாய்வு சூலையாம்
பரந்திவை மூன்றாற் பல பல மேகங்கள்
துரந்திவை தொட்டுச் சூழ்நோய்களுற்றதே.''

(திருமூலர் நாடி.)

என்பதினால், மந்தம் உண்டான போதும், பசி வேளையிலும் கலவி ஏற்படின் மூலக்கனல் மிகுதிப்பட்டு, அந்நிலையில் விழும் சுக்கில சுரோணிதம் அங்கு தாபிதத்தையும், புண்ணையுமுண்டாக்கி, சீழையும், கிரந்தி என்னும் கழலையையும் பிறப்பிக்குமெனவும், இம்மூன்றின் காரணமாகப் பலபல மேகரோகங்கள் உற்பத்தியாகுமெனவும் அறிகிறோம். பிரமியம் என்னும் வெள்ளை நோய்க்கும், பிரமேகம் என்னும் நீரிழிவு நோயாகிய மேக நீர் நோய்களுக்கும் இக் காரணம் பொருந்தும் என்பதையும் தெரிகிறோம்.

நாடி நடை.

1. ''இருமியே பித்தமும் வாதமுங் கூடிடில் (வர)
மருவுசல மேகம் வாருதி போலாகும்,
உருவம் வேறாகு முண்டவுடற் காய்ந்திடும்
உருகவே வூனோடு உறிஞ்சி இளக்குமே.''

(திருமூலர் நாடி.)

2. பார்த்திடு மூன்றும் பதிந்து மெலிந்து நிற்கில்
சேர்ந்திடு மேகம் உள்தோன்றியே பொருந்தி மெய்யில்''.

(சி. ம.),

என்றதால், அழல்வளிக் கலப்பு நாடியால் பெருமழையாலோடும் நீர் போலச் சிறு நீரிறங்கும். உருவம் வேற்றுமையடையும். அளவு கடந்து உண்ணினும் மென்மேலும் பசியுண்டாகும். உடலில் ஊன் கரைந்து சிறு நீராக வெளியாகும். அன்றியும் சிறு நீர் இனிக்கும் என்பதாகும்.

மேலும், மூன்று நாடிகளும் மெலிந்து நிற்கும் நிலையில் தேகத்தில் மேகநீர் தோன்றும் எனவும் மேற்கூறிய இரண்டாவது மேற்கோளால் அறிகிறோம்.

3. " இனிக்கின்ற வாதத்திடை சேரில் ஐயந்தான்,
பனிக்கின்ற கள்ளுப் பதனி போல் நீரோடும்,
கனிக்கின்ற மேனி கரைந்து வெளுப்பேறும்
தனிக்குமது மேகந் தப்பாதையமே ".

(திருமூலர் நாடி).

என்றதால்,

இதனைக் குடிலநாடி எனக் கூறுவார். வளி நாடியும் ஐய நாடியுங் கூடி அழல் நாடியை உயர்த்தும் என்பர். சிலர் இதனை வளி நாடி மிகுந்திருக்கும் நிலையில் ஐயமுமிகுந்து கூடின் இனிப்ப நீர் உற்பத்தியாகுமென்பர். அந் நீர் கள்ளைப் போலும், பதனி நீர் போலுங் காணப்படும். உடல் இளைத்து வெளுப்பாகும். இதுவே மதுமேக நோய் என்பதில் சந்தேகமில்லை என்கிறார்.

4. "துரணமுடன் நீர்ப்பாடு கெர்ப்பப்பாடானாற்
சொல்லுகிறேன் நாடியெல்லாஞ் சுழன்று காணும். "

(பரிபூரண நாடி.)

என்றதால், நீர்ப்பாடு என்னும் நீரிழிவு நோயிலும், கெர்ப்பப்பாடு என்னும் சூதகப்பெரும்பாடு அல்லது துவாலை என்னும் நோயிலும் நாடிகள் மூன்றும் சோர்வுடன் தளர்ந்து காணும் என்பதே இதன் பொருளாகும்.

5. " பற்பிடித்த மேகமென்றால் பித்தமீறும்
பாலகனே காங்கை கொண்டு நீராம் பாரே ".

(பரிபூரண நாடி).

என்றதால், பித்தம் என்னும் அழல் நாடி மீறி நடக்கின் உடலில் மூலக்கனல் (காங்கை) மிகுதியாகி அப்பால் அது உடற்றாதுக்களிலுள்ள சத்துக்களை இளக்கி நீர்மயமாக்கி மேக நீர் நோயை விளைவிக்கும் என்பதாகும்.

6. " நீர்மேகமானவர்க்கு நாடிதானும்
நிர்ணயமாய் நாடியெல்லாம் பெலமே கெட்டுக்
கார்மேகம் போலே வந்த எரியின்மேலே
கண்டுவிழும் புழுப்போலே புரண்டு காணும் ".
(பரிபூரண நாடி).

என்றதால், நீரிழிவு நோயாகிய மேகநீர் நோயில் வருந்துபவர்க்கு நாடிகள் மூன்றும் நிச்சயமாகப் பலம் குறைந்தும் கேடடைந்துமிருக்கும். எங்ஙனமெனில், நெருப்பில் விழுந்த புழு, புரண்டு துடிக்குமாப் போல, நாடிகளும் நடைபெறுமென்கிறார்.

7. " வளர்ந்திடும் பித்த நாடி வலமிடம் பிசகாவண்ணம்
பிளந்தது தனித்துப் பச்சைப் புழுவது போலே யோடின்
உளநதனில் வறட்சி தங்கி உடம்புலர்ந்தத்தி தன்னில்
விளைந்திடுஞ் சுரங்கள் வந்து வளர் நீரின் போலாகும்மே".
(சி.ம.).

என்றதால், அழல் நாடியின் (பித்த நாடி) துடிப்பானது ஒரு பச்சைப் புழு எவ்வாறு தன் தலையை முன்வைத்து உடலை மேல் எழுப்பி, தலையிருந்த விடத்தே வாலைக் கொணர்ந்து வளைந்து (குடிலமாக) நடக்குமோ அவ்வாறே அழல் நாடி தனித்து, மிகுந்து நேராக நடக்கும் என்பதும் அச்சமயம் வளியும் ஐயமும் தங்கள் அளவில் குறைந்திருக்குமென்பதும், அப்பேர்ப் பட்ட அழல் நாடி மிகுதியால் உடலில் வறட்சி மிகுந்து, உடல் உலர்ந்து, உள்ளம் நைந்து என்பில் சுரமும் விளைவித்து மேகநீர் என்னும் நோயையும் உண்டாக்குமென்பதாகும்.

நீர்க்குறி—நெய்க்குறி.

1. வளிக்குற்றத்தாலுண்டாகும் நான்குவகை நீரிழிவு நோய்களில் இழியும் நீர் முறையே :—

(1) நெய்நிறத்தையும், மணத்தையும், இனிப்பு சுவையையும், பெறும் (நெய்மண நீர், ஆச்சியகந்தி மேகம்).

(2) பசு நீரின் நிறத்தையும் மணத்தையும் பெறும். (பசு நீர் மணநீர் ; சுத்தமேகம்).

(3) கொழுப்புள்ள இறைச்சியின் மணம் வீசும். அந்நீரைக் காய்ச்சின் தேன் மணம் வீசும். (ஊன் மணநீர், வாதப்பிரமிய மேகம்).

(4) ஆட்டுக்குட்டியின் கறியைக் கழுவிய நீர் போலிருக்கும். காய்ச்சினால் ஆட்டு நெய் போல் நிறமும், கருப்பஞ்சாற்றின் மணமும் இருக்கும். (இளமறிக் கொழுப்பு மணநீர் ; மாங்கிச சிராவி மேகம்).

இந்நான்குவகை நீரையும் தனித்தனியாக வெள்ளைப்பீங்கான் கோப்பையிலிட்டு வெய்யிலில் வைத்து ஒரு துளி எண்ணெய் மெது வாய்விடின் அவ்வெண்ணெய்த் துளி விரைந்து சிதறியோடின் அல்லது பலகண்களையுடைய சல்லடை போல் காணின் நோய் நீங்காததாகும். வளி நீர் நான்கும் தீராக்குறியையே காண்பிக்கும்.

2. அழல் குற்றத்தாலுண்டாம் நீரிழிவு நோய் ஆறு பிரிவுகளிலும் சிறு நீர் முறையே :—

(1) யானை மத நீர் நோயில் நீரானது யானையின் மத நீரைப்போலிருக்கும். நீரைக் காய்ச்சின் அதனடியில் உவர் மண் போல் படிந்திருக்கும்.

(2) கற்றாழைமண் நீரில் நீரானது கற்றாழைச் சாற்றின் நிறம், மணம், பெற்றிருக்கும். அதனைக் காய்ச்சின் கொடிய நாற்றமாய் நாறும்.

(3) சுண்ணமண நீரில் நீரானது சுண்ண நீர் போன்ற நிறமும் காரமும், பெற்றிருக்கும். அதனடியில் சுண்ணாம்பு படிந்தும் மேல்பாகம் தெளிவாயுமிருக்கும்.

(4) தித்திப்பு, நீரில் நீரானது அளவில் சற்று குறைந்தும், பசுமஞ்சள் நிறமும், தேன் மணமும் சுவையும், ஈ, எறும்பு மொய்த்தலுமாயிருக்கும். அந் நீரைத் தெளியவைத்தால் அதனடியில் வெண்மையாயும், பிசுபிசுப்புடனும் வண்டல் படிந்து இருக்கும்.

(5) பளிங்கு நீரில் நீரானது பளிங்கு நிறம் போலாவது தாழை விழுதுச் சாறு போலாவது நிறம் இருக்கும். காய்ச்சினால சீழ் நாற்றமாய் நாறும்.

(6) முயற்குருதி நீரில் நீரானது முயலின் ரத்தம் போல் சிவந்திருக்கும். காய்ச்சினால் புலால் மணம் கமழும்.

குறிப்பு.—பொதுவாக அழல் குற்றத்தாலுண்டாம் நீர்நோய்களில் நீரானது சிறிது மஞ்சள் நிறம் பெற்றும், ஈ எறும்பும் மொய்க்கும் என நூல்கள் கூறுகின்றன.

3. ஐயக்குற்றத்தாலுண்டாகும் பத்துப் பிரிவுகளான மேக நீர் நோய்களின் நீரானது முறையே :—

(1) வசாமேகம் என்னும் நிணமிதக்கும் நீர்நோயில், நீரின் மேல் நிணம் ஆடைபோல் படர்ந்திருக்கும். அந்நீரைக் காய்ச்சின் கொழுப்பை உருக்கிய நாற்றமுண்டாகும்.

(2) தூய்மை நீர்நோயில் நீரானது சுத்த சலம் போல் தூய்மையாகவும், தெளிவாகவுமிருக்கும். காய்ச்சினாலும் காய்ச்சாவிட்டாலும் நீரானது நல்ல தண்ணீரின் நிறமும் மணமும் பெற்றிருக்கும்.

(3) மூளையுருக்கு நீர் நோயில் நீரானது எலும்புக்குள்ளிருக்கப்பட்ட மூளையைக் கரைத்துக் கொண்டு வருவது போலிருக்கும். அந் நீரைக் காய்ச்சின் நிணநாற்றமாய் நாறும்.

(4) இளநீர்-நீர்நோயில் நீரானது இளநீரின் நிறத்தையும் மணத்தையும், பெற்றிருக்கும். அந் நீரைக் காய்ச்சினாலும் அங்ஙனமே நிறமும் மணமும் மாறாதிருக்கும்.

(5) கள் நீர்நோயில் நீரானது பனங்கள்ளைப் போல வெளுத்தும், நுரைத்தும்,புளித்தது போலுமிருக்கும். அந் நீரைக் காய்ச்சிப் பார்க்கில் பனங்கள் மணமும், அடியில் மாவைப் போல வண்டல் படிந்திருக்கும்.

(6) சுக்கிலநீர் நோயில் நீரானது சிறுஅளவில் குழகுழத்து, சுக்கிலம் போல் நிறமும் கனமும் பெற்றிருக்கும். பசையுள்ள மெழுகு போலும், தாழைச்சாறுபோலுமிருக்கும். அந் நீரைக் காய்ச்சினால் அடியில் ஈரல்போலக் கட்டியாயிருக்கும்.

(7) கழுநீர்—நீர்நோயில் நீரானது கழுநீரைப்போலச் சிக்குப்பட்டு இறங்கும். அந் நீரைக் காய்ச்சினால் அடியில் சங்கு சுட்ட சுண்ணாம்பு போலப் படியும்.

(8) தேன்நீர் நோயில் நீரானது தேனைப் போல் நிறம் வாசனை, கனம், சுவை, இவை ஒத்திருக்கும். ஈ எறும்புகள் மொய்க்கும். அதனைக் காய்ச்சின் வெல்லப் பாகின் மணம் வீசும்.

(9) உப்புநீர் நோயில் நீரானது காரமுள்ள சுண்ண நீர் போலிருக்கும். அந் நீரைக் காய்ச்சினால் அடியில் உப்பைப் போல் தங்கும்.

(10) இறைச்சி நீர் நோயில் நீரானது இறைச்சியைக் கழுவியதாலுண்டாகும் நீரின் நிறத்தையடையும், அந் நீரைக் காய்ச்சினால் கவிச்சடிக்கும்.

குறிப்பு.—பொதுவாக ஐயக் குற்றத்தாலுண்டாகும் நீர் நோய்கள் யாவற்றிலும் இழியும் நீரானது தடித்து, மாசுபடிந்தாற்போல் வெளுத்து நுரைத்தும் காணும். நீரில் விட்ட நெய்த் துளி பெரும்பான்மையும் சாத்தியக் குறிகளையே காட்டும். ஐய நீர்கள் பத்தும் எளிதில் தீரக்கூடியவையாகும்.

### எரு (மலம்).

1. வளி நீர்நோய்களில் மலமானது தீய்ந்து, கறுத்துக்கடினப் பட்டுப் புழுக்கைபோலிறங்கும்.

அழல், நீர்நோய்களில், மிகுந்த கழிச்சலுடன் மஞ்சள் நிறம் பெற்றும், எருவாய் எரிச்சலோடும் இறங்கும்.

3. ஐயநீர் நோயில் வண்மையாயும், மாவைக் கரைத்தாற் போலும், நுரைத்தும் அடிக்கடி மலம் இறங்கும்.

## 41. தெளி நீர்.

**வேறு பெயர்கள் :** **தூய்மை நீர் ;** உதகமேகம் என்பன.

**இயல்.**—இது ஐய நீர்களில் ஒரு பிரிவாகும். மாசு, மருள் இல்லாமல் பனிநீர் போலச் சிறுநீர் தெளிவாய் இருத்தலும், எடையற்றதாயும், அளவில் மிகுந்து இழிதலும், நீர்வேட்கை உண்டாதலும் முதலிய இயல்புடைய நோயாகும்.

### நோய் வரும் வழி.

மனக்கவலை, அடிக்கடி திடுக்கிட்டுப் பயப்படல், உணவின் வேறுபாடுகள் முதலிய காரணங்களாலும், தாய் தந்தையர் வழியாலும் இந் நோய் வருவதுண்டு. தலை மண்டையில் அடிபடினும் இந் நோய் வரக்கூடுமெனக் கூறுவர் சிலர். பெரும்பான்மையும் இந்நோய் சிறுவயதினருக்கும், நடுவயதினருக்கும் வரும் நோயாகும்.

(சி.ம.).

### குறி குணங்கள்.

சிறுநீர் மாசு மருவில்லாமல் தெளிவாயும் எடையற்றதாயும், அளவில் மிகுந்தும் இழியும். நீர்வேட்கையுண்டாகும். நாவறளும் உடல் நாளுக்குநாள் இளைக்கும். இந்நோயில் சிறுநீர் அளவில் அதிகமாக அடிக்கடி இறங்கிக் கொண்டிருப்பினும், அதில் இனிப்பும், எடையுமிருப்பதில்லை. ஆயினும், நோய் முற்ற முற்றத் தோல் சுருங்கி வறண்டு பசித்தீயினைக் கெடுத்து, கழிச்சல் அல்லது மலச்சிக்கல் இவற்றை உண்டாக்கும். தலைநோய், மயக்கம், சினம், சோம்பல், தூக்கமின்மை, கண்ணிமை நோதல், கைகால்கள் குடைதல், மூக்குத்தண்டு நோதல், கொறுக்குவலி ( Cramps ) கண்டைச் சதைத் துடித்தல் முதலான உடல் வன்மைக் குறைவாலுண்டாம் குறிகுணங்களைக் காட்டும். சில வேளைகளில் சுரமும் வருவதுண்டு.

சில ஆண்டுகள் வரை இந்நோயை நிலைக்கச் செய்து தக்க மருந்துகளாலும், உணவுகளாலும் குணமாவதுண்டு. இன்றேல். நோய் வன்மை பெற்று, உடலில் ஊறி உடற்றாதுக்களைக்

கெடுத்து மயக்கத்தையுண்டாக்கிப் படுக்கையில் கிடக்கச்செய்து காக்கை வலியைப் போன்ற வலியைப் பிறப்பித்து நோயினனை ஒரு திங்களில் கொல்லும்; அல்லது உடல் வன்மை குன்றிய நிலையில் மற்ற நோய்களைத் துணை கொண்டும் அதாவது இளைப்பு நோய், ஐய சுரம், ஐயவளி சுரம், முதலியன பிறந்து நோயினனை விரைவில் கொல்லும் என்பர்.

இந் நோயில் உடலானது நாளுக்கு நாள் சந்திரன் தேய்வது போல் தேய்ந்து கொண்டுவரும். தேய்ந்த உடல் குருதி குறைவால் வெளுத்துப் போவதால் இந்நோயினைச் "சோமநோய்" எனச் சில நூலோர் கூறுவர்.

(சி.ம.).

## 42. வெண்ணீர் நீர்.

**வேறு பெயர்கள்:** சுக்கில நீர்; தவள நீர் என்பன.

இயல்.—இதுவும் ஐயநீர்ப் பிரிவுகளிலொன்றாகும். உடற்றாதுக்களில் ஏழாவதான தவளம் (சுக்கிலம், விந்து) மெலிவடைந்து, அதன் இயற்கை ஒளி நிறம், எடை, கனம் முதலியன குறைந்து தானாகவே சிறு நீருடன், கலந்து இழிதலும்; நீரிழிவதற்கு முன்னும் அல்லது பின்னும் வெளியாவதுமான இயல்புடைய நோயாகும்.

### நோய் வரும் வழி

இளம் வயதிலேயே பெண் இச்சையில் ஈடுபடல்; பெரும் பொருள் வேண்டுமென்னும் இச்சையுடன் அதையே எப்போதும் சிந்தித்துக்கொண்டிருத்தல்; மனத் தளர்ச்சி; ஊக்கமின்மை முதலிய காரணங்களாலும் தாய் தந்தையர் வழியிலும் இந் நோய்பிறக்குமென்பர்.

### முற்குறி குணங்கள்.

ஆரம்பத்தில் இந்நோயில் அடிக்கடி நீரிழிதல், தன்னையறியாமலே இரவில் தவளம் வெளியாகிவிடல், உடல் நாளுக்கு நாள் மெலிவடைதல், உடல் நடுக்கல் முதலிய குறி குணங்களைக் காட்டும்.

### பிற்குறி குணங்கள்.

மேற்கூறிய முற்குறி குணங்களைக் காட்டி அடிக்கடி இழியும் நீர் தடித்த நூல் போல் இழிவதும், இதனைக் கண்டு நோயினன் அச்சங் கொண்டு, மனந் தளர்ந்து, தன் வன்மையே நீர்வடிவமாய் இழிந்து விடுகின்றது என்னும் ஏக்கம் நாளுக்கு நாள் மிகுந்து, கவலையதிகமாகி உடல் மென்மேலும் மெலிவடைவதும்; இரவில் தூக்கமின்மை, படுக்கையில் விந்து நழுகல், கைகால்கள் அயர்தல்,

எப்போதும் முக்காடிட்டுத் தனித்துக்காலங்கழித்தல் ; பிறரைப் பார்ப்பதற்கு நாணுதல் ஆகிய இக்குறி குணங்களும் ; செரியாமை, வாந்தி, ஓக்காளம், கழிச்சல் அல்லது மலச் சிக்கல், புளியேப்பம், கைகால் நடுக்கல், விதிர்விதித்தலாகிய உடலைப் பற்றிய குறி குணங்களுண்டாகும்.

ஆரம்பத்திலேயே தக்க மருத்துவம் புரிந்து நோயினைப் போக்காவிடில் மனக்கவலை மிகுந்து உலக வாழ்க்கையை வெறுத்து உயிரை மாய்த்துக் கொள்ளத் துணிவும் ஏற்படுவதுண்டு.

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

அகச் செயல் புறச் செயல்களால் அழல் குற்றமிகுந்து ஐயத்தை இளகச் செய்யும், அதனால் தவளம், தன் எடை, கனம், நிறம் முதலியன கெட்டு நீருடன் கலந்து வெளியாகும். சுக்கிலதாது நட்டமானால் மற்ற தாதுக்களும் முறையே தத்தம் வன்மை இழந்து உடல் மெலிவடையு மென்பர்.

## நாடி நடை.

1 " பொருளான வாதத்தில் பித்தஞ் சேர்ந்து
பொருந்து குணங்களுஷ்ண வாயு சத்தி,
செரியாமை புளித்தேப்பம் பொருமல் நீரிற்
சிவப்பு மலம் பிடித்தலுருத்தாது நட்டம்,
கருவான தேகமதிலுளைச்சல் சோம்பல்
கைகால் தறிப்பு நாக்கசக்கு மன்னம்,
பரிவான வூண்குறைதல் ருசிபோதல்
பலநோயும் வருத்திவைக்கும் பாங்குதானே.

என்பதினாலும் ;

2 " சிறப்பான பித்தத்தில் வாத நாடி
சேரிலுறு தாது நட்ட முதிரபீடை,
உறைப்பாகச் செரியாமை குன்மஞ்சூலை
உற்ற சுறங்கி ராணி வயிற்றிரைச்சல் மந்தம்
அறைப்பான ஓங்கார பிறநீர்க் கோவை
ஆயாசங்கிரக்கமொடு மயக்க மூர்ச்சை,
முறைக்காய்வு விட வீக்க மூல வாய்வு
முரடானநோய் பலவுமுடுகும் பண்பே."

என்பதினாலும் ;

3 " வகையான பித்தத்தில் வாய்வு கூடி
வசமானால் வலி குன்மஞ்சூலை வாய்வு
பகையான வாந்தி விக்கல் அருவருப்புப்
பயித்தியங்கள் செரியாமை புளித்த ஏப்பம்,
தகையாத ஈரல் வலி நெஞ்சு நோவுந்
தலைகிறுக்கு மசதியாந் தாது நட்டம்,
துகையான மூல வாய்வுற்றாலுஷ்ணஞ் சோகை
துடர்ந்து வரும் பல பிணக்குந் தொனிப்புதானே."

என்பதினாலும் ;

(சதகநாடி)

வளி அழல் கலப்பு ; அழல் வளிக் கலப்பு ; அழல் மிகுதியுடன் வாயு கூடினும் தாது நட்டம் விளைவிக்கும் என அறிகிறோம்.

### 43. மேக நீர்க்கட்டிகள்.

வேறு பெயர்கள் : மேகக்கட்டி ; மதுமேகக் கட்டி ; நீரிழிவுக் கட்டி ; நீர்க்கட்டி; இனிப்பு நீர்க்கட்டி; தித்திப்பு நீர்க்கட்டி ; பிளவை ; நீர்ப்பிளவை ; மேகநீர்ப் பிளவை என்பனவாம்.

இயல்.—நீரிழிவு நோயாகிய மேக நீர் அல்லது குறிப்பாக மதுமேகம் என்னும் தித்திப்பு நீர் உடலில் ஊறி, உடல் வன்மையைக் கெடுத்து, ஆங்காங்கு சிறு பருக்களையேனும், பெருங் கட்டிகளையேனும், பிறப்பிக்கும் நோயாகும். சில சமயம் பருக்கள் அல்லது கட்டிகள் பிறக்காமலே சொறிந்த இடத்திலேனும் அடிபட்ட இடத்திலேனும் புண்பட்டுச் சினைத்துப் பெருந் துன்பத்தை உண்டாக்குவதான இயல்புடைய நோயாகும்.

#### முற்குறி குணங்கள்

நீரிழிவு நோயின் வன்மை பெருகப் பெருக உடல் இளைத்தல், வியர்த்தல், தோல் சுருங்கி உலர்தல், நமைச்சல் முதலிய குறி குணங்களைக் காட்டி சொறிவதனால் குருதி வெளியாகிய இடத்திலேனும், அடிபட்டுப் புண்ணாகிய புண் ஆறாமலே பரவிக் கொண்டே புரையோடினும், புண் படாமலே வீங்கிக் கட்டிப் போலேனு முண்டாகித் துன்புறுத்தும்.

#### நோய் எண்.

" மேகத்தாலுண்டாகும் நீரிருபதிற்
பிளவை நிகழும் பத்தாம்,
ஆகுமவை கடுகோடு கடலை
நிலப் பூசினிமரிய கட்டி,

வாகுபெறு மடக்காமை
பேய்ச் சுரைக்காய் கூன் வலைக் கண்ணாகும்,
நாடு பெறுக் கூட்டென்னும் பிளவை
வகைகளிங்கவிர் நவிற்றினாரே.''

(கை-எழு-பிரதி அண்டு சி.ம.)

என்பதினால், மேக நீர்த்துன்பத்தால் பிறக்கும் கட்டிகளை (பிளவை) பத்து வகையாகப் பிரித்துள்ளார்கள். அவைகளாவன:

1. கடுகுக் கட்டி (கடுகுப் பிளவை).
2. கடலைக்கட்டி. (கடலைப் பிளவை).
3. நிலப் பூசினிக் கட்டி (நிலப்பூசினிப் பிளவை).
4. விப்புருதிக் கட்டி (கட்டிப் பிளவை.)
5. மடக்குக் கட்டி (மடக்குப் பிளவை).
6. ஆமையோட்டுக்கட்டி (ஆமையோட்டுப் பிளவை).
7. பேய்ச் சுரைக்காய்க் கட்டி (பேய்ச் சுரைக்காய்ப்பிளவை)
8. அதோமுகக் கட்டி (கூன் பிளவை).
9. வலைக்கண் கட்டி (வலைக்கண் பிளவை).
10. புத்திராதிக் கட்டி (கூட்டுப் பிளவை) என்னும் பத்து வகைகளும் அனுபவத்தில் வழங்கப்படுவனவாகும்.

வேறு சில நூல்களில், மேக நீர்க்கட்டிகளைக் குற்றயளவாய் நான்கும்; குருதியளவாய் ஒன்றும், அடிபடல் வெட்டுப்படலாகிய காரணங்களால் ஒன்றும் கூடி ஆறு வகை என்பர். அவைகள் முறையே :—வளி ; அழல்; ஐயம் ; முக்குற்றம் ; குருதி ; கயம் ஆகிய கட்டிகளென வழங்கப்படும்.

மேற்கண்ட பத்து வகை மேக நீர்க்கட்டிகள் ஒவ்வொன்றின் குறி குணங்களை விளக்கியுள்ளார்கள்.

1. கடுகுப் பிளவை (கடுகுக் கட்டி.)

'' கடுகுப் பிளவையே காணுடல் முற்றிலுங்
கடுகினளவதாய்க் கடுகிடமின்றி
கடுகத் தோன்றியும் கடுக உடைந்துமே
கடுகமிகவலி காட்டுமுணரிதே.''

(இதன் பொருள்.)

கடுகுப் பிளவை என்பது கடுகு போன்ற வடிவத்துடன் சிறு கட்டிகளாய் ஒன்றன்பின் ஒன்றாய் இடைக்கிடை கடுகு இடவும் இடமின்றி, உடல் முழுவதையும் விரைவாய்க் கவர்ந்து கொள்ளும். மிகுந்த வலியை யுண்டாக்கும் என்பதாம்.

2. கடலைப் பிளவை (கடலைக்கட்டி).

" கடலைப்பிளவையே காணுடல்முற்றிலும்
கடலையளவிலுங்கண்டதின் வடிவிலும்
இடமில்லாதுரி இயற்றிடும் வலியதைத்
திடமதாயறி செப்பினர் சித்தரே."

(இதன் பொருள்)

கடலைப் பிளவையானது உடல் முழுமையும் கடலையள வாகவும், கடலையின் வடிவத்தைப் போலும், சிறிது இடை வெளியில்லாது தோன்றி மிக்க வலியையும் உண்டாக்கும் என்பதாம்.

3. நிலப்பூசினிப் பிளவை (நிலப்பூசினிக் கட்டி).

" நிலப்பூசினியை நிகழ்த்தக் கேளாய்
நிலப் பூசனியை நேர்வட்டமதாய்
தலத்திற்றடித்துச் சார்பல துன்பம்
அலமாயளிக்கு மது வென்றறியே."

(இதின் பொருள்.)

நிலப்பூசினிப் பிளவையானது உடலில் நிலப்பூசனிக் கிழங்கைப் போல் (சில வேளை நிலப்பூசனிக்காயைப் போல்) அளவும், வடிவையும் ஒத்த அவ்வளவு பருமனான தடித்த ஓரே கட்டியா யுண்டாகித் தாங்க முடியாத வலியையும் கிளை நோய்களையும் (துன்பங்களையும்) உண்டாக்குமென்பதாம்.

4. கட்டிப் பிளவை (விப்புருதிக் கட்டி).

"கட்டிப் பிளவைதனைக் கூறின்
கட்டியாயுள் வெளியிரண்டில்
கெட்டியாய் மிகு நோயினோடு
கிளர் நீர் வட்டவடிவங்கள்
திட்டமாய் பெற்றும் புடைத்துச்
சேர்ந்த விடத்தில் இருப்பொன்று
விட்டவ் விடத்தையோடுவது
மேவு மென்று விளம்பினரே".

(இதின் பொருள்.)

கட்டிப்பிளவையானது தோலின் மேலாவது அல்லது சதையின் மேலாவது (உள்ளிடத்திலாவது வெளியிடத்திலாவது) கட்டி போலப் பருத்து வட்டமாகவேனும் நீளமாகவேனும் வளர்ந்து,

மிக்க வலியோடு, சிலவேளை உடைந்து சீழ் வழிவதும், சில வேளை உடையாமலே அழுந்திப் போவதும் உண்டு. அன்றியும், முதல் முதல் உண்டான இடத்திலேயே நிலைத்து உலர்வது ஒரு வகைக்கட்டி. அஃது உலரு முன் அவ்விடத்தை விட்டு மற்றோரிடத்தில் புதிதாய்த் தோன்றி மாறிமாறி ஓடிக் கட்டிகளுண்டாவது மற்றொரு வகையாகும்.

5. மடக்குப் பிளவை (மடக்குக் கட்டி.)

" மடக்குப் பிளவை குறித்தன்மை
வருமேகீலில் தசை யிடங்கள்
அடிக்கணகன்று சுற்றியே தான்
அணைகளுயர்ந்து நடுப்பள்ளம்
படவே விழுந்து கருஞ்செம்மைப்
பாங்காய் வியர்வை வலியுண்டாய்
மடக்குக் கவிழ்த்தாற்போல் வடிவாம்."

(இதன் பொருள்.)

இது பெரும்பாலும் கீல்களிலும் தசைப் பற்றுள்ளயிடங்களாகிய பிட்டம், தொடை, முதுகு முதலிய இடங்களிலும் உண்டாகும். அது தோன்றும்போதே அவ்விடத்தில் கனத்து வீங்கி அடி பருத்து, அகன்று, அதன் ஓரங்களைச் சுற்றி அணையிட்டது போல் தோல் தடித்துச் சிவந்து நடுக் குழிந்து, கரு நிறமடைந்து அல்லது கரும் செம்மை நிறமடைந்து காணும். இக் கட்டி தாங்க முடியாத வலியையும் உடல் வியர்வையையும் உண்டு பண்ணும். கட்டியினின்று நீர் பெருகும். இது பார்வைக்கு அகலைப் போல் குழிவிழுந்திருப்பதால் " அகல் பிளவை " எனவும் அழைப்பர் என்பதாம்.

6. ஆமையோட்டுப் பிளவை (ஆமையோட்டுக்கட்டி.)

" ஆமைப் பிளவைக் குறித் தன்மை
ஆழக்குழிகள் மினுமினுப்பாம்
ஆமைப் படிவந்தனைத் தொட்டல்
அதுவும் வழுக்கும் பல மருந்து
மாமைப் படவே கொடுத்தாலும்
மாறாப் பலவாய் வருத்து விக்கும்
ஆமையோட்டைக் கவிழ்த்தாற் போல்,
ஆகும் வடிவமாய்ந்துணரே."

(இதன் பொருள்.)

ஆமையோட்டைக் கவிழ்த்தியது போன்ற வடிவத்தையொத்த கட்டி நாளுக்கு நாள் பெருத்துக் கொண்டே வந்து சிறுசிறு கண்கள் தோன்றி அக்கண்களிலிருந்து சீழ்வடியும். மற்றைய யிடங்

கள் வழுவழுத்து மினு மினுத்து ஒளிரும். வன்மையுள்ள பெரிய மருந்துகளைக் கொடுத்தாலும் எளிதில் உலராது. பல கேடு களை விளைவிக்கும் என்பதாம்.

7. பேய்ச்சுரைப் பிளவை (பேய்ச்சுரைக் கட்டி ; பேய்ச்சுரைக் காய்க் கட்டி).

'' பேய்ச் சுரைப் பிளவை பேசின்
பிறப்பிடம் நெருப்பாற் சுட்ட
தாய்மிகு எரிச்சலுண்டாய்
தருஞ் செம்மை கருமை நிறமும்
ஆய்வருங்கொப்புளங்கள்
அவைகள் பேய்ச் சுரைப் பிஞ்சாகும்,
காய்வு நோமயக்கஞ் சோர்வு
கழிதல் நீர் வேட்கை யாமே.''

(இதன் பொருள்.)

பேய்ச்சுரைக் கட்டி யுண்டாகுமிடத்தில் நெருப்பாற் சுட்டது போல் எரிச்சலுண்டாகும். பிறகு அவ்விடத்தே கருஞ் செம்மை நிறமான கொப்புளம் பிறந்து, அது பேய்ச்சுரைப் பிஞ்சைப் போல் வடிவெடுத்துப் பெருக்கும். அதன் அடிசிவந்து வீங்கி வலிக்கும். அத்துடன் சுரம், மயக்கம், சோர்வு, கழிச்சல், நீர் வேட்கை முதலிய குறிகுணங்களும் தொடருமென்பதாம்.

8. கூன் பிளவை (அதோ முகக் கட்டி.)

'' கூன்பிளவை தன்மையது கூறக் கேண்மோ
கூறவயிற்றேனு மிடுப்பிடத்திலேனும்
வானாகும் பருமனாய் எழும்பி மிக்க
வருத்தத்தை வியர்வைதனை வருவித்துற்ற
தானாக வலி யினுடன் கெட்ட நீரும்
தனிச்சுரந்துற்ற கரு நிறமாய் மேலில்
ஆனாமல் பூசினார் போலழுந்தி
யாக நிமிறொண்ணாத வாறதாமே.''

(இதின் பொருள்.)

கூன் பிளவையானது வயிற்றிலாவது இடுப்பிலாவது பருமனாக எழும்பி மிக்க துன்பங்களையும் வியர்வையு முண்டாக்கி வலிப்பு, கெட்ட நீர் வெளிப்படல் வெப்பு மிக்க கரு நிறத்தோடு மேல் பக்கத்தில் பூசினாற் போலவும், உள்ளழுந்தியும், உடலை நிமிர வொட்டாமல் கூனும்படி செய்யும் என்பதாம்.

9. வலைக் கண் பிளவை (வலைக் கண்கட்டி.)

"வலைக் கண் பிளவை வழுத்திவிடின்
வன்மையாக வெழும்பிமரத்
தலைக்கண் வேர் போல்பல கொடிகள்
சேர்ந்து குழம்பு நீர் சொரிந்து
நிலைத்து நாட்கு நாள் பரவி
நேரும் வலையைப் போல் கண்கள்
வலிக்குஞ் சில காலில் லாமை
வருநோய்ப் புரையும் போமன்றே."

(இதன் பொருள்.)

வலைக்கண் கட்டி உண்டாகும் போதே அவ்விடத்தில் எரிச்சல், குத்தல் குடைதல் என்னும் குறிகளைக் காட்டித் தடித்துச் சிவந்து வீங்கி வளரும். மொத்தாகாரமாக எழும்பி மரத்தின் வேர்களைப் போலப் பல நாடி நரம்புகள் சார்ந்து குழம்பு போன்ற நீரைச் சொரியும். பின்பு நாளுக்கு நாள் மிகப்பெருத்து வலையின் கண்களைப் போல் கண்கள் விடுவதும் சில காலம் அதிகத் துன்பங்களையும் நோயையும், மற்றும் சில காலம் நோயில் லாமலுமிருக்கும் என்பதாம்.

10. கூட்டுப் பிளவை (புத்திராதிக் கட்டி).

"கூட்டுப் பிளவைதனையுரைக்கின்
கூடும்பலவாங் கொப்புளங்கள்
காட்டிச் சிலபல பிளவைகளே
கலந்தொன்றாக திரள்வதுவாம்.
வாட்டி வுடலை மிக வெரிச்சல்
வருவித்தந்த நோயினனை
நாட்டிலிருப்பானோவென்று
நாடச் செய்யுமீதறியே."

(இதன் பொருள்.)

கூட்டுப் பிளவை என்னும் கட்டியில் பல கொப்புளங்கள் பிறந்து அவற்றுள் சில அல்லது பல ஒன்று கூடித்திரண்டு ஒரு பெருங் கட்டியாய்த் தோன்றும். இதில் தாங்க முடியாத வலியும் எரிச்சலும் உண்டாகும். இந் நோயினனை மிகவும் வாட்டி ஐயப் பெருக்கையுமுண்டாக்கும். கண்டோர்கள் இவன் உயிர் வாழ்வானோ என்று சந்தேகிக்கும்படியான துன்பங்களையுமுண்டாக்கும் என்பதாம்.

(சி.ம., கை-எழுத்துப் பிரதி.

### மேக நீர்க் கட்டிகளின் பொதுக்குறி குணங்கள்.

முற்குறியில் கூறியபடி உண்டான கட்டிகள் தடித்து வீங்கி மிகுந்த வலியை யுண்டாக்கி நாளுக்கு நாள் பரவிக் கொண்டே வரும். கட்டி பழுக்குந் தருவாயில் தோல் சுருங்கிக் கருத்துக் காணும். பிறகு அதில் சிறு கொப்புளங்களைப் போல் பருக்கள் உண்டாய், உடைந்து சீழ் வடியும். சீழ் முற்றிலும் வெளியாகாமல் கட்டியிலுள்ள சதை அழுகிச் சீழும், அழுகல் சதையும் சேர்ந்து புண் எளிதில் உலராமலிருக்கும். மருந்து நீர்களால் கழுவி மருந்து போடின் அழுகல் சதையும் சீழுங் குறைந்து நாளுக்கு நாள் குணமாகும். இல்லையேல் சிலை யோடிக் கீழ் நோக்கிப் பரவும்.

மேக நீர்க்கட்டிகள் முதுகிலும், பிட்டத்திலும், புறங்கழுத்திலும் தோளிலும் உண்டாகுமானால் அதனை '' இராச பிளவை '' அல்லது '' இராசக் கட்டி '' என்று கூறுவர். இவ்விடங்களில் காணும் '' இராசக் கட்டி '' களில் பல துன்பங்கள் தொடரும்.

மற்றயிடங்களில் கட்டிகள் தோன்றின் அதனைப் '' பக்கப் பிளவை '' என்று கூறுவர்.

மேற்கூறிய பத்து வகை மேகநீர்க் கட்டிகளை அவற்றின் உருவம் அல்லது வடிவத்தைக் கொண்டு பெயரிட்டனர். ஆனால் '' அரசப் பிளவை '' என்னும் '' இராசக் கட்டியும் '' '' பக்கப் பிளவையும் '' அவை உண்டாகும் இடத்தைப் பொருத்தும், துன்பத்தின் அளவைக் கொண்டும் இரு பிரிவாகக் கூறியிருப்பினும் இவை யிரண்டும் முற்கூறிய பத்து பிரிவுகளுள் அடங்குமென அறியவும்.

(சி.ம.)

### தீரும் தீராதவை.

மேகநீர் நோயில் வருந்தி மெலிந்தவர்களுக்கு மார்பு, அடிமுதுகு, முலைக்காம்பு, தோள், குதம், தலைமையம், கீல்கள், கால் விரல்கள், கை விரல்கள், அக்குள், புருவ மய்யம், கழுத்தின் பின்புறம், இருதயம், நடுத் தொப்புள், உதடு, அண்டம், முழங்கால், கண்டச் சதை, தொடைச் சதை, கடிஸ்தானம் (குறியிடம், அரை) இவ் விடங்களில் யாதாமொரு மேகநீர்க்கட்டி யுண்டானால் எளிதில் தீராவெனவும்; மற்ற யிடங்களில் கட்டிகளுண்டானால் எளிதில் தீரும் எனவும் நூல்கள் கூறுகின்றன.

### முக்குற்ற வேறுபாடுகள்.

மேகநீர்க்கட்டிஎன்பது மேகநீர் நோய்களின் துணை நோயாகையால் மேகநீர் நோயில் (நீரிழிவு) கூறிய முக்குற்ற வேறுபாடுகளே இந்நீர்க்கட்டிக்கும் பொருந்தும். இதில் உடல் வன்மையும், குருதியும் குறைந்து ஐயத்தைப் பெருகச் செய்யும்.

(சி.ம.)

நாடி நடை.

"விரணமுடன் புண்புரைக்கு வாத பித்தம்." (பரி பூரண நாடி) என்பதினால் வளி அழல் நாடி புண், புரை, கட்டி முதலிய வற்றை அறிவிக்கும் என்பதாம்.

### 44. குடிவெறி நோய்.

**வேறு பெயர்கள் :** மதாத்தியம், மதுவினால் வருநோய் என்பனவாம்.

இயல் :—இது கள், சாராயம், புளிப்பேறிய பழச்சாறுகள் முதலியவற்றை தன் அளவுக்கு மிஞ்சிப் பருகலால், அறிவு குன்றிக் கண்டது கண்டவர்றாகப் பேசச் செய்யும் இயல்புடைய நோய் எனப்படும். குடியின் மணம் வாயில் நாறும் சுபாவமுண்டு.

குடி வகைகளின் பண்பும் செயல்களும்

பண்புகளாவன :—வெப்பு, வறட்சி, புளிப்பு அல்லது காரம், பரவுந்தன்மை, காற்றில் கலக்குந் தன்மை நுண்மையாகியவை களாகும்.

செயல்களாவன :—உண்ட பின்பு உடற்குள் ஒருவித அலைை எழுப்பி, மனதைத் தூண்டி, ஒரு விதக் களிப்பைத் தந்து இனிமை யாகவும் கடுமையாகவும் பேசச் செய்து பின்பு அறிவையும் உடல் நிலை யையும் குன்றச் செய்யும். குடியாலுண்டாகும் வெறிக் குணங்களை நான்கு நிலைகளாக சில நூல்கள் கூறும்.

1. முதல் நிலையில்—

(i) மனதிற்குக் கிளர்ச்சி, ஊக்கம். களிப்பு இவற்றைத் தரும்.

(ii) புத்திக்கூர்மையை அளித்து மறந்து போனவைகள் ஞாபகத்துக்கு வரும்.

(iii) உடல் வெப்பமடைந்து வன்மை பெற்றதுபோல் தோன்றும். சிற்றின்பத்தில் ஈடுபடக்கூட நினைக்கும்.

(iv) உணவு எளிதில் செரிப்பிக்கும்.

(v) இனிமையாகப் பாடல், ஆடல் முதலியவற்றில் தலைப் படுத்தும். மனக் கிளர்ச்சியாலும். உடல் வன்மையாலும் மகிழ்ச்சியைப் பிறப்பிக்கும்.

2. இரண்டாம் நிலையில்—

(i) குடியினால் உடல் வன்மையும், மனமகிழ்ச்சியும் அறிவும் குன்றி இயற்கையான நன்னடத்தை நீங்கிப்போம்.

(ii) அதற்கு மாறாக வெறி பிடித்தவன் போல் பிறரை இடித்தல், உதைத்தல், திட்டல் என்னும் தீச்செயல்கள் உண்டாகும்.

(iii) தூக்கமுண்டாகும்.

3. மூன்றாம் நிலையில்.—

குடிவெறித் தன்மை மீண்டும் அதிகமாயின் ; (i) தூக்கம் தவிர மேற்கூறிய மற்றக் குறிகுணங்களுள் பதிந்து அடங்காவெறி பிடித்தவன் போல் நடிப்பான். (ii) யாரையும் மதிக்க மாட்டான். அடங்காத் தன்மை யுண்டாகும். (iii) தான் செய்வது இன்னதென்றும் அறியமாட்டான். (iv) மனதிலுள்ளதை அப்படியே வெளியிடுவான்.

4. நான்காம் நிலையில்—

(i) மன நிலை அழியும். உடல் நிலையும் அழியும். (ii) கைகால்கள் தளர்ந்து நடை தட்டுத் தடுமாறும். (iii) மரம் போல் கீழே விழுவான். (iv) நாடி நடை தளரும். உடல் வியர்க்கும். கை கால்கள் சில்லிடும். (v) சில வேளை உயிரையும் மாய்க்கும் என்பர்.

குடிவெறியின் பொதுக் குறி குணங்கள்.

இந் நோய் ஆரம்பத்தில் ஒரு விதமான மகிழ்ச்சி, உற்சாகம், உடல் வன்மை பெருகியது போன்ற உணர்ச்சியும் ஏற்படும். பிறகு அறிவு மயங்கி மயக்கம், கைகால்கள் தளரல், உதறல், நாவறட்சி, நீர் வேட்கை, கண்கள் இருளல், தலை சுற்றல், மார்பு படபடத்தல், துடித்தல் முதலியவற்றைக்காட்டும். அதன் பின் மனந் தடுமாறல், புலம்பல், ஆடல், பாடல், வாயில் சொள்ளுவடிதல், வாந்தி என்னும் குறி குணங்களை யுண்டாக்கும். பிறகு மயக்கமுடன் உரத்த குறட்டையை யுண்டாக்கிச் சுரணையற்றுப் படுத்துறங்கச் செய்யும். அதற்கு மேலும், வியர்த்தல், நாடி தளரல், கைகால்கள் துவளல், மூச்சுத் திணறல் ஆகிய குறி குணங்களையு முண்டாக்கி நோயினனைக் கொல்லவும் செய்யும்.

முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

இக் குடியினால் அழல் குற்ற மிகுந்து மற்ற இரு குற்றங்களையும் கேடடையச் செய்து, கீழ் நோக்குங் கால் மேல் நோக்குங் கால், பரவுகால் இவற்றைத் தூண்டி அவைகளின் தொழில்களைப் புரிய வொட்டாது செய்யும். அழல் மிகுதியினால் வெறி நோய் போன்று ஆட்டம், பாட்டம் போன்ற குறி குணங்களையும்; கீழ் நோக்குங் கால் கேடடைவதால் நீரையும், மலத்தையும் அடக்கியாவது அல்லது அதிகமாகக் கழியச் செய்யவாவது செய்யும். மேல் நோக்குங் கால் கேடடைவதால் வாந்தி, பெருமூச்சு, மூச்சுத் தடுமாறல் போன்ற குறி குணங்களையும்; பரவுகால் கேடடைவதால் நடுக்கம், தளரல், வியர்வை முதலியவற்றையும் பிறப்பிக்கும்.

**நாடி நடை :**

முதல் நிலையில் அழல் குற்றம் மிகுதலும் ; இரண்டாம் நிலையில் வளிக் குற்றம் மிகுந்து சேருதலும் ; மூன்று, நான்காம் நிலைகளில் ஐயக் குற்றமுங் கூடி முக்குற்றக் கலப்புக் குறி குணங் களையும் தோற்றுவிக்கும். ஆதலால் மருத்துவம் புரியும்போது முக்குற்றங்களின் நிலைமையையும், குடியின் நிலையையும் அறிந்து மருத்துவம் புரிதல் பயனளிக்கும் என்பர் நூல் வல் லோர்.

(சித்த மருத்துவம்).

## 45. செருக்கு நோய் (மதநோய்(.

**வேறு பெயர்கள் :** மனச் செருக்கு, அகங்கார நோய், மத நோய் எனப்படும்.

**இயல்.**— இது, மனதினுள்ளே ''தான் மிகு வன்மையுடைய வன்'' என்னுஞ் செருக்குக் கொண்டு கண்டதைக் கண்டவாறாகப் பேசல், சீறி விழுதல், சினங் கொள்ளல், காரணமின்றிக் களிப் படைதலாகிய இயல்புடைய நோயாம்.

**நோய் வரும் வழி;**

சதா காலமும் குடியிலேயே மூழ்கியிருத்தல் ; அளவுக்கு மீறிக் குடித்தல் ; உணவு உண்பதற்கு முன்பும், பின்பும் குடித்தல் ; வேலை செய்து முடிந்தவுடன் குடித்தல் ; படுக்கைக்குப் போகு முன் குடித்தல் ஆகிய இக் காரணங்காளல் இந் நோய் பிறக்கும். மதம் அதிகமாகி மூளையையும் நரம்பையும் தாக்கி மனதைக் கெடுத்துவிடும்.

**மு ற்குறி குணங்கள் :**

குடியின் கேட்டால் அறிவு குன்றல் ; உடல் வன்மை கெடல் உடல் இளைத்தல் ; நா சுவையறியாமை ; நீர் வேட்கை உடல் எப்போதும் சூடாக இருத்தல் ; மார்பு துடித்தல் என்னும் குறி குணங்களைக் காட்டும்.

**நோய் எண் :**

இதில் குற்றயளவாக நான்கும் குருதி முதலியவற்றா. வருவன மூன்றுங் கூடி ஏழு வகை செருக்கு நோய் என்ப.

**அவையாவன :—**

1. வளிச் செருக்கு நோய்.
2. அழல் செருக்கு நோய்.
3. ஐயச் செருக்கு நோய்.
4. முக்குற்றச் செருக்கு நோய்.
5. குருதி செருக்கு நோய்.
6. நஞ்சு செருக்கு நோய்.
7. * * * * *

(சித்த மருத்துவத்தில் கூறப்படவில்லை.)

குறிப்பு.— ஆறு வகை செருக்கு நோய்கள் தான் மற்ற நூல்கள் கூறுகின்றன.

**ஒவ்வொரு பிரிவு செருக்கு நோயின் குறி குணங்கள் :**

**1. வளி செருக்கு நோய்.**—இந் நோயில் உடல் வன்மை குறைந்து, உடல் கறுத்து, தோல் சுருங்கி, முகம் வறண்டு, விக்கல், மேல் மூச்சு, நாடிகள் தளரல், கை கால், தலை இவை நடுங்கல், தூக்கமின்மை, உடல் குத்தல், பக்க சூலை, குரற் கம்மல், வாய் பிதற்றல் என்னும் குறி குணங்களுண்டாம்.

**2. அழல் செருக்கு நோய்.**—இதில், நாவறட்சி, உடல் சூடாகயிருத்தல், வியர்த்தல், தலை சுற்றல், கிறுகிறுத்தல், சுரம் வருதல், நீர் வேட்கை, மயக்கம், கழிச்சல், உடல் குருதியின்றி வெளுத்தல், மஞ்சட் சாயல் காணல் என்னும் குறி குணங்களைப் பெறும்.

**3. ஐயச் செருக்கு நோய்.**—இதில், உடல் பருத்தல், பளுவாகத் தோன்றல், உடல் சில்லிட்டிருத்தல், வாந்தி, நா சுவையறியாமை, மார்பு துடித்தல், சோம்பல், மிகு தூக்கம் என்னுங் குறி குணங்களைப் பெறும்.

**4. முக்குற்ற செருக்கு நோய்.**—வளி, அழல், ஐயம் இம் மூன்று குற்றங்களால் பிறக்கும் செருக்கு நோய்களின் குறி குணங்களில் சில அல்லது பல குறி குணங்கள் காணும்.

**5. குருதி செருக்கு நோய்.**—குடி வெறியின் கொதிப்பால் குருதி கொதிப்படைந்து பெருகிக் கண்கள் சிவக்கும். அத்துடன் அழல் செருக்கு, நோயில் காணும் குறி குணங்களும் சேரும். அன்றியும் குருதியின் கொதிப்புக்கேற்ப மயக்கம், மூர்ச்சை, தன்னையறியாது மரம் போல் கிடத்தல் என்னும் குறி குணங்களும் தொடரும்.

6. ஏழு செருக்கு நோய்கள் முக்குற்றங்களின் அளவாகவே அடங்குமெனச் சித்த மருத்துவம் கூறுகின்றது.

குறிப்பு.—ஆறு வகை மத' நோய்களே மற்ற நூல்களில் காணப் படுகின்றன.

(சி. ம.)

## 46. வெறி நோய்.

வேறு பெயர்கள் : பித்து நோய்; பயித்திய நோய்; பித்த நோய் ; உன்மாதம் ; கிறுக்கு எனப் பல பெயர்களுண்டு.

இயல்.—இது, மனநிலை மாறி, அறிவிழந்து (அறிவழிந்து) கண்டது கண்டவாறாகப் பேசுதல், ஆடல், பாடல், அடாது செய்தல், அடித்தல், திட்டல், துணிகளைக் கிழித்தல் முதலிய தன் இயற்கை மாறான செயல்களைக் கொண்ட நோய் என்பர்.

சுருங்கக் கூறில் மத நோயுடன் சேட்டைகளும், பலாத்கார மும். மிகுதியாகயிருத்தல்; தனக்கும் பிறருக்கும் அதிகத் துன்பம் விளைவித்தலாகிய இயல்புடையது எனலாம்.

### முற்குறி குணங்கள்.

இதில் மன நிலை குன்றல், எதற்கும் அஞ்சுதல் அல்லது துணிபு கொள்ளுதல் ; பெண்கள் பேரில் இச்சை அல்லது வெறுப்பு உண்டாதல் ; மெலிந்து பேசுதல் அல்லது உரத்துப் பேசுதல் ; முக்காடிட்டிருத்தல், மனச் சோர்வு, முணமுணத்தல், செயல், பேச்சு முதலியவற்றில் தன் இயற்கைக்கு மாறுபட்டிருத்தல் என்னும் முற்குறி குணங்களைக் காட்டும்.

### நோய் வரும் வழி.

உடல் நிலையும், மன நிலையும் கெடுவதனால் இந் நோய் பிறக்கும். அவைகள் கெடுவதற்குப் பல காரணங்களுள்ளன. அவையாவன : அளவு கடந்து உண்ணல் ; பட்டினி கிடத்தல் ; கள், சாராயம் இவை மிகுதியும் கொள்ளல்; பொருளின் மீது அதிக இச்சை வைத்தல் ; அடிக்கடி அஞ்சக் கூடிய நிலைகள் ஏற்படல்; சினங் கொள்ளல் ; அளவு கடந்து இன்புறல்; துயர மடைதல் முதலிய காரணங்களால் உடல் நிலையும் மன நிலையும் பாதிக்கக்கூடும்.

அன்றியும், இவ் வெறி நோய் வளி (வர்தம்) நோயைச் சேர்ந்த பக்க வாதம், வலி நோய்கள் இவற்றிற்குத் துணை நோயாகவும் வருவதுண்டு.

நெடு நாட்கள் நோயிலீடுபட்டோர்க்கும், பிள்ளை பெற்றவர்கட்கு உடல் நிலை கெட்டிருக்கும் போதும் இந் நோய் வருவதுண்டு. பெண்களில் சிலர் கெர்ப்பமாயுள்ளபோது இந்நோய் உற்பத்தியாகிப் பிள்ளை பிறந்த பின் சில நாட்களுக்கெல்லாம் நோய் தானே குணமாகி விடுவதும் உண்டு. ஒவ்வொரு கெர்ப்பத்திலும் இம்மாதிரி ஏற்படுவதுண்டு.

தாய் தந்தையர் வழியாகவும் இந் நோய் தொடருவதுண்டு.

ஒக்கல் (யோகம்) நிலையில் ஒவ்வொரு நிலையையுங் கடந்து (ஆறாதாரர்கள்) கண்ட நிலயையாகிய "துரிய நிலை"யடையும் போது சிறிது தவறினாலும் "வெறி" பிடிக்குமென்பர்.

இந் நோயினை வருவிப்பது அழற் குற்றமே (பித்தம்)யாதலின் இந்நோயைப் "பயித்திய நோய்" என வழங்குவராயினர்.

### நோய் எண்.

இதனைக் குற்றயளவாக ஆறு வகையாகப் பிரித்துள்ளார்கள். அவையாவன.—

1. வளி வெறிநோய்,
2. அழல் வெறிநோய்,
3. ஐய வெறிநோய்,
4. முக்குற்ற வெறிநோய்,
5. சோக வெறிநோய்,
6. நச்சு வெறிநோய்.

என்பவையாம்.

### ஒவ்வொரு பிரிவு வெறி குறி குணங்கள்:

1. வளி வெறி நோய் (வாத உன்மாதம்).—இந் நோய் பிறக்கு முன்பே உணவில் வெறுப்புண்டாகும் அல்லது தடித்த (மட்டி) உணவு, குளிர்ந்தாறிய உணவு, தாழ்ந்த வகை உணவு இவற்றை விரும்பியுண்ணுமாறு செய்யும். இவற்றால் உடல் நிலையும் மன நிலையும் கெடும். வளிக் குற்றம் மிகுதியாகிச் சிரித்தல், ஆடுதல், பாடுதல், அழுதல், வாயைக் கோணிப்பேசுதல், இயற்கை நடை மாறி நடத்தல் என்னும் குறி குணங்களுண்டாகும். உணவு ஏதேனும் உண்டு சிறிது நேரங் கழித்தவுடன் இவ் வெறி நோய்க் குறி குணங்கள் அதிகப்படும்.

2. அழல் வெறி நோய் (பித்த உன்மாதம்).—அழற் குற்றத்தையுண்டாக்கக் கூடிய காரப் பொருள்களையும், புளிப்புப் பொருள்களையும், சூட்டைப் பெருக்கக் கூடிய உணவுகளையும் கொள்ளுவதாலும், மாறுபட்ட நடத்தையாலும் அழல் குற்றம் மிகுந்து உடல் வன்மையும் மன நிலையும் கெடடையும்.

அறிவழிந்து, கொடுமை பல செய்யும் ; தன்னையறியாமலே பரபரப்புடன் ஓடுதல், பொறுமையின்மை, துணியை அவிழ்த் தெறிந்து உலாவல், கடிந்து பேசல், சினந்து பேசல் என்னும் குறி குணங்களையுண்டாக்கும். அன்றியும், குளிர்ந்த இடத் தையும் நிழலையும் விரும்பல், குளிர்ந்த நீர், குளிர்ந்தாறிய உணவு இவற்றைக் கொள்ள விரும்புதலாகிய குணங்களு முண்டு.

3. ஐய வெறி நோய் (கப உன்மாதம்).—ஐயக் குற்றத்தைப் பெருக்கக் கூடிய உணவுகளைக் கொள்ளல், மிகுந்த உழைப்பு, எப்பொழுதும் சிந்தித்துக் கொண்டே யிருத்தல் என்பவைகளால் இந்நோய் பிறக்கும். அறிவழிந்து, புத்தி கெட்டு மன மயங்கும், பெண்கள் மேல் இச்சை கொள்ளல், அவர்களுடன் தனித்திருக்க வும் பேசவும் விரும்புதல்; அடிக்கடி தூக்கமுண்டாதல்; வாயின் சுவை கெடல்; வாய் நீரூறல்; வாயினின்றும் எச்சில் வடிதல்; செயலற்றுப் படுத்திருத்தல்; பேச்சு மாறாட்டம்; உணவு உண்டவுடன் வெறிக் குணங்கள் மிகுதியாதலாகிய குறி குணங்களையுண்டாக்கும்.

4. முக்குற்ற வெறி நோய் (சன்னி உன்மாதம்).—மேற்கூறிய மூன்று தோடங்களின் வெறி நோய்களில் காணும் குறி குணங் களில் சில அல்லது பல சேர்ந்து தோன்றும். பல வகைப்பட்ட கொடுமைகளையும் உண்டாக்கும்.

5. சோக வெறி.—கைப்பொருளை இழத்தல் ; மக்கள் மனைவியை இழத்தல் ; திடீரென வந்த பயம் முதலியவைகளால் மன நிலை உடனே கெட்டு இவ் வெறியுண்டாகிறது. கண்ட வாறாகத் தன்னையறியாமல் பேசல், சிரித்தல், மனதிலுள்ளதை வெளிப் படையாகக் கூறிவிடுதல் ஆகிய குறி குணங்களைக் காட்டும்.

6. நச்சுவெறி.—இது மூளையைக் கெடுக்கக் கூடிய நச்சுப் பொருள்களைக் கொள்ளுவதாலுண்டாகும் நோய் எனவும், இடு மருந்தின் பயனாக இந்நோய் எழும் எனவும் கூறுவர். இதில அழல் வெறி நோயிலுண்டாம் குறிகுணங்கள் யாவும் தோன்றும். அன்றியும் உடல் ஒளி, நிறம், ஐம்புலன்களின் செயல் யாவும குன்றும். உடல் கருத்தல், கண் சிவத்தலாகிய குறி குணங்களை யுமுண்டாக்கும்.

(சி.ம.)

## பொதுக் குறி குணங்கள்.

இந்நோயில் மனச் சஞ்சலம், ஓரிடத்தும் நிலையாமை, தன்னைத்தான் அடக்கிக் கொள்ள முடியாமை, எதையோ சிந்தித்துக் கொண்டிருப்பது போலிருத்தல், உரத்துப் பேசல், தூக்கமின்மை, பேசுதலில் பொருளில்லாமை, சில வேளை பேச்சில் தெளிவிருத்தல், கடவுள் வழிபாடு பற்றிப் பேசல், அடக்க முடியாத வெறியனைப் போலக் கண்டவாறு பேசல், அடித்தல் என்னும் குறிகுணங்களைக் காட்டும்.

இந்நோயில், சிலருக்கு மனங்குன்றி ஏதும் பேசாது ஓரிடத்தில் உட்கார்ந்திருத்தல், இல்லாத பொருளை இருப்பதாகக் கூறல், மக்களை வெறுத்தல், ஊக்கமின்மை, கொலை செய்ய முற்படல், தகாத நடத்தைகளையும், கெட்ட குணங்களையும், கபடத் தன்மைகளையும் உண்டாக்கும்.

பிறரை வஞ்சிக்கவும் கொல்லவும் ஊக்கமூட்டினும் ஊட்டும். எவர் எது பேசினும் தன்னையே நிந்திப்பதாக எண்ணி உண்ணாது பட்டினியிருக்கச் செய்யும். உடல் இளைத்துத் தூக்கமின்றி, பேசவும் அசையவும் முடியாமல் படுக்கையில் பிணம் போலிருந்து சிறு நீர், எரு இவை கழியாமலுங்கிடப்பதுண்டு. இத்தகைய குறிகுணங்கள் நாளடைவில் சிலருக்குக் குறைந்து கொண்டே வரும். உடல் நிலையும் மன நிலையும் இயற்கை நிலையையடைந்து, தெளிந்து அப்பால் மீண்டும் முன் மாதிரியே வெறிக் குணங்கள் தோன்றுவதுமுண்டு. இம்மாதிரியாகச் சிலருக்கு இந்நோய மாறி மாறி வருவதும் போவதுமாய் இருக்கும்.

இவ்வெறி நோய் பக்கவாதம், வலி, நோய், மேக நீர் இவற்றிற்குத் துணை நோயாகவும் வருவதுண்டு. இதில் கைகால்கள் கூம்பிப் போதல், உடல் வன்மை குறைந்து கொண்டே வருதல், கை கால்கள் நடுக்கம், மனத் தடுமாற்றம், கண்மங்கல், வாய் குளறல், தலைநோய், அடிக்கடி சினங்கொள்ளல், ஞாபகமறதி, தான் எதிலும் மேன்மையானவன் என நினைத்து அதன்படி நடக்க விரும்புதல், மயக்கம், மூர்ச்சை, வலி இவை யுண்டாதல், முகம் வேறுபடல், கண்விழி பிதுங்கி மிரண்டவன் போல் கண் விழித்தலாகிய இத்தியாதி குறி குணங்களையும் காட்டும்.

## தீரும் தீராதவை.

எல்லா வெறி நோய்களும் தக்க மருத்துவத்திலும், மன நிலையை மாற்றும் தந்திரங்களாலும் தீருமேயாயினும், (1) மண்டையில் அடிபடுவதாலுண்டாம் வெறி நோயும்; (2) வெறி நோயில் கண்கள் வெளியில் பிதுங்கிக் காணல், வாயிலிருந்து சொள்ளு வடிதல், விரைந்து நடத்தல், ஓடித் திரிதல், கைகால் நடுங்குதல் முதலிய குறி குணங்களையுடைய வெறி நோய்களும் எளிதில் தீராவென்றறியவும்.

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவு, செயல் முதலியவற்றால், அழல் குற்றம் (பித்த தோடம்) மிகுந்து உடற்றாதுக்களை ஒன்றன்பின் ஒன்றாய் மெலிவடையச் செய்து உடல் நிலையும் மன நிலையும் கெட்டு இந்நோய் வருவதுண்டு. இஃதன்றியும், யோக நிலையில் "துரியம்" நிலையாகிய கண்டத்தையடையும்போது சிறிது பிசகின் இந்நோய் பிறக்குமென்பர். மதநோய் உண்டானபோது சிலவேளை வெறிநோய் தொடருவதுண்டு.

## நாடி நடை.

1. "உறுதியுள்ள பித்தமது தோன்றில் வெப்பு
உஷ்ணவாயு அத்திசுரமதிசாரங்கள்,
மறதியுடன் சிரக்கம்பம் பயித்திய, ரோகம்
வளர்சோகை யழலெரிவு காந்தல் கைப்பு,
இருதயத்திற்கலக்கமது மறப்பு தாகம்
எழுங்கனவு மேயனைவு மயக்க மூர்ச்சை,
சிறிது பெரும்பாடு ரத்தம்பிரமேகங்கள்
சேர்ந்து வெகுபிணி பலவுஞ் சிறக்குந்தானே."

(சதக நாடி.)

2. "பித்தமேகதித்த போது பிதற்றிடும் பித்தே கேளு
பித்தமேக தித்த போது பிறந்திடும் பிணியனேகம்."

(குணவாகடம்.)

3. "பிறந்திடும் பித்தநாடி பிரண்டுமே நிற்குமாகில்
வறண்டிடு மூலாதாரம் வாதையால் முடிவு செய்யும்,
கறண்டது பித்தநாடி கதிப்போடுதுடித்து நின்றால்
அறண்டிடும் பைத்தியந்தான் அடைவொடு வந்துகூடும்."

(குணவாகடம்.)

4. "உற்றிடும் பித்தநாடி யொழுங்கொடு எழும்பி நின்றால்
வற்றிடாப் பேசுகின்ற வசனமு மெழும்பி நிற்கும்
மத்திமம் பித்தநாடி மடங்கியே துடித்து நின்றால்
உத்தமப்பேச்சு தானும் ஒடுங்கிவாய் குளறிப்பேசப்."

(குணவாகடம்)

5. ''பித்தமாம் நாடிதானே பெலத்தோடு தனித்து நிற்கில்
மத்திய பயித்தியத்தை வளர்த்திடும் வறட்சி சேரும்
உத்தமமூளைதானும் உருகியே குறைந்து நிற்கும்,
சிற்றாமுத் தாடுமெண்ணெய் சிரசிற்றேய்த் தூவப்போமே''
(குணவாகடம்.)

6. ''உற்றிடும் வாதத்தோடு உறவதால் பித்தமீறில்
நித்தமும் பிதற்றிப் பேசி நினைவிழந்திருப்பரென்று.''

7. ''உதறியே பித்தநாடி உழுவைபோல் துடித்து நிற்கில்
பதறியே உடம்பழுற்றும் பாய்ந்திடும் சிறுநீர் வற்றும்,
முதறியே புத்தி மாறி கிறுகிறுத்துழலையுண்டாம்,
நிதறியே பயறாம் பச்சை நெல்லிக்காய்க் கஷாயங்கூட்டை''
(குணவாகடம்.)

எனபதினால், (1) அழல்நாடி தன் இயற்கைக்கு மீறி நடக்கின் வெறி நோயுண்டாகும்; வறட்சியுண்டாகும்; மூளையுருகி அதன் வன்மையில் குறையும். அன்றியும் பேச்சு கண்டபடி அதிகமாய்ப் பேசவைக்கும்.

அழல்நாடி தன்னளவில் உள்ளடங்கி நடக்கின் வாய்குளறிப் பேச்சு குறைந்து பேசச் செய்யும் எனவும் அறிகிறோம்.

அன்றியும் வளி அழல் கலப்பு நாடியானது ஒருவன் நினை விழந்து பிதற்றிப் பேசுவதைக் குறிக்கும் எனவும்;

அழல் நாடி உதறி நடக்கில் (மீறி நடக்கில்) உடல் அழற்றிக் கொண்டு சிறுநீர் வற்றி வெறிநோயைப் பிறப்பிக்கு மெனவும் கூறியுள்ளார்.

(வேறு.)

8. ''வகையான பித்தத்தில் வாய்வு கூடி
வசமானால் வலி குன்மஞ்சூலை வாயு,
பகையான வாந்தி விக்கல் அருவருப்புப்
பயித்தியங்கள் செரியாமை புளித்த ஏப்பம்,
தகையான ஈரல் வலி நெஞ்சு நோவுந்,
தலைகிறுக்கும் மசதியாந்தாது நட்டம்
துகைமூலவாய்வுற்றாலுஷ்ணஞ் சோகை,
துடர்ந்து வரும் பலபிணிக்குந் தொனிப்புதானே.''
(சதகநாடி.)

என்றதால், அழல் மிகுதியுடன் வாயு கூடில் பைத்திய நோய் உண்டாகுமென்பதாம்.

## 47. மயக்க நோய்.

**வேறு பெயர்கள் :** களைப்பு நோய்; மூச்சடைப்பு நோய்; மூர்ச்சை நோய் எனப்படும்.

இயல்.—இது, திடீரெனக் கண்ணிருண்டு, சுரணையற்று, அறிவழிந்து, மயக்கமுற்று, மூச்சடைத்து மரம் போல் விழச் செய்யும் இயல்புடைய நோயாம். தன் நிலைமை இழந்து கிடைத்தல் எனவும் கூறலாம்.

### நோய் வரும் வழி.

செரிக்கக் கூடாத உணவுகளை கொள்ளலாலும்; உடல் வன்மை கெட்டு, குருதி குறைந்து வருதலாலும்; தகாத நடத்தையாலும்; நாடி நரம்புகள் தளர்ந்து சத்துவ குணம் அடங்கித் தமோகுணம் உண்டாவதாலும்; சிறுநீர் எரு இவைகள் வெளியாக்காது அடக்கலாலும் இந் நோய் பிறக்குமென்பர்.

அன்றியும் சிலருக்குக் குருதியின் மணத்தை முகருவதாலும், குருதியைப் பார்த்தலாலும் மயக்கம் வருவதுண்டு. மற்றுஞ் சிலருக்குச் சற்று சூடான நீரில் முழுகினும், அல்லது காற்றில்லாது மூடிவைத்திருந்த அறையில் நுழையினும் மயக்கம் உண்டாவதுண்டு.

### முற்குறி குணங்கள்.

இந் நோயில் தலை சுற்றல், வாய் குமட்டல், வாய் நீருறல், கொட்டாவி விடல், கைகால்கள் சோர்வடைதல், தன்னை மறந்து அறிவழிதல், தமரகந் துடித்தல் என்னும் முற்குறி குணங்காட்டிக் கீழே விழுந்து மயக்கமாகும்.

### நோய் எண்.

இந் நோய் குற்றயளவாக நான்கும், குருதியளவாக ஒன்றும், நஞ்சு காரணமாக ஒன்றும், சேர்ந்து மொத்தம் ஆறு வகை மயக்க நோய் என்பர்; அவையாவன :—

(1) வளி மயக்கநோய்.

(2) அழல் மயக்க நோய்.

(3) ஐயமயக்க நோய்.

(4) முக்குற்ற மயக்க நோய்.

(5) குருதி மயக்க நோய்.

(6) நஞ்சு மயக்க நோய்.

என்பவையாம்.

ஒவ்வொரு பிரிவு மயக்க நோய்களின் குறி குணங்கள்.

1. வளிமயக்க நோய் (*வாதமூர்ச்சை*) :

*இந் நோயில் மயக்கம், தலை சுற்றல், பொருள்களெல்லாம் பார்வைக்கு சிவப்பு, கருப்பு அல்லது நீல நிறமாகத் தோன்றல்; கண்ணிருளல் என்னும் குறிகுணங்களைக் காட்டும். அன்றியும் வாய் நீரூறல், வாய் குமட்டல், வாயில் நுரை தள்ளல், உடல் நடுக்கம், கைகால் விதிர்விதிர்த்தல், தமரகத் துடிப்பு என்னும் இக்குறி குணங்களையும் தோற்றுவித்து அறிவிழந்து கிடக்கச் செய்யும். உடல் கருப்பு நிறமடையும். சற்றுநேரம் சென்ற பிறகு தானே தெளிந்து எழுந்து இயற்கைத் தொழிலைப் புரியச் செய்யும்.*

2. அழிமயக்க நோய் (*பித்த மூர்ச்சை*) :

*இந் நோயில், கண் பார்வைக்கு எல்லாப் பொருள்களும் சிவப்பு அல்லது மஞ்சளாகத் தோன்றும், தலை சுற்றல், வியர்த்தல், வாயில் நுரை தள்ளல், கண்களிருளல், இவற்றையுண்டாக்கி மயக்கமாகும். சற்று நேரஞ் சென்று தெளிவடைந்து நீர் வேட்கை மிகுதியால் நீரைப் பருகச் செய்யும், மனச் சோர்வுண்டாகும். உடல் கருநிறத்தோடு மஞ்சளிக்கும்.*

3. ஐயமயக்க நோய் (*கப மூர்ச்சை*) :

*இதில் வயிற்றில் ஒன்றுமில்லாதது போல் தோன்றும். கண்களிருண்டு மயக்க முண்டாகும். சுரணையற்றுக் கிடக்கச் செய்யும். வாயில் நுரை தள்ளும். வாய் கோணும். பற்கடிக்கும். உடல் வியர்க்கும். பலநாழிகை சென்று தெளிவடையும். பிறகு உடல் முழுமையும் நோதலுடன் உடல் ஊதிக் காணலாகிய குறி குணங்களை விளைவிக்கும்.*

4. முக்குற்ற மயக்க நோய் (*சன்னிமூர்ச்சை*) :

*சன்னிமூர்ச்சை நோயில், மேற்கூறிய வளி, அழல், ஐயம் இம்மூன்று வகை மயக்க நோய்களில் காணும் குறிகுணங்கள் சில அல்லது பல கலந்து தோன்றும். இந் நோய் வெகு விரைவில் மிகுந்தெழுந்து தன் உணர்ச்சி எளிதில் அற்று கீழே விழச் செய்யும்.*

5 குருதி மயக்க நோய் (*இரத்த மூர்ச்சை*).

*சிலர் ஆடு, மாடு, கோழி முதலிய உயிர்ப் பிராணிகளை அறுக்குங்கால் வடியுங் குருதியைக் காணினும்; அல்லது அக் குருதியின் மணத்தை முகரினும்; அல்லது அறுவை மருத்துவம்*

புரியும் போது கண்ணுற்றாலும், அவ்விடத்திலேயே வாய்குமட்டித் தலை சுற்றிக் கணணிருண்டு மயங்கி அறிவழிந்து மரம்போல் சாய்ந்து விழுவர். விழுந்தபின், வியர்த்தல், கைகால்கள் செயலற்றுக் கிடத்தல், கண்பஞ்சடைதல் என்னும் குறிகுணங்களைக் காட்டும். சிலருக்கு உடலிலுள்ள குருதியின் நிறை, எடை, நிறம் இவைகள் குறைந்த காலத்திலும், சற்றுக் கடினமான செயலைக் கொண்டபோதும் மயக்கம் வருவதுமுண்டு.

6. நஞ்சு மயக்க நோய் (நஞ்சுமூர்ச்சை; மருந்திடுமூர்ச்சை),

வெகுநாள்கள் மூடிவைத்திருந்த வீட்டின் அறையில் அல்லது மக்கள் நிறைந்த வீட்டு அறையில் புகுதல்; நஞ்சுத் தன்மையுள்ள காற்றையோ அல்லது நஞ்சுப் பொருள்களையோ முகர்தல், அல்லது உட்கொள்ளல் ஆகியவற்றால் பிறக்கும் நோயாம். இந்நோயில் மயக்கமுண்டாகுமுன் கைகால்கள் நடுங்கல்: வாய் குளறல், கண்களிருளல் என்னும் குறிகுணங்களைக் காட்டி படுக்கையில் கிடத்தி விடும். நஞ்சுப் பொருள்களுக்கேற்றவாறு குறிகுணங்களும் வேற்றுமையடையும். இதில் மூச்சடைப்பு மிகுந்து காணும். விடும் மூச்சும் மெலிந்து காணும். ''மருந்தீடு'' காரணமாக இந்நோயுண்டாகுமெனவும்நூல்கள் கூறுகின்றன.

அன்றியும் பாம்பு முதலிய நஞ்சுக்கடியாலும்; அபினி, கஞ்சா, ஊமத்தை முதலிய தாவர நஞ்சுப் பொருள்களைக் கொள்வதாலும் மயக்கம் உண்டாகும். இவைகளின் குறிகுணங்களைக் கொண்டும் இந்நோயுண்டான காரணத்தைக் கொண்டும் பகுத்தறிய வேண்டும்.

சிலருக்கு வரும் மயக்க நோயில் தாம் நின்று கொண்டிருப்பது போலவும் தம்மைச் சூழ்ந்துள்ள பொருள்கள் யாவும் தம்மைச் சுற்றி வருவது போலவும், மற்றும் சிலருக்கு தம் உடலே சுழல்வது போலவும், தம் தலை சுற்றி வருவதுபோன்றும் காணப்படும். இதனால் அவரவர்கள் கால் இடறி மயக்கத்தோடு விழுவதுமுண்டு.

பெரு மயக்க நோய் (சன்னியாசம்.)

மேற்கூறிய அறுவகை மயக்க நோய்கள் ஏதேனுமொன்றில் பலநாள்கள் தொடர்ந்து வருந்தியவருக்கு, உடல் நிலை கெட்டு முக்குற்றங்களும் தம் தம் நிலை தவறிப் பிறழச் செய்யின் மயக்கம் வரும் போதெல்லா நோயினனைத் திடீரென மயங்கி மரம் போல் சாய்ந்து விழச் செய்து பிணம் போல் கிடக்கச் செய்யும் இந்நோயைச் ''சன்னியாசம்'' எனவும் கூறுவர்.

### மயக்க நோயின் பொதுக் குறிகுணங்கள்.

இந்நோய் பெரும்பான்மையும் சிறு வயதிலிருந்தே தொடருவதாகும். ஆண்களுக்குப் பதினெட்டு வயதிற்கு மேலும்; பெண்களுக்குப் பதினைந்து வயதிற்கு மேலும் இந்நோய் நீடித்திருப்பதில்லை. ஆயினும் சிலருக்கு ஆயுள் பூராவும் தொடருவதுண்டு.

நோய் வருமுன்பே அடிவயிற்றில் யாதொன்றும் இல்லாதது போலத் தோன்றும். மனசுக்கு ஒரு விதத் துன்பத்தை உண்டாக்கும். வாய் நீர் சுரத்தல், தலைவலி, மயக்கம் இவற்றை உண்டாக்கிக் கண்களுருளல், மூச்சுத் தடுமாறல், அறிவிழத்தல் முதலிய குறிகுணங்களையும் விளைவிக்கும். படுக்கையில் கிடக்கச் செய்யும். விடும் மூச்சு மெலிந்தும் காணும்.

### தீரும் தீராதவை.

ஐய மயக்கம், முக்குற்ற மயக்கம், நெடு நாள் மருத்துவத்திற்கு அடங்காத "சன்னியாசம்" என்னும் "பெருமயக்க நோய்" ஆகிய இவைகள் எளிதில் தீராவாம். மற்றவை தீரக் கூடியவைகளாகும்.

### முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவாதி செயல்களால் உடலின் குருதியின் வன்மை கெட்டு முக்குற்றங்களும் தனித்து அல்லது கலப்புற்று மிகுதியடைவதால் மேல் நோக்குங்கால், கீழ் நோக்குங்கால் இவைகளிரண்டு வாயுக்களும் தூண்டப்படுங் காரணமாக மயக்கம், வாய் நீரூறல், வாயில் நுரை தள்ளல், கொட்டாவி விடல், தூக்கம், கழிச்சல் முதலிய கேடுகளை விளைவிக்கும். அறிவு அழியச் செய்யும். பெரு மூச்செரியும்.

### நாடி நடை.

'சிறப்பான பித்தத்தில் வாத நாடி
செரிவுறுதாது நட்ட முதிர பீடை,
உறைப்பாகச் செரியாமை குன்மஞ் சூலை
உற்ற சுரங்கிராணி வயிற்றிரைச்சல் மந்தம்,
அறைப்பான ஓங்கார பிறநீர்க் கோவை
ஆயாசங் கிரக்கமொடு மயக்க மூர்ச்சை,
நறைக் காய்வு விட வீக்கம் மூலவாயு
முரடான நோய் பலவு முடுகும் பண்பே.''

(சதகநாடி.)

2. " உறுதியுள்ள பித்தமது தோன்றில் வெப்பு
உஷ்ணவாயு அந்திசுர மதிசாரங்கள்
மறுதியுடன் சிரக்கம்பம் பைத்திய ரோகம்
வளர் சோகை பழமெரிவு காந்தல் கைப்பு,
இருதயத்தில் கலக்கமது மறப்பு தாகம்
எழுங் கனவுமேய களவு மயக்க மூர்ச்சை,
சிறிது பெரும்பாடு ரத்தம் பிரமேகங்கள்
சேர்ந்து வெகு பிணி பலவுஞ் சிறக்குந் தானே."

(சதகநாடி.)

என்பதினால், அழல் வளிக் கலப்பு நாடியிலும், அழல் மிகுதியிலும் மயக்க நோய் (மூர்ச்சை நோய்) உண்டாகுமென அறிகிறோம்.

## 48. வலி நோய்.

**வேறு பெயர்கள் :** இழுப்பு, இசிவு நோய்.

இயல்.—இந்நோய் அறிவு குன்றித் தன் நிலை மாறுபட்டுத் தன்னையறியாமலே கையுங் காலும் வலித்து இழுத்தல் ; வாயில் நுரை தள்ளல் ; வாய் கோணிக் கொள்ளுதல் ,; கண்பார்வை ஒருபுறமாக இழுத்துக் கொள்ளல் என்னும் இயல்புடையதாம்.

### நோய் தோன்றும் வழி.

1. " காணவே மேகத்தின் காங்கை யாலும்
கடிதான வழி நடக்கை கோபத் தாலும்,
பூணவே பிரமாலயம் தேவாலயங்கள்
புகழான வேரி குளம் பின்னஞ் செய்தோர்,
நாணவே பெண்டீர் கற்பழித்தலாலும்
நலமான போகங்கள் மிஞ்சலாலும்,
தோணவே காலபேத நடக்கையாலும்
துலையாத வடைக்கலத்தைப் பறித்தோர்க்காமே."

2. "பரித்துமே சீதளமாம் பண்டத்தாலும்
பாங்கான லிபிகடந்த ஞானி யோரைச்
சிரித்துமே பரியாசஞ் செய்து மல்லே
சீண்டியே அடிக்கடிக்கு இடரே செய்து
குறித்துமே மனம் நோக மிகவும் பேசிக்
குடிகெடுக்கும் பாவிகட்கு இந்த ரோகம்
நெரித்துமே சண்டாள வலிதானாகி
நெருங்குமே இவ்வலியில் நொறுங்குவாரே."

என்பதினால் இந்நோயானது மேக நோய்க்குத் தொடர்பாகவரும் எனவும்; உடல் நிலையும் மன நிலையும் கெடுதலாலும் வரும் எனவும்; அவைகள் ஐயத்தை மிகுதிப் படுத்தும் உணவாதிகளாலும், பெண்ணிச்சையில் மிகுதியும் ஈடுபடல், பெரும் அறிஞர்களைப் பழித்தலாகிய நடத்தைகளாலும் உண்டாகு மெனக் கூறியுள்ளார்கள்.

### நோய் எண்.

ஒரு சாரார் இதனை ஐவகை வலி யெனவும்; மற்றொரு சாரார் இதனை இருபத்தொரு வகையாகவும் பிரித்துள்ளார்கள்.

(ஏ) ஐவகை வலி நோய்களாவன.

1. முப்பிணி வலி (குமரகண்டன்),
2. குதிரை வலி (அமரகண்டன்),
3. குரங்கு வலி (பிரம கண்டன்),
4. காக்கை வலி,
5. முயல் வலி (முயலகன்),

என்பவையாம்.

(பி) இருபத்தொரு பிரிவு வலி நோய்களாவன

1. அமரகண்டன் வலி,
2. குமரகண்டன் வலி,
3. பிரமகண்டன் வலி,
4. காக்கை வலி,
5. முயல் வலி,
6. திமிர் வலி,
7. கோணு வலி,
8. சண்டாள வலி,

9. மரண வலி,
10. மனோ வலி,
11. நஞ்சு வலி,
12. முக்குற்ற வலி,
13. ஐயவலி,
14. வில் வலி (தனுர் வலி),
15. சுரவலி,
16. விக்கல் வலி,
17. தலை வலி,
18. கோழை வலி,
19. ஓடு வலி,
20. மார்பு வலி,
21. தமரக வலி,

என்பவைகளாம்.

### ஒவ்வொரு பிரிவு வலி நோயின் குறிகுணங்கள்.

#### 1. முப்பிணி வலி நோய் (குமரகண்டன்).

1. "தானான கண்ணிரண்டு மிழுத்துக் கொள்ளல்
தாக்கான தாடையது கோணிக் கொள்ளும்,
பானான கழுத்தை மிகத் திருப்ப வொட்டா
பக்க மெல்லாம் நரம் பிழுத்துப் பிடரி நோவாம்,
மானான சன்னி பாத மதிகமாகி
மயக்கமுட னெந்நேரம் வயிற்றில், நோவாம்,
கானான கருப்பைக்குள் தங்கி நின்று
காட்டுமே குமர கண்ட தோடமாமே."

(வேறு.)

2. "குணமாங் குமரகண்ட வலி
குறுகும் நாக்கு முகங் கோணும்
பணமாம் கழுத்து தோள் விம்மிப்
பார்க்கப் பக்கத் திருத்திடுமே
துணமாம் முகம் நோய செவி கண்ணுஞ்
சாய்ந்தே புறத்தில் வலித்து நிற்கும்
வணமாம் வாத பித்த வையம்
வருகுஞ் சன்னி குணமிதுவே."

என்பதினால் முக்குற்றங்களும் ஒன்று கூடி வரும் நோய்களுள் ஒன்றாகக் கூறப்படினும், பெரும்பாலும் வளி ஐயக் குற்ற மிகுதி

(அக-வயித்திய காண்டம் 600.)

யால் பிறக்கக் கூடியதாம். இதில் நாவும், முகமும், கோணும். கழுத்தும், தோளும் விம்மும். செவிகள், கண்கள், தாடை, உதடு இவை ஒரு பக்கமாகச் சாய்ந்து நிற்கும். மயக்கமும், வயிற்றில் நோவும் உண்டாகும்.

## 2. குதிரை வலி (அமரகண்டன்).

1. "நெருங்குமே தேகமெங்குந் தினவுண்டாகி
நெடிதான மூர்ச்சையது யதிகமாகும்,
குருங்குமே தந்தத்தை யிளித்துக் காட்டும்,
கூரான நகந்தன்னால் சுறண்டிக் கொள்ளும்,
தருங்கவே பிணம் போல வசதி யாகும்
தரிக்கொணாக் குடைச்சலுடன் வியர்வை காணும்,
பருங்கவே சொரியது கட்டிக் கொள்ளும்
பாங்கான யமர கண்டன் வலிப்புத் தானே."

(வேறு)

2. "இதுவே யமரகண்டவலி
இறுகும் நாக்கு முகங் கோணும்,
மதுவே கைகால் மெய்யெங்கும்
யடித்துத் துடித்தாற் போலுளையும்
பொதுவே கண்டஞ் சிரசு முகம்
புதுவெள்ளம் போற் நீரொழுகும்
பதுவே நெஞ்சுந் தோள் முதுகும்
பற்றி வலிக்கு முதரமுமே."

(அக. வயித்திய காண்டம் 600).

என்பதினால் இந் நோய் காணுமுன்பே உடம்பில் தினவுண்டாகும். கையும் காலும் அடித்துத் துவைத்ததுபோல வன்மையற்று குத்தல் குடைச்சலுடன் மயக்கம் (மூர்ச்சை) மிகுதியாகும். பிறகு இசிவு வரும். பல் இளிக்கும். கழுத்திலும், தலையிலும், தோளிலும் முகத்திலும் மிகுதியாக வேர்வையுண்டாகும். நாவும், முகமும் கோணலாய் ஒரு பக்கத்தே இழுத்துக் கொள்ளும். வலிப்பு நின்ற பின் தொண்டை, தோள், முதுகு இவைகளில் இரத்தக் கொதிப்பாலுண்டான வீக்கங்கள் காணுவது போலெரிச்சலும், வலியும் காணும் என்பதாம்.

### 3. குரங்கு வலி (பிரம கண்டவலி).

1. "ஆமே தான் சிலேட்டுமத்திற் பிறந்த ரோகம்
அதட்டியே பற்கடித்து கோபங் காட்டி
தாமே தான் சூரியனைப் பார்த்துப் பார்த்துத்
தாங்காமற் கண் சிமிட்டல் அதிகமாகும்
போமே தான் சர்வாங்க வலியே காணும்
பொல்லாத துடிதுடிப்புப் புகலலாகும்
சேமே தான் குரங்கு வலி யிதுதானாகும்
சண்டாள பிரம கண்டஞ் சாற்றினாமே."

(வேறு.)

2. "இதுவே பிரம கண்ட வலி
எடுத்த கைகால் தானுதறும்
கதுவாய் கண்ணுந் தான் பார்க்க
காணா நீட்டிக் கிடத்தி வைக்கும்
பொதுவாய்ப் பார்த்த பண்டிதரும்
பிழையா தென்பார் கைபார்த்து
அதுவே வாத பித்த மையம்
யடர்ந்த சன்னி யறிந்திடுமே."

(அக. வயித்திய காண்டம் 600)

என்பதினால், இந் நோய் முக் குற்றங்களும் கேடடைந்த நிலையில் வருதலால் எளிதில் தீரா நோயாகும். இதில் கை கால்கள் நீட்டியபடியே யிருந்து உதறுதல், கண்களைச் சிமிட்டாது மேல் நோக்கியே பார்த்துக் கொண்டிருத்தல், பற் கடித்தல், சினங் கொள்ளல், உடம்பெங்கும் வலி யுண்டாதலாகிய குறி குணங் களையும் பெறும் என்பதாம்.

### 4. காக்கை வலி.

1. "சாற்றினோம் கண்களையு மலரப் பார்க்கும்
சாங்கமாய் மலசலமுஞ் சருகி விழும்
மாற்றினோஞ் சிலேட்டுமத்தில் பிறந்த ரோகம்
மயக்கமுடன் கால் கைகள் முறைத்துக் கொள்ளும்
கூற்றுவனாந் தொண்டைதனில் கோழை சேர்ந்து
குறிப்பான நாவுலரல் குளறிப் பேசும்
காற்றினிலும் வேகமதாய் ஓட்டிக் கொல்லும்
காலனாங் காக்கை வலி தன்மை யாமே."

(வேறு).

2\. ''அறியுங் காக்கை வலி தானும்
அலரும் கண்ணும் மேல் நோக்கி
பிரியு மலமுஞ் சலநீரும்
பெருகிக் காற்றுடைய மடக்காமல்
செறியுந் தொண்டை நாவுலர்ந்து
சிலேத்மம் மிஞ்சிச் சளி வேர்வை
குறியாம் வாத பித்தமையுங்
கொண்ட சன்னி யிது தானே.''

(அக. வயித்திய காண்டம் 600.)

என்றதால், இந் நோயில் அலண்டு அலண்டு பயப்படுதல், கண்கள் மேல் நோக்கி மலர மலர விழித்தல்; தொடையானது மடக்க முடியாமல் விறைத்துக் கொள்ளல், தொண்டையும் நாவும் உலர்தல், ஐயப் பெருக்கினால் தொண்டையில் கோழை கட்டிக் கொண்டு அதனைக் கக்குதல், சிறுநீரும் மலமும் அதிகமாகப் போதல்; வியர்வை யுண்டாதல் முதலிய குறி குணங்களைப் பெறும். இந் நோய் ஐயக் குற்றத்தால் பிறக்குமெனினும் சன்னிபாதக் குறி குணங்களை உண்டாக்கும். நோய் வரும் போது முகத்தைக் கீழ் நோக்கி வைத்துப் படுப்பராம்.

5\. முயல் வலி (முயலகன்).

''தானே முயலகன் வலிதான்
தண்ணீர் தீயுங் காண்போதில்
ஊனே வுடலில் வாய் வெழுப்பி
உற்று முகத்தைத் தான் வலித்துத்
தேனே யொழுகும் வாய் தன்னில்
திரைபோல் நுரையுந் தள்ளி விடுங்
கானே கண்ணுங் கைகாலுங்
கனத்து முளைக்குஞ் சன்னி யிதே.''

(அக. வயித்திய காண்டம் 600.)

என்றதால், உடலில் முக்குற்றங்களும் மிகுந்து வரு நோயாகும். இவ் வலி நெருப்பு அல்லது நீர் இவற்றைக் கண்டாலும் அல்லது தலையில் நீரைக் கொட்டினாலும், நெருப்பின் அனல் பட்டாலும் உடனே வலித்து இழுக்கும். பிறகு வயிற்று நோய், வாயில் நுரை தள்ளுதல், கைகால், கண் இவை விறைத்துக் கொள்ளல் முதலிய குறி குணங்களை உடையதாம்.

N.B.— இவ் வலி நோயில் அறிவு குன்றுவதால் வலி வரும் போது நாக்கைக் கடித்துக்கொள்ளுவதுமுண்டு. நாவு துண்டிக்கவும் செய்யும். பற்களுக்கிடையே நாவு கடிபடாதபடி ஒரு கரண்டிக் காம்பைப் பிடித்துக் கொண்டிருப்பது நல்லது எனலாம். கவனிக்கவும்.

### 6. திமிர் வலி.

இந் நோயில் கொட்டாவி அதிகமா யுண்டாகும். அடிக்கடி சிரிக்கச் செய்யும். ஆடல், பாடல், படுக்கை பொருந்தாமை, உடல் குளிரல், நரம்புகள் நோதல், இரவு பகல் தூங்கா திருத்தல் ஆகிய குறி குணங்களைக் காட்டி வலி தோன்றும்.

### 7. கோணு வலி.

இந் நோயில் உடலில் சொறியும் கட்டிகளும் தோன்றும். மூக்கில் மணமறிய முடியாது. தொண்டைக் கம்மல், பேச் சொலி குன்றல், அறிவு தடுமாறல், சுரங் காய்தலாகிய குறி குணங்களைக் காட்டி இரு கைகளையும் முறுக்கி வலிக்கத் தொடங்கும்.

### 8. சண்டாள வலி.

இந் நோயில் உடல் பதை பதைத்து முறுக்கி வலி தோன்றும். திமிருடன் பெருமூச்சு விடும். சிணுக் கிருமல், வாந்தி, விக்கல், மேல் மூச்சு, நரம்பெல்லாம் வன்மை யற்றுப் போதல், கழுத்து நோதல் என்னுங் குறி குணங்களையும் காட்டும்.

### 9. மரண வலி.

இஃது நோயி லீடுபட்டு மெலிந்து சாகும் போது உடல் அழியுந் தருவாயில் வரும் வலி நோயாம். இதனில் தொண்டைக் கம்மல், நரம்புகள் துடித்து அசைதல், உடல் நடுக்கல், வாந்தி யாதல், கடவுளை நினைந்து மனங் கசிதல் என்னும் குறி குணங்களைக் காட்டிக் கால் கைகளை முடக்கி வலித்து உயிரைப் போக்கும் என்பதாம்.

### 10. மனோ வலி.

இது, மனைவி மக்கள் இறத்தலின் துன்பத்தாலும், பொருளை இழந்த கவலையாலும் உண்டான அழல் குற்றத்தின் பெருக்காலுண்டாகும் நோயாகும். இதனால் அழல் குற்றம் தலைக்கேறிச் சூடுண்டாய்க் கண்களிலிருந்து நீர் வடிதல், கண்டவாறு பேசல், பிணத்தைப் போலும்; ஞானிகள் போலும் சும்மாயிருத்தல் அல்லது சிரித்தல், அழுதல் முதலிய குறி குணங்களைக் காட்டி அடிக்கடி விட்டுவிட்டு வலியுண்டாகும்.

### 11. நஞ்சு வலி.

இந் நோய் நஞ்சுத் தன்மை யுடையதான இடு மருந்து, எட்டி, நாபி போன்றவைகளைக் கொண்டதால் வரும் நோயாம். இதனில் உடலில் ஊறிய நஞ்சுக் கேற்ப ஐம்பொறிகளும் கெட்டு, அறிவு கலங்கி, திகைப் பூண்டு மிதித்தவனைப் போல் திரியச் செய்யும். கண் மிரண்டவன் போல் காணப்படும். சித்தம் கலங்கும். இக் குறி குணங்களைக் காட்டி நரம்புகளை எல்லாம் இழுத்து வலியை யுண்டாக்கும்.

### 12. முக்குற்ற வலி.

முக் குற்றங்களின் கேட்டால் பிறந்த இவ் வலி நோயானது மனதின் தெளிவும், அறிவும், நற்குணமுமிழந்து யாவரையும் கண்டவாறாகப் பேசிக்கொண்டே யிருக்கக் கண்களிருண்டு அல்லது மின்னல் போல ஒளி எழுந்து வலிக்கத் தொடங்கும் என்பதாம்.

### 13. ஐய வலி.

ஐயப் பெருக்கால் வரும் இவ் வலி நோயில் இருமல், விலாப் பக்கங்களில் குத்தல், கண்ணிமை கோணலாகிப் பார்வையும் கெடுதல், காது கேளாமை; உடல் வியர்த்தல், மயக்கம், அறிவு கலங்கல் என்னுங் குறி குணங்களைக் காட்டி வலியுண்டாகும். இசிவு அடங்கிய பின்னும், அசையாமல் கிடக்கச் செய்யும்.

### 14. வில் வலி (தனுர்வலி).

இந் நோயில், உடலின் தலையையும் கால்களையும் முன்புற மேனும் அல்லது பின்புறமேனும் வில் போல வளையச் செய்து வலி தோன்றுவதால் இந் நோயினை வில் வலி என்றும், தனுர் வலி அல்லது தனுர் வாதம் எனவும் வழங்கலாயிற்று. இவ் வலி உண்டாயிருக்கும் பக்கத்திற் கேற்ப முன்னிசிவு, பின்னிசிவு, பக்க இசிவு என்றும் கூறுவர். இந் நோயில் தாடையிலும், கழுத்துக்குப் பின்புறத்திலும் (புறங்கழுத்து பிடரி) நோயுண்டாய் வாயில் நுரையோடு கூடிய கோழை பெருகும். நோயின் வன்மை பெருகப் பெருக நரம்பெல்லாம் திமிர்த்து மேற் கூறிய முன்னிசிவு, பின்னிசிவு, பக்க இசிவுகளில் ஏதேனு மொன்று காணும். விட்டு விட்டு இழுக்கும். இசிவு விட்டவுடன் தாங்க முடியாத நோயைத் தோற்றுவிக்கும். மார்பு, தொண்டை இவைகள் நொந்து மூச்சு அடைக்கும். இக் கொடுமைகளைக் காட்டி வாயைச் சரியாகத் திறக்க முடியாமலும் ஆகாரம் தண்ணீர் விழுங்க முடியாமலும் செய்துவிடும்.

## 15. சுர வலி.

சுரம் மிகுந்து காய்வதால் வரும் வலி நோய்க்குச் சுரம் வலி எனப்படும். இந் நோயில் சுரத்தின் கொடுமையால் குருதி வெப்ப மடைந்து மண்டையிற் றாக்கி கண் சிவந்து முகம் வெளுத்து அல்லது மஞ்சளித்து உடல் முழுதும் எரிச்ச லுண்டாகி, வெறி கொண்டவன் போல் மிரண்ட பார்வையோடு வலி தோன்றும். இஃது பெரும்பாலும் சிறு குழந்தைகளுக்கே வரும் என்பர்.

## 16. விக்கல் வலி.

இஃது முக்குற்றங்களும் கூடியுண்டாகும் நோயாகும். இதனில் எழுந்த வளிக் குற்றத்தால் வலி நோயும்; அழல் குற்றத்தால் மிகுந்த பசியும்; ஐயக்குற்றத்தால் விக்கல், மார்பில் கோழை கட்டல் பெருமூச்சு, தொண்டை வலித்தல், என்னும் குறி குணங்களையும்; முக்குற்றத்தால் தவித்தல், பல்லைக் கடித் தல், கண் சிவத்தலாகிய குறி குணங்களையும் காட்டி வலி யுண்டாக்கும் என்பர்.

## 17. தலை வலி.

இஃது, மேல் நோக்குங்கால் மிகுந்து தலை மூளையைத் தாக்கி அதனால் அங்கு நீர் சுரந்து தங்கிநரம்புகளை வலித்து நோகச் செய்யும். அன்றியும் ஐயப் பெருக்குண்டாக்கித் தொண்டை கட்டிக் குரல் ஒலிக்காமல் தலையில் இடித்து நோதல், மூட்டு களில் வலி, பிடரி வலித்து நோதல், ஈட்டியால் குத்துவது போன்ற குத்தல் வலி என்னும் குறி குணங்களோடு வலிக்கத் தொடங்கும்.

## 18. கோழை வலி.

இது வளிக்குற்ற மிகுதியாலுண்டான முப்பிணியால் வரும் நோயாம். நோய் ஆரம்பிக்கும் போதே தயக்கத்தைக் காட்டி, உடல் முழுமையும் நோயை யுண்டாக்கி, மார்பில் கோழை கட்டல், வாய் பிதற்றல், கண்டவாறு பேசல், மூச்சடைத் தல், வாந்தியாதல், உடல் வியர்த்தல், குறட்டைவிடல், கோழைகக்கல் என்னும் குறி குணங்களைக் காட்டி வலிக்கத் தொடங்கும்.

## 19. ஓடு வலி.

இந்நோயில் மிகுந்த சுரமும், தொடையில் ஓய்ச்சலும், நாவு லர்தல், வியர்த்தல், கால்கள் வன்மையற்றுப் போதல், மிகுதி யாக நுரையுடன் கழிதல், சினங் கொள்ளல், கண் நோதல், விரல்கள் திமிர்த்தலாகிய குறிகுணங்களை உண்டாக்கும்.

## 20. மார்பு வலி.

அழல் ஐயக்குற்றங்களின் கலப்பாலுண்டாகித் தொண்டையில் கோழையைக்கட்டும். இடைவிடாச் சுரம், இருமல், கோழையோடு கூடிய வாந்தி இவற்றை யுண்டாக்கி உடலை மூறுக்கி வலி எழும். இந்நோய் பெண்ணிச்சையாலுண்டான கெடுதிகளாலும் வருவதாகுமென்பர்.

## 21. தமரக வலி.

இதில் வளி ஐயக் குற்றங்களின் கலப்பால் உண்டாகித் தலைவலி, மார்பு வலி, அடிக்கடி திடுக்கிடுதல், சினமுண்டாதல், மார்பில் கோழை கட்டல் என்னுங் குறிகளைக் காட்டி முக்குற்றங்களும் ஒன்று கூடி வலி நோயை வருவிக்கும் என்பர்.

## வலி நோயின் பொதுக் குறிகுணங்கள்.

வலிநோய் பெரும்பான்மையும் சிறுவயதில் வருவதாகும். நடுவயது வரைக்கும் சிலருக்கு நீடிப்பதுண்டு. நாற்பது வயது வரைக்கும் நிலைப்பதுமுண்டு. கைக்குழந்தைகளுக்கு வரும் வலி பன்னிரண்டு அல்லது பதினைந்து வயதுவரையிலும் விட்டு விட்டு வருவதுமுண்டு.

சிலருக்குப் பேசிக் கொண்டிருக்கும்போதோ அல்லது ஏதேனும் வேலை செய்து கொண்டிருக்கும்போதோ திடீரென வலி நோய் வருவதுண்டு. சிலருக்கு வலி வருவதற்கு முன்பே வலி வரப்போகின்றது என்னும் உணர்ச்சியை உண்டாக்கி, மிகுந்த சினம், மயக்கம் மனச்சோர்வு, சோம்பல், மிகுந்த பசி, வெருண்ட பார்வை ஆகிய குறிகுணங்களைக் காட்டி இழுப்புத் தொடரும்.

அன்றியும், அடிக்கடி தும்முதல், கொட்டாவி விடல், உடலின் சதை துடித்தல், மயக்கம், உணர்ச்சியற்றுக் கிடத்தல், சிறுநீர் பெய்யாதிருத்தல், வாயில் நுரைதள்ளலாகிய குறிகுணங்களையும் பெறும். சில நாழிகை சென்றபின் தெளிந்து எழுந்திருப்பர். சில சமயம் இவ்வலியானது எளிதில் விட்டு விடினும் ஒரு நாளைக்குப் பன்முறை வருவதுமுண்டு அல்லது நாள் கணக்கின்றி நினைத்த போதெல்லாம் வலி வருவதுண்டு. ஒரு நாளைக்குப் பன்முறை அடுத்தடுத்து வலி வந்துகொண்டிருப்பின் நோய் முற்றும் தெளிந்து ஞாபகம் நன்றாய் உண்டாவதற்குச் சற்று தாமிதமாகும்.

மற்றும் சில இழுப்புகளில் கை கால்களின் விரல்கள் கொறுக்கு வலி போல் மடங்கித் துடிப்புண்டாகும். தலையுங் கண்ணும் ஒரு புறத்தே இழுக்கும். அறிவு குறைந்து மயக்கமுண்டாகும். கையுங்காலும் மடக்க முடியாமல் விறைத்து உதறும். கண் விழித்துக் கொண்டேயிருக்கச் செய்யும். உணர்ச்சியைக் கெடுத்து, உடலைப் பின்னும் முன்னும் வளைத்து இழுத்துக் கூக்குரலிடும். வாய் கோணலாகும். பற்கடிக்கும். நாவைக் கடித்துக் கொள்ளும்; மூச்சுத் திணறும், தொண்டை கட்டும், உடல் கருத்துப்போம். வாயில் நுரையும் குருதியும் கலந்து வெளியாகும். மூக்கிலிருந்தும் குருதி கசிவதுண்டு. இவ்வாறு கொடுமைகள் பல செய்து, சில நாழிகைக்குள் வலி குறைந்து கொண்டே வந்து, பிறகு உணர்ச்சி பெற்று எழுந்திருக்கச் செய்யும். வலிவிட்டு எழுந்த போதிலும் தாங்க முடியாத தலைவலியும் சோர்வும் தூக்கமும் எழும்.

சிலர் வலி வந்தபோது முகத்தைக் கீழ்புறமாகத் தரைமேலாகிலும், படுக்கை மேலாகிலும் வைத்துக்கொள்வர். இதைக் காக்கை வலியெனக் கூறுவர். இவ்வலி இரவில் தூங்கும்போது வரின் சில வேளை மரணத்தையும் உண்டாக்கும் என்பர்.

மற்றும் சிலருக்கு இவ்வலியில் சிறுநீர் தன்னையறியாமலே இழிவது முண்டு. வலிக் கொடுமையால் சில சமயம் உடம்பில் அடிபட்டு வீங்குதல், காயமுண்டாதல், எலும்புகள் முறிதல், உடல் முழுமையும் நோதல், குருதி வாந்தியாதல் முதலிய குறிகுணங்களையும் விளைவிக்கக்கூடும். நோயின் கொடுமைக் கேற்ப இந்நோயுடன் பக்கவாதமும் (பாரிச வாயு; பக்கவாயு) தொடருவதுண்டு.

குழந்தைகளுக்கு வரும் நோயில், நோய் வருவதற்கு முன்பே சுரங்காய்ந்து விரல்கள் துடிப்பதும், கை கால்களின் சதைகள் துடிப்பதுமாகயிருந்து அப்பால் குழந்தை தாங்க முடியாத இழுப்பை வருவிக்கும். பெரும்பாலும் குழந்தைகளில் மலச்சிக்கலுடன் சீதமுண்டாய்ச் சுரம் ஆரம்பிக்கு முன்னதாகவே பெரியவர்களுக்கு சுரம் வருமுன் குளிரும் நடுக்கலு முண்டாவதுபோல, குழந்தைகளில் மேற்கூறிய இசிவு என்னும் இழுப்பு உண்டாகுமென்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளவும். சுரம் அதிகப்படும்போது இசிவும் அடிக்கடி உண்டாகிச் சன்னியையும் பிறப்பிக்கக்கூடும்.

இவ் விசிவு குழந்தைகளில் ஒரு நாளைக்கு பல முறைகள் வருவதுண்டு. வலி வரும்போதெல்லாம் கண்கள் மேல் நோக்கி இழுத்துக்கொள்ளும். வாய் கோணி ஒரு புறமாக வலித்துக் கொள்ளும். தலை ஒரு பக்கமாகத் திரும்பியிருத்தல், நாவும் ஒரு புறமாக இழுத்துக் கொள்ளல் என்னும் குறி குணங்களையும் காட்டும். குழந்தைகளுக் குண்டாகும் வலி நோயுடன்

சில சமயம் ''பக்க வாதமும்'' பிறப்பதுண்டு. சில குழந்தைகளில் கண் பார்வை குறைவதும், கண் செதிர்வதும் உண்டு (அதாவது ஒளி மழுங்குதல் ஏற்படும்.)

பொதுவாக வலி நோய் மருத்துவத்திற் கடங்காது நீடித்திருப்பின் சில வேளை கொஞ்சங் கொஞ்சமாக அறிவைக் கெடுத்து வெறி நோயை வருவிப்பதுமுண்டு.

சிறு வயதில் தொடங்கும் வலி நோய்கள் சில மாதங்கள் வரைக்குமிருந்து மருந்துகளால் குணமாகி அப்பால் நடுவயதில் மீண்டும் வலி நோய் வருவதுண்டு. சிறு வயதில் வலி நோய் தோன்றாது நடுவயதில் தோன்றுவதுமுண்டு. பெண்களுக்கு வலி நோய் பெரும்பான்மையும் வீட்டு விலக்கம் ஏற்படும் போது வரும். அன்றியும் கெர்ப்பிணிகளுக்கும் வலி நோய் உடல் நிலை சரியில்லாத காரணத்தால் ஏற்படுவதுண்டு. கெர்ப்பமாயுள்ள போதும் அல்லது பிரசவ வேதனைப்படும்போதும் அல்லது பிரசவித்த பின்னும் (அறை வீட்டில்) வலி நோய் தொடருவதுண்டு.

சில குழந்தைகளில் வரும் வலி நோயானது அறிவு குன்றாமலே கைகால்களைத் தூக்கித் தூக்கிப் போடுதல், சுரம், மாரில் கோழை கட்டல், வாய் கோணுதல் முதலிய குறிகுணங்களைக் காட்டிச் சிறிது நேரத்தில் அவ்வலி நின்றுவிடுவதுமுண்டு. ஒரு நாளைக்கு நாலைந்து முறை வலித்தலுமுண்டு. இஃது எளிதில் தீராதெனவும், தக்க மருத்துவத்தில் தீருமெனவும் பலவான அபிப்பிராயம் கூறுவார்கள். இதனை ''தெற்கத்திக் கணை'' என்றும் தீருவது அரிது எனவும் கூறுவர். குடற்கிருமியுள்ள குழந்தைகளில் வலி வருவதுண்டு.

தீரும் தீராதவை.

''இதுதான்வலி களஞ்சுக்கு மெடுத்த குணத்தைத் தானுரைத்தேன்
மதுதான் குமரனமர்கண்டன் மறியுங்காக முசகன் வலி
சதுராநாலுஞ் சாந்தமதாந் தயிலமொத்த மருந்து செய்தால்
பிதுராம்பிரம கண்ட வலி பிணந்தான் திரும்பிப் பேசாதே.''

(இதன் பொருள்)

முதலில் கூறிய ஐவகை வலி நோய்களுள் ''பிரமகண்டன்'' என்னும் ''குரங்கு வலி'' தீராது எனவும்; மற்ற நான்கும் தக்க மருத்துவத்தால் தீரும் எனவும் கூறியுள்ளார்.

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

உணவாதி செயல்களால் வளிக்குற்ற மிகுந்து அழல், ஐயக் குற்றங்களையும் துணைக்கொண்டு கீழ் நோக்குங்காலின் செயலைக் கெடுத்து எரு (மலம்) வைக்கட்டி, மற்றக் கால் களின் தொழிலையும் கேடடையச் செய்வதால் இந் நோய் பிறக்குமென்பர்.

## நாடி நடை.

1. ''சிறுவிரலிரண்டுபக்கம் நாடிதான் சிதறியோடில்
மருவிய காலுங்கையும் வலித்துடன் மிகவேநோகும்.''
(சி.ம.)

என்பதால் இருகைகளிலும் நாடிகளை ஆராயுங்கால் மூன்று நாடிகளும் சிதறியோடுமாகில் வலி நோயுண்டாகுமென அறி கிறோம்.

(வேறு)

2. ''வாதமெனும் நாடியது தோன்றிற்
சீதமந்தமொடு வயிறுபொருமல் திரட்சிவாய்வு
சீதமுறுங்கிராணி மகோதரம் நீராமை
திகழ்வாய்வு சூலைவலி கடுப்புத்தீரை
நீதமுறுங் கிருமிகுன்மம் அண்டவாதம்
நிலையும் நீர்க்கிரிச் சனங்கள் தத்துமேகம்
பேதகமா மூத்ரபிணி மூலரோகம்
பேசவெகு பிணிகளுமே பொருளதாமே.''

3. ''பாங்கான வாதத்தில் சேத்துமநாடி
பரிசித்தால் திமிர்மேவு முளைச்சலாகும்
தீங்கான இருமலுடன் சன்னிதோடம்
சேர்ந்தவிடம் வெடிசூலை யிருத்துரோகம்
வாங்காத யீளைமந்தார காசம்
வலியுடனே புறவீச்சுள வீச்சுவிக்கம்
ஓங்காணுஞ் சுரமுடனே சுவாசகாசம்
உண்டாகும் வெகுநோய்க்கு முறுதிதானே.''

4. ''கண்டாயோ சிலேற்பனத்தில் வாதநாடி
கலந்திடுக்கில் வயிறு பொருமல் கனத்த வீக்கம்
உண்டாலோ ஓங்காரசத்தி விக்கல்
உறுதிரட்சை வாய்வு வலி சன்னி தோடம்
விண்டாலே இளைப்பிருமல் சோகை பாண்டு
விடபாகம் விடசூலை பக்கவாதம்
திண்டாடு நாசிகா பீடங்கக்கல்
சிரநோய்கள் பலவும் வந்து சிக்குந்தானே.''

5. ''அடருகின்ற வாதத்திற் வாய்வு வந்து
அணுகினால் வலுவீச்சுத் திமிர் வியாதி
சுடருகின்ற வானந்தவாய்வு பக்கசூலை
துடைகுறுக்கு வலிபிடரி நெஞ்சு
படருகின்ற நரம்புசிப்பி யிடங்கடோறும்
பரந்துகுத்திக் கொளுவித்து நெஞ்சடைப்புமாகும்
இடருறவே சீதமுண்டாங் கபம் பெந்திக்கும்
இதனாலே பல பிணிவந்திருக்கும் பாரே.''

6. ''வகையான பித்தத்தில் வாய்வு கூடி
வசமானால் வலி குன்மஞ் சூலைவாய்வு
பகையான வாந்தி விக்கல் அருவருப்பு
பயித்தியங்கள் செரியாமை புளித்த ஏப்பம்
தகையான ஈரல்வலி நெஞ்சுநோவுந்
தலைகிறுக்கு மசதியாந் தாதுநட்டம்
துகை முலைவாய் வுற்றாலுஷ்ணஞ்சோகை
துடர்ந்துவரும் பலபிணிக்குந் தொனிப்புதானே.''

7. ''தொந்தித்த சிலேற்பனத்தில் வாய்வு கூடித்
துடர்ந்தகுன்மம் நெஞ்சடைப்பு சுவாசகாசம்
வந்தித்த குரல்தனிலே யுறுத்தலீளை
வழுவழுப்பு நீரூறல் மலத்தில் சீதம்
வெந்திரத்தம் கொழுத்தல் குத்துத்திமிர் வியாதி
வீச்சுடனே வலி யெட்டுந் திரட்சபாண்டு
அந்தித்தகுறுகுறுப்பு மயக்கம் விக்கல்
ஆனபல பிணியும் வந்தடறுந்தானே.''

(சதகநாடி)

என்பதினால், வளிநாடி தனித்து மீறி நடக்கினும்; வளி ஐயக் கலப்பு நாடியிலும்; ஐய வளிக் கலப்பு நாடியிலும்; வளிநாடி மிகுதியுடன் வாய்வு கூடினும்; அழல் மிகுதியுடன் வாயுகூடினும்; ஐயமிகுதியுடன் வாயு கூடினும் வலி நோய், உள்வீச்சு, புறவீச்சு, திமிர் வியாதி, நரம்பிசிப்பு முதலியன உண்டாகும் என்பதாம்.

## 49, வளி நோய்.

**வேறு பெயர்.**—வாத நோய்.

**இயல்.**—இது, வளிக்குற்றம் தன்னளவில் மிகுந்து அல்லது குறைந்து கேடடையும்போது உடம்பில் குத்தல், குடைதல், நோதல், தொழில் அற்றுப்போதல், நடுக்கல் முதலிய குண பேதங்களையுண்டாக்கிப் பல வகைப்பட்ட துன்பங்களைப் பிறப்பிக்கும் இயல்புடைய நோயாம்.

### முற்குறி குணங்கள்.

உடலில் நோதல், குத்தல், பிளத்தல் போற் காணல், நரம்பு முதலியன குன்றல், நடுக்கல், இறுக்கமாதல், நீர்ப்பசையின்மை, சதை.நரம்பு இவை அசைதல், உடல் இளைத்தல், குடைதல், அடிபட்டது போன்று வலித்தல், கைகால்கள் விட்டுப்போதல், பூட்டு நழுவுதல், உறுப்புகள் தளரல், மரத்துப்போதல், சிறுநீரும் எருவும் கட்டுப்படுதல் அல்லது தீய்தல்; நீர் வேட்கை, எலும்புக்குள் குடைதல், குத்தல் அல்லது எலும்பு, எலும்பின் பூட்டு இவைகள் வீங்கிகாணல், கை கால் விரல்கள் இவற்றின் பூட்டுகள் நீட்டவும் முடக்கவும், அசைக்கவும் முடியாமலிருத்தல், தோல், கண், எரு இவை கருத்துக் காணல் என்னும் வளிக் குற்றத்தின் குறிகுணங்களுள் சில அல்லது பல குறிகுணங்கள் சேர்ந்து தோன்றும்.

### நோய் எண்.

யூகி சிந்தாமணி என்னும் நூலை அனுசரித்துச் சித்த மருத்துவத்திலும் கூறியுள்ளதை இங்கு விளக்கியுள்ளோம்: "என்னவே வாதமது எண்பதாகும்" எனக் கூறியும் அவற்றின் பெயர்களையும் குறிகுணங்களையும் விவரிக்கும்போது எண்பத்தைந்து வகையினைக் கூறிப் போந்தனர். ஆயினும் வளி நோய்ப் பிரிவுகளின் பெயர்களைக் கூறி பாவினை முடிக்கும் போது "தாக்கான வாதந்தான் எண்பதாகும்" எனவும் கூறியுள்ளார். வேறு சில நூல்களில் வளிக் குற்றத்தின் குணபேதங்களைக் கொண்டும், உறுப்புகள் வாரியாகவும் கணக்கிட்டு மொத்தம் எண்பது பிரிவுகளாக வகுத்துள்ள மாதிரியைப் பின்னாடி விளக்கியுள்ளோம். அதனையும் கவனிக்கவும். மாணவர்களுக்குப் புரியும் வகை எதுவோ அதனைப் பின்பற்றி வளிநோய் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்ளுவது சாலச் சிறந்ததாகும்.

ஏ. யூகி சிந்தாமணியில் கூறியுள்ள வளி நோய்களாவன :

1. "என்னவே வாதமது எண்பதாகும்
ஏற்றமாம் பேருடைய எழிலைக் கேளாய்
வன்னவே வாதஸ்தம்பம் வாதகர்ஷணம்
வகையான கரஸ்தம்பந் தலஸ்தம்பந்தான்
பொன்னவே பூசுவாதத்தினோடு
பெரியகாளாஞ் சகமு மூருஸ்தம்பம்
குன்னவே வாதகர்ன்னங்குரிஷகிரிஷம்
கூறான நரித்தலையின் வாதமாமே."

2. "தலைக்கும்பவாதமொடு மலைத்த கம்பம்
தருக்கான பாணிகம்பங் கூனிவாதம் ;
அலைய ஆகுனிவாதம் அஷேவகந்தான்
அதிவாதம் உபகதமும் நெற்றிசூலை
கலைகர்ன சூலை செவிபடுவாயாகும்
கடுபக்கவாதமொடு பக்ஷவாதம்
திலையபேய்வாதமொடு பிராணாலயந்தான்
தருக்கான சலஸ்தம்பமொடு சந்துவாதமாமே."

3. "சந்துவாதத்தோடு சகனவாதம்
தரித்த வற்புதவாத முரகன்வாதம்
உந்துமுரகாரியோடு வஸ்வதம்பம்
உறுதிபாசத்தம்பம் நேத்திர பவுத்திரம்
அந்துதண்டவாத மொடு வஷ்டத்தந்திரம்
அதிவசனா வாதமொடு மகவாதந்தான்
முந்து மிருத்து வாதமோடுதரவாதம்
முகிழ் மூத்திரவுதிரவாதமா மென்னே."

4. "என்ற சுக்கில வாதஞ் சவ்விரங்க வாதம்
எழில் ஊர்த்துவ வாதமொடு வஞ்ஞானத்தம்பந்
தென்ற சிரக்கம்ப வாதமுஞ் சதஸ்தம்பம்
செயவச்சிர ரூபமொடு கண்டக்கிராகம்
நன்றதாம் நகாரி யொடு பதி தவாதம்
நலியோனி சூலை யொடு கெற்ப சூலை
குன்றவஷ்டசூலை யொடு குடல் வாதந்தான்
குறியசுவ வாதமெச்சு வாதந்தானே."

5. ''தான்மூடு வாதமாம் வசுவாதந்தான்
தனுபீஜத்தம்ப மொடுதந்திர வெட்டி
வான்வாத சுரோணி தஞ்சித்து வாதசுரோணிதம்
மகத்தானவை கிதவாதச் சுரோணிதம்
ஊனு திரவாத சுரோணிதந் தன்னோடு
உறுபயித்திய வாதசுரோணி தமுமாகும்
தேன் சிலேட்டும வாத சுரோணி தந்தான் மிக்கச்
சினத்து தரவாத சுரோணி தமுங்காணே.''

6. ''காணவே குணவவதானகமாம் வாதங்
கண்டகவதானகமாம் வாதமாகுந்
தேணவே சிரக்கம்பவவதான கந்தான்
சீறியதோர் வாதத்தின்றலை நோக்காடு
பூணவேபித்தத்தின்றலை நோக்காடு
புகழான சிலேட்டு மத்தின்றலை நோக்காடு
சாணவே சன்னி வாதத்தின்றலை நோக்காடு
தருரத்த பித்தத்தின்றலை நோக்காடே.''

7. ''நோக்கான கிருமி கந்ததலை நோக்காடு
நுதற் சூரியாவர்த்த மொடுசந்தி ராவத்தம்
ஊக்கான கர்னாவாதந்தன்னோடு
ஒருதலையின் வர்த்த வாதமுமேயாகும்
வாக்கான வாத கர்னசூலை யோடு
மருவியதோர் பித்தகர்ன சூலையாகுந்
தேக்கான சிலேட்டு மகர்ன சூலையோடு
செயமான கிருமி கர்னசூலை தானே.

8. ''தானானதந்த வாயுவின்றன்னோடு
தாக்கான வாதந்தான் எண்பதாகும்.''

(இதன் பொருள்).

வளிநோய்கள் எண்பதுக்கும் பெயர்களை யூகி முனி கூறுகிறார் :—

1. வாதஸ்தம்பம்
2. வாதகர்சணம்
3. கரஸ்தம்பம்.

4. தலஸ்தம்பம்
5. பூசுவாதம்
6. காளாஞ்சுகவாதம்
7. ஊருஸ்தம்ப வாதம்
8. வாதகர்ணகம்
9. குரிஷகிரிஷவாதம்
10. நரித்தலை வாதம்
11. கும்ப வாதம்
12. மலைத்தகம்பவதம்
13. பாணிக்கம்ப வாதம்
14. கூனி வாதம்
15. ஆகுனி வாதம்
16. அக்ஷேபகவாதம்
17. வாத உபகதம்
18. நெற்றிசூலை வாதம்
19. கர்ணசூலை வாதம்
20. செவிபடு வாதம்
21. பக்கவாதம்
22. பக்ஷவாதம்
23. பேய்வாதம்
24. பிராணாலய வாதம்
25. சலஸ்தம்ப வாதம்
26. சந்துவாதம்
27. சகன வாதம்
28. அற்புத வாதம்
29. உரக வாதம்
30. உரகாரி வாதம்
31. அஸ்வதம்ப வாதம்
32. பாசத்தம்ப வாதம்
33. நேத்திர பவுத்திர வாதம்,
34. தண்டக வாதம்,
35. அஷ்டதந்திர வாதம்
36. வசனாவாதம்
37 மகாவாதம்

38 மிருத்வாதம்
39 உதரவாதம்
40 மூத்திர உதிரவாதம்,
41 சுக்கில வாதம்,
42 சவ்விரங்கவாதம்,
43 ஊர்த்துவ வாதம்
44 அஞ்ஞானத்தம்பம்
45 சிரக்கம்பவாதம்
46 சதஸ்தம்ப வாதம்
47 வச்சிர ரூபவாதம்
48 கண்டகிராக வாதம்
49 நகாரி வாதம்
50 பதித வாத
51 யோனிசூலை வாதம்
52 கர்ப்பசூலை வாதம்
53 அஷ்டசூலை வாத
54 குடல் வாதம்
55 அசுவ வாதம்
56 மெச்சு வாதம்
57 மூடு வாதம்
58. வசுவாதம்
59. பீஜஸ்தம்பவாதம்
60. தந்திர வெட்டி வாதம்
61. வாத சுரோணிதம்
62. சித்துவாத சுரோணிதம்
63. வைகிதவாத சுரோணிதம
64. உதிரவாத சுரோணிதம்
65. பயித்தியவாத சுரோணிதம்
66. சிலேட்டுமவாத சுரோணிதம்
67. உதரவாத சுரோணிதம்
68. குண அவதானகம்
69. கண்டக அவதானகம்
70. சிரக்கம்ப அவதானகம்
71. வாதத் தலை நோக்காடு

72. பித்தத் தலை நோக்காடு.
73. சிலேட்டுமதலை நோக்காடு.
74. சன்னிவாத தலை நோக்காடு.
75. இரத்த பித்த நோக்காடு.
76. கிருமிக நோக்காடு.
77. சூரியவர்த்தம் தலை நோக்காடு.
78. சந்திராவர்த்தம் தலை நோக்காடு.
79. கர்னாவர்த்தம் நோக்காடு.
80. ஒரு தலையின் ஆவர்த்தம்.
81. வாதகர்ன சூலை.
82. பித்தகர்ன சூலை.
83. சிலேட்டுமகர்ன சூலை.
84. கிருமிகர்ன சூலை.
85. தந்த வாயு

என்பவையாம். இவை ஒவ்வொன்றின் குறிகுணங்களை யூகி சிந்தாமணியிலும், சித்த மருத்துவத்திலும் கூறியிருப்பவனவற்றைக் கீழே கவனிக்கவும் :—

### 1. வாதத்தம்பம்.

''உற்பவிக்கும் வாதமது எழுந்து பொங்கி
உயர்காலின் புறவடியைக் குடைந்து பற்றித்
தெற்பவிக்கும் வீக்கமாய்ச் செலும்பலுண்டாய்த்
தேகமெங்கும் நோவாகித் திமிருமாகி
விற்பவிக்கும் வில்லு போல் விதனமாகி
மிடுக்கான மாந்தனைப் போல் விதனமாகிப்
பற்பவிக்கும் பரன்றனையேநினயைா மூடர்
படுகின்ற வாதஸ்தம்பமுமாம் பாரே.''

என்பதினால், வாதத்தம்ப நோயில் வளிக்குற்ற மிகுந்து கால் புற வடியிற்றங்கி, அங்குக்குடைதல், எரிச்சல், தெறிப்பு வீக்கம் இவற்றை உண்டாக்கி உடல் முழுமையும் நோகச் செய்யும். திமிரை உண்டாக்கி உடலை வில்போல் வளையச் செய்யும் என்பதாம்.

2. வாத கர்சணம்.

''பார்க்கின்ற வாதவுள்ளடியிற் சாணி
பதித்து வைத்தது போலப் பாதமெங்கும்,
நோக்கின்ற குதினரம்புக் கால்களெங்கும்
கொடிதான பாரமாய்த் திமிர்ப்புண்டாகி,
வார்க்கின்ற வார்த்தைகள் மிகவே செய்து
வளைந்திடினும் நிமிர்ந்திடினும் வசங்கொடாமல்,
ஏர்க்கின்ற காலுளைக்கும் வாத கர்ஷணம்
ஈதலற மில்லார்தார்க் கெய்துங்காணே.''

என்பதினால், இதில் காலடியிற் சாணியைப் பூசியது போன்று அருவருப்பை உண்டாக்கிக் குதிக்கால் நரம்பில் வலியும், கால்கள் கனமாகவும், காலில் வலியும் திமிரும் காணும். உடலை வளைக்கவும் நிமிர்க்கவும் முடியாதவாறு நோகும்.

3. கரத்தம்ப வாதம்.

''எய்தியே விரிவுதனி லிரண்டு காலு
மிசைந்தவுள்ளடி தனிலு மெரிந்து நோவாம்,
ஐதியே அக்கினியில் வைத்தாற் போல
வங்கமெலா மிகவெளுத்துலர்த்தி யாகும்,
பொய்தியே புரைதனிலே புழுக்களூர்தல்
போலவெ மிகவூர்ந்து நடை கொடாது
கைதியே வாயுலர்ந்துடல் கனக்கும்
கணக்கான கரஸ்தம்பங்கருதிப் பாரே''

என்பதினால், இந்நோயில் இரண்டு கால்களின் உள்ளடியிலும் எரிச்சலும் நோயுமுண்டாகும். உடல் முழுவதும் நெருப்புப் பட்டாற்போல் எரிதல், உடல் வெளுத்து உலர்வதுபோல், தோலின் கீழே புழு ஊர்வது போன்ற உணர்ச்சி, நடக்க முடியாமை, வாயுலரல், உடல் கனத்தலாகிய குறி குணங்கள் காணும்.

4. தலத்தம்ப வாதம்.

''கருதியே மிகக் கனத்து முள்ளங்காலைக்
கனக்கவே குடைந்து நொந்து கருகிக்காணும்,
வருதியே வணக்கஞ் சற்றில்லா மற்றான்,
வலித்துமே மேனோக்கி வருத்தங் காணும்,

சருதியே சடமுலர்ந்து மேல் மூச்சுண்டாய்த்
தாகமாயுடம் புலர்ந்து தளர்ந்து காணும்,
கருதியே கடுவுப்பு புளிப்பு தன்னாற்
கனவாதங் கோபித்தே தலதம்பங்காணே.''

என்பதினால், இந்நோயில் கால் வீங்கி, உள்ளங்கால் கனத்துக் குடைந்து நொந்து உடல் கருத்துக் காணும். உடலை வளைக்க முடியாமல் வலியுண்டாகும். உடல் வறட்சியடையும். மேல் மூச்சு வாங்கும். நீர் வேட்கை, உடல் உலர்ந்து தளரல் முதலிய குறி குணங்களுமுண்டாம். அதிகக் காரம் உப்பு, புளிப்பு உள்ள பொரு ளைக் கொண்டால் இந்நோய் மிகுதியாகித் துன்புறுத்தும்.

### 5. பூசுவாதம்.

''தம்பமாமலத்து வாரந்தை ர த்தான்
தைத்தோரம்பு போற்குடைந்து நொந்து
உம்பமா முள்ளடியினள வாய்ப்பற்றி
உறுதியாய் மிகநொந்து குடைச்சல் காணும்
நம்பனார் பதம் போற்றா நரர்கள் தம்மை
நணுகியேயுருக்குலைத்து நலிக்கப்பண்ணுங்
கம்பமாங் கனத்துதிரம் வலியுண்டாக்குங்
கத்ததோர் பூசுவாதந்தானாமே.''

என்பதினால், இவ்வாத நோயில் எருவாய் தொளையில் அம்பைக் கொண்டு தைப்பது போலக் குத்திக்குடைந்து நோந்து, முள்ளந் தண்டினைப்பற்றி வலித்துக் குடையும். உடல் உருத்தெரியாதபடி நலியச் செய்யும். உடலை வளைக்க முடியாமல் கொம்பைப்போல் நிமிர்ந்திருக்கச் செய்து வலியை யுண்டாக்கும். பலவிதத் துன்பங் களையும் விளைவிக்கும்.

### 6. காளாஞ்சக வாதம்.

''வாதமாங்கால் கையிற் குறங்கிரண்டும்
வகுத்துசந்து முறுக்கியே குடைந்து நொந்து
நாதமா நடைதானுந்தான்கொடாம
னலிந்துமே முடமாகிக் கரடுகட்டிச்
சேதமாஞ்சடந்தானுமிகவெளுத்துத்
தினவோடு சிரங்குமாய்ச் சிலேட்டுமமாகிச்
காதமாயருசியொடு மயக்கமாகுங்
கருதிய காளாஞ்சகமாம் வாதமாமே.''

என்பதினால், இந்நோயில் கை,கால், தொடை, மூட்டு இவைகளில் பிளத்தல் போலும், முறுக்குவது போலும், குடைவது போலும் நொந்து, நடக்கவொட்டாமற்செய்து உடல் மெலிந்து, சந்துகள் தோறும் முடங்கிக் கரடு கட்டிக் கொள்ளும். உடல் வெளுத்துத் தினவெடுத்துச் சொறி சிரங்கு உண்டாகும். அன்றியும், உடலில் ஐயமிகுதியாகிச் சுவை யின்மை,மயக்க முதலியவையுமுண்டாகும்.

## 7. ஊருத்தம்ப வாதம்.

''ஆமென்ற வாதமது உள்ளடங்கி
அடித்துடைதான் குரங்கிரண்டு மளவாய்ப்பற்றிக்
காமென்ற கைகாலில் விரலுஞ்சுற்றிக்
கனத்துமேசாணியது பொதிந்தாற்போலத்
தேமென்ற சிரந்தனிலே பாரமுண்டாய்த்
தேகமெங்குமூதியேதிமிருண்டாகும்
நாமென்ற நடக்கொணாவொடுக்கமாகி
நலியூருத்தம்பமது நணுகுங்காணே.''

என்பதினால், இந்நோயில் வளியானது தன்னளவில் குறைந்து அடித் தொடைகளிரண்டையும் பற்றி, கை, கால், விரல்களைச் சுற்றிக்கனத்து, சாணியைப்பூசியது போல் ஓர்வுணர்ச்சி யுண்டாகும். தலைபாரமாயிருக்கும் உடல் வீங்கும். திமிருண்டாகும். நடக்கமுடியாமலும் செய்யும்.

## 8. வாத கர்ணகம்.

''தம்பமாய் நடக்கும்போதுந்தரித்தும்
தாவியேயு யரமாயெட்டும் போதும்,
வம்பமாய் வெள்ளத்திலிரங்கும்போது
மயக்கமாய்த்தள்ளாடி இடைந்து வீழ்ந்தும்
வெம்பமாம் பாம்பு விடமேறும் போல
மிக்கானசரீரமெலாந்தளர்ச்சியாகும்
சிம்பமாம் புள்ளுப்போல் பரப்பு காணும்
செரிவாதகர்ணகச் சிறப்புமாமே.''

என்பதினால், இந்நோயில் நடக்கும்போதும், காலை உயர்த்தித் தூக்கி வைக்கும்போதும்; நீரிலிறங்கும்போதும் மயக்கத்தோடு தள்ளாடி அஞ்சி விழுவது போலக் காணப்படும். உடல் வெப்பம் கொண்டு பாம்பின் நஞ்சு ஏறுவதுபோன்றும், பறவை வெளியில் பறப்பது போன்றும் பிணி உடலெங்கும் விரைவில் பரவித் தளர்ச்சியை உண்டாக்கும்.

### 9. குரிசகிரிச வாதம்.

''சிறப்பான பாம்புவிடம் போல யேறிச்
செறிவாக விறங்கிய தோர் செய்கை போலுந்
துறப்பான சூரையாயறையிற்றட்டைச்
சுழலவேசுருக்கித்தான் பற்றியங்கம்
பிறப்பான பீறியதோர் குடலைப் போலப்
பிதிர்கின்றவன் போலும் பிரமியென்ன
மிறப்பான தோலில் முள்பொதிந்தாற்போல
முயன்றிடுங்காண்குரிசகிரிச மூர்க்கந்தானே.''

என்பதினால், இந்நோயில் வளிக்குற்றமானது உடலெங்கும் பாம்பு நஞ்சு பரவுவது போல் பரவி, இறங்குவது போல அறையிற்றங்கி, அங்கு சுழன்று குடலைப்பற்றி நோயையுண்டாக்கி, தோள் முதலிய இடங்களிலும் தங்கி அங்கு முள்ளால் குத்துவது போல நோயை உண்டாக்கும்.

### 10, நரித்தலை வாதம்.

''மூர்க்கமாய் முயன்று முழங்கால் தான் வீங்கி
முதிர்ந்து ரத்தமுந்திரண்டு முயற்சியாகி,
நீக்கமாய்த் தின்றிடவொணாமற்றானும்
நிமிர்ந்திடுகில் சந்துந்தான் முடக்கொணாமல்
தீர்க்கமாய்த்துண்டித்து மிகச்சிக்கென்று
செழுமை நரித்தலைபோல மிகவே வீங்கி
நார்க்கமாய் நாடியுமே படபடக்கும்
நரித்தலையின் வாதமென்றே நவிலலாமே.''

என்பதினால், இந்நோயில். முழங்கால் மூட்டில் செந்நீர் நிரம்பிச் சிவந்து வீங்கி மடக்கவும், நீட்டவும், நிற்கவும் முடியாமல் நரியின் தலையைப்போல் மிகுதியும் வீங்கிக்காணும். நாடி படபடத்தோடும்.

### 11. கும்பவாதம்.

நவிலவே தோண்மீதுங்கரத்தின் மீது
நலிந்து மெத்தவாகியே நசவுண்டாகும்,
கவிலவே கன்னமோடு நயனந்தானுங்
கடுத்துமே விறுவிறுப்பு மெரிவுங் காணும்
துவிலவே துடிப்பாகுஞ் சிரசுதன்னிற்
சுழற்றியே நாபிக்கீழ் வலியுமுண்டாம்.
அவிலவே யடி நாக்கில் யழன்றுகாணு
மலருமே வருகும்ப வாதந்தானே.''

என்பதினால், இந்நோயில் தோளபட்டை கை, முதலிய இடங்களில் மிக்க நோயுண்டாகி அவைகள் நீட்டவும் முடக்கவும் ஒட்டாமல் நோகும், கன்னமும், கண்ணும் கடுத்து விறுவிறுத்து எரிவுண்டாகும். உடல் துடித்து, தலை சுற்றி மிகு சுரமுண்டாய் நாபியின் கீழ் வலியும் அடி நாக்கில் அழற்சியுமுண்டாகும்.

### 12. மலைத்தகம்ப வாதம்.

"கும்பமாங் கையின் மணிக்கட்டு தன்னிற்
குவிந்தரையில் மொத்தைபோ லுரத்துக் காணுந்
தும்ப மாமங்கங்கள் துடிப்பதாகுந்
துண்டுமே கால் கையுநடுக்கமாகும்
அம்பமாமரைக்குங் கீழ் திமிருண்டாகும்
அதரமே மிகக் கறுத்து வெடிப்புண்டாகும்
வம்பமாம் வாயுதான் புரியநாற்றம்
வருமலைத்தகம்பத்தின் மார்க்கமாமே."

என்பதினால், இந்நோயில் கையின் மணிக்கட்டுப் பூட்டுகளில் வீங்கித் தடித்துக் காணும். உடற்றுடிக்கும். கைகால் நடுங்கும். அரைக்குக் கீழ்த் திமிருண்டாகும், உதடு மிகக்கருத்து வெடிப்புண்டாகும். மிக்க நாற்றத்துடன் காற்றுப்பரியும்.

### 13. பாணிக்கம்ப வாதம்.

"மார்க்கமாய் வாய்வுமாய் மெய்நிறைந்து
வயிறு தனிற்பசியிலாதூணு மற்று
நார்க்கமாய் ஞாலத்து நடக்கையற்று
நடுக்கமாங்கையிரண்டுந் திமிருண்டாகும்
உர்க்கமாயுறக்கமில்லா துணர்ச்சியற்று
உதறியே சரீர மெங்கு முலர்ந்துகாணும்
பார்க்கமாய் வாய்விட்டு அலத்தலாகும்
பாணிக்கம்ப வாதத்தின் பாங்குதானே."

என்பதினால், இந்நோயில் உடல் முற்றிலும் வளிக்குற்றத்தை நிறைத்துப் பசித்தீயைக் கெடுத்து, நடக்க முடியாமை, கை, கால் நடுக்கம், கைதிமிர்தல், தூக்கமின்மை உணர்ச்சியின்மை, உடல் வற்றிப்போதல், வாய்பிதற்றலாகிய குறிகுணங்களைக் காட்டி காலை மடக்க முடியாமற்படி கொம்பைப் போல் நிலைக்கச் செய்துவிடும்.

### 14. கூனி வாதம்.

'' பாங்கான மலபாண்டப்பையிற்றானும்
பண்பாகத்துடங்கியே மலத்துவாரம்,
நீங்காமலடக்கியே நோவுமாகி
நினைவில்லாச் சத்தியொடு மயக்கமாகித்
தேங்கானதேக மெங்கும் வலியுமாகிச்
சீதளமாய்க் குளிர்ந்துமே காணுங்கண்டாய்
கோங்கான கோழிப் பேனூர்தல் போலுங்
குறிகாணுங் கூனியாம் வாதந்தானே .''

என்பதினால், இந்நோயில் பெருங்குடலில் தொடங்கி மலத்துவாரம் வரையிலும் வாயு (வளிக்குற்றம்) பெருகிப்பரவி வெளியாகாமல் உள் தங்கி நோயைப் பிறப்பித்து வாந்தியையும் மயக்கத்தையும் உண்டாக்கும். உடம்பு முழுமையும் வலி, உடல் சில்லிட்டுக் குளிர்தல், உடலில் கோழிப்பேன் ஊர்தல் போலிருத்தல், கூன் உடையவனைப் போல் வளைந்திருத்தலாகிய குறி குணங்களையும் உண்டுபண்ணும்.

### 15. ஆகுனி வாதம்.

'' கூனியேதேகமெங்குங் குத்தலுண்டாய்க்
குளிர் குளிர்ந்திருமியேவாய் நீரூறி
ஆனியேயங்க மெல்லாமசைதலாகி
யடிக்கடிக்கும் வியர்வைதானதிகமாகி,
மேனியெலாங்குறுகியே யூதலுண்டாய்
வெளுக்குமே சரீரந்தான் வீக்கமாகும்,
பானியேயடிக்கடிக்கு வருந்திக் கேட்கும்,
பண்பான ஆகுனியின் வாதந்தானே. ''

என்பதினால், இந்நோயில் உடம்பு முழுமையும் குத்தலாய்க் குளிர்ச்சியடைந்து இருமி வாய் நீரூறுதலும், உடல் அசைதலும், உடல் வியர்த்தலும், உடல்குறுகி வெளுத்து ஊதுதலுமுண்டாகும் அந் நோயினன் '' நான் பிழைப்பேனா '' என்று அடிக்கடி கேட்பான்.

### 16. அட்சேப வாதம் (அஷேவக வாதம்).

'' வாதமேகோபித்துச் சரீரந் தன்னில்
வயிறு விலாப்பக்கங்கள் வாடியோடி,
நாதமேயுட்புகுந்து இருபத்தஞ்சு
நலமறிய ஈரலைத்தான் பற்றி நொந்து

காதமேகை காலுமோய்ந்து போகுங்
கனக்கவே நோவாகிச் சுருள நொந்து
ஆதமேயங்க மெலாமசைதலாகு
மஷேவகமாம் வாதத்தினாண்மை தானே.''

என்பதினால், இது வளிக்குற்றம் மிகுந்து வயிறு, விலாப்பக்கங்களில் ஓடிப்பாய்ந்து, ஈரலைப்பற்றிக்கொண்டு குத்தலையும், நோவையுமுண்டாக்கும். கைகால்கள் ஓய்ந்து போகும். கைகால்கள் வீங்கல், நோதல், உடல் அசைதலாகிய குறிகுணங்களையுமுண்டாக்கும்

## 17. வாத உபகதம்.

'' ஆண்மையாங்காலோடு கையுஞ் சந்து
மங்கமெலாமிகத்திமிர்ந்து சாணி தானும்,
பூண்மையாப் பூசினது போலே காணும்
புரண்டுதான் விறுவிறுத்துப்புளகமாகிப்,
பாண்மையாங்காதசையு முஷ்ணமாகிப்
பசித்துமேமிகநாணி நடைகொடாது,
வாண்மையாம் வாட்ட முறுமயக்கமாகும்,
வாதவுபகதந்தன்னை வகுத்த வாறே.''

என்பதினால், இந்நோயில் கால்கைகளின் கீல்களை மிகவும் திமிரச் செய்யும். சாணி பூசியது போன்ற ஓர் உணர்ச்சியையும் விறுவிறுப்பையும் உண்டாக்கும். உடலில் உட்டிணத்தையும், பசியையும் காதடப்பையுமுண்டாக்கி, நாணம், நடைகொடாமை, ஆண்மை குறைதல், மயக்கம் முதலிய குறிகுணங்களையும் விளைவிக்கும்.

## 18. நெற்றி சூலை வாதம்.

'' வாறாண நயனந்தான்புருவமற்றை
மத்தியத்திற்குடைந்துமே மூக்குத்தண்டு
கூறான குரலினைத்தான் பற்றி நொந்து
குடைந்து மேகையோடு கால்களி ரண்டும்
ஆறான அங்கமெலாங் கடுப்புண்டாகு
மழுகுரலாய் நித்திரையு மயக்கமாகும்
தேரான சிரசுதனிற்குத் தலுண்டாம்
சிறுநெற்றிச் சூலையின்றன் செய்கைதானே.''

என்பதினால், இந்நோயில் வளிக்குற்றத்தா லிருபுருவங்களின் இடையில் குடைதல், மூக்குத்தண்டு, குரல்வளை இவைகளில் நோக்காடு, குடைதல், கைகால் உடல் முழுமையும் கடுப்பு முதலிய குறிகுணங்களை தோற்றுவிக்கும், நோய் தாங்கமுடியாது அழச்செய்வதோடு தூக்கம், மயக்கம், தலையில் குத்தல் இவற்றையும் வருவிக்கும்.

### 19. செவிச்சூலை வாதம் (கர்ன சூலை வாதம்).

"செய்கையாஞ் செவித்துவாரந் தன்னினின்று
சிக்கெனவே குச்சி கொண்டு குடைந்தாற்போலச்
சைகையாய் நோவுண்டாய்ச் சலிக்குஞ்சிந்தை
சலத்தின் மேல் மனதுண்டாய்த் தாகமுண்டாம்,
வைகையாய் வயிறு தனில் மந்தமுண்டாய்
மயக்கமாய் மனது தனிற்பயமுமுண்டாய்க்
கைகையாய் வாய்கசந்து புளிப்புண்டாகுங்
கர்னசூலையின் குணத்தைக் காணுங்காலே."

என்பதினால், இந்நோய், செவியின்றுளை தன்னில் குச்சு கொண்டு குடைந்தாற்போன்று நோதல், மனக்கலக்கம், நீர் வேட்கை, மந்தம், மயக்கம், அடிக்கடி அச்சங்கொள்ளல், வாய் கைத்துப் புளித்தல் ஆகிய குறி குணங்களைப் பெறும்.

### 20. செவிபடு வாதம்.

"காணுமே செவிதனிலே சத்தம் போலக்
கடலிரைச்சல் போலவே முழக்கங்காணும்,
நாணவே செவியுறுதல் நரம்பைப் பற்றி
நனைவுகளில் மண்கொண்டு அடைத்தற்போலத்,
தோணவே தொண்டைதனிற்கபந்திரண்டு
சுப்பிரமாய்க் கட்டியாயிறுகி வீழும்,
ஊணவே பிறர் சத்தஞ்செவியிற்கேளா
துண்மையாஞ் செவி படுவாதந் தானே.

என்பதினால் இந்நோயில் கடலிரைதல் போன்று காதினில் ஒலித்தலும், செவியின் நரம்பில் மண் அடைத்ததுபோன்று தோன்றலும் தொண்டையிற் கபம் சேர்ந்து அடைத்தது போலும் குறி குணங்களைக் காட்டி இருமிக் கோழைகக்கல், பிறர் பேசுவது செவியிற் படாமை என்னும் குறிகளும் காணும்.

21. பக்கவாதம்.

" உண்மையாயுடம்பெல்லாம் வாயுவாகி
உயர்கின்ற நாடியது அசைவுமின்றிக்
கண்மையாய்க் காயமீதினிலேயேறிக்
கசக்கியே யிழுந்து மேவலித்துக் காணும்
பண்மையாய்ப் பக்கத்திலிசிவு முண்டாய்ப்
பாரித்துப் பணைக்கையுங் காலுங்கோணும்
வெண்மையாயுடம்பெங்கும் வியர்வை காணும்
மெலிவு பக்கவாதத்தின் விவரந்தானே."

என்பதினால், இதில், உடல் முற்றும் வாயு மிகுந்து பரவி முக்குற்றங்களும் கேடடைந்து அசைவற்று உடலை நையும்படி செய்து உடலில் தாங்க முடியாத வலியையுண்டாக்கி, உடலின் ஒரு பக்கத்தில் இசிவையும் கை கால் கோணுதலையுமுண்டாக்கும் உடல்வெளுக்கும் வியர்வையும் காணும்.

22. பட்ச வாதம்.

" தானானகால் கோணிச் செத்தாற்போலத்
தாக்கான தரைதனிலே நடக்கொணாது,
கானான கைகளொன்றும் பிடிகொடாது
கனமான உணர்ச்சியின்றிக் கைகள் சோரும்,
மானான மயிர்க் கூச்சுந்திமிர்வுண்டாகும்
வாய்தானுங் கோணியே தண்ணீர் விழும்
பேனான பித்தம் போலழன்று காணும்
பிரிவுபட்ச வாதத்தின் பெற்றியாமே."

என்பதினால், இந்நோயில் செத்தவனுடைய கால் போல் கால் துவண்டு அசைக்க முடியாமலும், நடக்கமுடியாமலும், கைகள் ஒன்றையும் பிடிக்க முடியாமலும் உணர்ச்சியின்றிச் சோரும். அன்றியும், மயிர்க்கூச்செறிதல், உடல் திமிர்கொள்ளுதல், வாய் கோணி உமிழ்நீர் தானாகவே வடிதல், உடல் பித்தம் பெருகியது போல் வெப்பம் அடைதலாகிய குறி குணங்களைத் தோற்றுவிக்கும். இந்நோயினை விரிவாக மற்றோரிடத்திலும் கூறப்பட்டுள்ளது.

23. பேய் வாதம்.

" பெற்றியாம் பெருமையாங் காலுங் கையும்
பெருவயிறு நெஞ்சோடு விரலு மூக்கும்,
எற்றியா மெறிகழுத்து மெங்கும் பற்றி
ஏக்கமாய் நொந்து வுடம்பெங்கும் வீங்கி,
உற்றியா மூணவே திமிர்த் தெடுத்து
உறுதியாய்ப் பிடிக்கவுமொணாமலாகும்
சத்தியாய் வாய்கசந்து மயக்க மாகுந்
தரித்திட வொண்ணாது பேய் வாதந்தானே."

என்பதனால், இந்நோயில் கை, கால், வயிறு, நெஞ்சு, விரல் மூக்கு, கழுத்து இன்னுமிவ்விடங்களில் வாயுவானதுபற்றி வலியுடன் வீக்கத்தையுமுண்டாக்கும். அன்றியும் அவ்வுறுப்புகளில் திமிரையு முண்டாக்கி எதையும் பிடிக்க வொட்டாமற் செய்து வாந்தி, வாய் கைத்தல், மயக்கம் முதலிய குறிகுணங்களையும் காட்டி ஓரிடத்திலும் இருக்கமுடியாமல் துன்புறுத்தும்.

24. பிராணலய வாதம்.

" வாதமாய் வலித்துமே கண்கள் தானும்
வரிசையாங் கருவிழியில் சோதி தன்னில்
ஊதமாய் முழுவெளுப்பாய் தான் மறைந்து
உக்கிரமாய்ப் பருமுது கேகிட்டலாகும்
நாதமாய்க் கையிரண்டு காலும் வற்றி
நடுக்கமே யுண்டாகி நலியுந் தேகம்
வேதமாய்ச் சொன்னது தான் தீராதென்று
விளங்கு பிராணாலயமாம் வாதந் தானே."

என்பதினால், இந்நோயில் வளிக்குற்றம் மிகுந்து உடலில் வலியை யுண்டாக்கி, கண்களைக் குழித்து வெளுத்துப் பார்வையை மறைத்தும் முதுகிற் பாய்ந்தோடி, கைகால்களை வற்றச்செய்தும் நடுக்கலையுண்டாக்கும். இது தீரா நோயாம்.

25. நீர்க்கட்டு வாதம் (சலஸ்தம்ப வாதம்).

" தானென்ற மலத்து வாரத்தினோடு
தாக்கியே சலத்துவாரந் தொடங்கி,
வேனென்ற நீரிறங்கும் போது தானும்
வெடிபுண்ணில் நோவு போற் கிலேசம் பண்ணும்,

வானென்ற மலங்கடுத்துச் சிறுகி வீழும்
மயிர்க்கூச் சுண்டாகியே வருத்தம் பண்ணுந்
தேனென்றதித்திப்பு போல் நீராகும்
சிறுகிவிழுஞ் சலத்தம்பச் செய்கையாமே.''

என்பதினால், இந் நோயில் வாயுவால் எழுந்த அனல் எருவாய்த் துளையைத் தாக்கி, நீர்த்தாரையை வெதுப்பி நீரிறங்கும் போது வெடித்த புண்ணில் எரிந்து நோவது போலத் துன்பத்தை விளைவித்தும், வெளிக்குப் போகையில் எருவாய் கடுத்துச் சிறுகச் சிறுக வெளியாகும். மயிர்க் கூச்செறியும். இனிப்பு நீர் போல் நீர் சிறுக அடிக்கடி கழியும் என்னுங் குறிகுணங் களாம்.

## 26. சந்து வாதம்.

'' செய்கைதான் சுந்துகளும் மிகத் திமிர்ந்து
சடமெங்கும் நொந்துமே மிகவழற்றி
நைகையாய் நளுத்துமே மயிர்க் கூச்சிட்டு
நாணியே முன்போல நடை கொடாது
மைகைதான் மயக்க மொடு வாய் நீருறும்
வரண்டிடுமே நாவுதானடிக் கடிக்குக்
கைகால் தான் தரணி தனிற்றரிக் கொணாது
சஞ்சலிக்குஞ் சந்துவாம் வாதங்கேளே.''

என்பதினால், இந்நோயில் கீல்கள் தோறும் திமிர்ந்து, உடலெங்கும் நொந்து அழன்று மயிர்க் கூச்செறியும், நடக்க முடியாமை, மயக்கம், வாய் நீருறல், நாவறட்சி முதலிய குறிகுணங் களையுண்டாக்கும். கைகால்கள் நிலத்திற்படியாதவாறு துன் புறுத்தும்.

## 27. சகன வாதம்.

'' கேளுமே கழுத்தின் கீழரைக்கு மேலுங்
கெடியானகரமிரண்டுமிகவே நொந்து
வாளுமே சரீரமெலாங் கனத்திருக்கும்
வாலிபர்க்கு மனங் கண்ணு மயக்கமாகும்,
ஏளுமே யிரண்டுகண்ணு மெரிச்ச லுண்டா
மேற்றமாய் சலந்தானு மிறுகிக் காணுந்
தேளுமே கொட்டினது போற் கடுக்கும்
சகன வாதத்தினிட தீர்க்கந் தானே''

என்பதினால், இந்நோய் கழுத்தின் கீழிருந்து அரையின் மேல் வரையும் உள்ள இடமும், கைகால்களும் மிக நோதல், உடல் கனத்துக் காணல், மயக்கமுண்டாதல், கண்கள் எரிதல், சிறுநீர் கட்டல், உடல் முழுமையும் தேள் கொட்டியது போல் கடுத்தல் ஆகிய குறிகுணங்களைக் காட்டும்.

## 28. அற்புத வாதம்.

" தீர்க்கமாய் ஸ்திரி சங்கம் பண்ணும் போதுந்
திடுக்கெனவே வார்த்தை கோபித்த போதும்,
ஊர்க்கமா யுறத்துதான் பாடும் போதும்
உண்ணுமவல் கச்சாயம் பாக்குத் தானும்,
ஆர்க்கமாய்த் தட்டியே கடித்த போது
மழகான முகந்தன்னில் வாயுகோபித்
தார்க்கமாய் மிகச்சிதறி வாயுங் கோணுஞ்
சாங்கமா யற்புத வாதந் தானாமே."

என்பதினால், இது பெண்ணுடன் கூடியபோதோ, திடீரெனச்சினங் கொள்ளுங்காலத்திலோ, உரக்கப்பாடும்போதோ, சாயப்பாக்கைக் கடிக்கும் போதிலோ, ஒருவரை அதட்டித் திட்டும்போதோ வளிக் குற்றம் பெருகி வாயைக் கோணச் செய்யும் நோயாம்.

## 29. உரக வாதம்.

" அற்புதமாய் நோவாகிப் புருவங் காது.
அங்கத்திற் பாதிதான் வலித்தெப் போதுந்,
தற்புதமாய்க் கோணியே தலையும் வாயுந்
தாவவே மிகநடுங்கிக் குளிர்ந்து கூசும்,
விற்புதமாய் விழிகளுந்தான் யிமைப்புறாது
மெலிவாகிச் சரீரமெலாம் வியர்வை யாகும்,
புற்புதமாய் வாய் நீருமிகவே யூறும்
புகலுமோ ருரக.வாதத்தின் பேரே."

என்பதினால், இந் நோயில் புருவம், காது, பாதி உடம்பு ஆகிய இவ்விடங்களில் எப்பொதும் வலியுண்டாதல், அவைகள் கோணுதல், தலையும் வாயும் நடுங்கல், உடல் குளிர்ந்து மயிர்க் கூச்செறிதல், கண் இமைகொட்ட முடியாமை, உடல் முற்றும் வியர்த்தல், வாய் நீர் அதிகம் ஊறுதலாகிய குறிகுணங்களுண் டாகும்.

### 30. உரகாரி வாதம்.

" பேரான நெஞ்சுடனே குரலும் நொந்து
பெருமீரல் தன்னிலே நோக்கி வாயு,
ஆரானவன்னத்தை இறங்கொட்டாம
லார்வசனங் கொள்ளாமலுதரம் விம்மிப்
பாரான வாயு தான் மிகவுமூறிப்
பாரமாய் நெஞ்சடைத்துப் பசித்தி ருக்குங்
கூரான மேனியுமே கூச்சலுண்டாம்
கொடி தானவுரகாரி வாதமாமே."

என்பதினால், இதில் நெஞ்சும் குரல் வளையும். நோகும்படி செய்யும். பெரு ஈரலில் வாயுகூடி உணவில் வெறுப்புண்டாக்கி அதனை உட்கொள்ள முடியாதபடி செய்யும். ஆதலால் குருதி மிகுந்து வாயு மேலும் பெருகி, உடலைப் பருமனாக்கி நெஞ் சடைப்பையும், உடற் கூச்செறிதலையும் உண்டாக்கும்.

### 31. ஆசுவதம்ப வாதம்.

1. "வாதமாயுடல் வெளுத்து வடிவெல்லாநோம்
மயக்கமோ டிருமலா யீளையுண்டாம்,
நேதமாய் நெஞ்சடைத்துப் பொறி கலங்கும்
நெருப்பாக உடல் காணு நெடுமூச்சுண்டாம்,
கோதுதான் மயக்கத்தில் மருந்திளிட்டால்
குளிர்ச்சியாய்க் கோபிக்குங் கூச்சலுண்டாம்
பாதந்திமிருண்டாய் முட்போலாகும்
பருத்த ஆசுவதம்பம் பகரலாமே."

2" பகரவே வாதமது கோபித்தப்போ
பண்பாகஸ்திரி கோஷ்டியது தான் செய்யில்,
நகரவே வெகுதாரம் வழி நடக்கில்
நளிரான காற்றுமே பனி மேற்பட்டால்
மிகரவே காய்கள் கனிக்கிழங்கு தன்னை
மிகவருந்தி மீறியே தயிர்தான் கொண்டால்
முகரவே முதுகெலும்பை முறுக்கி நொந்து
முழங்காலுங் கணைக்காலுங் கடுப்புண்டாமே."

என்பதினால், இந்நோயில் உடல் வெளுத்து, உடல் முழுவதும் நோகும். மயக்கம், இருமல், ஈளை, நெஞ்சடைப்பு, பொறிக் கலக்கம், உடல் நெருப்புப்போல் சுடுதல், பெருமூச்சு விடல் முதலிய குறிகுணங்களைக் காட்டும். நாளுக்கு நாள் அன்றியும் மருந்தீட்டால் வரும் நோயைப் போல உடல் குளிர்ச்சியடைந்து நாளுக்குநாள் இளைத்து, அடிக்கடி சினமுண்டாதல், காலடி திமிர்தலாகிய குறிகளையும் உண்டாக்கும்.

மேலும் வளிக்குற்றம் மிகுந்து (பிரகோபம்) இருக்கும் போது பெண்ணுடன் ஊடல், மிக்க தொலைவு நடத்தல் குளிர்க்காற்று, பனி இவற்றிலீடுபடல், காய்கறி, கனி கிழங்கு வகைகளையும், தயிரையும் இவற்றை மிகுதியாக உண்ணல், இச் செயல்களால் வளிக்குற்றம் மீண்டும் அதிகமாகி முதுகெலும்பைப் பற்றி முறுக்கி நோகச் செய்து, முழங்காலிலும் கணுக்காலிலும் கடுப்பையுண் டாக்கும்.

### 32. பாசத்தம்ப வாதம்.

“ கடுத்துமே சரீரமெங்குஞ் சோம்பலாகிக்
கண்மயங்கிப் புகைந்துமே கூசிக் காணும்,
வடுத்துமே சரீரமெலா மிகவும் பற்றி
வாய்வரண்டு புளித்தேப்பாய் மந்தமாகி
நடித்துமே நாடியெங்கும் படபடத்து
நரம்போடு சதைகளெல்லாம் பித்தமாகும்
அடுத்துமே இவ்வாத மசாத்திய மாகும்
யடுபாசத் தம்பமென்றே யறையலாமே.”

என்பதினால், இந்நோயில் உடல் முழுமையும் வாயு பற்றிட சோம்பலுண்டாய்க் கண் மயங்கிப் புகைந்து கூசும். வாய் வறண்டு புளித்தேப்பமாகி மந்தமுண்டாகும். நாடியெங்கும் படபடத்து ஓடும். வாயு மிகுதியுடன் பித்தமுஞ் சேரில் நரம்பு சதைகள் யாவற்றிலும் வளி அழல் மிகுந்து சோர்ந்து நிற்கும். ஆதலால் இந் நோய் எளிதில் தீராதாம்.

### 33. நேத்திர பவுத்திர வாதம்.

“ அறையவே நெற்றியோடு புருவங்காது
அதட்டியே நோவாகிக் குடைச்சலாகும்,
நிறையவே வுடம்பெங்கு மூதலாகும்
நிற்கவுந் தாளொட்டாமற் றள்ளிப் போடும்

குறையவே தேகமெலாங் குடைச்சலாகும்
குறு வியர்வை மயக்கமொடு கூச்சலுண்டா
மறையவே நேத்திர பவுத்திரமுமாகு.
மறை சொன்ன படியானும் வழுத்தினேனே.''

என்பதினால், இந் நோய் நெற்றி, புருவம், காது இவற்றில் நொந்து குடைதலோடு, உடல் முழுமையும் ஊதச் செய்யும். நிற்கமுடியா! நடக்க முடியா! தள்ளிப்போடும். உடம்பெல்லாங் குடைச்சல், வியர்க்கும்! கூச்சிடுதல் என்னும் குறி குணங்களையும் உண்டு பண்ணும்.

### 34. தண்டக வாதம்.

1. ''வழுத்தவே மூலாதாரத்தைப் பற்றி
மருவியே மேலேறிமுது குமட்டாய்,
விழுத்தவே சிரசில்வந்து வியர்வுமாகி,
விகுவாக நோவாகி மேனிகன்றிப்
பழுத்தவே வுடம்பெங்கும் பஞ்சுபோலாம்
பாங்கான மலசலமு மஞ்சளாகுங்
குழுத்தவே தண்டகமாம் வாதந் தன்னைக்
கூறினோங் குணமெலாம் கூர்ந்துபாரே.''

2. ''கூர்ந்திட்ட மலசலங்கள் துரிதமானால்
கொண்டடக்கிப் பின்புதான் கொடிதாய்த்தள்ளி
ஊர்ந்திட்ட சரீரத்திலுதிரமீறி
உறத்தேய்த்துத் தலையதனி லெண்ணெய் வார்க்கில்
வார்ந்திட்ட வழிநடக்கில் மெத்தவுந்தான்
வாதந்தா னுற்பவித்து நடைகொடாமல்
நார்ந்திட்ட நரம்போடு எலும்பிற் சூழ்ந்து
நணுகியே யோடி நெஞ்சி லேறுந்தானே.''

என்பதினால், இஃது யோகத்தின் முதல் நிலையில் நுழையும் போதுண்டாகுங் கேட்டால், முதுகுத் தண்டின் கீழ்புற மிருந்து தலைவரையிலுங் கிளம்பிய வாயுவினால் ஏற்படும் நோயாகும். இந்நோயில் வியர்த்தல், உடல் இறுகுதல், வலித்தல், உடல் பழுத்துப் பஞ்சுபோல் வெளுத்தல் எருவும் சிறுநீரும் மஞ்சளாதல் என்னும் குறிகுணங்களைக் காட்டும்.

மேலும் தண்டகவாயுவினா லுண்டாகுங் கழிச்சலை அடக்கி வருதலால் சில நாட்கள் சென்றபின்பு அக்கழிச்சல் அடக்க முடியாத அளவில் மிகுந்து கழியத் தொடங்கும். அதனால்

உடலிலுள்ள குருதி மிகுந்து பாயும். அன்றியும் இந்நோயுற்ற காலத்தில் தலை முழுகல். அதிக தூரம் நடத்தல் முதலியவற்றால் வளிக்குற்றம் மீண்டும் அதிகரித்து நரம்பு எலும்புகளைப் பற்றிச் சூழ்ந்து நடக்க முடியாமற் செய்து, அவ்வாயு நெஞ்சு (விசுத்தி) வரையிற் பாயுமென்பர்.

### 35. அட்ட தந்திர வாயு (அட்டதந்திர வாதம்)

'' ஏறிய யுணர்ச்சியற்று உள்ளுக்குள்ளே
இருந்தால் தானழைத்தாற்போற் சத்தமுண்டாங்
காறியே கண்ணீருமுண்டாய் வாய்நீர்
கசந்துமே முன்போல விழித்திடாமல்
பாரியே பற்கிட்டி மூச்சுமற்றுப்
பல்காலும் பிதற்றியே பிணத்தைப் போலச்
சீறியே யடிக்கடிக்குச் சிலேட்டும முண்டாம்.
செருக்குமட்ட தந்திரத்தின் செயலதாமே.''

என்பதினால், இந்நோய், மேற்கூறிய நெஞ்சு (விசுத்தி) வரையில் பரந்து நின்ற அவ்வாயுவினால் தோன்றி, உடல் உணர்ச்சியற்றுப் போதல், உள்ளுக்குள்ளே ஒலியுண்டாதல், கண்ணீர் வடிதல், வாய் நீர் கசத்தல், கண் திறக்க முடியாதிருத்தல், பற் கடித்தல் மூச்சு விடமுடியாமை, வாய் பிதற்றல், பிணத்தைப் போல் கிடத்தல் முதலிய குறிகுணங்களைத் தோற்றுவிக்கும். அன்றியும் இந்நோயில் ஐயப் பெருக்குமுண்டாம்.

### 36. வசனா வாதம்.

''தானான தேகமெங்குந் தான்வலித்துச்
சங்கற்ப விகற்பமாய்க் கிலேசமாகிப்
பானான பலகுணங்கள் மிகவேயாகும்
பரமசிவ னடியார்கட் கணுகிடாது
தானான துட்டரையே பற்றிநிற்குத்
துடிப்புண்டாய்ச் சோரவே சொருகிவீழுந்
தானான காயமது கதித்துக் காணுங்
கனவசனா வாயுவின்றன் கணக்குத்தானே.''

என்பதினால், இந்நோயில் உடல் முழுமையும் வலித்து நொந்து மனதில் வருத்தம் தோன்றும். குணம் பலவிதமாக மாறும். உடல் துடிக்கத் தொடங்கும். கண் சொருகல், மயக்கம், உடல் கனத்தலாகிய குறிகுணங்கள் காணும்.

37. மக வாதம்.

''கணக்காகக் கதித்துமேல் வயிற்றைப் பற்றிக்
கருகியே பொருமித்தான் வலித்து வீங்கிக்
கிணக்காகக் கீழ்முதுகில் விதனமாகிக்
கிஞ்சுகமாய் விதணவூணற்ப மாக்கும்
வணக்காக மலசலந்தான்பல காலுண்டாம்
வருத்தமாய்ச் சடந்தானு மழன்றுபோகும்
மணக்காக மேனியுமோ மஞ்சளாகு
மகவாத குணமென்றே மருவலாமே.''

என்பதினால், இந்நோயில், வாயு கதித்து வயிற்றைப் பற்றி இறுக்கிப் பொருமலை யுண்டாக்கி, வலித்து வீங்கச் செய்து கீழ் முதுகில் நோதல், உணவு செல்லாமை நீரும் எருவும் பல முறை போதல், என்னும் குறி குணங்களைக் காட்டி எளிதில் நோய் தீராமல் உடலினை வாட்டி வெப்பமாகி உடல் முழுமையும் மஞ்சளாக்கும்.

38. மிருத்து வாதம்.

''மருவலாய் முடியவாய் தனிலொதுங்கி
மண்டியே மேனோக்கிய பானவாயில்
எருவலா யெருவாயில் நுரைப்பட்டிறுகி
எப்போதுந் தேகமெலாம் வலிக்குங்கண்டாய்
துருவலாய் மலந்தள்ளுஞ் சோபையாகும்
சுறுக்கென்று கால்கையுஞ் சோர்ந்துபோகும்
பருவலாய் மனதுதான் பயமுமுண்டாய்ப்
பாரமிருத்து வாதத்தின் பண்புதானே.''

என்பதினால், இந்நோயில் வளிக் குற்றமிகுந்து கீழ்நோக்குங் காலைத் தூண்டி எருவாயை அடைத்து நுரைபட்டு இறுகி உடல் வலித்தல், மலங்கழித்தல், உடல் வெளுத்து வீங்குதல், கால் கைகள் சோர்வடைதல், மனதில் அச்சமுண்டாதலாகிய குறி குணங்களையுண்டாக்கும்.

39. உதர வாதம்.

''பண்பான குட்சியைத்தான் பொருமிநொந்து
பருத்துமே மிடறுதான் கனத்துமெத்த
எண்பான விக்கலுமே யிளைப்புண்டாகி
இணைவிழி நீர்ப்பாய்ந் தேகமிளைப்புண்டாகி

மண்பானவாதமது நிரம்பியேறி
வாயினான் மலந்தானும் புறப்பட்டாற்போல்
விண்பான நீரதுவும் விடுத்து நிற்கும்
மிகுமுதரவாதமென்றே விளம்பலாமே.''

என்பதினால், இந்நோயில் வாயுமிகுந்து வயிற்றைப்பற்றித் தீனிப் பையை யணுகி ஆங்குப் பொருமலையுண்டாக்கும். கழுத்து கனக்கும், விக்கலெடுக்கும், இளைப்புண்டாகும், கண்ணீர் பாயும், மிகுந்த வாயுவானது எருவாய் வழியாக வெளியேறுவதுபோல் தோற்றுவித்து எவ்வழியிலும் வெளியாகாமல் சிறுநீர்மட்டும் வெளிப்படும்.

### 40. மூத்திர உதிர வாதம்.

''விளம்பவே விடுமூத்திரம் வாயிற்றோன்று
மீறியே நெஞ்சுதனிலழன்றுநோகும்.
நிளம்பவே நெஞ்சுதனில் வீக்கமுண்டாம்
நித்திரை யில்லாமலே வெதும்பலாகும்
வளம்பவே வயிறுதனில் நோவுமாகும்
மகத்தான விக்கலுடனிருமலுண்டாம்
அளம்பவே யடிவயிறு கனத்துநோகு
மசைமூத்திர வுதிர மென்ற வாதந்தானே.''

என்பதினால், இந்நோயில் வாயு மிஞ்சி சிறுநீருடனிழியும், நெஞ்சு தனில் அழல்போல் எரிச்சலுண்டாகி நோகும். நெஞ்சில் வீக்கம், தூக்கமின்மை, உடல் வெதும்பல், வயிற்று நோய், விக்கல், இருமல், அடி வயிறு கனத்து நோதல் என்னும் குறி குணங்களையும் காட்டும்.

### 41. சுக்கில வாதம்.

''வாதமாமுடலுருக்கி மிகவும்வற்றி
மலமூத்திரஞ் சிக்கியே கீழ்விழாமல்
நாதமாம் நாக்கோடு மூக்கு தன்னில்
நணுக்கமா யுதிரந்தானருவி பாயுஞ்
சேதமாய்ச் சேட்டுமமுங் கோழையுண்டாஞ்
செயலோடு சுவாசமா யருசியுண்டாஞ்
சூதமாய்ச் சுக்கிலந்தான் றுன்னியாகுந்
துரிய சுக்கிலவாத சூட்சந்தானே.''

என்பதினால், இந்நோயில் உடலுருக்கி வற்றிச் சிறுநீரும் எருவுஞ் சிக்குப்பட்டு வெளியாகாமல்; நாக்கு மூக்கு இவைகளில் குருதிப் போக்குண்டாகி, ஐயம் பெருகி, கோழை கட்டல், மேல் மூச்சு வாங்கல், சுவையின்மை என்னுங் குறிகுணங்களைக் காட்டும். வெண்ணீர் (சுக்கிலம்) கெடும்.

### 42. சவ்விரங்க வாதம்.

''சூக்கமாய்த் தெய்வவுடல் திகைத்தங்கூர்ந்து
தேகமோ வெளுத்துப் பின்கறுப்புமாகும்
ஆட்சமா யருசியோடு வாந்தியுண்டா
மடிக்கடிக்குத் தண்ணீர்தான் தட்டிக்கேட்கும்
ஊட்சமா மன்னத்தை முன்னே காணில்
ஓக்காளந்தன்னொடுப்புசமு மாகுந்
தாட்சயமாய்ச் சலிப்போடு உறக்கமார்குஞ்
சவ்விரங்க வாதமென்றே சாற்று நூலே.''

என்பதினால், இந்நோயை உடலைக் கெடுத்து வெளுத்துப் பின் கருமையாகி, சுவையின்மை, வாந்தி, உணவில் வெறுப்பு, நீர்வேட்கை, ஓக்காளம், பொருமல், அடிக்கடி தூங்கல் என்னுங் குறிகுணங்களைப் பெறும்.

### 43. ஊர்த்துவ வாதம்.

'' நூலான சுவாசந்தான் மேலேநோக்கி
நுணுக்கமாமிடையுடனே வயிறு விம்மி
வாலான வாய்தனிலே நுரையுமுண்டாய்
வாய்கழுத்து மார்புமே மிகவும் நொந்து
ஆலான வங்கமெலாமழன்றுகாணு
மடித்துடையு மடிக்கையு மிகவே வற்றும்
பாலான மேனியுமே பசுமை காணும்
பருவூர்த்துவவாதமென்றே பகரலாமே.''

என்பதினால், இந்நோயில் மேல் நோக்கி மூச்சுவிடல், இடுப்பு, வயிறு இவைகள் விம்மிக் காணல், வாயில் நுரை தள்ளல், வாய், கழுத்து, மார்பு இவ்விடங்களில் மிகவும் நோதல், உடல் அழன்று காணல், அடித்தொடையும், அடிக்கையும் வற்றிப்போதல், உடல் பசுமை நிறங் காணலாகிய குறிகுணங்களைக் காணலாம்.

### 44. அஞ்ஞானத்தம்பம்.

''பகர்கின்ற குரலதனைப் பற்றி நொந்து
பாரமாய் வலித்துமே கீழ்நோக்கெய்தி
நிகர்கின்ற கண்ணதனை மூடிக்கொண்டு
நெறுநெறன மூக்காலே சுவாசம் போகுந்
திகர்கின்ற விரண்டு செவி தன்னினொந்து
செழுமையாங் கொட்டாவி வாய்மூடாமல்
மகர்கின்ற வாய்வறண்டு நெஞ்சுகாயும்
அஞ்ஞானத்தம்பமாம் வாதமாமே.''

என்பதினால், இந்நோயில் வாயுவானது குரலைப்பற்றிக் கொண்டு அதை நோகச் செய்யும், அன்றியும் இதுகண்ணை மூடுதல், பெரு மூச்செறிதல், காது நோதல், வாய் ஓயாமல் கொட்டாவி விடுதல், வாய் வறளல், நெஞ்சுலர்தல் முதலிய குறிகுணங்களையும் பிறப் பிக்கும்.

### 45. சிரக்கம்ப வாதம்.

''தம்பமாய் உதிரகண்ட நரம்பிற்புக்கித்
தலையோடு சரீரமெலாந் தாக்கிப்புக்கும்
கம்பமாங் காதிரண்டு மிகவுங்கேளா
கையோடு காலிரண்டும் வசக்கேடாகும்
நிம்பமாய் நினைவுதான் கலங்கிக்காணும்
நெடுமூச்சுங் கொட்டாவி நித்திரையாகும்
சிம்பமாய்த் தலை நடுங்கிக் கனப்புமுண்டாஞ்
சிரக்கம்பவாத மென்றே செப்பலாமே.''

என்பதினால், இந்நோயில் வாயு மிகுதியால் குருதி பொங்கி அது நரம்புகளிற் புகுந்து தலை முதல் உடம்பு முழுவதையும் தாக்கி, காது கேளாமை, கை கால்கள் வசமழிதல், நினைவு கலங்கல், நெடு மூச்சு, கொட்டாவி, மிகுதூக்கம், தலை நடுங்கல், தலை கனத்தலாகிய குறி குணங்களைப் பெறும்.

### 46. சதஸ்தம்ப வாதம்.

''செப்பவே நடுநாக்கு நுனிநாக்குந்தான்
தெறித்துமே தேள்விஷம்போற் கனவுமாகும்
அப்பவே யடிநாக்குத் தான்துடிக்கு
மழகான வாய்தானும் அதிர்தல்தோன்றும்

உப்பவே யுண்ணாக்கிற்கட்டு தூக்கு
முருசிதா னில்லாம லூறும் நாக்கு
வெப்பவே விஷந்தானு மமுதம் போலாம்.
வெளியான சதஸ்தம்ப விதியிதாமே.''

என்பதினால், இந்நோயில் நடுநாக்கிலும் நுனி நாக்கிலும் தேள் கொட்டினாற்போல் விறுவிறுத்து, அடிநாக்கு துடிக்கும். வாய் நடுக்கல், உள்நாக்கு வீங்குதல், நாச்சுவையறியாமை, நச்சுப் பொருளைச் சுவைத்தாலும் அதன் உண்மைச் சுவையறியாமை, அதுவும் இனிப்பாகத் தோன்றலாகிய குறிகுணங்களைக் காட்டும்.

## 47. வச்சிரருபம்.

''விதியான பிடரிதனை மிகவிழுத்து
மிகக்கண்க ளசைவின்றி மேலே நோக்கித்
ததியான குறோக்கைபோற் சத்தம் பெற்றுத்
தலைநோவு மிகுதியாய் நடுக்கலுற்றுக்
குதியான நரம்பிழுத்துத் திமிருண்டாகிக்
கொட்டாவி சோம்பலாய்க் கூச்சலுண்டாய்
வதியான மலசலமுஞ் சுருக்கிவீழும்
வச்சிர ரூபந்தன்னின் வகையிதாமே.''

என்பதினால், இந்நோயில் பிடரியில் இழுப்புண்டாகிக் கண்கள் இமை கொட்டாமல் மேல் நோக்கி நிற்கும். குறட்டையும் தலை நோவும், தலை நடுங்கல், நரம்பிழுத்து திமிர்தல், கொட்டாவி வருதல், சோம்பல், மயிர்க்கூச்சு, மலமும் நீரும் கட்டலாகிய குறி குணங்களுமுண்டாகும்.

## 49. கண்ட கிராகம்.

''வகையான குரல்தனைப்பற்றி நொந்து
மார்போடு பிடரியினில் வலியுண்டாகி
நுகரான சரீரமெலாம் நொந்தழாற்றி
நுணுக்கமாய்ச் சுவாசமது புறப்படாமல்
முகையான நாவாலே மூச்சுமாறி
முகத்திலே வியர்வாகி விலாநோவுண்டாம்
பகையான வன்னத்தை பருக்கொட்டாது
பரியகண்ட கிராகத்தின் பண்புதானே.''

என்பதினால், இந்நோய் குரல்வளையைப் பற்றி நொந்து, மார்பு, பிடரி, இவைகளில் வலியையுண்டாக்கும், உடம்பு முழுமையும் நொந்து அழலும். மூக்கின்வழி மூச்சு வெளிப்படாமல் வாய் வழியே வெளிவரும். அன்றியும், முகத்தில் வியர்வை, விலாப் பக்கம் நோதல், உணவை உண்ணவொட்டாமையாகிய குறி குணங்களை விளைவிக்கும்.

## 49. நகாரி வாதம்.

''பண்பான குரலதனை விலாப்பக்கங்கள்
பல்கியே பருநரம்பைப்பற்றி நோகும்
வண்பான கீழ்வாய்தான் மேல்வாய்தன்னில்
வாயுவங்கே பூரித்து வசனங்கொச்சை
நண்பான நடுநாக்கு மரம்போலாகுந்
தசையான தேகமெங்குஞ் சொறிதலாகும்
விண்பான மேலுதடு தடிப்புமாகு
மீறியதோர் நகாரியாம் வாதமாமே.''

என்பதினால், இந்நோய் குரல்வளை விலாப்பக்கம் என்னுமிவ் விடங்களிலுள்ள பெரிய நரம்புகளைப் பற்றி நோகச் செய்யும். கீழ்வாயில் வாயு பெருகும். வார்த்தைகளைச் குழறச் செய்யும். நடுநாக்கு மரம்போலாகும். உடலில் நமைச்சலுண்டாகும் மேலுதட்டைத் தடிக்கச் செய்யும்.

## 50. பதித வாதம்.

''காரியாய் மிகவார்த்தை பேசும்போது
கழுத்திலுள நரம்புமிக விசைத்துநோவாம்
வாரியாய் வார்த்தைகள்தான் விக்கிப்பேசி
வார்த்தைகள்தான் பேசுவதிற்றெரிந்திடாது
நாரியார் போகமது விரும்பிடாது
நலுக்கமாய்த் தாதுவெலாமிளைத்துக்காணும்
பாரியா யடிக்கடிக்குப் பசியேயுண்டாம்
பதிதமாம்வாத மென்றே பகரலாமே.''

என்பதினால், இந்நோயில் அதிகமாகப் பேசும் போது கழுத்து நரம்பு மிகுதியும் நோகும். தெற்றித் தெற்றிப் பேசுவதால் அவ் வார்த்தைகள் யாரும் அறியுமாறு தெளிவாயிரா! ஆண்மை (தாது) குறைவதால் போகத்தில் விருப்பம் உண்டாகாது. அடிக்கடி பசி யுண்டாகும்.

### 51. யோனி சூலை.

''பகரவே மலத்துவாரந் தன்னிற்றோன்றிப்
பக்கமாயிறங்கியே யோனி பற்றித்
திகரவே குறங்கடியு மறையுமுள்ளுஞ்
சிக்கெனவே கோல்கொண்டு குடைந்தாற்போல
அகரவேயடிக்கடிக்கு நோவுமாகு
மாசன முங்கடுத்துமே நீரிறங்கும்
நகரவே நடக்கும் போதுறக்கமாகு
நவில் யோனி சூலை யென்றே நாட்டலாமே.''

என்பதினால் இந் நோயில், வாயுவானது, எருவாயிற்றொடங்கி அதின் பக்கமாகவே பாய்ந்து கருவாயைப்பற்றி (யோனியைப் பற்றி) தொடை மறைவிடம் இவற்றுள் கோல்கொண்டு குடைவது போன்று வலியை உண்டாக்கும். எருவாய் கடுத்துச் சிறு நீரிறங்கும். நடக்கும்போதும் தூக்கம் வருவது போலிருக்கும்.

### 52. கர்ப்ப சூலை.

''நாட்டமாய்க் கன்னியர்கள் துடக்குக் காலை
நல்மான கெற்பத்தின் ரேகை தன்னில்
பாட்டமாய்ப்பற்றியே வாயு தோன்றிப்
பழகியே புருஷசங்கை பண்ணும்போது
தாட்டமாய்த் தடைப்பட்டு மலத்தைச் சிக்கித்
தத்தளித்துக் கடுப்பாகி விலாப்பக்கம் போம்
கேட்டமாய் மனதுதனிற்கிலேசமுண்டாங்
கெற்பமாஞ் சூலையென்றே கீர்த்திப் பாயே.''

என்பதினால், இந்நோயானது சூலகத்தில் வாயு கூடியுள்ளபோது, சூலகத்தில் (கருப்பையில்) வெப்பமுண்டாகி எருவைக் கட்டும். தாங்கமுடியாது வலி அடிவயிற்றிலிருந்து விலாப்பக்கம் வரையினு மோடித் துன்புறுத்தும், மனதில் கவலையுமுண்டாகும்.

### 53. அட்ட சூலை.

''கீர்த்தியாய் மலங்கடுக்குங் கெடியாஞ்சோபங்
கீழான வருரேகை தனிலே நின்று
ஆர்த்தியாயலந்திடக் கோபித்து நின்று
அதட்டியாயிரு குறங்கும் யோனி தாழும்

கார்த்தியாயுமித்தனலில் காற்றளாவிக்
கடினமாய் நீர்தானுந் துளியாய் வீழும்
வேர்த்தியாய் நெறுநெறெனக் கடிக்கும்பல்லை,
மீறுமட்ட சூலையிட வினையந்தானே.''

என்பதினால், இந்நோயில் கீழ் நரம்பில் வாயு கூடிமிகுந்து தனக்குத் துணையாக அழலையுங் கூட்டிக் கருவாயைத் தாக்குதனால், எருவைக் கட்டுப்படுத்தி இறுக்கிய அவ்வாயு, சூலகத்தையும் தாக்கி, அதனைக் கீழிறங்கச் செய்து அதினின்று துளித்துளியாக நீரைக் கசியச் செய்யும். இதனாலேற்படும் வலியின் கொடுமையால் பல்லை நறநறவெனக் கடிக்கவும் செய்யும்.

## 54. குடல் வாதம்.

''வினையாகப் பலவிதமாய்க்குடலைப்பற்றி
மிடுக்காக வலித்துமே நாபி தன்னில்
அனையாக வடி வயிற்றில் நொந்து நொந்து
அழகான விரைதன்னில் வலித்து வீங்கி
மினையான மிக்க வலியிழிந்து நோவாம்
மிடுக்கான நளி ரோடு காய்ச்சலுண்டாந்
தினையாகத் திடுக்கிட்டுத் தலையுநோவாஞ்
செப்பினோம் குடல் வாதச் சேதிதானே.

என்பதினால், இந்நோய் குடலைப்பற்றிய பலவிதமான வலியையுண்டாக்கி நாபி முதல் அடிவயிறு வரையில் நோயைப்பற்றிப் பிறப்பிக்கும். விரையை வலித்து வீங்கச் செய்து குளிர்சுரம், தலை நோய் முதலிய குறி குணங்களுமுண்டாகும்.

## 55. அசுவ வாதம்.

''சேதியாய்ச் சிறு குதிரைப் பாய்ச்சலாகிச்
செகமில்லாமிக் குலுக்கிக் கோட்டி பண்ணி
மேதியாய் மேலேறிக் கீழே நோக்கி
வெறி கொண்டாற்போல் மிரண்டு அண்டம் வீங்கி
ஏதியாயிரண்டு விரையுள்ளே புக்கி
இணையிலிங்கமுட் சுருங்கியிழிந்து நோவாம்
ஆதியாமடி வயிறு இசிவு காணு
மணிய சுவவாத மென்றேயறியலாமே.''

என்பதினால், இந்நோயில் வாயுவானது சிறுகுதிரை துடித்துப் பாய்வதுபோலஉடம்பு முழுமையும் பாய்ந்து, உடலைக் குலுக்கித் துன்புறுத்தும். மேலும் எருமை பாய்வது போல மேலேறி கீழ் பாய்ந்து, நோயினனை வெறி பிடித்தவன் போல் மிரளச் செய்து, விரை இரண்டையும் உள்ளே புகச் செய்து, ஆண் குறியைச்சுருங் கச் செய்து, அங்கு முட் சொருகியது போல வலிப்பதாகும். அடி வயிற்றில் இசிவு முண்டாம்.

## 56 மெச்சு வாதம்.

''அறியவே யாண்மையாமிலிங்கந்தன்னை
அடைவாகச் சுருக்கியே குழிந்து நோவாம்,
நெறியவே நீர்கடுத்துச் சிவந்து காணும்
நேர்மையாய் குளிரோடு சுரமு முண்டாம்
வறியவேதியக்க மொடு மயக்கமுண்டாம்
வாடியேதேகமெங்கு மசதியாகுங்
குறியவே கொட்டாவி சோம்பலாகுங்
குறிப்பான மெச்சுவாதமாமென்றே.''

என்பதினால், இந்நோயானது ஆண்குறியினை சுருங்கச்செய்து நோவை உண்டாக்கி சிறுநீரைச் சிவந்து கடுப்புடன் இழியச்செய்யும் அத்துடன் குளிர்சுரம், தயக்கம், மயக்கம், உடல் வன்மைக் குறைவு, கொட்டாவி, சோம்பல் இவைகளுமுண்டாகும்.

## 57. மூடு வாதம்.

'' மெச்சான பிடரி நரம்பதனைப் பற்றி
மிடுக்காக விரங்கியே மலத்துவாரம்
மிச்சானதது கலங்கி மேலே யேறிப்
புறவடியுங்குறங்கடியுஞ் சுற்றி நொந்து
குச்சான கோவணந்தான் தளைத்தாற் போலக்
குறுக்காகி லிங்கத்தில் வலித்து நொந்து
கச்சான காற்றுக்கு மிகுதியாகுங்
கடுமூடு வாதத்தின் கருமந்தானே.''

என்பதினால், இந் நோயில் வாயுவானது பிடரி நரம்பைப் பற்றிய கீழ் நோக்குங்காலைத் தூண்டி எருவைக் கட்டிய அவ்வாயுவே மேல் நோக்கி உடல் முழுமையும் பரவப்பட்டு, புறங்காலையும் தொடையின் கீழ்ப் பிரிவையும் ஆண் குறியையும் நோகச் செய்யும்.

### 58. வசு வாதம்.

" கருமமாய்க் குடல் முடங்கி வயிறுளைந்து
கனமாக நொந்துமே மயிர்க் கூச்சிட்டுப்
மருமமாயுடம் பெங்குந் தடிப்புண்டாகிப்
பாரமாயுடல் கனத்துப் பங்கமாகும்
வருமமாய்த் தோலெல்லா மிறுகிக் கொண்டு
மாசற்ற வுடம் பெல்லாம் வாட்டமாகும்
உருமமாய் அசனந்தான் வேண்டாதாகும்
உயர்வசு வாதத்தினிடவுண்மை தானே."

என்பதினால், இந் நோய் குடல் சுருங்கி, வயிறு கனத்து நொந்து, மயிர்க் கூச்செறிதல், உடலெங்கும் தடித்தல், உடல் கனத்துப் பாரமாயிருத்தல், தோல் இறுகுதல், உடல் சோர்வு, உணவு வேண்டாமையாகிய குறி குணங்களைக் காட்டும்.

### 59. பீஜஸ்தம்பம்.

' உண்மையா யிரண்டு விரைதானும் வீங்கி
யுயர்கின்ற புண் போல் வலித்து நொந்து
தண்மையாய்ச் சலாகையது ஏற்றினாற் போல்
றாக்கான பீச மெங்கும் வலித்து நொந்து
வெண்மையாய் நீரருவி துளியாய் வீழும்
விம்முமே யடிக்கடிக்குத் தண்டுதானும்
பெண்மையாய் மனமது தான் பித்தல் காணும்
பீசமாந் தம்பமென்றே பேசலாமே."

என்பதினால், இந் நோயில் இரண்டு விரைகளும் வீங்கி, புண் போலமிக்க நோயுற்று, அதில் ஈட்டி கொண்டு குத்தியது போன்று வலிக்கும். சிறு நீரருகித் துளித் துளியாய் விழும். ஆண் குறியும் அடிக்கடி விம்மிக் காணும். மனத் தளர்ச்சியும், வாய் பிதற்றலும் உண்டாகும்.

### 60. தந்திர வெட்டி.

" பேசவே விரையிரண்டும் பருத்து வீங்கிப்
பெருக்கவே நோயோடு இசிவுமாகிக்
காசவே களகள வென்றிரைச்சலாகிக்
கனமான குடல் தனிலே சத்தித் தேதான்

வாசவே வயிற்றினைத்தான் முறுக்கி மெத்த
வலியோடு குளிர் தானுஞ்சுரமு முண்டாம்
ஆகவே யடிவயிற்றிற் குத்தலுண்டாந்
தந்திரமாம் வெட்டியென்றே யறிந்திடாயே.''

என்பதினால், இந் நோயில் இரண்டு விரையும் பெரிதாக வீங்கி வலியுமிசிவு முண்டாகும். குடலில் காற்றிரைவது போல் ஓரொலியை எழச் செய்து வயிற்றை முறுக்கி மிகுந்த வலியை உண்டாக்கிக் குளிர்ந்து சுரமுண்டாய், அடி வயிற்றுக் குத்தலையுமுண்டாக்கும்.

### 61. வாதசுரோணிதம்.

'' அறிந்திட்ட வங்கமெலா மெலிவுமாகி
அசைவானதவ் விடங்கள் வீக்கமாகி
நறிந்திட்ட நடை கொடாதாணிருத்தல்
நலியாகி மொழி மொழிய வீக்கமாகச்
சொறிந்திட்டு தேகமெங்கும் யசைவுகாணல்
சோற்றின் மேனினைவின்றித் தூக்கமாதல்
வறிந்திட்ட வாய் தனினீர் தானூறல்
வாதசுரோணிதந்தானும் வகுத்தவாறே.''

என்பதினால், இந் நோய், உடல் மெலிந்து அசையக் கூடிய பூட்டுகளில் வீக்கத்தையுண்டாக்கி நடக்க முடியாமற் படுக்கையிற் கிடக்கச் செய்யும். நோய் முதிர முதிர வீக்கம் மிகுந்து சொறியச் செய்யும். மேலும், உடல் நடுக்கம், உணவில் நினைவின்றி மிகுந்த தூக்கத்தை வருவித்தல், வாயில் நீருறிக் கொண்டே இருத்தல் ஆகியவற்றையும் பிறப்பிக்கும்.

### 62. சித்துவாத சுரோணிதம்.

'' வாறான சரீரமெலா நுழைந்தே யூதும்
மாசற்ற தோல் தானுந்திரைந்து போகும்.
நாறான நார் போல நரம்புகட்டும்
நாக்குத்தான் வழவழத்துக் கோழையாகும்
நூறான நெருப்புத்தான் பட்டாற்போல
நொந்துமே சடமெல்லாங் கொப்புளிக்கும்
வீறான உரிந்து பின்னை வெதும்பி வீங்கும்,
மிக்க சித்து வாத சுரோணிதம தாமே.''

என்பதினால், வாயுவானது உடல் முழுமையும் நுழைந்து உடலில் வீக்கத்தையும்தோலில் சுருக்கத்தையும் (திரைதல்) உண்டாக்கும். நரம்புகளை நார்போலத் துவளச் செய்யும். நாவானது வழுவழுத்துக் கோழையைப் பெருக்கும். நெருப்புப் பட்டது போல் உடலெல்லாம் கொப்புளித்துப் பின்பு சூடாகி வீங்கும் என்னும் குறி குணங்களாம்.

## 63. வைகித வாத சுரோணிதம்.

"ஆமென்ற வீங்கின தோர் இடத்தில் ரத்த
மழுத்தமாய்த் திரண்டுமே யெங்கும் பாய்ந்து
ஓமென்று ஒட்டியே திரண்டிருக்கு
முறுதியாய் தொட்டுடனே மெத்தென்றாகுந்
தேமென்ற தேக மெங்கணுகிச் சிக்குஞ்
சீறிய தோரிருமலோடு காய்ச்சலுண்டாம்
பாமென்றே சடந்தனிலே திமிருண்டாகும்
பாரமாய் வைகிதமாய் வாதந்தானே."

என்பதினால், இந் நோயானது மேற் கூறிய நோய்க்குத் துணை நோயாக வரும். இதில் வீங்கின இடத்தில் தங்கிய இரத்தம் இறுகித் திரண்டு எங்கும் பரவி, உடலிலுள்ள கணுக்களில் கூடித் துன்பத்தை விளைவிக்கும்; இருமல், சுரம், உடல் திமிர் முதலிய குறி குணங்களைக் காட்டும்.

## 64. உதிர வாத சுரோணிதம்.

"வைகிதமாய்க் கரணக்காலு முழங்கால் தானு
மற்கடஞ் சந்து புறவடியும் வீங்கிச்,
செய்கிதமாஞ் சிறு விரல்கள் மிகவும் நொந்து
சிந்தை தடுமாறியே சலிப்புண்டாகும்
பைகிதமாம் பயித்தியத்தில் வாதமிஞ்சிப்
பாரமாயுற் பவித் தழலுண்டாகும்.
உய்கிதமாமசனமது தானும் வேண்டா
உதிரவாதச் சுரோணிதத் தினுணர்ச்சியாமே."

என்பதினால், இந்நோய், கணுக்கால், முழங்கால், சந்து, புறவடி பூட்டு இவைகளில் வீங்கிச் சிறு விரல்களில் நோயைப் பிறப்பிக்கும். சிந்தை கலக்கம், சலிப்பு, பித்து, உணவு வேண்டாமை என்னும் குறிகுணங்களை உண்டாக்கும். இஃது அழல்வளிக் குற்றங்களின் கலப்பால் உண்டாவதாகும்.

## 65. பயித்திய வாத சுரோணிதம்.

" உணர்ச்சியாச் சுரோணிதந்தான் மிக வெதும்பி
ஊக்கமாய்த் தேகமெங்கும் மிகவே நொந்து
முணர்ச்சியாய் முழங்கால்கள் முழங்கையொக்க
முனையான சிறு விரல் கன்னம் நெற்றி
தணர்ச்சியாய்ச் சந்து சருவாங்க மெங்குந்
தாட்டிகமாய்க் குடைந்து சுரமுண்டாம்
பணர்ச்சியாய்ப் பாண்டது போன்மேனியாகும்
பயித்திய வாத சுரோணிதத்தின் பண்புதானே."

என்பதினால், இந்நோயில் உடலிலுள்ள குருதி, பித்தவாதக் குற்றப் பெருக்கால் மிகக் கொதித்து உடல் முழுமையும் பாய்ந்து நோகச் செய்து முழங்கால், முழங்கை, சிறு விரல்கள், கன்னம், நெற்றி முதலியவைகள் சோர்ந்து, எல்லா உறுப்புகளும் நொந்து, சுரம், பாண்டு, சோபை, பயித்தியம் முதலிய நோய்களையும் பிறப்பிக்கும்.

## 66, சிலேட்டும வாத சுரோணியம்.

" பண்பாக வுடல் குளிர்ந்து வயிறு வீங்கிப்
பதைப்பான விடந் தொட்டாற் போல நோவாந்
திண்பான சிரசு நெற்றி நோக்காடுண்டாஞ்
சிலேட்டுமமாய்க் கோழையொடு சுவாசமாகும்.
மண்பாக மயக்கமொடு கனவு முண்டாம்
வாய் வறண்டு ருசியில்லா வருத்தமாகும்.
நண்பாக நாடியுமே மேம்படபடக்கும்
நற்சிலேட்டும சுரோணிதமாம் நாடுங்காலே."

என்பதினால், இந் நோயில் உடல் குளிர்ந்து, வயிறு வீங்கி, தேள் முதலியவை கொட்டியது போன்று நோகும். தலையிலும் நெற்றியிலும் வலியுண்டாம். ஐயப் பெருக்கால் கோழை வெளியாகும். இருமல், சுவாசம், மயக்கம், வாய் வறண்டு சுவையறியாமை, நாடி படபடத்து நடத்தல், கனவு காணல் முதலிய குறி குணங்களுண்டாம்.

### 67. உதர வாத சுரோணிதம்.

" நாடுமே சுரம் வந்து நடுக்கலுண்டாம்
நாவறண்டு தலை நொந்து உடம்பழுந்தி
வாடுமே தேகமெலாமனிச்சப் பூப்போல்
மகாவருத்தமுண்டாகி மயக்கமாகுஞ்
சாடுமே யடிக்கடித்தான் பேதிதானுஞ்
தவிக்குமே தண்ணீர் தானாட்டமாகித்
தேடுமே சோற்றின் மேல் நினைவு தானும்
செயவு தரவாத சுரோணிதந்தானென்னே."

என்பதினால், இதில் சுரங் காய்ந்து நடுக்கலுண்டாகி நாவறண்டு தலை நோகும். உடல் அழுந்தி வாடுவதுடன், அனிச்சப்பூ நிறம் பெறும். மயக்கம், கழிச்சல், நீர்வேட்கை முதலியனவுண்டாகித் தவிக்கச் செய்யும். சோற்றின் மேல் நினைவுண்டாகும் என்னும் கூறி குணங்களுண்டாம்.

### 68. குணவ வதானகம்.

" என்னவே குமரிதான் கெற்ப முண்டா
யேறியே நாண்மூன்று திங்கட்குள்ளே
வன்னவே வயிறிழிந்தி ரத்தம் வீழ்ந்து
வாடியே வயிறெல்லாஞ் சுருங்கிக் கொண்டு
சுன்னவே கால்கையு முடக்கமாகிக்
கருதியே தேகமெங்குங்காந்தலாகுங்
குன்னவே கோபமிது மிகுதியாகுங்
குணவவதானக மென்றே கூறிடாயே."

என்பதினால், இந்நோய் சூல் கொண்ட பெண்களுக்கு மூன்று திங்களுக்குள் வளிக் குற்றஞ் சாடுமானால், கருவாயிலிருந்து குருதி வெளியாகி, உடல் வாடி, வயிறு சுருங்கி, கைகால்கள், முடங்கி, உடல் வெப்பமடைந்து, மிகுந்த சினத்தையும் உண் டாக்கும்.

### 69. கண்டக அவதானகம்.

" கூறியே கெற்ப முண்டாய்ப் பயின்றபோது
குணகியே பச்சுடம்பில் வலிப்புத் தோன்றி
மூறியே மூக்கோடு புருவந்தனில்
உக்கிரமாய் மிக நொந்து வலிப்புண்டாகி

நாறியே நாக்கோடு உண்ணாக்குத்தான்
நலிந்துமே பல்லெல்லாங் கடுப்புண்டாகும்
ஆறியே முன்சொன்ன தத்துவசாத்திய
மரிய கண்டகவவதானகந்தானாமே !''

என்பதினால் இந்நோய் சூல்கொண்ட பெண்களுக்குண்டாகும் வலி நோய்க்கு துணைநோயாகப் பிறந்து மூக்கிலும், புருவத்திலும் மிக்க நோயையும் உண்டாக்கி, நாக்கு, உள்நாக்கு, பல் இவைகளில் கடுப்பையுமுண்டாக்கும். இந்நோய் தீராதென்பர்.

### 70. சிரக்கம்ப அவதானகம்.

'' அவதானவடி சிரசு தன்னைப் பற்றி
அதட்டியே பின்னெல்லாம் பற்றி நொந்து
வலதான வடிம்பு குறங்கடியிற் சென்று
வளைத்துடம்பெல்லாம் நொந்து வாட்டமாகிச்
சிவதான தேகமெங்குந்திமிருண்டாகுஞ்
சடம் போகுங் காலத்தில் மூன்றுங்காணும்
பவதான சிரக்கம்பவவதான கந்தான்
பாடியே தோரிம் மூன்று சாத்தியமாமே.''

என்பதினால், இந்நோயில் வளிக்குற்றமானது முதலில் காலையும், தலையையும் பற்றிப் பின் எல்லா உறுப்புகளிலுஞ் சேர்ந்து, தொடையிற் சென்று, உடலை வட்டமாக்கி வளையச் செய்து நொந்து திமிரையுண்டாக்கும். இம் மூன்றும் உடலழியுங் காலத்தில் ஏற்படுங் குறிகளாதலால் இவை நீங்காதெனக்கூறுவர்.

(யூகி முனி ; சி.ம.)

### 71. வாதத்தலை நோக்காடு.

'' சாத்தியமாம் வாதத்தின் தலை நோக்காடு
தண்மையாம் பிடரி பற்றித் தலை நோயுண்டாங்
காத்திரமாய்க் காதிரண்டுந்தான் வலித்துக்
கதுப்படியுங் குறட்டோடு மூக்கு உச்சி
நேத்தியுமாய் நெற்றியொடு நேர்வுமாகி
நெருக்கமான வாப்படித்தாற் போலே குத்தும்
மாத்தியமாய் மனக்கிலேசப் படுத்தும்
வாதத்தின் தலைநோவுவண்மைதானே.''

என்பதினால், இந்நோயில், வளிக்குற்றம் மிகுந்து பிடரியைத் தாக்கி வலியையுண்டாக்கி, அதனின்றும் தலைநோவையும், இரு காதுகளிலும் தாடை, மூக்கு, உச்சி, நெற்றி இவ்விடங்களில் ஆப்படித்தாற் போன்ற வலியையும் குத்தலையும் உண்டாக்கும். மனக்கிலேசமுமுண்டாம்.

## 72. பித்தத்தலை நோக்காடு.

" வண்மையாய் நிற்கின்ற மூக்குத் தானும்
வடிந்துமே நீர்ப்பாய்ந்துத் தலைகனத்து,
வெண்மையாய் வாய்நீர்தான் மிகவுமூறி
மீறியே வுண்ணாக்கைப் பற்றி நொந்து
திண்மையாய்ச் செவிதனிலே குத்தலுண்டாய்ச்
சிரசுதான் பாரமாய் மிகக்கனக்கும்
கண்மையாய் கண்ணோடு புருவங்குத்தல்
கனமான பித்தத்தின்றலை நோக்காடே."

என்பதினால், இந்நோயில் மூக்கு நீர்பாய்தல், தலைகனத்தல், வாய் நீருறல், வாய்நீர் வெண்மையாயிருத்தல், உண்ணாக்கு நோதல், காது குத்தல், சிரோபாரமுண்டாதல், கண்ணும் புருவமும் குத்தல் ஆகிய இக்குறிகுணங்களைக் காணலாம்.

## 73. சேத்துமத்தலை நோக்காடு.

" நோக்காட்டில் மிகத் தண்ணீர் குடிக்கையாலும்
நுகர்ந்தபின் புலவாமற்படுக்கையாலுந்
தீக்காட்டில் மிகத் திரண்டு சிலேத்துமந்துன்னிச்
சிரசெங்கும் நோவாகிப் பிடரியோடு
வேக்காட்டிற்றேக மெல்லாம் மிக வெளுத்து
மேனியுமோ மிகவுலர்ந்து சுரமுண்டாஞ்
சாக்காட்டிற் பசியற்று ருசியில்லாததால்
சண்டாளச் சிலேட்டுமத்தின் றலை நோக்காடே."

என்பதினால், இந்நோயில் தண்ணீர் மிகக் குடிப்பதாலும், அருந்தியபின் உலவாமற் படுக்கையாலும், அழல் மிகுதியுடன் ஐயமுங்கூடி தலையிலும் பிடரியிலும் நோவையுண்டாக்கித் தேகமெல்லாம் வெளுத்து, உலர்ந்து சுரமுண்டாகி, பசியின்மை, ருசியின்மை ஆகிய இக்குறிகுணங்களையும் விளைவிக்கும்.

## 74. சன்னிவாதத் தலைநோக்காடு.

" தலைநோக்காடாகியே மிகவருந்தி,
சஞ்சலத்தால் மனக் கிலேசந்தானுமுண்டாய்
மலை நோக்காய் நெஞ்சுடைத்துப் பெருமூச்சாகி
மறுகாதிரண்டினிலாப் படித்தாற்போலும்
புலைநோக்காய் வாய்தானும் பேசவொட்டா
புழுக்கள் தானூர்தல் போற்றேகமாகுங்
கதநோக்காயுணர்ச்சியறிவில்லாதாகுங்
கனசன்னி வாதத்தின்றலை நோக்காடே."

என்பதினால், இந்நோயில் முக்குற்றங்களும் ஏககாலத்தில் கேட்டைந்து தலைவலியால் மிகவருந்தி சஞ்சலமடைந்து மனக்கிலேசமுண்டாய் நெஞ்சடைத்து, பெருமூச்சாகி காதிரண்டிலும் ஆப் படித்தாற்போலே வாய்பேச இயலாது, தேகமெங்கும் புழுக்கள் ஊர்தல் போல் தோற்றமுண்டாகும், அன்றியும் தன் உணர்ச்சியும் அறிவும், இழந்து கிடப்பன் என்பதாம்.

## 75. இரத்தப் பித்த தலை நோக்காடு.

" சன்னியாக் குளிர்ந்துமே வெச்சென்றாகுந்
தாகமே மிகவுண்டாய் மயிர்க்கூச்சாகும்
தின்னியாந் திமிர் திமிர்த்திரத்தமீறிச்
செவிமூக்கு வாயாலே ரத்தம் வீழும்
உன்னியா யுடலதுதான்றுடிப் புண்டாகு
மூக்கமாஞ் சுவாசமது மெத்தவாகுங்
கன்னியாஞ் சரீரமது கருகலாகுங்
கதித்தெழுந்தரத்தபித்தத்தலை நோக்காடே. "

என்பதினால், இந்நோயில் தலைவலியுடன் உடல் குளிர்ந்து தாகம் மிகவுண்டாய் மயிர்க்கூச்ச முண்டாகும். உடல் திமிர்திமிர்த்து இரத்தமீறி செவி, மூக்கு, வாய் இவற்றில் குருதி வெளியாகும். உடல் துடிக்கும். சுவாசம் அதிகப்படும். சரீரம் கருமை நிற மடையும். என்பதாம்.

## 76. இருமிகந்த தலை நோக்காடு.

" கதித்துமே மௌலிபற்றித் தலைநோயுண்டாங்
கடிமூக்குத்தண்டு புருவம் வலிக்கும்
வதித்துமே வாய்நீர்தான் மிகவுமூறும்
வடிவமெல்லாம் நோவாமே மன மறுக்குங்

குதித்துமே கைகாலுமிடறும் பற்றிக்
குத்தியே விறுவிறென்றே தானிருக்கும்
நதித்து நாணற் பூப்போன்ற கிருமி வீழும்
நாறுமே கிருமி கந்ததலை நோக்காடே."

என்பதினால் இந்நோயில் தலைவலியும், மூக்குத்தண்டு புருவம் இவற்றின் வலியுமுண்டாகும். வாய்நீர் அதிகமர்லூறும். தேக மெங்கும் நோவுண்டாகும். மனக்கஷ்டமுண்டாகும். கைகால்கள் இடறும். குத்தலும் விறுவிறுப்புமுண்டாகும். நாணற் பூப் போற் கிருமிகள் விழும் என்பதாம்.

77. சூரியாவர்த்தம்.

" கந்தமாம் வலப்பக்கமிடப்பக்கமாதல்
கண்ணடியு மூக்கடியும் புருவம்பற்றி
புந்தமாம் புருவந்தில் ஊசிகுத்தல்
போல்வலிக்குங் கண்தானுஞ் சுருங்கிக் காணும்
பந்தமா முடம்பெங்கும் பாரமாகும்
பகற்போது தாழ்ந்தவுடன் நோவுமட்டாந்
துந்தமாந்துந் துமிபோல் வலியுண்டாகுஞ்
சூரியாவர்த்தந்தன்னின் சுருபமாமே."

என்பதினால், சூரியவர்த்தத் தலைவலி நோயில் தலையின் வலப் பக்கம் அல்லது இடப்பக்கம் வலியுண்டாகும். கண், மூக்கு, புரு வம் இவற்றிலும் ஊசியாற் குத்துவதுபோல் வலியுண்டாகும். கண் சுருங்கிக் காணும். உடல்பாரமாகத் தோன்றும். பகற் பொழுதுக்கு மேல் (மாலை நேரம்) வலியாவும் குறையும். சூரியன் உதயமாகும்போது தினந்தோறும் மேற் கண்ட தலைவலியுண்டாய் பொழுது சாய்ந்தவுடன் வலிமட்டுப்படும் என்பதாம்.

78. சந்திரா வர்த்தம்.

" சுருபமாயுடம் பெங்கும் வலியுமாகித்
தும்மியே மூக்கடைத்துச் சுகந்தமற்று
புருவமே மிகவலித்து நெற்றியோடு
புண்போலக் குடைந்திட்டுப் புளகமாகி,
அருபமாயந்தியின் போது தோன்றி
அர்த்தராத்திரி மட்டுமலைச்சலாகி,
சருபமாய் விடிகிற நேரத்திற்றானுஞ்
சாய்குமே மாசந்திர வர்த்தமாமே."

என்பதினால், சந்திராவர்த்தம் என்னும் தலைவலி நோயில் உடம் பெங்கும் வலியுண்டாய் தும்மல், மூக்கடைப்பு, மணம் அறியாமை புருவத்தில் வலி, நெற்றியில் புண் போல் குடைதல் ஆகிய இக் குறி

குணங்கள் அந்தி நேரத்தில் ஆரம்பமாகி நடுராத்திரி வரைக்கும் கடுமையாக ஏற்பட்டு அப்பால் விடியும் நேரம் வலி குறைவுபடும் என்பதாம்.

## 79. கர்னா வர்த்தம்.

" வர்த்தமாய் மார்போடு பிடரி காது
   வலித்துமே வாப்பு கொண்டடித்தாற் போலக்
குற்றமாய் காதிரண்டுங் குடைச்சலாகுங்
   கோணியே கழுத்துங் காதுங் கனக்கும்
அற்றமா யுச்சியிலும் நெற்றி தன்னில்
   அடிக்கடிக்கு நோயாகியசதி யாகும,
பற்றமாய்ப் பசியின்றி யுரக்க மின்றேல்
   பாரகர்னாவர்த்த மென்றே பகரலாமே ."

என்பதினால், கர்ன வர்த்தம் என்னும் தலைவ லிநோயில், மார்பு, பிடரி, காது இவற்றில் ஆப்பு கொண்டடித்தாற் போல வலி யுண்டாகும். காதிரண்டிலுங் குடைச்சலுடன் கோணலாகிக் கனக்கவுஞ் செய்யும். கழுத்தும் கனமாய்த் தோன்றும். உச்சி யிலும், நெற்றியிலும் அடிக்கடி நோயுண்டா யசதி யாகும். பசியும் உறக்கமு மிரா வென்பதாம்.

## 80. ஒரு தலை வகாத பேதம் (ஒருத்தலையினா வர்த்தம்).

" பகரான வொருதலையைப் பாதி நொந்து
   பகழி கொண்டு மௌலிதனைப் பிளந்தாற் போல,
நிகரான கண்ணு நீர் பாய்ந்து காந்தி
   நெடு மூச்சு விட்டுமே நினைந்து துன்பந்
திகரான சடந்தானுந்திடுக்குண் டாகிச்
   சிணுக்கிரும லாகியே பசிகாணாது,
வகரான வாதமாய் மயிர்க் கூச்சாகும்,
   வாகாத பேதத்தோர் தலைவலியுமாமே. "

என்பதினால், ஒருத்தலை வகாத பேத மென்னும் ஒருத்தலை யினாவர்த்தத்தலைவலி நோயில் ஒரு தலையில் பாதி நொந்து, அம்புகொண்டு தலையைத் துண்டிப்பது போன்ற வலியையுண் டாக்கி, கண்ணீர் பெருகி, எரிச்சலுடன் நெடு மூச்சுண்டாகி மிகுந்த துன்பத்தையடைந்து, உடல் திடுக்கிட்டு, நடுங்கி, சிணுக் கிருமலுண்டாய், பசியிராதுமயிர் கூச்சு முதலிய குறிகுணங்களைக் காட்டும் என்பதாம்.

### 81. வாத கர்ண சூலை

" வலியாகிச் சீவிழுந்து காதிரண்டு
மகத்தான சமுத்திரம் போலிரைச்சலாகிக்,
கிலியாகிச் செவிதனிலே சத்தமுண்டாய்க்
கேள்விகள் தான் வசனமது கேட்டிடாது,
பெலியாகிப் பிறர் வசனத் திசை கேடாகும்,
பேய் கொண்டமனமது தான் பேச்சு தானா,
மலியாகி யாணவ காமியங் குறைக்கு
மடங்காத வாத கர்ன சூலைதானே."

என்பதினால், வாத கர்ன சூலை நோயில் காதுகளிரண்டிலும் வலியும், சீழுமுண்டாய் சமுத்திரம் போல் காதிரைச்சலுமுண்டாகும். செவிகளி லுண்டாகும் இரைச்சலால் பிறர் பேசும் வார்த்தைகள் கேட்க மாட்டா. பேய் கொண்டாற் போல் மனமது நிலை கொள்ளாது. ஆணவமும் காமியமுங் குறைவுபட மாட்டாது என்னும் குறி குணங்களைப் பெறும்.

### 82. பித்த கர்ன சூலை

" தானென்ற இரண்டு செவி தன்னிலே தான்
தாக்கான கிரந்தியே எழுந்து நொந்து
ஊனென்ற வுதிரமொடு சீழும் பாய்ந்து
ஊற்றை யாங்கும்பி போல் நாற்ற மாகும்
கானென்ற சிரசெங்குமளி போ லூறும்
காதிரண்டும் பருத்துமே வீக்க முண்டாம்
பேனென்ற புளகிதமாய் தலையெங்கும் நோம்
பித்த கர்ன சூலை யென்றே புகலுவீரே."

என்பதினால், பித்த கர்ன சூலை நோயில் இரண்டு செவிகளிலும் கிரந்தியுண்டாகி, வலியுடன் இரத்தமும் சீழும் பாய்ந்து குறும்பி போல் நாற்றமுண்டாய் தலை முழுவதும் வண்டுஊறுவது போன்ற தோற்ற முண்டாகும். காதுகளிரண்டும் பருத்து வீக்கமுண்டாகும். தலை பூறாவும் நோகும் என்பதாம்.

### 83. சிலேட்டு கர்ன சூலை

" புகலவே காதுக்குட் குறும்பி சேர்ந்து
பொருங்கோலைக் கொண்டு தான் குடைந்தாற்போல,
நுவலவே நோவாகிப் புண்தானுண்டாம்
நோக்கான சடந்தானுணுக்கமாகும்,

இகலவே இரைச்சலது கொஞ்சங் காணு
மேற்றமாய்த் தினவுமே மிகவுண்டாகும்,
அகலவே யாக்கை யெல்லாம் வெளுத்துக்காணு
மரிதான சிலேட்டும கர்ன சூலையாமே."

என்பதினால், இந்நோயில் காதுக்குள் குறும்பி சேர்ந்து குச்சி கொண்டு குடைந்தாற்போல நோவுண்டாய்ப் புண்ணாகி உடல் இளைக்கும். காதிரைச்சலும் தினவுமுண்டாகும். உடல் வெளுக்குமென்னுங் குறிகுணங்களைக் காட்டும்.

## 84. கிருமி கர்ன சூலை.

"ஆமென்ற கம்பு முளையரிசி போல
வடைத்துமே காதிரண்டுந் துன்னிப் போகும்,
போமென்ற புழுக்களது மெத்தவூர்ந்து
புரண்டுமே புண்ணாகியுதிரம்பாயுந்,
தூமென்ற சீயோடு சில்லுங்காணுந்
துடிக்குமே படபடத்துக் காதிரண்டுங்
கேமென்ற சத்தமது கேட்டிடாது
கிருமி கர்ன சூலையென்றே கீர்த்திப்பாயே."

என்பதினால், இந்நோயில் கம்பு அரிசி போலக் காதிரண்டும் அடைத்துன்னிப்போகும். புழுக்களுண்டாகி, ஊர்ந்து, புரண்டு, புண்ணாகி, இரத்தம் சீழ்ப்பாயும். காதுகள் படபடக்கும். சத்தம் கேட்காது என்னும் குறி குணங்களாம்.

## 85. தந்த வாயு.

1 "கீர்த்திப்பாய் கெட்டியாய்க் கடிதலாலுங்
கெடியான சீதளங்கள் மிகவே யூறிப்,
பார்த்திப்பாய்ப்பல்ல தனிலடங்கலாலும்
பலபலவாமுதிரந்தான் பற்றலாலும்,
மூர்த்திப்பாய் முகமெல்லாமிகக் குடைந்து
முகுளிதமாந் தந்தங்கள் சதை கரைந்து,
நார்த்திப்பாய் நாவடியும் நரம்பு நோவாம்,
நாறுதந்தவாயுவின்றன் நலமதாமே."

2 "நலமான வாயுவது கோபித்தக்கால்
நற்சந்துகுடைந்துமே பல்லு நோவாந்
தலமான தலையோடு பிடரிகுத்துந்
தாக்கானமலமிறுகி நீருங் கட்டுங்
குலமான பெருநரம்பு தாண்முடங்குங்
குடைச்சலாய் வாய்தானும் வரண்டு காணும்
பெலமான குளிரோடு சுரமுமுண்டாம்
பேர் பெரியாவதமென்றே பேசலாமே."

என்பதினால், தந்தவாயு என்னும் நோயில், கெட்டியான பண்டங்களைப் பற்களில் வைத்துக் கடித்ததாலும், சீதளமுண்டாவதாலும், பலவகையான உதிரம் பற்றலாலும், முகம் முழுதும் குடைச்சலுண்டாகி, பற்களின் சதை கரைந்து, நாவடியிலுள்ள நரம்புகளில் நோவுண்டாகும். இதுவே தந்த வாயு எனப்படும்.

மேலும், வாயுவானது மீண்டும் விருத்தியாயின் சந்துகளில் குடைச்சலும், பற்களில் நோவும், தலையிலும் பிடரியிலும் குத்தலும், சிறு நீரும் மலமும் கட்டுதலும், பெருநரம்பு முடங்கிக் குடைச்சலாய், வாயும் வரண்டு, குளிரும் சுரமுமுண்டாகும். இதனைப் பெரிய வாதமெனவும் கூறுவர்.

"ஆமப்பாவாதமதெண்பத்து நாலு
அதினுடைய குணரகுணங்களடங்கலாக
* * * *
* * * *
நாமப்பாகுருவினடி மனதிலுன்னி
நாதாக்கள் சொன்னபடி நாட்டினேனே."

என்பதினால், யூகி முனி சிந்தாமணியில் வாத நோய்கள் பற்றிய முடிவுரையில் வாதம் மொத்தம் எண்பத்து நாலு நோய்களெனக் கூறியுள்ளார்.

(யூகி சிந்தாமணி.)

## வாதரோகம் பற்றிய வேறு கருத்துக்கள்

இதனை உறுப்புகளைப் பற்றி வரும் வலி நோய் எனவும் கூறலாம்.

### வாதமிகுங் காலம்.

1 "ஆடியாதியாய் ஐப்பசி ஈறாய்
அனிலமதற் கோரரசியல்காலம்."

என்பதினாலும்,

2 "கடகமுதல் துலாம் வரையில் வாதமாகுங்
கண்ணாடியையப்பசியுமதுவேயாகும்." (சதகநாடி.)

என்பதினாலும், ஆடி முதல் ஐப்பசி முடிய இந்நான்கு மாதங்களும் வளிக்குற்றம் மிகுதிக்குரிய காலமென அறிகிறோம். அன்றியும், யூகி சிந்தாமணியில் கூறியிருக்கிற பிரகாரம்—

3 "வாதவர்த்தனை காலமேதோவென்னில்
மருவுகின்ற ஆனி கற்கடகமாகும்
ஆதவைப் பசியோடு கார்த்திகைதன்னில்
அடருமே மற்றமாதங்கடன்னில்
போதளேசமிக்கின்ற காலமாகும்
பொருந்தியே யிவர் தொழில் தான் கண்டிறத்தல்
காதவே கண் மூடல் கைகாலசைத்தல்
கடிந்தோட்டமுடக்கலொடு நீட்டலென்னே."

என்பதினால், வளிக் குற்றம் ஆனி, ஆடியில் தன்னிலை வளர்ச்சியும், ஐப்பசி, கார்த்திகையில் பிரகோபமுமாகும். மற்ற மாதங்களில் தன்னிலை எனவும் கூறியுள்ளார். இதன் தொழில் கண் திறத்தல், மூடல், கை காலசைத்தல், ஓடல், முடக்கல் நீட்டல் எனவும் கூறியுள்ளார்.

**இயல்.**—மேற்கூறியவாறு மிகுதியாகும் "வளி" என்னும் வாயுவானது ஓர் உருவப் பொருள் அல்ல. உருவப் பொருளாய்த் தோன்றாமல் தனது இயங்கற்றன்மையால் உணரப்படுவதால் அல்லது அறியப்படுவதால் அது இயங்குங்கால் தன் தொழிலை உருவப் பொருள்களின் மீது காட்டுகின்றது. அது மயிர், நரம்பு, தோல், இறைச்சி என்பு என்னும் பிருதிவிக்கூறுப் பொருள்களிலும்; இரசம், இரத்தம், மூளை, நிணம், சுக்கிலம் என்னும் அப்புக் கூறுப் பொருள்களிலும், அக்கூறுகள் கலப்புள்ள பொருள்களிலும் சேர்ந்து தனது மீறியமாறுபாட்டைத் தோற்றுவித்து அவ்வுறுப்பை வளைத்தல், முடக்கல், முறுக்கல், நிறுத்தல், வீங்கல், வலித்தல், வரட்டல், குளிர்தல், வெம்புதல், குத்தல், குடைதல்,

தொழிலற்றுப் போதல், நடுக்கல், இறுக்கமாதல், பூட்டுகள் நழுவுதல், கை கால்கள் விட்டுப் போதல், எருவும் சிறு நீரும் கட்டுப்படுதல் முதலிய குறிகுணங்களில் ஏதேனுமொன்று, இரண்டு, அல்லது பலவற்றைத் தோற்றுவிக்கும் இயல்புடைய நோயாம் என்பர் சிலர்.

மிகுந்த வாயு (வளி) வானது ஒவ்வொரு உறுப்பையும் தாக்கும் போது உண்டாம் குறிகுணங்களைக் கூறுகிறார்.

1. மிகுந்த வாயுவானது எலும்பைப் பற்றின்.—சிலருக்கு, எலும்பானது பிளக்கப்படுவது போன்ற வருத்தமும்; வேறு சிலருக்கு அதே வாயு மிகுதியால் வீங்கச் செய்தலும், எலும்பை வளைத்தலும், வலித்தலும், முடக்கலும், முறுக்கலும், நிறுத்தலும், வாட்டலும், குளிர்தலும், வெம்மையும் பெறும். அன்றியும் அவ்வெலும்புகளின் மீதுள்ள சவ்வுகளிலும், இறைச்சியிலும் வாயுவானது தாக்கி வலியையுண்டாக்கியும், தசை நாறுகளின் வன்மையும் குன்றித் தூக்கமின்மை, உடல் முழுமையும் வலித்தல் முதலிய குறிகுணங்களையுமுண்டாக்கும்.

2. மூளை (மச்சை).—வாயுவானது மிகுந்து எலும்புக்குள்ளிருக்கும் மூளையில் கலந்து தொழிற் செய்யுங்கால் அம்மூளையைக் காத்துக்கொண்டிருக்கும் எலும்புகள் பிளக்கப்படுவது போலும், கணுக்கள் பிளக்கப்படுவது போன்ற வருத்தமும், தசையும் தசை நாறுகள் வலுமை நீங்கித் துன்புறுத்தலும், தூக்கமின்மையும் உடல் முழுமையும் இடைவிடாத வலியுமுண்டாதலுமாம்.

3. குருதி (இரத்தம்).—வாயுவானது மிகுந்து இரத்தத்தில் சேரும் போது அழற்சியும், குருதி கருமை நிறமடைதலும், அதனால் உடல் முழுதும் கரு நிறத்தையடைதலும், உளைச்சலுண்டாவதும், உடம்பில் புண்கள் உண்டாவதும், உண்டவுடன் உடல் விறைத்தலும் காண்பதுடன் சுவையுணர்ச்சியும் கெடும் என்பர்.

4. தோல்.—வாயுவானது மிகுதியாகி உடலின் மேலுள்ள தோலிற் கலந்து தொழிற்படுமேயானால், தோல் வெம்மையாகவும், வெடிப்புள்ளதாகவும், தண்மை வெம்மையுணரும் உணர்ச்சியில் குன்றியதாகவும், தோல் மெல்லியதாகவும், கரு நிறமாகவும் மாறிக் குத்தலையுமுண்டுபண்ணும். அல்லது தோல் சிவந்து அகன்று விரிந்து போவது போல் வருத்தத்தைத் தரும்.

5. இறைச்சி —வாயுவானது மிகுந்து மாமிசத்தைப் பற்றித் தொழிற்படுமாயின் உடல் கனக்கும். தடியால் அடித்தலினாலும், கையால் குத்தலினாலும் உண்டாகும் வலியைப் போல் வலித்தலும், குத்தலுங் காணும். அவ்வலியினால் நோயினன் தாங்க முடியாது சோர்ந்து தவிப்பான்.

6. **கொழுப்பு.**—வாயுவானது மிகுந்து கொழுப்பைத் தாக்கினால் அல்லது கொழுப்பில் கலந்தால், உடலைத் தடியாலடித்தது போல் வலிக்கும். குத்தலுண்டாகும். அவ்வாறே கைகால்களிலும் வலியையும் குத்தலையுமுண்டாக்கி நோயினன் சோர்ந்து வருந்துபவனாவான்.

7. **சவ்வு.**—வாயுவானது மிகுந்து சவ்வுகளிற்கலந்தால் முழு உடலையேனும், ஓர் உறுப்பையேனும் அனுசரித்தணுகி இயற்கை உருவத்திற்கு வேற்றுமையை உண்டாக்கக்கூடும்.

8. **சுக்கிலம்.**—வாயு மிகுந்து சுக்கிலத்தில் கலந்து தொழிற்படின் சுக்கிலம் இருவகைத் தன்மையடையும். (1) வாயுவுடன் அழல் கூடின் சுக்கிலம் நீர்த்து வெகு எளிதில் வெளியாகும். (2) வாயுவுடன் ஐயம் கூடின் சுக்கிலம் கெட்டிப்பட்டு முற்றிலும் வெளியாகாமல் கட்டுப்படும், அல்லது அது தங்கும் உறுப்பை வன்மை குன்றச் செய்யும். இத்தன்மையாலுதிக்கும் கரு வன்மையற்றதாயிருக்கும்.

குறிப்பு.—மிகுதியான வாயு தனித்து சுக்கிலத்தில் கலக்கின் சுக்கிலம் வறண்டிருக்குமெனக் கூறலாம். ஆனால், இந்நிலை ஏற்படுதலரிது எனலாம்.

9. **இரத்த நாளம்.**—வாயுமிகுந்து ரத்த நாளத்தில் சேர்ந்து தொழிற்படுமாயின் வாயு செல்லுமிரத்த நாளங்கள் தோறும் ஆங்காங்கு குத்தலுண்டாகும். அன்றியும் இரத்த நாளங்கள் தடித்தும், குறுகியும், சில சமயம் நாளத்தில் இரத்தம் நிரம்பியிருப்பதாகவும் தோன்றும் (i.e. இரத்த அழுத்தம்; இரத்தப் பெருக்கம்). தவிர, முன்னிசிவு, பின்னிசிவு, பக்க இசிவு, முடக்கல் கூன் விழல் ஆகிய இவற்றையுமுண்டு பண்ணும்.

10. **பூட்டுகள் அல்லது சந்திகள்.**—பூட்டுகளில் வாயு மிகுந்து குற்றமடைவதால் சந்திகளில் முடக்கவும், நீட்டவும் முடியாதபடி வலியையுண்டாக்கும்.

11. சிறு குடல்.—வாயு மிகுந்து சிறு குடலில் சேருமாயின் மலமும் சிறு நீரும் கட்டுப்படுவதுடன் விரைவாதம், மூல ரோகம் பக்க சூலை, குன்மம், சூலை நோய், மார்பு நோய் முதலியவற்றை உண்டாக்கும்.

12. குதம்.—வாயுவானது குதத்தை அனுசரித்து மிகுந்து தோன்றினால் வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், கல்லடைப்பு, முழந்தாள், இடுப்பு, கால்கள், பீட்டம் இவைகளில் வலியுண்டாவதுடன் உடலின் அவயவங்கள் நாளுக்கு நாள் வன்மை குன்றும்.

**13. இரைப்பை.**—வாயுவானது மிகுந்து இரைப்பையைச் சார்ந்து கோளாறடைந்தால் நாவறட்சி, தொண்டை வறளல், இருமல், சுவாசம், புளி ஏப்பம், ஊழி, வயிற்றிலும், இருதயத்திலும், நாசியிலும் நோயுண்டாதலாகிய குறி குணங்களை விளைவிக்கும்.

**14. பகிர்வாசயம்** (பெருங்குடல்).—பெருங்குடலில் வாயு மிகுந்து கோளாறடைந்தால் குடலிரைச்சல், வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், இடுப்பு வலி, இந்திரியங்களின் இயற்கை வன்மை குறைதல், வெகு கஷ்டத்துடன் மலமும் நீரும் வெளிப்படலாகிய நோய்களுண்டாகும். மலமும் நீரும் முற்றும் கட்டுப்படவுங் கூடும்.

இங்ஙனம் வளிக்குற்றம் மிகுந்து பிருதிவிக்கூறு, அப்புக்கூறு பாடுடைய உறுப்புகளில் தொழிற்படும் கிரமத்தினை அறிந்தோம். நோய் வரும் வழி (அதாவது வளிக்குற்றம் மிகுதியாவதற்குக் காரணம் கூறுகிறார்) :

1 "என்னவே வாதந்தானெண்பதாகும்
மிகத்திலே மனிதர்களுக்கெய்துமாறு
பின்னவே பொன்தனையே சோரஞ் செய்து,
பெரியோர்கள் பிராமணரைத் தூஷணித்தும்,
வன்னவேவச் சொத்திற் சோரஞ் செய்து
மாதாபிதா குருவை மறந்து பேர்க்கும்,
கன்னவே வேதத்தை நிந்தை செய்த பேர்க்குங்
காயத்திற்கலந்திடுமே வாதந்தானே."

2 "தானென்ற கசப்போடு துவர்ப்புரைப்பு
சாதகமாய் மிஞ்சுகினுஞ்சமைத்தவன்னம்
ஆனென்றவாறினது பொசித்தலாலும்
ஆகாயத்தேறலது குடித்தலாலும்,
பானென்ற பகலுறக்கமிரா விழிப்பு
பட்டினியே மிகவுறுதல் பாரமெய்தல்,
தேனென்ற மொழியாற்மேற் சிந்தையாகில்,
சீக்கிரமாய் வாதமது சேணிக்குந்தானே."

3." * * * *

ஆணானவரன்றனையே மதியாமாந்தர்
அகதி பரதேசியர்கட்கன்னமீயார்
கோனான குருமொழியை மறந்த பேர்கள்
கொலை களவு பொய் காமங்குறித்த பேர்க்கு
ஊனான சடந்தன்னில் வாதம் வந்து
உற்பவிக்கும் வேதத்தினுண்மை தானே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால் கைப்பு, கார்ப்பு, துவர்ப்புச் சுவையுள்ள பொருள்கள், பழைய சாதம், கேழ்வரகு, வரகு, தினை இவைகளை மிகுதியாயுண்பதினாலும், பகலில் தூங்கி இரவில் கண் விழித்தல், மிக்க உண்டேனும் அல்லது மிகுந்த பட்டினியாக யிருந்தேனும் சையோகித்தல், புணர்ச்சியை அடியோடு மறந்தேனும் அல்லது மிகுதியாகப் புணர்ந்தேனும் வருதல்; கொர்வமடைதல், அதிகக் கோபத்தையடைதல்; பயமடைதல், விரைந்தோடி ஒருவரைத் துரத்தல், துக்கமடைதல், மிகுந்த காற்றுப்படும்படியிருத்தல், காலம் மாறி உண்ணல், மிகுந்த நீர் குடித்தல், விரைந்து உட்காருதல், புளிப்பு சுவையுள்ள பொருளை அதிகமாக அருந்தல், மிஞ்சிய அளவில் நெய்யைக் கூட்டல், கரி, பரி ஏறியலைதல் ஆகிய இவற்றாலும், விக்கல், வாந்தி, நீண்ட நாட்கள் மலச்சிக்கல், பித்தக்குறைவு, உண்ணும் மருந்துகள் குமட்டி வெளிப்படுதல், அவ்வாறே குடித்த தண்ணீரும் குமட்டி வெளியாதல், இத்தியாதி காரணங்களால் வளிநோயுற்பத்தியாகும் என நூல்கள் கூறுகின்றன.

(யூகி. சி.ம.)

இக் காரணங்களால் பிறக்கும் வாத ரோக மென்னும் வளி நோய்கள் எண்பது எனக் கூறி அவற்றை உறுப்புகள் வாரி அல்லது உடம்பின் தானம் வாரியாகவும் வகுத்துள்ளார்கள்: அவையாவன :—

1. தலையைப்பற்றி வருவன=3.
2. மயிரை ஒட்டி வருவது=1.
3. நெற்றியில் வருவது=1.
4. கண்ணில் வருவன=6.
5. காதில் வருவன=4.
6. மூக்கில் வருவன=2.
7. கன்னத்தில் வருவன=4.

8. வாயில் வருவன=2.
9. பற்களில் வருவன=2.
10. நாவில் வருவது=1.
11. தாள்களில் வருவது=1.
12. கழுத்தில் வருவன=2.
13. குரல் வளையில் வருவன=3.
14. தோளில் வருவது=1.
15. மார்பில் வருவது=1.
16. முலையில் வருவது=1.
17. விலாப்பக்கம் வருவது=1.
18. கையில் வருவது=1.
19. முள்ளந்தண்டில் வருவது=1.
20. முதுகில் வருவது=1.
21. விரல்களில் வருவன=2.
22. குடலில் வருவன=4.
23. கீழ்வாயில் வருவன=2.
24. நீர்ப்பையில் வருவது=1.
25. குறியில் வருவது=1.
26. விரைவில் வருவன=2.
27. இடுப்பில் வருவன=2.
28. தொடையில் வருவன=4.
29. முழங்காலில் வருவது=1.
30. காலில் வருவன=6.
31. உடலில் வருவன=7.
32. முண்டத்தில் வருவது=1.
33. நிறத்தால் வருவது=1.
34. செந்நீரால் வருவன=2.
35. குருதிக்குழலில் வருவது= 1.
36. நரம்பையொட்டிய நோய்கள்=3.
37. மனதினளவாகப் பிறப்பது=1.

**ஆக மொத்தம் உறுப்புகள் அல்லது தானங்கள்பற்றி வரும் நோய்கள்—80.**

**ஒவ்வொரு உறுப்பு அல்லது தானம் இவற்றிலுண்டாகும் வளி நோய்ப் பிரிவுகள் என்பதுக்கும் தனித்தனிக் குறி குணங்கள் கூறுகிறார்.**

### 1. தலை—3.

*1.* **தலை நடுக்கல்.**—இது பெரும்பான்மையும் வயது முதிர்ந்தவர்களுக்கு வரும். ஐயவளிக்கலப்பால் இந்நோயுண்டாகும். யோகிகளுக்கும் நிலைதவறின் தலை நடுக்கலுண்டாகும். முன்னும் பின்னும் அல்லது இரு பக்கங்களிலேனும் தலையை நடுக்கலுடன் அசையச்செய்யும்.

*2.* **தலை வலித்தல்.**—சூரியாவர்த்தம் சந்திராவர்த்தமென யாதொருவித முற்குறிகள் அதாவது சுரம். இருமல், மூக்கடைப்பு இவை களின்றிப்பிறக்கும். தாங்கமுடியாத தலைவலியும், குத்தல் குடைத்தலும், காலை முதல் மாலை வரை அல்லது மாலையில் ஆரம்பித்து மறு நாள் காலைவரையிலும் முறையே உண்டாகும்.

*3.* **தலை ஊறுதல்.**—தலையில் புழு ஊறுவது போன்றும் நமைச்சல் போலும் தோன்றும். எப்போதும் தலையைச்சொறிந்து கொண்டிருக்கச் செய்யும். தலையில் தோல் வளிஅழல் மிகுதியால் வறண்டு தோல் உதிரும்.

### 2. மயிர்=1.

**தலைமயிர் சுருளுதல்.**

### 3. நெற்றி= 1.

**புருவம் நெரிதல்.**—வளிமிகுதியால் புருவத்தின் நரம்புகள் சத்தற்று, புருவம் நெரிந்து ஒரு பக்கமாக இழுத்துக்கொள்ளுவதுண்டு. சிலவேளை கண்ணும் புருவமும் ஒரு பக்கத்தே சாய்ந்துவிடும்.

### 4. கண்=6.

*1.* **கண்கள் குழி விழுதல்.**—முக்குற்றங்களும் தளர்ந்த நிலையிலும் வாந்தி, பேதி, குருதிப்போக்கு இவை அதிகமாகவுள்ள காலத்தும், சிலருக்கு இயற்கையிலும், சில மாதர்கள் சூல்கொண்ட காலத்தும் இந்நோய் ஏற்படும்.

*2.* **கண் சிவத்தல்.**—இது அழல்வளி மிகுதியாலுண்டாகும். வெளிச்சத்தைப் பார்க்க முடியாது. கண் கூசும், கண்ணீர் வடியும்.

*3.* **கண் சொருகல்.**—இது, சன்னிபாதங்களிலும், வலி (இசிவு) நோய்களிலும் மயக்கம் (மூர்ச்சை) முதலிய நோய்களிலும் கண் சொருகல் உண்டாகும்.

4. **கண்களில் பீளை சாரல்.**—கண்களில் அழல்ஐயங்கூடிய காலத்தில் கண்சிவத்தலுடன் பீளையுஞ்சாரும்.

5. **பிள்ளை முழி முழித்தல்.**—வளிக்குற்றம் தளரும்போதும், உடல் வன்மை குறைந்த காலத்தும் இந்நோயுண்டாகும்.

6. **கண் குத்தல்.**—இது, வளிக்குற்றம் மிகுதியாகிய காலத்தும் மண்டையில் கண்ணுக்கருகாமையில் அடிபட்ட காலத்தும் இந்நோயுண்டாகும். கருவிழி, வெள்விழியில் தாபிதம் ஏற்பட்ட காலத்தும் கண்குத்தலுடண்டாகும்.

5. காது (செவி)=4

1. **செவியடைப்பு.**—இது, வளிஐயமிகுதியால் செவியினுள் தாபிதமுண்டாகி வீங்கி ஒலியை ஊடுருவமார்க்கமில்லாது தடைப்படுதலாலுண்டாகும்.

2. செவி குத்தல்
3. செவி தினவு..
4. செவியில் குறும்பிசேரல்.

} இவை மூன்றும் மேற்கூறிய காரணத்தாலேயே எழுந்து செவியடைப்பு நோய்க்குத் துணை நோய்களாகவும், சீழுடனும், சீழ்இல்லாமலும் வருவனவாம். செவியினுள் அழுக்கான குறும்பிகள் சேர்ந்தாலும் மற்ற மூன்று செவி நோய்களும் உண்டாக ஏதுவாகும்.

6. மூக்கு—2

1. **மூக்கடைத்தல்.**—இது மூக்குத்துளையில் தாபிதமுண்டாய்ச் சதையை வீங்கச் செய்தாலும், சதையிலிந்து முளைபோல் வளர்ந்தாலும், மூச்சு விடவும் வாங்கவும் முடியாமல் மூக்கை அடைக்கும்.

2. **மூக்கு உளைவோடு தும்மல்.**—இது, வளி ஐயக் குற்றம் மிகுதியால் மேற்கூறிய மூக்கடைப்பு ரோகம் உண்டாவதோடு மூக்கில் உளைச்சல், நமைச்சல், எரிச்சல், மூக்குநீர்ப் பாய்தலாகிய குறிகுணங்களையுமுண்டாக்கித் தும்மலையுமுண்டாக்கும்.

7. கன்னம்—4

1. **கன்னம் உள்வாங்கல்.**—இது வளி அழல் குற்றத்தால் கன்னப்பகுதியிலுள்ள நீரை வறட்டிச் சதையை வற்றச் செய்து, தோலைச் சுருக்கிக் கன்னத்தை உள்வாங்கும். கன்னத்திலுள்ள எலும்புகள் மேடிட்டுப்பிரதான்மாகத் தோன்றும்.

2. கன்னம் ஆழக் குழிவிழுதல் :—இது மேற்கூறிய காரணத்தாலேயே உண்டாகும்.

3. கன்னம் கனத்தல்.—இது, வளி ஐயம் அல்லது வளிஅழல் கலப்பு ஏற்படின் கன்னம் கனக்கும் என்பர்.

4. கன்னம் குத்தல்.—இது, வளி ஐயக்கலப்பால் கன்னத்தில் தாபிதமுண்டாய், சீழ் உண்டாவதும் வலிமிகுதியாகும். சுரமுங் காயும்.

8. வாய்—2.

1. கொட்டாவி விடல்.—இது, வளிக்குற்றமிகுதியால் உடல் வறண்டு, நீர் சுருங்கி மேல் நோக்குங்காலைத் தூண்டி கொட்டாவி எழச் செய்யும். சோம்பல், தூக்கம், உடல் வெப்பமாயிருத்தல் முதலிய குறிகுணங்களையுமுண்டுபண்ணும்.

2. வாய் வலித்து நுரைத்தல்.—இது, வளி ஐயம் பெருகுமாயின் வாய் மெல்லவும், அசைக்கவும் முடியாது வலித்து வாயில் நீர் கோர்த்து நுரைத்துத் துப்பச் செய்யும்.

9. பல்—2.

1. பல் கூசல்—இது புளிப்பு மிகுதியால் மிகுந்தெழுந்த வளிக்குற்றத்தால் தாங்கமுடியாத அளவில் பல் கூசும். தேய்ந்து போன தந்தத்தில் (பல்லில்) குளிர்ந்த நீர் புளிப்பான பண்டங்கள் சேர்ந்தாலும் பல் கூசும்.

2. பற் கொட்டல்.—இது, மிகுந்தெழுந்த வாயுவினாலும், ஐயங்குற்றத்தாலும் பல்லடியிலும் எயிறுகளிலும் தாபிதமும் சீழுமுண்டாய், மிகுந்த வலியும் பல்லசைவுமுண்டாகின் நாளடைவில் பற்கள் வன்மையிழந்து ஆட்டங்கொடுத்து கொட்டிப்போம். முதிர்ந்த வயதில் வயதின் காரணமாக நாளடைவில் பற்கள் ஒவ்வொன்றாய் விழக்கூடும். சிறுவயதினருக்கும் பற்கள் விழுந்து புதிய பற்கள் முளைக்கும்.

10. நா—1.

உள்நாதுடித்தல்—இது, வளி ஐயமிகுதியால் நாவானது துடித்து சுவையறியாது பேசும்போது வாயும் குளறும்.

11. தாள்—1.

தாள் குத்தல்.—இது, வளியின் கேட்டால் தாளின் சந்துகளில் பசையற்றுத்தாளை அசைக்கவும், ஆட்டவும் முடியாத படி செய்வதுடன் வலியையுமுண்டுபண்ணும்.

## 12. கழுத்து—2.

1. கழுத்து புடைத்தல்.—இது, கழுத்து நரம்புகளில் தங்கிய வளி ஐயப்பெருக்கால் அவ்விடத்தில் புடைத்து வலியை உண்டாக்கும்.

2. கழுத்து புறவலி—வலித்தல். மேற்கூறிய வளி ஐயப் பெருக்கால் கழுத்தில் புடைத்தலோடு கழுத்தின் பின்புறம் இசிவு போல் வலியையுண்டாக்கி, கழுத்தை இங்கும் அங்கும் திருப்பவொட்டாதவாறும், அசைக்க முடியாதவாறும் செய்து அதிக வலியையும் உண்டாக்கும்.

## 13. குரல்வளை—3.

1. குரல்வளை கனத்தல்—இது, வளி ஐயப்பெருக்கால் குரல்வளையில் வீக்கமுண்டாகி குரல்வளையைக் குறுக்கிக் குத்திக் குரற்கம்மல், இருமல், இவற்றையுண்டாக்கும்.

2. குறட்டை விடுதல் :—இது, வளி அழல்பெருக்கால் நரம்புகளில் தாபிதமுண்டாகி நமைச்சல், எரிச்சல், குறட்டை விடல், ஆகிய குறிகுணங்களைக் காட்டும். குறட்டையில் ஒலி பெரிதாகக் கேட்கும்.

3. குரல்வளை நரம்பு எரிதல்.—இது, தன்னளவில். மிகுந்த வளிக்குற்றத்தாலும், அழல் குற்றத்தாலும் குரல் வளையில் தாபிதமுண்டாக்கி நமைச்சல் எரிச்சல் முதலியவற்றையுண்டாக்கும்.

## 14. தோள்பட்டைகள்—1

தோள் பட்டைகள் எழுதல் :—தோள் பட்டைகள் இரண்டுமாகிலும் அல்லது தோள் ஒன்றாகிலும் மேலுக்கு எழுந்து தானாகவே கீழிறங்கி இவ்வாறாக அடிக்கடி அடக்க முடியாமல் தானாகவே மேலும் கீழுமாக அசைந்துகொண்டேயிருக்கும்.

## 15 மார்பு—1

மார்பு அதைத்தல்—வளி ஐயப்பெருக்கால் மார்பில் வீக்கங் காணும்.

## 16. முலை—1

முலைதிரங்கல்.—இது, வளிமிகுதியால் உடல் வறண்டுபோவதுடன், முலையும் வரண்டு சுருங்கித் திருகிவைத்ததுபோல் உள்ளடங்கியும், சரிந்தும் தொங்கும்.

17. விலா—1.

விலாப்புறமிறங்கல் :—வளி ஐயக்குற்றக் கலப்பால் விலாப் புறம் இறங்கியதுபோற்காணுதலாம்.

18. முதுகு—1.

முதுகு விறு விறுத்தல் :—இது, வளியின் கேட்டால் முதுகுத் தண்டு, முதுகின்தோல் இவைகள் வறண்டு வலித்து விறுவிறுக்கும்.

19. முள்ளந்தண்டு— 1

கூன் வலி, வலித்தல் :—இது, ஐயக்காலமாகிய கிழ வயதிலும், உடல் வன்மை குறைந்து, நாடி, நரம்புகள் தளர்ந்ததுபோது சிறிது சிறிதாக முள்ளந்தண்டு வளைந்து கூன் போல் நிமிரவும், அசையவும் முடியாமல் வலிக்கும். அன்றியும், சிறுவயதினருக்கும் அழல் ஐயக்குற்றங்களால் முள்ளந்தண்டு புண்ணாகி, இளகிக் கூனை வருவிக்கும்.

20 கை—1,

கைகாலெரிதல் :—இதனைக் கரவாத "சன்னி எனவும்" கூறுவர். வளிக்குற்றம் மிகுந்து மற்றக்குற்றங்களோடு சேர்ந்து கைகால்களில் தாங்கமுடியாதபடி எரிச்சல் உண்டாகும். பெண்களில் பிள்ளைப்பேறுக்குப்பின் இந்நோய்தோன்றி உடலை வற்றச் செய்யும். நீரிழிவு நோயிலும் இவ்வெரிச்சலுண்டாகும்.

21. விரல்—2.

1. கைகால் விரல் உளைதல் :—வளிக்குற்ற மிகுதியால், விரல்களில் உளைச்சலுண்டாகும்.

2. விரல் நுனிதிமிர்த்தல் :—விரல்களில் ஐய மிகுதியால் அவற்றின் நுனி உணர்ச்சியற்றுத் திமிர் உண்டாகும்.

22. குடல்—4.

1. கீழ்குடற்றெரித்தல் —இவை நான்கும் உணவின் வேறு
2. குடற்புரட்டல் .. பாட்டாலும் உடல் வன்மைக்கு
3. குடலேற்றம் .. மிகுந்த உழைப்பாலும் வளிக்
4. குடலிறங்குதல் .. குற்றம் மிகுந்து உண்டஉணவு

செரியாமலும், வாந்தியாகாமலும், கீழ்நோக்கிக் கழியாமலும் கீழ் குடலில் தங்கியிருந்து புளித்து வாயுவைப் பெருக்கி மேற் கூறிய நான்குவகை நோய்களையும் தனியாக வேனும், சேர்ந்தாகிலும் பிறப்பிக்கும்.

### 23. கீழ்வாய்—2

1. கீழ்வாய் கதித்தல்.

2. கீழ்வாய்க் காற்றுப் பரிதல் : இவ்விரண்டில் வளி அழலின் கேட்டால் கீழ்வாய் கதித்தலும், வளிக்குற்றத்தைப் பெருக்கக் கூடிய வாயுப் பொருள்களை அருந்துவதால் கீழ்வாய்க் காற்று மிகுதியாகப் பரிதலும் உண்டாகும்.

### 24. சிறு நீர்ப்பை—1.

சிறு நீரடைத்தல் : இது, வளி அழல் மிகுதியால் சிறு நீர்ப் பையிலும் நீர்ப்புழையிலும் வெப்பத்தை உண்டாக்கி சிறு நீர் வெளியாகாமல் தடைப்பட்டும், ஒருக்கால் சிறுநீர் சிறிது கழி யினும் அதிகமான எரிச்சலையும் குத்தலையுமுண்டாக்கும்.

### 25. குறி—1.

குறியகங்குத்தல் : இது வளி அழல் மிகுதியால் நீர்ப்புழை யில் தாபிதமுண்டாய் ஆண் குறியினுள் குத்தல் எரிச்சல் இவற் றையுண்டாக்கும்.

### 26. விரை—2.

1. விரை சுருங்கி உள் வாங்குதல்.

2. விரை கனத்தல் : வளிக்குற்றமிகுதியால் விரைப்பை யோடு, (பீசம்) சுருங்கி உள்வாங்கியும், வளி ஐயமிகுதியால் விரை கள் தம் அளவுக்கு மிஞ்சிக் கனத்துமிருக்கும்.

### 27. இடுப்பு—2.

1. சகனந்திமிர்தல் : 2. மருங்களைதல் : இவ்விரண்டும் வளிக்குற்றமிகுதியால் பிறப்பனவாம். இடுப்பில் திமிர்தல், உளைச்சல், குத்தல், குனிய நிமிர வொட்டாமையாகிய குறி குணங்களை விளைவிக்கும்.

### 28. தொடை—4

1. தொடை கனத்தல்.
2. தொடை மயிர் சிலிர்தல்.
3. தொடை திமிர்தல்.
4. தொடை இசித்தல் (இழுத்தல்.)

இந்நான்கும் வளி ஐயக்குற்றங்களாலுண்டாவனவாம். வளி ஐயம் மிகுதிப்படின் தொடை கனத்தல், குத்தல், குடைச்சல், அப்பால் மயிர் சிலிர்த்தல், திமிர்தல், இசித்தல், முதலிய குறி குணங்களை உண்டுபண்ணும்.

### 29. முழங்கால்—1

முழங்கால் வீங்குதல் : இதில் வளி ஐயமிகுதியால் முழங் காலில் வீக்கத்தையும், மற்றும் கீல்வாயு'' வில் காணும் குறி குணங்களும் தோன்றும்.

### 30. கால்—6

1. **கெண்டை ஏறுதல் :** பட்டினியிருத்தல், மிகு களைப்பு, மிகு கழிச்சல், மிகு உழைப்பு இவற்றில் வளிக்குற்றம் கேடடைந்து உடல் நீரை வற்றச்செய்து கெண்டைச் சதையை முறுக்குவது போல வலித்து, குரங்குவலி போல் நோகச் செய்யும்.

2. **கால் கனத்தல். :** வளி ஐயக்கலப்பால் கால் சதை கனத்து வலியை யுண்டாக்கி, எடுத்தடி வைக்கும் போதெல்லாம் கெண்டைச் சதை நோகும்.

3. **கால் தத்தல் :** வளிப்பெருக்கினால் ஏற்படக் கூடியது, நடக்கும் போது கால் தத்தும்.

4. **புறவடி தடித்தல்**
5. **புறவடி கனத்தல்,**

} இவையிரண்டும் வளிக்குற்றம் மிகுதியாலும், வளி ஐயக் கலப்பாலும், உண்டாகும் கீல் வாயு நோய்க்குத் துணையாக வருவனவாகும்.

5. **புறடு திருகல் :** வளியின் பெருக்கால் வரும் இளம்பிள்ளை வாத நோய்களிலும், சிறு பிள்ளைகளுக்குப் பிறவியிலும் வருவதுண்டு.

### 31. உடல்—7.

1. **இருத்தல்:** வளிப் பெருக்கால் உடல் மெலிந்து சோம்பலும் மனத் தளர்ச்சியும் உண்டாய் ஒரு வேலையும் செய்ய இயலாது ஓரிடத்திலேயே இருக்கச் செய்தலாம்.

2. **கிடத்தல் :** வளிக்குற்றம் கேடடைவதால் மயக்கம் தெளிவின்மை, இவையுண்டாய் மரம் போல் படுத்த இடத்திலேயே கிடக்கச் செய்தலாம்.

3. புண்போல் நோதல்.—வளிக்குற்ற மிகுதியாலுண்டாகும் நோய்களிலீடுபட்டு மெலிந்த நிலையில் உடல் முழுமையுமோ அல்லது ஒரு பகுதியையோ புண்போல் நோகச் செய்யும்.

4. குளிர்ந்து நடுங்கல்.—இது வளி சுரத்தின் ஒரு பகுதியே என்பர்.

5. ஏகங் கனத்தல்.—வளி ஐயங்கூடிக் கேடடையின் உடல் முழுமையுங் கனத்துத் தோன்றும்.

6. ஒரு புறம் திமிர்தல்.—பக்கவாதம், கரவாத சன்னி முதலியவைகளில் காணும் திமிரைப் போல் வளி நோய்களில் இடப்புறம் அல்லது வலப்புறம் திமிரை உண்டாக்கும்.

7. சோம்பித் திரியல்.—வளி மிகுதியாலுண்டான மந்த குணத்தினால் (தமோ குணத்தினால்) தூய்மைப் பண்பும் தீவிர பண்பும் (சத்துவ ரசோ குணம்) மங்கிப்போய் வேலைகள் ஒன்றிலும் செல்லாது சோம்பித் திரியச் செய்யும்.

## 32. முண்டம்—1.

முண்டம் துடித்தல்.—முண்டமானது தலையைத் தரித்த பின்னால் ஆஞ்ஞையிலிருந்து மூலாதாரம் வரையில் ஒடுங்கால் தலையைத் தடுக்கச் செய்து முண்டம் துடிக்கும். தூக்குப் போடுதல் கண்டத்திலுள்ள எலும்பை உடைத்தல் இவைகளாலும் முண்டம் துடித்து உயிர் போகும்.

## 33. நிறம்—1.

கருமை நிறம்.—வளியானது ஐம்பெரும் பொருள்களுள் விண், காற்று இவ்விரண்டிலு மடங்கும். விண்ணின் நிறம் கருமையாகையால் வளி நோய்கள் அனைத்திலும் உடல் கருமை நிறமடையும்.

## 34. செந்நீர்—2.

1. செந்நீர் தெளித்தல்.—வளி அழல் குற்றங்கள் சேர்ந்து கேடடையின் செந்நீர் கெட்டு, அதன் நிறம், எடை குறைந்து நீர்போல் தெளியும்.

2. செந்நீர் கட்டுப்படல்.—அதே வளி அழல் குற்றங்களால் வலி மிகுந்து குருதியைக் கட்டுப்படுத்தும்.

## 35 குருதிக் குழல்—1.

குருதிக் குழல் (நாடி நரம்பு, ரத்தக் குழாய்) உளைதல்.—வளி அழல் மிகுதியால் குருதி கேடடையும் சமயம் குருதிக் குழலும் உளையச் செய்யும்.

## 36. நரம்பு=3.

1. நரம்பு புடைத்தல்.
2. புடை நரம்பேறல்.
3. கடை நரம்புருகல்.

இம்மூன்று நோய்களும் உடல் வன்மை குறையுங் காலத்திலுண்டாகக் கூடியவைகளாம்.

## 37. மனம்=1.

நெஞ்சு திடுக்கெனல்.—அச்சம் திடீரென ஏற்படும்போது வளி அழல் மிகுந்து நெஞ்சு திடுக்கிடல் செய்யும். மனம் பதறும்.

ஆக உறுப்புகளில் வரும் வாத நோய்கள் எண்பது என அறியவும்.

(சி.ம.)

## 50. பக்கவாயு.

வேறு பெயர்கள் : பாரிசவாயு; பக்ஷவாயு; பக்க வாதம்; பக்ஷ வாதம்; பாரிசவாதம் என்பனவாம்.

இயல்.—இது உடலின் ஒரு பக்கத்தே உணர்ச்சியறச் செய்யும் நோயாகும் அல்லது கை, கால், விரல்கள், நா, வாய், கண் முதலியவைகளின் தொழிலைக் கெடச் செய்யும் இயல்புடைய நோய் எனவும் கூறுவர்.

### முற்குறி குணங்கள்.

உடலில் வளிக்குற்றம் கேடடைவதால் உடல் கனத்தல் எருகட்டுப்படல், அடிக்கடி கோபமிகுதல், நாடி தீவிரமாக நடத்தல், மயக்கம் உண்டாதலாகிய குறி குணங்கள் ஆரம்பத்திலுண்டாகும்.

### நோய் வரும் வழி.

வளிக் குற்றத்தைப் பெருக்கக் கூடிய உணவாதி செயல்களாலும்; மயக்கந்தரும் கள், சாராயம் முதலிய குடிவகைகளை உட்கொள்ளுதலாலும், மிகுந்த சினத்தாலும் இந்நோய் வரும். அன்றியும், இது மேக நோய்களுக்கும், தமரக நோய்களுக்கும் துணை நோயாக வருவதுண்டு.

### பிற்குறி குணங்கள்.

பெரும்பான்மையும் ஒருவர் தம் தொழிலை வழக்கம் போல் புரிந்து வரும்போதே முற்குறி குணங்கள் ஒன்றுமில்லாமலே திடீரென மயக்கமுற்றுக் கீழே விழச் செய்து இந்நோய் பிறப்பதுண்டு அல்லது ஒருவன் உழைத்து விட்டுத் தூங்குகையில் தன்னை அறியாமலே இந்நோய் பிறந்து காலையில் எழுந்திருக்கும்போது இந்நோயைக் கவனிப்பர். மற்றும் சிலருக்குச் சிறுகச் சிறுகக் கைகால்களில் திமிர்த்தல் போலும், தத்துவது போலும் காட்டி நோயின் குறிகள் நாளுக்கு நாள் பெருத்துக்கொண்டே வந்து இந்நோயினை வருவிக்கும்.

இந்நோய் சிறு குழந்தை முதல் வயது முதிர்ந்தோர் வரையில் வரக்கூடியது. சிறு குழந்தைகளில் பெருஞ் சுரங்காய்ந்து, வலி கண்டு ஒரு கால் கை அல்லது இரண்டு கால்கள் மட்டிலும் செயலற்றுப்போகும். இதனை இளம்பிள்ளை வாதமெனவும் கூறுவர்.

நடு வயதினர்களில் வரும் வலி (இசிவு), மேக நோய், தமரக நோய் முதலிய நோய்களுக்குத் துணை நோயாகவும் இந்நோய் வருவதுண்டு.

இவ்வகைப்பட்ட நோய்களில் பெரும்பாலும் கால், கை, வாய், கண், நா இவைகள் தாக்கப்படினும் இவற்றில் காணும் குறி குணங்கள் ஒரேமாதிரியாகயிருப்பதில்லை.

சிலர் திடீரென மயக்க மடைந்து தலை சுற்றிக் கீழே விழுந்து பேச்சு மூச்சற்றுக் கிடந்து எழுந்தவுடன் ஒரு காலும், கையும், அல்லது இருகால்களும் உபயோகிக்க முடியாத நிலையிலிருப்பர். அவை முற்றிலும் தொழிலற்றுப்போம். சிலருக்கு வாய் கோணலாகி நாவும் பேச முடியாத நிலையும் ஏற்படுவதுண்டு. கண் இமையும் சரியான படி மூட முடியாமலும், வாயினின்றும் உமிழ்நீர் வடிதலுமுண்டு. நாட்கள் பல செல்லின் தாக்கப்பட்ட கால், கைகள் சூம்பிப் போவதுமுண்டு. முட்டிகள் கரடுகட்டி வாழ்நாள் மட்டும் அசைக்க முடியாதபடி நிலைத்து விடுவதுமுண்டு. பெண்கள் பிள்ளை பெற்ற பின் வலிப்பு நோய் போல் கண்டு அந்நோய்க்குத் துணையாக வளி நோயுண்டாகிக் கைகால்களைத் தாக்குவதுமுண்டு.

இப்பக்கவாத நோயில் வாயும் கண்ணும் வலது அல்லது இடதுபுறமாகக் கோணிக்கொள்ளுவதுமுண்டு. நோய்வாய்ப்பட்ட கண், இமை முழுதும் மூட முடியாமலுமிருக்கும்.

குறிப்பு.—மூலாதார நாடிகளாகிய இடைகலை, பிங்கலை, சுழு முனை என்பவற்றுள் முதலிரண்டும் காற் பெருவிரலிலிருந்து புறப்பட்டுக் கத்திரிக்கோல் மாறலாக எதிர்ப் பக்கத்து மூளையில்

போய்ச் சேரும். இம்மாறுதல் காரணமாகப் பக்கவாயு நோயில் இடப்பக்க உறுப்புகள் தாக்கப்படின் மூளை சம்பந்தமாயுள்ள வலப்பக்கத்து நாடியும்; வலப்பக்கத்து உறுப்புகள் தாக்கப்படின் மூளையிலுள்ள இடப்பக்கத்து நாடியும் கேடடையும் என்பது தெளிவாகும்.

பக்கவாதம் '' பட்சவாதம் '' என்னும் '' பாரிச வாயு ''
பற்றி யூகிமுனி கூறியுள்ள குறி குணங்கள்:

பக்கவாதம்,

'' உண்மையா யுடம்பெல்லாம் வாயுவாகி
உயர்கின்ற நாடியது அசைவுமின்றி,
கண்மையாய்க் காயமீதினிலே,யேறிக்
கசகியே யிழிந்துமே வலித்துக் காணும்,
பண்மையாய்ப் பக்கத்திலிசிவு முண்டாய்ப்
பாரித்துப் பணைக் கையுங் காலுங் கோணும்,
வெண்மை யாயுடம்பெங்கும் வியர்வை காணும்
மெலிவு பக்க வாதத்தின் விவரந்தானே.''

பக்கவாதம் அல்லது (பக்ஷ வாதம்).

'' தானான கால் கோணிச் செத்தாற் போலத்
தாக்கான தரைதனிலே நடக்கொணாது,
கானான கைகளொன்றும் பிடி கொடாது
கனமான வுணர்ச்சியின்றிக் கைகள் சோரும்.
மானான மயிர்க் கூச் சுந்திமிர்ப் புண்டாகும்
வாய்தானுங் கோணியே தண்ணீர் வீழும்
பேனான பித்தம் போலழன்று காணும்
பிரிவு பட்ச வாதத்தின் பெற்றியாமே.''
(யூகி சிந்தாமணி.)

(இதன் பொருள்)

'' பக்கவாத'' நோயில் வாயுவானது உடம்பெல்லாம் பெருகி முக் குற்றங்களையும் கேடடையச் செய்து அசைவற்றுத் தேகத்தில் இசிவுடன் வலியுமுண்டாகும். இசிவானது தேகத்தில் ஒரு பக்கமாக உண்டாய் அப்பக்கத்துக் கையுங்காலும் கோணும். உடம்பெங்கும் வியர்வையுண்டாம். உடல் வெளுக்கும், மெலிவு காணும் என்பதாம்.

" **பக்கவாதம்** " என்னும் நோயில் செத்தவனுடைய கால் போல் கால் துவண்டு அசைக்க முடியாமலும், நடக்க முடியாமலும், கைகள் ஒன்றையும் பிடிக்க முடியாமலும் உணர்ச்சியின்றிச் சோரும் அன்றியும், மயிர்க்கூச்செறிதல், உடல் திமிர் கொள்ளுதல், வாய் கோணி உமிழ் நீர் தானாகவே வடிதல், உடல் பித்தம் பெருகியது போல் வெப்பமடைதல் முதலிய குறி குணங்களைத் தோற்று விக்கும் என்பதாம்.

குறிப்பு.—இந்நோயையே இங்கு " பாரிசவாயு " என்னும் பெயரால் (பாரிசவாயு என்ற தலைப்பில்) சித்த மருத்துவத்தில் கூறிய பிரகாரம் விளக்கியுள்ளோம்.

முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.—உணவாதி செயல்களால் வளிக்குற்றம் மிகுந்து அழல் அல்லது ஐயம் இவற்றையும் கேடடையச் செய்து, கீழ் நோக்குங் காலைத் தூண்டி அதன் இயற்கைத் தொழிலைக் கேடடையைச் செய்வதால் எருவையும், சிறு நீரையும் கட்டுப்படுத்தியும், மேல் நோக்குங் காலைக் கேடடையச் செய்வதால் தமரகம், மார்பு, வாய், கண் இவைகளைத் தாக்குவதும்; பரவுகால் கேடடைவதால், குருதி ஓட்டத்தைக் கெடுத்து கை, கால்களின் உணர்வு அழிதலும்; இரசம் இரத்தம் இவற்றைச் சரியாகப் பரவ வொட்டாமலும்; உறுப்புகளைச் சூம்பச் செய்வதும்; மயக்கத்தை யுண்டாக்குவதும்; நடுக்கால் தூண்டப் பட்டுக் கேடடைவதால் உணவு செரியாமை, பக்க சூலை, வயிற்றுப் நோய், வயிற்று வலி முதலியவற்றையுமெழச் செய்யும்.

மிகுந்த குற்றங்களின் அளவாக உடற்கட்டுகளில் பெரிதும் குருதி, தசை, நரம்பு, மூளை இவைகள் தத்தம் தொழிலில் கேடடையும்.

நாடி நடை.

1 "கண்டாயோ சிலேற்பனத்தில் வாதநாடி
கலந்திடுகில் வயிறு பொருமல் கனத்த வீக்கம்,
உண்டாலோ ஓங்கார சத்தி விக்கல்
உறுதிரட்சி வாய்வு வலிசன்னி தோஷம்,
விண்டாலே இளைப்பிருமல் சோகைபாண்டு
விடபாகம் விடசூலை பக்க வாதம்,
திண்டாடு நாசிகாபீடங் கக்கல்
சிரநோய்கள் பலவும் வந்து சிக்குந்தானே."

2. "இருக்கு மந்த வாதத்தில் சீதஞ் சேர்ந்தால்
இளைப்பிருமல் விஷ சன்னி தோடம் வீச்சு,
மருக்கின்ற குளிர் காய்ச்சல் விரண தோடம்
வாந்தி யெடுத்திடு முளைவு மயக்கஞ் சோர்வு,
ஒருக்கின்ற மலபந்தம் பொருமல் வீக்கம்
உள் வீச்சு சூலையொடு பாண்டுரோகம்,
தருக்கின்ற தனுர்வாதம் பக்க வாதம்,
சார்ந்து வெகுபிணி பலவுந் தழைக்கும் பாரே."

3. "கடக முதல் துலாம் வரையு வாதமாகும்
கண்ணாடியைப் பசியு மதுவேயாகும்."

(சதக நாடி.)

என்பதினால் ஐயவளிக் கலப்பிலும், வளி மிகுதியுடன் சீதஞ் சேரி னும் பக்க வாதம், தனுர்வாதம் போன்ற நோய்கள் தோன்றும் என்பதும்; கடக முதல் துலாம் மாதங்கள் வளிக் குற்றமிகுங் காலம் என்பதையும் அறிகிறோம்.

## தீராக்குறி குணங்கள்.

"பக்க வாயு" நோய் பெரும்பான்மையும் பெண்களுக்கு இடதுபக்கமும், ஆண்களுக்கு வலது பக்கமும் வரின் தீராதெனக் கூறுவர். அத்துடன் பேச்சு யில்லாதிருப்பின் எளிதில் தீராவாம். அன்றியும் உடல் மெலிந்து நோயுற்ற கைகால்கள் சூம்பிக் காணினும், நோயில் அடிக்கடி வலி காணினும், பசியின்மை, பெருமூச்செறிதல், உடல் வீங்கிப் போதல், உறுப்புகள் உணர்ச்சியற்றுப் போதல், மூட்டு நழுவல், கைகால்கள் தளர்ந்து காணல், கைகால் நடுங்குதலாகிய குறி குணங்கள் காணின் எளிதில் தீராவாம்.

## 51. கீல் வாயு.

வேறு பெயர்கள்: சந்து வலி; மூட்டு வலி; மேக சூலை; முடக்கு வாயு; ஆம வாதம் என்பனவாம்.

இயல்.—கீல்கள் வளிக்குற்றம் கூடி நோயையுண்டாக்குவதால் "கீல் வாயு" வெனவும் மூட்டுக்களில் நோயுண்டாவதால் "மூட்டு வலி" எனவும்; மேகப்பிணிக்குத் தொடர்பாக வருவதால் "மேக சூலை" எனவும்; பூட்டுக்களை முடக்கி வைப்பதால், "முடக்கு வாயு" எனவும் வயிற்றில் மந்தமுண்டாக்கிப் புளித்து ஐயத்தைப்பெருக்கி இந்நோயுண்டாகுமாகையால் "ஆம வாதம்" எனவும் பெயர்களைப் பெற்றது.

கீல்களில் வீக்கம், குத்தல், நோதல், நீட்டமடக்கமுடியாமை, அசைக்க முடியாமை ஆகிய தாபிதக்குறிகுணங்களோடு படுக்கையிலிருந்தி, ஐயமுங்கூடி சுரம் முதலியவற்றையுண்டாக்கும் இயல்புடைய நோயாம்.

(மேற்கோள்)

" வளியுமையுந் தன்னிலைகெட்டு
வலியுடன் வீக்கச்சுரமுங்காய்ந்து,
மூட்டுகடோறும் முடுக்கியே நொந்து
மூட்டுக்கடன்னின் நீரும் சுரந்து,
தாங்கொணா வலியுடன் நொந்திடுமம்மே."

(சபாபதி கையேடு.)

என்பதாலறிக !

நோய் எண்.

" கீல்வாயு " பத்து வகை என்பர். அவையாவன :—

1. வளிக்கீல்வாயு,
2. தீக்கீல்வாயு,
3. ஐயக்கீல்வாயு,
4. வளி தீக்கீல்வாயு,
5. வளி ஐயக்கீல்வாயு,
6. தீவளிக்கீல்வாயு,
7. தீ ஐயக்கீல்வாயு,
8. ஐயவளிக்கீல்வாயு,
9. ஐயதீக்கீல் வாயு,
10. முக்குற்றக்கீல்வாயு,

என்பனவாம்.

நோய் வரும் வழி.

வளிக் குற்றத்தைப் பெருக்கக் கூடிய உணவாதி செயல்களாலும் குளிர்ச்சியான பொருட்களை உண்பதாலும், குளிர்காற்றிலீடுபடல், மழையில் நனைதல், பனியில் படுத்திருத்தல், உயர்ந்த மலையில் தங்கியிருத்தலாகிய ஐயப்பெருக்கையுண்டாக்கும் வகைகளாலும் வளி ஐயமாகி இந் நோய் பிறக்கும். அன்றியும் பெண்கள் கூட்டால் விளையும் சீழ் பிரமியமாகிய வெள்ளை நோய் அல்லது சீழ் மேக நோய்களுக்குத் தொடர்பு நோயாகவும், தாய்தந்தையரின் (கருப்பம்) வழியாகவும் வருவதுண்டு.

(மேற்கோள்.)

" வளிதருகாய் கிழங்கு வரைவிலா தயிலல் கோழை
முளிதயிர் போன் மிகுக்கு முறையிலாவுண்டி கோடல்
குளிர்தருவளியிற்றேகங்குனிப்புற வுலவல் பெண்டிர்
களிதரு முயக்கம் பெற்றோர் கடி செயல் கருவியாமால்"

(சபாபதி கையேடு.)

என்பதாலறிக !

முற்குறி குணங்கள்.

இந்நோய் பிறப்பதற்கு முற்குறியாக மூக்கு அடைப்பு, மூக்கில் நீர்ப்பாய்தல், தொண்டைக்கட்டல், சிறு சுரம், கைகால்கள் நோதல், குத்தல், குடைதல் என்னும் முற்குறி குணங்களைக் காட்டும்.

"கீல்வாயு" நோய்ப்பிரிவுகள் ஒவ்வொன்றின் குறி குணங்கள்.

1. வளிக்கீல் வாயு.

மேற்கூறிய முற்குறி குணங்களைக்காட்டித் தொண்டையில் வலி, மார்பு நோய், கீல்கள் சிவத்தல், வீங்குதல், நாளுக்கு நாள் வீக்கம் பெருத்துக்கொண்டு வரல், குத்தல், குடைதல், நீட்டவும் மடக்கவும் அசைக்கவும் முடியாமை முதலிய குறி குணங்களை யுண்டாக்கிப் படுக்கையில் கிடத்தும். இத்தியாதி துன்பங்களுக்கேற்ப சுரமும் உண்டாகும். வேதனை தாங்கமுடியாமல் அழுதலுமுண்டு. பெரும்பான்மையும் கீல்வாயு நோய் பெரிய முட்டிகளாகிய முழங்கால், கணுக்கால், இடுப்பு, சுந்து, மணிக்கட்டு, முழங்கை, தோள் இவற்றிலுண்டாகும்.

நோய் குறையக் குறைய சுரமும் குறைந்து வரும். ஒரு பக்கம் கீல்கள் நோய் வசப்பட்டுக் குணமாகிக் கொண்டு வரும்போது, புதியதாய் மற்றையக் கீல்களில் சிவந்து, நொந்து வீங்கத் தொடங்கும். அப்போது சுரமும் உண்டாகும். கீல்களில் ஒன்றைவிட்டு மற்றொன்று ஓடி ஓடி வீங்கி தாங்கொணாத் துன்பங்களை விளைவிக்கும். கீல்களை ஒவ்வொரு முறை தாக்கும் போதும் சுரமுண்டாகும். இத்தகைய செயல்கள் " வளிக்கீல் வாயு " ஒன்றுக்கே உரியதாகும்.

நோய் வலுப்படின் பெருமூச்சு அயர்வு, பிசுபிசுத்த வியர்வை, நாடிதளர்ல், அடிக்கடி மயக்கம், மார்பு துடித்தல், உடற் சோர்வு முதலிய குறிகுணங்களையும் தொடரச் செய்யும்.

அன்றியும், இந்நோய் வளிக் குற்றத்தினளவாய் எழுதலால், இதே காரணத்தால் " தமரகமும் " கேடடைந்து " தமரக வாயு " என்னும் நோயையும் பிறப்பிக்கும். தமரக நோயால் குருதியும் கேடடைந்து, உடல் வன்மை குறைந்து, உடல் வெளுத்துப்போம். குருதி தங்குமிடமெல்லாம், குறிப்பாக முழங்கால் முட்டி, முழங்கை முட்டி இவ்விடங்களில் கழலையைப் போலக் கட்டிகள் தோன்றுவதுமுண்டு.

எரு தீய்ந்து கருத்துக் காணும்.
சிறு நீர் சுருங்கிச் சிவந்து காணும்.

(மேற்கோள்.)

" வலிக்குத்தல் வீக்கங்காணும்
வாய்த்தொண்டை வறட்சி காய்ச்சல்
தலை வலி மார்துடிப்புத்
தாங்கொணா வலி வீக்கந்தான்
நிலவு காற்கணுக் குறங்கு
நீடு தோள் முழங்கைக் காற்காம்
மலக் குடற்கட்டு வேர்வை
வாதக்கீல் வாயு விதாமே."

(சபாபதி கையேடு.)

என்பதாலறிக !

2. அழல் கீல் வாயு

" பித்தக்கீல் வாய்வு தன்னாற்
பிறங்கு கீன் முட்டு வீங்கி
சித்தர் செய் மருந்து வத்துஞ்
சீரபடாத் தன்மைத்தாகித்
தத்தறு காய்ச்சல் கண்டு
சால வேதனைதான் தந்தே
மெத்தறு சிகிச்சை தன்னால்
மென்மெல நீங்குமப்பா. '

(சபாபதி கையேடு.)

என்பதினால் அழல் கீல்வாயு நோயில், வளி, அழல் குற்றங்களைத் தூண்டக் கூடிய உணவாதி செயல்களால் முட்டிகளிலுண்டாகும் வீக்கம் நாளுக்கு நாள் பெருத்துக்கொண்டே வந்து, தீக்குற்ற

மிகுதியால் கீல்களின் பசை வறண்டு, பசையற்றுக் கீல்அசையும் போதெல்லாம் நட்டையுடைதலும் " கலுக் " " கலுக் " என்ற தோர் ஒலி உண்டாவதுமாய் இருக்கும். சிலவேளைகளில் கீல் களிலுள்ள பொருத்துகள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டு ஒரு கழியைப்போல மடக்க முடியாமலே நின்றுவிடுவதுமுண்டு. சிறு சுரமுங்காயும்.

### 3. ஐயக் கீல் வாயு.

கருதருங் கபக்கில் வாயு
  கண்டிடின் உடலிளைக்கும்,
உருமெலிவாக்குங் கொள்ளும்
  உண்டியைச் சுருக்கு மின்பந்
தருதுயில் நீங்கு முட்டிற்
  றாங்கொணா வலுவையாக்கும்,
இருமலே விக்கல் வாந்தி,
  சோபை பாண்டெழுப்பும் பாரே. "

(சபாபதி கையேடு.)

என்பதினால் வளி ஐயப்பெருக்காலுண்டாகும் இந்நோயில் மாலை வேளைகளில் உடல் குளிர்ந்து சுரமுண்டாகும். உடல் நாளுக்கு நாள் இளைக்கச் செய்யும். கீல்களில் தாபிதமுண்டாய் வீங்கிப் புண்பட்டுச் சீழ் பிடித்து எலும்பைத் துளைத்து அழுகச் செய்யும் அல்லது முட்டி வீங்கி நீர் கோத்து நரித்தலை வாயு போல வீங்கும். நீட்டவும் மடக்கவும் முடியாமை, குத்தல், குடைதல், நோதல் இவை உண்டாகும். அன்றியும் சுரம், இரு மல், இரைப்பு, விக்கல், வாந்தி, உடல் வெளுத்தல் என்னும் குறிகுணங்களையும் காட்டும். தக்க மருத்துவம் புரியாவிடின் ஐயக் குற்றத்தால் துன்பங்கள் அதிகமாகி நோயினனைக் கொல்லவும் செய்யும்.

பெரும்பாலும் ஐயக்கீல்வாயு முதுகுத்தண்டு, இடுப்பு, தொடைச் சந்திடுக்கு, முழங்காலிவற்றிலுண்டாகும்.

### 4. வளி அழல் கீல் வாயு.

" வாதபித்தக் கீல் வாயுவின்
  வருங்குறிச் சாற்றக் கேளாய்,
ஏதமார் மந்த மேப்பம்
  இரைச்சலும் வயிற்றிற்காணு

ஓதருங்குத்தல் வீக்கம்
ஒய்தலில் எரிச்சலுண்டாம்,
காதறு முறக்கமின்மை,
காய்ச்சலுங்காணுங்கண்டாய்.''
(சபாபதி கையேடு.)

என்பதினால் இது, பெரும்பான்மையும் வளி அழல் குற்றங்கள் மிகுதியாகக் கூடியதான ஆட்டுக்கறி, மீன், முட்டை, உருளைக் கிழங்கு, சுறாமீன் முதலிய பண்டங்களை மிகுதியாகப் புசித்தலாலும், கள், சாராயம் இவற்றை அதிகம் குடித்தலாலும், உண்ட உணவுக்குத் தகுந்த உழைப்பில்லாமையாலும் வரும் நோயாகும்.

இதில், உணவு செரியாமல் முதலில் புளியேப்பமுண்டாதல், அடிக்கடி, காற்றுப்பரிதல், மலச்சிக்கல், உடல் பெருத்தல் முதலிய குறி குணங்களைக் காட்டி மணிக்கட்டு, கணுக்கால், விரல்கள் இவைகளின் கீல்கள் சிவந்து, எரிவும், வலியையுமுண்டாக்கும். இந்நோய் மருத்துவத்திற் கடங்கினும் மீண்டும் திரும்பத் திரும்ப வருவதுமாயிருக்கும், அக்கீல் கரடு கட்டி நீட்டவும், நன்றாய் மடக்கவும் முடியாமல் நிலைத்து நிற்கவும் செய்யும். தூக்கமின்மை, படுக்கையிற் புரளல் சிறு சுரம் இவை நோயுள்ளபோது காணும்.

### 5. வளி ஐயக் கீல் வாயு.

1. '' ஐயினை விலைக்கு முண்டி
யயிறலே கூதிர்க் காற்று
மெய்யினையலைக்கு மாங்கண்
மேவலோடோதஞ்சார்ந்த
வையத்தின் உறங்கன் மாரி
பனியினான் வாட்ட மெய்தல்
மெய்யயர்வுறவுழைத்தல்
கவலையான் மேவு மிந்நோய்.''

2. ''வையம் வாதக் கபக்கீல்
வாயுவான் வலி மிகுந்தே
உயங்கு நீர் கோத்து கீல்கள்
ஓரியின் தலைபோற் காணும்

நயங்கொள்ள முடக்கல் நீட்டல்
நண்ணிடாமெய்யுங்காயும்,
மயக்குறு முறக்கமின்னாம்
மன்னிய நெரிக்கட்டாமே.''

3. ''உடலது வெதும்பிக் கைகால்
உடலது கடுத்து நொந்து
கடலுதாங்கால் கரங்கள்
கனத்தாற்போலுயர்ந்துகாணும்
சடமது விழுந்ததாகுஞ்
சலங்கெட்டு தோடமுண்டாம்
முடமதாங் கைகால்தானு
முடங்கின வாதமாமே.''

(சபாபதி கையேடு : குறியடையாள நாடி).

என்பதினால், இந்நோயில் வளி ஐயக் குற்றங்களை மிகுதியாக்கக் கூடிய உணவு முதலியவைகளாலும், குளிர்காற்று, மழை, பனி இவற்றில் திரிதலாலும், ஓதம் உள்ளயிடங்களில் படுத்துத் தூங்குவதாலும் அதிக உழைப்பினாலும், மனக்கவலையாலும் இந்நோய் பிறக்குமென்பர்.

வளி ஐயக் குற்றங்கள் கீல்களில் தங்கி, அங்கு இயற்கையாகவுள்ள ஐயத்தைப் பெருக்கி, நீரைச் சுரப்பிக்கச் செய்யும். நீர் கோர்த்து கீல்கள் வீங்கும். வீங்கிய முட்டியில் வளிக் குற்றம் மிகுதியால் வலி, குத்தல், குடைதல், இவையுண்டாகும். கைகால்களை நீட்ட மடக்க முடியாமை, தூக்கமின்மை, உடல் நாளுக்கு நாள் இளைத்தல், அக்குள் தொடை இடுக்கு இவற்றில், கழலைபோல் நெரி கட்டிக்கொள்வதும் : வீங்கிய பக்கம் கைகால்கள் சூம்பி மெலிவடைந்து செயலற்றுப்போவதுமுண்டு. கீல் வீக்கம் '' நரியின் தலை '' போற் தோற்றமளிக்கும் என்கிறார்.

6. அழல் வளிக் கீல் வாயு.

''வெயிலிடைத்திரிதல் பித்த
மிகுவுண வருந்தலுள்ளம்,
பயிறு கவலை யாதிப்
புண்பினால் பித்தவாதம்

கயிலுறு வாய்வு தோன்றிக்
கைப்புடன் மயக்கம் வாந்தி
இயலுறுபல்லிற் செந்நீர்
இறங்கல்நால் நோக்குங் கொள்ளும்.''

(சபாபதி கையேடு).

என்பதினால், இந்நோயை அழல் வளிக்குற்றங்களைப் பெருக்கக் கூடியவாறு வெய்யிலில் திரிதல், புளிப்பு, துவர்ப்புச் சுவையுள்ள பொருள்களை மிகுதியாகப் புசித்தல் என்பவைகளாலும்; மனக் கவலையாலும், அழல் வளிக் குற்றங்கள் மிகுந்து, பரவுகால், மேல் நோக்குங்கால் இவற்றைத் தூண்டி வாய்கைப்பு, புளியேப்பம், மயக்கம், குருதி வாந்தி, ஈறுகளினின்று குருதி வடிதல் அல்லது குருதிக்கழிச்சல் என்னும் குறிக் குணங்களைக் காட்டி, பிறகு கணுக்கால் வீங்கும். வீங்கிய கணுக்கால் சிவந்து நீட்டவும் மடக்கவும் முடியாமல், மிகுதியான வலி, குத்தல், குடைச்சல், நோதலுமாயிருக்கும்.

### 7. அழல் ஐயக் கீல் வாயு.

''மித மிலாக் கலவியையை
மிகு விக்குமுண்டிபித்தக்
கதமுறு செயலிவற்றிற்
காண்பித்தக் கபக்கீல்வாயு
இதமறு மயக்கம் வாந்தி
எரி சுரந்தலை நோய் வீக்கம்
மதகரி நனயின் மார்பு
துடிப்புடன் எரிவுஞ்செய்யும்.''

(சபாபதி கையேடு).

என்பதினால், இந்நோயில் தீ ஐயப்பெருக்கை விளைவிக்கக்கூடிய உணவாதி செயல்களாலும், கலவியாலுண்டான மேகப்பிணியாலும் இந்நோயுண்டாகும். இதில் தலைநோய், வாந்தி, வாய் குமட்டல், மயக்கம், உடல் நோதல், பெருஞ்சுரம், முழங்கால் முழங்கைகளின் கீல்களில் வீக்கங்கண்டு அக்கீல்களை நீட்டவும் மடக்கவு முடியாமை, குத்தல் குடைதல், வலி முதலியவற்றையுமுண்டாக்கும்.

## 8. ஐயவளிக் கீல் வாயு.

1. '' ஐவளிப் பெருக்கு முண்டி
அணங்குடன் கலவி மற்று
ஐவளி வினை முழக்க
அளவிலா மது வருந்தல்
மெய்யுறு மேகவாதக்
கோழையின் மிகுதி காணல்
ஐவகைக் கப வாதக்கீல்
வாயுவின் அறி கூறாமல்.''

2. ''நரித்தலை வாத நரம்புகள்
வாய்வு கோபித் தொன்றாய்
அரிந்திடுந்தலை மேல் கைகால்
அங்கமொடுவளைந்து வெம்பி
முரித்தது இறங்கி வந்து
முழங்கால் கைகால் கடுக்கும்
நரித்தலை வாதமென்று
நவின்றனர் முனிவர்தாமே.''

(சபாபதி கையேடு குறியடையாள நாடி).

என்பதினால், இந்நோயில், ஐய வளிக் குற்றங்களைப் பெருக்கக் கூடிய உணவாதி செயல்களாலும், பெரும்பான்மையும் கள் குடிப்பதாலும், கலவியிலதிகம் ஈடுபடுவதாலும், உண்டான ஐயமும், வாயுவும் பெருங்கீல்களாகிய முட்டிகளில் தங்கி, அம்முட்டிகள் பெருத்து நீர்க்கோர்த்து நோய் பிறக்கும். அப்போது குளிர் சுரம், உடல் நோதல், முட்டிகள் நோதல் சிவந்து வீங்குதல் இவையுண்டாகும். அவ்வீக்கம் எளிதில் நீங்காமல் கீல்களினுட் புறத்தில் இடைவெளி பூராவும், நீர் கோர்த்து அதிகமாகப் பெருத்துக்கொண்டே வரும். அக்கீல் அசைக்கவும், நீட்டவும், மடக்கவும் முடியாதபடியிருப்பதோடு தாங்கொணா வலியையும் உண்டு பண்ணும். இதனையும் 'நரித்தலை வாதம் என்றழைப்பர்.

## 9. ஐயழல் கீல் வாயு (ஐய தீக் கீல் வாயு).

''ஐயினைப் பெருக்கு முண்டி
யயிலவாற்றிக் குளிருங்காற்றால்,
மெய்யுறு கோழை மிக்கு
மிகுவலி தொண்டை கட்டல்

ஐயுறு காய்ச்சல் வாந்தி
அயர்வுடன் இருமல் வீக்கம்
செய்யுங்கீல் மடக்கல் நீட்டல்
செய்திடாத்துயருண்டாமே.''

(சபாபதி கையேடு).

என்பதினால், இந் நோயில் ஏற்கனவே தீக்குற்றம் மிகுந்திருக்கும் நிலையில் குளிர்ச்சியான உணவு, குளிர் காற்று முதலியவற்றால் ஐயக் குற்றமும் மிகுந்து மூக்கில்நீர்பாய்தல்தொண்டைகட்டி, தும்மல், இருமல், வாந்தி, உடம்பு நோதல், மிகுந்த சுரங்காய்தலாகிய குறிகுணங்களைக் காட்டிக் கீல்களில், குத்தல், வலி, வீக்கம், நீட்டவும் மடக்கவும் முடியாமையாகிய குறி குணங்களையும் பிறப்பிக்கும்.

10. முக்குற்றக் கீல் வாயு.

''மிக்குற வியர்த்தல் மூச்சு
மேலிடல் தலை கிறுத்தல்
மக்குறு மயக்கந் தோன்றல்
வாந்தியே வாய்பிதற்றல்,
பொக்குறு மலநீர் கட்டல்
பொருமிய வீக்கங்காணல்
முக்குற்றக் கீலின் வாயு
முகிழ்த்திடுங் குறிகளாமே''.

(சபாபதி கையேடு).

என்பதினால், இந்நோயில் முக்குற்றங்களும் கேடடைந்து பிறக்கும் நோயாதலால் முதலில் முட்டிகள் வீங்கி மற்றைய கீல் வாயுக்களைப் போல் சுரம், வலி, குத்தல், குடைதல், கீல்கள் அசைக்க முடியாமை முதலிய குறி குணங்களால் நெடுநாள்களாகத் துன்புறுத்தி, ஐயத்தைப் பிறப்பித்து முட்டி வீக்கம் மீண்டும் அதிக அளவில் பெருத்துச் சீழ்கோர்த்து அச் சீழ் முட்டிக்குக் கீழும் மேலும் பரவி, மீளா ஐயத்தையும்,முப்பிணி (சன்னி) குறி குணங்கள் அனைத்தையும் தோன்றச் செய்யும் நிலையில் இந் நோய் பிறக்கும். தக்க மருத்துவம் புரியாவிடின் கொன்றுவிடும்.

## முக்குற்ற முதலிய வேறுபாடுகள்.

"வளி மிகுவபான வியான
வாயுக்களதிகரிக்கும்
இளமிக மல நீர்க்கட்டும்
இயம்பிய வயானன் செய்யும்
விளி விலாவியானன் கீலன்
விளங்குறு புழைகடோறும்
ஒளியுறு குற்ற மெல்லா
மொன்றிலென்றுலவச் செய்யும்."

(சபாபதி கையேடு).

என்பதினால், தன்செயல், புறசெயல், நிலத்திலெழும் தட்ப வெப்பங்கள் ஆகியவற்றால் வளிக்குற்றம் மிகுந்து ஐயக்குற்றத் தோடு கலப்புற்று வளியின் தொழில் செய்யுங்கால்களாகிய பரவு கால், கீழ் நோக்குங்கால், மேல் நோக்குங்கால், நடுக்கால். இவை களைக் கேடடையச் செய்து, முதலில் வளியும் ஐயமுங்கூடி, கீல்களில் வலி, வீக்கம், நீர்க்கோர்த்தல், குத்தல், குடைதல், கீல்களை அசைக்கமுடியாமை, சுரம் ஆகிய இக்குறி குணங்களை யுண்டாக்கி அப்பால் கீல்வாயு நோயை ஓரிடத்திலிருந்து மற்றொரு கீலுக்கு மாற்றுதலும் ஏற்படும். எருவும் (மலமும்) கட்டுப்படும்.

கேடடையும் குற்றங்களைப் பொருத்தும், கால்களைப் பொருத்தும் குறி குணங்கள் காணப்படும். உடற்றாதுக்களில் முதலில் இரசமும், குருதியும் கேடடையும். ஆதலால் பசியின்மை, உடல் வெளுத்தல், உடல் ஊதல்முதலிய நோய்களைத் தொடரச் செய்யும். ஐயக்குற்றம் மிகுதியாயின் இந் நோயில் கொடிய இருமல் நோயையும், ஐய சுரத்தையும், ஐய வளி சுரத்தையும் பிறப்பித்து நோயினன் பிழைப்பது அரிதான நிலைமை மேற்படக் கூடும். நோய் நீடித்திருப்பின் உடல் வன்மையும் கெடும். தமரக நோயுமுண்டாகுமென்பர்.

### நாடிநடை.

1. "வாதத்தில் சேதுமமாகில் வலியொடு வீக்கமுண்டாம்
பேதித்துத் தலையிடித்துப் பிணங்கிய குணங்கள்வேறாய்
தீதுற்றமெய் வெளுத்துத் திடமுடனசனஞ் செல்லா
பேதித்து நாவுபேசும் பெருகவே வீக்கமுண்டாம்"

2. '' வாட்டிடுஞ் சேத்துமத்தில் வந்திடும் வாதமாகில்
நாட்டிய கால்கள்போல நரம்பெல்லாம் வலிந்துநிற்கும்
கூட்டிய பிடரிதானுங் குன்றவே வலிக்குமாகில்
நாட்டிய விழியுமேலாய் நாவது குழறுந்தானே.'
(அகத்தியர் நாடி.)

3 '' அறிந்துபார் வாதமே தனித்ததானால்
அன்னம்போல் நடக்குமப்பா நாடிபாரு,
சரிந்திடவே கால்முடக்கும் போதுக்காட்டும்
தரியாது அன்னத்தை யுண்ணொட்டாது,
எரியாது தாகமுண்டால் சன்னியாகும்
ஈயாது சிவன்பற்பம் அஞ்சவேண்டாம்
குறியாக நாளெட்டில் குணமுமாகும்
கூகூவென் றலையாதே குறித்துப்பாரே.''
(அ-ரத்தினச் சுருக்கம்.)

4 '' திருத்தமாம் வாதத்தோடே
தீங்கொடு பித்தஞ்சேரில்,,
பொருத்து கள்தோறும்நொந்து
போதவே பிடிக்கும் சூலை
பெருத்திட வாயுகொள்ளும்
பேசிய வயிறேபோகும்
கருத்தினாலறிந்து நன்றாய்க்
கண்டிடாய் மனிதர்க்கெல்லாம்.''
(குணவாகடம்—நோயின் சாரம்.)

5 '' காணப்பா வாத மீறல்
கால் கைகள் பொருத்து நோகும்,
பூணப்பா குடல் புரட்டு மலஞ்சலம் பொருமிக் கட்டும்
ஊணப்பா குளிருங் காய்ச்சல்
உடம்பெல்லாங் குத்தும் வாய்வு
வீணப்பா குதமிறுக்கும்
வேர்வையும் வேர்க்குந்தானே.''
(காவிய நாடி.)

6 "சொல்லிய வையத்தோடு
பித்தமுங் கூடிற்றானால்,
வல்லியம் போலக் குத்தம்
மைந்தனே எலும்புதோறும்
மெல்லிய சரீரம் நோகும்.
வரிசையாய்ச் சுரமுங்காணும்,
மெல்லிய தனுத்தான் வற்றும்
விடங்கக்கு மிருமுந்தானே." (காவிய நாடி.)

7 "வாதமெனும் நாடியது தோன்றில்
சீதமந்தமொடு வயிறு பொருமல் திரட்சி வாயு,
சீதமுறுங்கிராணி மகோதரம் நீராமை
திரள் வாய்வு சூலை வலி கடுப்புத்திரை,
நீதமுருங்கிருமி குன்மம் அண்டவாதம்
நிலையும் நீர்க்கிரிச்சனங்கள் தந்து மேகம்,
பேதகமாமூத்திர பிணி மூலரோகம்
பேசவெகுபிணிகளுமே பொருளதாமே." (சதக நாடி.)

8 "வாதத்தின் குணமே தென்னில்
வயிறது பொருமிக் கொள்ளும்,
தாதத்தில் மேனி கைகால்
சந்துமே கடுப்புத் தோன்றும்,
தீதுற்ற சிறுநீர்தானுஞ்
செறித்துடன் கடுத்து வீழும்,
போதுற்ற வாதமென்று
புகன்றனர் முனிவர்தாமே."
(குறியடையாளநாடி.)

9 "இடமான சேத்துமத்தில் பித்த நாடி
ஏழுந்தணுகில் விடமுடனே வீக்கமுண்டாம்,
திடமான குளிர்காய்ச்சல் மஞ்சள் நோவுந்
தேகத்திலுளைச்சல் ஈளையிருமல், வாந்தி,
விடமான நெஞ்சடைப்பு சுவாசம் விக்கல்
வெகுசுரமும் நாவரட்சி பாண்டு ரோகம்,
அடமான குவளை ரத்தம் அதிசாரந்தான்
அணுகி வெகுபலநோய்க்குத் தடங்கண்டாயே."

10 " கண்டாயோ சிலேற்பனத்தில் வாதநாடி
கலந்திடுகில் வயிறு பொருமல் கனத்த வீக்கம்,
உண்டாலோ ஓங்கார சக்தி விக்கல்
உறுதிரட்சை வாய்வுவலி சன்னிதோடம்,
விண்டாலே யிளைப்பிருமல் சோகைபாண்டு
விடபாகம் விடசூலை பக்கவாதம்
திண்டாடும் நாசிகா பீடங்கக்கல்
சிரநோய்கள் பலவும் வந்து சிக்குந்தானே."

11 " வயங்கிடும் வாதம்ரண்டு
சேத் துமமொன்றோடுமாகில்,
உயங்கிடுங் கைகால்நொந்து
வுயர் கனத்திடுப்பு நோகும்,
தியங்கிடுந்தாது கெட்டுச்
செனிப்புடன் குறைந்து வாடும்
மயங்கிடும் வாதத்தோடு
மருவிய சிலேத்துமந்தானே."

(குறியடையாளநாடி.)

(வேறு).

கைகால் முடங்கிய வாத குணம்.

" உடலது வெதும்பி கைகால்
உடலது கடுத்து நொந்து,
கடலுதாங்கால் கரங்கள்
கனத்தாற்போலுயர்ந்து காணும்,
சடமது விழுந்தாகுஞ்
சலங்கெட்டு தோடமுண்டாம்,
முடமதாங் கைகால்தானு
முடங்கின வாதமாமே."

(குறியடையாளநாடி.)

என்பதினால்,

1. வளிஐயக்கலப்பு.
2. ஐயவளிக்கலப்பு.

3. வளிநாடி தனித்து மிகுதியாதல்.
4. வளியழல் கலப்பு.
5. ஐயழல் கலப்பு.

இத்தகைய முக்குற்ற பேதங்களில் கீல்வாயுக் குறிகுணங்களில் சில அல்லது பலவற்றைப் பிறப்பிக்கும்.

அன்றியும் கைகால் முடங்கியவாதம் குணம் பற்றிக் கூறுமிடத்து, உடலில் சுரம், கைகால், உடல் இவை கடுத்து நோதல், கால்கைகள் கனத்தாற் போலயர்ந்து காணல் முதலிய குறி குணங்களை விளைவிப்பதோடு உடல் படுக்கையில் கிடத்தப்பட்டும், சிறுநீர் கேடடைந்து தோடங்களையுண்டாக்கும். கைகால்கள் முடங்கி, நடமாட்டமில்லாமலும் யாதொரு தொழில் புரிய முடியாமலும் ஆக்கிவைக்கும் என்பதாம். (இச்செய்யுளை ''வளி ஐயக்கீல்வாயுவில்'' கூறப்பட்டுள்ளது. ஆனாலும் அங்கு பொருள் கூறப்படவில்லை.)

குறிப்பு.

'' நாத்தலை வாயு'' என்னும் நோயை வளிநோய் எண்பதி லொன்றாக யூகிசிந்தாமணியில் கூறப்பட்டுள்ளபடி வளிநோயில் விளக்கியுள்ளோம்.

அன்றியும், கீல்வாயு நோய்ப்பிரிவுகளான ''வளிஐயக்கீல் வாயு'' ''ஐயவளிக்கீல் வாயு'' இவ்விரண்டிலும்உண்டாகும் கீல்களின் வீக்கமானது நீண்டநாள்கள் வரையிலும் நோய் நீங்காதிருப்பின் கீல்கள் பெருத்து நரியின் தலையைப் போல் அடிபருத்தும், நுனிசிறுத்தும் நீண்டும் காணும். இவற்றையும்'' நரித்தலைவாதம்'' எனவும் கூறலாகும். நரித்தலைவாதம்பற்றித் தெரிய விரும்பினால் மேற்குறிப்பிட்ட நோய்களின் தலையங்கத்தில் கவனிக்கவும்.

## 52. அழல்நோய்.

வேறு பெயர்கள் : பித்தநோய், தீ நோய்.

இயல்.—இது, உடலில் அழல் குற்றம் மிகுந்து வாய்நீருறல், வாந்தி, மயக்கம், தலைசுற்றல், குருதிவன்மைகெடல், பித்த வாந்தியாதலாகிய பல துன்பங்களை விளைவிக்கும் இயல்புடைய நோயாம்.

## நோய் வரும் வழி

" மருவுமே புளிப்புறைப்புவர்ப்பு மிஞ்சல்
மனதிலே துக்கங்களடைதலாலும்,
நெருவுமே நெருப்பு வெய்யில் கோபந்தன்னில்
நித்திரை தானில்லாமல் விழித்திருத்தல்,
அருவுமே யக்கினியிற் பொசிக்காதுண்ட
லதிகமாய்ப் பெண்போகமனுபவித்தல்
நருவுமே நாபிக்கு மேலே நின்று
நாடியே கண்ட மட்டாயிருக்கும் பாரே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், இந்நோயுண்டாவதற்குக் காரணம் யாதெனில் புளிப்பு, கார்ப்பு, உப்பு, இச்சுவையுள்ள பண்டங்களை மிகுதியாகப் புசித்தல்; மனதில் துயரங்கொள்ளல், நெருப்பு, வெய்யில் இவற்றில் மிகுதியும் ஈடுபடுதல்; அடிக்கடி சினங்கொள்ளல், தூங்காது விழித்திருத்தல், வேகாப்பொருள்களை உண்ணல், அதிகமாகப் பெண் போகம் அனுபவித்தல் இவற்றாலுண்டான வெப்பமானது உந்தியிலிருந்தெழுந்து கழுத்து வரையும் பாய்ந்து அழல் குற்றத்தைப் பெருக்கும்.

## பித்தம் விருத்தியாகுங் காலம்

" இருக்குமே பித்தம் வர்த்திக்குங் காலம்
ஏதோ வென்னிலாவணியுங் கன்னிதானும்,
அருக்குமேயைப்பசி கார்த்திகைக்கு மெத்த
வாட்சியா யெழுந்துமே பொங்கிக்காணுங்,
தருக்குமே சமிக்கின்ற காலந்தானே
தனியான மார்கழியிற்றை யிற்றானும்,
பருக்குமே பைங்கூனியுமேடந்தானும்
பெருகுமே சரீரமெங்கும் பித்தந்தானே."

(யூகி சிந்தாமணி.)

2 " விடமீனமுதல் மிதுனம் பித்தமாகும்
விரைகமழ்பைங்கூனி ஆனியதுவேயாகும்."

(சதகநாடி.)

என்பதினால், ஆவணி, புரட்டாசி, தன்னிலை வளர்ச்சி ஐப்பசி, கார்த்திகையாகிய இம்மாதங்களில் அழல் குற்றம் தன்னளவில் மிகுந்து பொங்கி எழும். மார்கழி, தை இம்மாதங்களில் தணியும்; மீண்டும் பைங்கூனி, சித்திரை மாதங்களில் பெருகி உடல் முழுமையும் பரவும் என்பதாம். அன்றியும்,

3 ''மீனமுதலானிவீறுகொள் மந்திரி'' என்பதால் பைங்கூனி முதல் ஆனி வரை இந் நான்கு மாதங்களில் பித்தம் மீறி நிற்கும்.

### புறக்குறி குணங்கள்.

இந்நோய் ஆரம்பத்தில் வாய் நீரூறல், வாய்கைத்தல், நீர் வேட்கை, விக்கல், ஓக்காளம், உடல் அனலாயிருத்தல், வியர்த்தல், கற்றாழை நாற்றம், தினவு, சொறி சிரங்கு உண்டாதல், தோல் வரண்டு காணல், கண்ணொளி குன்றல், முகம் வெளுத்தல் அல்லது மஞ்சளித்தல், சிறுநீர் கட்டல், எரிச்சல், அடிக்கடி கழிதலாகிய குறி குணங்களில் சில அல்லது பல குறி குணங்கள் தோன்றும்.

### நோய் எண்

இந்நோய் நாற்பத்திரண்டு வகைப்படும் என யூகி கூறுவர்:

1. '' நாட்டினேன் பித்தனின் பெயரைத்தானும்
நாற்பத்திரண்டான குணாகுணங்கள்,
ஆட்டினேனாவுரு பித்தந்தன்னோடு
ஆமலபித்த மதனோடுன்மாத பித்தந்
தாட்டினேன் தமந்தபித்தம் வாதபித்தந்
தனித்ததோர் வன்னிபித்தஞ் சிலேட்மபித்தந்
துாட்டினேன் சுரோணித பித்தந் விகார பித்தந்
துடியான விரணபித்தந் தொகையைக் கேளே.''

2. '' தொகையான வுரத்தபித்த மிரத்தபித்தஞ்
சுழிகாசப்பித்தமொடு சுவாசப்பித்தம்
வகையான சிலேட்மபித்தங் கரும்பித்தந்தான்
மாகரப்பான் பித்தத்தோட சீரணபித்தம்
அகையான வருசிபித்த மெரிபித்தந்தான்
அழல்பித்தந் துடிப்பித்தம் விஷப்பித்தந்தான்
முகையான அதிசாரப் பித்தந்தானும்
மூலபித்த முதிர்பித்த முறைமையாமே.''

3. "முறைமையாங் கண்ட பித்தமோடுபித்தம்
மூடுபித்த நடுக்குப் பித்தங் கபாலபித்தம்
தறமையாஞ் சர்த்தி பித்தந்தாகப்பித்தந்
தருக்கான விக்கல் பித்தம் ஷயபித்தந்தான்
திறமையாந் திமிர்பித்தம் வலிபித்தமோடு
சீதபித்தங் கிருமிபித்தம சாத்ய பித்தம்
மறமையாம் மார்க்க பித்தமருத்தீடு பித்தம்
வகையது நாற்பத்திரண்டு மகிழ்ந்து பாரே."

(யூகி சிந்தாமணி.)

என்பதினால், நாற்பத்திரண்டு வகைப் பித்தநோய்ப் பிரிவுகள் பின் வருவனவாம் :—

1. ஆவுரு பித்தம்,
2. ஆமில பித்தம்,
3. உன்மாத பித்தம்,
4. தமந்த பித்தம்,
5. வாத பித்தம்,
6. வன்னி பித்தம்,
7. சிலேட்டும பித்தம்,
8. சுரோணித பித்தம்,
9. விகார பித்தம்,
10. விரண பித்தம்,
11. உரத்த பித்தம்,
12. இரத்த பித்தம்,
13. காச பித்தம்,
14. சுவாச பித்தம்,
15. செம் பித்தம்,
16. கரும் பித்தம்,
17. கரப்பான் பித்தம்,
18. அசிரணப் பித்தம்,
19. அருசி பித்தம்,
20. எரி பித்தம்,
21. அழல் பித்தம்,
22. துடி பித்தம்,

23. விட பித்தம்,
24. அதிசார பித்தம்,
25. மூலப் பித்தம்,
26. முதிர் பித்தம்,
27. கண்ட பித்தம்,
28. ஓடு பித்தம்,
29. மூடு பித்தம்,
30. நடுக்குப் பித்தம்,
31. கபால பித்தம்,
32. சர்த்தி பித்தம்,
33. தாக பித்தம்,
34. விக்கல் பித்தம்,
35. கய பித்தம் (க்ஷய பித்தம்),
36. திமிர் பித்தம்,
37. வலி பித்தம்,
38. சீத பித்தம்,
39. கிருமி பித்தம்,
40. அசாத்திய பித்தம்,
41. மார்க்கப் பித்தம்,
42. மருந்தீடு பித்தம்,

என்பவைகளாம்.

சில நூலோர் பித்த நோய்கள் நாற்பது எனக் கூறுவர் :

## பித்த நோய்களின் பொதுக் குறி குணங்கள்

உணவு, செயல், காலம் இவைகளின் வேறுபாடுகளால் அழல் குற்றம் மிகுந்து, உணவைச் செரிக்காவண்ணம் செய்து வாய் நீரூறல், வாய்குமட்டல், வாய்கைத்தல், புளித்தேப்பம், குடித்த நீர் எதிரெடுத்தல், அத்துடன் சிறிது பித்தநீர் கலந்து வெளியாதல் அல்லது வெப்பத்தால் மிகுந்த குருதியும் கூடி வெளியாதல், கண், உடல் யாவும் எரிதலாகிய குறி குணங்களைக் காட்டிப் பின்பு நோயை வருவிக்கும்.

(சி.ம.)

ஒவ்வொரு பிரிவு அழல் நோயின் தனித்தனிக் குறிகுணங்கள் கூறுகிறார்

## 1. ஆவுரு பித்தம்.

"தானானசரீ ரந்தான் வெதும்புந்தாகஞ்
சளியிளைப்புக் கடுப்பு மாயழற்சியாகும்
பூனான வாய்தனிலே புளிப்புறைப்புப்
புகழான மலசலந்தான் மஞ்சளிக்குங்
கோனான குறுமொழி கொண்டெங்கும் பார்க்குங்
கூத்தாடுங் கொக்கரிக்குங் கூவலாகும்
ஆனானவடிக் கடிக் கெழுந்திருக்கு
மாவுருபித்தக் குணத்தினாண்மைதானே."

(யூகி.)

என்பதினால், ஆவுரு பித்தநோயில், உடல்வெதும்பல், நீர்வேட்கை, இருமல், சளிவெளியாதல், இளைப்பு, உடல்கடுத்தல், வெப்பமாதல், வாய் புளித்தல், உறைத்தல், எருவும் சிறு நீரும் மஞ்சளித்தல், வெறியனைப்போன்று சுற்று முற்றும் பார்த்துக் கூத்தாடல், ஆரவாரித்துக் கூவுதல், அடிக்கடி எழுந்தோடுதலாகிய குறிகுணங்களை விளைவிக்கும்.

(சி. ம.)

## 2. ஆமில பித்தம்

"ஆண்மையாயங்க மெல்லாங் கருகலாகு
மதிசயமாய்த் தலைதிருப்புமாவேசம்போல்
தாண்மையாய்ச் சாப்பிட்டவசனந்தானுந்
தரித்தொருநாள் பின்புதான் வாந்தி பண்ணும்
பூண்மையாய்ப் புளிப்போடுகசப் பெடுக்கும்
புகலரிய கால்கைதான சதியாகும்
வேண்மையாய் விக்கலொடு வயிறுவுப்பும்
மிகவாமில பித்தத்தின் விகற்பந்தானே."

(யூகி.)

என்பதினால், ஆமில பித்த நோயில் உடல் கறுத்துச் சத்தற்றுப் போம். தலை சுற்றும். உண்ட உணவு செரியாமல் மறுநாள் அப்படியே வாந்தி செய்யும். வாய் புளிப்பும், கசப்புமாயிருக்கும். கையுங்காலும், சோர்ந்து போகும். விக்கலும் வயிறுப் பலுமுண்டாகும்.

(சி. ம.)

### 3. உன்மாத பித்தம் (வெறியழல் நோய்)

'' விவரமாய் மேனி யெல்லா மிடுக்குண்டாகு
மிக்கான தீபனந்தான் மெத்தவாகுந்
தபரமாய்த் தலைதானுங்கனத்துக் காணுந்
தரிக்குமோரிடந்தன்னில் மிகவிருக்கும்,
உபரமாயொருவருடன் பேசிடாம
லூமையைப்போல் விழித்திருக்கு முறக்கமில்லை
திபரமாய் வாய்நீர்தான் வடித்து நிற்குஞ்
சித்தமது கலங்குமுன் மாதமாமே.''

(யூகி.)

என்பதினால், இந்நோயில் உடல்நிலை கெட்டு, தாங்கமுடியாத பசி, தலை கனத்தல், ஓரிடத்திலேயே உட்கார்ந்திருத்தல், பிறருடன் பேசாது ஊமையைப் போலிருத்தல், எப்பொழுதும் தூங்காது விழித்திருத்தல், வாய்நீர் சொட்டல், நெஞ்சம் கலங்கியிருத்தலாகிய குறிகுணங்கள் தோன்றும்.

(சி.ம.)

### 4. தமந்த பித்தம்

'' மாதமாய் மதுத்தானு முண்டவன் போல்
மறதியாயிருக்குமே சரீரந்தானும்,
நாதமாய்ச் சரீரந்தான் மிகத்துடித்து
நாவடியினரம் பெல்லாம ஞ்சளிக்கும்,
பேதமாயழைக்கழைக்கப்பிரேதம் போலப்
பேசாமலடிக்கடிக்குத் தாகமாகுஞ்
சாதந்தான் மிகவுண்டு மவுனமாகுந்
தமந்தபித்தத்தினிடதரிப்புத் தானே.''

(யூகி.)

என்பதினால், இந்நோயில் கள்ளுண்டவனைப் போல் தன்னை மறந்து கிடப்பான். உடல் துடித்தல், நாவறட்சி, நாவினடியிலுள்ள நரம்புகள் மஞ்சளாதல், அழைத்தாலும் பிணத்தைப் போல் பேசாதிருத்தல், மிகுந்த நீர் வேட்கை, மிகுந்த உணவு உண்ணல், மௌனமாகயிருத்தலாகிய குறி குணங்கள் காணும்.

(சி.ம)

### 5. வாத பித்தம்

"நரிப்பான கண்தனையே மிக மறைக்குந்
தரியாத மிகவிரைச்சல் புகைச்சலுண்டா
மிரிப்பான கண் மின்மினியாய்ச் சுழன்று
மிக்க நீர்த்ததும்பியே கலங்கி நிற்கும்
வரிப்பான மின்னுடம்பு வியர்வையாகு
மயக்கமொடு தியக்கமாய் வாந்தியாகுங்
குறிப்பான கொம்பேழும் அன்னம் வேண்டாங்
கூறினோம் வாதபித்த கொள்கைதானே."

(யூகி.)

என்பதினால், இந் நோயில் கண்புகைச்சல், எரிச்சலிவையுண்டாகிக் கண்ணை மறைக்கும். கண் மின்மினிப் பூச்சியைப் போலச் சுழலச் செய்து கண்ணீர் வடியும். கண் கலங்கும். உடம்பில் வியர்வை, மயக்கம், தயக்கம், வாந்தி, உணவு வேண்டாமை என்னும் குறிகுணங்களையும் காட்டும்.

(சி.ம.)

### 6. வன்னி பித்தம்.

"கொள்கையாய்ப் பேதமாய் வயிறுளைந்து
கொடிதான கனல் தானுங் கபாலமேறி,
வள்கையாய்ச் சீதமாய்ச் செந்நீர் பாய்ந்து
வாட்டமாய்க் கருகியே யுடல் வெளுத்து
மங்கையாய் மயக்கமொடு தியக்கமாகி
வாறான வசனமிகத்தானுஞ் செல்லா
நள்கையாய் நாவழன்று புளிப்பு காணும்
நளினமாம் வன்னிபித்த நாட்டலாமே".

(யூகி.)

என்பதினால், இந்நோயில், வயிறு நொந்து, கனல் போலெழுந்து, மண்டைவரையிலும் பாயும். சீதக்கழிச்சலுண்டாம். செந்நீர்க் கழிச்சலுமுண்டாகும். சில வேளை கழிச்சலானது கறுத்துக் காணும். உடல் வெளுத்து மயக்கம் தியக்கமுண்டாகும். சோறு வேண்டாமை. நாவு வெந்து புண்ணாகி புளிப்பாகயிருக்கும், உணவு கொள்ளமுடியாதபடி எரிச்சலையுண்டாக்கும். இதில் இக் குறிகுணங்களைக் காணலாம்.

(சி.ம.)

## 7. சிலேட்டும பித்தம்.

''நாட்டவே மிகவுடம் பெல்லாம் வெளுத்து,
நளிர்ந்துமே வுடம்பெல்லாம் நோக்காடாகி,
மாட்டவே மனமதுதான் கோபமாகி,
மயங்கியேயறிவழிந்துவிரும லுண்டாய்க்,
காட்டமே கண்கவெல்லாமிகப்பச்சென்று
கருதியே பசிகாணுங்கலக்கமாகித்
தேட்டமாய்த் தும்மலொடுசிரங்கனக்குஞ்
சிலேட்டுமத்தின் பித்தமென்று செப்பிடீரே''.

(யூகி.)

என்பதினால், இந்நோயில் உடல் முழுமையும் வெளுத்து, குளிர்ந்து வலியுண்டாகும். மனம் மயங்கி அறிவிழந்து காணும். இருமல், கண்கள் பச்சையாதல், மிகுந்த பசி, தும்மல், தலை கனத்தலாகிய குறிகுணங்கள் தோன்றும்.

(சி. ம.)

## 8. சுரோணித பித்தம்

''செப்பவே சுரோணிதந்தான் மிகவெதும்பித்
தேகமெங்குங்குடைந்துமே சந்துநோவாஞ்,
செப்பவே மேனி முட்பொதிந்தாற் போல
விடாயாகித்தாகமாய் மேனிகன்றும்,
தப்பவே தலைநோவு மிகுதியாகுஞ்
சஞ்சலிக்குஞ் சிந்தைதான் தயங்கலாகுந்
துப்பறவே வாந்தியொடுகோழையாகுஞ்
சுரோணிதமாம் பித்த மென்றே சொல்லுவீரே''.

(யூகி.)

என்பதினால், இந்த நோயில் சுரோணிதம் (இரத்தம்) வெதும்பி உடலிற் பரவிக் குடைந்து கீல்களில் நோயுண்டாகும். உடலை நையச் செய்து, முட்செருகியது போலக் குத்தலையும், நீர் வேட்கை, தலை நோய், மனவாட்டம், தயக்கம், வாந்தி, கோழை, கக்கல் முதலிய குறிகுணங்களைக் காணலாம்.

## 9. விகார பித்தம்.

''சொல்லவே துயிலொழிந்து கசந்து வாயைத்
துப்புரவாய்ப் பலபேச்சும் விரும்பிடாது,
கல்லவே கண் சிவந்து கலக்கமுண்டாங்
கடுத்துடம் பெல்லாம் வெளுத்துக் கருகிப்போகும்.
மல்லவே வாந்தியொடு மயக்கமாகு
மனமருகலாகியே வாய் நீரூறும்,
பல்லவே பட்டினி தான் மிகவிருக்கும்
பாரமாம் விகார பித்தப்பண்பதாமே''.

(யூகி.)

என்பதினால், இந் நோயில் தூக்கமின்மை, வாய் கைத்தல், பலவாறாகப் பேசல், எவற்றிலும் விருப்பமின்மை, கண் சிவந்து கலங்கிக் காணல், உடம்பு வெளுத்துக் கருகிப் போதல், வாந்தி மயக்கம், மனமயங்கல், வாய் நீரூறல், உணவு கொள்ளாது பட்டினியிருத்தலாகிய குறி குணங்களைப் பெறும்.

(சி. ம.)

## 10. விரண பித்தம்.

''பண்பாகவுடம் பெங்குந்திமிருண்டாகிப்
பாரமாய்த்தின வெடுத்து விரணமாகும். ,
நண்பான நாவெல்லாங்கசப்பு காணும்,
நாடியெல்லாம் படபடத்துத் துடிப்புண்டாகுந்
திண்பான லிங்கமெல்லாஞ் சிவந்து காணுந்
திடுக்கிட்டு நித்திரையிலெழுந்திருக்கும்,
வெண்பாக வாய் நீர்தான் மிகவு மூறும்
விரணமாம் பித்தத்தின் மூர்க்கமாமே''.

(யூகி.)

என்பதினால், இந் நோயில், உடம்பில் திமிர் தோன்றிக் கனத்துத் தினவுண்டாகிப் புண்ணாகும். வாய் கசக்கும். நாடி படபடத்துத் துடிப்புண்டாகும். ஆண்குறி சிவக்கும். திடுக்கிட்டுத் துயிலெழும். வாய்நீர் மிகுதியாயூறும். இக்குறி குணங்களைக் காணலாகும்.

(சி. ம.)

### 11. உரத்த பித்தம்

''மூர்க்கமாங்கோபமது மிகவுண்டாகு
முனையாக வடிக்கடிக் குச்சண்டை கொள்ளும்,
ஆர்க்கமாய்க் கூவியே விரைச்சலாகு
மாதான பாதாளம் பேதியாகும்.
நார்க்கமாய் நன்மைதின்மை தோற்றாமற்றான்
நலக்கமாய்க் கண் சிவக்குந் தூக்கமில்லை,
ஊர்க்கமாயுடம்பு தூளிக்கு முப்பு
முரத்த பித்தவாதத்தி னுண்மைதானே''.

(யூகி.)

என்பதினால், இந் நோயில் கோபம் அதிகமுண்டாகும். அடிக்கடி சண்டையிடும். வயிறு இரைந்து கழியும். நன்மை தீமை அறிய முடியாது. கண் சிவக்கும். தூக்கமிராது. உடல் நாளுக்கு நாள் பருத்துக் கொண்டே வரும். இக் குறிகுணங்கள் இதி லுண்டாம்.

### 12. இரத்த பித்தம்.

''உண்மையாயிரு மற்றான் மிகவு முண்டா
யுதட்டியாய்க்குத்தியேரத்தம் விழுந்து,
யண்மையாய்ச் சரீரமது மிகவும் வற்றி
அடிவயிறு சுருங்கியே வற்றிக்காணும்
வண்மையாய் வாய் நீரிற் கவுச்சடிக்கு
மறுகியே வல்லுடம்பு வாட்டமாகும்,
இண்மையாயிடுப்புதான் குடைச்சலாகு
மிரத்த பித்தத்தி னியற்கைதானே''.

(யூகி.)

என்பதினால், இந்நோயில் மிகுந்த இருமலையுண்டாக்கிக் கோழையைத் துப்பும் போதெல்லாம் குருதியை வெளியாக்கும். உடல் நாளுக்கு நாள் இளைக்கும். அடி வயிறு சுருங்கி வற்றும். வாய் நீர் புலால் நாற்றமாயிருக்கும். உடல் வாடும். இடுப்புக் குடைந்து நோகும். இக் குறிகுணங்களை இதில் காணலாம்.

## 13. காச பித்தம்.

''இயற்கையாயிருமியே மிகப்புரட்டி
ஈண்டியே விக்கலொடு சர்த்தியாகும்,
இயற்கையாயுடம்புதான் மிக வலிக்கு
முட்டணமாய் வெதும்பியே குரலேகம்மும்,
தியற்கையாய் வாய் நீருமிகவேயூறுந்
தித்திப்புமிக விருக்ககுந்துயரங் காணுங்,
கயற்கையாய் நெஞ்சுதனிற் கனமாய் காணுங்
கரும்பினுக்குங்காச பித்தங்கருத்து தானே''.

(யூகி.)

என்பதினால், காச பித்த நோயில், இயற்கையாக உண்டான இருமல் நோய் நீடித்து நிலைபெற்றுள்ளபோது பித்தமிகுதியின் கேட்டால் இந்நோய் விளையும், விக்கல், வாந்தி, உடல் முழுதும் வலி, உடல் வெதும்பல், குரற் கம்மல், வாய் நீரூறல், இடைப்புப் பொருள்களில் இச்சை, மனத்துயரம், நெஞ்சு கனமாயிருத்தல் முதலிய குறி குணங்களை உண்டு பண்ணும்.

(சி.ம.)

## 14. சுவாச பித்தம்

''கருத்தாகச் சுவாசமது மிகவுண்டாகுங்
கனமாக வயிறுமே ஊதிக்காணும்,
உருத்தாக உடலதுதான் மிக வலிக்கு
மூறுமே கேணிபோல் வாய் நீர்தானும்,
மருத்தாக மயங்கியே கண்மறைக்கும்
மார்பிலே வலியோடு இருமலுண்டாந்
துருத்தாக வயிறதனிற் பசியோயில்லை,
சுவாசமாம் பித்தத்தின் சூட்சந்தானே''.

(யூ.கி.)

என்பதினால், இந்நோயில் இரைப்பிருமல் போல் பெருமூச்சு பெரிது முண்டாய் வயிறுமூதிக்காணும். உடம்பு வலிக்கும். வாய் நீர் அதிகமாக வூறும். மயக்கம், கண்மறைப்பு, மார்பு வலியோடு இருமல், வயிறு பசியில்லாமையாகிய குறி குணங்களைக் ாட்டும்.

(சி.ம)

(சி.ம.)

## 15. செம்பித்தம்

''சூட்சமாஞ் செம்புதனிற்களிம்பு போலுந்
துரிதாகவாயெடுக்குஞ் சிகப்பாய்விழும்,
மாட்சமாமலமிறுக்கிச் சிவப்பு போலாம்
மயக்கமொடு வியர்வைதான் செந்நீர்பாயுந்
தாட்சமாந் தண்ணீர்தான் மிகத் தவிக்குந்
தலைதானுந் திருப்பியே தவக்கமுண்டாந்
தேட்சமாந்திடுக்கோடு பயமுமாகுஞ்
சிறுகதிர் போல் மேனிச் செம்பித்தமாமே.''

(யூகி.)

என்பதினால், இந் நோயில் வாயில் செம்பின் களிம்பைப் போற் சுவையுண்டாகும். செந்நிறமான வாந்தியுமுண்டாம். எருவானது கட்டுப்பட்டுச் சிவந்த நிறமாக வெளியாகும். மயக்கம், வியர்வை, வியர்வையில் செந்நிறம் காணல், நீர்வேட்கை தலை சுழலல், தயக்கம், அடிக்கடி திடுக்கிட்டுப்பயப்படல், உடல் சிவத்தலாகிய குறிகுணங்களுண்டாம்.

(சி.ம.)

## 16. கரும்பித்தம்.

'' செம்பித்தமாகியேதியக்கமுண்டாய்ச்
சிரசோடு மெய் நடுக்குந்தலைவலிக்கும்,
கம்பித்தமாகியே கண்ணுறங்குங்
கடைக்கண்தான் சிவந்து மின்மினியதாகும்
நம்பித்தஞ்சடமெல்லாங்கனத்து வற்றும்
நாவுதனில் ருசியில்லை பசியுமில்லை,
வம்பித்தங் கருப்பாகி வாந்தியுண்டாம்
மாசடையுங்கரும்பித்தவளப்பந்தானே.''

(யு.ச.).

என்பதினால், கரும் பித்தநோயில்தலையும் உடலும் நடுங்கும தலைவலி, கண் உறங்கல், கடைக்கண் சிவத்தல், உடல் கனத்து வறளுதல், நாச் சுவையறியாமை, பசியின்மை, வாந்தியாதல், உடலில் அழுக்குப் படிந்தாற் போலக் கருத்துக் காணல், ஆகிய குறிகுணங்களுண்டாம்.

(சி.ம.)

## 17. கரப்பான் பித்தம்.

'' வளப்பமாய்ச் சரீரமெல்லாஞ் சொறியுண்டாகி
வருத்தமிக வாகியே கட்டிகட்டுங்
குளப்பமாய் வயிறுதான் பேதியாகுங்
குமுறலாயிருமியே யிழுத்துக் கொள்ளும்
இளப்பமாய்க் கால் தானும்பெலக் கேடாகு
மிடுப்பிலே வலியுண்டாய்த் திமிருண்டாகுங்
களப்பமாய்க் கருகியே மேனி யெல்லாங்
கன்று கரப்பான் பித்தங் கண்டிடாயே.''

(யூகி)

என்பதினால், இந்நோயில் உடம்பில் சொறியுண்டாய், அஃது சிறு கட்டிகளாகக் கிளம்பும். கழிச்சல், வயிறு இரைதல் இருமிக் குடலை இழுத்துக்கொள்ளல், கால்கள் துவளல், இடுப்பு வலி, திமிர் உண்டாதல், உடல் வற்றி ஒளி குறைதலாகிய குறி குணங்களைப் பிறப்பிக்கும்.

(சி.ம.)

## 18. அசீரண பித்தம்.

'' கண்டிட்டமந்தமாய்ப் பசியோ யில்லை
கடுத்துமே நளிராகி மலமிருக்கும்,
வெண்டிட்ட விழிகரித்து நீர்தான் பாயு
மிக்க தலைவலிக்கும் வயிறிரைச் சலாகும்,
அண்டிட்ட அடிவயிறு வழுத்தமாகு
மசனமிகச் செல்லாது கைகா லோயும்
பண்டிட்ட புளித் தேங்காய் போல் வாய் தீநீரும்.
பண்பான வசீரண பித்தம் பயின்றிடாயே.''

(யூகி)

என்பதினால், இந்நோயில் பசியின்மை, உடல் கடுத்துக் குளிருண்டாதல், எருகட்டுப்படல், கண்களில் எரிச்சல். கண்ணீர் வடிதல், தலைவலி, வயிறிரைதல், அடிவயிறு இழுத்துப் பிடித்தாற் போன்றிருத்தல், உணவு வேண்டாமை, கைகாலோச்சல், வாய் புளித்துத் தேங்காய்ப் பால் போல் வாய் நீரூறல் ஆகிய குறிகுணங்களுண்டாம்.

(சி.ம.)

## 19. அருசி பித்தம்.

பயின்றிட்ட மனமறுத்துக் குடல் புரட்டிப்
பாங்கான வாந்தியொடு அருசியாகித்,
தியன்றிட்ட தியக்கமாய்ச் சிரசிலேறித்
திருப்பியே தலைதன்னைப் பிறகே வீசும்,
நவின்றிட்ட வடிநாக்குமிகத் தடித்து
நாவிலே உணர்ச்சியில்லா துறக்கமற்று
அவின்றிட்டவா காயமெரிதல் போலா
மதட்டு மேவருசியென்ற பித்தந்தானே.''

(யூகி)

என்பதினால், இந்நோயில், உணவில் விருப்பமின்மை, குடல் புரட்டல், வாந்தி, அருசி, தியக்கம், தலைக் கிறுகிறுப்பு, தலை சுழலல், அடி நாக்குத் தடித்துக் காணல், நாவில் உணர்ச்சி யில்லாமை, தூக்கமின்மை, உடல் முழுவதும் எரிச்சலாகிய இக் குறிகுணங்களைக் காட்டும்.

(சி. ம.)

## 20. எரி பித்தம்.

'' அதட்டியே அடித்துடைதாணிரண்டு பாத
மழகான கண்ணோடு உள்ளங்கால்கள்,
கதட்டியே யுள்ளங்கை யெரிவு காணுங்
காதிரண்டு மூக்கோடு வறண்டுபோகும்,
முதட்டியே முதுகுகைகால் கடன்னில்
முதிர்ந்த விறுவிறுப்புமே மெத்தவாகும்,
பதட்டியே காற்றுத்தான் மிகவே வேண்டும்
பாரமாமெரி பித்தம் பயின்றவாறே.''

(யூகி)

என்பதினால், இந்நோயில் அடித் தொடை, இரு பாதங்கள், கண், உள்ளங்கால், உள்ளங்கை இவைகளில் எரிச்சல், இரு காது களும் மூக்கும் வறளல், முதுகு, கை, கால் இவைகளில் விறு விறுப்பு உண்டாவதால் அதனைத் தாங்கமுடியாமல் அதிகமான காற்றை விரும்புதலாகிய குறி குணங்களுண்டாம்.

(சி. ப.)

## 21. அழல் பித்தம்.

"வாறான விளமைதனில் மிக நரைக்கும்
வடிவமெல்லா மிகவெளுப்பாய்த் தானிருக்குங்,
காறான கடைக்கண்தான் மிகச் சிவக்குங்
கண்டபல ஞானங்கள் மிகவே பேசுந்
தூறானவார்த்தைகள் தான் மிகச் சிக்கென்று
துடியிடையார் மேலின்பந் திறந்து கூறல்
பாறான பலகலைதான் மிகவுரைத்தல்
பாடுமே யழற் பித்தப் பரிசுதானே."

(யூகி)

என்பதினால், இந்நோயில், இளமையிலேயே மயிர் நரைத்துப் போதல், உடல் வெளுத்தல், கடைக்கண் சிவத்தல், ஞானியைப் போல் பலவற்றைப் பேசல், பெண் யிச்சையி லீடுபடலாகிய குறி குணங்களை விளைவிக்கும்.

## 22. துடி பித்தம்.

"பரிசுதானுடம் பெல்லா மிகத்துடித்துப்
பாண்டுவாய் மேனியுந்தான் பச்சென்றாகும்,
உரிசைதானில்லாம லுண்ணமாட்டா
ரோட்டமே மிகுதியாயுலை யப்பண்ணும்,
அரிசுமேயாயிழை மேல் மனப்புண்ணாகு
மடிக்கடிக்கு யாரோடுஞ் சண்டை கொள்ளும்,
துரிசுதான் மிகப்பண்ணும் பல வுண்டிமீது
துடிப்பித்தந் தன்னுடைய சொரூபமாமே."

(யூகி)

என்பதினால், இந்நோயில் உடம்பிலுள்ள எல்லா உறுப்புக்களும் துடிக்கும். உடல் ஊதிப் பச்சை நிறமாகத் தோன்றும். வாய் சுவையறியாது. உணவில் இச்சையிராது, சிறிது ஓடினும் பெருமூச்சு வாங்கும். கீழ்வாயில் புண் போல் எரியும். பெண்கள்மேல் விருப்பங்கொண்டு மனப்புண்ணாகும், அடிக்கடி சண்டையிடும். பல உண்டிகளில் ஆசைப்படும். இக்குறிகுணங்களை இதில் காணலாம்.

(சி.ம.)

## 23. விட பித்தம்.

" சொரூபமாய்ச் சோர்ந்துமே வீழ்ந்திருக்குந்
தூற்றுமே கொடுமை தன்னையா ரோடுந்தான்,
உருபமாயுள்ளங்கால் தனிலிருந்து
உயரமாயேறு முச்சந்தலை தன்னிற்றான்,
திருபமாய் விடமிறங்கும் போலே ஏறுந்
தேகமெல்லாம் வலியுண்டாய்க் கண்டிப்பாகும்,
அருபமாய சன மிகத்தானுஞ் செல்லா
வரிதான விஷப்பித்தம சாத்தியமாமே."

(யூகி)

என்பதினால், இந்நோயில், அழல் குற்றம் மிகுதியாகி நஞ்சு போல் கிளம்பி உள்ளங் கால்களிலிருந்து உச்சி வரையிலும் பாய்ந்து கொடுமை பல செய்யும். உடல் முழுமையும் வலியுண்டாகும். உணவு ஏற்றுக் கொள்ளாது. இக்குறி குணங்களை இதில் காணலாம். இது அசாத்தியமாகும்.

(சி.ம.)

## 24. அதிசார பித்தம்.

" அரிதான வயிறதனிலிரைச்சலாகும்
அடிவயிறு பிடுங்கியே பேதியாகும்,
உரிதான உப்பிசந்தான் மெத்தவாகு
மொளி விலாப்பக்கத்தில் வலியுமாகும்,
எரிவான ஈரலெல்லாங் குமுறல் காணு
மேற்றமாய்த் தாகமொடு மயக்கமாகும்,
சரிதான வரோசகமாம சாத்தியமாகுஞ்
சலிக்குமே யதிசாரப் பித்தமாமே."

(யூகி.)

என்பதினால், இந்நோயில் வயிறு இரைதல், அடிவயிறு நொந்து கழிதல், வயிறுஉப்பல், பக்க விலாவில் வலித்துக்குத்தல், ஈரல்களில் எரிச்சலுடன் குத்தல், நீர் வேட்கை, வாய் குமட்டல், சுவையின்மை, மயக்கம் என்னும் குறி குணங்களைக் காட்டும். இது அசாத்தியமாகும்.

(சி.ம.)

### 25. மூல பித்தம்.

" சாரமாய் வயிறிரைந்து பேதியாகுஞ்
சலிப்பான கோபமாய்த் தடுமாறாடும்,
கோரமா மூலத்தில் முளையுங் காணுங்
குறங்கினோடடித் துடையுங் கடுப்பு முண்டாஞ்,
சோரமாயுடல் வெளுத்து சோபையாகுந்
தூக்கமே மிகமிஞ்சிச் சோம்பலாகுங்
காரமாய்க் கண்ணுடந்தான் கரிச் சலுண்டாங்
கனமூல பித்தத்தின் காட்சியாமே."

(யூகி)

என்பதினால், இந்நோயில் வயிறிரைந்து உண்ட உணவின் சாரத்தை அப்படியே கழியச் செய்தல், மனஞ் சலித்துச் சினங் கொள்ளல், தடுமாற்றம், எருவாயின் முளை வெளிக்காணல், தொடை கடுத்தல், உடல் வெளுத்தல், உடல் ஊதுதல், தூக்க மிகுதியாகிச் சோம்பிருத்தல், கண் கரித்தலாகிய குறி குணங் களை உண்டுபண்ணும்.

(சி. ம.)

### 26. முதிர் பித்தம்.

" ஆமென்ற வங்கமெல்லா மம்மை வார்த்து
வாட்டினாற் போல வேதினவு மாகும்,
போமென்ற சரீரமெல்லாம் புண்களாகும்
புழுதியள்ளிப் பூசினாற்போற் சரீரம்,
வாமென்ற வடிவமது மஞ்சளாகும்
மலசலமுஞ் சுருங்கியே வாட்டமாகும்,
நாமென்ற நாடியதுதுவண்டு காணும்
நாட்டமுண்டா முதிர் பித்த நாடு வோர்க்கே."

(யூகி)

என்பதினால், இந்நோயில் உடம்பு முழுமையும் அம்மைக் கொப் பளங்களைப் போல் சிறு கொப்பளங்களுண்டாகித் தினவெடுத்துப் புண்ணாகும். உடம்பில் புழுதியை அள்ளிப் பூசியது போல் மஞ்சள் நிறம் பெறும். சிறுநீரும் எருவும் தீய்ந்து சுருங்கும். நாடி துவண்டாற் போல் நடைபெறும் ஆகிய இக்குறி குணங்களை யுண்டுபண்ணும்.

(சி. ம.)

## 27. கண்ட பித்தம்.

''நாடியே குரலினைத் தான் கனத்துக்கொண்டு
நற்கசப்பாய் சர்த்தியது தானெடுக்கும்,
வாடியே கண்டத்திற் புண் போலாகும்
வழவழத்து நாவெல்லாம் வரண்டிருக்குந்
தாடியே தாளடியிற் கனப்புண்டாகுஞ்
சமுத்திரத்தினோசை போற் காதிலுண்டாம்,
பேடியாமயிருஞ் செம்பட்டையாகும்
புறவிசுவாங்கண்டபித்தப் பிரதாபந்தானே''.

(யூகி)

என்பதினால், இந்நோயில் அழல் குற்றம் மிகுந்து குரல் வளையைத் தாக்கித் தாபிதப்படுத்தி வீங்கும். கைப்பான் வாந்தியாதல், தொண்டையுங்கழுத்தும் புண்போல் நோதல், தொண்டையில் குழகுழத்துக் காணல், நாவறளல், தாள் அடி கனத்தல், காதிரைதல், மயிர் செம்பட்டையாதல், புற இசிவு முதலிய குறி குணங்களைக் காட்டும்.

## 28. ஓடு பித்தம்.

''பிரதாபமாகியேயோடி எங்கும்
பிதற்றலாயுதாசினங்கள் மெத்தப் பேசும்,
நிரதாபமாகவே பற்கடிக்கும்,
நெருப்பாகக் கண் சிவக்கும் நிமைத்து மூடும்,
குரதாபமாகவே கூவற் போடுங்
கொக்கரிக்குங் கூத்தாடுங் குறித்தே பார்க்கும்,
அரதாபமாகவே யாண்மையுண்டா
மசாத்தியமா மோடுபித்தமணுகினோர்க்கே''.

(யூகி)

என்பதினால், இந்நோயில் பார்ப்பவர்கள் மனமிறங்குமாறு வெறியனைப் போல் இங்குமங்கு மோடித் திரிதல், பற்கடித்தல், கண் சிவந்திருத்தல், கூச்சலிடல், கொக்கரித்தல், கூத்தாடல், உற்றுப் பார்த்தல், ஆண்மையோடு பிறரை எதிர்த்தல் என்னும் வெறி நோயின் குறி குணங்களைப் பெறும். உடல் வன்மை குறையும். இது அசாத்தியமாகும்.

## 29. மூடு பித்தம்.

''அணுகியே யாபரணப் பொன்றனைத்தா,
கைப்பட்டவிடந்தனிலே புதைத்துப் போடும்,
வணுகியே மனிதரைத்தான் கண்டபோதே
வார்த்தைகள் தானுதாசினங்கள் வசனிப்பாகும்,
நணுகியே நாக்குக்குள் தானே பேசும்
நலத்தண்டி பண்ணியே யிருக்குங் கைகள்
மிணுகியே வென்னேரமன்னம் வேண்டா
மிக்கான மூடுபித்தமீறினோர்க்கே.''

(யூகி)

என்பதினால், இந்நோயில் தன் கையில் கிட்டிய பொன் அணிகளைப் புதைத்து வைத்தல், மக்களைக் கண்டபோதெல்லாம் இழிவாகப் பேசல், தானாகவே பேசிக்கொள்ளல், கைகால்கள் சும்மாயிராமல் ஏதேனும் செய்து கொண்டிருத்தல், உணவு வேண்டாமையாகிய குறி குணங்களைக் காட்டும்.

(சி.ம.)

## 30. நடுக்கு பித்தம்.

''மீறியே தலையோடு சிரசு நெற்றி
மிக்கான பிடரியொடு முதுகுத் தண்டு,
காறியே கண்டங்கள் கதுப்போடொக்கக்
கனமாக நடுக்கியே காந்தியாகுஞ்,
சீறியேகசப்பாக வாந்தியாகுஞ்
சிணுக்கிருமலாயிருமுந்தூக்கமில்லை
ஊறியே வாய் நீர்தான் மார்பில் வீழு
மூனுமே நாத்தானு நடுக்கு பித்தம்''.

(யூகி)

என்பதினால், இதில் தலை, மண்டை, நெற்றி, பிடரி, முதுகுத் தண்டு, கழுத்து இவைகள் கதித்துக் கனமாக வீங்கி நடுங்கும். கைப்பு, வாந்தி, சிறு இருமல், தூக்கமின்மை; சொள்ளுவடிதலாகிய குறி குணங்களுண்டாம்.

(சி.ம.)

### 31. கபால பித்தம்.

''நடுக்குமே கபாலந்தான் சிரசோடொக்க
நளிராகியுடம் பெங்குங்கடுப்புமாகும்,
விடுக்குமே அம்புபோற்சிரசெல்லாந்தான்
மேனியுமேமஞ்சணிறமாகுங்கண்டாய்,
முடுக்குமே மூக்கு தண்டெல்லா நோகு
முகமெல்லாம் வீங்கியே மூர்ச்சை காணும்,
படுக்குமே வடிக்கடிதானெழுந்திருக்கும்
பாரமாங்கபால பித்தப்பண்பு தானே''.

(யூகி.)

என்பதினால், இந்நோயில் தலை நடுக்கல், குளிருண்டாதல், உடல் நோதல், அம்பைக் கொண்டு பாய்ச்சுவது போல் தலையில் குத்தல், உடல் மஞ்சளித்தல், மூக்கந்தண்டு நோதல், முகம் வீங்கல், மூர்ச்சையுண்டாதல், படுக்கையிற்றங்காமல் அடிக்கடி எழுந்திருத்தலாகிய குறி குணங்களுண்டாம்.

(சி.ம.)

### 32. வாந்தி பித்தம் (சர்த்தி பித்தம்).

''பாரமாயுடம்பெங்குந் திமிருண்டாகும்
பதைத்துமே ஈரலுக்குள் வலியுண்டாகும்,
வாரமாய் வாய் கைப்புற்று வாந்தியுண்டா
மகத்தான தலையெடுக்க மயக்கமாகும்,
ஆரமாயக்கினி தான் மிகவுண்டாகும்
வரோசகமாயெந்நேரமாண்மை குன்றுந்
தாரமாய்த் தண்ணீர் தான் மிக வேண்டாது
சமிக்காது சர்த்தி பித்தந்தாண்மை தானே''.

(யூகி)

என்பதினால், இந்நோயில் உடல் முழுமையுந் திமிருண்டாதல், ஈரலுக்குள் வலி, வாய் கைத்து வாந்தியாதல், மயக்கம், உடல் வெப்பமடைதல், சுவையின்மை, ஆண்மை குன்றல், நீர் வேட்கை, செரியாமையாகிய குறி குணங்களையுண்டாக்கும்..

(சி.ம.)

### 33. தாக பித்தம் (நீர் வேட்கை பித்தம்).

"ஆண்மையாயடி வயிற்றிற் பதைப்புண்டாகு
மங்கமெலாம் வெவ்வழல் போலழன்று காணுந்,
தாண்மையாய்த் தண்ணீர்தான் மிகக் குடிக்குஞ்
சயித்தியமாம் பண்டத்திலிச்சையாகுங்,
காண்மையாய்க் கண்டத்தில் வியர்வை காணுங்
கழுத்தடியுநாவடியுமிசித்துக்கொள்ளும்,
பூண்மையாய்ப் புளிப்புமேலிச்சையாகும்
புகலரியதாக பித்தம் பேசலாமே".

(யூகி)

என்பதினால், இந்நோயில் அடி வயிற்றில் துன்பமுண்டாக்கி உடம்பெல்லாம் அழன்று நீர் வேட்கை மிகுந்து நீரை மிகுதியாகப் பருகச் செய்யும். குளிர்ச்சி தரும் பண்டங்களில் விருப்பமுண்டாகும். கழுத்தில் வியர்க்கும். கழுத்துக்குக் கீழும் நாவடியிலும் இழுப்புண்டாகும். புளிப்புப் பொருள்களில் இச்சை ஏற்படும்

(சி.ம.)

### 34. விக்கல் பித்தம்.

"தாகமுடன் சர்த்தியதாய் விக்கலாகுந்
தவிப்பெய்தி சரீர மெல்லாஞ் சயித்தியமாகும்,
பாகமுடன் தலை புரட்டுக் கிடைகொடாது
பால்போலே வாயினிலே நுரையுந்தள்ளுஞ்,
சாகமுடன் சயித்தியத்தில் மிகக் கிடக்குந்
தணலாகவுடல் வெதும்புந் தளர்ச்சியாகுஞ்,
சோகமுடன் கைகால் தானோச்சலாகுஞ்
சுருக்கிடுமே விக்கல் பித்தஞ் சுருதிதானே".

(யூகி)

என்பதினால், இந்நோயில் நீர் வேட்கையும், வாந்தியுமுண்டாய், விக்கலுமதிகமாக எழுந்து சிரமத்தைக் கொடுக்கும். உடலில் பித்தசயித்தியங் கூடித் தலை புரட்டல், படுக்கையிற்றங்காமை, பால் போல் வாயில் நுரை தள்ளல், உடல் வெதும்பல், உடல் தளரல், சோகத்தோடு கைகாலோய்ச்சல் முதலிய குறி குணங் களைப் பெறும்.

(ம.சி.)

### 35. இளைப்பிருமல் பித்தம் (கய பித்தம்).

"சுருதியா யிருமலது மிகவு முண்டாய்ச்
சூக்கமாய் வெதும்பலொடு தண்ணீர் தாகம்,
பருதியாயுடல் வெளுத்துப் பாண்டு வாகும்
பஞ்சுபோற் கண்களெல்லாம் வெளுப்பாய்ப் போகுங்,
குருதியாய் நெஞ்சுதனிற் கோழை கட்டுங்
குணுக்காகக் கட்டிபோற் சளியே வீழும்,
நிருதியாய் நெஞ்சுதனிலெரிவுண்டாகுந்
நித்திரையேமிஞ்சுங் கயபித்தந்தானே."

(யூகி)

என்பதினால், இந்நோயில் சில நாள்களாக இருமல் நோயில் வருந்தி, அதிகரித்துக் கொண்டே வந்து, உடல் வெதும்பி, நீர் வேட்கை, உடல் வெளுத்தல், கண்கள் வெளுப்பாதல், தொண்டையில் கோழை சேர்ந்து குருதி கக்கல், கட்டி கட்டியாகச் சளி வெளியாதல், நெஞ்செரிவு, தூக்கமின்மை என்னும் குறி குணங்கள் காணும்.

### 36. திமிர் பித்தம்.

"பித்தமாயுடம்பதுதான் மிக மயக்கும்
பேதமாய் வயிறெங்குமுள்ளுபோலாம்,
நித்தமாய்க் காலமே வாந்தியாகும்
நினைவோடு நித்திரையு மசதியாகும்,
பத்தமாயொன்றையே பிடித்து நிற்கும்,
பாரமாயுடம்பெங்குந் திமிருண்டாகுஞ்
சுத்தமாய்ச் சரீரமெல்லாந் தூசுண்டாகுந்
துருசு நடை கொடாது திமிர் பித்தந்தானே."

(யூகி)

என்பதினால், இந்நோயில் அழற்குற்றம் மிகுந்து மயக்கத்தையும், வயிற்றில் முள் செருகியது போல் குத்தலையும் காலையில் வாந்தியையு முண்டாக்கும், நினைவு மாறாமலே தூக்கங்கொள்ளுதலும், சோர்வு, உடல் முழுதும் திமிராயிருத்தல், உடல் கனத்தல், உடலில் அழுக்குப் படிதல், நடக்கமுடியாமை என்னுங் குறி குணங்களுண்டாம்.

(சி. ம.)

## 37. வலி பித்தம்.

''நடைகொடாதபடி வயிற்றிலிழுத்து நொந்து
நாவறண்டு தலையெல்லாமிகக் கனத்து,
இடைகொடாச் சந்தெல்லாநோயுண்டாகி
ஈரல் தனிற்குலை தனிலே வலித்து நோவாம்,
படைகொடாமலந்தானும் பச்சென்றாகும்
படபடத்து உடம்பெங்கும் பக்கங்கொள்ளும்,
மடைகொடாவயிறெரிச்சல் மெத்தவாகு
மார்படைக்கும் வலி பித்த வண்மைதானே.''

(யூகி)

என்பதினால், இந்நோயில், நடக்க முடியாமை, அடி வயிறு நோதல், நாவறளல், தலைவலி, பூட்டுகள் நோதல், ஈரல் குலையில் வலி, பச்சை நிறமாகக் கழிதல், உடல் படபடத்து எங்கும் நோதல், வயிற்றில் எரிவு, மார்பு அடைப்பு ஆகிய குறி குணங்களைக் காட்டும்.

## 38. சீத பித்தம்.

''வன்மையாயுடம்பெங்கும் வடியுந் தண்ணீர்
மயக்கமாயுடல் கனத்துப் பாரமாகும்,
புண்மையாய்ப் பிடரி தனிலிசிவுண்டாகும்
பொருமியே வயிறுப் பிசந்தானாகும்,
திண்மையாயுடல் கனத்துச் சொக்கு போலாஞ்
சீறியே மிக விருமிச்சிந்தை கேடாஞ்
செண்மையாய் வாய்நீர்தான் உப்புறைக்குஞ்
சிறு நீருஞ் சிகப்பாகுஞ்சீத பித்தம்.''

(யூகி)

என்பதினால், இந்நோயில் உடம்பில் வியர்வைத் தண்ணீர் மிகுதியாகக் கொட்டும். மயக்கம், உடல் கனத்தல், பளுவாயிருத்தல், புறங்கழுத்திசிவு, வயிறு பொருமி ஊதல், பலமில்லாமை, இருமல், நெஞ்சு புண்ணாதல் முதலிய குறி குணங்களைக் காட்டுவதோடு, வாய் நீர் உப்புக்கரித்தல், சிறு நீர் சிவந்து இழிதலாகிய குறி குணங்களையும் உண்டாக்கும்.

(சி. ம.)

### 39. இருமி பித்தம்.

''சீத மாயடிவயிற்றிற்றிமிருண்டாகிச்
செழுமையாயுடம்பெங்குந்தினவுமாகி,
வாதமாயுடம்பெங்குங்கடுப்புண்டாகி
வற்றியே மலசலமும் வறண்டு போகும்,
காதமாய்க் கால்கைகள் கதலித்தண்டு
கனத்தது போல் வெச்சென்று கடுப்புமாகும்,
நாதமாய் மலந்தன்னிற் கிருமி வீழும்
நாறுமேயுடல் கிருமிப் பித்தமாமே.''

(யூகி)

என்பதினால், இந்நோயில் சீதத்தினால் வயிற்றுள் திமிருண்டாகி உடல் முழுமையும் தினவும், வலியும் ஏற்படும். சிறுநீரும் எருவும் வற்றிக் கட்டுப்படும். கைகால்கள் கனத்து வாழைத்தண்டு போல் சில்லென்றிருக்கும். மலத்தில் கிருமியுங்கூடி நாற்றத் தோடு கழியவும் செய்யும்.

(சி. ம.)

### 40. அசாத்திய பித்தம் (தீராப் பித்தம்).

''உடம்பது தான் லாகிரிகள் தின்றவன் போல்
உணர்ச்சிதானில்லாமற் புடவை கட்டா,
தடம்பு தானழலணுகுந்தன்மை போலத்
தவிச்சுமேதாகந்தான் மிகவுண்டாகும்,
வடம்புதான் வாதாடுமனிதரோடே
வார்த்தைகள் தான் பல பேச்சும் வசனிப்பாகும்
வாய் வறளுமசாத்தியபித்தந்தானென்றே.''

(யூகி)

என்பதினால், இந்நோயில், கள், சாராயம், இவை குடித்தவன் போல் உணர்ச்சியற்று உடை உடுக்கவும் நிலையற்றிருத்தலும், தவித்து உடல் வெப்பமடைந்து நீர் வேட்கை அதிகரித்தலும், பிறரோடு வாதாடிப் பேசுதலும், கண்கள் சிவந்து, வாய் வறளுதலுமாகிய குறிகுணங்களைக் காட்டி இந்நோய் தீராவென் பதையும் குறிக்கும்.

(சி. ம

### 41. மார்க்க பித்தம்.

"தானென்ற சகல நூல் தான்றான் பேசு
சடுதியினிலுட்காருமோட்டம் பாயும்,
போனென்ற புடவையைத்தான் கிழித்துப் போடும்
புலம்புமே வாயில் வந்ததெல்லாம் பாடுந்,
தேனென்ற சிரசோடு பிடரியெல்லாஞ்
சிக்கெனவே இசிவாகுந் தேகம் வாடும்,
பானென்ற பலபல வாங்கருமஞ்செய்யும்,
பழிக்குமே பிறரைத்தான் மார்க்கபித்தம்."

(யூகி)

என்பதினால், இந்நோயில் தான் கற்றவற்றையெல்லாம் பேசல், உட்காருதல், உடனே எழுந்து ஓடல், உடுத்தியிருக்கும் துணியைக் கிழித்தல், புலம்பல், வாய்க்கு வந்தபடி பாடல், தலையிலும், புறங்கழுத்திலும் இசிவுண்டாதல், உடல் வாடல் முதலியவற்றை உண்டாக்கும். உடல் வன்மை குறைந்து மன நிலையழிந்து பிறரைப் பழித்தலென்னும் குறி குணங்களையும் காட்டும்.

### 42. மருந்தீடு பித்தம்.

"மார்க்கமான மது தான் மௌனமாகும்
வடிவெங்குமூதியே நெஞ்சு வற்றும்,
ஊர்க்கமாயுடம்பது தான சதியாகு
மூணுறக்கமில்லாமலுழலு மெங்குந்
தேர்க்கமாந்திடுக்கிட்டுச் சிதைவாம் புத்தி,
சேயிழையார் மருந்தினாற்றிரட்சியாகி
ஆர்க்கமாயடிக்குடலில் மிகுந்து பாழி
யடங்காதுமருத்தீடுபித்தமாமே."

(யூகி)

என்பதினால், இந்நோய், மருந்தீட்டால் விளைந்தெழுந்த அழல் குற்றத்தால் உண்டாகும் நோயாம். இதில் ஓரிடத்தில் மௌன மாயிருத்தல், உடல் ஊதிக் காணல், நெஞ்சு வறண்டு போதல், ஊக்கமின்மை, அசதி, உணவும் தூக்கமின்றி எங்கும் சுற்றித் திரிதல், அடிக்கடி திடுக்கிடல், புத்தித் தடுமாறல், உந்தியில் கட்டி போற்றிரண்டு அடிக்குடலில் வலியையுமுண்டாக்கலாகிய குறி குணங்கள் காணும்.

(சி.ம.)

குறிப்பு.—பித்தநோய் நாற்பத்திரண்டு என வகுத்து இங்கு கூறியிருப்பினும், இந்நோய்களை மற்றைய இடங்களிலும் கூறியிருக்கிறபடியால் அவற்றிற்குறிய குற்ற வேறுபாடுகளை இங்கு விவரிக்கப்படவில்லை.

(சி. ம.)

## 43. ஐய நோய்.

**வேறு பெயர்கள்:**—கபநோய்; சிலேத்தும நோய் என்பன வாம்.

**இயல்.**—இது, உடலில் ஐயம் பெருகி மூக்கு நீர் பாய்தல், தொண்டையில் கோழை கட்டல், குரற் கம்மல், இருமல், வயிறு இரைந்து கடுகடுத்து வெண்மையாகவும், சீதங் கலந்தும் பேதியாதலாகிய இயல்புடைய நோயாம்.

### நோய் வரும் வழி.

"மீறியே தித்திப்புப் புளிப்புதானும்
மிகத் தின்றுங் கிழங்கு வகை யருந்தலாலுஞ்
சாறியே சயித்தியமாங் குளிர்ந்த பண்டந்
தண்ணீர் தான் பழையதுகளருந்தலாலும்,
சீறியே தன் வயது தனக்கு மூத்த
ஸ்திரீகளுட னனுபோகஞ் செய்தலாலும்
மாறியே மயான புகை படுதலாலும்
வருகுமே சிலேட்டுமத்தின் மகிமை தானே."

(யூகி)

என்பதினால் இந்நோயுண்டாவதற்கு முக்கியமான காரணங் களைக் கூறுமிடத்து; குளிர் காற்றிலீடுபடல் குளிர்ந்த நீரையும், குளிர்ச்சியுள்ள பொருள்களையும் மிகுதியாக உட்கொள்ளல்; இனிப்பும் புளிப்புமுள்ள பொருள்கள், கிழங்கு வகைகள், பழைய சாதம் இவைகளை மிகுதியாகப் புசித்தல், தன் வயதுக்கு மீறிய ஸ்திரீகளுடன் அனுபோகஞ் செய்தல், மயானப் புகை படுதலாகிய இச் செயல்களால் ஐயம் பெருகும்.

(சி. ம.)

அன்றியும், மாசி, பங்குனி மாதங்களில் ஐயம் விருத்தியாகும். வைகாசியில் பிரகோப மடையும். ஆடி, ஆவணி, புரட்டாசி மாதங்களில் தணிந்துபோம்,

(மேற்கோள்.)

ஐயம் வர்த்திக்குங் காலம்

''மகிமையாய் மாசி யொடு பங்குனி தான்
மருவியே வர்த்திக்கு மையந்தானும்,
நகிமையாய் வைகாசிதனிற் கோபிக்கும்
நன்மையாய்ச் சமிக்கின்ற காலங் கேளாய்,
அகிமையாய் ஆடிதனில் மிகச் சமிக்கும்
ஆவணியும் புரட்டாசி தன்னிற் கேளாய்,
தகிமையாய்த் தாட்சியாங் காலமாகுஞ்
சதாசிவன்றான் சொன்னபடி சாற்றினேனே.''

(கி)

என்பதினாலறியவும்.

''தேள் முதன் மாசி சேனாபதிக்கே'' என்பதினாலும், ''திடமான விருட்சிக முதற்கும்பஞ்சிலேட்டும மாகும்.'' என்பதினாலும் கார்த்திகை முதல் மாசி ஐய வளர்ச்சி காலமாகும்.

நோய் எண்.

''முற்றான சிலேட்டுமந் தானிருபத் தொன்று
முனியுரைத்த சொற்படியே மொழியக் கேளாய்,
சிற்றான விருமலாஞ் சிலேட்டுமத்தோடு
செறிகாசச் சிலேட்டுமமாஞ் சுவாச சிலேட்டுமம்,
மற்றான தீபன சிலேட்டுமத்தோடே
மந்தி சிலேட்டுமம் வாத சிலேட்டும மாகும்
துற்றான பித்த சிலேட்டுமம் தொந்த சிலேட்டுமஞ்
சுகசன்னி வாத சிலேட்டுமந் தானாமே.''

''ஆகுமே சுரசிலேட்டும மதிசார சிலேட்டும
மதிக சலசி லேட்டும மாமக்கினி சிலேட்டுமம்
போகுமே பூத சிலேட்டும முயலகன்றான்
பொறிவெறிச் சிலேட்டுமமாம் விகார சிலேட்டுமம்,
சோகு சுரோணித சிலேட்டுமம் விரண சிலேட்டுமந்
துற்கந்த சிலேட்டுமமா நித்திய சிலேட்டுமம்
நாகுமே யிருபத் தொன்றாஞ் சிலேட்டுமம்
நாட்டினேன் வரலாறு நயந்து கேளே.''

(ங)

என்பதினால் ஐய நோய் இருபத்து ஒன்று பிரிவுகளை யுடைய மென்பது தெரிய வருகிறது.

அவையாவன :—

1. இருமல் ஐய நோய்,
2. காசம் ஐய நோய்,
3. சுவாசம் ஐய நோய்,
4. தீபனம் ஐய நோய்,
5. மந்தம் ஐய நோய்,
6. வளி ஐய நோய்,
7. அழல் ஐய நோய்,
8. முக்கூட்டு ஐய நோய்,
9. சுக சன்னி ஐய நோய்,
10. சுரம் ஐய நோய்,
11. அதிசாரம் ஐய நோய்,
12. நீர்க்கோவை ஐய நோய்,
13. அனல் ஐய நோய்,
14. பூதம் ஐய நோய்,
15. முயலகன் ஐய நோய்,
16. வெறி ஐய நோய்,
17. விகாரம் ஐய நோய்,
18. சுரோணிதம் ஐய நோய்,
19. விரணம் ஐய நோய்,
20. துர்க்கந்தம் ஐய நோய்,
21. அநித்தியம் ஐய நோய்,

என்பவையாம்.

ஒவ்வொரு பிரிவு ஐய நோயின் தனித்தனி குறிகுணங்கள :

### 1. இருமல் ஐய நோய்.

''சாற்றியேயினிப்பு நெய்ப்பாய்ச்சளியே [வீழுந்
தளுக்காகுமுகந்தானுங்குளிருண்டாகு,
மாற்றியே மூக்கதினில் நீரோபாயு
மாசற்றவுடம் பெல்லாம் வெள்ளையாகுஞ்,

சீற்றியேமலந்தன்னிற்சீதமுண்டாய்ச்
சிறு நீருமஞ்சளித்துச் சிறுகவீழுங்,
காற்றியேயுடம்புக்குள் வெகுசூடாகுங்
கனவிருமலாஞ்சிலேட்டுமக் கணக்குதானே.''

(யூகி)

என்பதினால், இருமல் ஐயநோயில் உடலில் குளிர், மூக்கில் நீர்ப்பாய்தல், முகம் நீரேற்றத்தால் தளதளவென்று காணல், மார்பில் சளி இளகலாயும் இனிப்பாயும் வெளியாதல், உடல் வெளுத்தல், சீதத்தோடு வெளுத்த நிறமான கழிச்சலுண்டாதல், சிறுநீர் மஞ்சளித்துச் சிறுகச் சிறுக இறங்கல், உட்சுரங்காய்தல் என்னும் குறிகுணங்களைப் பிறப்பிக்கும்.

(சி.ம.)

### 2. நாட்பட்ட இருமல் ஐய நோய் (காச ஐயநோய்).

''கணக்காகச் சரீரந்தான் சீதளமாகிக்
கனத்துமே மதத்திட்டுப்பாரமாகி,
மணக்காக நாடியெல்லாம் நுணுக்கமாகு
மருவுசிலேட்டுமத்தடைந்து வாய்வறண்டு,
அணக்காக அக்கினிதான் மிகவுண்டாகி
அடிமூக்குத்தண்டெல்லாமிகக் கனத்து
திணக்காக இருமலொடு தினவுமுண்டாம்
செயலாகச் சிலேட்டுமத்தின்றிறமைதானே.''

(யூகி)

என்பதினால், உடலில் மேற்கூறிய இருமல் ஐயநோய் நாட்பட நிலைத்திருப்பின் உடல் கனைத்துப் பாரமாகி, நாடிகள் தளர்ந்து வன்மையைற்று, வாய் வறண்டு, உடல் மிகக்சூடாகி, மூக்குத் தண்டு வீங்கி, வாய் ஓயாத இருமலோடு தினவுமுண்டாகுமிந்த நாட்பட்ட இருமல் ஐயநோயில் (காச ஐய நோயில்) என அறிக!

### 3. இரைப்பு ஐய நோய் (சுவாச ஐய நோய்).

''திறமையாய் நெஞ்சுதனிற்கோழை கட்டுஞ்
சிக்கென்றுதானிருமி மூக்கடைக்குங்,
குறமையாய்க் குறட்டென்று சுவாசங்காணுங்
குளிரோடு சுரமுண்டாய் மயக்கமாகும்,

மறமையாய் மார்போடு நெஞ்சடைக்கும்
வாய்வரண்டு மூக்கதனில் நீரோ பாயும்,
வெறுமையாய் மிகத்தண்ணீர் தாபமுண்டாய்
விடுசுவாச சிலேட்டுமத்தின் விவரந்தானே.''

(யூ.கி.)

என்பதினால் இந்நோயில், நெஞ்சில் கோழைகட்டி, மூக்கடைத்து, குறட்டை விடுவது போன்று மேல் மூச்சு வாங்கும். குளிருடன் சுரங்காயும். மயக்கமுண்டாகும். மார்பும் நெஞ்சும் அடைக்கும். வாய் வறளும். மூக்கில் நீர்பாயும். நீர் வேட்கை உண்டாகும் என்னும் குறி குணங்களாம்.

### 4. பசி ஐய நோய் (தீபன ஐயநோய்).

''விபரமாய் தீபனந்தான் மிகவுண்டாகு
மிக்கானவுடம் பெல்லா மெரிவுண்டாகும்
அபரமாம் நெஞ்சடைக்குமழுகையாகு
மாக்கையெல்லாம் வலியுண்டாயழலுண்டாகுங்
கபரமாய்க்கைகாலுஞ்சயித்தியமாகுங்
கனத்துமே சரீரந்தான் பருத்துக்காணும்,
உபரமாயுண்ணாக்கிற்பசபசக்கு
முறுதியாய்த் தீபனசிலேட்டுமந்தானென்னே.''

(யூகி).

என்பதினால் இந்நோயில் மிகுதியாகப் பசியுண்டாகும். உடல் முழுமையும் எரிவுண்டாகும். நெஞ்சடைத்துத் தாங்க முடியாத வலியுண்டாகும். உடல் அழன்று நோயுண்டாகும். கைகால்கள் குளிர்ந்திடும். உடல் கனத்துப் பருத்துக்காணும். உள் நாக்கில் பசபசப்பு உண்டாகும். என்னும் குறி குணங்களாம்

(சி.ம.)

### 5. மந்த ஐய நோய் (மந்தசிலேட்டுமம்).

''தானென்ற வயிறதனில் மந்தமுண்டாய்ச்
சலங்கட்டு மலங்கட்டுஞ் சயித்தியமாகும்,
ஊனென்ற உடம்பதனில் வியர்வையாகு
மோக்காளமிகவாகி உயர்மூச்சாகுங்,

காலென்ற அடிவயிறு கல்லுப்போலாங்
கனத்திருமலாகியே காறலுண்டாம்.
வாலென்ற வாய்கைத்துத்துவர்ப்புகாணு
மந்தமாஞ்சிலேட்டும மென்றே வழுத்தலாமே.''

(யூகி).

என்பதினால் இந்த நோயில் வயிற்றுள் மந்தமுண்டாகிச் சிறு நீரும் எருவும் கட்டுப்படல்; ஐயமிகுதல், வியர்த்தல், வாய் குமட்டல், ஓக்களித்தல், பெருமூச்சு வாங்கல், அடிவயிறு கனத்துக் கல்போலாதல், நெஞ்சு வறண்டு மிக்க இருமலுண்டா தல், வாய் கைப்பாகவும், துவர்ப்பாகவுமிருத்தலாகிய குறி குணங்களைப் பெறும்.

### 6. வளி ஐய நோய் (வாத ஐய நோய்).

''வழுத்தவே வயிறுதான் பொருமிக்கொள்ளும்
வலித்துமே வலியிறங்கி நீர்க்கடுக்கும்
அழுத்தவேயங்கமெல்லாங்குழிகள் வீழு
மதரங்கள் பல்லெல்லாங் கறுத்துக்காணும்,
விழுத்தவேமேனி யெல்லாவலியுண்டாகு
மேகம்போல் நீரிறங்கும் வெள்ளை காணும்
பழுத்தவே பல்லுக்குட்குடைச்சலாகும்
பாரமாய்வாதசிலேட்டுமத்தின் பண்பே.''

(யூகி).

என்பதினால், இந்த நோயில் வயிறுபொருமி அடிவயிறு வலித்து நீரிறங்கும். நீர்த்துளையில் கடுப்பு, உடல் வீங்கல், அவ்வீக் கத்தை விரலால் அழுத்திப் பார்க்கக் குழி விழும். உதடும் பற் களும் கறுக்கும். உடல் முழுவதும் வலிக்கும். நீரில் வெள்ளை கலந்திறங்கும். பல் வலிக்கும். இத்தியாதி குறி குணங்களை இந்நோயில் காணலாம்.

(சி.ம.)

### 7. அழலைய நோய் (பித்த சிலேட்டுமம்).

''பண்பாகக் கண்மயங்கிக்கிறுகிறுக்கும்
பத்தியந்தான் மிகுதியாயசதியாகும்
உண்பாக வசனமிகத்தானுஞ்செல்லா
ஊறியேவாய் நீர்தான் மிகவுண்டாகும்

கண்பாகக் கண்டத்திற்கோழைகட்டுங்
கனக்கவேயிருமலோடுமூச்சுமாகு
மின்பாகமேனியுமோமஞ்சளிக்கு
மிக்க பித்தசிலேட்டுமத்தின் விவரந்தானே.''

(யூகி).

என்பதினால் இந் நோயில், கண்களை மயக்கித் தலை கிறு கிறுக்கச் செய்யும். உடல் அசதி, உணவு கொள்ளாமை, வாய் நீரூறல், தொண்டையிற்கோழை கட்டல், இருமல், பெரு மூச்சு, உடல் மஞ்சளித்தலாகிய குறி குணங்களுண்டாகும்.

(சி.ம.)

8. இருகுற்றக் கலப்பு ஐய நோய் (தொந்த சிலேட்டுமம்).

''விபரமாய் மேனியெங்கும் யதிற்சியாகும்
விக்கலொடிருமலாய்ச்சுவாச முண்டாம்
அபரமாய்ச் சுரமுடனேயசதியாகு
மழன்றுமேயுடம்பெங்குமெரிவுண்டாகுந்,
தபரமாய் அன்னமுந்தான்பொசிக்கொட்டாது
சளியொடு இருமலுமாய்ச் சண்ணாநிற்குங்
குபரமாய்க் குளிரோடு மயிர்க் கூச்சுண்டாங்
கொடிதான தொந்தசிலேட்டுமம் யசாத்தியம்.''

(யூகி).

என்பதினால் தொந்த ஐயநோயில்உடல் முழுவதும் வெப்பமாகும். விக்கல், இருமல், பெருமூச்சு, மிகுந்த சுரம், இவையுண்டாகும். உடல்வன்மையற்றுப்போம், உடலெங்கும் எரிவுண்டாகும். தாபத்தோடு உணவு செல்லாது. இருமலுடன் கோழை வெளியாகும். உடல் குளிரல், மயிர்க் கூச்செறிதல் என்னும் குறி குணங்களுண்டாம். இது தீரா நோய் எனவுங் கூறுவர்.

9. முப்பிணி ஐய நோய் (சன்னி சிலேட்டுமம்).

'' கொடிதாக நாவறண்டு கறுப்புமாகுங்
குளிர்ந்துமே சுரமுண்டா மெரிவுண்டாகுங்
கடிதான உடம் பெங்குமிசிவுகாணுங்
கனமான வசதியோடு மறதியாகுந்

தடிதாகத்தாடையோடு கன்னங்காதுந்
தாக்கான புருவமொடு நாசியுச்சி
படிதாகத் துடித்துமே படபடக்கும்
பாகசன்னிசிலேட்டுமமென்றே பகர்ந்திடாயே.''

(யூகி.)

என்பதினால், சன்னி ஐயநோயில், நா மிகவும் வறண்டு கருத்துக் காணும். உடல் குளிரும். சுரமுண்டாகும். உடம்பில் இசிவுண்டாகும். உடல் வன்மையற்று ஞாபகமறதியுண்டாகும். தாடை, கன்னம், காது, புருவம், நாசி, உச்சி, இவைகள் துடித்துப் படபடத்தல் என்னும் குறி குணங்களைக் காட்டும்.

## 10. சுர ஐய நோய் (சுர சிலேட்டுமம்).

'' பருகவே சுரந்தானும் பலகாலுண்டாம்.
பாரமாயுடம்பெங்கும் வலியுண்டாகும்,
அருகவேயடிக்கடிக்கு வியர்வையாகு
மன்னந்தான் கொண்டுடனே வாந்தியுண்டாம்,
உருகவே வயிறெல்லா முளைச்சலாகு
முப்பிசமுமேல் மூச்சுமிருமலுண்டாங்
கருகவே நாவறண்டு நீர்தாகிக்குங்
கனமான சுரசிலேட்டுமங்காணச் சொல்லே.

(யூகி.)

என்பதினால், இந்நோயில், பல முறை விட்டு விட்டு சுரங்காய்தல், உடல் கனத்தல், உடல் வலித்தல், சுரம் விடும் போதெல்லாம் வியர்த்தல், வாந்தி எழல், வயிறு நொந்து உப்பி மேல் மூச்சு மிருமலுமுண்டாதல், நாகருத்து வறண்டு நீர் வேட்கை முதலிய குறி குணங்களை உண்டு பண்ணும்.

(சி. ம.)

## 11. பெருங் கழிச்சலையம் (அதிசார ஐய நோய்).

'' சொல்லவே வயிறு தனிற்குத்தலுண்டாஞ்
சூலையாய் வலித்துமே சுழன்று விம்மும்,
அல்லவேவிலாப் பக்கமிரைச்சலாகி
வதிசாரம் போற்சிவந்து வசதியாகு

மல்லவே மார்போடு நெஞ்சு நொந்து
வாய் வறண்டு இருமலொடு மூச்சுண்டாக்குந்,
தல்லவே தாகமுடனெரிவு முண்டாந்
தவிக்குமேயதிசார சிலேட்டுமந் தானே ''.

(யூகி.)

என்பதினால், இந்நோயில் வயிற்றுள் குத்தல், சூலை நோய் போன்று வயிறு சுழன்று வீங்குதல், விலாப்பக்கங்களில் இரைதல், சிவந்த நிறத்தோடு கழிதல், சோர்வு, மார்பும் நெஞ்சும் நோதல், வாய் வறண்டு இருமலோடு மூச்சுவாங்கல், நீர் வேட்கை, உடல் எரிதலாகிய குறிகுணங்களாம்.

## 12. நீரைய நோய் (சல சிலேட்டுமம்).

'' தவிக்குமே தண்ணீர்தான் மிகவுங்கேட்குஞ்
சலஞ்தானுஞ்சிக் கென்று தடித்திறங்கும்
அவிக்குமே யடிக்கடிக்கு நீரிறங்கு
மனலாகத்தழன்றுமே வாலோசிக்குங்
கவிக்குமே குரல்தானுங் கம்மலாகுங்
கனமாகக் கோழையோடு, சிலேட்டுமம் வீழும்,
பவிக்குமே பல்லெல்லா மலைச்சலாகும்
பாகமென்ற சலசிலேட்டுமம் பகர்ந்திடாயே ''

(யூகி.)

என்பதினால், நீரையநோயில், நீர்வேட்கைமிகுந்து நீரை அடிக்கடி பருகல், நீரைக்குடிக்கும் போதெல்லாம் தொண்டையில் தட்டுப் பட்டு உள்ளிறங்கும், சிறு நீர் அடிக்கடி வெளியாகும். குரற்கம் மும், இருமிக் கோழை கக்கும், பற்கள் அலைதலாகிய குறி குணங்கள் இதில் காணும்.

## 13. நெருப்பைய நோய் (அக்கினி சிலேட்டுமம்).

' என்றதோரிருமலோடு கோழையுண்டா
மெழிலுடம்பு யக்கினியா யெரிபறந்து
தன்றெனவே கால்கையு மழற்சியாகிக்
கண்ணோடு மூக்குமேயெரிவாய்க் காணும்

தன்றெனவே தாகமது மிகவுமுண்டாஞ்
சயித்தியமாய்க்கால் கைகள் குளிர்ந்துகாணும்
உண்றெனவேயுண்டபின்பு பசியேயாகு
முறுதியக்கினி சிலேட்டுமத்தினுண்மைத்தானே ''.

(யூகி.)

என்பதினால், இந்நோயில் ஐயத்தோடு வெப்புக் கூடியதனால் சுரம், இருமல், கோழை கட்டல், கால் கைகள் மூக்கு இவைகளில் எரிவுண்டாதல், நீர்வேட்கை முதலிய குறி குணங்களுண்டாகும், சில வேளை சைத்தியம் போல் கால் கைகள் சில்லிடும். எவ்வளவு தான் உண்ணினும் உடனுக்குடன் பசியெடுக்கும் என்பதன் குறி குணங்களையுமுண்டு பண்ணும்.

(சி.ம.)

## 14. பெரு ஐய நோய் (பூத சிலேட்டுமம்).

'' உண்மையாய்க் கண்ணுருட்டி விழித்துப்பார்க்கு
மூமையைப்போல் தானிருந்தே உரத்துப்பேசுங்
குண்மையாய்க் குறட்டோடு மூச்சுவாங்குங்
கொடி கொடியாய்ச்சளியோடு மிருமலாகுந்,
தெண்மையாய் மேனி யெங்கு மிகவேவேர்க்கும்
நெறு நெறெனப்பல்தனையே மிகக் கடிக்குந்
தண்மையாய்ச்சந் தோஷவார்த்தைபேசி
சண்டைகொள்ளும் பூதசிலேட்டு மந் தானாமே''. (யூகி.)

என்பதினால், இந்நோயில் வெறி கொண்டவனைப்போலக் கண்களை உருட்டி விழித்துப்பார்க்கும் சில வேளை பேசாதிருக்கும் சில வேளை உரத்துப் பேசும். குறட்டையோடு மூச்சுவாங்கும், இருமலோடு சளி வெளியாகும். வியர்க்கும் பற் கடிக்கும் இனிமையாகப் பேசிக் கொண்டிருக்கும்போதே சண்டையிடுதலாகிய குறி குணங்களாம்.

(சி. ம.)

## 15. முயலக ஐய நோய்.

'' தானான சடமெல்லாம் வலிப்புகாணுஞ்
சரீரத்திலுணர்ச்சியற்றுத் தளர்ச்சிகேடாம்,
வேனான கண்தானுஞ் சிவந்துகாணும்
மிகக்கண்ணீர் பாய்ந்துமே மேனிகன்றும்,

ஊனான வுடம்பெங்குங் கருகிக்காணு
முறுதி மலசலம் விழுதல் தெரிந்திடாது,
மூனான மூச்சோடு விருமலாகு
மூர்க்கமா முயலக சிலேட்டும சாத்தியம்". (யூகி.)

என்பதினால், இந்நோயில் உடம்பெங்கும், வலி (இசிவு) காணும். உணர்ச்சியற்றுத் தளர்ந்து கண் சிவந்து நீர்வடியும். உடல் கன்றிக் கருத்துக் காணும். தன்னையறியாமலேயே சிறுநீறும் எருவும் வெளியாகும். இருமலோடு பெருமூச்சு வாங்கும் இத்தியாதி குறி குணங்களை இதில் காணலாம். இது அசாத்தியமாகும். (சி. ம.)

## 16. வெறி ஐய நோய் (வெறிசிலேட்டுமம்).

" முயல்போலே விழித்துமே முருக்குமீசை
முனையாக எழுந்திருந்து முறுக்கிப்பாயும்,
பயல்போலப் பல்லையே மிகத்திறக்கும்
பாடுமே சங்கீதம் பலகாலுந்தான்.
கயல்போலக் கண்களெல்லாஞ் சிவந்துகாணுங்
காயிலைபோல் உடம்பெங்குமிகக் கருக்கும்,
உயல்போல உறுமியே உதடுகாயு
முலைச்சலாம் வெறிசிலேட்டும உண்மைதானே". (யூகி.)

என்பதினால், வெறி ஐயநோயில், வெறி நோயில் காணும் குறி குணங்கள் போன்று கண்களை விழித்துப்பார்க்கும், மீசையை முறுக்கும் எழுந்து பிறர்மேல் பாயும். பல்லைக் காட்டிப் பலமுறைபாடும், இயற்கைக்கு மாறான தொழில்களைத் தோற்று விக்கும். கண் சிவக்கும், உடல் கருக்கும். உதடு காய்ந்து போகும். இக்குறி குணங்களை இதில் காணலாம்.

(சி. ம.)

## 17. கலைலை ஐய நோய் (விகார சிலேட்டுமம்).

" வெறிச்சுமேமேனியெல்லாமோடியெங்கு
மிடுக்காகப் பாடுமே சங்கீதந்தான்
மறிச்சுமே மங்கையர் மேல் சிந்தையாகு
மனதொன்று மற்றொரு காரியத்திற் செல்லா

வறிச்சுமே சஞ்சலங்கள் தனக்குட்பேசுஞ்
சாப்பாட்டு மேனினைவு தரி கொடாது
குறிச்சுமேமயக்கமாம் விகாரமாகுங்
கூறினோம் விகாரசிலேட்டுமத் தினுண்மை.''

(யு.கி.)

என்பதினால், இந்நோயில், உடலெங்கும் ஏதோ ஓடுவது போன்ற தோற்ற முண்டாகும். மனம் போனபடி பலவகைப் பட்ட பாடல்களைமிடுக்குடன் பாடல், பெண்கள் மேல் இச்சை வைத்து வேறொன்றிலும் புத்தி செல்லாதிருத்தல், மனம் வருந்திப் பல வாறாகப் பேசல், உணவின் மேல் நினைவு செல்லாமை, மயக்கம், முகம் வேறு பாடடைதலாகிய குறி குணங்களை விளைவிக்கும்.

(சி.ம.)

18. சூதக ஐய நோய் (சுரோணித சிலேட்டுமம்)

உண்மையாய் முழங்காலில் மிகக்குடைந்து
உளைந்துமேமுதுகோடு விலாப்பக்கங்கள்
கண்மையாய் முழங்கைகள் முழங்கைச் சந்து
கடினமாய் வீங்கியே குடைச்சலுண்டாந்
தண்மையாய்ச்சளி கட்டுந் தாகமாகுஞ்
சாதகமாயிருமியே மூச்சுண்டாகுந்
திண்மையாய் நாவறண்டு தித்திப்பாகுஞ்
செயமான சுரோணிச்சிலேட்டு மந்தானே.''

(யூ.கி)

என்பதினால், இந்நோயில், முழங்கால் குடைதல், முதுகும், விலாவும் உளைதல், முழங்கால், முழங்கை இவற்றின் பூட்டுகள் வீங்கிக் குடைதல், இருமிக் கோழை கக்கல், பெருமூச்சுண்டாதல், தொண்டையில் சளி கட்டல், நாவறண்டு நீர் வேட்கை மிகுதல், நாயினித்தலாகிய குறி குணங்களுண்டாம்.

(சி.ம.)

19. புண் ஐயம் (வீரணசிலேட்டுமம்).

'' தானென்ற தொண்டையினிற் புண்ணுமாகிச்
சளியோடு சீத்தானுங் கலந்து வீழுங்
கானென்ற கழுத்தோடு பிடரிகன்னங்
கனமாக வீங்கியே காய்ச்சலுண்டாங்

கோனென்ற குளிரோடு எரிவுண்டாகுங்
கொக்கென்றே இருமியே கூவலுண்டாம்.
வேனென்றமிடறெல்லாம் நாவும் புண்ணாம்
மிகவிரணசிலேட்டு மத்தின் விவரந்தானே.''

(யூகி.)

என்பதினால், விரண ஐய நோயில், தொண்டையிற் புண்ணாகிச் சளியுஞ் சீழுங் கலந்து வெளியாகும். புறங்கழுத்து, கழுத்து கன்னம் இவைகள் வீங்கும். சுரம், குளிர், உடம்பெரிவு, இருமல், நோய் தாங்காது கத்துதல், தொண்டையும் நாவும் புண்ணாதல் என்னும் குறி குணங்களையும் உண்டு பண்ணும்.

(சி.ம.)

## 20. நாற்ற ஐய நோய் (துர்க்கந்த சிலேட்டுமம்).

'' விரணமாய்ச் சீயோடு ரத்த முண்டா
மிகவிருமி மீன்றண்ணீர் போல நாறும்,
அரணமாயன்னத்தை இரங் கொட்டாது
அடி வயிறு வீங்கியே கால் கை வீங்குந்,
தரணமாய்த் தாகமே மிக வுண்டாகுஞ்
சரீரந்தான் மிக வற்றித் தழலாய் வேர்க்குந்,
துரணமாய விழ்தந்தான் பலித்திடாது
துற்கந்த சிலேட்டுமந்தான் சாத்தியமாமே.''

(யூகி.)

என்பதினால், இந் நோயில், உடலெங்கும் புண் உண்டாய் எளிதில் உலராது அப் புண்களில் சீழுங் குருதியும் பெருகி மீன் கழுவிய நீர் போன்று ஒழுகி நாற்ற முண்டாகும். அன்றியும், சோறுகூட விழுங்க முடியாமற்போம். அடி வயிறும் கால் கைகளும் வீங்கும். நீர் வேட்கை உடல் வற்றிப்போதல், வியர்த்தலாகிய குறி குணங் களுமுண்டாம். இது தீராத நோயாகும்.

(சி.ம.)

## 21. துடைக்கு மைய நோய் (அநித்திய சிலேட்டுமம்).

'' கந்தமாங்காச மொடு இருமலாகிக்
கனக்கவே தும்மலாய்க் கருதிவற்றி,
பந்தமா மேனி யெங்கு மெரிவுண்டாகும்
பாண்டுவாய் மேனி யெங்கும் மிக வெளுத்து,

உந்தமா யோக்காள மிக வுண்டாகு
முயரமாய்க் கிறுகிறுத்துக் கீழே தள்ளுஞ்,
சந்தமாய்க்குரல் கம்மிப் பேசொட்டாது
தனி நித்திய சிலேட்டுமதாட்டீகந்தானே.''

(யூகி.)

என்பதினால், இந்நோயில், தும்மலையும், இருமலையும்உண்டாக்கி உடலைக் கருகவற்றச் செய்து எரிச்சலையு முண்டாக்கும். குருதியைக் கெடுத்து உடலை வெளுக்கச் செய்யும். அத்துடன் வாந்தியாதல், தலை கிறுகிறுத்தல், கிறுகிறுப்பினால் கீழே விழல், குரற் கம்மல், ஒலி குன்றல், பேசமுடியாமையாகிய குறி குணங்களு முண்டாம். இந் நோய் நீண்ட நாள்கள் நோயால் படுக்கையில் கிடந்தோருக்கும், வயது முதிர்ந்தோருக்கும் வருமாதலால் இந் நோய் தீராதென்பர்.

### பொதுக் குறி குணங்கள்.

குறிப்பு.—ஐயக் குற்றம் மிகுதியாகி மேற் கண்ட பிரிவுகளுக் குரிய குறி குணங்கள் தோன்றுமாகையால் இங்கு விரித்துக் கூறத் தேவையில்லை.

(சி.ம.)

## 54. பெருநோய்.

வேறு பெயர்கள் : குறை நோய் ; அழுகு நோய் ; குட்ட நோய் ; தொழு நோய் என்பனவாம்.

இயல்.—இந்நோயில் உடல் மினு மினுத்தல், படைகளுண்டாதல், கழலைகள் உண்டாதல், கைகால்களின் விரல்கள் அழுகுதல் அல்லது அவைகள் வளைந்து குறைதலாகிய இயல்புடைய நோயாம்.

இந்நோய் மற்றெல்லா நோய்களைவிட மிகவும் வெறுக்கத் தக்கநோயாதலாலும், தீருவது அரிது என்பதையும் உத்தேசித்து இதற்குப் ''பெருநோய்'' எனப் பெயராயிற்று எனலாம். ''குட்டமுதற்போகவே குணமான வன்னி பற்பம் குணமாய்ச் செய்து'' என்றார் யூகி வாதக் கோவையில். இதில்னின்றும் மகா குட்டம் என்னும் பெயரையுடைய '' பெரு நோய் '' மற்றெல்லா நோய் களிலும் மிகக் கொடியது என்பது புலனாகிறது.

## நோய் வரும் வழி

1. " விளம்ப வே மிகுந்த உஷ்ணந்தன்னாலு
மிகுந்த சீதளத்தாலு மழற்சியாலும்,
வளம்பவே மந்தத் தால் வாந்தியாலும்
மகத்தான பெண்ணோடு மருவலாலும்,
கிளம்பவே கிலேசங்கள் மிகுதலாலும்
கெடியான வுறக்கங் களடைதலாலும்
தளம்பவே மயிருகிர்கள் தவிடு மண்கள்
சாதத்திற் பருகலால் மிகுக்குங் குட்டம்."

(யூகி).

2. " குட்டந்தான் பதினெட்டு வரவே தென்னிற்
குரு நிந்தை சிவ நிந்தை மறையோர் நிந்தை,
திட்டந்தான் தேவதை தூஷணைக் குரோதம்,
செப்பலாற்றிரு டலாற் பரதாரத்தை,
அட்டந்தானாசையாலடைக் கலத்தை
யபகரித்த அகதி பரதேசி தன்னை,
வட்டந்தான் வைதலாற்கற்பழிப்பால்
வந்திடுமே பதினெட்டுக் குட்டந்தானே."

(யூகி.)

3. " ஆச்சென்ற பதினெட்டுக்குட்டந்தானு
மவரவர்கள் செய்கின்ற வதர்மத்தாலாம்,
தேச்சென்ற சிவாலயத்திலுச்சிட்டங்கள்
செய்தவர்கள் சிவ நிந்தை பண்ணினோர்கள்,
மூச்சென்ற பெரியோரைத் தூஷித்தோர்கள்
மூர்க்கமாயடைக்கலத்தை யெடுக்கின்றோர்கள்,
கூச்சென்றதினை யளவுங் குறைந்த கூலி
கொடுக்கின்றோர் குட்டத்திற் கூடுவாரே."

(யூகி.)

என்பதினால், குட்ட நோய் என்னும் பெரு நோய் வருங் காரணத்தை உரைக்குமிடத்து, அழுகிய மீன், நண்டு, நத்தை, சிப்பி இவைகளை மிகுதியும் உண்ணலாலும், வேகாப் பொருள்கள், மந்தப் பொருள்கள் இவைகளைக் கொள்ளலாலும், வயிறு நிறைய உண்டவுடன் யோக நிலையில் நிற்றல், இந் நோயுற்றவர்களுடன்

நெருங்கியிருத்தல், அவர்கள் படுக்கையில் படுத்திருத்தல், முதலிய காரணங்களாலும், அதிக உட்டிணம், அதிக சீதளம், அழற்சி, வாந்தி, பெண்களோடு மருவல், மனக்கிலேச மிகுதல், மிகுந்த உறக்கம், சாதத்துடன் மயிர், தவிடு, மண் இவைகள் சேர்ந்து பருகல் ஆகிய இத்தியாதி காரணங்களாலும் இந் நோயுண்டாகும். தன் வினை, பழ வினை, தாய் தந்தையர் வழி ஆகிய இவற்றாலும் இந் நோய் பிறக்கும். அன்றியும்.

'' வியாதியுள் மூவாறு விளங்கிய குட்டங்கேள்,
சுயாதிக் கிரந்தி சுழன்மேகத் தாலும்,
பயாதி மண்ணுளிப் பல வண்டினாலெட்டு,
நீயாதிப்புழு நாலாய் நின்றதிக்குட்டமே. ''

(திருமூலர் வாக்கு).

என்பதினால் இப்பதினெட்டு வகைப் பெரு நோயில் கழலை (கிரந்தி) நோய்களாலும் மேக நோய்களாலும் பத்து வகைப்பட்ட பெரு நோய்களும், மண்ணுளிப் புழுக்களாலும், வண்டு முதலிய பூச்சிகளாலும், தொத்து நோயாகவும் எண் வகைப்பட்ட பெரு நோய்களும் பிறக்குமென அறிக.

## முற்குறிக் குணங்கள்.

இந் நோய் ஆரம்பத்தில் முகம், கால், மார்பு, தொடை, காது, மூக்குத் தண்டு இவைகள் மினுமினுத்துக் காணும். பின்பு தோல் கடினப்பட்டு மயிர்க்கால்களின் இடைவெளியகன்று மிகுந்த வியர்வை யுண்டாகும். நாள்கள் பல செல்லின் தோல் கடினப் பட்டு, உருண்டு திரண்டு கருத்தேனும், சிவந்தேனும் காணும். அதில் மிகுந்த தினவுண்டாகும். அந்த தோல் திமிருடனேனும் அல்லது உணர்ச்சியின்றேனும் காணப்படும். நோயுற்ற யிடத்தில் தீயினால் சுடினும் உணர்ச்சி யிராது. தீப்பட்ட புண்ணும் எளிதில் ஆறாது. கைகால்களில் அடிபட்ட புண்களும் உலராது. நாளுக்கு நாள் பெருத்துக் கொண்டே வந்து எளிதில் உலராது துன்புறுத்தும்.

(சி.ம.)

## நோய் எண்.

1. ''முத்தாகுங் குட்டந்தான்பதினெட்டுக்கும்
முனியான யூகியான் சொல்லக் கேளாய்,
புத்தாகும் புண்டரீகக்குஷ்டத்தோடு
பொருகின்ற விஸ்போடக் குட்டமாகும்.

பத்தாகும் பாமா குஷ்ட ஏக சர்ம குஷ்டம்
பரிவான கர்னகுஷ்டம் சர்மகுஷ்டங்,
கித்தாகுங் கிருஷ்ண குட்டம் அவுதும்பரக் குட்டம்
கெடியான மண்டல குஷ்டமாகு மென்னே.''

2. ''குட்டமாம் பரிச குஷ்ட மோடு
குடிலமாம் விசர்ச்சி காக்குஷ்ட மாகும்,
வட்டமாம் விப்பாதிகாக் குஷ்ட மோடு
மருவலாங் கிடீப குஷ்டந் சர்மதல குஷ்டந்,
திட்டமாந் தத்துரு குஷ்ட மோடு
தாக்கான சித்மா குஷ்டஞ் சதாரு குஷ்டந்
துட்டமாஞ் சுவேத குஷ்டந்தன் னோடொக்கச்
சுயம்பான பதினெட்டுக் குட்டமாச்சே.''

(யூகி முனி.)

என்பதினால் இந் நோயினைச் சிலர் குற்றயளவாகப் பிரித்து அவற்றுள் குறி குணங்களைக் கொண்டு வகுத்துள்ள பதினெண் வகைப் பெரு நோய்களை அடக்கிக் கூறியுள்ளாரெனினும்; தமிழ் நாட்டில் வழக்கத்தில் யூகி முனி நூலில் கூறியவாறு குறி குணங்கள் வாயிலாக வகுக்கப்பட்ட பதினெண் வகைப் பெரு நோய்களைத் தமிழர் வழக்கில் கூறும் பெயரால் அமைக்கப் பட்டன. அவையாவன :—

1. படர் தாமரைப் பெரு நோய் (புண்டரீகக் குட்டம்),
2. கொப்புளப் பெரு நோய் (விச்போடகக் குட்டம்),
3. சிரங்குப் பெரு நோய் (பாமா குட்டம்),
4. யானைத் தோல் பெரு நோய் (ஏகசரும குட்டம்; கஜசரும குட்டம்).
5. காது பெரு நோய் (கர்ண குட்டம்).
6. தோற் பெரு நோய் (சரும குட்டம்),
7. கரும் பெரு நோய் (கிருட்ண குட்டம்),
8. அத்திக்காய் பெரு நோய் (அவுதும்பர குட்டம்),
9. வளையப் பெரு நோய் (மண்டலக் குட்டம்),
10. வலிப் பெரு நோய் (அபரிச குட்டம்)
11. சொறிப் பெரு நோய் (விசர்ச்சிகா குட்டம்),
12. செம்படை (செங்குட்டம்; விபாதிகாக் குட்டம்),
13. பன்றித் தோல் பெரு நோய் (கிடீப குட்டம்),

14. தோல் வெடிப் பெரு நோய் (சரும தல குட்டம்),
15. தடிப்புப் பெரு நோய் (தத்துரு குட்டம்),
16. நாப் பெரு நோய் (சித்மா குட்டம்),
17. புரைப் பெரு நோய் (சதாரு குட்டம்),
18. வெண் படை, வெண் பெரு நோய், வெண் குஷ்டம் (சுவேத குட்டம்),
என்பவையாம்.

(சி. ம.)

இவற்றையே சிலர் குற்றயளவாக வளி, தீ, ஐயம், தொந்தம், முக்குற்றங்களைக் கொண்டு பிரித்துள்ளார். அவையாவன :—

1. வளிக் குற்றத்தால் மண்டைப் பெரு நோயும் ;

2. அழல் குற்றத்தால் அத்திக்காய்ப் பெரு நோயும் ;

3. ஐயக் குற்றத்தால் வளையப் பெரு நோயும் ; அழகுப் பெருநோயும் ;

4. வளி அழல் கலப்பால் நாக்குப் பெரு நோயும் ;

5. ஐயழல் கலப்பால் தோல், புண், புடை, கட்டிப் பெரு நோய்களும்;

6. ஐயவளிக்குற்றத்தால் வெடிப் பெரு நோயும் ;

7. முக்குற்றத்தால் தடிப்பு, புரை, தாமரை, கொப்புளம், சிரங்கு, தோல் வெடிப்பு, கறுப்புப் பெரு நோய்களும் பிறக்குமெனக் கூறுவர்.

இதினின்றும் குற்றயளவாக உண்டாவன ஏழு வகையும் ; நோயிற்காணும் குறி குணங்களைக் கொண்டு பிரிக்கப்பட்டவை பதினெண் வகை எனவும் அறிகிறோம்.

ஒவ்வொரு பிரிவுப் பெரு நோயின் குறி குணங்கள்

(யூகி சிந்தாமணி).

1. படர்தாமரைப் பெரு நோய் (புண்டரீகக் குட்டம்)

“ கூடுமே தாமரையின் பூவிதழ் போல்
குவிந்துமே கறுப்போடு வெளுப்புமாகுந்,
தேடுமே சிவப்பு பலவன்னமாகுந்
தினவு மிக வாகியே சொறியுஞ் செந்நீர்

வாடுமே ஐயத்தினுற்பத்தி யாகி
வருத்த மிகவுண்டாகி நோவுமாகும்,
போடுமே சரீரங்கள் முகங்கள் கால்கள்
புண்டரீகக் குட்டத்தின் புதுமைதானே. ''

என்பதினால், புண்டரீகக் குட்டமென்னும் படர் தாமரைப் பெரு நோயில் உடலெங்கும் தாமரைப் பூ இதழ் போலத் தோலில் குவிந்து புடை யுண்டாய், கருப்பு, வெளுப்பு, சிவப்பு, நிறங்களைப் பெற்றுத்தினவுண்டாகிச் சொறியச் செய்யும். சொறிந்த இடத்தினின்றும் செந்நீர் பெருகும். பின்பு வாடும். மிக்க நோயுண்டாக்கி வருத்தும்.

(சி.ம.)

### 2. கொப்புளப் பெரு நோய் (விஸ்போடகக் குட்டம்)

'' புதுமையாய்ச் சரீரமெங்குந்தின வுண்டாகும்
பெருவெடியாய்திக் கெனத் தீக்கொழுந்து போல,
மெதுமையாய் விட்டெரியும் நல்ல பாம்பின்
விஷப்படம் போலே தடித்து வெளுப்புமாகும்,
சுதுமையாய் மிகச் சொறியுஞ் சிவப்புமாகுந்
துக்கமொடு சஞ்சலமு மிக வுண்டாகுங்,
கதுமையாய் தோலெல்லாந் தடிப்புண்டாகுங்
கனத்த விஸ்போடக மான குட்டந் தானே. ''

என்பதினால் கொப்புளப் பெரு நோயில் உடல் முழுமையும தினவும், எரிச்சலுமுண்டாகிக் கொப்புளங்கள் கிளம்பும். தோல் வெடித்து, தடித்து வீங்கி வெளுக்கும். நமை உண்டாகிச் சிவக்கும். மனவருத்தமுண்டாகும்.

(சி. ம.)

### 3. சிரங்குப் பெரு நோய் (பாமா குட்டம்).

'' தானான தினவுண்டாய் வெளுத்திருக்கும்
தங்கியே சீப்பாயுந் தேகங்குன்றுங்
கானான சரீரமெல்லா மெரிவுண்டாகுங்
கனமான தாமரையின் குடை போலுண்டாம்,
பானான சொறியோடு தினவுண்டாகு
பாம்பினிடத் தோல் போலே வுரிந்து வீங்குங்,
கானான கால் கையுங் குறைந்து காணுங்
கனமான பாமா குஷ்டமாகுந்தானே. ''

என்பதினால், சிரங்குப் பெரு நோயில் உடலில் தினவுஞ் சொறி யுங்கண்டு, சொரிந்தயிடமெல்லாம் வெளுத்துப் புண்ணாகிச் சீழ் வடியும். உடல்குன்றும். உடல் எரியும். பாம்பின் தோல் போல் தோல் உரியும்; வீங்கும். புண் எளிதில் உலராது கால் கைகள் அழுகி நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வருதல் என்னுங் குறி குணங்களுண்டாம்.

## 4. யானைத் தோல் பெரு நோய்
(கஜ சரும குட்டம்; ஏக சரும குட்டம்.)

" தானாகச்ச டந்தானு மிகக் கறுக்குஞ்
சடமெங்குந் தோலுரியுஞ் சிவப்பு மாகும்,
வேனான வறவறெனத் தானிழுக்கும்
வெடிக்குமே சொறிதலாய்த் தினவுண்டாகும்,
கானாகச் சரும குட்ட மிதிலுண்டாகுங்
கடினமாய்க் கால்விரல்கள் கனப்புண்டாகுங்,
கூனாகத்தேக மெங்கும் வலியெடுக்குங்
குறியானஏக சர்ம குட்டந்தானே. "

என்பதினால் யானைத் தோல் பெரு நோயில் உடல் முழுமையுங் கரு நிற மடைந்து தோலுரிந்து சிவக்கும். தோல் வறட்சி யடைந்து வெடித்து நமையுண்டாகும். யானையின் தோல் போல் கடினப் பட்டுத் தோல் சுருங்கி இழுத்துக்கொள்ளும். உடலெல் லாம் வலிக்கும். கால் விரல்கள் கனக்கும். இத்தியாதி குறி குணங்களை இந் நோயில் காணலாம்.

## 5. காது பெரு நோய் (கர்ண குட்டம்).

" சர்மந்தான் மிக வெடிக்கும் பொரி போற்றானுஞ்
சடமெல்லாம் வேதனை பச்சென்றிருக்குந்,
தெர்மந்தான் திரி தோட குண முண்டாகுந்
தேகமெங்கும் பாரிக்குந்திமி ருண்டாகுங்
கர்மந்தான் காக் கணம் பூ நிறமதாகுங்
கண்டிப்பு வீக்கமாய்த் தானிருக்கும்
வர்மந்தான் மனக்கிலேச மிகவுண்டாகு
மா கர்ன குட்டத்தின் மார்க்கந் தானே. "

என்பதினால், காதுப் பெரு நோயில், தோல் பொரி போல் வெடித்து உடம்பெங்கும் வலிக்கும். முக்குற்றங்களின் குணங்கள் தோன்றும். உடல் பருத்துத் திமிருண்டாகும். காதுகளின் விளிம்புகள் காக்கணம் பூவின் நிறத்தைப் போல் கறுத்த நீல நிறமாகும். இக் குறி குணங்களை இந் நோயில் காணலாம்.

### 6. தோற் பெருநோய் (சர்ம குட்டம்)

" மார்க்கந்தான் பசுமையாய் வெளுப்புண்டாகு
மாசிவப்புக் கறுப்புமாய்த் தின வுண்டாகுந்,
தார்க்கமாய்த் தடிப்பு சீப்பாய்ச் சலாகுந்
தசை வ்யிறு கடிதடத்திற் சொறியுமாகுங்,
தேர்க்கமாய்த் திமிரோடு தசையும் பாயும்
தேக்கான எரிச்சலாய் உட்ணமாகுஞ்,
சீர்த்தமாய் வயிறுதனிற் கண்டிப்பாகுஞ்
சர்ம குட்டந் தன்னுடைய சேதி கேளே. "

என்பதினால் தோற் பெரு நோயில், தோல் பசுமை, வெண்மை, சிவப்பு, கருமையாகிய நிறங்களைப் பெறும். தினவுண்டாகித் தடித்து வெடித்து, அதினின்றும் சீழ் வடியும். அடிக்கடி அடி வயிற்றிலும், குறிக்கு மேலிடத்திலும் சொரியச்செய்யும். சொரிந்த இடங்களில் எரிச்சல், வெப்பமாகத் தோன்றலாகிய குறி குணங்களையும், திமிரையுமுண்டு பண்ணும்.

### 7. கரும் பெரு நோய் (கிருஷ்ண குட்டம்)

" சேதியாய்த் தேகமெங்குந்தான் கறுக்குஞ்
சிவப்புடனே சிலேட்டு மத்திலுற்பவித்துக்,
காதியாய்த் தோல் திமிர்த்தே கதித்து நாறுங்,
கனமான தாதுவிலுட்ணந்தாக்கும்,
நூதியாயுடம் பெங்கும் நோவுண்டாகும்,
நுட்பமாம் புறங்காலிலரையிற் காணும்,
தாதியாய்த் தலைதன்னில் மிகுதியாகுஞ்,
சஞ்சலிக்குங்கிருட்டிண குட்டத்தாண்மைதானே ".

என்பதினால் கரும்பெரு நோயில், உடல் முழுதும் கருநிறமாகித் தோல் தடித்து, சிவந்து, திமிர்த்து நாற்றத்தோடு காணலாம். அன்றியும், உடலில் சூட்டையும் வலியையு முண்டாக்கும். பெரும் பான்மையும் இந்நோய் புறங்காலிலும், அரையிலும், தலையிலும் வரும்.

### 8. அத்திக்காய்ப் பெரு நோய் (அவுதுப் பர குட்டம்)

" ஆண்மையயாயத்திக்காய் போலரும்பி,
வடுக்கடுக்காய் முளைத்து மேபெருத்து மெத்தக்,
காண்மையாய்க் காய்ந்துமே உடம்பெங்குந்தான்,
கறுகியே உடம்பு தோல் திரைந்து தொங்கும்,

தோண்மையாய் தேகமெங்குந் திமிருண்டாகுஞ்,
சொறியுமே சரீரத்திற் செந்நீர் பாயும்,
வாண்மையாய் மயக்கந்தான் மிகவுண்டாகும்,
வகுத்ததோர் அவுதும்பரகுட்டந்தானே''

என்பதினால் அத்திக்காய்ப் பெரு நோயில், அத்திக்காய் போலச் சிறிதும் பெரிதுமான கழலைகள் போன்று தோலிலிருந்து முளைத்து எழுந்து நாளுக்கு நாள் பெருத்து அத்திக்காய் காம் போடு தொங்குவது போலக் கழலை கழலையாக உடம்பு முழு மையும் தொங்கும். உடல் கருத்துச் சுருங்கும். உடல் முழுவதும் தினவு, சொறி, திமிர் இவையுண்டாகிச் சொறிந்த யிடத்தில் செந்நீர் பாயும். மயக்க முண்டாகும். இக்குறி குணங்களை இதில் காணலாம்.

## 9. வளையப் பெரு நோய் (மண்டல குட்டம்)

'' வகுத்ததோர் பச்சைவன்னமி ரத்தவண்ண,
மாயிருக்குமுடம் பெல்லாஞ்சிர செல்லாந்தான்,
விகுத்ததோர் தலையிலேவெளுப்பு மாகும்,
மேனியெல்லாமிகத் தடித்துக் கறுப்புண்டாகுந்,
திகுத்ததோர் தினவாகுஞ் சொறியுமாகுஞ்,
சிகப்பான சலம் வீழுஞ் சடமெங்குந்தான்,
வகுத்ததோர் மண்டல குட்டத்தின் செய்தி,
மார்க்கமெல்லாம் பார்த்துணர்ந்து மருவுவீரே ''

என்பதினால் மண்டலகுட்டம் என்னும் வளையப் பெரு நோயில் தலையிலிருந்து உடல் முழுமையும் பச்சை நிறத்தோடு கூடிய சிவப்பு வளைவான படையைப் போலத் தோலுக்கு மேல் தடித் துக் கறுக்கும். அன்றியும், தினவெடுத்துச் சொறியும்படி செய் யும். சொறிந்தயிடத்தில் சிவந்த நீர் வடியும். தலை மயிர் வெளுத்துப்போம். இக்குறி குணங்களை இதில் காணலாம்.

## 10. வலிப் பெரு நோய் (அபரிச குட்டம்)

''மருவவே தேகமெல்லா மிகவே நொந்து,
மாசற்ற ரத்தமெல்லாமிகக் கறுக்குஞ்,
செருவவே சிந்தையெல்லா நோவுண்டாகுந்
தேகமெங்குந்துடிபடா நோவுண்டாகும்,

அருவவே வாயுமிஞ்சியதிக நோவாம்,
அதிரல் வேதனையாகுமிக நீர் தொட்டால்,
பருவவே வீங்கியே வெடிப்புண்டாகும்,
பரந்தவ பரிசகுட்டப் பண்புமாமே ''

என்பதினால் வலிப்பெரு நோயில், உடம்பு முழுமையும் நோதல், குருதி கருநிறமடைதல், மனந்துன்புறுதல், உடல் துடித்து நோதல், குடைதல், குத்தல், நடுங்கல், உடல் வீங்கி வெடித்துப் புண்ணாதல், நீர்வடிதலாகிய குறி குணங்களைப் பெறும்.

11. சொறிப் பெரு நோய் (விசர்ச்சிகா குட்டம்)

'' பரிசமாய் வாத பித்தத்துற்பவித்துப்
பரிந்துதொட்டாலெண்ணெய் போல் வெளுப்புமாகும்,
விரிசமாய்த்தின வெரிப்பு வேதனையுமாகும்
மிகச்சிவப்புத் தடிப்புத் தோலுறப்புமாகும்,
மரிசமாய் காலெரிப்புஞ்சலிப்புமாகு
மகத்தான வெட்கிப்பு வயிறுயர்ப்பு
துரிசமாய்க் கோபிப்புச் சரசரப்பு
துரிசான சுறு சுறுப்பு விசர்ச்சி காக்குட்டமாமே ''

என்பதினால் சொறிப்பெரு நோயில் வளி அழற் குற்றங்கள் மிகுந்து தோலைத் தடிக்கச் செய்து தினவு, எரிச்சல், தாங்க முடியாத வலி இவற்றையுண்டாக்கும். அன்றியும், தோல் வெடித்துப் புண்ணாகிப் பாம்பின் தோல் போன்று மினு மினுத்து உடலுங் கறுத்துப் போதலாகிய குறி குணங்களுண்டாம்.

12. செம்படை (விபாதிகா குட்டம், செங்குட்டம்)

'' சுறுப்பாகச் சிலேட்டும பித்தந் தன்னிற்றான்
துனித்துடம்பிலே வெடித்துயங்காற்ற வொண்ணா,
அறுப்பாக அண்டவொண்ணாத் தணலதாகி,
அழன்று கை கால் கண் காது கண்டந்தானும்,
வெறுப்பாக வெடித்துமே வீங்கிப் புண்ணாம்
மேனியெல்லாம் நற்பாம்பு மின்னலாகும்,
கறுப்பாகச் சந்தெல்லாம் பரவி நிற்குங்
காரணமாம் விபாதிகா குட்டமாமே ''

என்பதினால் செம்படை நோய் ஐயழல் கலப்பால் பிறக்கும், உடலின் தோல் வெடித்து எரிச்சலையும் சூட்டையு முண்டாக்கி, கை, கால் கண் காது, கழுத்து இவ்விடங்களில் தோல் வெடித்து,

சீழ் கோர்த்து, வீக்கத்தையும், புண்ணையு முண்டாக்கும். வெடித்துப் புண்ணாகாவிடங்களில் தோலானது பாம்பின் தோலைப் போல் மினு மினுத்துக் காணும். கை கால்களின் கச்ந்துகளில் தோல் கறுத்துத் தடித்து சந்துகளில் காணும்.

### 13. பன்றித்தோல் பெரு நோய் (கிடீப குட்டம்)

"காரணமாய்ச் சரீரமெங்கும் பச்சையாகுங்
கனத்து யானைத்தோலின் தடிப்புமாகும்,
மாரணமாய் மகாதினவு சொறியுமாகு
மகத்தான மூத்திரந்தானடிக் கடிக்கு,
நாரணமாய் சின்னீர தாகு மேனி
நலக்கமாய் நாற்றந்தான் மிகவுண்டாகுஞ்,
சீரணமாய்ச் சிவப்பட்சி வாதமாகுஞ்
சடந்தானு மூதுமே கிடீப குட்டம்."

என்பதினால் பன்றித் தோல் பெரு நோயில் உடலின் நிறம் பச்சை யாகித் தோல் பன்றியின் தோல் போலத் தடித்திருக்கும். தினவுஞ் சொறியு முண்டாம். சிறு நீர் செந்நிறத்தோடும் நாற்றத்தோடும் இறங்கும். உடலில் பொறுக்க முடியாத நாற்றமெழும். நோய் முதிரின் பட்சவாதமும் தொடரும் என்பதாம்.

### 14. தோல் வெடிப்புப் பெரு நோய் (சர்மதல குட்டம்)

"கிடீபமாயுடம்பு வலியதிகமாகுங்
கீற்றாக வெடித்துவேதனையுமாகும்,
தடீபமாய்த் தடிப்பாகிச் செம்மையாகுந்
தனைத்தொட்டால் நோக்காடாய்த் தினவெழுப்பும்,
வடிபமாய் மயக்கோடு அசதி காணும்
மாறாத நோக்காடு மிகவேயுண்டாந்,
திடீபமாயுதரத்தில் வலியுமாகுஞ்
செப்புகின்ற சர்மதல குட்டமாமே."

என்பதினால் தோல் வெடிப்புப் பெருநோயில், உடம்பெங்கும் வலித்துக்கீறல் கீறலாக வெடித்துத் தடித்துச் சிவப்பு நிறமாகும். நோயுற்றயிடங்களைத் தொடினும் நோவு மிகுதியாகும். தின வெடுக்கும், மயக்கமும், தளர்ச்சியும் உண்டாகும். வயிறு வலிக்கும் என்பதாம்.

## 15. தடிப்புப் பெரு நோய் (தத்துரு குட்டம்)

''சர்மந்தான் சிவப்பாக வட்டணித்துச்
சலவைபோல் வெளுக்குமே தினவுண்டாகும்,
வர்மந்தான் ரோகமது மிகவுண்டாகும்
மயிரெல்லாஞ் சுருண்டுமே உண்டையாகும்
கர்மத்தான் பித்த சிலேட்டும மிகுக்குங்
காயந்தான் கதித்துமே திமிருண்டாகும்
தர்மந்தான் சடமெல்லா மூதலாகுந்
தாக்கானதத்துருக்குட்டந்தானே.''

என்பதினால் தடிப்புப் பெருநோயில், தோலில் வட்ட வட்டமாகப் புடையுண்டாகிச் சிறிது வெளுத்தும், சிவந்தும் தினவையுண்டாக்கும். மயிர்கள் சுருண்டு திரட்சியாகும். அழலையும் பெருகி உடலைக் கதிக்கச் செய்து, திமிரையுண்டாக்கி உடலை ஊதவுஞ் செய்யும் என்னும குறி குணங்களாம்.

(சி.ம.)

## 16. நாப்பெரு நோய் (சித்மா குட்டம்)

''தாக்கான வாத பித்தத்துற்பவித்துத்
தளிரான சுரைப்பூவின் வண்ணமாகி,
வாக்கான வடிவமெல்லாந் திமிருண்டாகி
வட்டணித்துப் பசு மஞ்சள் வன்னமாகுந்,
தேக்கான திமிரோடு செந்நீருண்டாய்த்
தேகமெங்கும் அசைக்கொணாச் செழுமையாகும்,
நீக்கான நினைவோடு மறதியாகும்,
நிலவரமாஞ் சித்மாவென்னுங் குட்டந்தானே''

என்பதினால் நாப்பெரு நோயானது வளி அழல் பெருக்கால் உற்பத்தியாகும், உடலைச் சுரைப்பூ போன்று வெண்மையாக்கும். உடல் முழுமையும் திமிரச் செய்து பசுமஞ்சள் நிறத்தை யுண்டாக்கும். உடலை அசைக்க முடியாதபடி நோவுண்டாகும். நினைவு அழியும் ஆகிய இக்குறி குணங்களுண்டாம். (சி.ம.)

## 17. புரைப் பெரு நோய் (சதாரு குட்டம்)

''சித்தான தண்டிப்பாய் ரத்த வன்னம்
செழும் பச்சை வெள்ளையாய்ச் சிவப்புமாகும்
எத்தான வெரிப்போடு தினவுமாகும்.
எளிதான சிலேட்டும வாதத்துற் பத்தி,

பத்தான கரடுகட்டிப் புண்ணுமாகும்
பாம்பு தோல் போற்றிரைந்து பருத்துக் காணும்,
வித்தான மூக்கோடு காது கன்னம்,
மிகத்துடிப்பாஞ் சதாரு குட்டந்தானே''.

என்பதினால் புரைப்பெரு நோயில், உடல் குருதியைப் போல்சிவப் பாகவோ அல்லது பசுமையும் வெண்மையும் கலந்த சிவப்பாகவோ மாறும். படைகளுண்டாகி எரிச்சலும தினவுமுண்டாகும். சொறிந்தயிடங்களில் கரடுகட்டி புண்ணாகிப் புரையோடும். இவ்வாறு கரடுகட்டியதானது பாம்பைப் போல் உருண்டும் நீண்டும் பருத்துங்காணும். மூக்கு, காது, கன்னம் இவைகள் துடிக்கும். இந்நோயில் ஐயவளிக்குற்றங்கள் மிகுந்திருக்கும் என்பதாம்.

## 18. வெண்படை, வெண்குட்டம், வெண் பெரு நோய் (சுவேத குட்டம்)

''தடிப்பாகத் தவள நிறம்போல் வெளுத்துச்
சர்வாங்கமும் வெளுத்தாற்றான்றிரும்பும்,
மடிப்பாக மயிர் வெளுத்தாலசாத்தியமாகும்
வரிவுதடுவுள்ளங்கைக் குதங்குய்யந்தான்,
நெடிப்பாக நெருப்புப் பட்டது போற் புண்ணாய்,
நிறமிருந்தாலசாத்திய மென்றே யுரைக்கலாகும்,
வெடிப்பாக மேனியெல்லாம் வெளுத்து வீங்கில்
வெண்சுவேத குட்டமென்றே விளம்பலாமே.''

என்பதினால் வெண்பெருநோயில், உடலின் தோல் தடித்தேனும் தடிக்காமலேனும் வெளுத்துக் காணும். உடல் முழுமையும் மயிரானது வெளுத்துக் காணும். உதடு, உள்ளங்கை, எருவாய் குறி முதலிய இடங்களில் நெருப்புப் பட்டாற்போல் எரிச்சலும, வெண்மை கலந்த நிறமும் தோன்றும். வெண்படைகளில் கறும் புள்ளி காணின் தீரா நோயாகும். தோல் தடித்துக் கீறினும் நோய் அறிய முடியாத வெண்படை நோய் பெரு நோயால் வருதலால் இஃது பெரு நோய் போலவே தொத்து நோயாகும். எளிதில் தீராதாம். தோலோடு ஒட்டி வரும் வெண் படைகளிற் சில ஆண் பெண் கூட்டால் பிறக்கும் மேகநோயாகிய கொறுக்கு (பொக்கு) நோய்கட்குத் துணை நோயாகவும் வருவதுண்டு எனச் சித்த மருத்துவம் கூறுகின்றது.

(சி. ம.)

### தீரும் தீராதவை

#### தீருபவை.

1. ''குட்டந்தான் பதினெட்டில் சாத்தியந்தான்
கூறக்கேள் விச்போடம் பாமா குட்டம்,
கிட்டந்தான் கசசரும குட்டமோடு
கிருட்ண குட்டமவுதும்பர குட்டந்தானும்,
திட்டமாந்தத்துரு குட்டமோடு
செயசித்மா குட்டங்கி டிப குட்டந்,
தட்டந்தான் மிகுந்த சதாரு குட்டம்
சரும குட்டம் சாத்தியமாமென்னே.''

#### தீராதவை

2. ''ஆமென்ற பத்துந்தான் சாத்தியமாகு
மசாத்தியமதுதான் எட்டுயறிந்து பாரு,
போமென்ற பூர்வத்தின் கன்மத்தாலும்
புவிதனக்கும் மிகுகன் மஞ்செய்த பாவம்,
பாமென்ற பெரியோர்கள் சாபத்தாலும்
பாதகங்கள் மனதறியப் பண்ணும் பேர்க்கும்,
கோமென்ற குட்டமாம் ரோகம் வந்து
கூடுமென்று யூகி முனி கூறினேனே.''

(யூகி முனி).

என்பதினால், (1) கொப்புளப் பெரு நோய், (2) சிரங்குப் பெரு நோய், (3) யானைத்தோல் பெரு நோய், (4) கரும் பெரு நோய், (5) அத்திக்காய்ப் பெரு நோய், (6) தடிப்புப் பெரு நோய், (7) நாப் பெரு நோய், (8) பன்றித் தோல் பெரு நோய், (9) புரைப் பெரு நோய், (10) சருமப் பேரு நோய் (தோல் பெரு நோய்) ஆகிய இப் பத்துவகைப் பெரு நோய்களும் தக்க மருந்துகளாலும், உணவுகளாலும், மனதின் தூய்மையான செயல்களாலும் தீருவனவாகும் எனவும், மற்றைய எண் வகைப் பெருநோய்கள் தீராதெனவும் யூகி முனி சிந்தாமணியில் கூறியுள்ளார்.

#### பொதுக்குறி குணங்கள்

இந்நோயில் பொதுவாக உடல் நிறம் வேற்றுமையடையும். தோல் மரத்துப்போம். கழலைகள் போல் தடித்துப் புண்ணாகி எளிதில் உலராது, அழுகிக் குறையச் செய்யும் இக் குறி குணங்களுடைய பெருநோய் தொத்து நோயாகும்.

நோயை அறியும் முன்பே முகம், மார்பு, தொடை இவைகளின் இயற்கை நிறம் மாறி, அவ்விடங்களில் வியர்த்தல், உடல் கற்றாழை நாற்ற மடித்தல் என்னும் குறிகுணங்களைக் காட்டி உடலைப் பருக்கச் செய்யும். பின்பு உடல் நிறம் மாறியவிடத்தில் புடைகள் தடித்தேனும், விளிம்புகள் சற்று உயர்ந்தேனும் தோன்றும். அவ்விடத்தில் ஊசியால் ;றினும், குத்தினும், சுடினும் உணர்ச்சியறும். இத்துடன் உடல் முழுமையும் சிறு கொப்புளங்கள் போல் படைப் படையாக இங்கு மங்கு முண்டாகிச் சிவந்து காண்பதுண்டு. அல்லது வெண்மைப் படைகளும் வெண் தட்டம் போல் வருவதுமுண்டு. அல்லது நெற்றி, புருவம், காது, மூக்குத் தண்டு இவைகளின் தோல் கறுத்து, மினு மினுப்போடு கழல்களைப் போல் பிறந்து அடிகனத்துப் பெருத்துக் கொண்டே வரும். நோய் முதிரின், கை கால் விரல்களின் நரம்புகளைக் குறுகச் செய்தாகினும், இவைகளில் புண் உண்டாகி எலும்பு வரையில் சென்று அழுகச் செய்தாகினும் அற்றச் செய்யும். இதன் காரணமாகவே இந் நோயைக் ''குறை நோய்'' எனக் கூறப் பெற்றது போலும், இந் நோய் நோயினனை அதிக நாள் துன்புறுத்திக் கொல்லுமென்றறிக.

முக்குற்ற முதலிய வேறுபாடுகள்

''வாதமலாது மேனி கெடாது'' எனத் தேரையர் கூறியதால் உணவாதி செயல்களால் வளிக்குற்றம் கேடடைந்து இரசம், குருதி இவ்விரண்டு உடற்றாதுக்களைக் கெடுத்து, மேனியின் நிறத்தையும் கெடுத்து, பிறகு மற்ற உடற்றாதுக்களையும் முறையே கெடச் செய்து இந்நோயை வருவிக்கும். வளிக்குற்றக்கெடுதலோடு, அழல், ஐயம் இவ்விரண்டு குற்றங்களும் நாளடைவில் கேடடைந்து நோயை வன்மை பெறச் செய்யும். இதன் காரணமாக நோயிலுண்டாம் புண் எளிதில் உலராது. செந் நீரும், சீழும் அதிகம் வெளியாகும். கோழை கட்டும். உடல் வெளுத்து வன்மை குறையும். மயக்க முண்டாகும், உடல் வீங்கும், இத்தியாதி குறி குணங்களைக் காட்டும்.

அன்றியும் முக்குற்றங்களின் கேட்டால் உடற்றாதுக்கள் ஏழும் ஒன்றின் பின் ஒன்றாய்க் கேடடைந்து கொண்டே வரும். அதாவது இரசதாது கேடடைவதால் தோல் வறளும். நிறம் மாறுபாடாகும். குருதியின் கேட்டால் உடல் வியர்க்கும். உடல் ஊறும், ஊன் கேட்டால் கொப்புளம், புண், சிலை நீர் வடிதல் என்னும் குறி குணங்களையும், கொழுப்பின் கேட்டால் உடல் கனத்தல், நாற்றமடித்தல், உடல் வெடித்துப் புண்ணாதல், கை கால்களை அசைக்க முடியாமை ஆகிய குறி குணங்களையும், என்பு, மூளை இவற்றின் கேட்டால் மூக்குத் தண்டு, என்பு இவைகளைத் தாக்கி ஆங்கு வீக்கத்தையுண்டாக்கியும், மூக்கு, கை, கால் விரல்களைக் குட்டையாக்கச்செய்வதும், தவளம் என்னும் விந்துவைச் சாடின் கரு உற்பத்தியில் இந்நோய் தொடரும் எனவும் அறியவும்.

(சி.ம)

## 55. தாபிதம் (Inflammation)

இயல்:—காயம் ஏற்பட்ட இடத்தில் உடல் திசுக்களின் மீண் செயலினால் (Reaction) உடனேகுருதி தந்துகிகளிலும் (Capillaries) குருதி வசா நீரும் (Blood plasma) மாறுதல் அடைவதை தாபிதம் எனப்பட்டது. தாபிதம் எல்லோர்க்கும் சர்வ சாதாரணமானது. மருத்துவரல்லாதாரைக் கேட்டால் (Layman) அடிபடுதலாலோ எவையுடனும் மோதுதலாலோ கோபக் குறியான சிகப்பும் (Redness) சூடும் (Heat), வலியும் (Pain), வீக்கமும் (Swelling) ஒருங்கே ஏற்படுவதை தாபிதம் என்பர். மருத்துவரல்லாதார் சொல்வதற்கும் குகணர்ணவாத (Pathologist) சொல்வதற்கும் பெரும்பாலும் வித்தியாசமில்லை என்றாலும், உடல் திசு வியூகன மாறுதலுக்கு ஏற்ப வெளித் தோற்ற மாறுதல்களுக்கு இலக்கணம் கூறுவது சிறப்பானது.

### தாபித மீண் செயல்

உடலுக்கு நல்லதொரு காரியத்தைச் செய்வது காயத்தில் ஏற்பட்ட சிதைந்த திசுக்களை வெளிப்படுத்துவதே நன்மையான காரியம். அன்றியும் வந்தைகள் (Bacteria) படையெடுப்பின் சஞ்சார காலத்தும் (Infection) அவைகளின் சிதைவும், அவைகளின் கழிவாதி நஞ்சுகளைப் பாகரித்தலும், தாபித மீண் செயலே!

படையெடுத்து வந்த வந்தைகளை எதிர்த்து சேவை புரிபவைகள் உடலில் இரண்டு வகையான ஆதாரங்கள் உள்ளன. அவை :

(1) வந்தை விழுங்கி வெண் விலங்கள் (W.B.C.).

(2) வசா நீரிலுள்ள பிரத்தியேக எதிரதுகாக்குப் சத்துக்கள் (Antibodies) காயப்பட்ட திசு இடங்களுக்கு விழுங்கி வெண் விலங்கள் கூட்டமாக வந்தடைவதும் இரத்த தந்துகிகளிலிருந்து வசாநீர் கசிவதும் தாபிதத்தின் முதல் தரமான காரியம். குருதிக் கசிவு, இடம்விட்டு வந்த விழுங்கி வெண் விலங்கையும் சேர்த்து தாபிதக் கசிவு எனப்படும் (Inflammatary exudation)

காயத்தின் திசுவின் மீண்செயலே தாபிதம் என்பர். இது பெருவாரியான விளக்கம். தாபிதம் என்றால் பழுதுபார்த்தல் (Repair) மறுமலர்ச்சி (Re-generation) என்ற செய்கைகளும் தாபித மீண் செயலில் அடங்குகிறது. தாபிதமும் பழுதுபார்த்தலும் எப்பொழுதும் ஒருமித்துக் கூறப்பட்டாலும் அவைகள் தம்முள் வேறுபட்ட செயல்களே! தாபிதத்தில் சிதைவுற்ற திசுக்களை அப்புறப்படுத்தப்பட்டால், பழுது பார்த்தல் ஆரம்பமாகும். சிதைவுற்ற திசுக்

களுக்குப் பதிலாக மறுமலர்ச்சி திசுக்கள் ஈடு செய்யப்படுகின்றன. தாபிதத்தில் குருதி தந்துகிகள் பிமபுதல், தசிரங்களிலிருந்து குருதிக்கசிவு என்ற தொடர்ச்சியான கிரிகை நடக்கிறது. ஆகையால் தாபிதத்தில் வில மறுமலர்ச்சி கிடையாது. பழுது பார்த்தலில் திசு அல்லது வில மறுமலர்ச்சிகள் அவசியமுண்டு.

தாபிதத்தின் மீண் செயலின் அடிப்படையில் ஒரே வகையான மாறுதல்கள் காணப்பட்டாலும் அதன் நடையிலும், முடிவிலும அநேக பேதங்கள் காணப்படுகின்றன. அவைகள் :—

(1) திசுக்களைச் சிதைக்க வரும் காரண பூதங்களின் குண விகர்ப்பம்.

(2) திசுக்களின் விகர்ப்பம்.

(3) தாபிதத்தின் காரணம்.

**1. திசுக்களை சிதைக்க வரும் காரண பூதங்களின் குண விகர்ப்பம்.**

கருவி காரணங்களாலும் (Mechanical), வந்தைகளாலும் (Bacteria) ஏற்படும் தாபிதம் சில முக்கிய விகர்ப்பங்களை கொண்டுள்ளது. கருவி காரணங்கள் காயத்தை உண்டாக்குகிறது. அதோடு அதன் காரியம் முடிந்து விடுகிறது. இவைகளால் ஏற்பட்ட காயத்தின் விளைவால் திசுக்கள் அழிகின்றன. அவ்விளைவின் பயனும் அழிந்த திசுக்களின் தாபித மீண் செயல் நிகழ்கிறது. அழிந்த திசுக்கள் எல்லாம் வெளியே தள்ளப்பட்ட பிறகு பழுது பார்த்தல் ஆரம்பமாகிறது. ஆனால்வந்தைகளால் ஏற்பட்ட காயத்தில் வந்தைகள் உயிருள்ளனவாகையால் வாழ்க்கையை நடத்த ஆரம்பிக்கிறது. அதன் இனப் பெருக்கமும் உண்டாகிறது. இனப் பெருக்கம் அதிகரிக்க அதிகரிக்க, காயத்தில் தாபித மீண் செயல் அதிகரிக்கிறது. தாபித மீண் செயல் வந்தைகளை அழிக்கும் வரையில் நிகழும். அல்லது தாபதமடைந்தவன் இறக்கும் வரையில் நிகழும். அன்றியும் வளர்சிதை மாற்றங்களின் கழிவுகள் (Toxins) திசுக்களுக்கு நஞ்சாகும். இவ்விதமாக வந்தையின் நஞ்சுகள் தாபிதத்தை மேலும் மேலும் தூண்டுகின்றது. கருவி காரண தாபிதத்தில் அழிவுற்ற திசுக்கள் நஞ்சுகளாக மாறினாலும் திரும்பத் திரும்ப அழிவு ஏற்படுவதில்லை. வந்தை தாபிதத்தில் திசு அழிவு தொடர்ச்சியாக வந்தைகள் பெருக்கத்திற்கு ஏற்றவாறு நடைபெறுகின்றன.

தாபிதம் விதவிதமான வந்தைகளுக்குத் தகுந்தாற்போல் மிகவும் விகர்ப்பப்படுகின்றது. சில வந்தைகள் தீவிரமாகவும் துரிதமாகவும் கடூரமாகவும் தாபித மீண் செயலைத் தூண்டுவிக்கின்றன. இதனை தீவிர தாபிதம் (Acute inflammation) என்பர், கயம்,

குட்டம், கொறுக்கு முதலிய நோயை உண்டாக்கும வந்தைகள் மெதுவாகவும் நாள்படவும் தாபித மீண் செயலை உண்டாக்குகின்றன. இதனை காலிக தாபிதம் (Chronicinflammation) என்பர். இதன்றியும் காயமடைந்த திசுக்களின் வந்தைகளுக்கு ஏற்ப வெவ்வேறு வெண்விலங்கள் வந்து குவிகின்றன.

### திசுக்களுக்கு ஏற்ப தாபித மீண் செயல்கள்

(1) திடமான திசுக்களில் (Solid Tissues) தாபிதக் கசிவு சேர்ந்து திசு இடங்களில் வீக்கம் ஏற்படுகின்றது.

(2) நிசா சவ்வு (Serous layer) உறைகளில் ஏற்பட்டால் தாபிதக் கசிவு அவ்விடத்திலேயே சேருகின்றன. உதாரணமாக பரியாந்திர தாபிதம் (Peritonitis), பரிப்புசத் தாபிதம் (Pleurisy) பரீரகத் தாபிதம் ( Petiorchitis) முதலியன.

(3) சளிச் சவ்வுகளில் ஏற்பட்டால், சளிக்கசிவு ஏற்பட்டு தாபிதக்கசிவுடன் கலந்துசேரும். இதனைச் சளித்தாபிதம் (Se ous or Mucus inflammation) உதாரணமாக பீனசம் ( Acute Rhinitis) அசுகதாபிதம் (Acute bronchitis) இரைப்பைத் தாபிதம் (Acute gastritis குடல் தாபிதம் (Aute inrestinitis ) முதலியன.

(4) **குருதி அறைகள்.**—இருதயமோ நாடிகளோ தாபிதமடைந்தால் குரோதம் (Thrombosis) உண்டாகி காயமடைந்த இடத்தில் தேங்கி நிற்கும். இருதயத்தின் சளிச் சவ்வு கவசத்திலும் (Endocardial) கபாடங்களிலும் (Valves) குரோதங்கள் மூளைகளைப் போல் (Blood Clots ) ஒட்டிக்கொண்டிருக்கும். இக் குரோதங்கள் குருதி சுற்றோட்டத்தினால் வெளியே கிளம்பி இரத்தத்தின் ஊடே நாடிகளில் பரவும், பரவும் போது நாடிகள் அடைபடும். அடைபட்ட இடத்திற்கு (Venus thrombosis) நாளக் குரோதங்கள் எனப்படும்.

(5) **என்புத் தாபிதம்.**—தாபிதமடைந்த என்புத் தாது இறக்கிறது. என்புத்தாது கடினமானது. அழிந்த பாகத்தை வெளியேற்றுவது துர்லபம். இறந்த பாகம் வெளிப்படுத்துவது மிகவும் மெதுவான காரியம். என்புத்தாது தாபிதமடைந்தால் பழுது பார்ப்பது நெடுநாளாகும்.

**தாபித காலம்.**—தீவிர தாபிதம், காலிக தாபிதமும் காலவித்யாசத்தால் ஏற்பட்டது. துரிதமாக ஏற்படுவது தீவிர தாபிதம். மெதுவாக ஏற்படுவது காலிக தாபிதம். ஆனால் நோயின் மும்முரத்தை எடுத்துகாட்டவில்லை. கொக்கடியும் கொப்பளமும் திவிர தாபிதம் என்றாலும், எல்லோராலும் பாராமுகமானது.

கயம்நோய், கயவந்தைகளால் உண்டானது அது காலிகதாபிதம் ஆனால் மும்முரமானது, அபாயகரமானது. காயங்களில் ஏற்பட்டக் கழிவுப் பொருள்களில் நஞ்சுத் தன்மை தீவிர மீண்செயலை ஏற்படுத்தி வெகுவிரைவில் தந்துகிகளின் மாற்றங்களையும் தாபிதக் கசிவையும் உண்டாக்குவதே தீவிர தாபிதம் எனப்படும். காயங்களில் ஏற்பட்ட பொருள்களின் நஞ்சுத் தன்மை மெல்ல, மெல்ல மீண் செயலை ஏற்படுத்தி மெதுவாகத் தந்துகிகளின் மாற்றங்களின் தாபிதக் கசிவையும் உண்டாக்குவதே காலிகத் தாபிதம் எனப்படும். தீவிர தாபிதம் எவ்வளவுக்கெவ்வளவு விரைவாக உண்டாக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு சீக்கிரத்தில் குணமடைகிறது. அதேபோல் காலிகதாபிதம் எவ்வளவு மெதுவாக உண்டாகிறதோ, அவ்வளவு மெதுவாகக் குணமடையும்.

தீவிரமாக ஆரம்பித்து விரைவாகக் குணமடையும் தாபிதத்தில் பழுது பார்த்தல் தெளிவாகவும், சிறப்பாகவும் முடியும், மெதுவாக ஆரம்பித்து மெதுவாகக் குணமடையும் என்றாலும் இங்கு பழுது பார்த்தலும் மறுமலர்ச்சியும் ஒருங்கே மெதுவாக நடந்து கொண்டிருக்கும்.

தீவிர தாபிதம்.— தாபித நிகழ்வை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம்:

(1) தந்துகிப் பெருக்கமும், குருதித் துரித ஓட்டமும், காயம் கண்ட இடத்திலோ, திசுவேக்காடு கண்ட இடத்திலோ தந்துகிப் பருக்கம் உண்டாகிறது.

காயம் ஏற்படாத முன்பு, கண்ணுக்குப் புலப்படாமல் அழுந்திக் கிடந்த தந்துகிகள்கூட பருக்கமுருகிறது. ஏதோ ஒரு சில சிறு சந்தர்ப்பங்களில் அமர்ந்துவிடுகிறது. சாதாரணமாக மற்றத் தாபிதங்களில் உடல் அமைப்புகளில் திசுக்கள் பாழாகின்றன அல்லது அழிகின்றன. அதன் பிறகு இரண்டாவது தாபிதப் பிரிவு நிகழ்ச்சி மேலும் தொடர்கின்றது.

(2) தந்துகிப் பருக்கமும் குருதி ஓட்டத் தடுக்கமும் வெண்விலங்கள் வருகையும்:—

இங்கு தந்துகிகள் பருக்கம் நீடிக்கிறது. ஆனால் குருதி ஓட்டம் தடைபடுகிறது. சிற்சில தந்துகிகளில் குருதி ஓட்டம் இல்லை எனலாம். அதாவது குருதித் தேக்கம் ஏற்படுகிறது. சாதாரணமாக நாடிக் குழல்களில் மத்திமத்தில் செவ்-வெண் விலங்கள் கூட்டங்களும் அவை அடுத்து குழல் சுவரைத் தழுவி வசாநீரும் ஓடும். தாபித நிகழ்வில் மத்திம விலக் கூட்டங்கள் பெருகி வசாநீர் இருந்த இடத்தையும் மீறி குழலின் சுவர் வரையில் அடைகிறது. சுவர் வரையில் பெருகினதும் வெண் விலங்

கள் நாடிக் குழலின் சுவருடன் ஒட்டித் தொங்குகின்றது. நாடிச் சுவரின் உள்படை விலங்கள் அதைப் பெறுகின்றன. பண் விலசக வெண் விலங்கள், குழலின் சுவரைக் குடைந்து புகுந்து வெளி வருகின்றன. (Diaphedies) வெளி வந்த வெண் விலங்கள் சிசு இடை வெளியை அடைகின்றன. சிற்சில செவ்விலங்களும் இவ்வாறே திசுக்களிடையே வந்தடைகின்றன. திசு இடைவெளி யில் வெண் விலங்கள் அங்குமிங்கும் சுறுசுறுப்பாக நகர்ந்து நொந்த விலங்களையும் வந்தைகளையும், நஞ்சுப் பாசிகளை யும் விழுங்குகின்றன. இத் தருணத்தில் அசாதாரண வசாநீர் தந்துகளிலிருந்து கசிவுகிறது. அதனைத் தாபிதக் கசிவு அல்லது தாபித இரசம் என்பர். தாபிதக் கசிவு திசு இடைவெளிகளை நிரப்புகிறது. கசிவு நிரம்ப, நிரம்ப திசு விலங்குகளும் இழைகளும் அகன்று பிரிவுருகின்றது. இதனால் அதைப்பு அல்லது வீக்கம் உண்டாகிறது. இந்தக் கசிவு வசாநீர் நீதுரசப் பொருட்கள் நிறைந்திருக்கின்றன. ஆகவே தாபிதத்தின் நிகழ்ச்சிகள் கீழ் வருமாறு:—

(1) தந்துகிகளின் பருக்கமும், குருதி ஓட்டமும்,

(2) தந்துகிகளின் பருக்கமும், குருதி ஓட்டத் தடங் களும்,

(3) குருதிப் பதம் மாறுதல்,

(4) வெண் விலங்களின் வருகை,

(5) குருதி வசாநீர்க் கசிவு.

### தீவிரத் தாபிதத்தின் மாறுதல்கள்

இரசாயனப் பொருட்களும், வந்தைகளின் மலின நஞ்சுப் பொருட்களும் தாபிதமுண்டாவதற்கு காரண கர்த்தவாயிருந்து தாபித மீண் செயலைத் தூண்டுவிக்கப்பட்டன என்று முன்பெல் லாம் கருதப்பட்டன. ஆனால் சிறு காலமாக இந்தக் கொள்கை தவிர்க்கப்பட்டது. மேலே சொல்லப்பட்ட காரணங்களினால் அல்லாமலும் சாதாரண ஆயுத காயங்கள் அல்லது தீக்காயங் களில், வெளியிலிருந்து இரசாயனமோ வந்தைகளோ தாபித மீண் செயல் உண்டாக்குவதில்லை. ஆனால் நசிந்த அல்லது நொந்த திசுக்களின் மிச்சமே தாபித மீண் செயலைத் தூண்டு விக்கிறது. ஆகையினால் எல்லாவிதத் தாபிதங்களில் நசிந்த அல்லது நொந்த திசுக்கள்தாம் தாபித மீண் செயலைத் தூண்டு கிறது என்று சொல்வது தவறா என்ற வினா எழுகிறது. திசு விலங் கள் அழிந்தபோது, காயமடைந்தபோது அவைகளின் உடலைப் பிலுள்ள புரோதப் பொருள் சுயக்குணங்களைத் தவிர்த்து கரையும் நச்சுப் பொருளாக மாற்றப்படுகின்றன. இவ்வாறு

மாறிய கரையும் நச்சுப் புரோதப் பொருள்களின் தாபித ஊக்குவி நஞ்சுப் பொருள் என்பது ஒன்று, தாபித ஊக்குவி நச்சுப் பொருள் என்ற புரோதப்பொருளை சருமத்தில் செலுத்தினால்—

(1) அவ்விடத்து தந்துகிகளின் குழல்கள் விரிவடைகின்றன.

(2) சுற்றுப் பக்கமுள்ள சிறுநாடிகள் விரிவடைகின்றன.

(3) தந்துகி குழல் சுவர்கள் சல்லடைக்கண்களாகி குருதிக் கசிவை நீடிக்கச் செய்கிறது. இதனால் வீக்கம் உண்டாக ஏதுவாகும். தாபித மீண் செயலுக்கும் தாபித ஊக்குவி நஞ்சுப் பொருள்கள் உண்டாக்கும்போதும் காணப்படும் செயலுக்கும் ஒரு வித்தியாசம் இல்லை. மூன்று முக்கிய தாபித மீண் செயல்கள் எல்லாம் சாதாரண காய தாபிதங்களில் காணப்படுகின்றன (வேர்வைக் குரு, உராய்தல், தீப்புண், அம்பர சத்தி, பூச்சுக்கடி).

ஆகையினால் எல்லாவித காயங்களில் ஒரே தரமான தாபித மீண் செயல்கள் நடக்கின்றபடியால் நொந்த திசுக்கள் ஒரே தரமான தாபித ஊக்குவி நச்சுப்பொருள்கள் உண்டாகின்றது என்பது வெள்ளிடைமலை. ஆனால் மற்றொரு சாரார் வெண் வில ஈர்ப்பு, புரோதப் பொருள், நொந்த திசுவினின்று வெளிப்படுதல் முக்கியமானது என்கின்றனர்.

தாபித ஊக்குவி நச்சுப் பொருள்களோ அல்லது வெண்வில ஈர்ப்பு புரோதப் பொருள்களோ முக்கியமான அம்சமாக வளர்ந்தாலும் இவ்விரண்டும் தாபித மீண் செயலுக்கு ஒருமைப்பாடுடையது என்பது கவனிக்கத்தக்கது. தாபிதத்திற்குக் காரணம் என்னவாகிலும் சரி நொந்த திசுக்கள் அல்லது காயமுற்ற திசுக்கள் தோற்றுவிக்கும் பொருள்களை உடனடியாக தாபித மீண் செயல்களை செயல்விக்கின்றன. எனவே தாபித ஊக்குவிக்கும் பொருள் நொந்த திசுக்களிலிருந்து உண்டாகி தந்துகி, குழல் சுவர்களைத் தாக்குகின்றன. அதனால் நரம்பு இயக்க ஆட்சி அழிக்கப்படுகிறது. உடனே தந்துகிகள் குழல் சுவர்கள் விரிவடைகின்றன. உடனே தந்துகிகளில் அதிக இரத்தம் வேகமாக மிகுந்து பாய்கின்றது. அதற்கடுத்த சில நிமிடங்களில் குருதிப் பாய்ச்சலின் வேகம் குறைகின்றது. தந்துகி குழல்கள் விரிந்திருந்தும் குருதியின் பதம் மாறுகின்றது. ஏனெனில் தந்துகி குழல்கள் சுவர்களின் ஆவரத விலங்கள் வீக்கமடைகின்றன. வீக்கமடைவதல்லாமல் வெண்விலங்கள் தந்துகி குழல்கள் சுவர்களின் ஓரங்களில் பல ஒட்டிக் கொள்கின்றன. குருதி பாயும் பாகம் வழுவழுப்பாயில்லாமல் கரடு முரடாயிருப்பதால் குருதி பதம் நீர் தன்மையை இழந்து கடினத்துவம் ஏற்படுகின்றது. இம்மாறுதலினால் குருதி வசாநீர் தந்துகிகளின் சுவரிலிருந்து கசிய ஏதுவாகின்றது. இதற்கெல்லாம் முக்கிய காரணம் நொந்த திசக்களிலிருந்து உண்டாகும் தாபிதத்தை ஊக்குவிக்கும்

நச்சுப்பொருள்களேயாகும். குருதியினின்று கசிவுற்ற நீர் இடைவெளியை அடைகின்றன. கசிவு நீர் எதிர்ப்பொருள்களைக் கொண்டு வருகின்றன. அவைகள் வந்தைகளையும் அவைகளின் நச்சு மலினங்களையும் அழிக்கின்றன.

தாபிதத்திற்கு நான்கு குணங்களுண்டு :

(1) வீக்கம்.

(2) சிவத்தல்.

(3) வலி.

(4) சூடு.

**வீக்கம்.**— தந்துகிப் பருக்கத்தாலும், வசாநீர் கசிவாலும் வீக்கம் ஏற்படுகிறது. முக்கியமாக வசாநீர் கசிவால் உண்டாகிறது. நொந்த திசு, அதிக குருதியும் அதிக வெண்விலங்குகளும், அதிக வசாநீரும் காணப்படுகின்றன. தாபிதக் கசிவு நீர் திசுவிலங்களின் இடைவெளியை (Inter-cellular space) பெருக்கி விரிவடைகின்றன. ஆகவே இவ்வீக்கம் தாபித வீக்கம் எனப்பட்டது.

வீக்கத்தை அழுத்தி தாபித கசிவை பிழிந்து எடுத்துவிடலாம். இவ்வீக்கங்கள் அழுத்தத்திற்கு பள்ளம் விழும் என்பதைக் காட்டும் ( Pitting on Preasure )

**சிவப்பு.**— குருதி அதிக அளவில் தந்துகி பருக்கத்தால் வந்தடைவதால் வீக்கம் சிவந்து காணப்படும். ஆரம்பத்தில் தந்துகிகளில் விரைந்து செல்லும் குருதி மஞ்சள் சிவப்பு நிறமுடையதாதலால் வீக்கமும் மஞ்சள் சிவப்பு நிறமடைந்து காணும். வீக்கத்தை அழுத்தினால் நிறம் மறையும், அழுத்தம் நீங்கிய உடனே நிறம் திரும்பவரும். பிறகு குருதி ஓட்டம் குறைந்ததும் குருதி நிறம் கரும் சிவப்பாக தோன்றும். இத்தருணம் அழுத்தினால் குருதி நிறம் மிக மெதுவாக மாறி திரும்பும். சீழ் கட்டிகளில் மேல்தோலை உற்றுக்கவனித்தால் இருதரமான தாபித மீண் செயல் காணப்படும். மத்தியில் நீல நிறம் கொண்டு காணப்படும். பழைய தாபித மீண் செயல் மாறுதலைக் குறிக்கும். ஓரங்களில் செம் மஞ்சள் நிறைந்து காணப்படும். அவ்விடத்தில் புதிய மீண் செயல் மாறுதல்கள் சுகதேகிகளில் தோன்றுகிறதைக் குறிக்கும். மத்தியில் குருதி ஓட்டம் ஓய்ந்து தேங்கியும் காணப்படும். ஓரங்களில் குருதி ஓட்டம் விரைவாகக் காணப்படும்.

**வலி.**—பெரும்பாலும் வலி ஏற்படக்காரணம் தாபிதக்கசிவு நீர் நரம்பு கூந்தல்களை அழுத்துவதால் ஏற்படுகிறது. ஆகையினால் வலி குருதி ஓட்ட அலைக்கு தகுந்தாற்போல் அதிகமாகவோ குறைந்தோ காணப்படும். தாபிதம் கடுமையான திசுக்களில் ஏற்பட்டால் வலி கடுமையாகவும், மெலினமான திசுக்களில் ஏற்பட்டால் வலி மெதுவாகவும் காணப்படும். வலியானது அழுத்தத்திற்கு அதிகரித்துக் காணும். அதனை வலிக்கூச்சம் (Tenderness) என்பர். நரம்புக் கூந்தல்களை நேர்முகமாகத் தூண்டப்படுவதாலும் வலி ஏற்படலாம்.

**சூடு.**—தாபிதமடைந்த இடங்களிலோ திசுக்களிலோ சூடு உண்டாவதில்லை. தாபித வீக்கத்தில் காணும் சூடு குருதிச் சூட்டைவிட அதிகமாக இருக்கும். தாபித வீக்கங்களில் மேலெழுந்தவாரியாக தோலில் தென்படும். ஆனால் அக்கம் பக்கமுள்ள தோலின் சூடு குறைந்திருக்கும். வீங்கியிருக்கும், தோலின் கீழ் அதிக குருதி ஓட்டமும், தந்துகி பருக்கமும், குருதியும் அதிகம் மாறுவதால் சூடு காணப்படுகிறது. அங்குள்ள சூடு குருதிச் சூட்டை ஒத்திருக்கிறது.

**தொழில் செய்வதில் தடங்கல்.**—தாபித வீக்கத்தின் கடைசிக் கட்டம் திசுக்களை தொழில் செய்ய ஒட்டாமல் தாபிதமடைந்த பாகங்கள் தனக்குத் தானே ஓய்வு பெறுகின்றன. அல்லது அவைகளின் தொழில்கள் குறைகின்றன. உதாரணமாக தாபிதமடைந்த பொருத்துகள் அல்லது பேசிகள் அசைவற்று கிடக்கின்றன. பக்கச்சூலையில் நெஞ்சுக் கூட்டின் சுவாசஅசைவு குறைகிறது. கண்ணோயில் ஒளிபட்டால் கூச்சமுண்டாகிறது. தாபித திசுக்களில் தொழில் செய்வதில் குன்றுவதால் அக்கம் பக்க பேசிகள் தற்காப்பு செயல் புரிகின்றன. உதாரணமாக பேராவளி தாபிதத்தில் உந்தி பேசிகள்தாங்கள் தாபிதம் அடையாவிட்டாலும் விரைந்து நின்று வெளியினின்றுவரும் தீங்கைத் தவிர்த்து தாபிதமடைந்த பேராவளியைக் காப்பாற்றுகிறது. கீல்வாயுவில் கீலைச் சுற்றியுள்ள பேசிகள் செயலற்று பொருத்துகளின் உள் உறுப்புகளுக்கு தற்காப்பு அளிக்கின்றன.

**ஓய்வு (இலக்கணங்கள்)—**

(1) தனக்குத் தானே ஓய்வு.

(2) தாபிதமடைந்த திசுக்கட்கு தற்காப்பு அளித்தல்.

பரிகாரத்திற்கு அத்தியாவசியமான அம்சங்கள் முடிவு, அக புற காரணங்களைக் கொண்டும் திசுக்களின் சுகத்தைப்பற்றி யும் கீழ்வருமாறு தாபிதம் முடியும்:—

(i) தீர்மானம் (Resolution)—தீர்மான முடிவில் தாபித வீக்கம் அடங்கி விடுவதும், தாபித கசிவை உறிஞ்சவுமாகும். அநேக சிறிய தாபிதங்கள் தீர்மானத்தைத் தான் அநுசரிக்கின்றன. சிற் சில வந்தை சஞ்சய நோயிலும் (Bacterial Infection) முடிவை அடைகின்றன.

(ii) சீழ்கட்டல் (Suppuration).—பெரும்பாலும் அநேக வந்தை தாபிதங்கள் சீழ்கட்டல் முடிவை எய்துகின்றன. தாபித கசிவுநீர்வந்தை விழுங்கி வெண் விலங்களில் இறந்ததும், செவ் விலங்கள் வாழ்கின்றதும் ஆகியவைகளின் கலவைக் கூட்டே சீழ் கட்டல் எனப்படும். இங்கு காணும் வெண் விலங்களை சீழ் விலம் (Pus Cells) எனப்படும். உடைந்த சீழ் கட்டிகளிலி ருந்து சீழ் வடிந்து கொண்டிருக்கும். தாபித வீக்கத்தினுள் கட்டுண்டு திரண்டு கிடக்கும். சீழ் அமைப்பை சீழ்கட்டி என்பர் (Abscess) சஞ்சார நோய்களில் வந்தைகள் ஆவாக விலத் தின் திசுக்களை பற்றினல் சீழ்கட்டும். தாபிதம் வெகு சீக்கிர மாக பரவி பெரிய பரப்புள்ள சீழ் ஆடை ஏற்படும். இதனை ஆவர விலதாபிதம் (Cellulites) எனப்படும். இவ்விடங்களில் ஒருதரம் சீழ் உண்டாகுமாயின், அது சீக்கிரம் உறிஞ்சப் படுதல் கடினம். இங்கு வந்தைகள் குடி கொண்டுவிட்டால் தீவிர இனப் பெருக்கம் உண்டாகிக் கொண்டே போகுமே ஒழிய முழு வதும் ஒழிப்பது மிக்கக் கடினம். ஆகையால் தாபிதம் வளர்ந்து கொண்டே சென்று சீழ்க்கட்டல் அதிகரித்து வீக்கம் பெருகிக் கொண்டே சென்று உடையும். அல்லது அக்கம் பக்கம் பரவும் அல்லது அறுவையில் வெளிப்படுத்தப்படும்.

(iii) அழுகல்.—வந்தை தாபிதங்களில் நொந்த திசுக்கள் அழுகலடைகின்றன. தீவிர என்புத் தாபிதத்தில் என்புத் திசுக் கள் அழுகலடைகின்றன. நாற்ற அழுகலில் அழுகலுடன் சகிக்க முடியாததுர்நாற்றம் வீசும்.

(iv) பழுது பார்த்தல்.—எல்லாவித தாபிதங்களிலும் நொந்த திசுக்கட்கு பதில் அங்கு அதேபோன்று திசுக்களால் புதுப்பிக்கப்பட்டு நிறுவப்படுகிற தன்மை.

### காலிக தாபிதம்.

மெதுவாக நடக்கும் தாபித மீண் செயலை காலிக தாபித மென்பர் (Chronic inflammation). கேடை உண்டாக்கும் பொருள் கள் திசுக்களில் நிரந்தரமாகத் தங்க முயற்சிக்கையில் தாபித மீண் செயல் மெதுவாக நடக்கின்ற நிகழ்ச்சியை காலிக தாபித

மெனப்படும். எனவே தீவிர தாபித நிகழ்ச்சிக்கும் காலிக தாபித நிகழ்ச்சிக்கும் சரி நுட்பமான வரம்பு கூற முடியாது. தாபிதத்தி லிருந்து சுகத்திற்கும் அபிவிருத்தி காலமும், காயம் நீடிக்கும் கால மும் மேற் கூறிய இரு வகை தாபிதங்களுக்கு முக்கிய குறிப்பீடு களாகின்றன. ஒவ்வோர் சமயம் வந்தைகள் தீவிர தாபிதத்தை தோற்றுவித்துவிட்டதும் தாங்கள் புகுந்த திசுக்கள் எதிரது காத்தல் பொருளை உண்டாக்குவதாலும், இனப் பெருக்கத்திற்கு தடை ஏற்பட்டாலும் காலிக தாபிதம் நிகழலாமென்பர். உதார ணமாக வெள்ளை நோய் என்புருக்கி நோய், முதலியன. இதற்கு எதிர்மாறாகக் காலிக தாபிதத்தை உண்டாக்கும் சில வந்தைகள் தாங்கள் தீவிரமாக வளரும் சக்தியாலோ அல்லது தாங்கள் புகுந்த திசுக்களின் பலக் குறைவாலோ தீவிர தாபிதத்தை ஏற்படுத் தலாமென்பர். உதாரணமாக ''ஒடு வாயு கட்டி அல்லது காயம்'

அடிபட்ட இடத்திலேயே மேலும் மேலும் அடிபடுதலாலும் ரசாயனப் பொருள்கள் சதா திசுக்களில் ஊடுருவிப் பாய்வதா லும் காலிக தாபிதம் உண்டாகலாம். இரைப்பைப் புண்கள், பசதக் குடற் புண்கள் ஆகியவைகள் காலிக தாபிதத்தைச் சேர்ந் தவைகள். கயம், குட்டம், கொறுக்கு அல்லது பறங்கிப் புண் ஆகியவைகள் வந்தைகளாலேற்படும் காலிக தாபித நோய்கள் எனலாம்.

## காலிக தாபித நிகழ்ச்சியில் திசு மாறுதல்கள்.

(1) தாபித மாறுதல்கள்.—இங்கு தந்துகிகளில் மாறுதலும் கசிவுகளில் மாறுதலும் காணப்படுகின்றன. கசிவு மட்டுமின்றி வெண் விலங்களின் வருகையும் ஏற்படுகிறது. ஆனல் காலிக தாபிதத்தில் ஏகவிலசக வெண் விலங்கள் காணப்படுகின்றன. காயம் ஏற்பட்ட இடத்தும் தந்துகிகளினின்று வெளிவரும் வெண் விலங்கள் இனப் பெருக்கம் அடைகின்றன. சில சமயம் நாக வெண்விலங்கள் (Eusinophile Leucocytes) பன்மை விலசக வெண்விலங்கள் தான் பிரதான்யமாக அபரிதமாகக் காணப்படு கின்றன.

(2) மறுமலர்ச்சி மாறுதல்கள்.—ஆறும் திசுக்களில் (Healing granulation) புதிய தந்துகிகளும், தசைநார் திசுக்களும் தொடர்ச்சியாகத் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன. இவ்வாறு தோன்றிய புதிய திசுக்களின் முடிவு இடத்திற்கு இடம் விகற்பப் படுகின்றன. சில காலிக தாபிதங்களில் தசை திசுக்களாக மாறிப் பதுகுகளாகின்றன. மற்றவைகளில் பலமற்ற தந்துகி திசுக் களாகத்தோன்றி அழுகலையடைகின்றன. முக்கியமாக பறங்கி நோயிலும் கய நோயிலும் இவ்வாறு காணப்படும்.

(3) அழுகல் மாறுதல்கள்.—க்ஷய நோயிலும், கொறுக்கு நோயிலும் சிறுபான்மை தசிரங்களான சுகமற்ற ஆறும் திசுக்கள் அழுகல் தன்மையைத் தொடர்ந்து அடைகின்றன. இவ்விரு நோய்களின் காயங்களில் உள்ளூர்ந்து நோக்கினுல் நடுமத்தில் மஞ்சள் நிறமுள்ள பால் ஆடை போன்ற செத்தையும் ஓரங்களில் இன்னும் நிலைத்திருக்கின்ற ஆறும் திசுக்களும் காணப்படும்.

(4) தூலக் காளான்கள் (Macro hages)—அன்னிய பூத விலங்கள் (giant cells) இவைகள் சர்வ சாதாரணமாக எல்லா காலிக தாபிதங்களில் காணப்படுகின்றன. முக்கியமாக அழுகலடைந்த திசுக்களில் காணப்படுகின்றன. வந்தைகளையும், நுண்வந்தைகளையும் விழுங்குகின்றன. இந்த நிகழ்ச்சியில் காலிக தாபிதகழலைகள் ஏற்படுகின்றன. அவ்வமயம் அவைகளை நோய்களுக்குத் தக்கவாறு பெயரிடுகின்றனர். உதாரணமாக ஆமுக் கழலை, கயக்கழலை, பறங்கிக் கழலை, குட்டக்கழலை ஆகியனவைகள். எனினும் இப்பெயர்கள் பெரும்பாலும் சந்தேகங்கள் எழுப்புகின்றன. ஏனென்றால், உண்மையான கழலைகளுக்கும் இப்பெயரே உண்டானதால் இடர்ப்பாடுகள் அனந்தம்.

### தாபித திசுக்களில் காணும் வெண்விலங்களும் வந்தை விழுங்கி வெண்விலங்களும்.

(1) பன்மை விலசக விலங்கள்.—இவைகள் என்பு, மூளையினின்று பெருமளவில் உற்பத்தியாகின்றன. வந்தைகளைச் சிறப்பாக விழுங்கும். இவைகளைப் புரியட்ட காளான்களென்பர். தீவிர தாபித திசுக்களுக்கு நாடி நரம்பு, ரத்தக் குழாய்களின் மூலமாக விரைந்து பெருமளவில் செல்லுகின்றன. அவைகளே சீழ் கட்டிய தாபித திசுக்களில் "சீழ்விலங்களாக" விளங்குகின்றன. பன்மை விலசக விலங்களின் வருகையால் மற்ற விழுங்கி விலங்களும் வருகின்றன. ஆகையால் தாபித திசுக்களில் "மிகு வெண்விலக் கூட்டு என்ற நிகழ்ச்சி" (Leucocytosis) ஏற்படுகின்றன.

(2) நாகப்பட வெண்விலங்கள்.—இவைகளின் சிறப்பான செயல்கள் இன்னும் தெரியவில்லை. இவைகளை விழுங்கி விலங்கள் இல்லையென்பர் சிலர். ஆனுல் சிற்சில நோய்களாகிய குக்கிப் புண், நாங்கூழ் தாபிதம் போன்றவைகளில் இவைகள் காணப்படுகின்றன. சீழ் விலங்களாகவும் சீழ் கட்டிகளில் காணப்படுகின்றன. இவைகள் கூட்டங் கூட்டங்களாகவும் புப்புச சுவர்களில் புப்புச சுவாசகாச நோயில் தோன்றுகின்றன. சீல குணமுடையவர்களில் திசுக்கள் அன்னிய புரோதப் பொருளுக்கு சீறி (Allergy) விகற்பம் அடைகின்றன. இவ் வகையான தேகிகளில் நாகப்பட வெண் விலங்கள் பெருமளவில் தாபித திசுக்களிடையே காணப்படும். அவ்வமயம் "மிகு நாகப்பட வெண்விலம் நிகழ்ச்சி" என்பர்.

(3) ஏக விலசக வெண்விலம்.—பெரியதாகவும் கொஞ்சமளவில் காணப்படும். இவைகள் இரு வகைப்படும். (1) இரத வெண்விலம் (Lymphocytes) (2) ஏக விலசக வெண்விலம் (Mono-Nuclear Lencocytes) என்பன தாபித திசுக்களில் அபரிமிதமாகக் காணப்படுகின்றன. இவ்விரு வகைகளும் ஒரே வகையான போதிலும் அம்சங்களில் விகற்பப்படுகின்றன.

(4) வசா நீர் விலம் (Lymphocytes).—மற்ற வெண்விலங்களைக் காட்டிலும் தனித்த அம்சத்துடன் விளங்கும். எளிதில் பாகுபடுத்தக் கூடியது. இவைகள் இரத திசுக்களில் காணப்படும். வசா நீர் விலத்திலிருந்து இரத வெண் விலங்களாக மாறுகின்றன. சாதாரணமாக காலிக தாபிதங்களில் இரத வெண்விலங்களோடு காணப்படுகின்றன. இவைகள் வந்தை விழுங்கிகளல்ல. இதற்கான செயல்கள் இன்னும் புரியவில்லை.

(5) தூல காளான்கள்.—ஏகவிலச வெண்விலங்களைப் போன்று இருக்கின்றன. தீவிர சுறுசுறுப்புடையவைகள். அன்னியப் பொருள்களை (வந்தைகள், நிறப் புள்ளிகள், நிணப் புள்ளிகள், குருதிப் புள்ளிகள், கரிப்பொருள்கள்) வளைத்து விழுங்குகின்றன. இவைகள் ஊரைச் சுத்தஞ் செய்யும் தோட்டிகளைப் போலத் திசுக்களைச் சுத்தம் செய்யும் தோட்டிகளாகச் செயல் புரிகின்றன. தூல காளான்கள் அநேக விதமாக உற்பத்தியாகின்றன. (1) எல்லா இணைப்பு திசுக்களில் நிரந்தர தூல காளான்கள் (Mixed Macrophages) காணப்படுகின்றன, (2) இரத திசுக்களிலும், ஆவரகதிசுக்களிலும் (ஈரல், பிலீகம், என்பு, மூளை போன்றவைகளில்), (3) இரத வெண் விலங்கள் ஏக விலசக விலங்களாக மாறுதல், (4) தாபிதத்தில் குருதியினின்று திசுக்களுக்கு வரும் வெண்விலங்கள். வெண்விலங்கள் தாபிதத்தில் வெவ்வேறு உருவங்களைக் கொண்டு தோற்றமளிப்பதால் அவைகள் வெவ்வேறு பெயர்களைப் பெறுகின்றன. அப்பெயர்கள் (1) தூல காளான்கள், (2) ஆவரக பூஞ்சைகள், (3) திசுவோடி விலங்கள் (Wandering) (4) கிளைத் தெழும்பும் விலங்கள், (5) தூசி விலங்கள், (6) இருதய தோல்விலங்கள் (புப்புசங்களில்) நுரை விலங்கள் முதலியன.

6. அனேக விலசக வந்தை விழுங்கி விலங்கள் அன்னியப் பொருள் பூதவிலங்கள்.—தாபித திசுக்களில் அன்னியப் பொருள்கள் கிடந்தால் தூல காளான்கள் இனப் பெருக்கமுற்று அப்பொருள்களைக் கவிந்து வளைத்துக் கொண்டு பெரியதான தோற்றமளிக்கின்றன. அன்னிய பொருளை உள்ளடக்கி அவைகள் வெளிப்புறம் சூழ்ந்து திரண்டிருக்கின்றன. அன்னியப் பொருள்களை விழுங்கிச் சீரணிக்கும் விலங்கள் இனப் பெருக்கால் தற்காப்பு செயல் புரிகின்றன.

தாபிதத்தில் மாசயனிகள் புரியும் வேலை.—தாபித திசுக்களிலிருந்து இரதம் வெளிமாசயனி மூலமாகச் செல்லுவது அதிகப்படுகின்றது. மாசயனிகளின் மாறுதல்கள் கண்ணுக்குப் புலப்படாவிட்டாலும் தந்துகிகளைப்போலவே இவைகளும் விரிவடைகின்றன. அவைகளினுள் இரத்த ஓட்டமும் தீவிரமடைகின்றன. தாபிதத்தினின்று வெளிச் செல்லும் இரத்தத்தைப் பரிசோதித்தால் வந்தைகளும், இறந்த வந்தைகளும், பாடாணக் கழிவுகளும் கலந்து செல்வதைக் காணலாம். இதனாலன்றோ மாசயனிக் கோளங்களும் தாபிதமடைந்து வீக்கமடைகின்றன. வீக்கமுற்ற மாசயனிக் கோளங்களை ''நெரிக் கட்டிகள்'' என்று கூறுவர்; லகன தாபிதத்தில் (Tonsil) இழுப்பு முதலியன.

(2) சுரம்.—நஞ்சுண்மையின் கொடூரத் தன்மையை அறிவிக்கும் அளவுகோல் சுரமெனப்படும். வளர் சிதை மாற்றம் அதிகரித்தாலும் திசுக்களில் காங்கை அதிகரித்தாலும் சுரமுண்டாகிறது. வியர்வை வெளிப்படுத்தப்படாமையால் காங்கை உள்ளடங்கையாலும் சருமத்திலிருந்து காங்கைக் கிரணிதம் குறைவதாலும் சுரம் காணப்படுகிறது. உடற் காங்கைத் திட்டத்தைப் பரிபாலிக்கும் நரம்பு மண்டலம் சாதாரண நிலையிலிருந்து அபரிமிதமாகத் தொழில்படுவதாலும் சுரம் காணும். ஏன் இவ்வாறு ஏற்பட வேண்டும்? ஏன் வந்தைகளின் நஞ்சுண்மை காங்கை அதிகரிக்க வேண்டும்? என்ற கேள்விகளுக்குப் பதில் சொல்லுவதோ புரிய வைப்பதோ கடினம். வைத்தியப் பயிற்சியில் சுரம் காணப்படும் என்பதற்கு சில அறிகுறிகள் கூறப்பட்டுள்ளன. அவை குளிர், நளிர் (Shivering) நடுக்கம் (Rigor) அதிகரித்த காங்கை திடீரென்று குறைகளில் சூடு, அதிக வியர்வை காணப்படுகின்றன. உதாரணமாக, முறை சுரம், புப்புச சுரம் (Malaria and Pneumonia).

(3) மூலாவரக விலங்களில் நஞ்சுண்மை மாறுதல்கள்.— தீவிர நஞ்சுண்மை மூலாவரக விலங்களில் ஈரல் (Liver) பிருக்கம் (Kidney) இருதய சளி சவ்வுப்படை (Myocardium) கண்கூடா மாறுதல்களை உண்டாக்குகின்றன. இம் மாறுதல்களை ''மேக வீக்கம்'' (Cloudy swelling), நிண அழிவு (of fatly degeneration) என்பர். கழுத்து மாசனிகளும் புப்புச சுரத்தில் அசுக குழல் மாசயனிகளும், கை விரல்களில் ''ஊர்சுற்றி'' (Tendo Synovitis) ஏற்பட்ட காலத்து அக்குள் மாசயனிகளும் நெறி கட்டிகளாக மாறுகின்றன. நஞ்சுவந்தைகள் ஆரம்ப இடத்தை விட்டு நழுவி மாசயனி மூலமாகப் பரவி மாசயினிக் கோளங்கள் தாபிதமடைகின்றன. அல்லது வெளி மாசயனிப் பாதைகளின் தாபிதத்தை ஏற்படுத்துகின்றன. அவ்வமயம் சருமத்தின் மேல் நீண்ட சிவப்புக் கீற்று போல் காணப்படும்.

## வந்தை தாபிதத்தில் ஏற்படும் உடல் தத்துவக் கோளாறுகள்.

இதுகாறும் காயங்களில் தோன்றும் மாறுதல்களை ஆராய்ந்தோம். வந்தை தாபிதத்திலும், ஒண்டிவாழ் வந்தை தாபிதத்திலும் குகர்ணபேத மாறுபாடுகள் ஏற்படுகின்றன. அவை (1) நஞ்சுண்மை, (2) சுரம், (3) விலநஞ்சு மாறுதல்கள், (4) வெண்வில மிகுதி, (5) எதிரது காத்தல் சத்து தோன்றல்.

(1) **நஞ்சுண்மை.**—குருதியில் நஞ்சுப் பொருள்கள் காணப்படும். அவைகள் வந்தைகளிடமிருந்தோ, நுண் வந்தைகளிடமிருந்தோ (Virus) உண்டாகின்றன. அனேகமாக குருதியில் கரைந்து கிடக்கும். முக்கியமாக இவ் வகையான நஞ்சுகள் உடலின் திசுக்களைத் தாக்கி நோய்களைப் பிறப்பிக்கின்றன. தாபிதமடைந்து நொந்த திசுக்களிலிருந்து தோன்றின நஞ்சு சஞ்சார நோய்களையுண்டாக்கி சகச குணங்களை (Constitutional) காணச்செய்கின்றன. சகச குணங்களில் பிரதானமானதும் முதன்மையானதுந்தான் ''சுரம்''. மற்றவை நாடி படபடத்துத் துரிதப்படல், தலைவலி, கைகால்களில் வலி, பசியின்மை, சோர்வு, பிதற்றல், மேக வீக்கத்தில் விலங்கள் அதத்து அல்லது வீங்கி விலப் பைகள் மெலிந்து இலேசாகி உள்ளிருக்கின்ற பொருள்கள் மேக நிறத்தைப் போன்ற சாயலைக் காட்டும். நீரும் அதிகரித்திருக்கும். இந்நிலையில் இதனை ''விலசோபை'' என்பர் (Intra-cellular Oedema) நிண அழிவு அபரிமிதமான நஞ்சுண்மையின் கெடுதலைக் காட்டுகிறது. இதுவன்றி வில்பை சிறுசிறு நிண உருண்டைகளை உடையதாகக் காணப்படும். இங்கு நிண அழிவு என்று குறிப்பது அவ்வளவு பொறுத்தமல்ல. நிணவுண்டைகளை யுடைய விலங்கள் அழிவதாகக் காணப்படவில்லை. ஆனால் காயமடைந்ததினால் நிணப் பொருள்களை சரிவர வளர்சிதை மாற்றங்களுக்கேற்ப அனுசரிக்க முடியவில்லை. மூலாவரங்கள் கேடடைவதுதான் முக்கியமானது. இதனைக் கொண்டுதான் நோயின் தன்மையைச் சொல்ல முடியும். இக் காரணங்களால்தான் மூலாவரங்களுக்கு அபாய மேற்படுகிறது.

**வெண்விலங்கள்.**—அனேக வந்தைகளின் தாபிதங்களில் பன்மை விலசக விலங்கள் எண்ணிக்கையில் பெருகுகின்றன. உதாரணமாக புப்புச சுரம், நாங்கூழ் தாபிதம், விலத் திசு தாபிதம் (Cellulitis) அல்லது சீழ் கட்டி ஆகியவகைளில் 2,000 அல்லது 3,000 வரை வெண் விலங்கள் எண்ணிக்கையில் அதிகரிக்கும். தாபித மீண் செயல், மீண் செயல் நடக்கின்ற காலத்து என்பு, மூளையிலுள்ள வெண்வில ஆக்கிப் பொருள்களுக்கு ஊக்கத்தைக் கொடுக்கிறது. வந்தைகளின் நஞ்சுண்மைப் பொருள்களே வெண்வில ஆக்கிப் பொருள்களுக்கு ஊக்கத்தைக் கொடுக்கிறது என்று கருதுகிறார்கள். இதனை அனுசரித்து அனேக விகற்பக் கொள்கைகள் விஞ்ஞானிகளிடையே நிலவுகின்றன.

சுபம்.

